கழக வெளியீடு - கூகு.

உ

திருச்சிற்றம்பலம்

பரஞ்சோதி முனிவர்

அருளிச்செய்த

# திருவிளையாடற் புராணம்

## கூடற்காண்டம்

திருச்சி, பிஷப் ஹீபா காலேஜ்

தலைமைத் தமிழாசிரியர்

திரு. ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்

எழுதிய

உரையுடன்

திருநெல்வேலி தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்,

திருநெல்வேலி & சென்னை

விபவ ௵ - வைகாசி.

# பொருளடக்கம்

## கூடற்காண்டம்

உ

திருச்சிற்றம்பலம்

# திருவிளையாடற்புராணம்

## மூலமும் - உரையும்

## கூடற்காண்டம்

### பத்தொன்பதாவது

### நான்மாடக்கூடலான படலம்

பரசிவம்

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதியின்
பேதங்க ளல்ல வினையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்
வேதங்கி டந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்
பாதங்க ணோவ வளையிந்த னாதி பகர்வாரை யாயு மவரே.

(இ - ள்.) ஆயுமவர் - உண்மையை ஆராய்ந்தறியும் அறிவுடையார், கூடல் மறுகில் - மதுரைத் திருவீதியில், பாதங்கள் நோவ - திருவடிகள் வருந்த (நடந்து), வளை இந்தன ஆதி பகர்வாரை - வளையலும் விறகும் முதலியவற்றை விற்கும் சோமசுந்தரக் கடவுளை, பூதங்கள் அல்ல - வான் முதலிய ஐம்பூதங்களுமல்ல; பொறி அல்ல - செவி முதலிய ஐம்பொறிகளுமல்ல; வேறு புலன் அல்ல-எனை ஒலி முதலிய ஐம்புலன்களுமல்ல; உள்ளம் மதியின் பேதங்கள் அல்ல - மனமும் புத்தியும் முதலிய அந்தக்கரணங்களின் விகற்பங்களுமல்ல; இவை அன்றி நின்ற பிறிது அல்ல என்று- இவைகளல்லாமல் எஞ்சி நின்ற ஆன்மாவுமல்ல என்று கூறி, பெருநூல் வேதம் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளி என்ப - பெரு நூலாகிய வேதங்கள் (இதுவெனத் துணிய மாட்டாது) கிடந்து தடுமாறுதற் கேதுவாகிய வஞ்ச வெளி என்று கூறுவர்.

வேறு என்பது எனை யென இடைச்சொற் பொருட்டாய் நின்றது. உள்ள மும் மதியும் முதலியவற்றின் என்க; மதி - அந்தக்கரணத்து ளொன்றாய புத்தி; மதியின் பேதம் - போத விகற்பம்; எனினுமாம். இவையன்றி நின்ற பிறிதல்ல என்பதற்கு, இவையல்லாத வேறு பொருளும் அல்ல என்றும், இவற்றை விடுத்து வேறாக நின்ற தல்ல என்றும் பொருள் கூறலுமாம்;

ஒன்று நீயல்லை யன்றி யொன்றில்லை

என்னும் திருவாசகம் இங்கே சிந்திக்கற்பாலது. இந்நூலாசிரியர், அவையடக் கத்தில்,

அல்லையீ தல்லை யீதென மறைகளு மன்மைச்
சொல்லினாற் றுதித் திளைக்குமிச் சுந்தரன்

என்று கூறியதும் இச்செய்யுளும் கருத்தொருமையுடையவாதல் காண்க. பூதங் களும் அதுவல்ல என்றிங்ஙனம் விரித்துக்கொள்க. பிறிதல்ல என்புழிப் பன்மை யொருமை மயக்கம். அல்ல என்பன பன்மை குறியாது நின்றன வென்னலுமாம். வேதங்களாலும் அரிய வொண்ணாது கரந்திருத்தலின் 'வஞ்சவெளி' என்றார்; மாணிக்க வாசகப்பெருமான் 'ஒளிக்குஞ்சோரன்' எனத் திருவாய்மலர்ந்தருளியதுங் காண்க. இறைவன் இங்ஙனம் மறைகளாலும் அறிதற்கரியனாயினும் அடியார்க்கு மிக எளியனாவன் என்பதனை விளக்குவார் 'கூடல் மறுகிற் பாதங்களேவ வளையிந் தனுதி பகர்வார்' என்றார்; 'எத்தனையும் அரிய நீ எளியையானாய்' என்றார் திருநாவுக் கரசரும். இது கூடற்காண்ட மாதலும், இக்காண்டத்து முதற்படலம் கூடலாயின வரலாறுணர்த்தலும் கருதிக் 'கூடல்' எனப் பெயர் கூறினார். பாதங்கள் நோவ என்றது ஆராமை மேலிட்டுக் கூறியவாறு. நடந்து என்பது சொல்லெச்சம். ஆதி என்றமையால் மாணிக்கமும் பரியும் விற்றல் கொள்க. இந்தனுதி, வடமொழி நெடிற்சந்தி. ஆயுமவர் பகர்வாரை வெளியென்ப என முடிக்க. (௬)

## சிற்சத்தி

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை யிடக்கண் ஞானப்
பெருமக ளுதற்க ணாகப் பெற்றுவான் செல்வங் கல்வி
அருமைவீ டளிப்பாள் யாவ ளவளுயிர்த் துணைவன் காண
ஒருமுலை மறைந்து நாணி யொசிந்தபூங் கொம்பி னின்றாள்.

(இ - ள்.) திருமகள் வலக்கண் - பூமகளை வலக்கண்ணும், வாக்கின் சேயிழை இடக்கண் - நாமகளை இடக்கண்ணும், ஞானப் பெருமகள் நுதல் கண் ஆகப் பெற்று - ஞானக் கோமகளை நெற்றிக் கண்ணுமாகப் பெற்று, வான் செல் வம் கல்வி அருமை வீடு அளிப்பாள் யாவள் - சிறந்த செல்வத்தையும் கல்வியையும் எய்துதற்கரிய வீடுபேற்றையும் அருளுபவள் யாவள், அவள் - அம்முதல்வியே, உயிர்த்துணைவன் காண - தனது உயிர்த்துணைவன் கண்டவளவில், ஒரு முலை மறைந்து - ஒரு கொங்கை மறையப்பெற்று, நாணி - நாணுற்று, ஒசிந்த பூங்கொம் பின் நின்றாள் - துவண்ட பூங்கொம்புபோல நின்றாளாவள்.

வாக்கின் சேயிழை - வாக்கிற்குரிய சேயிழை; சேயிழை - செவ்விய அணிகளை யுடையாள். ஞானப் பெருமகள் - உமை; அவள் ஞானந் தருதற்குரியளாதலை,

"ஆகமங்க ளெங்கே யறுசமயந் தானெங்கே
யோகங்க ளெங்கே யுணர்வெங்கே—பாகத்
தருள்வடிவுந் தானுமா யாண்டிலனே லந்தப்
பெருவடிவை யாரறிவார் பேசு"

என்று திருக்களிற்றுப்படியார் கூறுவது கொண்டு அறிக. இம்மூன்று சத்திகளையும் இங்ஙனமே இவ்வாசிரியர், திருநகரச் சிறப்பின்கண்,

'திரும கட்கொரு தாமரைக் கூடமே திருமான்
மரும கட்குவெண் டாமரை மாடமே ஞானந்
தரும கட்கியோ கத்தனிப் பீடமே'

என எடுத்துரைத்தமை காண்க. சிவபெருமான் ஒருவனே வெவ்வேறுருவில் வேறு வேறு பேர் பெற்று நின்று படைப் பாதித் தொழில்களை நடத்துமாறு போலச் சிவசத்தி யொருத்தியே வெவ்வே றுருவில் அவ்விறைவன் புரியுந் தொழில்கட்குத் துணையாய் நின்று, உயிர்கட்குப் போகம் வீடருளுவளென்க; இந்நூலிலே முன்,

"ஈறி லாதவ ளொருத்தியே யைந்தொழி லியற்ற
வேறு வேறுபேர் பெற்றென"

என்றும்,

"பரையாதி விருப்பறிவு தொழிலாகி யுலகமெலாம் படைத்துக் காத்து
வரையாது துடைத்து மறைத்தருளி"

என்றும் கூறப்பெற்றமையும் நோக்குக. திருமகளாற் செல்வமும், வாக்கின் சேயிழையாற் கல்வியும், ஞானப்பெருமகளால் வீடும் அளிப்பாள் என நிரனிறையாகக் கொள்க; எனவே திருமகள் முதலியோரால் அளிக்கப்படுவன வெல்லாம் சிவசத்தியால் அளிக்கப்படுவனவேயாமென்க. இவ்விரண்டு செய்யுளும் பொருளியல்பு கூறிய வாழ்த்துக்களாம். (உ)

கதிர்மதி மிலைந்த வேணிக் கண்ணுதல் வருண னேய
அதிர்கடல் வறப்பச் செய்த வாடலீ தனையா னேய
முதிர்மழை யேழின் மேலு முன்னைநான் முகிலும் போக்கி
மதுரைநான் மாடக் கூட லாக்கிய வண்ணஞ் சொல்வாம்.

(இ - ள்.) கதிர்மதி மிலைந்த வேணிக்கண்ணுதல் - ஒளி பொருந்திய சந்திரனைத் தரித்த சடையினையுடைய சோமசுந்தரக் கடவுள், வருணன் ஏய அதிர்கடல் வறப்பச்செய்த ஆடல் ஈது - வருணன் ஏவிய ஒலிக்கின்ற கடலை வற்றச்செய்த திருவிளையாடல் இது; அனையான் ஏய - (இனி) அவ்வருணன் ஏவிய, முதிர் மழை ஏழின் மேலும் - சூல் முதிர்ந்த எழு முகிலின் மேலும், முன்னை நால் முகிலும்

போக்கி - முன் விடுத்த நான்கு முகிலையும் போக விடுத்து, மதுரை - மதுரைப் பதியை, நான்மாடக்கூடல் ஆக்கியவண்ணம் சொல்வாம் - நான்மாடக் கூடலாகச் செய்தருளிய திருவிளையாடலைக் கூறுவாம்.

ஏவிய என்பன ஏயவென விகாரமாயின. ஈது, சுட்டு நீண்டது. சூல் முதிர்ந்த வென்க. முன்னைய எனற்பாலது முன்னை என நின்றது. இன்னுருபு விரித்து முன்போல என்னலுமாம். (௩)

எற்றுதெண் டிரைநீர்ச் சேர்ப்பன் றன்செய லிழுக்கி நாணம்
உற்றிரு கண்ணுஞ் சேப்ப வுடன்றெழு கோபச் செந்தீப்
பற்றிட வாகம் வெம்பிப் பரவையும் யாறும் வெந்து
வற்றிட வெகுண்டு நின்றான் மானமும் வலியுங் குன்றான்.

(இ - ள்.) எற்று தெள்திரை நீர்ச் சேர்ப்பன் - (கரையை) மோதும் தெள்ளிய அலைகளையுடைய கடற் றலைவனாகிய வருணன், தன் செயல் இழுக்கி நாணம் உற்று - தனது செயல் தவறினமையால் நாணுதலுற்று, மானமும் வலியும் குன்றான் - தன் மானமும் வன்மையும் குறையாதவனாய், இரு கண்ணும் சேப்ப உடன்று எழுகோபச் செந்தீ பற்றிட - இரண்டு விழிகளும் சிவக்க மாறுபட்டெழுந்த சினமென்னும் செந்நெருப்பு மூளுதலால், ஆகம் வெம்பி - உடல்கருகி, பரவையும் ஆறும் வெந்து வற்றிட - கடலும் நதியும் வெந்து வற்றுமாறு, வெகுண்டு நின்றான் - சீறி நின்றான்.

திரைநீர் - கடல். சேர்ப்பன் - துறைவன்; ஈண்டுத் தலைவன் என்னும் பொருட்டு. இழுக்குதலால் என்பது இழுக்கியென நின்றது. சேப்ப, சிவப்ப என்பதன் மரூஉ. கடலும் யாறும் முதலாயின அவனுக்கு உடம் பாகலின் 'ஆகம் வெம்பிப் பரவையும் யாறும் வெந்து வற்றிட' என்றார். பற்றிடுதலால் வற்றிடுமாறு வெகுண்டு நின்றான் என்க. இறைவன் கடலை வற்றச் செய்தமை உணர்ந்த பின்னரும் பணிந்துய்தலின்றி, மாண்பிறந்த மானமும் மதமும் உடையனாயினன் என்பார் 'மானமும் வலியுங் குன்றான்' என்றார். குன்றான், முற்றெச்சம். (௪)

நளிர்புனன் மதுரை மூதூர் நாயக னாட றன்னைத்
தெளிகில னாகிப் பின்னுஞ் செழுமுகி லேழுங் கூவிக்
குளிர்கடல் வறந்த தென்னக் குடித்தெழுந் திடித்துப் பெய்யா
ஒளிவளர் மதுரை முற்று மொல்லெனக் களைமி னென்றான்.

(இ - ள்.) (அங்ஙனம் நின்ற வருணன்) நளிர் புனல் மதுரை மூதூர் நாயகன் ஆடல் தன்னைத் தெளிகிலனாகி - குளிர்ந்த புனல் சூழ்ந்த மதுரையாகிய தொல் பதியில் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலைத் தெளியாதவனாகி, பின்னும் - மீளவும், செழுமுகில் எழும் கூவி - செழிய எழு முகில்களையும் அழைத்து, குளிர் கடல் வறந்தது என்னக் குடித்து எழுந்து இடித்துப் பெய்யா - (நீவிர்)குளிர்ந்த கடல் வற்றியது என்று சொல்லுமாறு நீரினைக் குடித்து மேலெழுந்து

இடித்து மழையினைப் பொழிந்து, ஒளி வளர் மதுரை முற்றும் ஒல்லெனக் களைமின் என்றான் - புகழ்மிக்க மதுரைப்பதி முழுதையும் விரைந்து அழியுங்கள் என்று கூறினன்.

பெய்யா - பெய்து. ஒளி - புகழ். ஒல்லென, விரைவுக்குறிப்பு. (ரு)

பொள்ளென மேக மேழும் புகுந்துபார் தெரிய முந்நீர்ப்
பள்ளமும் வறப்ப முற்றப் பருகிமெய் கருகி மின்னித்
தெள்ளருந் திசையும் வானுஞ் செவிடுறப் பிலமும் பாரும்
விள்ளமால் வரைக ளெட்டும் வெடிபட மேருச் சாய.

(இ - ள்.) மேகம் எழும் பொள்ளெனப் புகுந்து - எழுமுகிலும் விரைந்து சென்று, பார்தெரிய முந்நீர்ப் பள்ளமும் வறப்ப - நிலந்தோன்றக் கடலின் ஆழம் வற்றும்படி, முற்றப் பருகி - (நீரினை) முடியக் குடித்து. மெய் கருகி-உடல் கறுத்து, மின்னி - மின்னல் வீசி, தெள் அருந்திசையும் வானும் செவிடு உற - கண்டு தெளி தற்கரிய திசைகளும் வானும் செவிடு படவும், பிலமும் பாரும் விள்ள - பாதலமும் நிலவுலகும் பிளக்கவும், மால்வரைகள் எட்டும் வெடிபட மேருச்சாய - பெரிய மலை கள் எட்டும் வெடிக்கவும் மேருமலை சாயவும்.

பொள்ளென, விரைவுக் குறிப்பு;

"பொள்ளென வாங்கே புறம் வேரார்"

என்பது திருக்குறள்.. முந்நீராகிய பள்ளம் என்னலுமாம். பள்ளமும் என்பதில் உம்மை உயர்வு சிறப்பு. தெள்ளரும் - எல்லை கண்டு தெளிதலரிய. மால்வரைகள்- மேருவைச் சூழ்ந்த குலவரைகள். மேகம் ஏழும் வரைகள் எட்டும் மதுரைக் காண் டத்திற் கூறப்பட்டன; ஆண்டுக்காண்க. செவிடுற, விள்ள, வெடிபட, சாய என் னும் எச்சங்கள் வருஞ்செய்யுளில் உருமு வீழ என்பது கொண்டு முடியும். (சு)

ஊழிநாள் வெடிக்கு மண்ட கடாகத்தி னொலிபோ லார்த்துப்
பாழிவா னுருமு வீழப் பணாடவி மணிகள் சிந்தி
ஆழிநீர் ஞாலந் தாங்கு மராவுட னெளியத் திக்கிற்
சூழிமால் யானை நின்ற நிலைகெடத் துணுக்கங் கொள்ள.

(இ - ள்.) ஊழி நாள் வெடிக்கும் அண்ட கடாகத்தின் ஒலிபோல் ஆர்த்துப் பாழிவான் உருமு வீழ - ஊழிக்காலத்தில் வெடிக்கின்ற அண்ட கடாகத்தின் ஓசைபோல ஒலித்து வலிய பெரிய இடியேறுகள் விழவும், ஆழி நீர் ஞாலம் தாங்கும் அரா - கடல் நீராற் சூழப்பட்ட இந்நிலவுலகைத் தாங்குகின்ற அனந்தன், பணாடவி மணிகள் சிந்தி உடல் நெளிய - ஆயிரம் படங்களிலுமுள்ள, மணிகளைச் சிதறி உடலை நெளிக்கவும், திக்கில் - எண்டிசையிலுமுள்ள, சூழிமால் யானை - முகபடாத்தை யுடைய பெரிய யானைகள், நிலை கெடத் துணுக்கம் கொள்ள - நிலையழிய நடுக்கங் கொள்ளவும்.

ஒலிபோல் ஒளியுண்டாக ஆர்த்து என்க. உரும் என்பது உகரம் பெற்று உருமு என்றாயது; இதற்கு விதி,

"ஈமும் கம்மும் உருமென் கிளவியும்
ஆமுப் பெயரும் அவற்றோ ரன்ன"

என்னும் தொல்காப்பியச் சூத்திரமாகும். பணம் - படம்; அடவி-காடு; மிகுதியைக் குறித்தது. பணடவி, நெடிற்சந்தி. நெளிய என்பது பிறவினைப் பொருட்டாயது; உடல் நெளிய என்பதனை ஒரு சொல்லாகக்கொண்டு, அராநெளிய என்னலுமாம். யானை - திக்கயங்கள்; 'திசை முகவேழம்' என்றார் இளங்கோவடிகளும். (எ)

வெள்ளிய நீறு பூத்து முழவென வீங்கு காய்போற்
றெள்ளிய வாலி சிந்தத் திரண்டதிண் பளிக்குத் தூண்போல்
ஒள்ளிய தாரை சோர வும்பர்மீன் கணங்க ளோடுந்
துள்ளிய திரையி லாடு மீன்கணந் துடித்து வீழ.

(இ - ள்.) வெள்ளிய நீறு பூத்து முழவு என வீங்கு காய்போல் - வெண்மையான நீறு பூக்கப்பெற்று மத்தளம்போலப் பருத்த பூசனிக்காயைப்போல, தெள்ளிய ஆலி சிந்த-தெளிந்த மழைத்துளிகள் சிந்தவும், திரண்ட திண் பளிக்குத்தூண்போல்-திரட்சியாகிய வலிய பளிங்குத் தூணைப்போல,ஒள்ளிய தாரை சோர-ஒளி பொருந்திய தாரைகள் பொழியவும், உம்பர் மீன் கணங்களோடும்-மேலிடத்துள்ள உடுக்களாகிய மீன் கூட்டங்களோடு, துள்ளிய திரையில் ஆடும் மீன்கணம் துடித்து வீழ-மேலெழுந்து வீசிய அலையின் கண் விளையாடும் மீன் கூட்டங்களும் துடித்து வீழவும்.

'வெள்ளிய நீறுபூத்து முழவென வீங்கு' என்னும் அடையால் பூசனிக்காய் என்பதாயிற்று. ஆலி - ஆலங்கட்டியுமாம்.

"வெள்ளிவெண், கோல்நிரைத்தன போற்கொழுந் தாரைகள்"
"வானம், நீர்த்திரள் பளிக்குத் தூணி சொரிந்திட"

என்னும் சிந்தாமணித் தொடர்கள் இங்கு ஒப்பு நோக்கற் பாலன. பருமனைக் குறிக்கத் 'தூண்போல்' என்றார். உம்பர் - மேலிடம்; விசும்பிற்காயிற்று. (அ)

ஆர்த்தெழு கொண்மூ வேழுஞ் சராசர மனைத்துஞ் சூழ்ந்து
போர்த்தன ஞால முண்ணப் புக்கதோர் வடிவங் கொண்ட
தீர்த்தனில் விசும்பும் பாருந் திசைகளுந் தெரியா வாகப்
பார்த்தகண் ணுழையா வாகப் பரந்திருள் கான்ற வன்றே.

(இ - ள்.) ஆர்த்து எழு கொண்மூ எழும் - ஆரவாரித்து எழுந்த எழு மேகங்களும், சர அசரம் அனைத்தும் சூழ்ந்து போர்த்தன - இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளுமாகிய அனைத்தையும் வளைந்து மூடினவாய், ஞாலம் உண்ணப் புக்கது ஓர் வடிவம் கொண்ட தீர்த்தனில் - உலகத்தை அழிக்கப் புகுந்ததாகிய ஒப்பற்ற வடிவத்தினைக் கொண்ட இறைவனைப்போல, விசும்பும் பாரும் திசைகளும்

தெரியாவாக - விண்ணும் மண்ணும் திசைகளும் தோன்றாதவாறும், பார்த்தகண் நுழையாவாக - நோக்கிய கண்கள் (இருட் செறிவால் உள்) நுழையாதவாறும், பரந்து இருள் கான்ற - பரவி இருளைத் தோற்றுவித்தன.

மேல் இரண்டு செய்யுளிலும் போந்த செயவெ னெச்சங்களை, இச்செய்யுளி லுள்ள 'ஆர்த்தெழு' என்பது கொண்டேனும், 'போர்த்தன' என்பது கொண்டே னும் முடிக்க. போர்த்தன, முற்றெச்சம். வடிவம் - பிரளயகால உருத்திரவடிவம். அன்று, ஏ அசைகள். (கூ)

பைஞ்சுட ரெறிக்கும் பச்சை காரொளி பரப்பு நீலம்
புஞ்சவா ளுடுக்க ளன்ன நித்திலம் பொன்னங் குப்பை
செஞ்சுடர் மணிக டுப்புச் சிதறுவ கணவ ரோடும்
விஞ்சையர் மகளி ரூடி வெறுத்தெறி கலன்கள் போல.

(இ - ள்.) பைஞ்சுடர் எறிக்கும் பச்சை - பசிய ஒளியினை வீசும் மரகதங் களையும், கார் ஒளி பரப்பும் நீலம் - கரிய ஒளியினை வீசும் நீலமணிகளையும், புஞ்சம் வாள் உடுக்கள் அன்ன நித்திலம் - திரண்ட ஒள்ளிய விண் மீன்களை யொத்த முத் துக்களையும், பொன்னம் குப்பை - பொற்குவியலையும், செஞ்சுடர் மணிகள் - சிவந்த ஒளியினையுடைய மாணிக்க மணிகளையும், துப்பு - பவளங்களையும், விஞ்சையர் மக ளிர் கணவரோடும் ஊடி - விஞ்சையரின் மகளிர்கள் நாயகரோடும் புலந்து, வெறுத்து எறிகலன்கள் போலச் சிதறுவ - வெறுப்புற்று எறிகின்ற அணிகள் போலச் சிந்தாநின்றன.

புஞ்சம் - திரட்சி. பொன்னம், அம் சாரியை. விசும்பினின்று வீழ்தலால் விஞ்சையர் மகளிரைக் கூறினர். எழு மேகங்களுள் சம்வர்த்தம் என்பது மணிகளை யும், புட்கலாவர்த்தம் என்பது பொன்னையும் பொழிவனவா மென்க. (ய)

கடியகா லுதைப்பப் பெய்யுங் கடுஞ்செல வெழிலி மாடக்
கொடியநீ ணகரைச் சூழ்ந்து புதைத்தலுங் கோலொன் றோச்சிப்
படியெலாம் புரக்குங் கோனு நகருளார் பலரு ஞாலம்
மடியுநா ளிதுவே யென்று மயங்கின ருயங்கி னாரே.

(இ - ள்.) கடியகால் உதைப்ப - வேகமாகிய காற்று அடித்துத் தாக்க, பெய்யும் கடுஞ்செலவு எழிலி - மழையைப் பொழியும் கடிய செலவினையுடைய மேகங்கள், கொடியமாட நீள் நகரைச் சூழ்ந்து புதைத்தலும் - கொடிகளையுடைய மாடங்கள் நெருங்கிய நீண்ட நகரைச் சூழ்ந்து மூடிய வளவில், கோல் ஒன்று ஓச்சி படி எலாம் புரக்கும் கோனும் - தனிச் செங்கோல் நடாத்தி உலக மனைத்தையும் காக்கும் அபிடேக பாண்டியனும், நகர் உளார் பலரும் - நகரத்திலுள்ளவர் பலரும், ஞாலம் மடியும் நாள் இதுவே என்று மயங்கினர் உயங்கினர் - உலகம் அழியும் நாள் இதுவே யென்று மன மயங்கி வாடினார்கள்.

கொடிய, கொடி யென்னும் பெயரடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். கோல் ஒன்று ஓச்சல்-தனிச்செங்கோல் செலுத்தல்; பொதுவறப்புரத்தல். உயங்கு தல் - வாடுதல். மயங்கினர், வினையெச்சப் பொருட்டாயது. (கக)

கண்ணுதல் மூர்த்தி தானே யின்னமுங் காக்கு மென்னாப்
புண்ணிய நகரா ரோடும் பொருக்கெனக் கோயி லெய்தி
விண்ணிழி விமான வாழ்க்கை விடையவ னடிக்கீழ் வீழ்ந்தான்
(அண்ணலா ராடன் முன்னு மறிந்துகை கண்ட வேந்தன்.)

(இ - ள்.) அண்ணலார் ஆடல் முன்னும் அறிந்து கைகண்ட வேந்தன்-சோம சுந்தரக் கடவுளின் திருவிளையாடலை முன்னரும் உணர்ந்து கைவந்த பாண்டி மன்னன், கண்ணுதல் மூர்த்தி தானே இன்னமும் காக்கும் என்ன - நெற்றியிற் கண்ணையுடைய அவ்விறைவனே இன்னமும் காத்தருளுவனென்று, புண்ணிய நகரா ரோடும் பொருக்கெனக் கோயில் எய்தி - அறம் மிகுந்த நகரத்திலுள்ளவரோடும் விரைந்து திருக்கோயிலை யடைந்து, விண் இழி விமான வாழ்க்கை விடையவன் அடிக்கீழ் வீழ்ந்தான் - வானுலகினின்றும் இறங்கிய விமானத்தின்கண் அமர்ந் தருளும் இடப வூர்தியையுடைய சொக்கலிங்க மூர்த்தியின் திருவடியின்கீழ் விழுந்தான்.

முதற்கண் உலக மழியுங்கால மென்று மயங்கிய பாண்டியன், இறைவன் திருவிளையாடலை முன் அறிந்து வைத்தவனாகலின் தெளிவுற்றுக் கோயிலை யடைந்தா னென்க. தானே, தான் அசை; ஏ தேற்றம். இன்னமும், உம்மை இறந்தது தழுவிய எச்சம். புண்ணியம் நகருக்கு அடை. பொருக்கென, விரைவுக்குறிப்பு. (கஉ)

விடையினை யால முண்ட மிடற்றினை கங்கை தாங்குஞ்
சடையினை கூற்றை வென்ற தாளினை மேருச் சாபப்
படையினை யடியேந் துன்பப் பாட்டினை நீக்கி யாளும்
நடையினை யாகி* யெங்க ணல்லுயிர் காத்தல் வேண்டும்.

(இ - ள்.) விடையினை-இடபவூர்தியையுடையாய், ஆலம் உண்ட மிடற்றினை-நஞ்சை யுண்டருளிய திருமிடற்றினை யுடையாய், கங்கை தாங்கும் சடையினை - கங்கையைத் தாங்கிய சடையினையுடையாய், கூற்றை வென்ற தாளினை - கூற்றுவனை உதைத்த திருவடியையுடையாய், மேரு சாபப்படையினை - மேருமலையாகிய விற் படையையுடையாய், அடியேம் துன்பப்பாட்டினை நீக்கி ஆளும் நடையினையாகி - அடியேங்களின் அல்லற்பாட்டினைப் போக்கி ஆளுகின்ற அருட் செயலை உடை யையாகி, எங்கள் நல் உயிர் காத்தல் வேண்டும் - எங்கள் இனிய உயிர்களைப் பாது காத்தருளல் வேண்டும்.

விடையினை, ஆலமுண்ட மிடற்றினை, கங்கை தாங்குஞ் சடையினை, கூற்றை வென்ற தாளினை, மேருச்சாபப் படையினை என்னும் பெயர்கள், அடியேங்களின் துன்பத்தைப் போக்கிக் காத்தருள வல்லாய் என்னும் கருத்தோடு கூடிய விசேடி யங்கள் ஆகலின் கருத்துடையடைகோளியணி. விடையினை முதலியவற்றில் இன் சாரியை, ஐ முன்னிலை விகுதி. துன்பம் என்னும் பண்புப்பெயர் பாடு என்னும்

(பா - ம்.) *நடையினையாகில்.

விகுதி பெற்று ஒரு சொல்லாய்த் தொழிற்பெயராயிற்று. தேவரீர்க்குத் தொண்டு செய்து பேரின்ப வாழ்வெய்துதற்குரிய உயிரென்பார் 'நல்லுயிரி' என்றாரென்க. ()

என்னலுந் தென்னர்க் கென்று மெய்திய விடுக்கண் டீர்க்கும்
முன்னவன் முன்போ னான்கு முகிலையு நோக்கி யின்ன
தொன்னக ரெல்லை நான்குஞ் சூழ்ந்துநான் மாட மாகி
வின்னெடு மாரி* யேழும் விலக்குமி னெனவி டுத்தான்.

(இ - ள்.) என்னலும் - என்று முறையிட்ட வளவில், தென்னர்க்கு எய்திய இடுக்கண் என்றும் தீர்க்கும் முன்னவன் - பாண்டியர்களுக்கு உண்டாகும் துன்பங்களை எப்பொழுதும் போக்கி யருளும் முன்னவனாகிய சோமசுந்தரக் கடவுள், நான்கு முகிலையும் முன்போல் நோக்கி - நான்கு முகில்களையும் முன்போலவே பார்த்து, இன்ன தொல் நகர் எல்லை நான்கும் சூழ்ந்து - இந்தத் தொன்று தொட்டுள்ள மதுரைப் பதியின் நான்கெல்லையையும் வளைந்து, நான் மாடம் ஆகி - நான்கு மாடங்களாகி, வில் நெடு மாரி ஏழும் விலக்குமின் என விடுத்தான் - வில்லினையுடைய நீண்ட ஏழு முகில்களையும் விலக்குங்கள் என்று விடுத்தருளினான்.

வேந்தன் காத்தல் வேண்டும் என்னலும் என மேலிரண்டு செய்யுட்களோடு இயைத்து ஒரு தொடராக்குக. சோமசுந்தரக்கடவுள் இப்பொழுது இத்துன்பத்தைப் போக்குவது புதுமை யன்றென்பார் 'தென்னர்க் கென்றும் எய்திய இடுக்கண் தீர்க்கும் முன்னவன்' என்றார். முன்போல் என்றது முந்திய திருவிளையாடலைச் சுட்டிற்று. (கசு)

வந்துநான் மாட மாகி வளைந்துநாற் றிசையுஞ் சூழ்ந்து
சந்துவாய் தெரியா தொன்றித் தாமொரு குடிலாய் மாடப்
பந்திகோ புரஞ்செய் குன்றங் கால்கள்போற் பரிப்பப் போர்த்த
இந்துவார் சடையோ னேய வெழிலிமா நகர மெங்கும்.

(இ - ள்.) இந்துவார் சடையோன் ஏய எழிலி - சந்திரனை யணிந்த நீண்ட சடையினையுடைய சோமசுந்தரக் கடவுள் ஏவிய முகில்கள், வந்து நான் மாடமாகி வளைந்து - வந்து நான் மாடமாய் வளைந்து, நால் திசையும் சூழ்ந்து சந்துவாய் தெரியாது ஒன்றி - நான்கு திசைகளிலும் சூழ்ந்து பொருத்துவாய் தோன்றாது ஒன்று பட்டு, தாம் ஒரு குடிலாய் - தாம் ஒரு குடிசையாகி, மாடப் பந்தி கோபுரம் செய் குன்றம் கால்கள் போல் பரிப்ப - மாடவரிசைகளும் கோபுரங்களும் கட்டுமலைகளுமாகிய இவைகள் தூண்களைப்போல நின்று தாங்க, மாநகரம் எங்கும் போர்த்த - பெருமையுடைய அந்நகர முழுதையும் மறைத்தன.

சந்துவாய் - கூடுமிடம். தெரியாது - தோன்றாவாறு. பரிப்பக் குடிலாய்ப் போர்த்த என்க. குடில் என்றது ஈண்டு மேற்கூரையை. மாடப்பந்தி முதலிய

(பா - ம்.) * இந்நெடுமாரி.

வற்றில் எண்ணும்மை விரிக்க. போர்த்த, அன்பெறாத முற்று. ஏய, ஏவிய என் பதன் விகாரம். (கரு)

அன்னநான் மாடத் துள்ளு நகருளா ரமைச்சர் வேந்தன்
தன்னநாற் கருவித் தானை சராசரம் பிறவுந் தாழ்ந்து
முன்னைநா டனினு மின்ப மூழ்கிநன் கிருந்தா ரூழிற்
பொன்னனாள் பாகன் றாளிற் புக்கமர்ந் திருந்தா ரொத்தார்.

(இ - ள்.) அன்னநான் மாடத்துள்ளும் - அந்த நான்கு மாடங்களினுள்ளும், நகருளார் அமைச்சர் வேந்தன் - நகரிலுள்ளவரும் மந்திரிகளும் மன்னனும், தன்ன நால் கருவித்தானை - அவனுடைய நால்வகைப்பட்ட கருவியாகிய சேனைகளும், சர அசரம் பிறவும் தாழ்ந்து - இயங்குவனவும் நிற்பனவுமாகிய பிறவுயிர்களும்தங்கி, முன்னை நாள் தனினும் இன்பம் மூழ்கி நன்கு இருந்தார் - முன்னாளினும் இன்பக் கடலிற் றிளைத்து நன்றாக இருந்தனர் (ஆதலின் அவர்), ஊழின் - முறைப்படி, பொன்னனாள் பாகன் தாளில் புக்கு அமர்ந்து இருந்தார் ஒத்தார் - உமைபாகனாகிய சிவபெருமானது திருவடி நீழலிற் புகுந்து மகிழ்ச்சியுடனிருப்பவரை ஒத்தனர்.

தன்ன என்பதில் அகரம் ஆறனுருபு, னகரம் விரித்தல். அவன் றன்னுடைய வென்க. கருவித்தானை, இருபெயரொட்டு. பிறவும் என்பதிலுள்ள உம்மையை நகருளார் முதலிய வற்றோடும் கூட்டுக. தாழ்தல் - தங்குதல். முன்னைநாள் என் பதனை முன்னாட்களெனப் பொதுவாகக்கொள்க; வருணன்விட்ட கடலை வற்றச் செய்த நாள் என்பாருமுளர். ஆகலின் அவர் என வருவிக்க. சிவபுண்ணிய முதிர்ச்சி யால் இருவினை யொப்பு முதலியன எய்தப்பெற்று அடைய வேண்டுவதாகலின், ஊழிற்புக்கமர்ந்திருந்தார் என்றார். (கசு)

கழைகெழு வரையி னுச்சி கவிழ்கின்ற புயல்போற் கார்சூழ்ந்
திழைமணி மாடத் தும்ப ரெறிதுளி யுடைந்து துள்ளத்
தழைகடல் வறப்ப வாங்கித் தம்முடல் வறப்பப் பெய்து
மழைகளும் வெள்கி நின்ற வருண னும் வெள்கி நின்றான்.

(இ - ள்.) கழை கெழுவரையின் உச்சி கவிழ்கின்ற புயல்போல் - மூங்கில்கள் நிறைந்த மலையின் உச்சியிற் பெய்கின்ற மழை உடைந்து சிதறுதல்போல, கார் சூழ்ந்து இழைமணி மாடத்து உம்பர் எறிதுளி உடைந்து துள்ள - (சிவபிரான் விடுத்த நான்கு) முகில்களாற் சூழ்ந்தியற்றப்பட்ட அழகிய மாடத்தின்மேல் எறியப் படுகின்ற துளிகள் உடைந்து சிதற, தழை கடல் வறப்ப வாங்கித்தம் உடல் வறப் பப் பெய்து-நீர் நிரம்பிய கடலானது வறளுமாறு நீரினை முகந்து தமது உடல் பசை யறுமாறு பொழிந்து, மழைகளும் வெள்கி நின்ற - (வருணன் விடுத்த) முகில்களும் வெள்குற்று நின்றன; வருணனும் வெள்கி நின்றான் - வருணனும் நாணமுற்று நின் றான் எ-று.

முகந்த நீரைக்கவிழ்ப்பது போன்று ஒருங்கு பொழியும் மழை யென்பார் 'கவிழ்கின்ற புயல்' என்றும், கடுவிசையுடன் வீழ்க்கப்படும் துளியென்பார் 'எறிதுளி'

என்றும் கூறினர். புயல் மழை யென்னும் பொருள் தருதலை 'புயலென்னும் வாரி' என்பதனு னறிக. இழை - இயற்றப்பட்ட. மழைகள் வெள்குதல் நாணுதலும், வெண்ணிறமாதலும். வருணன் வெள்குதலாவது உளங்கூசுதல். (கஎ)

நடுங்கினன் கழிந்த வச்ச நாணமீ தூர மானம்
ஒடுங்கின னுள்ளத் துள்ளோ ருவகைவந் தெய்தப் பொற்பூத்*
தடங்கரை குறுகா முன்னோய் தணிந்துபின் றோய்ந்து பாசம்
மடங்கினன் மடங்கா வன்பின் வள்ளலைப்† பூசை செய்வான்.

(இ - ள்.) (அங்ஙனம் நின்ற வருணன்) நடுங்கினன் - உடல் நடுங்கி, கழிந்த அச்சம் நாணம் மீதூர - மிகுந்த அச்சமும் நாணமும் மிக, மானம் ஒடுங்கினன் - மானம் குறைந்து, உள்ளத்துள் ஓர் உவகை வந்து எய்த - மனத்தின்கண் ஒரு மகிழ்ச்சி வந்து பொருந்த, பொற்பூத்தடம் கரை குறுகாமுன் - பொற்றாமரை வாவியின் கரையை அடைதற்கு முன்னரே, நோய் தணிந்து - பிணி நீங்கப்பெற்று, பின் தோய்ந்து - பின் நீராடி, பாசம் மடங்கினன் - பாசத்தின் வலி மடங்கப்பெற்று, மடங்கா அன்பின் வள்ளலைப் பூசை செய்வான் - குறையாத அன்புடன் வள்ளலாகிய சோமசுந்தரக் கடவுளைப் பூசிக்கத் தொடங்கினன்.

கழிந்த, கழி என்னும் உரிச்சொல்லடியாக வந்த பெயரெச்சவினை. மீதூர்தல் - மேன்மேல் அடர்தல். மானம் - தாழாமை. முன்பில்லதோர் உவகை யென்பார் 'ஓர் உவகை' என்றார். தடங்கரை குறுகி அங்ஙனங் குறுகு முன்னே நோய் தணிந்து என விரிக்க. குறுகுமுன் - குறுகுதற்கு முன்; குறுகாமுன் என வழக்குப் பற்றி வந்தது; பண்புத் தொகையுமாம். நோய் என்றது முதற் காண்டத்து இறுதிப் படலத்திற் கூறிய வயிற்று நோயை. பாசம் - ஆணவம் முதலியன. நடுங்கினன், ஒடுங்கினன், மடங்கினன் என்பன முற்றெச்சங்கள். (கஅ)

புனிதநீ றாடிக் கண்டி பூண்டுவான் கங்கை யாதி
வனிதையர் பசும்பொற் கும்ப வாசநீர் வடித்து நீட்டப்
பனிமலர் சந்தங் கந்த மணிக்கலன் பசும்பொன் னாடை
இனையன பிறவு மீன்று கற்பக மெடுத்துக் காட்ட.

(இ - ள்.) புனித நீறு ஆடி - தூய திருநீறு தரித்து, கண்டிபூண்டு - உருத்திராக்க வடம் அணிந்து, வான் கங்கை ஆதி வனிதையர் - ஆகாயகங்கை முதலிய மாதர்கள், பசும்பொன் கும்பம் வாசநீர் வடித்து நீட்ட - பசும்பொன்னாலாகிய கலசத்தில் மணம் கலந்த நீரினை வடித்துத் தரவும், பனிமலர் சந்தம் கந்தம் மணிக்கலன் பசும்பொன் ஆடை இனையன பிறவும் ஈன்று - குளிர்ந்த மலரையும் சந்தனத்தையும் ஏனைய மணப்பொருள்களையும் மணிக்கலன்களையும் பசிய பொன்னாடை

---

(பா - ம்.) * உவகைவந்தேமக்கஞ்சத். †அடங்கின னடங்கா வன்பினண்ணலை.

யையும் இவைபோன்ற பிறவற்றையும் பெற்று, கற்பகம் எடுத்துக்காட்ட - கற்பகத் தரு எடுத்துக் கொடுக்கவும் எ - று.

கந்தம், ஆகுபெயர். சந்தம் முதலியவற்றையும் பிறவற்றையும் என்க. (௧௧)

ஐங்கனி யமுத மைந்து கௌவிய மமுது தூபஞ்
செங்கதிர் விளக்க மின்ன தேவரான் கொடுப்பச் சேற்கண்
நங்கைதன் பதியைப் பூசித் தாயிர நாமங் கூறிப்
பைங்கதிர் முத்தஞ் சாத்தித் தொழுதடி பணிந்து நின்றான்.

(இ - ள்.) ஐங்கனி அமுதம் ஐந்து கௌவியம் அமுது தூபம் செங்கதிர் விளக்கம் இன்னதேவர் ஆன் கொடுப்ப - ஐந்து கனிகளையும் ஐந்து அமிர்தங் களையும் ஐந்து கௌவியங்களையும் திருவமுதையும் தூபத்தையும் செவ்வொளியினை யுடைய தீபத்தையும் இவை போன்ற பிறவற்றையும் காமதேனு வழங்கவும், சேல் கண் நங்கைதன் பதியைப் பூசித்து - அங்கயற்கண்ணம்மையின் நாயகராகிய சோம சுந்தரக் கடவுளைப் பூசித்து, ஆயிரம் நாமம் கூறிப் பைங்கதிர் முத்தம் சாத்தி - ஆயி ரம் திருநாமங்களையும் கூறிப் பசிய ஒளியையுடைய முத்துக்களைச் சாத்தி, தொழுது அடிபணிந்து நின்றான் - திருவடியை வணங்கிக் கும்பிட்டு நின்றான்.

ஐங்கனி - வாழைக்கனி முதலியன. ஐந்து என்பதனை அமுதத்தோடும் கௌவியத்தோடும் கூட்டுக. இன்ன, குறிப்பு வினைப்பெயர். ஒரு திருப்பெயருக்கு ஒரு முத்தாகச் சாத்தி என்க. (௨0)

அருச்சனை யுவந்த வாதி யமலனீ யாது வேண்டிற்
றுரைத்தியென் றோத நீர்க்கோ னொல்லைதாழ்ந் தொன்றி னானுங்
கரைத்திட வரிய விந்தக் கடியவென் வயிற்று நோய்நின்
திரைத்தட மாடு முன்னே* தீர்ந்திடப் பெற்றே னெந்தாய்.

(இ - ள்.) அருச்சனை உவந்த ஆதி அமலன் - அவன் பூசனையை மகிழ்ந்து ஏற்ற முதல்வனாகிய சொக்கலிங்கக் கடவுள், நீ வேண்டிற்று யாது உரைத்தி என்று ஓத - நீ விரும்பியது யாது அதனை உரைப்பா யென்று கூற, நீர்க்கோன் - கடற் றலைவனாகிய வருணன், ஒல்லை தாழ்ந்து - விரைவில் வணங்கி, எந்தாய் - எந்தையே, ஒன்றினானும் கரைத்திட அரிய - ஒன்றாலும் போக்குதற்கரிய, இந்தக்கடிய என் வயிற்று நோய் - இந்தக் கொடிய எனது வயிற்று நோயானது, நின் திரைத்தடம் ஆடும் முன்னே தீர்ந்திடப் பெற்றேன் - உன்னுடைய அலைகளையுடைய பொற்றா மரை வாவியில் ஆடுதற்கு முன்னே நீங்கப் பெற்றேன்.

ஒன்றினானும் - மணிமந்திரம் மருந்து என்பவற்றுள் எதனாலும். அரிய கடிய நோய் என்க (௨௧)

---

(பா - ம்.) * ஆடியின்னே.

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

வேதமுதற் கலைகாட்சி முதலளவை விரிஞ்சன்முதல் விண்ணோர் செய்யுஞ்
சோதனையு ளகப்படாச் சோதியுனைச் சோதிக்கத் துணிந்தே னந்தோ
பேதைமையே னிடத்தென்ன குணங்கண்டென் பிணிதீர்த்தென் பெற்றா யாசை
கோதமிலாய் குற்றமே குணமாகக் கொள்வதுநின் குணமோவையா.

(இ - ள்.) வேதம் முதல்கலை - மறைமுதலிய கலைகளுள்ளும், காட்சி முதல் அளவை - காட்சி முதலிய ஏனை அளவைகளுள்ளும், விரிஞ்சன் முதல் விண்ணோர் செய்யும் சோதனையுள் - பிரமன் முதலிய தேவர்கள் செய்யும் ஆராய்ச்சியுள்ளும், அகப்படாச் சோதி - அகப்படாத ஒளி வடிவினனே, அந்தோ உனைச் சோதிக்கத் துணிந்தேன்-ஐயோ நின்னை (ஒன்றுக்கும் பற்றாத யானும்) ஆராயத் துணிந்தேனே, பேதைமையேன் இடத்து என்ன குணம் கண்டு என் பிணிதீர்த்து என் பெற்றாய் - அறிவிலியாகிய என்னிடத்து என்ன குணநலத்தினைக் கண்டு எனது நோயைப் போக்கி அதனால் என்ன பேறு பெற்றனை, ஆசை கோதம் இலாய் - விருப்பு வெறுப் பில்லாதவனே, ஐயா - ஐயனே, குற்றம் குணமாகவே கொள்வது நின்குணமோ - அடியார் செய்யும் குற்றங்களைக் குணமாகவே கொள்வது நினது அருட் குணமோ.

வேதமுதற்கலை - உரையளவை. காட்சி முதலியவற்றிற்கு எய்தாதவற்றை யும் உணர்த்தலின் உரையளவையை வேறு பிரித்தோதினர். கலையானும் அளவை யானும் விண்ணோர் செய்யும் சோதனை எனலுமாம்;

"மறையினா லயனால் மாலால் மனத்தினால் வாக்கால் மற்றும்
குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகிநின்ற
இறைவனார்"

என்று சிவஞானசித்தியார் கூறுவது காண்க. எத்தனையும் அரிய உன்னை இறப்ப இழிந்த யானும் சோதிக்கத் துணிந்தேனே என்றிரங்கி 'அந்தோ' என்றான். 'ஒழுக் கம் அன்பு அருள் ஆசாரம் உபசாரம் உறவு சீலம், வழுக்கிலாத்தவம் தானங்கள் வந்தித்தல் வணங்கல் வாய்மை, அழுக்கிலாத்துறவு அடக்கம் அறிவொடு அர்ச்சித் தல்' முதலியவற்றுள் ஒன்றும் உடையனல்லேன் என்பான் 'என்ன குணங்கண்டு' என்றான். என்ன குணங்கண்டு என்பிணி தீர்த்தாய், பிணிதீர்த்து என் பெற்றாய் என விரிக்க. கோதம், குரோதம் என்பதன் சிதைவு.

"யாதுநீ பெற்றதொன் றென்பால்"

"குன்றே யனைய குற்றங்கள் குணமா மென்றே நீ கொண்டால்"

என்னும் மணிவாசகங்கள் இங்கே சிந்திக்கற்பாலன. (உஉ)

பொன்னகரான் காலந்தாழ்த் தினையருச்சித் தயர்ச்சியொடும் போன வாறும்
என்னெனயான் வினவியதும் வலாரியிறை கொடுத்ததுமவ் விலைக்கு நேர்யான்
பின்னைவினா யதுமவன்சொல் வழியுன்னைச் சோதித்த பெற்றி தானும்
முன்னவனே யுன்னருளா லென்பிணிக்கு மருந்தாகி முடிந்த தன்றே.

(இ - ள்.) பொன் நகரான் காலம் தாழ்த்து உனை அருச்சித்து அயர்ச்சி யொடும் போனவாறும் - பொன்னுலகை யுடையவனாகிய இந்திரன் காலந் தாழ்த்து உன்னைப் பூசித்தலால் மனக் கவலையோடு போன தன்மையும், என் என யான் வின வியதும் - (அவ்வயர்ச்சிக்குக் காரணம்) யாது என யான் வினவியதும், வலாரி இறை கொடுத்ததும் - இந்திரன் விடை இறுத்ததும், அவ்விறைக்கு நேர் - அவ்விடைக்கு நேராக, யான் பின்னை வினாயதும் - யான் பின்பு வினவியதும், அவன் சொல் வழி உன்னைச் சோதித்த பெற்றி தானும் - (அதற்கு விடையாக) அவன் கூறிய நெறியி னின்று நின்னைச் சோதித்த தன்மையும் ஆகிய இவை யனைத்தும், முன்னவனே உன் அருளால் என் பிணிக்கு மருந்து ஆகி முடிந்தது - முதல்வனே நின் திருவருளால் எனது நோய்க்கு மருந்தாய் முடிந்தது.

முடிந்தது, பன்மையிலொருமை. தான், அன்று, ஏ என்பன அசைகள். (உ௩)

ஆறுமதி முடியணிந்த வருட்கடலே வயிற்றுநோ யன்றி மேனாள்
மாறுபடு மிருவினையு மலவலியுங் கெடவீட்டின் வழியும் பெற்றேன்
வேறினிமந் திரமென்னை மணியென்னை மருந்தென்னை மெய்ம்மை யாகத்
தேறுமவர்க் கிப்புனித தீர்த்தமே பிணியனைத்துந் தீர்ப்ப தன்றோ.

(இ - ள்.) ஆறுமதி முடி அணிந்த அருட் கடலே - கங்கையையும் சந்திரனை யும் முடியிற் றரித்த கருணைக் கடலே, வயிற்று நோய் அன்றி - என் வயிற்று நோயே அல்லாமல், மேல் நாள் மாறுபடும் இருவினையும் மல வலியும் கெட வீட்டின் வழியும் பெற்றேன் - அநாதியே என்னுடன் மாறுபட்ட இருவினைகளும் ஆணவ மலத்தின் வலியும் கெட வீட்டு நெறியையும் அடைந்தேன்; வேறு இனி மந்திரம் என்னை மணி என்னை மருந்து என்னை - இனி வேறு மந்திரம் எதற்கு மணி யாதி னுக்கு மருந்து எதன் பொருட்டு, மெய்ம்மையாகத் தேறுமவர்க்கு - உண்மையாகத் தெளிய வல்லோருக்கு, இப்புனித தீர்த்தமே - இந்தத் தூய தீர்த்தமே, பிணி அனைத்தும் தீர்ப்பது - நோய் முற்றும் போக்குவதாகும்.

மந்திரம் மணி மருந்து என்பன நோய் தீர்த்தற்குரியன; இறைவன் சார் பானே எல்லா நோயும் நீங்குமென்றார்.

"மந்திரமும் தந்திரமும் மருந்து மாகித்
தீராநோய் தீர்த்தருள வல்லான்"

என ஆளுடைய அரசுகள் கூறுமாறுங் காண்க. என்னை - எற்றிற்கு என்னும் பொருட்டு. (உச)

[வேறு]

அடியனேன் முன்னஞ் செய்த வடாத மிரண்டுந் தீரும்
படிபொறுத் தருள்வா யென்று பன்முறை பரவித் தாழ்ந்து
மடிவிலா மகிழ்ச்சி பொங்க வரங்களுஞ் சிறிது வேண்டிக்
கடியதன் னகரம் புக்கான் குடதிசைக் காவல் வேந்தன்.

(இ - ள்.) அடியனேன் முன்னம் செய்த அபராதம் இரண்டும் தீரும்படி பொறுத்தருள்வாய் என்று - அடியேன் முன் செய்த குற்ற மிரண்டும் நீங்குமாறு பொறுத்தருள வேண்டுமென்று, பல் முறை பரவித் தாழ்ந்து - பல முறை துதித்து வணங்கி, மடிவு இலா மகிழ்ச்சி பொங்க - அழிவில்லாத மகிழ்ச்சி மேலிட, சிறிது வரங்களும் வேண்டி - சில வரங்களையும் விரும்பிப் பெற்று, கடியதன் நகரம் புக்கான் - காவலையுடைய தனது நகரத்திற் புகுந்தான்; குடதிசைக் காவல் வேந்தன் - மேற்றிசைக் காவலனாகிய வருணன்.

அபராதம் இரண்டு - மதுரையை யழிக்கக் கடலை யேவியதும், முகில்களை யேவியதும். வேண்டிப்பெற்று என விரிக்க. கடிய, குறிப்புப் பெயரெச்சம். வேந்தன் என்பதனை மேல் உக-ம் செய்யுளிலுள்ள நீர்க்கோன் என்பதனோடு கூட்டி, வேந்தனாகிய நீர்க்கோன் என்க. (உரு)

வன்றிறல் வருணன் விட்ட மாரியை விலக்க வீசன்
மின்றிகழ் சடையி னின்று நீங்கிய மேக நான்கும்
குன்றுபோ னிவந்து நான்கு கூடமாக் கூட லாலே
அன்றுநான் மாடக் கூட லானதான் மதுரை மூதூர்.

(இ - ள்.) வன்திறல் வருணன் விட்ட மாரியை விலக்க - மிக்க வலியினை யுடைய வருணன் எவிய முகில்களைத் தடுக்கும் பொருட்டு, ஈசன் மின்திகழ் சடையினின்று நீங்கிய மேகம் நான்கும் - இறைவனது மின்போல விளங்கும் சடையினின்று நீங்கிய நான்கு முகில்களும், குன்றுபோல் நிவந்து நான்கு கூடமாக் கூடலால் - மலைபோல உயர்ந்து நான்கு மாடமாகக் கூடுதலால், மதுரை மூதூர் அன்று நான் மாடக் கூடல் ஆனது - மதுரையாகிய பழைய பதியானது அந்நாள் தொட்டு நான்மாடக் கூடல் என்னும் பெயருடையதாயிற்று.

வன்றிறல், ஒருபொருட் பன்மொழி. ஆக வென்பது ஈறு தொக்கது. அன்று தொட்டென்க. ஆல், அசை. (உசு)

ஆகச் செய்யுள் கஙகூஉ.

## இருபதாவது

# எல்லாம்வல்ல சித்தரான படலம்

[கலிநிலைத்துறை]

சத்த நான்மறைப் பொருள்வரை தள்ளுநீண் முடிமேல்
வைத்த கார்களுன் மாடமாய் மதுரைமேல் வருணன்
உய்த்த மாரியைத் தடுத்தவா றுரைத்துமே றுயர்த்தோர்
சித்த ராய்விளை யாடிய செயல்சிறி துரைப்பாம்.

(இ - ள்.) சத்தம் நான் மறைப்பொருள் வரைதள்ளும் நீள்முடிமேல் வைத்த - ஒலி வடிவாகிய நான்கு மறைகளின் பொருளினெல்லையைக் கடந்த நீண்ட திரு முடியின்கண் வைத்த, கார்கள் நான்மாடமாய் - முகில்கள் நான்கு மாடங்களாகி, மதுரைமேல் வருணன் உய்த்த மாரியைத் தடுத்தவாறு உரைத்தும் - மதுரையின் மேல் வருணன் ஏவிய முகில்களை விலக்கிய திருவிளையாடலைக் கூறினேம்; ஏறு உயர்த்தோர் - (இனி) இடபக்கொடியையுயர்த்திய சொக்கலிங்க மூர்த்தி, சித்தராய் விளையாடிய செயல் சிறிது உரைப்பாம் - எல்லாம் வல்ல சித்தராகி விளையாடிய திருவிளையாடலைச் சிறிது கூறுவாம்.

மறைப்பொருள் - மறை கூறும் பொருள். தள்ளுதல் - தாண்டி நிற்றல். மாடமாய்த் தடுத்தவாறு என்க. உரைத்தும், தனித்தன்மைப் பன்மை இறந்த கால முற்று. அறிந்தவாறென்பார் 'சிறிது' என்றார். (க)

தேட ருங்கதிர் மணிமுடிச் செழியனும் பாண்டி
நாட ருந்திரு வெய்திமே னல்லவீ டெய்தக்
கூட லம்பதி மேவிய குணங்குறி கடந்த
வேட ரங்கொரு சித்தமெய் வேடராய் வருவார்.

(இ - ள்.) தேடருங் கதிர்மணி முடிச்செழியனும் - தேடிப் பெறுதற்கரிய ஒளியினையுடைய மணிகளழுத்திய முடியினைத் தரித்த அபிடேக பாண்டியனும், பாண்டி நாடரும்-பாண்டி நாட்டிலுள்ளவர்களும், திரு எய்திமேல் நல்ல வீடு எய்த - இம்மையிற் செல்வத்தை யடைந்து பின்பு நல்ல வீடு பேற்றினை அடைய, கூடல் அம்பதி மேவிய - கூடலாகிய அழகிய பதியில் எழுந்தருளிய, குணம் குறி கடந்த வேடர் - குணத்தையும் குறியையும் கடந்த உருவினையுடைய பெருமான், அங்கு ஒரு சித்தமெய் வேடராய் வருவார் - அம்மதுரைப் பதியில் ஒரு சித்தவடிவமாகிய திருவேட முடையவராய் வருவாராயினர்.

எய்த வருவார் என்க. அம் சாரியையுமாம். குணம் - முக்குணம். குறி - ஒருவன் ஒருத்தி ஒன்று என்னும் பால்வகை; குறிப்புமாம். கடந்த வேடம் - சொரூபம். மெய் - வடிவு. (உ)

வட்ட வார்சடைக் குஞ்சியும் பூணநூன் மார்பும்
இட்ட நீறணி திலகமு மிணைக்குழை தூங்க
விட்ட வெள்ளைமுத் திரையுந்தோல் விரித்தபட் டிகையுஞ்
சுட்ட வெண்பொடிப் பொக்கணந் தூக்கிய தோளும்.

(இ - ள்.) வட்டம் வார் சடைக் குஞ்சியும் - வட்டமாகக் கட்டிய நீண்ட சடையாகிய சிகையும், பூணநூல் மார்பும் - பூணூலணிந்த திருமார்பும், இட்ட நீறு அணி திலகமும் - தரித்த திருநீற்றின்மேல் அணிந்த திலகமும், இணைக் குழை தூங்க விட்ட வெள்ளை முத்திரையும் - இரண்டாகிய குண்டலங்களுடன் தொங்கவிட்ட வெள்ளிய தோடுகளும், தோல்விரித்த பட்டிகையும் - தோலாகிய விரித்த அரைப் பட்டிகையும், சுட்ட வெண்பொடிப் பொக்கணம் தூக்கிய தோளும் - நீற்றிய திருநீற்றினையுடைய பையைத் தொங்க விட்ட தோளும்.

பூணனூல், அ அசை; பூண நூல் என்பது பாடமாயின் பூணுதலையுடைய நூல் என்க. முத்திரை - அடையாளமாகிய தோடு; வெள்ளை முத்திரை - சங்காலாகிய தோடு. பொக்கணம் - திருநீற்றுப்பை. (ரு)

தூய்ய வெண்பொடி யழிந்துமெய் சிவந்திடச் சுவடு
செய்யும் வெண்டிரட் படிகநீண் மாலையுஞ் சிவந்த
கையி லங்குகட் டங்கமுங் கண்டவர் மனஞ்சென்
றுய்ய வன்புற வீக்கிய வுதரபந் தனமும்.

(இ - ள்.) தூய்ய வெண்பொடி அழிந்து மெய் சிவந்திட - தூய திருநீறு அழிந்து திருமேனி சிவக்குமாறு, சுவடு செய்யும் - தழும்பினைச் செய்யும், வெண் திரள் படிகம் நீள்மாலையும் - வெள்ளிய திரண்ட படிகத்தாலாகிய நீண்டமாலையும், சிவந்த கை இலங்கு கட்டங்கமும் - சிவந்த திருக்கரத்தில் விளங்கும் மழுப்படையும், கண்டவர் மனம் சென்று உய்ய வன்புற வீக்கிய உதரபந்தனமும் - தரிசித்தோர் உள்ளமானது சென்று பதிந்து உய்தி கூடச் சிக்கெனக் கட்டிய உதரபந்தனமும்.

திருநீறு அழிதலால் மெய்யின் சிவப்புத் தோன்றுமாறு என்க. கட்டங்கம் - மழு;

"சுத்திய பொக்கணத் தென்பணி கட்டங்கம்"

என்னும் திருச்சிற்றம்பலக்கோவையார் உரையை நோக்குக. (சு)

அட்ட வேங்கையீ ருரிவைகீண் டசைத்தகோ வணமும்
ஒட்ட வீக்கிய புலியத ளுடுக்கையு மிடத்தோள்
இட்ட யோகபட் டிகையும்பொன் னிடையிடை கட்டப்
பட்ட சுவ்வொருலி வேத்திரப் படைக்கையும் படைத்து.

(இ - ள்.) அட்ட வேங்கை ஈர் உரிவை கீண்டு அசைத்த கோவணமும் - கொன்ற வேங்கையினின்றும் உரித்த தோலைக் கிழித்துக் கட்டிய கோவணமும்,

ஒட்ட வீக்கிய புலி அதள் உடுக்கையும் - இறுகக் கட்டிய புலித்தோலாடையும், இடத்தோள் இட்ட யோக பட்டிகையும் - இடத்தோளிலிட்ட யோக பட்டிகையும், பொன் இடை இடை கட்டப்பட்ட சுஃறெனலி வேத்திரப் படைகையும் படைத்து - பொற்கம்பியால் இடை யிடையே கட்டப்பட்ட சுஃறென்னும் ஒலியினையுடைய பிரப்புப் படையினை ஏந்திய திருக்கையும் ஆகிய இவற்றையுடையராய்.

அடப்பட்ட என்பது அட்ட என நின்றது. வீண்டு - வீழ்ந்து. சுஃஃறென்னும் ஒலி என்பது சுஃறொலி யென நின்றது. சுஃறென, ஒலிக்குறிப்பு; இது பிரம்பைச் சுழற்றி வீசுவதால் உண்டாவது. (ரு)

வேத கிண்கிணி சிலம்புசூழ்ந் தடிகளின் மிழற்ற
ஓத ரும்பத முளரியூ றருண்மது வொழுகப்
போத வானந்த மதுநுகர்ந் தலர்முகம் பொலியப்
பாத பங்கய முபநிடப் பாதுகை சூட.

(இ - ள்.) வேதம் கிண் கிணி சிலம்பு சூழ்ந்து அடிகளின் மிழற்ற - வேதமாகிய கிண்கிணியும் சிலம்பும் சூழ்ந்து திருவடிகளில் ஒலிக்கவும், ஓது அரும்பதம் முளரி ஊறு அருள்மது ஒழுக - சொல்லுதற்கரிய திருவடித் தாமரையிற் சுரக்கின்ற அருட்டேனது ஒழுகவும், போத ஆனந்த மது நுகர்ந்து அலர் முகம் பொலிய - ஞானனந்தமாகிய தேனைப் பருகி மலர்ந்த திருமுகமானது விளங்கவும், பாதபங்கயம் உபநிடப் பாதுகை சூட - திருவடித் தாமரைகளை உபநிடதமாகிய பாதுகைமுடியில் அணியவும்.

இறைவன் ஞானனந்தமயனய் இருத்தலை 'போதவானந்த மது நுகர்ந்து' என்றார். உபநிடதம் என்பது உபநிடம் என நின்றது. பாதுகையைச் சூட எனலுமாம். (சு)

சிறிது மூரலும் வெயர்வையுந் திருமுகத் தரும்பக்
குறுகி யாவணஞ் சித்திர கூடநாற் சந்தி
மறுகு சூளிகை யுபரிகை மாளிகை வாயில்
அறுகு சூழ்நிறை தெற்றியிவ் விடந்தொறு மடைந்து.

(இ - ள்.) திருமுகத்து சிறிது மூரலும் வெயர்வையும் அரும்ப - திருமுகத்தின்கண் சிறிது புன்னகையும் வெயர்வும் தோன்ற, குறுகி - சென்று, ஆவணம் - கடைவீதியும், சித்திரகூடம் - சித்திரகூடமும், நால்சந்தி - நான்கு தெருக்கள் கூடுமிடமும், மறுகு - வீதியும், சூளிகை உபரிகை - இறப்பினையுடைய மேல்மாடமும், மாளிகை வாயில் - மாளிகையின் வாயிலும், அறுகு நிரை சூழ்தெற்றி - சிங்கவரிசைகள் சூழ்ந்த திண்ணையும் ஆகிய, இவ்விடந்தொறும் அடைந்து - இவ்விடங்கள் தோறும் போய்.

சித்திரகூடம் - தெற்றியம்பலம். சூளிகை - நிலாமுற்றமுமாம். அறுகு - சிங்கம். (எ)

தெற்கி ருப்பவர் போல்வட திசைவயிற் சென்று
புக்கி ருப்பதுங் கிழக்குளார் போலமேற் றிசையில்
நக்கி ருப்பதும் யாவரு நாடின ரறியத்
தக்க தன்றியே யிந்திர சாலமாத் தணந்தும்.

(இ - ள்.) தெற்கு இருப்பவர்போல் வடதிசை வயின்சென்று புக்கு இருப்பதும் - தெற்கில் இருப்பவர்போற் காட்டி வடதிசைக் கண்ணே சென்று அமர்ந் திருப்பதும், கிழக்கு உளார்போல மேல்திசையில் நக்கு இருப்பதும் - கிழக்கிலிருப் பவர்போலக் காட்டி மேற்குத் திசையிற் சென்று மகிழ்ந்திருப்பதும், யாவரும் நாடி னர் அறியத்தக்கது அன்றியே - எவரும் ஆராய்ந்து அறியக்கூடாவாறு, இந்திரசால மாத் தணந்தும் - இந்திர சாலமாக நீங்கியும்.

நாடினர், முற்றெச்சம்; நாடினர் யாவரும் என இயைத்து, பார்த்துநின்றவர் யாவரும் என உரைத்தலுமாம். தக்கது - தக்கவாறு. இந்திரசாலம் - சாலங்களிற் றலையாயது. சாலம் - வலை; பிறரை மயக்கி வயப்படுத்தும் விஞ்சையைக் குறிப்ப தாயிற்று. ஆக வென்பது தொக்கது. (அ)

சேய வெற்பினை யணியதாச் செய்துமற் றணித்தாய்
மேய வெற்பினைச் சேயதா விடுத்துமெய்ம் முதுமூப்
பாய மக்களை யிளையவ ராக்கியுங் குதலை
வாய மக்களைக் கழிமுது மக்களா வகுத்தும்.

(இ - ள்.) சேய வெற்பினை அணியதாச் செய்தும் - தூரத்திலுள்ள மலையை அண்மையி லுள்ளதாகச் செய்தும், மற்று அணித்தாய் மேய வெற்பினைச் சேயதா விடுத்தும் - அதற்கு மாறாக அண்மையிலுள்ள மலையைச் சேய்மையிற் செல்லவிடுத் தும், மெய் முது மூப்பு ஆய மக்களை இளையவர் ஆக்கியும் - உடல் முதுமையடைந்த விருத்தர்களை இளைஞர்களாக்கியும், குதலை வாய மக்களை கழி முது மக்களா வகுத் தும் - குதலைச்சொற்கள் பேசும் வாயினையுடைய பாலர்களை மிகுந்த விருத்தர்களாகச் செய்தும்.

**சேய,** வாய என்பன குறிப்புப் பெயரெச்சம். மற்று, வினைமாற்று. மேவிய, **ஆகிய,** ஆக என்பன விகாரமாயின. (கூ)

ஆணைப் பெண்ணுரு வாக்கியும் பெண்ணையா ணுருவா
மாணக் காட்டியு மலடியை மகப்பெறச் செய்துங்
கோணற் கூன்செவி டுமைகண் குருடியங் கெவருஞ்
சாணத் தீர்த்துநா லுலோகமுங் கனகமாச் செய்தும்.

(இ - ள்.) ஆணைப் பெண்உரு ஆக்கியும் - ஆண் வடிவத்தினைப் பெண் வடிவ மாகச் செய்தும், பெண்ணை ஆண்உருவா மாணக்காட்டியும் - பெண் வடிவத்தினை ஆண் வடிவமாக மாட்சிமைப்படக் காட்டியும், மலடியை மகப்பெறச் செய்தும் -

மலடியைப் பிள்ளைப்பேறு அடையச் செய்தும், கோணல் கூன் செவிடு ஊமை கண் குருடு பங்கு எவருங் காணத்தீர்த்தும் - வளைந்த கூனும் செவிடும் ஊமையும் விழிக் குருடும் முடமும் ஆகிய இவற்றை யாவருங் காணப் போக்கியும், நால் உலோகமும் கனகமாச் செய்தும் - நான்கு உலோகங்களையும் பொன்னாகச் செய்தும்.

நாலு லோகம் என்றது ஐந்து லோகத்துள் பொன் ஒழிந்த இரும்பு, செம்பு, ஈயம், வெள்ளி என்பனவற்றை; ஐந்து லோகம் இவை யென்பதனை,

> "தமனியம் இரும்பு தாமிரம் ஈயம்
> இரசிதம் பஞ்ச லோக மென்ப"

என்னும் பிங்கலத்தானறிக. இரும்பு முதலியவற்றைப் பொன்னாக்கும் வித்தைக்கு இரசவாதம் என்று பெயர். (௰)

> செல்வர் தம்மனைப் பொருளெலாம் வறுமையிற் சிறந்தோர்
> இல்ல மெய்தவு நட்டவ ரிகலின்றித் தம்மின்
> மல்லு வெஞ்சம ரிழைப்பவுங் காஞ்சிர மரத்தின்
> நல்ல தீங்கனி பழுப்பவும் விஞ்சைக ணயந்தும்.

(இ - ள்.) செல்வர்தம் மனைப்பொருள் எலாம் வறுமையில் சிறந்தோர் இல்லம் எய்தவும்-செல்வர்கள் இல்லிலுள்ள பொருள்களனைத்தும் வறுமையில் மிக்கோர் வீட்டிற்சென் றடையவும், நட்டவர் - நட்பினை யுடையவர், இகல் இன்றி - பகையில்லாமல், தம்மில் மல்லு வெஞ்சமர் இழைப்பவும் - தம்மிற் கொடிய மற்போர்புரியவும், காஞ்சிரமரத்தில் நல்ல தீங்கனி பழுப்பவும் - எட்டிமரத்தில் நல்ல சுவையினையுடைய பழங்கள் பழுக்கவும்; விஞ்சைகள் நயந்தும் - வித்தைகள் செய்தும்.

மல்லு, உகரம் சாரியை. எய்த இழைப்ப பழுப்ப விஞ்சைகள் புரிந்தென்க. நயந்து - விரும்பி ; செய்தென்னும் பொருட்டாயது. (௧௧)

> பருவ மாறிய பருவத்தில் வையைநீர் பரந்து
> வருவ தாக்கியு மீளவும் வறந்திடச் செய்தும்
> பொருவி றீஞ்சுவை யோடையும் பொய்கையு முவர்ப்புத்
> தருவ வாக்கியு முவரியின் சுவையதாத் தந்தும்.

(இ - ள்.) பருவம் மாறிய பருவத்தில் - காலமல்லாத காலத்தில், வையைநீர் பரந்து வருவது ஆக்கியும் - வையையாறு நீர்பெருகி வருவதாகச் செய்தும், மீளவும் வறந்திடச் செய்தும் - திரும்பவும் வற்றுமாறு செய்தும், பொருவுஇல் தீஞ்சுவை ஓடையும் பொய்கையும் உவர்ப்புத் தருவ ஆக்கியும் - ஒப்பில்லாத இனிய சுவையினை யுடைய ஓடையும் பொய்கையும் உவர்ப்புத் தருவனவாகச் செய்தும், உவரி இன் சுவையதாத் தந்தும் - கடல் இனிய சுவையினை உடையதாகச் செய்தும்.

பருவமாறிய பருவம் - முதுவேனிற் பருவம். ஓடை, பொய்கை, உவரி என்பன அவற்றின் நீரைக் குறிப்பன. தந்து - செய்தென்னும் பொருட்டாயது. (௧௨)

வீசி மாத்திரைக் கோலினை விண்ணினட் டதன்மேல்
ஊசி நாட்டியிட் டூசிமேற் பெருவிர லூன்றி
ஆசி லாடியு மூசிமேற் றலைகிழக் காக
மாசில் சேவடிப் போதுவான் மலர்ந்திடச் சுழன்றும்.

(இ - ள்.) மாத்திரைக் கோலினை விண்ணில் வீசிநட்டு அதன்மேல் ஊசி நாட்டிஇட்டு - மாத்திரைக் கோலை வானிலேவீசி நிறுத்தி அக்கோலின்மேல் ஊசியை நாட்டிவைத்து, ஊசிமேல் பெருவிரல் ஊன்றி ஆசில்ஆடியும் - அந்த ஊசியின்மேற் பெருவிரலை ஊன்றி நுண்ணிதின் ஆடியருளியும், ஊசிமேல் - அவ் வூசியின்மேல், தலைகிழக்கு ஆக மாசுஇல் சேவடிப் போதுவான் மலர்ந்திடச் சுழன்றும் - தலைகீழாக வும் குற்றமற்ற சிவந்த திருவடித்தாமரை வானின்கண் மலரவும் சுழன்றாடியும்.

மாத்திரை - அளவு ; குறுந்தடியை மாத்திரைக் கோலென்பது வழக்கு ;

"மாங்காய் விழவெறிந்த மாத்திரைக்கோ லொக்குமே"

என்பது காண்க. இட்டு, அசைநிலை. ஆசு - நுட்பம் ; ஆசுஇல் - துன்பமில்லையாக என்றுமாம். கிழக்கு என்பது முதற்கண் இப் பொருளில் வழங்கியே பின் திசைப் பெயராயிற்று ; மேற்கு என்பதும் இவ்வாறே. போது என்றதற் கேற்ப மலர்ந்திட என்றார். மலர்தல் ஈண்டு மேல்நோக்கியிருத்தல். (கங)

சண்ட வெம்பணிப் பகையெனப் பறந்துவிண் டாவிக்
கொண்ட லைப்பிடித் திடியொடுங் குடித்தநீர் பிழிந்து
கண்ட வர்க்கதி சயம்பெறக் காட்டியுங் காண
விண்ட லத்தினிற் பண்டுபோ லிறைகொள விடுத்தும்.

(இ - ள்.) சண்ட வெம்பணிப் பகை எனப் பறந்து - கடிய செலவினை யுடைய கொடிய பாம்பின் பகையாகிய கலுழனைப்போலப் பறந்து, விண் தாவி - வானிற்றாவி, கொண்டலைப் பிடித்து - முகிலைப் பற்றி, இடியொடும் குடித்த நீர் பிழிந்து - இடியோடு கடலிற் பருகிய நீரினைப் பிழிந்து, கண்டவர்க்கு அதிசயம் பெறக் காட்டியும் - பார்த்தவர்க்கு வியப்புத் தோன்றக் காண்பித்தும், காண - அவர்கள் காண, விண் தலத்தினில் பண்டுபோல் இறை கொள விடுத்தும் - வானின் கண் முன்போலவே தங்கும்படி அதனை விடுத்தும்.

சண்டம் - வன்மை; கலுழனுக்கு அடை. இடியொடும் பிழிந்து காட்டி யென்க. (கச)

எல்லி டைப்படும் பொருள்களை யிராவெழப் பார்த்தும்
அல்லி டைப்படும் பொருள்களைப் பகல்வா வமைத்தும்
வல்ல புறப்புன லுளர்வளி வலிகெடப் பார்த்தும்
நல்ல போதுகாய் கனியிலா நாள்படக் கணடும்.

(இ - ள்.) எல் இடைப்படும் பொருள்களை இரா எழப் பார்த்தும் - பகலிற் றோன்றும் பொருள்களை இரவிற்றோன்றுமாறு பார்த்தருளியும், அல் இடைப்படும் பொருள்களைப் பகல்வர அமைத்தும் - இரவிற் றோன்றும் பொருள்களைப் பகலில் வரச் செய்தும், வல் அழல் புனல் உளர்வளி வலிகெடப் பார்த்தும் - வலிய நெருப்பும் நீரும் அசைகின்ற காற்றுமாகிய இவைகளின் வலிகெடப் பார்த்தருளியும், நல்ல போது காய் கனி இலா நாள் படக் கண்டும் - நல்ல மலரும் காயும் கனியும் இல்லாத நாளில் உண்டாகச் செய்தும்.

பகலிற் றோன்றுவன ஞாயிறு முதலியன. இரவிற்றோன்றுவன திங்கள் முதலியன. வலிகெடப் பார்த்தல் - எரித்தல் நனைத்தல் அசைத்தல் முதலிய இயல்பினை இழக்கச் செய்தல். இல்லா நாள் - உரியவல்லாத நாட்கள். பார்த்து, கண்டு என்பன செய்து என்னும் பொருளன. (கரு)

பீளை கால்விழிக் கிழவரைப் பிரம்பினுல் வருடிக்
காளை யாடவ ராக்கியக் கணவருக் கிசைய
ஈளை வாய்முது கற்பினர் கருவடைந் திளமை
ஆள வேத்திரம் வருடிநீ றளித்தருள் செய்தும்.

(இ - ள்.) பீளை கால்விழிக் கிழவரைப் பிரம்பினுல் வருடி - பீளை ஒழுகும் விழியினை யுடைய விருத்தரைப் பிரம்பினுல் நீவி, காளை ஆடவர் ஆக்கி - காளைப்பருவத்தினையுடைய ஆடவராகச் செய்து, அக்கணவருக்கு இசைய - அந்நாயகருக்குப் பொருந்த, ஈளைவாய் முது கற்பினர் - ஈளை வாய்ந்த முதுமைப் பருவத்தினையுடைய கற்பிற் சிறந்த அவர் மனைவியர், கரு அடைந்து இளமை ஆள - கருவுற்று இளமைப் பருவத்தை அடையுமாறு, வேத்திரம் வருடி நீறு அளித்து அருள் செய்தும் - பிரம்பினுலே தடவித் திருநீறு அளித்துக் கருணை புரிந்தும்.

கிழவர் என்னுஞ் சொல் உரியவர் என்னும் பொருளில் முன்பு வழங்கிப் பின்பு முதியோரைக் குறிக்கும் பெயராயிற்று. ஈளை-கபத்தாலுண்டாகும் இழைப்பு; பிறர் வீளையெனப் பிரித்தது பொருந்தாமை காண்க. இளமை யெய்த வேத்திரம் வருடியும் கருவடைய நீறளித்தும் என்க. (கசு)

அகர மாதிமூன் ருகிய வாகரு டணமே
புகரி லாவதி ரிச்சிய மஞ்சனம் பொருவில்
வகர மாதிமூன் ருகிய வசியமே வாதம்
இகலி லாவயத் தம்பமென் றின்னவை செய்தும்.

(இ - ள்.) அகரம் ஆதி மூன்ருகிய - அகரத்தை முதலாகவுடைய மூன்ருகிய, ஆகருடணம் புகர் இலா அதிரிச்சியம் அஞ்சனம் - ஆகருடணமும் குற்றமில்லாத அதிரிச்சயமும் அஞ்சனமும், பொருவுஇல் வகரம் ஆதி மூன்ருகிய - ஒப்பில்லாத வகரத்தை முதலாகவுடைய மூன்ருகிய, வசியம் வாதம் இகல் இலா வயத்தம்பம் - வசியமும் வாதமும் மாறுபாடில்லாத வயத்தம்பமும், என்று இன்னவை செய்தும் - என்று சொல்லப்படும் இவைகளைச் செய்தும்.

குறிலின் விகாரமே நெடிலாதலால் ஆ என்பதனை அகரத்துளடக்கியும் வா என்பதனை வகரத்துளடக்கியும் 'அகரமாதி மூன்று,' 'வகரமாதி மூன்று' என்றார். ஆகருடணம் முதலியவற்றைக் குறிப்பாற் கூறலுறுவார் அவற்றின் முதலெழுத்தால் 'அகாரம், வகாரம்' என்றிங்ஙனம் கூறுவராகலின், அதனைப் புலப்படுப்பான்வேண்டி 'அகரமாதி மூன்றாகிய,' 'வகரமாதி மூன்றாகிய' என்று கூறிவைத்துப், பின் பெயர் களையும் கிளந்தோதினர். தாமதகுண சித்தி யெனப்படும் எட்டனுள் தம்பனம், மோகனம் என்னும் இரண்டு மொழித்து ஒழிந்தவற்றை இதனுள் ஓதினர். ஆகருடணம் - சேய்மையிலுள்ளதை அண்மையில் வர இழுத்தல். அதிரிச்சியம் - கட்புலனவதைப் புலனாகாமல் மறையச் செய்தல். அஞ்சனம் - மறைந்திருப்பதை வெளிப் படுத்திக் காட்டுதல். வசியம் - பகைவரையும் உறவாக்குவது. வாதம் - இரும்பு முதலியவற்றைப் பொன்னாக்குவது. வயத்தம்பம் - முதியோரை இளையராகவும் இளையோரை முதியராகவும் செய்வது. இடையிட்டு நின்ற ஏகாரங்கள் எண்ணுப் பொருள் குறித்தன;

> "எண்ணேகாரம் இடையிட்டுக் கொளினும்
> எண்ணுக் குறித்தியலு மென்மனார் புலவர்"

என்பது தொல்காப்பியம். (கஎ)

> வேத நூறெளி யார்களெக் கலைகளும் விளங்கப்
> பூதி நாவினிற் சிதறியும் பூழியன் காதன்
> மாத ராரொடும் பயில்புது மணமலர்க் காவிற்
> காத நீண்டகோட் டெங்கினைக் கரும்பனை செய்தும்.

(இ - ள்.) வேத நூல் தெளியார்கள் எக்கலைகளும் விளங்க - மறை நூல் முதலிய யாவுந் தெளியாதவர்களுக்கு எல்லாக்கலைகளும் விளங்க, நாவினில் பூதி சிதறியும் - அவர் நாவிலே திருநீற்றைச் சிதறியும், பூழியன் - பாண்டியனனவன், காதல் மாதராரொடும் பயில் புதுமணம் மலர்க்காவில் - காதல் மகளிரொடும் விளையாடும் புதிய மணமிக்க மலர்கள் நிறைந்த சோலையிலுள்ள, காதம் நீண்ட கோள் தெங்கினைக் கரும்பனை செய்தும் - காத அளவு நீண்டுயர்ந்த கோட்புக்க தெங்கினைக் கரிய பனையாகச் செய்தும்.

தெளியார்களுக்கு என்னும் நான்கனுருபு தொக்கது. கோட்டெங்கு - கோட்புக்க தெங்கு; காய்த்த தெங்கு. (கஅ)

> ஏனை வான்றருக் குலங்களைப் புட்களை யிருகோட்
> டானை யாதிபல் விலங்கினை யொன்றையொன் றாக
> ஞான நோக்கினு னேக்கியு நாடிய விளையோர்
> மானி னேக்கிய ராகிலோ மெனவெழில் வாய்ந்தும்.

(இ - ள்.) ஏனை வான் தருக் குலங்களை - மற்றைய உயர்ந்த மரக்கூட்டங்களையும், புட்களை - பறவைகளையும், இரு கோட்டு ஆனை ஆதி பல் விலங்கினை - இரண்டு

கொம்பினையுடைய யானை முதலிய பல விலங்குகளையும், ஒன்றை ஒன்றாக ஞான நோக்கினால் நோக்கியும் - ஒன்று மற்றொன்றுமாறு ஞானப்பார்வையாற் பார்த்தருளி யும், நாடிய இளையோர் - பார்த்த இளமைப் பருவத்தினையுடைய ஆடவர், மானின் நோக்கியர் ஆகிலோமென - மான்போன்ற பார்வையினையுடைய மகளிராக நாம் பிறக்க வில்லையே எனக் கவல, எழில் வாய்ந்தும் - கட்டழகினைப்பொருந்தியும்.

ஒன்றை யென்பதில் ஐகாரம் சாரியை. இவனை அணைதற்கு மாதராகப் பிறந்திலோமேயென என்க;

"ஆடவர் பெண்மையை யவாவுந் தோளினாய்"

என இராமாயணங் கூறுவதுங் காண்க. இது வசியம் எனப்படும். (கக)

நாக நாடுபொன் னாட்டுள பொருளுமந் நகருள்
ஆக வாக்கியு மின்னணம் விச்சைக ளனந்தம்
மாக நாயகன் மலைமக ணாயகன் மதுரை
ஏக நாயகன் றிருவிளை யாடல்செய் திருந்தான்.

(இ - ள்.) நாக நாடு பொன் நாடு உள பொருளும் அந்நகருள் ஆக ஆக்கியும் - பாதலத்திலும் பொன்னுலகத்திலும் உள்ள பொருள்களும் அம்மதுரைப் பதியில் உண்டாகுமாறு செய்தும், இன்னணம் அனந்தம் விச்சைகள்-இங்ஙனம் அளவில்லாத வித்தைகளை, மாகநாயகன் - சிவலோக நாயகனும், மலைமகள் நாயகன் - பார்வதி தலைவனும், மதுரை ஏகநாயகன் - மதுரையிலெழுந்தருளியுள்ள ஒப்பற்ற இறைவனு மாகிய சோமசுந்தரக் கடவுள், திருவிளையாடல் செய்து இருந்தான் - திருவிளையாட லாகப் புரிந்து இருந்தருளினன்.

பாதலத்துப் பொருள் பொன்னாட்டுப் பொருளாகவும் பொன்னாட்டுப் பொருள் பாதலத்துப் பொருளாகவும் எனப் பிறர் பொருள் கூறுவாராயினர்; சொற் கள் அதற்கேற்றவாறில்லாமை காண்க. (உ0)

சித்த யோகிகள் செய்கின்ற வாடன்மேற் செலுத்தி
வைத்த கண்களுஞ் சிந்தையும் வாங்கலர் திகைத்துத்
தத்த மாள்வினைத் தொழின்மறந் திருந்தனர் தகைசால்
முத்த வேதிய ராதிய முதுநகர் மாக்கள்.

(இ - ள்.) தகைசால் முத்த வேதியர் ஆதிய முது நகர் மாக்கள் - தகுதிமிக்க முத்தத்தன்மையையுடைய அந்தணர் முதலிய தொன்மையுடைய மதுரைப் பதியி லுள்ள மாந்தர்கள், சித்த யோகிகள் செய்கின்ற ஆடல்மேல் செலுத்தி வைத்த - யோக சித்தமூர்த்திகள் செய்தருளும் திருவிளையாடலின்மேற் செலுத்தி வைத்த, கண்களும் சிந்தையும் வாங்கலர் - கண்களையும் உள்ளத்தினையும் மீட்க முடியாதவர் களாய், திகைத்து - திகைப்புற்று, தத்தம் ஆள்வினைத் தொழில் மறந்திருந்தனர் - தத்தமக்குரிய தொழில் முயற்சிகளை மறந்திருந்தார்கள் எ - று.

வாங்கலர், எதிர்மறை முற்று எச்சமாயது. வாங்குதல் - மீட்டல். ஆள்வினை - முயற்சி; செய்கடனுமாம். முத்தர் - விடுபட்டோர்; சீவன் முத்திபெற்றோர். (உக)

(இனைய செய்தியை யுழையரா லிறைமக னறிந்தான்) —
அனைய சித்தரை யிங்ஙனந் தருகென வடுத்தார்
தனைய கற்றினன் சித்தரைச் சார்ந்தவர் தாமும்
வினையை வென்றவ ராடலை வியந்துகண் டிருந்தார்.

(இ - ள்.) இனைய செய்தியை - இந்நிகழ்ச்சியை, இறைமகன் உழையரால் அறிந்தான் - அபிடேக பாண்டியன் ஒற்றரால் அறிந்து, அனைய சித்தரை இங்ஙனம் தருக என - அவ்வித்தக சித்தரை இங்கு அழைத்து வாருங்கள் என்று, அடுத்தார் தனை அகற்றினன் - பக்கத்து நின்றவர்களைப் போக்கினன்; சித்தரைச் சார்ந்து அவர் தாமும் - சித்தரை அடைந்து அவரும், வினையை வென்றவர் ஆடலைக் கண்டு வியந்து இருந்தார் - இயல்பாகவே பாசங்களினீங்கிய அச்சித்தரின் திருவிளையாடலைப் பார்த்து வியந்து தம்மை மறந்திருந்தனர்.

தருகென, அகரந் தொக்கது. தமை எனற்பாலது தொடைநோக்கித் தனை யென நின்றது. தம், சாரியை. அவர்தாமும் சார்ந்து என்க; தாம், அசை. (உஉ)

அமைச்சர் தங்களை விடுத்தன னமைச்சருஞ் சித்தர்
தமைச் சரண்பணிந் தரசன்முன் வருகெனத் தவத்தோர்
எமக்கு மன்னனா லென்பய னெனமறுத் திடமண்
சுமக்கு மன்னவன் றம்மவர்* தொழுதனர் போனார்.

(இ - ள்.) (அவர்கள் வாராமையைக் கண்டவழுதி பின்னும்) அமைச்சர் தங்களை விடுத்தனன்-மந்திரிகளை ஏவினன்; அமைச்சரும் சித்தர் தமைச்சரண் பணிந்து- அவர்களும் சித்தமூர்த்தியின் திருவடிகளை வணங்கி, அரசன் முன்வருக என - மன்னன் முன் வரக்கடவீர் என வேண்ட, தவத்தோர் - யோகசித்தர், எமக்கு மன்னனால் என்பயன் என மறுத்திட - எமக்கு அரசனாலாம் பயன் யாது என்று மறுக்க, மண் சுமக்கு மன்னவன் தம்மவர் தொழுதனர் போனார் - நிலவுலகினைத் தாங்கும் அரசனுடைய அமைச்சர்கள் தொழுது போயினர்.

தம் என்பன சாரியை. சரணினை யென உருபை மாறுக. வருகென, தொகுத்தல். பெருமிதந் தோன்ற 'எமக்கு' என்றார்.

"வையமும் தவமும் தூக்கின் தவத்திற்கு
ஐயவி யனைத்தும் ஆற்றாது"

என்பது தோன்றத் 'தவத்தோர்' எனவும், 'மண்சுமக்கு மன்னவன்' எனவும் கூறினார். வருதற்கு மறுத்திட வென்க. தம்மவர் - தமர். தொழுதனர், முற்றெச்சம். (உங)

(பா - ம்.) *தம்மனோர்.

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

மன்னன்மு னமைச்சர் சித்தர் மறுத்துரை மாற்றங் கூற
முன்னவ னருள்பெற் றிம்மை மறுமையு முனிந்த யோகர்
இந்நில வேந்தர் மட்டோ விந்திர னயன்மா லேனோர்
தன்னையு மதிப்ப ரோவென் றிருந்தனன் றரும வேந்தன்.

(இ - ள்.) அமைச்சர் - அமைச்சர்கள், மன்னன்முன் - பாண்டியன்முன் சென்று, சித்தர் மறுத்து உரைமாற்றம் கூற - சித்த மூர்த்திகள் மறுத்துக் கூறிய மொழியினைச் சொல்ல, தரும வேந்தன் - (கேட்ட) அறநெறி பிழையாத பாண்டி வேந்தன், முன்னவன் அருள் பெற்று இம்மை மறுமையும் முனிந்த யோகர் - முதல்வனாகிய சிவபெருமான் திருவருளைப் பெற்று இம்மை மறுமைப் பயன்களை வெறுத்த யோகிகள், இந்நில வேந்தர் மட்டோ - இந்நிலவுலக மன்னரை மாத்திரமோ, இந்திரன் அயன் மால் ஏனோர் தன்னையும் மதிப்பரோ - இந்திரனையும் அயனையும் திருமாலையும் மற்றைத் தேவர்களையும் மதிப்பரோ (மதியார்), என்று இருந்தனன் - என்றெண்ணி இருந்தனன்.

உரைமாற்றம், வினைத்தொகை. 'இகபரத்தாசை கழிந்த யோகியர்' என்றார் முன்னரும். தன்னையும், ஈண்டும் சாரியை பன்மையி லொருமை யாயிற்று.

"பாராண்டு பகடேறி வருவார் சொல்லும்
பணிகேட்கக் கடவோமோ பற்றற் றோமே"

எனவும்,

"சென்றுநாம் சிறுதெய்வஞ் சேர்வோ மல்லோம்"

எனவும் திருநாவுக்கரசுகளும்,

"போகம் வேண்டி வேண்டிலேன் புரந்தராதி யின்பமும்"

எனவும்,

"கொள்ளேன் புரந்தரன் மாலயன் வாழ்வு"

எனவும் திருவாதவூரடிகளும் கூறிய அருண்மொழிகள் ஈண்டுச் சிந்திக்கற்பாலன.

ஆகச் செய்யுள்-௩௩௫.



கூ.ப. 27

கல்லானைக்குக் கரும்பருத்தியது.

இருபத்தொன்றாவது

# கல்லானைக்குக் கரும்பருத்திய படலம்

[கலிநிலைத்துறை]

செல்லார் பொழில்சூழ் மதுராபுரிச் சித்த ரெல்லாம்
வல்லா ரவரா டலையாருரை செய்ய வல்லார்
எல்லாரும் வியப்புற வித்தனிச் சித்த சாமி
கல்லானை தின்னக் கரும்பீந்த கதையுஞ் சொல்வாம்.

(இ - ள்.) செல் ஆர் பொழில் சூழ் மதுராபுரிச் சித்தர் - மேகங்கள் தவழப்பெற்ற சோலைகள் சூழ்ந்த மதுரைப் பதியில் எழுந்தருளிய சித்தமூர்த்திகள், எல்லாம் வல்லார் - எல்லாம் செய்ய வல்லவர் (ஆகலின்), அவர் ஆடலை உரை செய்யவல்லார் யார் - அவர் செய்தருளும் திருவிளையாடலை உரைக்க வல்லவர் யாவர்; எல்லாரும் வியப்பு உற இத்தனிச் சித்தசாமி - (இனி) அனைவரும் அதிசயமடைய இவ்வொப்பற்ற சித்தமூர்த்திகள், கல்லானை தின்னக் கரும்பு ஈந்த கதையும் சொல்வாம் - கல்லானை தின்னுமாறு கரும்பினைக் கொடுத்த திருவிளையாடலையும் கூறுவாம்.

வல்லார் ஆகலின் என விரித்துரைக்க; எல்லாம் வல்லாராகிய சித்தர் எனக் கூட்டலுமாம். சிறிது கூறினேமென்பார் 'யாருரை செய்யவல்லார்' என்றார். (க)

பின்னேய மச்சம் பெருகப்பெரி யோரை யெண்ணா
தென்னே யெளியா ரெனயானிகழ்ந் திங்ங னீண்டச்
சொன்னே னவர்க்கென் குறையென்னிற் றுருவி நானே
தன்னே ரிலாதார் தமைக்காணத் தருவ னென்னா.*

(இ - ள்.) பின் நேயம் அச்சம் பெருக - பின்பு அன்பும் அச்சமும் பெருக, யான் பெரியோரை எண்ணாது எளியாரென இகழ்ந்து இங்ஙன் ஈண்டச் சொன்னேன் - யான் பெரியோரை மதியாது எளியாரைப் போல(க்கருதி) அவமதித்து இங்கு வரும்படி சொல்வித்தேன், என்னே - (என் அறியாமை இருந்தவாறு) என்னே, அவர்க்கு என்னில் குறை என் - அவர்க்கு என்னிடம் பெறவேண்டிய குறைபாடு யாதுளது, தன் நேர் இலாதார் - தனக்கொப்பில்லாத அச்சித்த சாமிகளை, நானே துருவிக் காணத் தருவன் என்னா - யானே தேடிக் காணத் தக்கவனாவேன் என்று கருதி.

---

* (பா - ம்.) * தருவ தென்னா.

இகழ்தலாவது அவரை எளியரெனக் கருதினமையே. இங்ஙனம் என்பது ஈறு தொக்கு நின்றது; இவ்விடம் என்னும் பொருட்டாயது. சொன்னேன், சொல் வித்தேன்; பிறவினைப் பொருட்டு. என்னில் - என்கண். பெறத்தக்க குறை என விரிக்க. நானே - குறையெலாமுடைய யானே. (உ)

ஆனந்த சித்தர் தமைக்காண்பலென் றன்பு கூர்ந்த
மீனந் தரித்த கொடிவேந்தன் குறிப்பு நோக்கி
மோனந் தரித்த சிவயோகரு முந்தித் தம்பொன்
மானந் தனக்கு வடமேற்றிசை வந்தி ருந்தார்.

(இ - ள்.) ஆனந்த சித்தர் தமைக் காண்பல் என்று அன்பு கூர்ந்த - ஆனந்த வடிவாகியசித்த மூர்த்திகளைத் தரிசிப்பேனென்று அன்பு மிகுந்த, மீனம் தரித்த கொடிவேந்தன் குறிப்பு நோக்கி - கயல் எழுதிய கொடியினை யுயர்த்திய அபிடேக பாண்டியனது உள்ளக் குறிப்பினை உணர்ந்து, மோனம் தரித்த சிவயோகரும் - மௌன நிலையினைப் பூண்ட சிவயோகியாகிய சித்தரும், முந்தி - முன்னுகவே, தம் பொன் மானம் தனக்கு வடமேல் திசை வந்திருந்தார் - தமது பொன் விமானத் திற்கு வடமேற்குத் திசையின்கண் வந்து இருந்தருளினர்.

வேந்தன் அன்பு கூர்ந்தான், அவன் குறிப்பு நோக்கி வந்திருந்தார்; என வுரைத்துக்கொள்க. மீனத்தைத் தாங்கிய கொடி. மோன முத்திரை தரித்த என்றுமாம். மானம், முதற்குறை. (ங)

அருகாத செல்வத் தவனன் றுதைத் திங்க டோற்றம்
வருகால மாக மதுரேசனை வந்து வந்தித்
துருகா தரத்தாற்* கழிந்துள்வல மாக மீள†
வருவா னவன்முன் வருகாஞ்சுகி வன்கண் மாக்கள்.

(இ - ள்.) அன்று தைத் திங்கள் தோற்றம் வரு காலமாக - அந்நாள் தைமாதம் தோன்றுங் காலமாக, அருகாத செல்வத் தவன் - குறையாத செல்வத் தினையுடைய பாண்டியன், வந்து மதுரேசனை வந்தித்து - வந்து மதுரை நாயகனை வணங்கி, உருகு ஆதரத்தால் கழிந்து - உருகும் அன்பினுல் மிகுந்து, மீள உள் வல மாக வருவான் - மீண்டு உள்ளே வலமாக வரா நிற்க, அவன் முன் வரு - அவனுக்கு முன்னர் வருகின்ற, வன்கண் காஞ்சுகி மாக்கள் - அஞ்சாமையையுடைய மெய் காப் பாளர்.

தோற்றம் வரு காலமாக-தோன்றுங் காலமாகா நிற்க; அந் நன்னளிலே என விரித்துக்கொள்க. கழிந்து - விஞ்சி; கழி என்னும் உரிச்சொல்லடியாகப் பிறந் தது. ஆதரம் கழிந்து என்பதனை ஆதரத்தாற் கழிந்து என்றார். உள் கழிந்து எனக் கூட்டி, உள்ளிடத்தினீங்கி என்றுரைத்தலுமாம். வருவான் என்பதனை வாரா நிற்க

(பா - ம்.) * உருகாதரத்தான். †வலமாக முன்பு.

எனச் செயவெனெச்சமாக்குக. காஞ்சுகி - சட்டையிட்ட மெய் காவலர்; கஞ்சுகம் சட்டை. காஞ்சுகியராகிய மாக்கள் என்க. (ச)

சீறிட்ட வேங்கை யதட்சேக்கையர் சீறி யைந்தும்
பாறிட்ட வேடர் யோகபட்டத்தர் கட்டங் கத்தில்
ஏறிட்ட கைய ரிறுமாந்திருப் பாரை நோக்கி
மாறிட்டு நீக்கி* யெழப்போகென வந்து சொன்னார்.

(இ - ள்.) சீறிட்ட வேங்கை அதள் சேக்கையர் - சீறிய வேங்கையின் தோலாகிய தவிசினையுடையராய், ஐந்தும் சீறிப், பாறிட்ட வேடர் - ஐம்புலன்களை யும் சினந்து ஓட்டிய திருவேடத்தினை யுடையராய், யோக பட்டத்தர் - யோகபட்டிகை யுடையராய், கட்டங்கத்தில் ஏறிட்ட கையர் - மழுப்படையில் ஏற்றிய திருக் கரத்தினை யுடையராய், இறுமாந்து இருப்பாரை நோக்கி - இறுமாந்திருப்பவரைப் பார்த்து, வந்து-நெருங்கி வந்து, மாறு இட்டு நீக்கி எழப்போக எனச் சொன்னார் - பிரம்பினை நீட்டி அவ்விடத்தை விட்டு எழுந்துபோகக் கடவீர் என்று சொன்னார்.

சீறிட்ட - சீறிய; இடு, அசை. பாறிட்ட - பாற்றிய. ஏறிட்ட - ஏற்றிய. சேக்கையர் முதலிய குறிப்பு முற்றுக்கள் வினையெச்சமாயின. ஐந்து, தொகைக் குறிப்பு. பாற்றினமை தோற்றுவிக்கும் வேடம். கட்டங்கத்திற்கு முன் உரைத்தமை காண்க. மாறிட்டு நீக்கல் - பிரம்புகொண்டு நீங்குமாறு குறித்துக் காட்டல். எழப்போதல் - அகலப்போதல். போகென, தொகுத்தல். (ரு)

பின்னு வருதென் னர்பிரான்பெரி யோரை நோக்கி
என்னாடு நம்மூ† ருமக்கென்வரும் யாது வேண்டும்
நுந்நாம மேது நுவன்மின்னென வைய ரெந்த
நன்னாடு மெந்த நகருள்ளுந் திரிவ மப்பா.

(இ - ள்.) பின்னு வரு தென்னர் பிரான் பெரியோரை நோக்கி - பின்னாக வரும் பாண்டியர் தலைவன் அப்பெரியோரைப் பார்த்து, நும் நாடு ஊர் என் - நுமது நாடும் ஊரும் எவை, உமக்கு என் வரும் - உமக்கு என்ன கைவரும், யாது வேண்டும் - உமக்கு வேண்டியது யாது, நும் நாமம் ஏது - உமது பெயர் யாது, நுவல்மின் என - சொல்வீராக என்று வினவ, ஐயர் - சித்த மூர்த்திகள், அப்பா எந்த நல்நாடும் எந்த நகருள்ளும் திரிவம் - அப்பனே நாம் எந்த நல்ல நாட்டிலும் எந்த நகரிலும் சஞ்சரிப்பேம்.

நும் நாடு ஊர் என் எனக் கூட்டுக. என் - எவை. எந்நாடு நம்மூர் என்பது பாடமாயின் நுமது ஊர் எந்த நாட்டிலுள்ளது என்று பொருள்படும். நாட்டுள்ளும் என விரிக்க. அப்பா என்பது பெரியோர் கூறும் மரபுச் சொல். இது முதல் ஐந்து செய்யுள் ஒரு தொடர். (சு)

(பா - ம்.) * நீட்டி. †எந்நாடு நும்மூர். எந்நாடு நுந்நாடு.

ஆனாலு மிப்போ தணிகான்மிர நாட்டிற் காசி
தானா மிருக்குந் தலமாகு மநாத ராகி
ஆனாத பிச்சைப் பெருவாழ் வுடையார் நமரா
நாணாளும் விஞ்சை நடாஅய்த்திரி* சித்த ரேம்யாம்.

(இ - ள்.) ஆனாலும் இப்போது - ஆயினும் இப்பொழுது, அணி கான்மிர நாட்டில் காசிதான்-அழகிய காசுமீர நாட்டின்கண் உள்ள காசிப்பதியே, நாம் இருக்கும் தலம் ஆகும் - நாம் தங்கும் பதியாகும்; அநாதராகி ஆனாத பிச்சைப் பெருவாழ்வு உடையார் நமராம் - ஒரு பற்றுமில்லாதவராய் நீங்காத பிச்சை எடுத்தலாகிய பெருவாழ்வினை யுடைய அடியார்களே நம் உறவின ராவர்; யாம் நாள் நாளும் விஞ்சை நடாஅய்த் திரி சித்தரேம் - யாம் எந்நாளும் வித்தை நடாத்தித் திரிகின்ற சித்தராவேம்.

ஆனாலும் - எங்குந் திரிவமாயினும். கான்மிரம் - காசுமீரம். அநாதர் -ஆதரவில்லாதவர்; அநாதரர் என்பது தொக்கு நின்றது. எய்துதற்கரிய வாழ்வென்பார் 'பெருவாழ்வு' என்றார். நாள் நாளும் - நாடோறும். நடாஅய் - நடாவி; நடாத்தி. 'அநாதனாகி.........வாழ்வுடையான்' என்பது பாடமாயின், ஆதியில்லாத சிவபெருமான் எமக்கு உறவாம் என்றுரைக்க. (எ)

ஆனந்த கானந் தொடுத்திங்குள வான சைவத்
தானம் பலவுந் தொழுதற்பர மாகி வந்தேம்
ஞானந் தருமிந் நகரிம்மையிற் சீவன் முத்தி
மானந் தமான பரமுத்தி மறுமை நல்கும்.

(இ - ள்.) ஆனந்த கானம் தொடுத்து இங்கு உளவான சைவத் தானம் பலவும் - தில்லைவனம் முதல் இங்கு உள்ளனவான சிவத்தலங்கள் பலவும், தொழுதற் பரம் ஆகி வந்தேம் - வணங்குதற் பொருட்டு வந்தேம்; ஞானம் தரும் இந்நகர் - ஞானத்தைப் பாலிக்கும் இந்த நகரமானது, இம்மையில் சீவன் முத்தி - இம்மையிலே சீவன் முத்தியையும், மறுமை மான் அந்தமான பரமுத்தி - மறுமையிலே மாயைக்கு அப்பாற்பட்ட பரமுத்தியையும், நல்கும் - அளிக்கும்.

தில் என்னும் இடைச்சொல் விழைவுப் பொருளில் வருதல் குறித்துத் தில்லை வனம் என்பதை ஆனந்த கானம் என மொழிபெயர்த்தாராதல் வேண்டும்; தில்லை சிவபெருமான் ஆனந்தத் தாண்டவம் புரியும் இடமாதலுங் கொள்க; ஆனந்த கானம் என்பதற்குக் காசி என்று பொருள் கூறுவாரு முளர். பரம் - பொருட்டு. மான் - பிரகிருதிமாயை; ஈண்டு விந்து மோகினிகளையும் குறிப்பதாகக்கொள்க. (அ)

ஈண்டுள்ள வர்க்கெம் விளையாடலைக் காட்டி யிச்சை
வேண்டும் பலசித் தியுநல்குவம் வேத மாதி
மாண்டங்கு மெண்ணெண் கலைஞானமும் வல்ல மல்லாற்
சேண்டங்கு மெல்லாப் பொருளும்வல சித்த ரேம்யாம்.

---

(பா - ம்.) * நடாத்திடுஞ்.

(இ - ள்.) ஈண்டு உள்ளவர்க்கு எம் விளையாடலைக் காட்டி - இங்குள்ளவர்களுக்கு எமது விளையாடலைக் காண்பித்து, வேண்டும் பல சித்தியும் இச்சை நல்குவம் - (அவர்கள்) விரும்பும் பல பேறுகளையும் விருப்பத்தின்படியே அருளுவோம்; வேதம் ஆதி மாண் தங்கும் எண்ணெண் கலை ஞானமும் வல்லம் - மறை முதலான மாட்சி தங்கிய அறுபத்துநான்கு கலை ஞானங்களிலும் வன்மையுடையோம்; அல்லால் - இவையன்றியும், யாம் சேண் தங்கும் எல்லாப் பொருளும் வல சித்தரேம் - யாம் சேய்மையிலுள்ள பொருளனைத்தையும் (அண்மையில் வரச் செய்தலில்) வல்ல சித்தராவேம்.

பலசித்தி - பலமாகிய பேறு; பலவாகிய சித்தி என்றுமாம். எல்லாப் பொருளும் வல என்பதற்கு எல்லாப் பொருள்களையும் நிருமிக்க வல்ல என்றுரைத்தலுமாம். (கூ)

உன்னால் நமக்குப் பெறல்வேண்டுவ தொன்று மில்லை
தென்னா வெனவுண் ணகைசெய்தனர் சித்த யோகர்
மன்னா மிவர்தம் மிறுமாப்புஞ் செருக்கும் வீறும்
என்னா லளவிட் டறிவேனென வெண்ணித் தேர்வான்.

(இ - ள்.) தென்னா - பாண்டியனே, உன்னால் நமக்குப் பெறல் வேண்டுவது ஒன்றும் இல்லை - உன்னாலே நாம் அடைதற் பாலதாகிய பொருள் ஒன்றுமில்லை, என - என்று கூறி, உள் நகை செய்தனர் சித்தயோகர் - புன்னகை புரிந்து நின்றனர் சித்த மூர்த்திகள்; மன் ஆம் இவர் தம் இறுமாப்பும் செருக்கும் வீறும் - நிலை பெற்ற இவருடைய இறுமாப்பும் செருக்கும் பெருமிதமுமாகிய இவற்றை, என்னால் அளவிட்டு அறிவேன் என எண்ணித் தேர்வான் - யாதினாலளந்து அறிவேன் என்று அரசன் எண்ணி ஆராய்வானாயினான்.

நமக்கு, நாம் என எழுவாய்ப் பொருட்டு. 'யாது வேண்டும்' என அரசன் வினவியதற்கு விடையாக 'வேண்டுவ தொன்றுமில்லை' என்றார். நம்மால் நீ பெறுவதன்றி உன்னால் நாம் பெறவேண்டுவதில்லை யென்றார். மன் ஆம் - மன்னுதலுடைய. என்னால் - எதனால். (ம)

தேரும் பொழுதோ ருழவன்னொரு செல்வக் கன்னல்
ஆருங் கமுகென்ன வயிர்ப்புறக் கொண்டு தாழப்
பாருந் திசையும் புகழ்பங்கயச் செங்கை தாங்கி
நீரும் பிறையுங் கரந்தார்தமை நேர்ந்து சொல்வான்.

(இ - ள்.) தேரும் பொழுது - அங்ஙனம் ஆராயும் பொழுது, ஓர் உழவன் - ஒரு உழவனானவன், ஒரு செல்வக் கன்னல் - செழித்தோங்கிய ஒரு கரும்பினை, ஆரும் கமுகு என்ன அயிர்ப்புறக் கொண்டு தாழ - யாரும் கமுகோ என்று ஐயுறக் கையிற் கொண்டு வணங்க, பாரும் திசையும் புகழ் பங்கயச் செங்கை தாங்கி-(அக் கரும்பினைப்) புவியும் திசைகளும் புகழும்படியான தாமரை மலர் போன்ற சிவந்த

கையிற் றங்கி, நீரும் பிறையும் கரந்தார் தமை நேர்ந்து சொல்வான் - கங்கையையும் மதியையும் ஒளித்து வந்த சித்தசாமிகளைப் பார்த்துக் கூறுவான்.

செல்வக் கன்னல் - செழுமையுள்ள கரும்பு. ஆரும், யாரும் என்பதன் மரூஉ. கையுறையாகக் கொண்டு வணங்க. கொடையாற் புகழும் கை யென்க. (கக)

வல்லாரில் வல்லே மெனவும்மை மதித்த நீரிக்
கல்லானைக் கிந்தக் கரும்பை யருத்தி னெல்லாம்
வல்லாரு நீரே மதுரைப்பெரு மானு நீரே
அல்லா லெவர்நும் மனம்வேட்ட தளிப்ப னென்றான்.

(இ - ள்.) வல்லாரில் வல்லேம் என உம்மை மதித்த நீர் - வல்லவர்களுள் வல்லே மென்று உம்மை மதித்துக் கொண்ட நீர், இக்கல்லானைக்கு இந்தக்கரும்பை அருத்தின்-இந்தக் கல்லானைக்கு இக் கரும்பினை உண்பித்தால், எல்லாம் வல்லாரும் நீரே - எல்லாம் வல்ல சித்தரும் நீரே, மதுரைப் பெருமானும் நீரே அல்லால் எவர் - மதுரை நாயகனும் நீரேயன்றி வேறு யாவர், நும்மனம் வேட்டது அளிப்பன் என்றான் - பின்பு நுமது மனம் விரும்பியதைக் கொடுப்பேன் என்று கூறினன்.

வல்லாரெல்லாருள்ளும் யாம்வல்லேமென மதித்த வென்க; ஏழனுருபு கூட்டிப் பிரித்தற்பொருளில் வந்தது. (கஉ)

என்னு முகிலைத் தளையிட்டவன் கூறக் கேட்டுத்
தென்னு வருதி யெனப்புன்னகை செய்து சித்தர்
நின்னால் வருவ தெமக்கேது நினக்கு நாமே
உன்னாசை தீரத் தருகின்ற தலாம லுண்டோ.

(இ - ள்.) என்னு முகிலைத் தளை இட்டவன் கூற - என்று மேகத்தைச் சிறையிட்ட பாண்டியன் சொல்ல, சித்தர் கேட்டு-அம்மொழியைச் சித்தமூர்த்திகள்கேட்டு, தென்னவருதி எனப் புன்னகை செய்து - பாண்டியனே வருவாய் எனப் புன்னகை புரிந்து, எமக்கு நின்னால் வருவது ஏது -எமக்கு உன்னால் வரும் பயன் யாது உளது, உன் ஆசை தீர - உனது அவா அடங்க, நாமே நினக்குத் தருகின்றது அலாமல் உண்டோ - நாமே உனக்குக் கொடுக்கின்ற தல்லாமல் வேறு உண்டோ.

'நும் மனம் வேட்டது அளிப்பன்' என மீட்டுங் கூறியதற்கு விடையாக இங்ஙனம் கூறினர். தருகின்றது, தொழிற்பெயர். நின்பாற் பெறுவதொன் றுண்டோ என்க. (கங)

செல்லா வுலகத் தினுஞ்சென்றொரு வின்சை கற்றோர்
பல்லாரு நன்கு மதிக்கப்பய னெய்து வார்கள்
எல்லா மறிந்த வெமக்கொன்றினு மாசை யில்லை
கல்லானை கன்னல் கறிக்கின்றது காண்டி யென்றார்.

(இ - ள்.) ஒரு விஞ்சை கற்றோர் - யாதானும் ஒரு வித்தையினைக் கற்றோர், செல்லா உலகத்தினும் சென்று - போதற்கரிய உலகத்தினும் போய், பல்லாரும் நன்கு மதிக்கப் பயன் எய்துவார்கள் - பலரும் நன்கு மதிக்க (அவ்விஞ்சையைக் காட்டிப்) பயனடைவார்கள்; எல்லாம் அறிந்த எமக்கு ஒன்றிலும் ஆசையில்லை - எல்லா விஞ்சைகளையும் உணர்ந்த எமக்கு ஒன்றிலும் விருப்பம் இல்லை; கல்லானை கன்னல் கறிக்கின்றது காண்டி என்றார் - கல்லானையானது ஈதோ கரும்பினைக் கடிக்கின்றதைக் காண்பாய் என்றார்.

நன்கு மதிக்கும்படி விஞ்சையைக் காட்டி என விரிக்க. காண்டி, எவ்வொருமை; ட் எழுத்துப்பேறு. (௧௯)

கடைக்கண் சிறிதே குறித்தார்முன் கடாக்கல் யானை
மடைக்கண் டிறந்து மதமூன்றும் வழிய விண்வாய்
அடைக்கும் படிவாய் திறந்தார்த்துப் புழைக்கை நீட்டித்
தொடைக்குன் றனான்கைச் சுவைத்தண்டைப் பறித்த தன்றே.

(இ - ள்.) சிறிது கடைக்கண் குறித்தார் முன் - சிறிது கடைக்கண் வைத்தருளிய சித்தருக் கெதிரே, சடாக்கல் யானை - மதத்தினையுடைய கல்யானையானது, மடைக்கண் திறந்து மத மூன்றும் வழிய - மடைபோலக் கண் திறந்து மூன்று மதங்களும் ஒழுக, விண்வாய் அடைக்கும்படி வாய் திறந்து ஆர்த்து - மேகத்தின் வாய் அடைக்குமாறு வாயைத் திறந்து பிளிறிட்டு, புழைக்கை நீட்டி - தொளையினையுடைய துதிக்கையை நீட்டி, தொடைக்குன்று அனான் கைச்சுவைத் தண்டைப் பறித்தது - மாலையை யணிந்த மலையை ஒத்த பாண்டியன் கையிலிருந்த கரும்பைப் பிடுங்கியது.

என்று கூறிக் கடைக்கண் குறித்தார் முன் என்க. கடாக்கல்யானை - கல்லானையாகிய மதயானை. இடியோசையும் கீழ்ப்பட ஆர்த்ததென்றார். தொடைக்குன்று அனான், இல்பொருளுவமை. சுவைத்தண்டு-கரும்பு. அன்று, ஏ அசைகள். ()

பறித்துக் கடைவாய் வழிசாறளி பாய்ந்து நக்கக்
கறித்துக் குதட்டிப் பருகிக்கர மூச லாட
நெறித்துத் தருக்கி நிழல்சீறி நிமிர்ந்து நிற்ப
மறித்துக் கடைக்கண் குறித்தார்பினு மாயம் வல்லார்.

(இ - ள்.) பறித்து - அங்ஙனம் பிடுங்கி, கடைவாய் வழிசாறு அளி பாய்ந்து நக்க - கடைவாயில் வழிகின்ற சாற்றினை வண்டுகள் மொய்த்துப் பருகும்படி, கறித்துக் குதட்டிப் பருகி - கடித்து மென்று தின்று, கரம் ஊசல் ஆட - துதிக்கை ஊஞ்சல்போல ஆடாநிற்க, நெறித்துத் தருக்கி நிழல் சீறி நிமிர்ந்துநிற்ப - நெறித்துத் தருக்குற்று நிழலைச்சீறி நிமிர்ந்துநிற்க, பினும் மாயம் வல்லார் - பின்னும் விஞ்சையில்வல்ல சித்தர், மறித்துக் கடைக்கண் குறித்தார்-மீட்டும் கடைக்கண்ணாற் குறித்தருளினார்.

பருகி - தின்றென்னும் பொருட்டு. நெறித்து - உடலை நெளித்து. நீழலைச் சீறுதல் மதவேழத்தின் இயல்பு. மாயம் - விசித்திரச் செய்கை. (௧௬)

மட்டுற்ற தாரான் கழுத்திற்கண்ட மாலை தன்னை
எட்டிப் பறித்த திகல்காஞ்சுகி மாக்கள் சீறிக்
கிட்டிக் களிற்றைப் புடைப்பான்கிளர்கோல்கொண் டோச்சச்
சிட்டத் தவர்கண் சிவந்தானையைச் சீறி நோக்க.

(இ - ள்.) மட்டு உற்ற தாரான் கழுத்தில் கண்ட மாலை தன்னை எட்டிப் பறித்தது - மணமிக்க மாலையையணிந்த பாண்டியன் கழுத்திலுள்ள (முத்தாலாகிய) கண்ட மாலையை எட்டிப்பிடுங்கியது; இகல் காஞ்சுகி மாக்கள் சீறி - (உடனே) மாறுபட்ட மெய்கர்வலர் சீற்றங்கொண்டு, களிற்றைப் புடைப்பான் கிட்டிகோல் கொண்டு ஓச்ச - யானையை அடித்தற்கு நெருங்கிக் கோலினைக் கொண்டு வீச, சிட்டத்தவர் கண் சிவந்து ஆனையைச் சீறி நோக்க - சித்தமூர்த்திகள் கண் சிவந்து யானையைச் சினந்து பார்க்க.

கண்ட மாலை - கழுத்தணி; பெயர். இகல் - இகலிய. சிட்டராகிய தவர் என்க; சிட்டர் - மேலோர். ஓச்சினர் - ஓச்சிய வளவில் என விரித்துரைக்க. (௧௭)

கண்டா வளியைக்* களிறுண்டது கண்கள் சேப்புக்†
கொண்டா னரசன் சிவயோகரிற் கோப மூளத்
தண்டா வரசன் றமருட்டறு கண்ணர் சீறி
வண்டா ரிதழி மறைத்தாரை யடிக்க வந்தார்.

(இ - ள்.) களிறு கண்டாவளியை உண்டது - யானையானது கண்ட மாலையை உண்டு விட்டது; அரசன் கண்கள் சேப்புக் கொண்டான் - மன்னன் கண்கள் சிவந்து, சிவயோகரில் கோபம் மூள - சிவயோக சித்தர் மீது கோபம் மிக, தண்டா அரசன் தமருள் - நீங்காத அரசன் மெய் காப்பாளருள், தறுகண்ணர் சீறி - அஞ்சாமையையுடைய சிலர் சினந்து, வண் இதழித் தார் மறைத்தாரை அடிக்க வந்தார் - செழுமையாகிய கொன்றை மாலையை மறைத்துவந்த சித்தரை அடிக்கும் பொருட்டு நெருங்கி வந்தனர்.

கண்டாவளி, வடமொழி நெடிற்சந்தி. ஆவலி - மாலை; ஆவளி யெனத் திரியும். சேப்பு - சிவப்பு. கண்கள் சேப்புக் கொண்டான், சினைவினை முதன்மேல் நின்றது. கொண்டான், முற்றெச்சம். கோபமூளக் கொண்டான் என்றலுமாம். யோகரில் - யோகரிடத்து. தண்டாத தமர் என்க. வண் இதழித்தார் என மாற்றுக; வண்டு மொய்த்த இதழி யென்றல் சிறப்பின்று. (௧௮)

---

(பா - ம்.) *கண்டாவலி. †கண்கள் சேப்பக்.

அப்போ திளமூர லரும்பியச் சித்த சாமி
கைப்போ தமைத்துக் கடிந்தோர்தமை நின்மி னென்ன
மைப்போ தகமன் னவர்வைத்தடி பேர்க்க லாற்ரு
தொப்போ தரிய நிலையோவியம் போல நின்ருர்.

(இ - ள்.) அப்போது அச்சித்தசாமி - அங்ஙனம் வரும்பொழுது அந்தச் சித்த மூர்த்திகள், இளமூரல் அரும்பி- புன்னகை புரிந்து, கடிந்தோர் தமைக் கைப் போது அமைத்து நின்மின் என்ன - வெகுண்டு வந்தோரைக் கைம்மலராலமைத்து நில்லுங்கள் என்று சொல்ல, மைப்போதகம் அன்னவர் - கரிய யானையை ஒத்த அவ்வீரர்கள், வைத்த அடிபேர்க்கலாற்ருது-வைத்த அடியைப் பெயர்க்க முடியாது, ஒப்பு ஓது அரிய நிலை ஓவியம்போல நின்ருர் - ஒப்புச் சொல்லுதற்கரிய நிலையினை யுடைய ஓவியம்போல நின்ருர்கள்.

அமைத்து நின்மினென்ன வென்க. தருக்குடைமையாற் போதக மன்னு ரென்ருர். வைத்த என்னும் பெயரெச்சத்து அகரம் தொக்கது. அரிய ஓவியம் நிலை யோவியம் எனத் தனித்தனி கூட்டுக. நிலை அசையாது நிற்றல். (கக)

மத்தக் களிற்ருன் வெகுளித்தழன் மாறி யன்பு
பொத்தப் புதைந்த மனத்தற்புதம் பொங்கிச் சோரச்
சித்தப் பெருமா னடிமாமுடி தீண்டப் பாச
பெத்தத் தமியேன் பிழையைப்பொறு மென்று வீழ்ந்தான்.

(இ - ள்.) மத்தக்களிற்ருன் - மத மயக்கத்தையுடைய யானையையுடைய பாண்டியன், வெகுளித் தழல்மாறி - சினத்தீ அவியப்பெற்று, அன்பு பொத்தப் புதைந்த மனத்து அற்புதம் பொங்கிச் சோர - அன்பு மூடுதலாற் புதைபட்ட மனத் தின்கண் வியப்பானது பொங்கி வழிய, சித்தப் பெருமான் அடி மா முடிதீண்ட - சித்தசாமியின் திருவடிகள் தனது பெருமை பொருந்திய முடியினைத் தீண்ட, பாச பெத்தத் தமியேன் பிழையைப் பொறும் என்று வீழ்ந்தான் - பாசத்தாற் கட்டுண்ட ஏழையேன் பிழையைப் பொறுத்தருளுமென்று வீழ்ந்து வணங்கினுன்.

மத்தம் - உன்மத்தம்; மத்தகமுமாம். சோர-சோராநிற்க. தீண்டுமாறு வீழ்ந்தா னென்க. பெத்தம் - கட்டுண்ட நிலைமை. (உ0)

அன்புக் கிரங்குங் கருணைக்கட லான வையர்
இன்புற்று வேண்டும் வரங்கேளெனத் தாழ்ந்து வேந்தன்
நன்புத் திரப்பே றருள்வாயென நல்கிச் செங்கை
வன்புற்ற வேழ மிசைவைத்தரு ளாட்டம் வைத்தார்.

(இ - ள்.) அன்புக்கு இரங்கும் கருணைக் கடலான ஐயர்-அன்புக்கு இரங்கும் அருட்கடலான பெருமான், இன்புற்று - மகிழ்ந்து, வேண்டும் வரம் கேள் என - விரும்பிய வரத்தினைக் கேட்பாயாக என்று கூற, வேந்தன் தாழ்ந்து - அபிடேக பாண்டியன் வணங்கி, நன் புத்திரப்பேறு அருள்வாய் என - நன்மைவாய்ந்த புதல்

வர்ப் பேற்றினை அளிப்பாயாக என்றுவேண்ட, நல்கி - (அங்ஙனமே) அருள்செய்து, வன்பு உற்ற வேழமிசை செங்கைவைத்து அருள் நாட்டம் வைத்தான்-வலிமைமிக்க யானையின் மேலே சிவந்த திருக்கையை வைத்து அருணோக்கம் வைத்தருளினான்.

இரங்குதல் - எளிவருதல். (உக)

[கலிவிருத்தம்]

தழைக்கு நீள்கதிர்த் தண்முத்த மாலையைப்
புழைக்கை நீட்டிக் கொடுத்தது போதகம்
மழைக்கை நீட்டினன் வாங்கின னீதியிற்
பிழைக்க லாத பெருந்தகை வேந்தனே.

(இ - ள்.) போதகம் - யானையானது, புழைக்கை நீட்டி - தனது தொளையுடைய துதிக்கையை நீட்டி, தழைக்கு நீள் கதிர்தண் முத்தமாலையைக் கொடுத்தது - தழைக்கின்ற மிக்க ஒளியினையுடைய தண்ணிய முத்துமாலையைக் கொடுத்தது; நீதியில் பிழைக்கலாத பெருந்தகை வேந்தன் - நீதியினின்று தவறாத பெருந் தன்மையையுடைய பாண்டி மன்னன், மழைக்கை நீட்டினன் வாங்கினன் - முகில் போலுங் கையினை நீட்டி அதனை வாங்கினான்.

கொடுக்குங் கையால் வாங்கின னென்பார் 'மழைக்கை நீட்டினன் வாங்கினன்' என்றார். நீட்டினன், முற்றெச்சம். நீதி - அரசாளு முறைமை. பிழைக்கலாத, எதிர்மறைப் பெயரெச்சம்; குவ்வும் அல்லும் சாரியை; ஆ எதிர்மறை யிடைநிலை.(உஉ)

முத்த மாலிகை வாங்குமுன் முன்னின்ற
சித்த சாமி திருவுருக் கண்டிலன்
மத்த யானை வடிவமு மேனைய
ஒத்த தாக வுரவோன் வெருவினான்.

(இ - ள்.) முத்த மாலிகை வாங்கு முன் முன்னின்ற சித்தசாமி திருவுருக் கண்டிலன் - அங்ஙனம் முத்து மாலையை வாங்குதற்கு முன் எதிரே நின்றருளிய சித்த மூர்த்திகளின் திருவுருவத்தைக் காணாயினன்; மத்தயானை வடிவமும் - மத மயக்கத்தினையுடைய யானையின் உருவமும், ஏனைய ஒத்ததாக - (அங்கு நின்ற) மற்றைய கல்லானைகளைப் போன்றதாக, உரவோன் - வலியோனாகிய மன்னன், வெருவினான் - அஞ்சினான்.

ஒத்ததாயிற்று; அங்ஙனமாகவே வெருவினான் என விரித்துரைக்க. திருவுருவைக் காணாமலும் ஒத்ததாயினமை கண்டும் வெருவினான். வெருவுதலில்லாத மதுகை யுடையான் வெருவினான் என்றார். (உ௩)

இந்த வாட லெமக்குயி ராயவிவ்
வந்த மில்வி யருள்விளை யாட்டென
முந்தை வேத முதல்வனை மீளவும்
வந்து வந்தனை செய்தனன் மன்னனே

(இ - ள்.) மன்னன் - (அங்ஙனம் அஞ்சிய) அரசனானவன், இந்த ஆடல் - இத் திருவிளையாடல், எமக்கு உயிராய இவ்வந்தம் இல்லி அருள் விளையாட்டு என - எமக்கு உயிராகிய இந்த அழிவில்லாத சோமசுந்தரக் கடவுளின் அருள்விளையாடலே என்று, முந்தைவேத முதல்வனை - முன்னவனாகிய வேதநாயகனை, மீளவும் வந்து வந்தனை செய்தனன் - மீண்டும் வந்து வணங்கினன்.

அந்தம் இல்லி - ஈறில்லாதவன்; இ வினைமுதற்பொருள் விகுதி. முந்தை வேதத்திற்கு அடையுமாம். முன்பு சோமசுந்தரக் கடவுளை வணங்கித் திருக்கோயிலை வலம்வருகையிற் சிவசித்தரைக் கண்டானாகலின் 'மீளவும் வந்துவந்தனை செய்தனன்' என்றார். (உ௪)

முழுது ணர்ந்த முதல்வநின் னாடலை
இழுதை யேனறி யாதளங் தேனென
அழுதி றைஞ்சி யபராத மீந்துகை
தொழுது நின்று துதிக்கத் தொடங்கினான்.

(இ - ள்.) முழுது உணர்ந்த முதல்வ - முற்று முணர்ந்த முதல்வனே, நின் ஆடலை - உன் திருவிளையாடலை, இழுதையேன் அறியாது அளங்தேன் என - அறிவிலியாகிய யான் அறியாமையால் அளக்கலுற்றேன் என்று, அழுது இறைஞ்சி அபராதம் ஈந்து - அழுது வணங்கித் தண்டம் இறுத்து, கைதொழுது நின்று துதிக்கத் தொடங்கினான் - கைகூப்பி நின்று துதிக்கத் தொடங்கினான்.

இழுதையேன் என்பதற்குப் பேயனேன் என்றும் பொய்யினேன் என்றும் கூறலுமாம். அறியாது - அறியாமையால். அபராதம் - குற்றம், குற்றத்திற்குக் கழுவாயாக இறுக்கும் தண்டம்; ஈண்டுத் தண்டத்தை யுணர்த்திற்று. (உ௫)

[கொச்சகக்கலிப்பா]

வேதியாய் வேத விளைபொருளாய் வேதத்தின்
நீதியாய் நீதி நெறிகடந்த நீளொளியாய்
ஆதியா யீறாய் நடுவா யவைகழிந்த
சோதியாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே.

(இ - ள்.) வேதியாய் - வேதத்தை அருளியவனாகியும், வேத விளை பொருளாய் - வேதத்தில் விளையும் பயனாகியும், வேதத்தின் நீதியாய் - வேதங்கூறும் நீதியாகியும், நீதிநெறி கடந்த நீள் ஒளியாய் - அந்நீதி நெறிகளைக் கடந்த நீண்ட ஒளியாகியும், ஆதியாய் ஈறாய் நடுவாய் அவை கழிந்த சோதியாய் - முதலாகியும் முடிவாகியும் இடையாகியும் அவற்றுக்கு அப்பாலான ஒளிவடிவாகியும், நின்றாய் - நின்றவனே, நின் இயல்பு - இங்ஙனமாகிய நினது தன்மை, என் சோதனைத்தோ - என் சோதனையில் அகப்படற்பாலதோ.

வேதி - வேதத்தையுடையவன். வேத விளைபொருள் - வேதத்தின் முடிந்த உண்மைப் பொருள். நீதியாய் நின்று அவ்வழி யொழுகும் உயிர்கட்கு ஏற்ற பய

னளித்தும் தான் அதனைக் கடந்து நின்றவன் என்றார். சோதனைத்தோ - சோதனையகத்ததோ. நின்றாய், பெயர். ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு.

"ஆதி யானை யமரர் தொழப்படும்
நீதி யானை நியம நெறிகளை
ஓதி யானை யுணர்தற் கரியதோர்
சோதி யானைக்கண் டீர்தொழற் பாலதே"

என்னும் தமிழ்மறை இங்குச் சிந்திக்கற்பாலது. (உகூ)

நின்னான் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும்
பன்னா ளருச்சித்தும் பாதந் தலைசுமந்தும்
உன்னாமம் வாசித்து முன்னையறி யேனென்று
சொன்னா லடியனேன்* சோதனைத்தோ நின்னியல்பே.

(இ - ள்.) நின்னால் மொழிந்த மறை - நின்னாலே திருவாய் மலர்ந்தருளப்பட்ட வேதமானது, நின் அடிகள் வந்தித்தும் - உன் திருவடிகளை வணங்கியும், பல் நாள் அருச்சித்தும் - பலநாள் அருச்சனை புரிந்தும், பாதம் தலை சுமந்தும் - உன் திருவடிகளைத் தலையிற் சுமந்தும், உன் நாமம் வாசித்தும் - உன் திருப் பெயர்களைப் படித்தும், உன்னை அறியேன் என்று சொன்னால் - உன்னை அறிகிலேன் என்று முறையிடுமாயின், நின் இயல்பு அடியனேன் சோதனைத்தோ - அங்ஙனமாய நினது தன்மை அடியேனது சோதனையில் அகப்படற் பாலதோ.

திருமறைக் காட்டிலே மறை அருச்சித்து வந்தித்தமை கொள்க. பாதம் தலை சுமத்தல் - பாதுகையா யிருந்து சுமத்தல். நாமம் வாசித்தல் - அவன் திருப்பெயர்களையே கூறுதல். உன்னாலும் உன் பெருமை உணர்தற்கரிதென்பார், 'நின்னால் மொழிந்த மறை உன்னை யறியேனென்று சொன்னால்' என்றார். வந்தித்தல் முதலிய ஒன்றுஞ் செய்யாத அடியேன் என்க. மறை, சாதியொருமை. மறையும் என்னும் உம்மை தொக்கது. (உஎ)

[வேறு]

பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதினுஞ் சிறியதுமாய்
அரியதினு மரியதுமா யெளியதினு மெளியதுமாய்க்
கரியதுமாய்க் காண்பானுங் காட்சியுமா யவைகடந்த
துரியமுமாய் நின்றாயென் சோதனைத்தோ நின்னியல்பே.

(இ - ள்.) பெரியதினும் பெரியதுமாய் - பெரிதினும் பெரிதாகியும், சிறியதினும் சிறியதுமாய் - சிறிதினும் சிறிதாகியும், அரியதினும் அரியதுமாய் - அரிதினும் அரிதாகியும், எளியதினும் எளியதுமாய் - எளிதினும் எளிதாகியும், கரியது

(பா - ம்.) * அடியேன்றன், அடியேனென்.

மாய் - சான்றாகியும், காண்பானும் காட்சியுமாய் - காண்பவனும் காட்சியுமாகியும், அவை கடந்த துரியமுமாய் - அவற்றைக் கடந்த துரியமாகியும், நின்றாய் - நின்றவனே, நின் இயல்பு என் சோதனைத்தோ - இங்ஙனமாய நினது தன்மை எனது சோதனையில் அகப்படற் பாலதோ.

பெரிதிற் பெரிதாதல் - அண்டமோரணுவாம் பெருமை கொள்ளுதல்;

"அண்டப் பகுதியி னுண்டைப் பிறக்கம்
அளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி
ஒன்றனுக் கொன்று நின்றெழில் பகரின்
நூற்றொரு கோடியின் மேற்பட விரிந்தன
இன்னுழை கதிரின் றுன்னணுப் புரையச்
சிறியவாகப் பெரியோன்"

என்பது திருவாசகத் திருமறை. இவ்வாசிரியர், கடவுள் வாழ்த்திலே

"அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லாம்
அண்டங்க ளாகப் பெரிதாய்ச்சிறி தாயி னானும்"

என்றமையும் காண்க. கரி - சான்று; அறிவித்து உடனிருந் தறிவது. காண்பான் - அறிபவன்; ஆன்மா. காட்சி - அறிவு.

"அறிவானுந் தானே யறிவிப்பான் றானே
அறிவா யறிகின்றான் றானே - அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர்பா ராகாசம்
அப்பொருளுந் தானே யவன்"

என்னும் அம்மையார் திருவாக்கும் நோக்குக. உம்மைகள் மாற்றி யுரைக்கப்பட்டன. (உஅ)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

என்றுபல முறைபழிச்சி மனையெய்தி விக்ரமனை யீன்று பன்னாட்
டொன்றுமுறை கோலோச்சி விக்கிரமன் சுவன்மிசைப்பார் சுமத்திப் பாசம்
வென்றுகளைந் தருட்சித்த சாமிதிரு வருளேணிக்கால் விளைபே ரின்ப
மன்றன்மது* வீழ்வண்டிற் கலந்திருந்தா னபிடேக மாறன் மன்னோ.

(இ - ள்.) என்று பல முறை பழிச்சி - என்று பலமுறை துதித்து, மனை எய்தி - தனது அரண்மனையை அடைந்து, விக்ரமனை ஈன்று - விக்கிரமனென்னும் புதல்வனைப் பெற்று, பல் நாள் தொன்று முறை கோல் ஓச்சி - பலநாள்வரை பழைய முறைப்படியே செங்கோலை நடத்தி, விக்கிரமன் சுவல்மிசை பார் சுமத்தி - விக்கிரமனது தோளின்மேல் நிலச்சுமையை ஏற்றி, பாசம் வென்று களைந்து - பாசத்

(பா - ம்.) * மன்றமது.

தீனை வென்று போக்கி, அருட்சித்தசாமி திருவருள் நோக்கால் விளைபேரின்பம் - அருளுருவாகிய சித்தமூர்த்திகளின் திருவருட் பார்வையால் விளைந்த பேரின்பத்தின் கண், மன்றல் மது வீழ் வண்டில் - மணம் பொருந்திய தேனின்கண் வீழ்ந்த வண்டினைப்போல, அபிடேகமாறன் கலந்திருந்தான் - அபிடேக பாண்டியன் இரண்டறக் கலந்திருந்தான்.

தமிழிலே ககரவொற்றின் பின் வேறுமெய் வந்து மயங்காதாகலின் விக்கிரமன் என்றே வருதல் வேண்டும்; செய்யுளோசை மிகாமற் பொருட்டு 'விக்ரமன்' என நின்றது. சோமசுந்தரக் கடவுள் சித்தராக வெளிவந்து அருள் புரிந்தமையால் 'சித்தசாமி திருவருணோக்கால்' என்றார். மதுவில் வீழ்ந்த வண்டு அதனையுண்டு பெயராது கிடத்தல்போல வென்க;

> "அதுவென்று லெதுவெனவந் தடுக்குஞ் சங்கை
> யாதலினு லதுவெனலு மறவே விட்டு
> மதுவுண்ட வண்டெனவுஞ் சனகனுதி
> மன்னவர்கள் சுகர்முதலோர் வாழ்ந்தார்"

என்று தாயுமானவடிகள் கூறுமாறுங் காண்க. மன்ற என்பது பாடமாயின் தேற்றமாக என்றுரைக்க. மன்னும் ஓவும் அசைகள். (உக)

ஆகச் செய்யுள் - கங அ௫

## இருபத்திரண்டாவது

# யானையெய்த படலம்

[கலிவிருத்தம்]

கட்டவிழ் கடுக்கையர் கலானை கழைதின்ன
இட்டதிது பஞ்சவ னிடத்தமண ரேவி
விட்டமத யானைவிழ மேவலர் புரத்தைச்
சுட்டகணை விட்டுயிர் தொலைத்தமுறை சொல்வாம்.

(இ - ள்.) இது - இத் திருவிளையாடல், கட்டு அவிழ் கடுக்கையர் கல் ஆனை கழை தின்ன இட்டது - முறுக் கவிழ்ந்த கொன்றைமலர் மாலையை யணிந்த சித்த மூர்த்திகள் கல்லானையானது கரும்பினைத் தின்னுமாறு அளித்ததாகும்; பஞ்சவன் இடத்து அமணர் ஏவி விட்ட - விக்கிரம பாண்டியன்மேல் சமணர்கள் ஏவிய, மத யானை விழ - மதத்தையுடைய யானையானது விழுமாறு, மேவலர் புரத்தைச் சுட்ட கணை விட்டு - பகைவரின் திரிபுரத்தை நீறாக்கிய அம்பை விட்டு, உயிர் தொலைத்த முறை சொல்வாம் - அதன் உயிரினைப் போக்கிய திருவிளையாடலை இனிக்கூறுவாம்.

கல்லானை என்பதில் லகரந் தொக்கது. இது வென்றது மேலே கூறியதனை. (க)

விக்கிரம பாண்டியன் வெலற்கரிய செங்கோல்
திக்குநில னுந்திறைகொள் செல்வநிறை வெய்த
அக்கிரம வெங்கலி யரும்பகை யொதுங்கச்
சக்கர முருட்டியிடர் சாய்த்துமுறை செய்வான்.

(இ - ள்.) வெலற்கு அரிய செங்கோல் - பிறரால் வெல்லுதற்கரிய செங் கோலையுடைய, விக்கிரம பாண்டியன் - விக்கிரம வழுதியானவன், திக்கும் நிலனும் திறைகொள் செல்வம் நிறைவு எய்த - எட்டுத்திக்கிலும் புவிமுழுதிலும் திறையாகக் கொண்ட செல்வமானது நிறைவினைப் பொருந்தவும், அக்கிரமவெங்கலி அரும் பகை ஒதுங்க - கொடியகலியாகிய அரிய பகையானது ஓடவும், சக்கரம் உருட்டி - தனது ஆணையாகிய திகிரியைச் செலுத்தி, இடர் சாய்த்து முறை செய்வான் - குடி களின் துன்பத்தைப் போக்கி முறை செய்வானாயினன்.

செங்கோலையுடைய பாண்டியன் எனக்கூட்டுக. திக்கு, நிலன் என்பன ஆகு பெயர்கள். அக்கிரமம் - நெறியின்மை. அக்கிரமமும் வெம்மையும் கலிக்கு அடை. கலி - வறுமையும் தீமையும் முதலியன. நீதி திறம்புதலாகிய கலி என் பாருமுளர். (உ)

புத்தரம ணாதிய* புறக்களை யகழ்ந்து
நித்தமறை யாகம நெறிப்பயிர் வளர்த்து
மெய்த்தவிதி பத்தியின் விளைந்தபயன் யாருந்
துய்த்திட மனுத்தொழி னடத்திவரு தூயோன்.

(இ - ள்.) புத்தர் அமண் ஆதிய புறக்களை அகழ்ந்து - புத்தரும் சமணரும் முதலிய புறமதக் களைகளைக் களைந்து, நித்தம் மறை ஆகம நெறிப்பயிர் வளர்த்து - அழியாத வேதநெறியும் ஆகம நெறியுமாகிய பயிரினை வளர்த்து, மெய்த்த விதிபத்தியின் விளைந்த பயன் - (அப்பயிரின்) மெய்மையையுடைய விதியாகவும் பத்தியாகவும் விளைந்த பயனை, யாரும் துய்த்திட - அனைவரும் நுகர, மனுத்தொழில் நடத்திவரு தூயோன் - மனுமுறைப்படி ஆட்சி புரிந்து வருகின்ற தூயவனாகிய பாண்டியன்.

புத்தம் சமணம் முதலிய புறச் சமயங்களாகிய களையென்க. மறையாகம நெறிப்பயிர் - வைதிக சைவமாகிய பயிர். விதி பத்தியின் - விதிநெறியும் பத்தி நெறியுமாக; இன் சாரியை. மனுத்தொழில் - நீதி ஆட்சி. இஃது உருவகவணி. (ங)

மருவிதழி யானுறையும் வானிழி விமானத்
தருகுவட பக்கமுற வாலய மெழுப்பி
உருவரு விரண்டினையு மொருவிவரு சித்தர்
திருவுருவு கண்டுபணி செய்தொழுகு† நாளில்.

(இ - ள்.) மரு இதழியான் உறையும் வான் இழி விமானத்து அருகு வடபக்கம் உற - மணம் பொருந்திய கொன்றை மலர்மாலையை யணிந்த சோமசுந்தரக் கடவுள் வீற்றிருக்கும் விண்ணுலகி னின்றும் இறங்கிய விமானத்தின் அருகில் வடபக்கத்தில், ஆலயம் எழுப்பி - திருக்கோயில் எடுப்பித்து, உரு அரு இரண்டினையும் ஒருவி வரு சித்தர் திரு உருவு கண்டு - உருவத்தினையும் அருவத்தினையும் நீங்கி அருளுருக் கொண்டுவந்த சித்தசாமிகளின் திருவுருவத்தை ஆக்கி, பணிசெய்து ஒழுகு நாளில் - தொண்டு செய்தொழுகும் காலத்தில்.

பக்கமுற - பக்கமாக. உருவும் அருவும் மாயையின் காரியமாகலின் அவற்றை ஒருவிவரு என்றார். கண்டு - பிரதிட்டித்து. (ச)

செய்யகதி ரோன்வழிய செம்பிய னொருத்தன்
கையனவன் வென்றிபயில் காஞ்சிநக ருள்ளான்
பொய்யமணர் கட்டுரை புறத்துறையி னின்றான்
மையின்மதி மாறனொடு மாறுபட நின்றான்.

(இ - ள்.) செய்ய கதிரோன் வழிய செம்பியன் ஒருத்தன் - சிவந்த கிரணங்களை யுடையனாகிய சூரியன் வழியில் வந்த சோழன் ஒருவன், வென்றி பயில் காஞ்சி நகருள்ளான் - வெற்றி பொருந்திய காஞ்சி நகரத்தில் இருப்பானாயினன்; பொய் அம

(பா - ம்.) *ஆதியர். †செய்துவரு.

ணர் கட்டுரை புறத்துறையில் நின்றான் - பொய்மையுடைய சமணர்கள், கட்டிக் கூறிய சமண மதமாகிய புறநெறியில் நின்றவனும், கையன் - வஞ்சகனுமாகிய அவன் - அச்சோழன், மை இல் மதி மாறனொடு - குற்றமில்லாத சந்திரன் மரபில் வந்த பாண்டியனோடு, மாறுபட நின்றான் - மாறுபட்டிருந்தான்.

வழிய - வழியினையுடைய. கட்டுரை - புனைந்து கூறிய. ஒருத்தன் உள்ளான் புறத்துறையில் நின்றானும் கையனுமாகிய அவன் மாறுபட நின்றான் என முடிக்க. மாறுபட - மாறுபட்டு. (ரு)

முடங்கன்மதி செஞ்சடை முடித்துவிடை யேறும்
விடங்காது சேவடி விழுங்கிய மனத்து
மடங்கனிகர் தென்னனெதிர் வந்துபொர லாற்று
தடங்கலனோர் வஞ்சனையி னாலட மதித்தான்.

(இ - ள்.) முடங்கல் மதி செஞ்சடை முடித்து - வளைவினையுடைய பிறையைச் சிவந்த சடையில் முடித்து, விடை எறும் - இடப வூர்தியில் எறியருளும், விடங்கரது சேவடி விழுங்கிய மனத்து - அழகராகிய சோமசுந்தரக் கடவுளின் சிவந்த திருவடிகளை உட்கொண்ட மனத்தினையுடைய, மடங்கல் நிகர் தென்னன் எதிர் வந்து பொரல் ஆற்றாது - சிங்கத்தை ஒத்த விக்கிரமபாண்டியனெதிரேவந்து போர்செய்தலாற்றாது, அடங்கலன் ஓர் வஞ்சனையினால் அட மதித்தான் - பகைவனாகிய அச்சோழன் ஒரு வஞ்சனையினாற் கொல்லக் கருதினான்.

விழுங்கிய - உட்கொண்ட; நன்குபதித்த. பொரலாற்றாது - போர் செய்தற்கு வலியின்றி. ஓர், விகாரம். (சு)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

அஞ்சனங் கவுஞ்சங் கோவர்த் தனந்திரி கூடங் காஞ்சிக்
குஞ்சரஞ் சைய* மேம கூடமே விந்த மென்னும்
மஞ்சிவர் வரைக ளெட்டும் வைகுறு மமணர் தம்மில்
எஞ்சலில் குரவர்க் கோலை வேறு வேறெழுதி விட்டான்.

(இ - ள்.) அஞ்சனம் கவுஞ்சம் கோவர்த்தனம் திரிகூடம் - அஞ்சனமும் கிரவுஞ்சமும் கோவர்த்தனமும் திரிகூடமும், காஞ்சிக் குஞ்சரம் சையம் எமகூடம் விந்தம் என்னும் - காஞ்சியிலுள்ள அத்திகிரியும் சையமும் எமகூடமும் விந்தமும் என்று சொல்லப்பட்ட, மஞ்சு இவர் வரைகள் எட்டும் - முகில்கள் தவழும் எட்டு மலைகளிலும், வைகுறும் அமணர் தம்மில் - வசிக்கும் சமணர்களுள், எஞ்சல் இல் குரவர்க்கு வேறு வேறு ஓலை எழுதி விட்டான் - குறைதலில்லாத ஆசிரியராயினோர்க்கு வேறு வேறாக ஓலை எழுதி அனுப்பினான்.

அஞ்சனம் - நீலவெற்பு. கவுஞ்சம், வடசொற் சிதைவு. அத்தி வெற்பினைப் பரியாயப் பெயராற் 'குஞ்சரம்' என்றார். எஞ்சல் இல்-மிக்க தொகையினையுடைய. ()

(பா - ம்.) *காஞ்சி குஞ்சர சையம்.

வடிவுபோ லுள்ள மெல்லா மாசிருள் புதைய நின்ற
அடிகண்மா ராவா ரெண்ணா யிரவரு மார்த்தார் வேய்ந்த
முடிகெழு வேந்தன் விட்ட முடங்கலை நிமிர்த்து வாசித்
திடிகெழு கார்போற் குன்றி னிழிந்துவே றிடத்திற் செல்வார்.

(இ - ள்.) வடிவுபோல் உள்ளம் எல்லாம் மாசு இருள் புதைய நின்ற அடிகள் மார் ஆவார் எண்ணாயிரவரும் - தம் வடிவு போன்றே உள்ள முழுதும் அஞ்ஞான மாகிய இருள்மூட நின்ற குரவராவார் எண்ணாயிரவரும், ஆர்தார் வேய்ந்த முடிகெழு வேந்தன் விட்ட முடங்கலை நிமிர்த்து வாசித்து - ஆத்திமாலையை யணிந்த முடி சூடிய சோழமன்னன் விடுத்த ஓலையைப் பிரித்துப் படித்து, இடிகெழு கார்போல் - இடிமிக்க முகில்போல, குன்றின் இழிந்து வேறு இடத்தில் செல்வார் - மலைகளி னின்றும் இறங்கி வேறாகக் குறித்த இடத்திற் செல்வாராயினர்.

வடிவு அழுக்கால் மூடப்பட்டிருப்பது போன்றே மனம் அறியாமையால் மூடப்பட்ட என்றார்; புறத்தும் அகத்தும் தூய்மையில்லாதவர் என்றவாறு. மாசு - கறை, அறியாமை; இருள் மாசு என மாறி அறியாமையாகிய அழுக்கு எனலுமாம். அடிகள்மார் - சமண குரவர்க்குச் சிறப்பாக வழங்கும் பெயர்; மார் பெயர் விகுதி ஆவார், முதல் வேற்றுமைச் சொல். கருமையாலும் ஆரவாரத்தாலும் மலையினின் றிறங்குதலாலும் 'இடிகெழுகார்போல்' என்றார். தம்மிடத்தின் வேறாகிய குறித்த இடத்தில் என்க. (அ)

யாவரு மொருங்கு கூடி யிருள்வழி கொள்வ தேய்ப்பக்
காவல்வல் லரணஞ் சூழ்ந்த காஞ்சிமா நகரத் தெய்திப்
பூவலர் தாரான் கோயிற் புறங்கடை புகுந்து வேந்தன்
ஏவலர் விடுப்ப வுள்போ யிறைமக னிருக்கை புக்கார்.

(இ - ள்.) யாவரும் ஒருங்குகூடி - அனைவரும் ஒன்று சேர்ந்து, இருள்வழி கொள்வது எய்ப்ப-இருளானது வழிச் செல்வதைப்போல (நடந்து), காவல் வல் அரணம் சூழ்ந்த காஞ்சிமா நகரத்து எய்தி - காவலையுடைய வலிய மதில் சூழ்ந்த பெரிய காஞ்சிப்பதியினை அடைந்து, பூ அலர் தாரான் கோயில் புறங்கடை புகுந்து - ஆத்தி மலரால் விளங்கும் மாலையை யணிந்த சோழனது அரண்மனையின் வாயிலை அடைந்து, வேந்தன் ஏவலர் விடுப்ப உள்போய் இறைமகன் இருக்கை புக்கார் - அரசனுடைய ஏவலாளர் விடுக்க உள்ளே சென்று அரசனிருப்பிடத்தை யுற்றார் கள்.

இருள்வழி கொள்வ தேய்ப்ப என்றது இல்பொருளுவமை. ஏவலர் - வாயில் காப்போர். (கூ)

மன்னவன் முடிமேற் பீலி வைத்தன ராக்கங் கூற
அன்னவ னவரை நோக்கி வசியமுன் றறும் வல்லீர்
தென்னனை யாபி சாரஞ் செய்துயிர் செகுத்தா லுங்கட்
கென்னது நாடு பாதி தருவல்போ யியற்று மென்றான்.

(இ - ள்.) மன்னவன் முடிமேல் பீலி வைத்தனர் ஆக்கம்கூற - (புக்கவர்) சோழனுடைய முடியின்மேல் மயிற்றோகையை வைத்து ஆசிமொழிகூற, அன்னவன் அவரை நோக்கி - அம்மன்னன் அச்சமண குரவர்களைப் பார்த்து, வசியம் மூன் ஆறும் வல்லீர் - வசியம் முதலாகிய ஆறு தொழிலிலும் வல்லீரே, தென்னனை ஆபி சாரம் செய்து உயிர் செகுத்தால் - (நீவிர்) விக்கிரம பாண்டியனை மாரண வேள்வி செய்து கொல்லுவீரேல், உங்கட்கு என்னது நாடு பாதி தருவல் - உங்களுக்கு என் னுடைய நாட்டிற் பாதி தருவேன்; போய் இயற்றும் என்றான் - சென்று அதனைச் செய்யுங்களென்று கூறினன்.

வசிய மூன்ஞறு எல்லாம் வல்ல சித்தரான படலத்திற் கூறப்பட்டன. ஆபி சாரம்-அபிசார வேள்வி. என்னது, னகரம் விரித்தல். நாடுபாதி - நாட்டிற்பாதி. (ய)

தவம்புரிந் தவமே செய்வார் தாமதற் குடன்பட் டேகி
நிவந்ததெண் டிரைநீர்ப் பாலி நெடுங்கரைக் காத மூன்றிற்
கவர்ந்தகன் சாலை கோலி யோசனை யகலங் கல்லி
அவம்படு வேள்விக் குண்டங் கோணமெட் டாகக் கண்டார்.

(இ - ள்) தவம் புரிந்து அவமே செய்வார் தாம் - (புறத்திலே) தவஞ்செய்து (அகத்தில்) அவமே செய்வாராகிய அவர் தாம், அதற்கு உடன்பட்டு ஏகி - அச்செய் கைக்கு உடன்பட்டுச்சென்று, நிவந்த தெண்திரை நீர்ப்பாலி நெடுங்கரை-உயர்ந்து வரும் தெள்ளிய அலைபொருந்திய நீரையுடைய பாலியாற்றின் நீண்ட கரையில், காதம் மூன்றில் கவர்ந்த அகன்சாலை கோலி - மூன்றுகாத அளவினை அகப்படுத்திய அகன்ற வேள்விச் சாலையைக்கோலி, யோசனை அகலம் கல்லி-(அதில்) ஒருயோசனை அகலம் தோண்டி, எட்டுக் கோணமாக அவம்படு வேள்விக்குண்டம் கண்டார்-எண் கோணமாகப் பழிவினையும் வேள்விக்குண்டத்தினைச் செய்தனர்.

தவம்புரிவார் போன்று அவமே புரிவாரென்க. அவம் - தவத்திற்கு மாருய தீச்செய்கை;

"தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார்மற் றல்லார்
அவஞ்செய்வா ராசையுட் பட்டு"

என்பது தமிழ்மறை. மூன்றில் - மூன்றினை. கவர்ந்த என்னும் பெயரெச்சத்து அகரந்தொக்கது. கண்டார் என்பதனை எச்சமாக்கலுமாம். (கக)

விடம்பொதி காட்டம் பெய்து நிம்பநெய் விராய நஞ்சின்
உடம்புடை யுயிரின் கோழூன் கறிப்பொடி யூறு மெண்ணெய்
இடம்பட வாயங் காந்த வெரிக்குழி புதையப் பெய்து
கொடும்பழி வேள்வி செய்தார் கொல்லாத விரதம் பூண்டார்.

(இ - ள்.) விடம்பொதி காட்டம் பெய்து - (அங்ஙனஞ் செய்து) நஞ்சு பொதி ந்த விறகினையிட்டு, நிம்பநெய் விராய - வேம்பின் நெய் கலந்த, நஞ்சின் உடம்பு

உடை உயிரின் கோழ்ஊன் - நஞ்சு பொருந்திய உடலையுடைய உயிர்களின் கொழுவிய ஊனையும், கறிப்பொடி ஊறும் எண்ணெய் - மிளகு பொடி ஊறிய எள்ளின் நெய்யையும், இடம்பட வாய் அங்காந்த எரிக்குழி புதையப்பெய்து - இடம் பொருந்த வாய்திறந்த தீயினையுடைய வேள்விக் குண்டம் மறையுமாறு சொரிந்து, கொல்லாத விரதம் பூண்டார் கொடும்பழி வேள்வி செய்தார் - கொல்லாமையாகிய விரதத்தை மேற்கொண்ட சமணர்கள் கொடிய பழியினைவிளைக்கும் வேள்வியினைச் செய்தார்கள்.

விடம்பொதி காட்டம் - எட்டி முதலியவற்றின் விறகு. நஞ்சினுடம்புடை உயிர் - பாம்பு முதலியன. கோழூன் - கொழுப்பு. வாய் அங்காத - வாய்திறந்தாற் போன்ற. கொல்லாமையாகிய விரதம் என விரிக்க. இவரது கொல்லாவிரதம் இருந்தவா றென்னேயென் றிகழுவார் 'கொடும்பழி வேள்வி செய்தார் கொல்லாத விரதம் பூண்டார்' என்றார். (கஉ)

மாடுள பொதும்பர் நந்தா வனமுள சோலை யுள்ள
காடுள கருகிச் சாயக் கயலுள வோடை யுள்ள
கோடுள வாவி யுள்ள குளமுள வறப்பத் தாவிச்
சேடுள முகிலுந் தீயச் சிகைமெழு குண்டத் தீவாய்.

(இ - ள்.) மாடு உள பொதும்பர் நந்தாவனம் உள - பக்கத்திலுள்ள மரச் செறிவினையுடைய நந்தவனங்களானவும், சோலை உள்ள-சோலைகளானவும், காடுஉள-காடுகளானவும, கருகிச்சாய - கருகித் தீயவும், கயல் உள ஓடை உள்ள - கயல்கள் உள்ள ஓடைகளானவும், கோடு உள வாவி உள்ள - கரையுள்ள வாவிகளானவும், குளம் உள - குளங்களானவும், வறப்ப - வறளவும், சேடு உள முகிலும் தீய - சேய்மையில் உள்ள முகிலுங் கருகவும், தாவி எழுசிகை குண்டத்தீவாய் - தாவி எழுகின்ற சிகையினையுடைய வேள்விக்குண்டத்தீயின்கண்.

மாடுள, கயலுள, கோடுள, சேடுள என்பவற்றிலுள்ள உள என்பன குறிப்புப் பெயரெச்சம். ஏனைய உள, உள்ள என்பன முதல் வேற்றுமைச் சொல்; நந்தவனம் முதலியவற்றிலுள்ள உயிர்களென்று உரைப்பாரு முளர்; நந்தவனம் முதலியன அழிதல் கூறவே அவற்றிலுள்ள உயிர்களின் அழிவும் பெறப்படுதலானும், கருகிச் சாய, வறப்ப என்பவற்றிற்கு அங்ஙனம் பொருள் கூறுதல் சிறப்பின்றாகலானும் யாம் கூறிய பொருளே பொருத்தமாதல் காண்க. கொல்லாவிரதம் பூண்டவர் இவை யெல்லாம் அழிவுறும்படியாகத் தீ வளர்த்தனர் என இகழ்ந்துரைத்தவாறு. (கங)

கூற்றெழு தோற்றம் போல வஞ்சனக் குன்றம் போலக்
காற்றெழு செவியு நால்வாய் கௌவிய மருப்பு மாறா
ஊற்றெழு மதமு மூச லாடிய வொற்றைக் கையும்
ஏற்றெழு விடம்போற் சீறி யெழுந்ததோர் தறுகண் யானை.

(இ - ள்.) காற்று எழு செவியும் - காற்றினை எழுப்புகின்ற காதினையும், நால்வாய் கௌவிய மருப்பும் - தொங்குகின்ற வாயினைப் பற்றிய கொம்பினையும்,

ஆறு ஊற்று எழு மதமும் - ஆறாகச் சுரந்து ஒழுகுகின்ற மதத்தினையும், ஊசல் ஆடிய ஒற்றைக் கையும் - ஊஞ்சல்போல ஆடா நின்ற ஒற்றைத் துதிக்கையையும், ஏற்று - பொருந்தி, எழுவிடம்போல் சீறி - (கடலின்கண்) எழுந்த நஞ்சினைப்போல வெகுண்டு, கூற்று எழு தோற்றம்போல அஞ்சனக் குன்றம்போல - கூற்றுவன் எழுந்த தோற்றம் போலவும் நீலமலை எழுந்த தோற்றம்போலவும், ஓர் தறுகண் யானை எழுந்தது - ஒரு அஞ்சாமையையுடைய யானை எழுந்தது.

காற்று எழுகின்ற செவி என்றும், வாயாற் கௌவப்பட்ட மருப்பு என்றும் உரைத்தலுமாம். ஆறாக என்றது ஈறு தொக்கது; மாறு எனப் பிரித்தலுமாம். கொலைத் தொழிலுக்குக் கூற்றத்தையும், வடிவிற்கு அஞ்சனமலையையும், சினத் திற்கு விடத்தையும் உவமை கூறினர். (கச)

அந்தமா வேள்வித் தீயு மவியமும் மதமுஞ் சோர
வந்தமா களிற்றை நீபோய் வழுதியை மதுரை யோடுஞ்
சிந்தவே தொலைத்தி யென்னாத் தென்றிசைச் செல்ல வேவி
முந்தவே விடுத்த மாசு மூழ்குட லமணப் பேய்கள்.

(இ - ள்.) அந்த வேள்வி மாதீயும் அவிய-அந்த வேள்விக்குண்டத்துப் பெரிய தீயும் அவியுமாறு, மும்மதமும் சோரவந்த மாகளிற்றை-மூன்று மதங்களும் சொரிய எழுந்த பெரிய யானையை, மாசுமூழ்கு உடல் அமணப்பேய்கள் - அழுக்கில் மூழ்கிய உடலினையுடைய சமணப் பேய்கள் (நோக்கி). நீ போய் - நீ சென்று, வழுதியை மதுரை யோடும் சிந்தத் தொலைத்தி என்னா - விக்கிரம பாண்டியனை மதுரைப்பதி யோடும் அழியும்படி தொலைப்பாயாக என்று, தென்திசை முந்தவே செல்ல ஏவி விடுத்த - தென் திசைக்கண் முற்படச் செல்லுமாறு பணித்து விடுத்தன.

அத்தீயினும் கொடுமையுடைய தென்பார் 'தீயும் அவிய' என்றார். அந்தமா அவிய என்றுமாம்; அந்தமா - முடிவாக; அஃது அவிந்து தொலைந்த தென்னும் குறிப்பிற்று. செறலினால் 'அமணப் பேய்கள் விடுத்த' என்றார். நிரம்பாத ஆசை யுடைமையாலும் கொடுமையாலும் பேய்களாக்கிக் கூறினர். விடுத்த, அன்சாரியை பெறாத பலவின்பால் முற்று. (கரு)

[கலிவிருத்தம்]

அருளற்றிரு ளுடலிற்புதை யமணக்கய வர்களுட்
டெருளற்றரு மறையிற்படர் செயலற்றிக பரமெய்ப்
பொருளற்றவ னனிகத்தொடு புறமொய்த்திட மதமா
வெருளற்றிடி குரலிற்படி வெடிபட்டிட வருமால்.

(இ - ள்.) அருள் அற்று உடலின் இருள்புதை அமணக் கயவர்கள் - கருணை சிறிதுமின்றி (கருமையாற் புதைந்த) உடல்போல மற இருளால் மூடப்பெற்ற சமணக் கீழ்மக்கள், உள் தெருள் அற்று - அகத்திலே தெளிந்த அறிவின்றி, அரு மறையில் படர் செயல் அற்று - அரிய வேதநெறியிற் செல்லுந்தொழிலின்றி, இக

பரம் மெய்ப்பொருள் அற்றவன் - இம்மை மறுமைப் பயனும் வீடுபேறும் இல்லாதவ ளுகிய சோழனது, அனிகத்தொடு - சேனையுடன், புறம் மொய்த்திட - புறத்தே நெருங்கிவர, மதமா - அந்த மதயானையானது, வெருள் அற்று - அஞ்சுதலின்றி, இடி குரலில் படி வெடிபட்டிட வரும் - முழங்குகின்ற ஒலியால் நிலவுலகம் பிளக்கும் படி வாராநின்றது.

தெருளறுதலும் மறையிற்பட்ட செயலறுதலும் இகபர மெய்ப்பொருளறுத லுக்குக் காரணமாயின. மெய்ப்பொருள் - நிலையாகிய வீடுபேறு. இடிகுரல், வினைத் தொகை. ஆல், அசை. (கசு)

அடியின்னள வகல்பாதல முடியின்னள வண்டம்
இடியின்னள வெழுகார்செவி யெறிகாலள வகிலம்
மடியும்மள வுளர்கான்மத மழையின்னள வுலக
முடிவின்னெழு கடல்கண்ணழ லளவாமுது வடவை.

(இ - ள்.) அடியின் அளவு அகல் பாதலம் - அந்தயானையின் அடிகளின் எல்லை அகன்ற பாதலமாகும்; முடியின் அளவு அண்டம் - முடியின் எல்லை வானுலகமாகும்; இடியின் அளவு எழுகார் - முழக்கத்தின் எல்லை எழுமேகங்களின் ஓசையாகும்; செவி எறிகால் அளவு அகிலம் மடியும் அளவு உளர் கால் - காதுகள் வீசும் காற்றின் எல்லை உலக முழுதும் அழியுங் காலத்தில் வீசும் ஊழிக் காற்றாகும்; மதமழையின் அளவு உலக முடிவின் எழுகடல் - மதமாகிய மழையின் எல்லை உலகம் முடியுங் காலத்திற் பொங்கி யெழும் எழுகடல்களாகும்; கண் அழல் அளவு முது வடவை ஆம் - விழிகள் சிந்தும் வெகுளித்தீயின் எல்லை பெரிதாகிய வடவைத் தீயாகும்.

இறுதியிலுள்ள ஆம் என்பதனைப் பாதலம் முதலியவற்றோடு கூட்டுக. ஓசை யின் பொருட்டு னகர மகர வொற்றுக்கள் விரிந்து நின்றன. (கஎ)

கூற்றஞ்சிய* வருமிக்கரி குரலஞ்செவி முழைவாய்
ஏற்றஞ்செய மடங்குஞ்செவி யெறிகால்வழி விழித்தீ
ஊற்றஞ்செய மடைவாயுடைந் தொழுகுங்கட மதநீர்
நாற்றஞ்செயத் திசைவேழமு நடுக்கஞ்செய்து நலியும்.

(இ - ள்.) கூற்று அஞ்சிய வரும் இக்கரி - கூற்றுவனும் அஞ்சுமாறு வரு கின்ற இந்த யானை, குரல் அஞ்செவி முழைவாய் ஏற்றம் செய - தனது முழக்கம் அஞ் செவியாகிய முழையின் கண்ணே சென்று தாக்கவும், மடங்கும் செவி எறி கால் வழி விழித்தீ ஊற்றம் செய - மடங்கிய செவிகள் வீசுகின்ற காற்றின் வழியே விழியின் தீமூண்டு சென்று ஊறு செய்யவும், மடைவாய் உடைந்து ஒழுகும் கடமத நீர் நாற்றம் செய - மடைவாய் உடைந்து ஒழுகும் மதநீர்ப் பெருக்கு நாறுதலைச் செய்

(பா - ம்.) * கூற்றஞ்சிட.

யவும், திசைவேழமும் நடுக்கஞ்செய்து நலியும் - (இவற்றால்) திக்கு யானைகளையும் நடுங்கச்செய்து வருத்தும்.

அஞ்சிய, செய்யியவென்னும் வினையெச்சம். கரியானது திசைவேழங்களை யும் நடுக்கஞ் செய்து நலியும் என்க. திசைவேழங்களின் செவியாகிய முழை. (கஅ)

இடிக்கும்புயல் வயிற்றைக்கிழித் திடியேற்றினை யுதிர்க்கும்
வெடிக்கும்பிளி றொலியாற்றிசை விழுங்கிச்செவி டாக்குந்
துடிக்கும்புழைக் கையோச்சிவிண் டொடுகுன்றினைச் சுற்றிப்
பிடிக்குங்கடல் கலக்குந்தனிப் பெருமத்தெனத் திரிக்கும்.

(இ - ள்.) இடிக்கும் புயல் வயிற்றைக் கிழித்து இடி ஏற்றினை உதிர்க்கும் - இடிக்கின்ற முகிலின் அகட்டினைக் கீண்டு இடியேற்றை உதிர்க்கா நிற்கும்; வெடிக்கும் பிளிறு ஒலியால் திசை விழுங்கிச் செவிடாக்கும் - முழங்குகின்ற பிளிறுதலின் ஓசையினால் திசைகளை விழுங்கிச் செவிடாக்கும்; துடிக்கும் புழைக்கை ஓச்சி - துடிக்கா நின்ற தொளைக்கையை வீசி, விண்தொடு குன்றினைச் சுற்றிப் பிடிக்கும் - வானை யளாவிய மலைகளைச் சுற்றிப் பிடிக்கும்; கடல் கலக்கும் தனிப் பெருமத் தெனத் திரிக்கும் - (அம்மலைகளைக்) கடலைக் கலக்குகின்ற ஒப்பற்ற பெரிய மத்தாகிய மந்தர மலையைப் போலச் சுழற்றா நிற்கும்.

யானை முழங்குதல் பிளிறுதலெனப்படும். விழுங்கி - அகப்படுத்தி. அவற்றைத் திரிக்கும் என விரித்துரைக்க. (கக)

உருமுக்குர லொலியிற்றுள ரொலிவிட்டெறி செவியிற்
றிருமுட்பிறை யெயிறிற்றழ* லெரிகட்டிரு ளுடலிற்
றருமுக்கட வருவித்தூ லடியிற்றென நிலமேல்
வருமுக்கிர வடவைக்கனல் வரினொப்பத மதமா.

(இ - ள்.) உருமுக் குரல் ஒலியிற்று - இடிபோன்ற முழக்கத்தினையுடையது; உளர் ஒலி விட்டெறி செவியிற்று - சூறைக்காற்றினைவிட்டு வீசும் செவியினையுடையது; இருமுள் பிறை எயிறிற்று - இரண்டு முட்போலும் முனையையுடைய பிறை போன்ற மருப்புக்களையுடையது; அழல் எரி கட்டு - வெகுளித்தீ எரிகின்ற கண்களை யுடையது; இருள் உடலிற்று - இருள் போன்ற உடலினையுடையது; அரு முக்கட அருவித்து - அரிய மூன்று மதங்களாகிய அருவியையுடையது; ஊல் அடியிற்று - உரல் போன்ற அடியினையுடையது; அ மதமா - அந்த மதயானையானது, உக்கிர வடவைக்கனல் வரின் ஒப்பது என - கொடுமையுடைய வடவைத்தீயானது நடந்துவரின் அதனை ஒப்பதாம் என்னுமாறு, நிலமேல் வரும் - புவியின்மேல் வராநின்றது.

ஒலியிற்று என்பது முதலியன குறிப்பு வினைமுற்றுக்கள். உளரொலி என்பதில் ஒலி காற்று என்னும் பொருளது. உளர்தல் - வீசுதல். எயிற்றிற்று என்பது

---

(பா - ம்.) *அழலெறி.

விகாரமாயிற்று. மதமா கனல்வரின் ஒப்பது என நிலமேல்வரும் எனக்கூட்டி முடிக்க. அம்மதமா என்பதில் மகரந் தொக்கது. (உ௰)

தெழிபட்டதிக்* கயத்தின்செவி தீயப்பகை யோடும்
வழிபட்டொரு கடுங்கூற்றென வருகுஞ்சர வரவை
விழிபட்டவர் மொழியாலுணர் விரைபட்டலர் வேம்பன்
சுழிபட்டலை புனல்போன்மனஞ் சுழன்றானினைந் தழன்றான்.

(இ - ள்.) தெழிபட்ட திக்கயத்தின் செவிதீய-முழக்கந் தாக்கிய திசையானைகளின் செவிகள் கருக, பகையோடும் வழிபட்டு ஒரு கடுங் கூற்று என வரு குஞ்சர வரவை - பகைமையுடன் வழிக்கொண்டு ஒருகொடிய கூற்றுவன்போல வருகின்ற யானையின் வரவினை, விழிபட்டவர் மொழியால் உணர் - கண்ணுற்றவர்களின் மொழியாலுணர்ந்த, விரைபட்ட அலர் வேம்பன் - மணம் பொருந்திய மலர்ந்த வேப்ப மலர் மாலையை யணிந்த விக்கிரம பாண்டியன், சுழிபட்டு அலை புனல்போல் மனம் சுழன்றான் - சுழித்தல் கொண்டு அலைகின்ற நீர்போல மனஞ் சுழன்றான், நினைந்து அழன்றான் - எண்ணி வெதும்பினான்.

தெழி என்னும் முதனிலைத் தொழிற்பெயர் ஓசைக்காயிற்று. தெழித்தல் - உரப்புதல், ஆர்த்தல். பகை - பகைவராகிய சமணருமாம். விழிபட்டவர் - கண்டவர். உணர் வேம்பன் என்க. சுழன்றான், அழன்றான் என்பனவற்றை எச்சமாக்கலுமாம். (உக)

மைப்போதகம் பொறையாற்றிய மணிக்கோயின்முன் குறுகாக்
கைப்போதக முரித்தான்கழற் காற்போதக முறத்தாழ்ந்
திப்போதகந் தனையுந்தொலைத் தெனைக்காத்தியென் றிரந்தான்
அப்போதகல் வானின்றொரு திருவாக்கெழுந் தன்றே.

(இ - ள்.) மை போதகம் பொறை ஆற்றிய மணிக்கோயில் முன் குறுகா - கரிய யானைகளாற் சுமக்கப்பட்ட மணிகள் அழுத்திய இந்திர விமானத்தின் முன் சென்று, கை போதகம் உரித்தான் கழல் கால்போது அகம் உறத்தாழ்ந்து-துதிக்கையினையுடைய யானையை உரித்தருளிய சோமசுந்தரக் கடவுளின் வீரக்கழலணிந்த திருவடி மலர்களை மனமுற வணங்கி, இப்போதகம் தனையும் தொலைத்து எனைக் காத்தி என்று இரந்தான் - இந்த யானையையும் கொன்று அடியேனைக் காத்தருள்க என்று குறையிரந்தான்; அப்போது அகல் வான் நின்று ஒரு திருவாக்கு எழுந்தன்று - அப்பொழுது அகன்ற விசும்பினின்றும் ஒரு திருவாக்கு எழுந்தது.

பொறை ஆற்றிய - பொறுத்தலைச் செய்த. முன்னொரு காலத்தில் யானையை உரித்த பெருமானே இந்த யானையையும் கொன்று அருள வல்லன் என்பார் 'கைப்போதக முரித்தான் கழற்காற்போதக முறத்தாழ்ந்து' என்றார். தன் தந்தையின் காலத்தில் வருணன் விட்ட கடலையும் முகிலையும் தொலைத்தமைபோல இந்த யானை

(பா - ம்.) *தெழிப்பட்ட. வழிப்பட்டொரு. விழிப்பட்டவர். சுழிப்பட்டலை.

யையும் தொலைக்கவேண்டு மென்பது தோன்ற நின்றமையின் 'இப்போதகந்தனை யும்' என்பதிலுள்ள உம்மை இறந்தது தழுவிய எச்சப்பொருட்டு; முன் யானை உரித்த மையைத் தழுவி நின்றதுமாம். எழுந்தன்று-எழுந்தது; அன்-சாரியை.ஏ,அசை. (உஉ)

விட்டார்வலி கெடநாமொரு விற்சேவக னாகி
ஒட்டார்விட வருவெங்கரி யுயிர்வௌவுது முதனின்
மட்டார்பொழிற் கடிமாநக ரயற்கீட்டிசை மருங்கோர்
அட்டாலைமண் டபஞ்செய்யென வதுகேட்டெழுந் தரசன்.

(இ - ள்.) விட்டார் வலிகெட - விடுத்தவர்களின் மனவன்மை கெடுமாறு, நாம் ஒரு வில் சேவகன் ஆகி-நாம் ஒருவிற்பிடித்த சேவகனாய் (வந்து), ஒட்டார் விட வரு வெங்கரி உயிர் வௌவுதும் - பகைவர்விட வருகின்ற கொடிய யானையின் உயிரைக் கவருவேம்; முதல் - முதலில், நின் மட்டு ஆர் பொழில் கடிமாநகர் அயல் கீழ் திசை மருங்கு-உனது தேன் நிறைந்த சோலை சூழ்ந்த காவலையுடைய பெரிய நகரத்தி னருகிலே கீழ்த்திசையில், ஓர் அட்டாலை மண்டபம் செய் என - ஒரு அட்டாலை மண்டபம் செய்வாய் என்று அவ்வாக்கு அருள, அது கேட்டு அரசன் எழுந்து - அதனைக் கேட்டு அரசன் எழுந்து.

முதல் - முன்பு. கீழ்த்திசை என்பது மருவிற்று. அட்டாலை-விலங்குகளை வேட்டமாடுவோர் ஏறியிருக்கும் பரண். அட்டாலை மண்டபம் - பரண் வடிவாக இயற்றிய மண்டபம். செய்யென எழுந்தன்று என மேற் செய்யுளோடு கூட்டி முடித் தலுமாம். (உங)

அகங்கவ்விய களிப்பெய்திவந் தட்டாலைமண் டபம்பொன்
நகங்கவ்விய தெனத்தூணொரு நானான்கினி லெடுத்தே
சகங்கவ்விய புகழான்செயத் தறுகட்கணை மதமா
முகங்கவ்விய விற்சேவகன் வருவானது மொழிவாம்.

(இ - ள்.) அகம் கவ்விய களிப்பு எய்திவந்து - உள்ளத்தை விழுங்கிய மகிழ்ச்சியை அடைந்துவந்து, அட்டாலை மண்டபம் - அட்டாலை மண்டப மொன்றை, பொன் நகம் கவ்வியது எனத் தூண் ஒருநால் நான்கினில் எடுத்து - பொன் மலையே உருமாறிச் சுமக்கின்றது என்று கண்டோர் சொல்லப் பதினாறு தூண்கள் சுமக்குமாறு எடுத்து, சகம் கவ்விய புகழான்செய-உலகத்தைத் தனதகப்படுத்திய புகழையுடைய விக்கிரம பாண்டியன் கட்டி முடிக்க, தறுகண் கணை மதமா முகம் கவ்விய வில் சேகவன் வருவான் - (சோமசுந்தரக் கடவுள்) கொலைத்தொழிலையுடைய அம்பானது அம்மத யானையின் முகத்திலே தைத்துருவ வில்லை யேந்திய சேவகனாகி வாராநின்றான்; அது மொழிவாம் - அதனைக் கூறுவாம்.

புகழானாகிய அரசன் என மேற்செய்யுளோடு இயைத்துரைக்க. தறுகண்மையுடைய மதமாவின் முகத்தைக் கணை கவ்விய என்றுரைத்தலுமாம். கவ்விய வருவான் என்க; கவ்விய, செய்பிய வென்னும் வினையெச்சம். அது - அங்ஙனம் வருந்தோற்றத்தை. (உச)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

நீனிற நீத்த நீந்து நிழன்மதி யிரண்டுண் டென்ன
வானிற வலயச் சங்க வார்குழை நுழைவித் தம்பூம்
பானிற வெகினங் காணுப் படர்சடை மறைத்துத் தோற்றுங்
கானிறை குஞ்சிச் சூட்டிற் களிமயிற் கலாபஞ் சூடி.

(இ - ள்.) நீல்நிற நீத்தம் நீந்தும் நிழல் மதி இரண்டு உண்டு என்ன - நீல நிறத்தையுடைய இருளாகிய கடலை நீந்தும் திங்கள் இரண்டுள்ளன என்னும்படி, வால்நிற வலயச் சங்கம் வார்குழை நுழைவித்து - வெண்ணிறத்தையுடைய வட்டமாகிய சங்கினாலாகிய நீண்ட குண்டலங்களை (இருகாதிலும்) புகுத்தி, அம்பூம் பால்நிற எகினம் காணுப் படர்சடை மறைத்து-அழகிய தாமரை மலரில் வசிக்கும் வெண்ணிறத்தையுடைய பிரமனாகிய அன்னப் பறவை காணாத படர்ந்த சடையினை மறைத்து, தோற்றும் கான்நிறை குஞ்சிச் சூட்டில் களிமயில் கலாபம் சூடி-தோன்றுகின்ற மணம் நிறைந்த மயிர் முடியிலே களிக்கின்ற மயிலின் தோகையை அணிந்து.

நீலம் என்பது கடை குறைந்தது. நீல நிறத்தையுடைய கடல் எனக்கொண்டு நிழல் மதி இரண்டுண்டாயின் அவற்றை யொப்ப என விரித்துரைத்தலுமாம், காரொளியுடைய உடம்பின் இருபுறத்திலும் குண்டலங்கள் அசையுந் தோற்றம் நீல நிற நீத்தத்தை இரண்டு மதிகள் நீந்துவனபோன் றிருந்தது. சங்க வலயம் வார்குழை நுழைவித்து எனச் சொல்வகை செய்து சங்கக் குண்டலத்தை நெடிய காதில் நுழைவித்து என்றுரைத்தலுமாம். பூவும் நிறமும் அன்னத்திற்கும் பிரமனுக்கும் பொது. சூடு - உச்சியிலுள்ள மயிர் முடி; கண்ணியெனக் கொண்டு, குஞ்சியிலுள்ள கண்ணியுடன் கலாபத்தைச் சூடி என்றுரைப்பினும் அமையும். (உரு)

கருங்கடன் முளைத்த செக்கர்க் கதிரெனக் குருதிக் கச்சை
மருங்குற வீக்கிச் சோரி வாயுடை வாளுங் கட்டி
இரங்குநான் மறைக ளேங்க விருநிலந் தீண்டு தாளிற்
பொருங்கழல் வளைத்து வாளிப் புட்டிலும் புறத்து வீக்கி.

(இ - ள்.) கருங்கடல் முளைத்த செக்கர் கதிர் என - கரிய கடலிற் றோன்றிய செவ்வொளியை யுடைய பரிதி என்னும்படி, குருதிக் கச்சை மருங்கு உற வீக்கி- செந்நிறத்தையுடைய கச்சையினை அரையிற் பொருந்தக் கட்டி, சோரிவாய் உடைவாளும் கட்டி - குருதி ஒழுகும் வாயினையுடைய உடைவாளையும் அதன் புறத்தே செறித்து, இரங்கும் நான்மறைகள் ஏங்க இருநிலம் தீண்டு தாளில் - ஒலிக்கின்ற நான்கு மறைகளும் ஏங்கப் பெரிய நிலத்தைத் தீண்டுகின்ற திருவடியில், பொருங் கழல் வளைத்து - போருக்குரிய வீரக்கழலை அணிந்து, வாளிப் புட்டிலும் புறத்து வீக்கி - அம்புக் கூட்டினையும் முதுகிலே கட்டி.

குருதிக் கச்சை - குருதிபோலும் செந்நிறமுடைய கச்சை. ஏங்கல் - மனம் வாடி இளைத்தல். ஏங்க - ஏங்கும்படி; ஏங்காநிற்க என்றுமாம். (உசு)

வீங்கிய தடந்தோ ளிட்ட வார்சிலை வில்லி னோடும்
பாங்குறை யிமயப் பாவை பாதியே யன்றி முற்றும்
வாங்கிய வண்ணம் போன்று மல்லது மாலு மோர்பால்
ஓங்கிய வண்ணம் போன்று மொளிநிறம் பசந்து தோன்ற.*

(இ - ள்.) வீங்கிய தடந்தோள் இட்ட வார்சிலை வில்லினோடும் - பூரித்த பெரிய தோளிற் சாத்திய நீண்ட வில்லோடும், பாங்கு உறை இமயப்பாவை பாதியே அன்றி முற்றும் வாங்கிய வண்ணம் போன்றும் - இடப்பாலில் உறைகின்ற மலைமகள் உடம்பின் பாதி யல்லாமல் முற்றும் பெற்றருளிய தன்மை போலவும், அல்லது - அன்றி, மாலும் ஓர் பால் ஓங்கிய வண்ணம் போன்றும் - திருமாலும் ஒரு பங்கில் எழுந்த தன்மை போலவும், ஒளிநிறம் பசந்து தோன்ற - ஒளியினை யுடைய வடிவம் முழுதும் பசுமையாய்த் தோன்றவும்.

சிலைவில், ஒருபொரு ளிருசொல்; மலையாகிய வில்லென்றும், ஒலித்தலை யுடைய வில்லென்றும் கூறலுமாம். வாங்கிய வண்ணம்போலு மென்ன அல்லது ஓங்கிய வண்ணம்போலு மென்ன நிறம் பசந்து என்க. திருமால் இடப்பாலும் சிவன் வலப்பாலுமாக இயைந்திருப்பரென வைணவப் பெரியார்களும் கூறுவர்; இச் செய்யுளில், மால் வலப்பாலில் ஓங்கிய வண்ணம் போன்று எனக் கொள்ள வேண்டும். ()

காமனுங் காமுற் றஞ்சுங் காளையாம் பருவந் தோன்றத்
தாமுல களந்த வென்றித் தனிவிற்சே வகனாய்த் தோன்றி
மாமறை மகுட மன்ன மண்டபத் தேறித் தென்னர்
கோமக னிடுக்கண் டீர்ப்பான் குஞ்சர வரவு நோக்கா.†

(இ - ள்.) காமனும் காமுற்று அஞ்சும் காளையாம் பருவம் தோன்ற - மத வேளும் விரும்பி அஞ்சுதற் கேதுவாகிய காளைப்பருவந் தோன்றவும், உலகு அளந்த வென்றித் தனிவில் சேவகனாய்த் தோன்றி - உலகினைத் தன்னகப்படுத்திய வெற்றி பொருந்திய ஒப்பற்ற வில்லைத் தாங்கிய வேட்டுவ வீரனாகி எழுந்தருளி, மாமறை மகுடம் அன்ன மண்டபத்து ஏறி - பெருமை பொருந்திய மறைகளின் முடியை ஒத்த அம் மண்டபத்திலேறி, தென்னர் கோமகன் இடுக்கண் தீர்ப்பான் - பாண்டியர் தலைவனாகிய விக்கிரம வழுதியின் துன்பத்தைத் துடைக்கும் பொருட்டு, குஞ்சர வரவு நோக்கா - யானையின் வரவினை நோக்கி.

மன்மதனும் விரும்புதற்கும் அஞ்சுதற்கும் ஏதுவாகிய அழகினையுடைய காளைப் பருவம் என்க. தாம், அசை. உலக முழுதும் பரந்ததனை 'உலகளந்த' என்றார்;

"ஞாலமளந்த மேன்மைத் தெய்வத் தமிழும்"

என்புழிப் போல. தோன்றி - எழுந்தருளி. தீர்ப்பான், வினையெச்சம். (உஅ)

---

(பா - ம்.) *பசந்து தோன்றி. †நோக்கி.

அஞ்சுகூ விளிச்சேய்த் தென்ன வதுவர வறனி லாதான்
வெஞ்சினக் கோலி னோன்றாண் மிதித்துமெய் குழைய வாங்கிச்
செஞ்சிலை நெடுநாண் பூட்டித் திருவிர றெறித்துத் தாக்கிக்
குஞ்சர மெட்டு மஞ்சக் கோளரி முழக்கங் காட்டி.

(இ - ள்.) அஞ்சு கூவிளி செய்த்து என்ன அதுவர - கூப்பிடு தூரம் என்று சொல்லுமாறு அந்த யானையானது வர, அறன் இலாதான் வெஞ்சினக் கோலின் - அறநெறியில்லாத அச்சோழனது கொடிய சினத்தினையுடைய கொடுங் கோலைப்போல, செஞ்சிலை நோன்தாள் மிதித்து மெய்குழைய வாங்கி-செவ்வையாகிய வில்லைத் தனது வலியதாளால் மிதித்து உடல் வளைய (அதனை) வளைத்து, நெடு நாண் பூட்டி-நீண்ட நாணைப்பூட்டி, திருவிரல் தெறித்துத் தாக்கி-அழகியவிரலாலே தெறித்துக் குணத்தொனி செய்து, குஞ்சரம் எட்டும் அஞ்சக் கோளரி முழக்கம் காட்டி - திசை யானைகள் எட்டும் அஞ்சுமாறு சிங்கத்தொனியைக் காட்டி.

கூவிளி - கூப்பீடு. அறன் நிலாதான் எனப் பிரித்தலுமாம். உடையானது சினத்தைக் கோலுக்கேற்றினார். கோல்போல வளைய வளைத்தென்க. தெறித்துத் தாக்கி - தெறித்து நாணொலி யெழுப்பி; குணத்தொனி செய்து. வருகின்ற யானையே யன்றித் திசையானைகளும் அஞ்ச. கோளரி முழக்கம்-சிங்கநாதம். (உக)

இங்கித நெடுங்கோ தண்ட மிடங்கையி லெடுத்து நார
சிங்கவெங் கணைதொட் டாகந் திருகமுன் னிடத்தாள் செல்ல
அங்குலி யிரண்டா லையன் செவியுற வலித்து விட்டான்
மங்குலின் முழங்கும் வேழ மத்தகங் கிழிந்த தன்றே.

(இ - ள்.) இங்கித நெடுங் கோதண்டம் இடங்கையில் எடுத்து-இனிய நெடிய வில்லை இடக்கையிலெடுத்து, நாரசிங்க வெங்கணை தொட்டு - கொடிய நாரசிங்கக் கணையைப் பூட்டி, ஆகம் திருக இடத்தாள் முன்செல்ல - தனது உடல் திருகவும் இடக்கால் முன்னே செல்லவும், ஐயன் - இறைவன், அங்குலி இரண்டால் செவி உற வலித்து விட்டான்-இரண்டு விரல்களால் செவி வரையிலும் இழுத்து விட்டான்; மங்குலின் முழங்கும் வேழ மத்தகம் கிழிந்தது - (அக்கணையினால்) முகில் போல முழங்கிவந்த அவ்வியானையின் மத்தகம் பிளந்தது.

இங்கிதம் - இனிமை; குறிப்புமாம். இடங்கை, மெலித்தல் விகாரம். முன் இடத்தாள் செல்ல என்றமையால் வலத்தாள் மண்டலித்தலுங் கொள்க; இது பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்னும் வில்லோர் நிலைகளுள் ஆலீடம் எனப்படும். அங்குலி - விரல். விரைவு தோன்ற 'விட்டான், கிழிந்தது' என்றார். அன்று, ஏ அசைகள். (௩௰)

கொண்டலி னலறிச் சீறி வீழ்ந்தது கொடிய வேழம்
பிண்டது பாருஞ் சேடன் சென்னியும் பிளந்த தண்டம்
விண்டது போலு மென்னத் துண்ணென வெருவிப் போன
பண்டைய தருக்கும் வீறும் படைத்தன திசைமால் யானை.

(இ - ள்.) கொடிய வேழம் கொண்டலின் அலறிச்சீறி வீழ்ந்தது - கொடிய அக்களிறானது முகில்போலக் கதறிச்சீறி நிலத்தில் விழுந்தது; பாரும் பிண்டது - (அதைப் பொறுக்கலாற்றாது) புவியும் பிளவுபட்டது; சேடன் சென்னியும் பிளந்தது- அனந்தனுடைய ஆயிர முடிகளும் பிளந்தன; அண்டம் விண்டது போலும் என்ன - அண்டம் வெடித்ததுபோலு மென்று, துண்ணென வெருவிப்போன - துணுக்குற்று அஞ்சியோடிய, திசைமால் யானை - பெரிய திசையானைகள், பண்டைய தருக்கும் வீறும் படைத்தன - பழைய செருக்கையும் இறுமாப்பையும் பெற்றன.

பிளந்தது, சாதியொருமை. திசை யானைகள் வெருவிப் போயின, பின்பு இவ்வேழம் வீழ்ந்தமை கண்டு தருக்கும் வீறும் படைத்தன எனவிரிக்க; போன என்பதைப் பெயரெச்சமாக்கி, போகிய தருக்கும் வீறும் என்னலுமாம். (ரு௧)

புதைபடக் கரித்தோல் போர்த்த புண்ணிய மூர்த்தி தாளால்
உதைபடக் கிடந்த கூற்ற மொத்தது மத்த யானை
சுதைபடு மதிக்கோ வேந்தன் றொழுகுலச் சிறுவ னொத்தான்
பதைபடு மமணர் கால படரெனப் படரிற் பட்டார்.

(இ - ள்.) மத்த யானை - (அங்ஙனம் வீழ்ந்த) மத மயக்கத்தையுடைய யானையானது, புதைபடக் கரித்தோல் போர்த்த புண்ணியமூர்த்தி தாளால் உதைபடக் கிடந்த கூற்றம் ஒத்தது - (உடல்) மறைய யானைத்தோலைப் போர்த்தருளிய அறவடிவினனாகிய இறைவன் திருவடியால் உதைபடுதலாற் கீழே வீழ்ந்து கிடந்த கூற்றுவனை ஒத்தது; சுதைபடு மதிக் கோவேந்தன் - அமிழ்தம் பொருந்திய திங்களின் மரபில் வந்த மன்னனாகிய விக்கிரம பாண்டியன், தொழுகுலச் சிறுவன் ஒத்தான் - சிவபெருமானை அடைக்கலம் புக்க அழகிய அந்தணச் சிறுவனாகிய மார்க்கண்டனை ஒத்தான்; பதைபடும் அமணர் காலபடர் எனப் படரில் பட்டார் - (யானை இறந்தது கண்டு) பதைக்கின்ற சமணர்கள் எமபடரைப்போலத் துன்பத்தி லழுந்தினார்கள்.

யானையை உரித்ததும் கூற்றினை உதைத்ததும் போல்வன வெல்லாம் இறைவனுடைய அருட் செயல்களென்பது தோன்ற 'புண்ணிய மூர்த்தி' என்றார். கோவேந்தன் - பேரரசன்; "கோவேந்தன் றேவி" எனச் சிலப்பதிகாரத்துள் வருதல்காண்க. தொழுகுலச் சிறுவன் - தொழுகின்ற அழகிய சிறுவன், அந்தணச் சிறுவன். படர் - கிங்கரர், துன்பம். (ரு௨)

இருள்கிடந் தனைய தானை யிட்ட சிந் தூரங்கார் மூலை
இருண்முகத் தொதுங்கிச் செல்லு மிரவிசெங் கிரணம் போன்ற
திருண்முழு துண்ணக் காலை யெழுகதிர் வட்ட மன்ன
திருளினை மறைத்த கண்ட னெய்தவாய் பெய்யுஞ்* செந்நீர்.

(இ - ள்.) ஆனை இருள் கிடந்தது அனையது-(இறந்து கிடந்த) யானையானது இருள் கிடந்தாலொத்தது; இட்ட சிந்துரம்-அதன் நெற்றியில் இட்ட சிந்துரமானது,

(பா - ம்.) *வாய்ப் பெய்யும்.

கார் மாலை இருள் முகத்து ஒதுங்கிச் செல்லும் இரவி செங்கிரணம் போன்றது - கரிய மாலைக்காலத்திலுள்ள இருள் முகத்தில் ஒருபுறஞ் சாய்ந்து செல்லும் சூரியனது சிவந்த கிரணத்தை ஒத்தது; இருளினை மறைத்த கண்டன் எய்தவாய் பெய்யும் செந்நீர் - இருளை மறைத்த திருமிடற்றினையுடைய இறைவன் எய்தவாய் பொழியும் குருதியானது, இருள் முழுது உண்ண காலை எழு கதிர் வட்டம் அன்னது - இருள் முழுதையும் உண்ணுதற்குக் காலையில் எழுந்த வட்டமாகிய இளஞாயிற்றை ஒத்தது.

கிடந்தாலனையது என்பது கிடந்தனையது என்றாயிற்று. வேட்டுக்கோலம் பூண்டு வந்தமையால் 'இருளினை மறைத்த கண்டன்' என்றார். வாய் - வழி. (௩௩)

பொய்யரு மனத்தார் தேற்றும் புன்னெறி யொழுக்கம் பூண்ட
வெய்யகோன் கொடுங்கோ றன்னை வெண்மருப் பாகத் தாங்கி
மையன்மா வடிவங் கொண்டு வந்தவெங் கலியைத் தென்னன்
செய்யகோ லையன் சிங்க வாளியாய்ச் சிதைத்த தன்றே.

(இ - ள்.) பொய் அரு மனத்தார் தேற்றும் புல்நெறி ஒழுக்கம் பூண்ட - பொய் நீங்காத உள்ளத்தினையுடைய சமணர்கள் (அறநெறியெனத்) தெளிவிக்கும் மறநெறியில் ஒழுகுதலை மேற்கொண்ட, வெய்யகோன் கொடுங்கோல் தன்னை - கொடியனாகிய சோழனது கொடுங்கோலை, வெண் மருப்பாகத் தாங்கி - வெள்ளிய கொம்பாக ஏந்தி, மையல் மா வடிவம் கொண்டுவந்த வெங்கலியை - மத மயக்கத்தையுடைய யானையின் வடிவத்தைக் கொண்டுவந்த கொடிய கலியை, தென்னன் செய்யகோல் - பாண்டியனது செங்கோலானது, ஐயன் சிங்க வாளியாய்ச் சிதைத்தது - இறைவன் விடுத்தருளிய நாரசிங்கக் கணையாகி அழித்தது.

புன்னெறி - புன்மையாகிய சமணநெறி. சோழனுடைய கொடுங்கோலையும் தீச்செயலையும் பாண்டியனது செங்கோல் வென்றது என்க. சிவபெருமான் வேடுருத் தாங்கிவந்து அம்பு விடுத்து யானையைக் கொன்றதற்குப் பாண்டியனது செங்கோல் காரணமாகலின் 'செய்யகோல் சிதைத்தது' என அதன்மே லேற்றிக் கூறினார். அன்று, ஏ அசைகள். (௩௪)

உருமுவீழ்ப் புண்ட குன்றி னும்பன்மா* வம்பு தொட்ட
பெருமுழை வாயும் வாயும் பெருகின வருவிச் சோரி
கருமுகின் மானச் சேனங் கழுதுகள் பூத மொய்த்த
திருமணித் தடந்தோள் வீங்கத் தென்னவ னுவகை பூத்தான்.

(இ - ள்.) உருமு வீழ்ப்புண்ட குன்றின் உம்பல்மா - இடிவீழப்பட்ட மலையை ஒத்த யானையின், அம்பு தொட்ட பெருமுழை வாயும் வாயும் அருவிச் சோரி பெருகின - அம்பினாலே தொளைக்கப்பட்ட பெரிய முழை போன்ற இடத்தினின்றும் வாயினின்றும் அருவி போலும் குருதிகள் பெருகின; கருமுகில் மான - (அம்மலையிற்றவழும்) கரிய முகிலை ஒக்க, சேனம் கழுதுகள் பூதம் மொய்த்த - பருந்துகளும்

(பா - ம்.) *உம்பன்மான்; மால். வீங்கி.

பேய்களும் பூதங்களும் (தசையை உண்ணுதற் பொருட்டு) மொய்த்தன; திருமணித் தடம் தோள் வீங்க - வீர மகள் வசிக்கும் அழகிய பெரிய தோள்கள் வளருமாறு, தென்னவன் உவகை பூத்தான் - பாண்டியன் மகிழ் கூர்ந்தான்.

கணையால் ஏறுண்ட யானைக்கு உருமு வீழ்ந்த குன்றை உவமை கூறினர். உம்பல் - யானை. உம்பல்மா, இருபெயரொட்டு. திரு - வீரலக்குமி. (கூ௬)

ஆனையின் புண்ணீ ருண்ண வடுத்தகா ருடற்பே யென்னச்
சேனைபின் செல்லப் போந்த திணியிரு ளமணர் தம்மை
மீனவன் கண்டு சீற வேந்தவன் குறிப்பி னிற்கும்
மானவெஞ் சினவேன் மள்ளர்* வல்லைபோய் முடுக்க லுற்றார்

(இ - ள்.) ஆனையின் புண்ணீர் உண்ண அடுத்த கார் உடல்பேய் என்ன - யானையினது குருதியைப் பருகுதற்கு வந்த கரிய உடலையுடைய பேய்கள் போல, சேனை பின் செல்லப் போந்த - சோழனது சேனை பின்னே வர வந்த, திணி இருள் அமணர் தம்மை - செறிந்த இருள்போன்ற அமணரை, மீனவன் கண்டு சீற - பாண்டியன் கண்டு வெகுள, வேந்து அவன் குறிப்பில் நிற்கும் - மன்னனாகிய அவன் குறிப்பின்படி ஒழுகும், மான வெஞ்சின வேல் மள்ளர் - மானத்தையும் கொடிய சினத்தையு முடைய வேற்படை ஏந்திய வீரர்கள், வல்லைபோய் முடுக்கலுற்றார் - விரைந்து சென்று துரத்தத் தொடங்கினார்கள்.

புண்ணீர் - குருதி. பேயென்னப் போந்த அமணரென்க. வேந்தவன் - அவ்வேந்தன். (௩௯)

எடுத்தனர் கையிற் றண்ட மெறிந்தனர் மறிந்து சூழ்போய்த்
தடுத்தனர் கரகந் தூளாத் தகர்த்தனர் பீலி யோடுந்
தொடுத்தன ருடுத்த பாயைத் துணிபடக் கிழித்துக் கால்வாய்
விடுத்தனர் மானம் போக்கி விட்டனர் சில்லோர் தம்மை.

(இ - ள்.) கையில் தண்டம் எடுத்தனர் சில்லோர் தம்மை எறிந்தனர்-கையிலே தண்டத்தை எடுத்துச் சிலரை அடித்தனர்; மறிந்து சூழ்போய்த் தடுத்தனர் கரகம் தூளாத் தகர்த்தனர் - (சிலரைக்) குறுக்காக வளைந்து தடுத்து அவர் கமண்டலத்தைத் தூளாக உடைத்தனர்; தொடுத்தனர் உடுத்தபாயை பீலியோடும் துணிபடக் கிழித்து - (சிலர்) தொடுத்து உடுத்திய பாயை மயிற்றோகையோடும் துண்டாகக் கிழித்து, கால்வாய் விடுத்தனர் - காற்றின் கண்ணே பறக்க விட்டனர்; மானம் போக்கி விட்டனர் - (சிலரை) மானத்தைப் போக்கி ஓட்டினர்.

சில்லோர் தம்மை என்பதைத் தனித்தனி கூட்டுக. எடுத்தனர், தடுத்தனர், தொடுத்தனர் என்பன முற்றெச்சங்கள்; விடுத்தனர் என்பதனையும் எச்சமாக்கி

---

* (பா - ம்.) * மன்னர்.

புரைத்தலுமாம். தூளாக வென்பது ஈறுதொக்கது. பீலியோடும் தகர்த்தனர் என்றும், வாய்க்காலில் விடுத்தனர் என்றும் கூறுவாருமுளர். (கூஎ)

எறியுண்டு செய்த மாய மிழப்புண்டு சேனை யோடு
முறியுண்டு நடுக்கம் பாவ மூழ்குண்டு மாழ்கிச் சாம்பிப்
பறியுண்ட தலையர் யாரும் பழிப்புண்டு பாயுந் தாமும்
உறியுண்ட கரகத் தோடு மொதுங்குண்டு பதுங்கிப் போனார்.

(இ - ள்.) பறியுண்ட தலையர் யாரும் - மயிர் பறிக்கப்பட்ட தலையினையுடைய சமணரனைவரும், எறியுண்டு - அடிபட்டு, செய்தமாயம் இழப்புண்டு - செய்த மாயத்தை இழந்து, சேனையோடும் முறியுண்டு - படைகளோடும் முறிபட்டு, நடுக்கம் பாவம் மூழ்குண்டு மாழ்கி சாம்பி - நடுக்கத்திலும் பாவத்திலும் மூழ்கி மயங்கி வாடி, பழிப்புண்டு - பழிப்படைந்து, பாயும் தாமும் உறியுண்ட கரகத்தோடும் ஒதுங்கினர் பதுங்கிப் போனார் - பாயும் தாமும் உறியிற்பொருந்திய கமண்டலத்தோடும் ஒளித்துப் பதுங்கி ஓடினர்.

முறிதல் - நிலை கெடுதல். உறியுண்ட - உறியுட் கொண்ட. பாயும் தாமும் கரகத்தோடும் போனார் என்றது

"தானுந் தேரும் பாகனும் வந்தென் னலனுண்டான்"

என்புழிப்போலத் திணைவிரவிச் சிறப்பால் உயர்திணை முடிபேற்றது; திணைவழுவமைதி. (கூஅ)

மாதங்கந் தடிந்தட் டாலை மண்டபத் திருந்த வீரன்
பாதங்கள் கையாற் பற்றிப் பாண்டிய னிரந்து வேண்டிப்
போதங்கள் கடந்தா யென்றும் பொலியவிங் கிருத்தி யென்ன
வேதங்கட் கருத்தஞ் சொன்ன வேதிய னதற்கு நேர்ந்தான்.

(இ - ள்.) மாதங்கம் தடிந்து அட்டாலை மண்டபத்து இருந்த வீரன் பாதங்கள் - யானையைக் கொன்று அட்டாலை மண்டபத்தின்கண் நிகரின்றி இருந்த வீரனாகிய இறைவன் திருவடிகளை, பாண்டியன் கையால்பற்றி இரந்து வேண்டி-விக்கிரம பாண்டியன் தன் கைகளாற் பிடித்துக்கொண்டு குறை யிரந்து வேண்டி, போதங்கள் கடந்தாய் - பசுஞானம் பாச ஞானங்களைக் கடந்தவனே, பொலிய என்றும் இங்கு இருத்தி என்ன - விளக்கமுற எஞ்ஞான்றும் இங்கு வீற்றிருப்பாயாக என்று விண்ணப்பிக்க, வேதங்கட்கு அருத்தம் சொன்ன வேதியன் அதற்கு நேர்ந்தான் - வேதங்களுக்குப் பொருளருளிச்செய்த அந்தணன் அதற்கு இசைந்தருளினான்.

இரந்து வேண்டி இருத்தியென்ன வென்க. போதங்கள் - பாச பசு ஞானங்கள்;

"பாச ஞானத்தாலும் பசுஞானத் தாலும்
பார்ப்பரிய பரம்பரனை"

என்பது சிவஞானசித்தியார். கண்ணுவர் முதலிய முனிவர்கள் வேண்டிய காலையில் அவர்கள் தெளியுமாறு வேதங்கட்குப் பொருள்கூறிய அந்தணனாகிய சிவபெருமான் என்க. (நகூ)

பின்னுஞ்சில் வரங்க ணல்கப் பெற்றுநான் மாடக் கூடல்
மன்னுஞ்சின் மயனை வந்து வந்தித்து வருநாட் காமன்
என்னுஞ்சின் மலர்ப்பூந் தண்டா ரிராசசே கரனைப் பெற்று
மின்னுஞ்சில் வியந்தேர் வேந்தன் மேதினி புரக்கு மன்னோ.

(இ - ள்.) பின்னும் சில் வரங்கள் நல்கப் பெற்று - மீண்டும் சில வரங்கள் அருளப்பெற்று, நான்மாடக் கூடல் மன்னும் சின்மயனை வந்து வந்தித்து வருநாள் - நான்மாடக் கூடலில் வீற்றிருந்தருளும் ஞான வடிவினனாகிய சோமசுந்தரக் கடவுளைக் காலந்தோறும் வந்து வழிபட்டு வருநாளில், காமன் என்னும் - மன்மதன் என்று சொல்லப்படும், சில் மலர்ப் பூந்தண்தார் இராசசேகரனைப் பெற்று - மெல்லிய மலர்களாலாகிய பொலிவுள்ள தண்ணிய மாலையை யணிந்த இராச சேகரன் என்னும் புதல்வனைப் பெற்று, மின்னும் சில்லி அம் தேர் வேந்தன் மேதினி புரந்து வந்தான் - விளங்காநின்ற உருள்பூண்ட அழகிய தேரினையுடைய விக்கிரம பாண்டியன் புவியினைப் பாதுகாத்து வந்தான்.

அழகிற் காமனென்று சொல்லப்படும் இராச சேகரன் என்க. சின்மை ஈண்டு மென்மையை உணர்த்திற்று. சில்லி - உருள். மன், ஓ அசைகள். (சய)

வம்புளாய் மலர்ந்த வாரான் வரவிடு மத்தக் குன்றிற்
சிம்புளாய் வடிவங் கொண்ட சேவக னேவல் செய்த
அம்புளாய்த் தூணம் விள்ள வன்றவ தரித்த வாபோற்
செம்புளாய் கொடிய* நார சிங்கமா யிருந்த தன்றே.

(இ - ள்.) வம்பு உள்ளாய் மலர்ந்த ஆரான் - மணத்தைத் தனதகத்துக்கொண்டதாய் மலர்ந்த ஆத்தி மாலையை யணிந்த சோழன், வரவிடும் மத்தக் குன்றில் - வரவிட்ட மத யானையின் மேல், சிம்புளாய் வடிவம் கொண்ட சேவகன் ஏவல் செய்த அம்பு - சிம்புட் பறவையாகத் திருவுருக்கொண் டருளிய சோமசுந்தரக் கடவுள் ஏவிய அம்பு, உள்ளாய் தூணம் விள்ள அன்று அவதரித்த வாபோல் - தூணின் அகத்ததாகி அத்தூண் பிளவுபட அதினின்றும் அப்பொழுது தோன்றியவாறுபோல, செம்புள் ஆய் கொடிய நாரசிங்கமாய் இருந்தது - பெரிய திருவடியாகிய கலுழன் தியானிக்கின்ற உக்கிர நரசிங்கமாய் வெளிப்பட் டிருந்தது.

மத்தக் குன்று - மதமலை; யானை. மத்தம் - மதக்களி. சிம்புள் - எண்காற் புள்; இது வருடை யெனவும் சரபமெனவும் கூறப்படும். ஏவல் செய்த - ஏவிய;

---

* (பா - ம்.) *செம்புளாய்க் கொடிய.

மத்தக் குன்றில் ஏவிய அம்பு என்க. தூணின் உள்ளிருந்து அது பிளக்க அன்று தோன்றிய நரசிங்கத்தைப்போல இந்நரசிங்கக் கணையானது யானையின் உட்புகுந்து பிளந்து வெளிப்பட்டது என்க. செம்புள் - கலுழன். ஆய்தல் - ஈண்டுச் சிந்தித்தல். செம்புளாய்க் கொடிய என்னும் பாடத்திற்கு, கருடவடிவாய்க் கொடியினை யுடைய என்றுரைக்க. அன்று, ஏ அசைகள். திருமாலானவர் தம் அடியானாகிய பிரகலாதன் பொருட்டு, அவன் தந்தையாகிய இரணியனால் அறையப்பட்ட தூணினின்றும் தோன்றி அவனைக் கொன்றருளினன் என்பதும், இரணியனைக் கொன்ற நரசிங்கம் செருக்குற்று உலகை யழிக்கத் தொடங்கிய காலையில் சிவபெருமான் சிம்புளின் உருக்கொண்டு அதனைக் கொன்றருளினர் என்பதும் வரலாறு. சரப வடிவங்கொண்டது வீரபத்திரக் கடவுள் என நூல்கள் கூறினும் அவர் சிவ மூர்த்தங்களுள் ஒருவராகலின் அமையுமென்க. நரசிங்கம் தூணினின்றும் போந்ததனை

"நசைதிறந் திலங்கப் பொங்கி நன்றுநன் றென்ன நக்கு
விசைபிறந் துருமு வீழ்ந்த தென்னவோர் தூணின் வென்றி
இசைதிறந் தமர்ந்த கையா லெற்றினா னெற்ற லோடும்
திசைதிறந் தண்டங் கீறிச் சிரித்தது செங்கட் சீயம்"

"பிளந்தது தூணு மாங்கே பிறந்தது சீயம் பின்னை
வளர்ந்தது திசைக ளெட்டும் பகிரண்ட முதல மற்றும்
அளந்ததப் புறத்துச் செய்கை யாரறிந் தறைய கிற்பார்
கிளர்ந்தது ககன மூட்டை கிழிந்தது கீழு மேலும்"

என்னும் கம்பராமாயணச் செய்யுட்களால் அறிக. (சக)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

உலகெலா மழித்து மீளவுண் டாக்கு முருத்திரன் வீரசத் தியினிற்
சிலதரித் திறவா வவுணன்மார் பிடந்த சிங்கநா யகனை யங்கெய்தி
அலகின்மா தவஞ்செய் துரோமசன் றன்பே ரறியவோர் தீர்த்தமுண் டாக்கி
இலகுபே றடைந்தான் பிரகலா தனுநோற் றீறிலாப் பெருவா மடைந்தான்.

(இ - ள்.) உலகு எலாம் அழித்து மீள உண்டாக்கும் உருத்திரன் - எல்லாவுலகங்களையும் அழித்து அவற்றை மீளவும் படைத்தருளும் உருத்திர மூர்த்தியின், வீரசத்தியினில் சில தரித்து - வீரசத்திகளுட் சிலவற்றை அவனருளாற் பெற்று, இறவா அவுணன் மார்பு இடந்த சிங்க நாயகனை - இறவாத அவுணனாகிய இரணியனது மார்பினைப் பிளந்த நரசிம்ம மூர்த்தியை, உரோமசன் அங்கு எய்தி அலகு இல் மாதவம் செய்து - உரோமச முனிவன் அங்கே சென்று (வழிபட்டு) அளவிறந்த பெரிய தவங்களைச் செய்து, தன்பேர் அறிய ஓர் தீர்த்தம் உண்டாக்கி இலகு பேறு அடைந்தான் - தனது பெயர் விளங்க ஒரு தீர்த்தம் உண்டாக்கிப் பெரும் பேற்றினை அடைந்தான்; பிரகலாதனும் நோற்று ஈறு இலாப் பெருவரம் அடைந்தான் - பிரகலாதனும் அங்குத் தவஞ்செய்து அழியாத பெரிய வரங்களைப் பெற்றான்.

அழித்தல் - காரணத்தில் ஒடுக்குதல். படைத்தல் - காரணத்தினின்றும் தோற்றுவித்தல். "ஒடுங்கின சங்காரத்தின் வழியல்லது உற்பத்தியில்லை" ஆகலின், 'அழித்து மீளவுண்டாக்கு முருத்திரன்' என்றார். திருமால் முதலிய தேவர்களெல்லாம் தத்தம் தொழில் நடத்துவது இறைவன் சத்திகளிற் சிலவற்றைப் பெற்றேயென்பார் 'உருத்திரன் வீரசத்தியினிற் சில தரித்து' என்றார். தரித்து இடந்தவென்க. இறவா அவுணன் - இறவாதிருக்க வரங்கள் பெற்ற அவுணன்; இதனை,

"பெண்ணிற் பேரெழி லாணினி லலியினிற் பிறிதும்
உண்ணிற் கும்முயி ருள்ளதி னில்லதி னுலவான்
கண்ணிற் காண்பன கருதுவ யாவினுங் கழியான்
மண்ணிற் சாகிலன் வானினுஞ் சாகிலன் வரத்தால்"

என்பது முதலிய கம்பர் செய்யுட்களால் அறிக. நரசிங்கக் கணைக்கு நரசிங்கப் பெருமானை உவமை கூறிய ஆசிரியர் அம்மூர்த்தியினிடத்துள்ள அன்பினால் அவனை வழிபட்டார் பெற்ற பேற்றையும் கூறினர். (சஉ)

ஆகச் செய்யுள் - கூசஉஎ.

## இருபத்து மூன்றாவது

# விருத்தகுமார பாலரான படலம்

[கலிநிலைத்துறை]

தழையு லாங்கைய ரேவிய தந்திமேல் விடைமேல்
அழகர் சேவகஞ் செய்தவா றறைந்தன மவரே
கிழவ னாகிப்பின் காளையாய்க் கிஞ்சுகச் செவ்வாய்க்
குழவி யாய்விளை யாடிய கொள்கையைப் பகர்வாம்.

(இ - ள்.) தழை உலாம் கையர் ஏவிய தந்திமேல் - மயிற்றோகை பொருந்திய கையையுடைய சமணர்கள் ஏவிய யானையின்மேல், விடைமேல் அழகர் சேவகம் செய்தவாறு அறைந்தனம்-இடப ஊர்தியில் ஏறியருளும் பேரழகராகிய சோமசுந்தரக் கடவுள் சேவகஞ்செய்த திருவிளையாடலைக் கூறினோம்; அவரே - (இனி) அவ்விறைவரே, கிழவனாகி பின் காளையாய் கிஞ்சுகம் செவ்வாய்க் குழவியாய்-முதலில் விருத்தனாகியும் பின்பு குமாரனாகியும் அதன்பின் முருக்கிதழ் போன்ற சிவந்த வாயினையுடைய பாலனாகியும், விளையாடிய கொள்கையைப் பகர்வாம் - விளையாடியருளிய திருவிளையாடலைக் கூறுவாம்.

தழை - மயிற்பீலி. உலாவும் என்பது உலாம் என்றாயது. கையர் என்பதனை இரட்டுறமொழிதலாகக் கொண்டு, வஞ்சகர் என்றும் உரைத்தலமையும். முறையே குழவியாய்க் காளையாய்க் கிழவனாகும் உலகியற்கு மாறாக விளையாடினா ரென்க. (௧)

தென்னன் விக்கிர மன்புயத் திருநிலச் செல்வி
மன்னி வாழுநாண் மதுரையின் மறையவ னொருவன்
அன்ன வன்விரு பாக்கனா மவன்குடி வாழ்க்கை
மின்ன னாள்வட மீனனாள் பெயர்சுப விரதை.

(இ - ள்.) தென்னன் விக்கிரமன் புயத்து இருநிலச் செல்வி மன்னி வாழுநாள் - பாண்டியனாகிய விக்கிரமன் தோளின்கண் பெரிய நிலமகளானவள் நிலைபெற்று வாழ்கின்ற நாளில், மதுரையில் மறையவன் ஒருவன் - அம் மதுரைப் பதியில் அந்தணன் ஒருவன் இருந்தனன்; அன்னவன் விருபாக்கன் ஆம் - அவன் விருபாக்கன் என்னும் பெயருடையனாவான்; அவன் குடி வாழ்க்கை மின் அனாள் - அவன் இல் வாழ்க்கைக்குரிய மனையாள், வடமீன் அனாள் - அருந்ததி போலும் கற்பினையுடையவள்; பெயர் சுபவிரதை - அவள் பெயர் சுபவிரதை யென்பதாம்.

எற்ற பெற்றி சொற்கள் விரித்துரைக்கப்பட்டன. விருபாக்கன் - மேல் நோக்கிய விழியையுடையவன்; இது சிவபிரான் திருப்பெயர்களுள் ஒன்று. மின்ன

ளுள் - மின்னலை யொத்தவள்; கிழத்தி என்னுந்துணையாய் நின்றது. சுபவிரதை - நல்ல விரத முடையாள் என்னும் பொருள் பயப்பது. (உ)

அனையர் தங்களுக் கரும்பெறன் மகவின்றி யனந்தம்
புனித நல்லறஞ் செய்தொழி லொழுக்கமும் பூண்டு
நனைய வார்குழ லன்னைய ரெழுவர்பா னண்ணி
இனிய மாதவஞ் செய்தொரு பெண்மக வீன்றார்.

(இ - ள்.) அனையர்-அவ்விருவரும், தங்களுக்குப் பெறல் அரும்மகவு இன்றி-தமக்குப் பெறுதற்கரிய மகப்பேறு இன்மையால், அனந்தம் புனித நல் அறம் செய் தொழில்-அளவிறந்த தூய சிவபுண்ணியஞ் செய்தலாகிய தொழிலையும், ஒழுக்கமும்-சீலத்தையும், பூண்டு - மேற்கொண்டு, நனைய வார்குழல் அன்னையர் எழுவர் பால் நண்ணி - தேனினையுடைய நீண்ட கூந்தலையுடைய அன்னையராகிய சத்தமாதர் திருமுன் பெய்தி, இனிய மாதவஞ்செய்து - இனிய பெரிய தவத்தைச் செய்து, ஒரு பெண்மகவு ஈன்றார் - ஒருபெண் குழந்தையைப் பெற்றனர்.

பெறலரும் என்பது மாறி நின்றது. நெடுநாள் மகவில்லையாக அதன் பின் என்க. தொழிலும் என உம்மை விரிக்க. ஒழுக்கம் - கடவுள் வழிபாடு முதலியன. நனைய, குறிப்புப் பெயரெச்சம். சத்த மாதர்கள் - பிராமாணி, நாரர்யணி, மாயேசுரி, கௌமாரி, வாராகி, உருத்திராணி, இந்திராணி என்போர்; பிறவாறுங் கூறுவர். (௩)

பேருங் கௌரியென் றழைத்தனர் பிராயமோ ரைந்திற்
சாருங் கௌரியும் பிறவிநோய் தணிப்பதற் குறுதி
தேருஞ் சிந்தையா டந்தையை வணங்கிச் செனனம்
ஈருந் தெய்வத மந்திர மியாதென வினவ.

(இ - ள்.) பேரும் கௌரி என்று அழைத்தனர் - பெயரும் கௌரி யென்றிட்டு அழைத்தனர்; பிராயம் ஓர் ஐந்தில் சாரும் கௌரியும் - ஐந்து வயதை யடைந்த கௌரியம்மையும், பிறவிநோய் தணிப்பதற்கு உறுதி தேரும் சிந்தையாள் - பிறவிப் பிணியைப் போக்குதற்குச் சிறந்த வழியை ஆராயுஞ் சிந்தையை யுடையளாய், தந்தையை வணங்கி - தன் தந்தையாகிய விருபாக்கனை வணங்கி, இச்செனனம் ஈரும் தெய்வத மந்திரம் யாது என வினவ - இப்பிறவியை ஒழிக்கும் தெய்வத்தன்மை பொருந்திய மந்திரம் யாது என்று வினவ.

ஐந்திற் சாரும் - ஐந்தினைப் பொருந்திய. உறுதி - மேலான சாதனம் யாவென என்று பாடங்கொண்டு, தெய்வமும் மந்திரமும் யாவை யென வினவ, என்றுரைப்பாரு முளர். (௪)

அந்த ணாளனு மதிசயித் தரும்பெறன் மகட்குச்
சிந்தை யார்வமோ டிறைவிதன் மனுவினைச் செப்பத்
தந்தை பாலது தெளிந்துநாத் தழும்புறப் பயின்றாள்
முந்தை நாளருந் தவக்குறை முடித்திட வந்தாள்.

(இ - ள்.) அந்தணனும் அதிசயித்து - விருபாக்கனும் வியப்புற்று, பெறல் அரும் மகட்கு - பெறுதற்கரிய புதல்விக்கு, சிந்தை ஆர்வமோடு இறைவிதன் மனு வினைச் செப்ப - உள்ளத்தி லெழுந்த அன்புடன் பராசத்தியின் திருமந்திரத்தைக் கூற, முந்தை நாள் அருந்தவக் குறை முடித்திட வந்தாள் - முற்பிறப்பிற் செய்த அரிய தவத்தின் குறையை நிரப்புதற்கு வந்த கௌரியம்மை, தந்தைபால் அது தெளிந்து - பிதாவினிடத்தில் அதனைக் கேட்டுத் தெளிந்து, நா தழும்பு உற பயின் ருள் - நாவானது தழும்படையும்படி அதனை ஓதிவந்தாள்.

குழவிப் பருவத்திலே பிறவியை யொழிக்க வேண்டு மென்னும் பேரறிவு தோன்றினமை குறித்து அதிசயித்தான். மனு - மந்திரம். தெளிந்து - தெளியக் கேட்டுணர்ந்து; பொருளும், ஓதுமுறையும் நன்கு உணரவேண்டுமாகலின் 'தெளிந்து' என்றார். இடைவிடாது பயின்றாள் என்பார் 'நாத்தழும்புறப்பயின்றாள்' என்றார். பயிலுதல் - உருவேற்றுதல்; செபித்தல். வந்தாள், பெயர். வந்தவளாகலின் பயின்றாள் என்பது கருத்து. (ரு)

தாதை தன்றவக் கொழுந்தினுக் கிசையமா சைவ
மாத வத்தனு யாதியாச் சிரமத்தில் வழங்கும்
வேத வித்துமாய் மரபினன் மேம்படு வானெப்
போது போதுமென் றுளத்தொடு புகன்றுகொண் டிருந்தான்.

(இ - ள்.) தாதை - தந்தையானவன், தன் தவக்கொழுந்தினுக்கு இசைய - தனது தவக்கொழுந்தாகிய புதல்விக்குப் பொருந்த, மாசைவ மாதவத்தனாய் - பெருமை பொருந்திய சைவநெறி நின்ற பெரிய தவத்தினையுடையனாய், ஆதி ஆச சிரமத்தில் வழங்கும் வேத வித்துமாய் - முதல் நிலையாகிய பிரமசரிய நெறியில் ஒழுகும் வேத வித்துமாகி, மரபினால் மேம்படுவான் - மரபினாலு முயர்ந்த ஒருவன், எப்போது போதும் என்று - எப்பொழுது (மணவாளனாக) வருவான் என்று, உளத்தொடு புகன்று கொண்டு இருந்தான் - மனத்துடன் கூறிக்கொண் டிருந்தான்.

மாசைவம் - சைவத்தின் ஓர் வகையாகிய மகாசைவம் என்னலுமாம். ஆதி ஆச்சிரமம் - நான்கு நிலைகளுள் முதலது; பிரமசரியம். வேதவித்து - வேதங்களை யறிந்தவன். மரபு - குடிப்பிறப்பு; கோத்திரம் முதலியவுமாம். போதும் - வருவான்; புகுதும் என்பதன் மரூஉ. இடைவிடாது சிந்தித்துக் கொண்டிருந்தான் என்பதனை இலக்கணை வகையால் 'உளத்தொடு புகன்றுகொண் டிருந்தான்' என்றார். (சு)

பருவ நாவிரண் டாகமேற் கடிமணப் பருவம்
வருவ தாகவங் கொருபகல் வைணவப் படிவப்
பிரம சாரியாய்க் கடைதொறும் பிச்சைபுக் குண்பான்
ஒருவன் வந்தனன் பலிக்கவ ணயற்புலத்* துள்ளான்.

(இ - ள்) பருவம் நாலிரண்டு ஆக (புதல்விக்கு) எட்டு வயது ஆக, மேல் கடிமணப் பருவம் வருவது ஆக - மேலே திருமணப் பருவம் வராநிற்க, ஒரு பகல் -

(பா - ம்) * னயற்புலத்.

ஒருநாள், அயற் புலத்து உள்ளான் - வேற்றூரில் உள்ளவனும், வைணவப் படிவப் பிரமசாரியாய் - வைணவக் கோலமுடைய பிரமசரியனுய், கடைதொறும் பிச்சை புக்கு உண்பான் ஒருவன் - வாயில் தோறும் பலி ஏற்று உண்பவனுமாகிய ஒருவன், அவண் பலிக்கு வந்தனன் - அவ்விடத்திற் பிச்சைக்கு வந்தான்.

அங்கு-அப்பொழுதில் என்க. வைணவப் படிவ முடையனுயும் பிரமசாரியா யும் என விரித்துக் கொள்க. புக்கு - புகுந்து; ஏற்றலாகிய காரியத்தை யுணர்த் திற்று. (எ)

பிச்சை வேண்டினு னவற்குத்தன் பெண்ணினைக் கொடுப்பான்
இச்சை கூர்ந்தருந் தவத்தினல் வருந்தியீன் றெடுத்த
விச்சை வேதியன் மனையொடு சுற்றமும் வினவா
தச்ச மின்றிநீ ரெடுத்தவ னங்கையிற் பெய்தான்.

(இ - ள்.) பிச்சை வேண்டினன் அவற்கு - (அங்ஙனம் வந்து) பிச்சை கேட்ட அப்பிரமசாரிக்கு, தன் பெண்ணினைக் கொடுப்பான் இச்சை கூர்ந்து - தன் புதல்வியைக் கொடுத்தற்கு விருப்பங் கொண்டு, அருந் தவத்தினல் வருந்தி ஈன் றெடுத்த விச்சை வேதியன் - அரிய தவத்தினலே உடல் வருந்திப் பெற்றெடுத்த கற்றுவல்ல மறையவனுகிய விரூபாக்கன், மனையொடு சுற்றமும் வினவாது - மனைவி யையும் சுற்றத்தாரையும் கேளாது, அச்சம் இன்றி நீர் எடுத்து அவன் அங்கையில் பெய்தான் - அச்சமு மில்லாமல் நீரினை எடுத்து அவனுடைய அகங்கையில் வார்த் தான்.

வேண்டினன், பெயரெச்சமாயிற்று. கொடுப்பான், வினையெச்சம். புதல்வி மேலுள்ள அன்பும் தனது கல்வியறிவும் இதனைத்தடுத்தில வென்பார் 'அருந்தவத்தி னல் வருந்தி யீன்றெடுத்த விச்சைவேதியன்' என்றார். ஒரு தலையாக வினவுதற் குரியாரையும் வினவிற்றிலன் என்பார் 'மனையொடு சுற்றமும் வினவாது' என்றார். மனைவி முதலாயினர் இணங்காவிடின் யாது செய்வதென்ற அச்சமும், தன் புதல்வி எத்தகைய இன்னலுறுவளோ என்ற அச்சமும் இன்றி யென்க. எங்ஙனம் பெய் தான் என்பதனை வருஞ்செய்யுளிற் காண்க. (அ)

கலிக்கு நூபுரச் சீறடிக் கன்னிதன் விதியும்
பலிக்கு வந்தவ னல்வினைப் பகுதியுந் துரப்ப
ஒலிக்கு மந்திரச் சிரகநீ ரொழுக்கினன் முந்திச்*
சலிக்கு மன்னையுந் தமர்களுங் கேட்டுளந் தளர்வார்.

(இ - ள்.) கலிக்கும் நூபுரச் சீறடிக்கன்னிதன் விதியும் - ஒலிக்கின்ற சிலம் பினையணிந்த சிறிய அடியையுடைய கௌரியின் கன்மமும், பலிக்கு வந்தவன் நல் வினைப்பகுதியும் - பிச்சைக்கு வந்தவனது நல்வினையின் கூறும், துரப்ப - செலுத்து தலால், முந்தி - முற்பட்டு, ஒலிக்கும் மந்திரம் சிரக நீர் ஒழுக்கினன் - ஒலிக்கின்ற

(பா - ம்.) *முந்தச்

மந்திரத்தோடு கமண்டல நீரை வார்த்தான்; கேட்டு சலிக்கும் அன்னையும் தமர்களும் உளம் தளர்வார் - (அதனைக்) கேட்டு வருந்துகின்ற தாயும் உறவினரும் மனந்தளர் வாராயினர்.

கன்னிதன்விதி - இவனுக்கு மனைவியாக வேண்டு மென்னும் பிராரத்த கன்மம். நல்வினை பல திறப்படுமாகலின் 'பகுதி' என்றார். இவன் தன்வயம் இழந் தனன் என்பார் 'துரப்ப' என்றார். முந்தி - விரைந்து. மந்திரத்தோடு என விரிக்க. கன்னிகையைத் தானஞ் செய்தற்குரிய மந்திரத்துடன் தாரை வார்த்தான் என்ற வாறாயிற்று. தளர்வார், முற்றெச்சம். (கூ)

குலனு மோர்கிலன் கோத்திர மோர்கிலன் குடிமை
நலனு மோர்கில னொழுக்கமுங் கல்வியு நண்ணுந்
தலனு மோர்கிலன் கன்னியைத் தத்தஞ்செய் தானெப்
புலனு மோர்ந்தவன் விதிவழி மதியெனப் புலந்தார்.

(இ - ள்.) குலனும் ஓர்கிலன் - குலத்தையும் ஓராது, கோத்திரம் ஓர்கிலன் - கோத்திரத்தையும் ஓராது, குடிமை நலனும் ஓர்கிலன் - குடிப் பிறப்பின் மேன்மை யையும் ஓராது, ஒழுக்கமும் கல்வியும் நண்ணும் தலனும் ஓர்கிலன் - ஒழுக்கத்தையும் கல்வியையும் இருக்கும் இடத்தினையும் ஓராது, எப்புலனும் ஓர்ந்தவன் கன்னியை தத்தம் செய்தான் - எல்லா நூல்களையு மறிந்தவன் தன் புதல்வியைத் தத்தஞ்செய்து விட்டான், விதி வழிமதி எனப் புலந்தார் - யாவர்க்கும் விதியின் வழியே மதிசெல லும் என்று வாடினர்.

ஓர்கிலன் என்னும் எதிர்மறை முற்றுக்கள் எச்சமாயின; கு சாரியை, அல் எதிர்மறை இடை நிலை. ஓர்தல் ஆராய்ந்தறிதல். இவை யெல்லாம் ஆராய்தற் குரிய வாகவும் இவற்றுள் ஒன்றும் ஆராய்ந்திலன் என்றார்.

"நுண்ணிய நூல்பல கற்பினு மற்றுந்தன்
உண்மை யறிவே மிகும்"

என்பவாகலின், 'எப்புலனு மோர்ந்தவன்' என்றும், 'விதிவழி மதி' என்றும் கூறி னர். (ய)

மற்ற வன்குடி கோத்திரஞ் சூத்திர மற்றும்
உற்ற றிந்துநம் மரபினுக் கொக்குமான் மாயோன்
சொற்ற தந்திர வைணவத் தொடக்குண்டு திரியுங்
குற்ற மொன்றினி மறுப்பதென் கொடுப்பதென் றிசைந்தார்.

(இ - ள்.) அவன் குடி கோத்திரம் சூத்திரம் மற்றும் உற்று அறிந்து - அவ னுடைய குடியையும் கோத்திரத்தையும் சூத்திரத்தையும் பிறவற்றையும் பொருந்தி யறிந்து, நம் மரபினுக்கு ஒக்கும் - (இவன்குடி முதலிய வெல்லாம்) நமது மரபுக்கு ஒத்திருக்கின்றன; மாயோன் சொற்ற தந்திர வைணவத் தொடக்குண்டு திரியும் குற்றம் ஒன்று - (இவன்) திருமால் கூறிய நூலின் வழிப்பட்ட வைணவ மதக்கட்

டுண்டு ஒழுகும் குற்ற மொன்று தான் உளது; இனி மறுப்பது என் - (முன்னரே தத்தஞ் செய்தமையால்) இனி மறுப்பது எவ்வாறு, கொடுப்பது என்று இசைந்தார் - கொடுக்க வேண்டுவதே யென்று உடன்பட்டனர்.

மற்று, ஆல் அசைகள். குடி முதலியவற்றில் உம்மை விரித்துரைக்க. அறிந்து - அவனையடைந்து உசாவி யறிந்து. தந்திரம் - பாஞ்சராத்திரம், வைகானசம் என்னும் வைணவ ஆகமங்கள். ஒன்றே, கொடுப்பதே என ஏகாரங்கள் விரித்துக் கொள்க. கொடுப்பது - கொடுக்கவேண்டுவது. (கக)

தாயு மொக்கலு மொத்தபின் றாதையும் வேதத்
தாயு மெண்மணத் தாதியா மறநிலை யாற்றால்
தேயு நுண்ணிடைக் கன்னியைச் செம்பொனாற் புதைத்துக்
காயு மாரழன் முன்னரக் காளைகைக் கொடுத்தான்.

(இ - ள்.) தாயும் ஒக்கலும் ஒத்தபின்-இங்ஙனம் தாயும் சுற்றத்தாரும் இசைந்த பின்; தாதையும் - தந்தையும், வேதத்து ஆயும் எண்மணத்து - வேதத்தில் ஆராயப் பட்ட எண்வகை மணங்களுள், ஆதியாம் அறநிலை ஆற்றால் - முதற்கண் உள்ளதாகிய பிரம மண நெறியால், தேயும் நுண் இடைக் கன்னியைச் செம்பொனால் புதைத்து - மெலிகின்ற நுண்ணிய இடையையுடைய கௌரியைச் சிவந்த பொன்னாலாகிய அணிகளால் உடல் மறைய அலங்கரித்து, காயும் ஆர் அழல் முன்னர் அக் காளைகைக்கொடுத்தான்-சுடுகின்ற நிறைந்த ஓமத்தீயின்முன் அக்காளைப்பருவத்தையுடைய பிரமசாரியின் கையிற் கொடுத்தான்.

எண்மணம்-பிரமம், பிரசாபத்தியம், ஆரிடம், தெய்வம், காந்தருவம், அசுரம், இராக்கதம், பைசாசம் என்பன; இவற்றை

"மறையோர் தேஎத்து மன்ற லெட்டு"

என்று தொல்காப்பியமும்,

"அந்தண ரருமறை மன்ற லெட்டு"

என்று இறையனாரகப்பொருளும் கூறும். முதற்கண் உள்ள பிரமம் தமிழில் அறநிலை எனப்படும். பிரமமாவது பிரமசரியங் காத்தானுக்குக் கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது. பொன், அணிக்கு ஆகு பெயர். மிக அணிந்து என்பார் 'புதைத்து' என்றார். (கஉ)

தெய்வ மங்கல வரிசைகள் செய்துதான் பயந்த
மௌவ லங்குழற் கன்னியை மணமக னோடுங்
கௌவை யம்புனல் வேலிசூழ் கடிநகர் விடுத்தான்
சைவ மங்கல வேதியத் தாபத னிப்பால்.

(இ - ள்.) சைவ மங்கல வேதியத்தாபதன் - நன்மை பொருந்திய சைவதவ வொழுக்கத்தையுடைய மறையோனாகிய விரூபாக்கன், தெய்வ மங்கல வரிசைகள்

செய்து - தெய்வத் தன்மை பொருந்திய மங்கல வரிசைகள் பலவற்றைச் செய்து, தான் பயந்த மௌவல் அம் குழல் கன்னியை - தான் பெற்ற முல்லை மலர் மாலை சூடிய அழகிய கூந்தலையுடைய கன்னியை, மணமகனோடும் - மணவாளனோடும், கௌவை அம்புனல் வேலி சூழ் கடிநகர் விடுத்தான் - ஒலிக்கின்ற நீர் வேலியாகச் சூழ்ந்த காவலையுடைய நகரின்கண் செல்ல விடுத்தான்; இப்பால் - பின்.

மங்கல வரிசை - சுப சீதனம். முல்லை கற்பிற்குரியது. கௌவையம், அம் சாரியை. புனல் வேலி - நீர்வளமுடைய கழனியாகிய வேலியுமாம். நகர் விடுத் தான் - நகரிற் செல்ல விடுத்தான். மங்கல சைவத்தாபத வேதியன் என மாறுக. இப்பால் - பின்பு என்றபடி; இதனைப்பின் நிகழும் சரிதத்தோடு இயைக்க. (௧௩)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டா லெனப்பல்லா ரில்லந் தோறுஞ்
செல்லாநின் றிரந்துண்டு திரிந்தமகன் மணமகனைச் செல்வ நல்க
வல்லாளை மணந்துவரு வான்போற்றம் மனைபுகுத வன்கட் சீலப்
பொல்லாராய் வைணவத்துப் புக்கொழுகு தாய்தந்தை பொறார்க ளாகி.

(இ - ள்.) இல்லார்க்குக் கிழியீடு நேர்பட்டாலென - வறியார்க்குப் பொன் முடிப்புக் கிடைத்தாற்போல, பல்லார் இல்லந்தோறும் செல்லாநின்று இரந்து உண்டு திரிந்த மகன் - பலருடைய மனைதோறும் சென்று ஏற்றுண்டு திரிந்தமகன், மணமக னைய் - மணமகனை, செல்வம் நல்க வல்லாளை மணந்து வருவான்போல் தம் மனை புகுத - செல்வத்தை அளிக்கவல்ல திருமகளை மணஞ்செய்து வருவான்போல வந்து தமது இல்லத்தையடைய, வன்கண் சீலப் பொல்லாராய்-கொடுமையையே சீலமாகக் கொண்ட பொல்லாதவராய், வைணவத்துப் புக்கு ஒழுகு தாய் தந்தை பொறார்க ளாகி-வைணவ மதத்தை மேற்கொண்டு ஒழுகுகின்ற தாயும் தந்தையும் மனம் பொறா தவர்களாகி.

கிழியீடு - கிழியில் இடப்பட்டது; பொன் முடிப்பு. நேர்படுதல் - தானே எதிர்ப் படுதல். நேர்பட்டால் அவர் களிப்பதுபோற் களிப்புற்று என்க. திருமகளை மணந்து வருவான்போற் கௌரியை மணந்து வந்து புகவென விரிக்க. (௧௪)

வந்தமண வாட்டிசிவ சிந்தனையுஞ் சைவதவ வடிவு நோக்கி
வெந்தவுடல் போன்மனமும் வெந்தவளை வேறொதுக்கி வேண்டா ராகி
நிந்தனைசெய் தொழுகுவா ரவளையொரு நாணீத்து நீங்கி வேற்றூர்த்
தந்தமர்மங் கலங்காண்பான்* றனியேவைத் தகம்பூட்டித் தாங்கள் போனார்.

(இ - ள்.) வந்த மணவாட்டி சிவசிந்தனையும் சைவ தவவடிவும் நோக்கி - (தமது இல்லிற்கு) வந்த மணக்கோலத்தை யுடைய கௌரியின் சிவ சிந்தனையையும் சைவ தவவேடப் பொலிவையும் நோக்கி, வெந்த உடல்போல் மனமும் வெந்து -

(பா - ம்.) *காண்பார்.

(தமது) கருகிய உடலைப்போல மனமும் வெந்து, அவளை வேறு ஒதுக்கி வேண்டா ராகி நிந்தனை செய்து ஒழுகுவார் - அவளை வேறாக ஒதுக்கிவைத்துச் சிறிதும் விரும் பாராய் நிந்தித்து ஒழுகுபவர்கள், தாங்கள் ஒரு நாள் வேற்றூர் தம்தமர் மங்கலம் காண்பான் - தாம் ஒரு நாள் வேற்றூரில் நடக்கும் தம் சுற்றத்தாரின் மணத்தைக் காணுதற்கு, அவளைத் தனியே வைத்து நீத்து நீங்கி அகம் பூட்டிப் போனார் - அவ ளைத் தனியாக வைத்து விட்டு நீங்கி இல்லினைப் பூட்டிக்கொண்டு போயினர்.

மணவாட்டி - மணமகள்; மணவாளனுக்குப் பெண்பால். தவவடிவு - திருநீறு சாதனமுடைய வடிவு. சங்கு சக்கர முத்திரை பொறிக்கப்பட்டமையால் வெந்த உடம்பு. உளம் அழுக்காற்றாற் புழுங்குதலை 'வெந்து' என்றார். (கரு)

உண்மாசு கழுவுவது நீறென்றே யுபநிடத முரைப்பக் கேட்டும்
மண்மாசு படப்பூசும் வடிவுடையா ரகன்றதற்பின் மனையில் வைகும்
பெண்மாசு கழியவொரு சிவனடியார் தமைக்காணப் பெறும லின்றென்
கண்மாசு படுவதெனக் கனிந்தொழுகு தலையன்பாற் கவலை கூர்வாள்.

(இ - ள்.) நீறே உள்மாசு கழுவுவது என்று உபநிடதம் உரைப்பக்கேட்டும் - திருநீறே அகத்திலுள்ள அழுக்கைப் போக்கித் தூய்மை செய்வது என்று உபநிடதங் கூறுவதைக் கேட்டும், மண்மாசு படப்பூசும் வடிவு உடையார் அகன்றதன் பின் - மண்ணை அழுக்குண்டாகப் பூசுகின்ற வடிவினையுடைய அவர்கள் போனபின், மனை யில் வைகும் பெண் - இல்லில் இருக்கும் கௌரி, மாசு கழிய - குற்றம் ஒழியுமாறு, ஒரு சிவன் அடியார் தமைக்காணப் பெறாமல்-ஒரு சிவனடியாரைக் காணப்பெறாமல், இன்று என் கண் மாசு படுவது என - இப்பொழுது என் கண்மாசடைகின்றது என்று, கனிந்து ஒழுகு தலையன்பால் கவலை கூர்வாள் - பழுத்து ஒழுகும் தலையன் பினாற் கவலையுறுவாளாயினாள்.

உண்மாசு - ஆணவம் முதலியன. உபநிடதம் - மறைமுடி. திருநீற்றின் பெருமையை விளக்குவது பஸ்ம ஜாபால உபநிடதம் என்ப. திருநீறு மாசு போக்கு வதனையும், வேதத்தாற் கூறப்படுவதனையும் திருநீற்றுப் பதிகத்தால் அறிக. மண் - திருமண்என்பது. மாசு கழிய-அநாதியே பந்தித்துள்ள பாசவழுக்கு ஒழிய; தீயா ருடன் சம்பந்தித்த குற்றம் நீங்க வென்றுமாம். ஒருவரையேனும் காணப்பெறுதல் வேண்டுமென்பார் 'ஒரு சிவனடியார்' என்றார். காணப்பெறாமல் என்றது சிவனடி யார் அங்கு வரும் வழக்க மின்மையைக் குறிக்கின்றது. காண்டற்குத் தடையில்லாத இன்றும் காணப்பெறாமல் என்பார் 'இன்று' என்றார். கண் மாசுபடுவது-கண் குரு டாகின்றது. தலையன்பு - தீவிர தரமான அன்பு. (கசு)

சிவனடியார்க் கன்பிலாச் சிந்தையே யிரும்பேவல் செய்து நாளும்
அவனடியார் திறத்தொழுகா வாக்கையே மரஞ்செவிக ளாதி யைந்தும்
பவனடியா ரிடைச்செலுத்தாப் படிவமே பாவைமறை பரவுஞ் சைவ
தவநெறியல் லாநெறியே பவநெறியென் றளியளாய்த் தளர்வாள் பின்னும்.

(இ - ள்.) சிவன் அடியார்க்கு அன்பு இலாச் சிந்தையே இரும்பு - சிவனடி யார்க்கு அன்பில்லாத மனமே இரும்பாகும், அவன் அடியார் திறத்து நாளும் ஏவல் செய்து ஒழுகா ஆக்கையே மரம் - அவ்விறைவனது அடியார் பக்கத்து எந்நாளும் பணி செய்து ஒழுகாத உடலே மரமாகும், பவன் அடியாரிடை செவி கண் ஆதி ஐந் தும் செலுத்தாப் படிவமே பாவை-அச் சிவபெருமான் அடியாரிடத்துக் காது கண் முதலிய ஐம்பொறிகளையும் செலுத்தாத வடிவமே பாவையாகும்; மறை பரவும் சைவ தவநெறி அல்லா நெறியே பவநெறி - வேதந் துதிக்கும் சைவமாகிய தவநெறி யல் லாத பிறநெறிகளே பிறவிக்கேதுவாகிய நெறிகளாம், என்று அளியளாய்த் தளர் வாள் - என்று அன்புடையளாய்த் தளர்கின்றாள்; பின்னும் - பின்னரும்.

சிந்தை இரும்பே, ஆக்கை மரமே, படிவம் பாவையே, அல்லாநெறி பவ நெறியே என ஏகாரங்களைப் பிரித்துக் கூட்டலுமாம். பவன் - சிவபெருமான். அவ நெறி என்று பாடமாயின் வீண்நெறி என்க.

"ஈசனுக்கன் பில்லா ரடியவர்க்கன் பில்லார்
எவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார்
பேசுவதென் னறிவிலாப் பிணங்களைநா மிணங்கிற்
பிறப்பினொடு மிறப்பினொடும் பிணங்கிடுவர் விடுநீ
ஆசையொடு மரனடியா ரடியாரை யடைந்திட்
டவர்கரும முன்கரும மாகச் செய்து
கூசிமொழிந் தருண்ஞானக் குறியி னின்று
கும்பிட்டுத் தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே"

என்னும் சிவஞான சித்தியார் திருவிருத்தம் இங்கு நோக்கற்பாலது. (கள)

எனைத்துயிர்க்கு முறுதியிக பரமென்ப வவைகொடுப்பா னெல்லாந் தானாய்
அனைத்துயிர்க்கு முயிராகு மரனென்ப வவனறிவார்க் கங்கம் வாக்கு
மனத்துறுமெய்ப் பத்திவழி வருமென்ப வப்பத்தி வழிநிற் பார்க்கு
வினைத்துயர்தீர்த் திடவெடுத்த வடிவென்ப தவனடியார் வேட மன்றே.

(இ - ள்.) எனைத்து உயிர்க்கும் உறுதி இகபரம் என்ப - எல்லா உயிர்களுக் கும் உறுதியாவன இம்மை யின்பமும் மறுமை யின்பமும் என்று கூறுவர்; அவை கொடுப்பான் எல்லாம் தானாய் அனைத்து உயிர்க்கும் உயிர் ஆகும் அரன் என்ப - அவற்றை அருளுபவன் எல்லாமும் தானாகி எவ்வுயிர்க்கும் உயிராயுள்ள சிவபெரு மான் என்பர்; அவன் அறிவார்க்கு அங்கம் வாக்கு மனத்து உறு மெய்ப் பத்திவழி வரும் என்ப - அவனை உணர்வார்க்கு உடலும் உரையும் உள்ளமுமாகிய இம்மூன்று கரணங்களாலும் செய்யப் படுகின்ற உண்மையாகிய பத்திநெறி உண்டாம் என்பர், அப்பத்திவழி நிற்பார்க்கு - அவ்வன்பு நெறியில் நிற்பவருக்கு, வினைத்துயர் தீர்த்திட எடுத்த வடிவு என்பது - வினைகளால் வருந் துன்பங்களைப் போக்குதற்கு எடுத்த வடிவமென்று சொல்லப்படுவது, அவன் அடியார் வேடம் அன்றே - அச்சிவபிரான் அடியார்களின் திருவேடம் அல்லவா.

வீட்டினையும் அடக்கி 'இகபரம்' என்றார். என்ப என்பனவற்றை அசையென்னலுமாம். அவனறிவார்க்கு, இரண்டனுருபு தொக்குநின்றது. அறிதலாவது எப்பொழுதும் சிந்தித்தல், இறைவன் எடுத்த வடிவெனப்படுவது என்க;

"அறிவரியான் றனையறிய வாக்கை யாக்கி
அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவுகொடுத் தருளாற்
செறிதலினுற் றிருவேடஞ் சிவனுருவே யாகும்"

என்றும்,

"தாபர சங்கமங்க ளென்றிரண் டுருவினின்று
மாபரன் பூசைகொண்டு மன்னுயிர்க் கருளைவைப்பன்"

என்றும் சிவஞானசித்தியார் கூறுவது காண்க. (கஅ)

என்னவிருந் தலமருவா ளிருக்குமிடத் தவளுள்ளத் தெண்ணி யாங்கே
தென்னவனு யிருந்தரசு செய்தபிரா னவட்கருளுஞ் செவ்வி நோக்கிக்
கன்னமுரங் கரஞ்சிரந்தோள் கண்டமுங்கண் டிகைபூண்டு கையிற் றம்போற்
பன்னெடுநாட் பழகியதோர் தனிப்பெரிய புத்தகமும் பக்கஞ் சேர்த்தி.

(இ - ள்.) என்ன இருந்து அலமருவாள் - என்று கருதியிருந்து மனஞ்சுழலுவாள்; இருக்கு மிடத்து-(இங்ஙனமாகக் கௌரி வருந்தி) இருக்கு மிடத்தில், அவள் உள்ளத்து எண்ணியாங்கே-அவள் மனத்திற் கருதியவாறே, தென்னவனாய் இருந்து அரசு செய்த பிரான்-சுந்தர பாண்டியனாய் வீற்றிருந்து ஆட்சி புரிந்த சோமசுந்தரக் கடவுள், அவட்கு அருளும் செவ்வி நோக்கி - அவளுக்கு அருள் புரியும் பருவத்தை நோக்கி, கன்னம் உரம் கரம் சிரம் தோள் கண்டமும் கண்டிகை பூண்டு - காதுகளிலும் மார்பிலும் கைகளிலும் சென்னியிலும் தோள்களிலும் கழுத்திலும் உருத்திராக்கம் அணிந்து, தம்போல் பல் நெடுநாள் பழகியது ஓர் தனிப்பெரிய புத்தகமும் - தம்மைப்போலப் பன்னெடுங்காலம் பழகியதாகிய ஓர் ஒப்பற்ற பெரிய புத்தகத்தையும், பக்கம் கையில் சேர்த்தி - பக்கத்தே கையில் வைத்துக்கொண்டு.

மேற்செய்யுளிற் கூறியதைச் சுட்டி 'என்ன' என்றார். 'உண்மாசு கழுவுவது, 'சிவனடியார்க்கு' என்னுஞ் செய்யுட்களிலுள்ள 'கவலை கூர்வாள்,' 'தளர்வாள்' என்பவற்றை எச்சமாக்கி, இச்செய்யுளில் 'அலமருவாள்' என்பதைப் பெயராக்கலுமாம். எண்ணியாங்கே அருளுஞ் செவ்வி நோக்கி யென்க. கன்னம் முதலியவற்றில் எண்ணும்மை விரித்துக் கொள்க. தம்மைப்போல் அநாதியாக விருந்து தம்முடன் பயின்றதாகிய புத்தகம் என்க; இப்பொழுது கொண்ட முதுமைக் கோலத்தைக் கருதி, தம்மைப்போல் நெடுநாட் பழகியதாகத் தோற்றும் புத்தகம் எனக் கூறினர் என்னலுமாம். பக்கத்திலே கையில் வைத்துக் கொண்டு என்க. (கக)

கரிந்தநீள் கயன்முள்ளி னரையுமுது திரைகவுளுங் கனக்கு நெஞ்சுஞ்
சரிந்தகோ வணவுடையுந் தலைப்பணிப்பு முத்தரியந் தாங்கு தோளும்
புரிந்தநூல் கிடந்தலையும் புண்ணியநீ றணிமார்பும் பொலிய நீழல்
விரிந்ததோர் தனிக்குடையுந் தண்டுன்றிக் கவிழ்ந்தசையு மெய்யுந் தாங்கி.

(இ - ள்.) கரிந்த நீள்கயல் முள்ளின் நரையும் - கரிய நீண்ட கயல் மீனின் முள்ளைப் போன்ற நரையும், முதுதிரைகவுளும்-மிகவுந்திரைந்த கபோலமும், கனைக்கும் நெஞ்சும் - அடிக்கடி கனைக்கின்ற மார்பும், சரிந்த கோவண உடையும் - ஒரு புறம் சரிந்துள்ள கோவணம் போக்கிய ஆடையும், தலைப்பனிப்பும்-தலை நடுக்கமும், உத்தரியம் தாங்கு தோளும் - மேலாடை தாங்கிய தோளும், புரிந்த நூல் கிடந்து அலையும் புண்ணிய நீறு அணிமார்பும் - (முப்புரியாகச்) செய்த பூணூல் கிடந்து அசையும் புண்ணிய வடிவாகிய திருநீற்றினை அணிந்த மார்பும், நீழல் பொலிய விரிந்தது ஓர் தனிக்குடையும் - நிழல் விளங்க விரிந்ததாகிய ஓர் ஒப்பற்ற குடையும், தண்டு ஊன்றிக் கவிழ்ந்து அசையும் மெய்யும் - தண்டினை ஊன்றி அதனோடு கவிழ்ந் தசைகின்ற திருமேனியும், தாங்கி-ஆகிய இவைகளைக் கொண்டருளி.

கரிந்த நீள்கயல் - புறத்தே கருநிறமுடைய நீண்ட கயல். முள்ளின், இன் ஒப்புப்பொருட்டு. திரைகவுள், வினைத்தொகை. கனைத்தல் - இருமல். நரை முதலியவற்றைப் பொலிய என்பதனோடுமுடித்து, குடையும் மெய்யும் தாங்கி என் றுரைத்தலுமாம். (உ௰)

ஒருத்தரா யுண்டிபல பகல்கழிந்த பசியினர்போ லுயங்கி வாடி
விருத்தவே தியராய்வந் தகம்புகுதக் கண்டெழுந்து மீதூ ரன்பின்
கருத்தளாய்த் தவிசிருத்திக் கைதொழுது சிவனையிங்குக் காண வென்ன
வருத்தமா தவமுடையே னெனமுனிவர் பசித்துன்பால் வந்தே மென்றார்.

(இ - ள்.) விருத்த வேதியராய் - மூப்பினையுடைய மறையவராய், ஒருத்தராய் - தனியராய், பல பகல் உண்டி கழிந்த பசியினர்போல் - பலநாட்கள் உணவு இன்மையால் நேர்ந்த பசியினை யுடையார்போல, உயங்கி வாடி வந்து அகம்புகுத - வருந்தி வாட்டமுற்று வந்து இல்லில் நுழையா நிற்க, கண்டு எழுந்து மீதூர் அன்பின் கருத்தளாய் - (அதனைப்) பார்த்து எழுந்து மேலோங்கும் அன்பினையுடைய எண்ணமுடையவளாய், தவிசு இருத்திக் கைதொழுது - அவரை ஆசனத்தில் அமர்த்திக் கைகூப்பி வணங்கி நின்று, சிவனை இங்குகாண - சிவபெருமானை இங்குத் தரிசிக்க, என்ன வருத்தம் மாதவம் உடையேன் என - என்ன வருந்திச் செய்த பெரிய தவத்தினை உடையேன் என்று சொல்ல, முனிவர் உன்பால் பசித்து வந்தேம் என்றார் - முனிவர் உன்னிடத்திற் பசியுற்று வந்தேம் என்று கூறியருளினார்.

ஒருத்தராய் - வேறு துணை யில்லாதவராய். கழிந்த என்னும் பெயரெச்சம் காரணப்பொருட்டு. சிவனை, முன்னிலையிற் படர்க்கை வந்தது. சிவனடியாரைச் சிவன் என்று கூறுதல் மரபு; தேவரீர் என்பது போல; வைணவர்கள் பெருமாள் என்று கூறுதலுங் காண்க; உண்மையுந் தோன்ற இங்கே 'சிவனை' எனக் கூறினார். என்ன தவம் எனக. (உக)

இற்பூட்டிப் போயினா ரெமரங்க ளெனக்கெளரி யிபம்ப மேரு
விற்பூட்டிப் புரம்பொடித்த வேதியர்நின் கைதொட்டு விடுமுன் யாத்த
கொற்பூட்டு விடுந்திறந்து கடிதடிசில் சமைத்தியெனக் குமரி தாளில்
அற்பூட்டு மடவாலு மவ்வாறே யட்டில்புகுந் தடிசி லாக்கி.

(இ - ள்.) (என்ற வளவில்), கௌரி - கௌரியம்மை, எமரங்கள் இல்பூட்டிப் போயினர் என - எம்மவர் வீட்டினைப் பூட்டிச் சென்றனர் என்று கூற, மேருவில் பூட்டிப் புரம் பொடித்த வேதியர் - மேருவில்லில் (அனந்தனாகிய நாணைப்) பூட்டித் திரிபுரத்தை நீறாக்கிய சிவபெருமானாகிய அந்தணர், நின் கை தொட்டுவிடுமுன் - நினது கையாற் றொட்டு விடுதற்கு முன்னே, யாத்த கொல் பூட்டு விடும் - பந்தித்த கொல்லனாற் செய்த பூட்டு நெகிழ்ந்து விடும்; திறந்து கடிது அடிசில் சமைத்தி என்ன - கதவைத் திறந்து விரைவில் உணவு ஆக்குவாய் என்று கூற, குமரி தாளில் அன்பு ஊட்டு மடவரலும் - இறைவியின் திருவடியில் அன்பினைச் செலுத்திய கௌரியும், அவ்வாறே அட்டில் புகுந்து அடிசில் ஆக்கி - அங்ஙனமே திறந்து அடுக்களையில் நுழைந்து திருவமுது சமைத்து.

எமரங்கள், கள் என்னும் விகுதிமேல் விகுதியும் அம்சாரியையும் பெற்று முடிந்தது. விற்பூட்டி - வில்லை வளைத்து என்றுமாம். கையாற்றொடு, அங்ஙனம் தொட்டு விடுமுன் என விரிக்க. கொல் - கொற்றொழில். பூட்டு விடும் - பூட்டு யாப்பு விடும். அற்பூட்டு - அன்பினைச் செலுத்திய; அன்பு அற்பு என வலித்தது. (உஉ)

தையன்மா தவக்கொழுந்து புறம்போந்து சிரகநீர் தளிர்க்கை தாங்கி
ஐயனே யமுதுசெய வெழுந்தருளு மெனவெழுந்த வடிகள் பாதச்
செய்யதா மரைவிளக்கி யந்நீர்தன் சென்னியின்மேற் றெளித்துப் பாச
மையன்மா சிருள்கழுவி யகம்புகுவித் தாசனமேல் வைத்துப் பின்னர்.

(இ - ள்.) மாதவக் கொழுந்து தையல் - பெரியதவக் கொழுந்தாகிய கௌரி, புறம் போந்து - வெளியே வந்து, தளிர்க்கை சிரக நீர் தாங்கி - தளிர்போன்ற கையிலே கமண்டல நீரையேந்தி, ஐயனே அமுதுசெய எழுந்தருளும் என - ஐயனே திருவமுது செய்தற்கு எழுந்தருளுவீராக என்றுவேண்ட, எழுந்த அடிகள் பாதம் செய்ய தாமரை விளக்கி - அங்ஙனமே எழுந்த பெரியாரின் திருவடியாகிய செந்தாமரை மலர்களை (அக் கமண்டல நீரால்) விளக்கி, அந்நீர் தன் சென்னியின்மேல் தெளித்து - அந்த நீரைத் தனது தலையின்மீது தெளித்து, பாசம் மையல் மாசு இருள் கழுவி - பாசமாகிய மயக்கத்தை விளைவிக்கும் மல இருளைப்போக்கி, அகம் புகுவித்து ஆசன மேல்வைத்து - இல்லிற் புகுவித்துத் தவிசின்மேல் எழுந்தருளி யிருக்கச் செய்து, பின்னர் - பின்பு.

தெளித்து அங்ஙனம் தெளித்தலாற் கழுவி என்க. இருட் பாசமையல் மாசு எனக் கூட்டி, ஆணவமாகிய மயக்கத்தைச் செய்யும் அழுக்கினை என்றுரைத்தலுமாம். (உ௩)

நகைமலரிட் டருச்சித்து நல்லபரி கலந்திருத்தி நறுவீ முல்லை
முகையனைய பாலடிசில் வெள்ளிமலை யெனப்பருப்பு முதுகிற் செம்பொற்
சிகரமெனப் பல்வேறு கருணைபுறந் தழீஇக் கிடந்த சிறுகுன் றீட்ட
வகையெனநெய் யருவியெனப் படைத்தனைய சிற்றுண்டி வகையும் பெய்து.

(இ - ள்.) நகை மலர் இட்டு அருச்சித்து - விளக்கமாகிய மலர்களால் அருச்சித்து, நல்ல பரிகலம் திருத்தி - நல்ல உண்கலத்தைத் திருத்திவைத்து, நறுவீ முல்லை முகை அனையபால் அடிசில் வெள்ளி மலை என-நறு மணங்கமழும் மலர்களையுடைய முல்லையின் அரும்பு போன்ற பால் வார்த்துச் சமைத்த சோற்றை வெள்ளி மலை போலவும், பருப்பு முதுகில் செம்பொன் சிகரம் என - பருப்பினை அம்மலையின் முதுகில் உள்ள சிவந்த பொன்னாலாகிய முடிபோலவும், பல்வேறு கருனை-பலவேறு பொரிக்கறிகளை, புறம் தழீஇக் கிடந்த ஈட்டம் சிறுகுன்றின்வகை என-அம்மலையின் புறத்திற் சூழ்ந்து கிடந்த கூட்டமாகிய சிறு மலைகளின் வகை போலவும், நெய் அருவி எனப் படைத்து - நெய்யினை (அம்மலையில் ஒழுகும்) அருவி போலவும் படைத்து, சிற்றுண்டி வகையும் அனைய பெய்து - வேறு வேறு சிற்றுண்டிகளையும் அங்ஙனமே படைத்து.

பரிகலம் - உண்கலம். திருத்தி - தூய்மையுற வைத்து. நறுவீ, முல்லைக்கு அடை. பாலடிசில் - வெள்ளிய அடிசிலுமாம். அடிசிலின் மேலிட்ட பருப்பு வெள்ளி மலையின் பொன் முடிபோலவும், அடிசிலைச் சூழவிட்ட கருனைகள் வெள்ளி மலையைச் சூழ்ந்து கிடந்த குன்றுகள் போலவும், அடிசிலின் மேலிருந்து ஒழுகும் நெய் வெள்ளி மலையின் முடியிலிருந்து ஒழுகும் அருவி போலவும் இருக்குமாறு என்க; வடிவும் நிறமும் பற்றி உவமைகள் கூறினர். (உச)

செய்யவா யிடையிடையே முகமனுரை யின்னமுது செவியி லூட்டத்
தையலாள் வளைக்கையறு சுவையமுது வாயூட்டத் தளர்ந்த யாக்கை
ஐயர்தாந் திருவமுது செய்தமுதுண் டவரெனமூப் பகன்று பூவிற்
கையதே மலர்வாளிக் காளைவடி வாயிருந்தார் கன்னி காண.

(இ - ள்.) தையலாள் - கௌரியம்மையின், செய்யவாய் இடை இடையே முகமன் உரை இன் அமுது செவியில் ஊட்ட - சிவந்த வாயானது அடிக்கடி இன்மொழிகளாகிய இனிய அமுதினைச் செவியில் உண்பிக்கவும், வளைக்கை - வளையணிந்த கையானது, அறுசுவை அமுது வாய் ஊட்ட - அறுசுவையோடுங் கூடிய அமுதினை வாயில் உண்பிக்கவும், தளர்ந்த யாக்கை ஐயர் - (மூப்பினால்) தளர்ச்சியுற்ற திருமேனியையுடைய அவ்வேதியர், திருவமுது செய்து - உண்டருளி, அமுது உண்டவர் என-தேவாமுதம் உண்டவர்போல, மூப்பு அகன்று-முதுமை யொழிந்து, பூவில் கைய தே மலர் வாளிக் காளை வடிவாய்-மலர்வில்லை ஏந்திய கையினையுடைய தேன் சிந்தும் மலர்க்கணைகளையுடைய மதவேளின் வடிவினை உடையராகி, கன்னி காண இருந்தார் - கௌரி பார்க்குமாறு இருந்தனர்.

இடையிடையே அமுதம் போலும் இன்மொழிகளைக் கூறிக் கையால் அமுதூட்டினாள் என்க. கையினையுடைய காளை, வாளியையுடைய காளை எனக் கூட்டுக. மன்மதனுக்கு மலர் வில்லும் உண்டென்பதனை 'புஷ்பதந்வா' என அவனுக்கு வழங்கும் பெயரானறிக;

"பூங் குலை சிலையாக் கொண்டவர் போலும்"

என மதுரைக்கலம்பகங் கூறுதலுங் காண்க. (உரு)

பூசியவெண் ணீறுபோய்க் கலவையாய்க் கண்டிகைபோய்ப் பொன்செய் பூணுங்
காசணிபொற் குண்டலமுங் கடகமுமாய் மூப்புப்போய்க் காளை யான
தேசுருவங் கண்டுநடு நடுங்கிவளைக் கரநெரித்துத் திகைத்து வேர்த்துக்
கூசியொரு புறத்தொதுங்கி நின்றாளக் கற்புமலர்க் கொம்ப ரன்னாள்.

(இ - ள்.) பூசிய வெள்நீறு போய்க் கலவையாய் - அணிந்த வெள்ளிய திரு நீறு மாறிக் கலவைச்சாந்தாகி, கண்டிகைபோய் - உருத்திராக்கங்கள் மாறி, பொன் செய்பூணும் காசு அணி பொன் குண்டலமும் கடகமும் ஆய் - பொன்னாற் செய்த அணிகளும் மணிகளழுத்திய பொன்னாலாகிய குண்டலங்களும் கடகங்களும் ஆகி, மூப்புப் போய்க் காளை ஆன தேசு உருவம் - முதுமைமாறிக் கட்டிளமை ஆகிய ஒளி பொருந்திய உருவத்தை, அக்கற்பு மலர்க்கொம்பர் அன்னாள் கண்டு-கற்பினையுடைய பூங்கொம்பு போன்ற அக் கௌரியம்மை பார்த்து, நடுநடுங்கி வளைக்கரம் நெரித்து - நடுநடுங்கி வளையலணிந்த கைகளை நெரித்து, திகைத்து வேர்த்து - மனந்திகைத்து உடல் வெயர்த்து, கூசி ஒருபுறத்து ஒதுங்கி நின்றாள் - அஞ்சி ஒரு பக்கத்தில் ஒதுங்கி நின்றாள்.

போய் - மாறி. ஆய் என்னும் எச்சங்கள் ஆன என்னும் பெயரெச்சவினை கொண்டன. மகளிர் அச்சத்தால் கை நெரித்தல் இயல்பு. கொம்பர், போலி.　(உசு)

ஆனபொழு தருங்கடிநன் மணங்குறித்து மனையிற்றீர்ந் தயலூர் புக்க
தேனொழுகு துழாயலங்கற் றீர்த்தனுக்கன் புடையார்போற் றிரியும் வஞ்ச
மானமுடை யார்மீண்டு மனைபுகலும் பதினாறு வயதின் மேய
பானன்மணி கண்டனுதற் காப்பணிந்தோர் பசுங்குழவிப் படிவங் கொண்டான்.

(இ - ள்.) ஆனபொழுது அருங்கடி நல்மணம் குறித்து - அப்பொழுது அரிய விளக்கத்தையுடைய நல்ல மணத்தினைக் கருதி, மனையில் தீர்ந்து அயல் ஊர் புக்க - மனையை நீங்கி வேற்றூர் சென்ற, தேன் ஒழுகு துழாய் அலங்கல் தீர்த்தனுக்கு அன்பு உடையார்போல் திரியும் - தேன் வழியும் துழாய் மாலையை யணிந்த திருமாலுக்கு அன்புடையார்போல் (நடித்துத்) திரிகின்ற, வஞ்சம் மானம் உடையார் - தீய மான முடைய மாமி முதலியோர், மீண்டு மனைபுகலும் - திரும்பி வந்து இல்லிற் புக, பதினாறுவயதில் மேய பானல்மணிகண்டன் - பதினாறு வயதுடன் பொருந்தி யிருந்த நீலோற்பல மலர்போன்ற அழகிய மிடற்றினையுடைய இறைவன், நுதல் காப்பு அணிந்து ஓர் பசுங்குழவிப் படிவம் கொண்டான் - நெற்றியிலே காப்பினை அணிந்து ஓர் பச்சைக் குழவியின் வடிவத்தைக் கொண்டருளினான்.

புக்க மானமுடையார், திரியும் மானமுடையார் எனத் தனித்தனி கூட்டுக தீர்த்தன் - தூயன். திருமாலிடத்தும் உண்மை யன்புடையரல்ல ரென்பார் 'அன் புடையார்போல் திரியும்' என்றார். வஞ்சமானம் - தீய அபிமானம்; வஞ்சமும் மான மும் என்றுமாம். பானல்-குவளை. பானலும் நீலமணியும் போலும் கண்டம் என்று மாம். காப்பு - திருநீறு; பொட்டுமாம். பசுமை - இளமை மேற்று.　(உஎ)

எழுதரிய மறைச்சிலம்பு கிடந்துபுறத் தலம்பவன்ப ரிதய மென்னுஞ்
செழுமலரோ டையின்மலர்ந்து சிவானந்தத் தேன்றதும்பு தெய்வக் கஞ்சத்
தொழுதகுசிற் றடிப்பெரிய விரல்சுவைத்து மைக்கணீர் துளும்ப வாய்விட்
டழுதணையா டையிற்கிடந்தா னனைத்துயிரு மீன்றுகாத் தழிக்கு மப்பன்.

(இ - ள்.) அனைத்து உயிரும் ஈன்று காத்து அழிக்கும் அப்பன் - எல்லா உயிர்களையும் படைத்துக் காத்துத் துடைத்தருளும் ஐயன், எழுதரிய மறைச்சிலம்பு கிடந்து புறத்து அலம்ப - எழுதுதற்கரிய வேதமாகிய சிலம்புகள் புறத்திற் சூழ்ந்து கிடந்து ஒலிக்க, அன்பர் இதயம் என்னும் செழுமலர் ஓடையில் மலர்ந்து - அன்பர்களின் நெஞ்சமாகிய செழிய மலரோடையில் மலர்ந்து, சிவானந்தத்தேன் ததும்பு- சிவானந்தமாகிய தேன் ததும்பி வழியும், தெய்வக் கஞ்சம் தொழுதகு சிற்றடி-தெய்வத்தன்மை பொருந்திய தாமரை மலர்போன்ற யாவராலும் வணங்கத்தக்க சிறிய திருவடியின், பெரிய விரல் சுவைத்து - பெருவிரலை வாயில் வைத்துச் சுவைத்துக் கொண்டு, மைக்கண் நீர் துளும்ப வாய்விட்டு அழுது அணை ஆடையில் கிடந்தான் - மைதீட்டிய கண்களில் நீர் ததும்ப வாயினைத் திறந்து அழுது அணையாக விரித்த ஆடையிலே கிடந்தருளினான்.

வேதங்கள் புறத்தே ஒலித்துக் கொண்டிருக்க அன்பர்களின் அகத்தில் விளங்குகின்ற திருவடி என்னும் நயமும் தோன்றுமாறு காண்க. தாமரை போலும் அடியென்னும் உவமை இதய ஓடையில் மலர்ந்து சிவானந்தத்தேன் ததும்பும் என்னும் உருவகங்களை அங்கமாகக் கொண்டு வந்தது. காற்பெருவிரல் சுவைத்தல் குழவி யியல்பு. எவ்வுயிர்க்கும் அப்பனாகியவன் தானொரு குழவியாய்க் கிடந்தான் என அவனது திருவிளையாட்டை வியந்து கூறியவாறு. (உஅ)

தாய்விட்டுப் போனதொரு தனிக்குழவி யெனக்கலங்கித் தாங்கித் தேடி
ஆய்விட்டுப் பிரமனழ மறைகளழ வன்புடையா ளன்பிற் பட்டு
வாய்விட்டுக் கிடந்தழுத மகவினைக்கண் டணங்கனையாண் மாமி யென்னுங்
காய்விட்டு மதக்கொடியா ளிம்மகவே தெனக்கேட்டாள் கௌரி தன்னை.

(இ - ள்.) தாய் விட்டுப் போனது ஒரு தனிக்குழவி எனக் கலங்கி - தாய்கை விட்டுப் போகப்பட்டதாகிய ஒரு ஒப்பற்ற குழவியைப்போலக் கலங்கி, தாங்கித் தேடி ஆய்விட்டு பிரமன் அழ - முடியிற்றாங்கி ஆராய்ந்து தேடிப் பிரமன் (ஒருபால்) அழவும், மறைகள் அழ-வேதங்கள் (ஒருபால்) அழவும், அன்பு உடையாள் அன்பில் பட்டு - அன்புடைய கௌரியின் அன்பிலகப்பட்டு, வாய்விட்டுக் கிடந்து அழுத மகவினைக்கண்டு-வாயைத்திறந்து அணையாடையிற் கிடந்தழுகின்ற குழவியைப்பார்த்து, அணங்கு அனையாள் மாமி என்னும் காய் விட்டு மதக்கொடியாள் - திருமகளை ஒத்த கௌரியின் மாமி என்கின்ற பெருஞ் சினத்தையுடைய வைணவ மதக்கொடியவள், கௌரி தன்னை இம்மகவு எது எனக் கேட்டாள் - கௌரியை நோக்கி இக்குழவி எது என்று கேட்டாள்.

தாய்தனி விட்டுப் போனதொரு குழவி என்றுமாம். எவ்வுயிர்க்கும் தந்தையே யன்றித் தாயுமாகிய இறைவன் தாய் விட்டுப் பிரிந்த குழவிபோல் அழுதான் என்றும்,

பிரமன் முதலிய தேவர்களும் மறைகளும் தன்னைத் தேடிக்காணாது அழாநிற்கத் தான் தாயைக் காணாது அழுவான்போல் அழுதான் என்றும் இறைவனுடைய அருமையும் எளிமையும் தோன்றக் கூறிய பொருணயமும் சொன்னயமும் பாராட்டற்குரியன. கலங்கி வாய்விட்டுக் கிடந்தழுத எனக் கூட்டுக. ஆய்வு இட்டு - ஆராய்தலைப் பொருந்தி. பிரமன் ஏனைத் தேவர்க்கும் உபலக்கணம். அன்பாகிய வலையிலகப்பட்டு என்பார் 'அன்பிற் பட்டு' என்றார். மாமியென்னும் கொடியாள், காய்கின்ற கொடியாள் எனக் கூட்டுக. விட்டு விஷ்ணு என்பதன் சிதைவு. (உக)

நத்தனயன் றனக்கரிய நாயகனுக் கன்புடையா ணவில்வா டேவ
தத்தனயந் தருமனைவி யொடுபோந்து சிறுபோது தைய லாயீண்
டித்தனயன் றனைப்பார்த்துக் கோடியென வைத்தகன்றா னென்னு முன்னஞ்
சித்தநய னங்கலங்கச் சீறிமண வாட்டிதன்மேற் செற்றங் கொண்டாள்.

(இ - ள்.) நத்தன் அயன் தனக்கு அரிய நாயகனுக்கு அன்பு உடையாள் நவில்வாள் - சங்கினை ஏந்திய திருமாலுக்கும் பிரமனுக்கும் காண்டற்கரிய சிவபெருமானுக்கு அன்புடைய கௌரி கூறுவாள், தேவதத்தன் நயம் தரு மனைவியொடு போந்து - தேவதத்தனென்பான் தனக்கு இன்பந்தரும் மனைவியொடும் வந்து, தையலாய் - பெண்ணே, இத்தனயன் தனை ஈண்டு சிறுபோது பார்த்துக் கோடி என வைத்து அகன்றான் - இக்குழவியை இங்குச் சிறிது பொழுது பார்த்துக் கொள்வாயாக என்று வைத்துச் சென்றான், என்னு முன்னம் - என்று சொல்லு முன்னரே, சித்தம் நயனம் கலங்கச் சீறி மணவாட்டி தன்மேல் செற்றம் கொண்டாள் - மனமுங் கண்களுங் கலங்குமாறு சினந்து மருகியாகிய கௌரியின் மேல் மாறாச் சினங் கொண்டாள்.

நத்து-சங்கு. நவில்வாள் என்பதனைக் கூறுபவள் எனப் பெயராகக் கொள்க. யாரோ ஒருவன் என்பதற்குத் தேவதத்தன் என்று கூறும் வடநூல் வழக்குப்பற்றி ஈண்டுத் தேவதத்தன் என்று கூறிற்றுமாம். கோடி - கொள்ளுதி. என்றாள் என்னு முனம் என விரித்துரைக்க. தன் சித்தமும் கண்ணும் சினத்தாற் கலங்க என்றும், கௌரியின் சித்தமும் கண்ணும் கலங்க என்றும் இருவகையாகக் கூறுதலும் பொருந்தும். செற்றம் - வைரம்; மாறா வெகுளி. தன், அசை. (கூ0)

என்புபூண் டிடுகாட்டிற் பொடியாடு முருத்திரனுக் கிடைய றாத
அன்புபூண் டான்மகவுக் கன்புடையாய் நீயுமெமக் காகா யென்னுத்
துன்புபூண் டயர்வாளை மகவையுங்கொண் டகத்தைவிடத் துரத்தி னார்கள்
வன்புபூண் டொழுகுலவை னாவம்பூண்டு பொறையிரக்க மான நீத்தார்.

(இ - ள்.) என்பு பூண்டு இடுகாட்டில் பொடி ஆடும் உருத்திரனுக்கு - என்பினை அணிந்து புறங்காட்டிலே சாம்பலைப் பூசி ஆடுகின்ற உருத்திரனுக்கு, இடையறாத அன்பு பூண்டான் மகவுக்கு அன்பு உடையாய்-நீங்காத அன்பினை யுடையவன் மகவுக்கு அன்புடையவளே, நீயும் எமக்கு ஆகாய் என்னு-நீயும் எங்களுக்கு ஆகமாட்

டாய் என்று, வன்புபூண்டு ஒழுகு-கொடுமையை மேற்கொண்டு ஒழுகாநின்ற, வைண வம் பூண்டு - வைணவ நெறியைக் கைக்கொண்டு, பொறை இரக்கம் மானம் நீத்தார்- பொறுமையையும் கருணையையும் மானத்தையும் அறவே கைவிட்ட அவர்கள், துன்பு பூண்டு அயர்வாளை - துன்பத்தை மேற்கொண்டு சோருகின்ற கௌரியை, மகவை யும் கொண்டு அகத்தைவிடத் துரத்தினார்கள்-அக்குழவியையும் கைக்கொண்டு மனை யினின்று புறம்போக ஓட்டினார்கள்.

உருத்திரனுக்கு அன்பு பூண்டான் மகவுக்கு அன்புடையாய் என்றது அவர் கள் பொறாமை யென்னும் சிறுமைக் குணத்தைக் காட்டுகின்றது. நீயும் என்னும் உம்மை, அவர்கள் எமக்கு ஆகாதவராதலே யன்றி என்னும் பொருள் தருதலால் எச் சவும்மை. ஆகாமை - பொருந்தாமை; பகைமை. முதலில் அவள் உறுந் துன்பத்தை யும் நோக்காது, மருகி யென்றும் எண்ணாது, இளங் குழந்தையின் அழுகையையும் கருதாது துரத்தினமையால் 'பொறையிரக்க மான நீத்தார்' என்றார். ஒழுகு என்னும் பெயரெச்ச முதனிலை நீத்தார் என்பதன் விகுதியைக் கொள்ளும். (நக)

தாயிலாப் பிள்ளைமுகந் தனைநோக்கித் தெருவினிடைத் தளர்வா ளுள்ளங்
கோயிலாக் கொண்டுறையுங் கூடனா யகனைமனக் குறிப்பிற் கண்டு
வேயிலாக் கியதடந்தோட் கௌரிதிரு மந்திரத்தை விளம்ப லோடுஞ்
சேயிலாக் கிடந்தழுத குழவிவிசும் பிடைவிடைமேற் றெரியக் கண்டாள்.

(இ - ள்.) தாய் இலாப் பிள்ளை முகம்தனை நோக்கித் தெருவினிடைத் தளர் வாள் - தாயில்லாத அப்பிள்ளையின் திருமுகத்தை நோக்கித் தெருவின்கண் வருந்தும் அக்கௌரியானவள், உள்ளம் கோயிலாக் கொண்டு உறையும் கூடல் நாயகனை - தனது உள்ளத்தைக் கோயிலாகக் கொண்டு எழுந்தருளி யிருக்கும் மதுரை நாயக னாகிய சோமசுந்தரக் கடவுளை, மனக் குறிப்பில் கண்டு - மனத்தின் தியானத்தாலே தரிசித்து, வேயில் ஆக்கிய தடம் தோள் கௌரி திருமந்திரத்தை விளம்பலோடும் - மூங்கிலால் அமைத்தா லொத்த பெரிய திருத்தோள்களை யுடைய உமா தேவியின் திருமந்திரத்தை ஓதியவளவில், சேயிலாக் கிடந்து அழுத குழவி - சேய்மை யில்லை யாகக் (அண்மையிற்) கிடந்து அழுத அம்மகவு, விசும்பிடை விடைமேல் தெரியக் கண்டாள் - வானிலே இடப வூர்தியின்மேல் விளங்கத் தரிசித்தாள்.

சிவபெருமானைத் தாயிலாப் பிள்ளை என்று கூறிய நயம் ஓர்க. குறிப்பு - சிந் தனை; தியானம். ஆக்கிய - அமைத்தா லொத்த; வேய் போன்ற என்பது கருத்து. சேய்மை யில்லையாக என்பது 'சேயிலா' என்றாயிற்று. விடைமேல் மழவுரு நீத்துத் தெரிய வென்க. (நஉ)

மழவுருநீத் தடலேற்றின் வருவார்தம் மிடத்தணங்கின் மனுவை யோதிப்
பழகியபார்ப் பனமகளைப் பார்ப்பதியின் வடிவாக்கிப் பலருங் கண்டு
தொழவிடைமே லேற்றிவிசும் பாறுக மலர்மாரி சுரர்க டூற்ற
அழகரெழுந் தருளினார் களிதூங்கி யதிசயித்தா ரவனி மாக்கள்.

(இ - ள்.) மழ உரு நீத்து அடல் ஏற்றின் வருவார் - குழவி வடிவத்தை நீக்கி வெற்றி பொருந்திய இடபவூர்தியில் வருகின்றவராகிய, அழகர் - சோமசுந்தரக் கடவுள், தம் இடத்து அணங்கின் மனுவை ஓதிப்பழகிய பார்ப்பன மகளை - தமது இடப்பாகத்திலமர்ந்தருளும் உமாதேவியின் திருமந்திரத்தை உச்சரித்துக் கைவந்த கௌரியம்மையை, பார்ப்பதியின் வடிவு ஆக்கி-உமையின் சாரூபத்தை அளித்தருளி, பலரும்கண்டு தொழ - யாவருங்கண்டு வணங்க, சுரர்கள் மலர் மாரிதூற்ற - தேவர்கள் மலர் மழை பொழிய, விடைமேல் ஏற்றி - இடபவூர்தியில் ஏற்றிக்கொண்டு, விசும்பு ஆறாக எழுந்தருளினார் - வான்வழியாக எழுந்தருளினார்; அவனி மாக்கள் களிதூங்கி அதிசயித்தார் - புவியிலுள்ள மக்கள் களிப்பிலழுந்தி வியப்புற்றார்கள்.

அழகர் என்பதனை முன்னர்க்கூட்டி, வருவாராகிய அழகர் என்க. பார்ப்பதியின் வடிவு - உமையின் சாரூபம். மகளை ஏற்றி எழுந்தருளினார் என்க. (நூ)

ஆகச் செய்யுள் - கசுகூ௰.

## இருபத்து நான்காவது

# கான்மாறியாடின படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

திருத்த ராய்மது ராபுரி மேவிய சித்தரா கியசெல்வர்
விருத்த ராயிளை யவருமாய் மழவுமாய் வேடங்கொண் டடலேற்றின்
ஒருத்த ராய்விளை யாடிய வாடலை யுரைத்தன மினிமன்றுள்
நிருத்த ராயவர் மாறிநின் றுடிய நிலைசிறி துரைசெய்வாம்.

(இ - ள்.) திருத்தராய் மதுராபுரி மேவிய சித்தராகிய செல்வர் - நின்மலராய் மதுரை யம்பதியில் எழுந்தருளிய எல்லாம்வல்ல சித்தரான அருட் செல்வத்தையுடைய சோமசுந்தரக்கடவுள், விருத்தராய் இளையவருமாய் மழவுமாய் வேடம் கொண்டு - கிழவனுகியும் காளையாகியும் குழவியாகியும் (உள்ள) திருவேடங்களைக் கொண்டு, அடல் ஏற்றின் ஒருத்தராய் - பின்பு வெற்றியையுடைய இடபவூர்தியின்மேல் ஒருவராய் நின்று, விளையாடிய ஆடலை உரைத்தனம் - விளையாடிய திருவிளையாடலைக் கூறினும்; இனி மன்றுள் நிருத்தராயவர் மாறிநின்று ஆடியநிலை சிறிது உரை செய்வாம் - இனி வெள்ளியம்பலத்தில் நிருத்தராகிய பெருமான் கான்மாறியாடியருளிய திருவிளையாடலைச் சிறிது கூறுவாம்.

உம்மைகள் எச்சப் பொருளன. விருத்தர் முதலிய மூவுருவங் கொண்டவரே பின்பு ஒருத்தராயும் நின்று விளையாடினரென்க. ஆயவர், முதல் வேற்றுமைச் சொல்.

வேந்தன் மீனவன் கொடியவ*னுகிய விக்கிர மன்றன்றோள்
ஏந்து மண்பொறை யிராசசே கரன்புயத் திறக்கியைந் தருநாடன்
பூந்தண் மாமலர் வேதியன் மாதவன் புரத்தின்மேற் பொலிந்தோங்குஞ்
சாந்த நீறெனச் சண்ணித்த புண்ணியத் தனிமுத னகர்சார்ந்தான்.

(இ - ள்.) மீனம் வன் கொடியவனுகிய விக்கிரமன் வேந்தன்-கயல் எழுதிய வலிய கொடியினையுடையவனுகிய விக்கிரம பாண்டியனென்னும் மன்னன், தன் தோள் ஏந்து மண் பொறை - தனது தோளாற் சுமந்த புவிச்சுமையை, இராசசேகரன் புயத்து இறக்கி - இராச சேகரன் என்னும் புதல்வன் தோளில் இறக்கிவிட்டு, ஐந்தருநாடன் - பஞ்ச தருக்களையுடைய நாட்டையுடைய இந்திரனும், பூந்தண்மாமலர் வேதியன் - பொலிவினையுடைய தண்ணிய சிறந்த தாமரை மலரில் வசிக்கும் பிரமனும், மாதவன் புரத்தின்மேல் பொலிந்து ஓங்கும் - திருமாலுமாகிய இவர்களுடைய உலகத்திற்கு மேலே பொலிந்து ஓங்கிய, நீறு சாந்தம் என சண்ணித்த புண்ணியத் தனிமுதல் நகர் சார்ந்தான் - திருநீற்றினைச் சந்தனமாகப் பூசிய அறவடிவுடைய ஒப்பற்ற முதற்கடவுளாகிய சிவபிரான் உலகத்தை அடைந்தான்.

---

(பா - ம்.) *மீனவண் கொடியவ.

வல் மீனக்கொடியவனுகிய விக்கிரமவேந்தன் என்க. இராசசேகரன் புயத்தில் ஏந்துமாறு இறக்கி. தான் சுமை ஒழிந்தமையால் 'இறக்கி' என்றார். புரத்தின் மேற்பொலிந்தோங்கும் நகர் எனக் கூட்டுக. சண்ணித்தல் - பூசுதல்;

"மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்"

என்பது திருநாவுக்கரசர் திருவாக்கு. (உ)

கண்ண கன்புவி யிராசசே கரன்பொதுக் கடிந்துசெங் கோலோச்சி
வண்ண வெண்குடை நிழற்றுவா னுனந்த வடிவமாய்த் தனிமன்றுள்
அண்ண லாடிய திருநடத் தன்பினு லாடனூ லொழித்தேனை
எண்ணு மூவிரு பத்துமுக் கலையுங்கற் றிறைமுறை செயுநாளில்.

(இ - ள்.) இராசசேகரன் கண் அகன்புவி பொதுக்கடிந்து - இராசசேகர பாண்டியன் இடமகன்ற இந்நிலவுலகைப் பொது நீக்கி, செங்கோல் ஓச்சி வண்ணம் வெண்குடை நிழற்றுவான் - செங்கோலை நடாத்தி அழகிய வெண்கொற்றக் குடையால் நிழலைச் செய்து, ஆனந்த வடிவமாய்த் தனி மன்றுள் ஆடிய அண்ணல் திருநடத்து அன்பினல் - இன்ப வடிவமாய் ஒப்பற்ற மன்றின் கண் ஆடியருளும் இறைவனது திருநடத்தில் வைத்த பேரன்பினல், ஆடல் நூல் ஒழித்து - பரதநூலை நீக்கி, எண்ணும் ஏனை மூவிரு பத்து முக்கலையும் கற்று - எண்ணப்படும் மற்றை அறுபத்து மூன்று கலைகளையும் கற்று, இறைமுறை செயும் நாளில் - அரசியலை முறைப்படி நடாத்தி வருநாளில்.

அகன், மரூஉ. பொதுக்கடிந்து-தனக்கே உரிய தாக்கி. நிழற்றுவான்,பெயருமாம். இறைவன்புரியும் திருக்கூத்தினை த்தானும் இயற்றுதல் தகவுடைத்தன்று எனக் கருதி யொழித்தான் என்பார் 'திருநடத்தன்பினல் ஆடனூல் ஒழித்து' என்றார். (ங)

சிலம்பி வாயினூ லிழைத்திடு பந்தரிற் செங்கண்மா றொழுவைகும்
அலம்பு தெண்டிரைப் பொன்னியந் தண்டுறை யானைக்கா விறைக்கன்பு
கலந்த சிந்தையான் மூவிரு பத்துநாற் கலைகளும் பயின்றுள்ளம்
மலர்ந்த வன்கரி காற்பெரு வளத்தவன் வையகம் புரக்கின்றான்.

(இ - ள்.) சிலம்பிவாயின் நூல் இழைத்திடு பந்தரில் - சிலந்திப்பூச்சியானது வாயின் நூலாற் செய்த பந்தரின்கண், செங்கண்மால் தொழுவைகும் - சிவந்த கண்களையுடைய திருமால் வணங்க வீற்றிருக்கும், அலம்பு தெண் திரைப் பொன்னி அம் தண்துறை ஆனைக்கா இறைக்கு - ஒலிக்கின்ற தெள்ளிய அலைகளையுடைய காவிரியாற்றின் அழகிய தண்ணிய நீர்த்துறையையுடைய திருவானைக்காவுடைய செல்வருக்கு, அன்பு கலந்த சிந்தையான் - அன்பு கலந்த உள்ள முடையவனும், மூவிரு பத்து நால்கலைகளும் பயின்று உள்ளம் மலர்ந்தவன் - அறுபத்து நான்குகலைகளையும் கற்று அறிவு விரிந்தவனும் ஆகிய, கரிகால் பெருவளத்தவன் - கரிகாற் பெருவளத்தானென்னும் சோழமன்னன், வையகம் புரக்கின்றான் - நிலவுலகை ஆண்டு வருவானயினன்.

ஆனைக்கா - யானை பூசித்த காவாகிய பதி. யானை பூசித்ததும், சிலம்பி வாயி னூலாற் பந்தரிட்டு வழிபட்டதுமாகிய வரலாறுகளைப் பெரியபுராணத்திலுள்ள கோச்செங்கட்சோழர்புராணத்தாலறிக. கரிகாற்பெருவளத்தான் உருவப்பஃறேர் இளஞ்சேட் சென்னியின் புதல்வன்; போர் குறித்து வடதிசைச் சென்று, இமயமலை குறுக்கிட்டதென்று சினந்து அதனைச் செண்டாலடித்த பெருவீரன்; காடுகெடுத்து நாடாக்கியும், காவிரிக்குக் கரையிடுவித்தும், நீர் நிலைகளைப் பெருக்கியும் நாட்டினை வளஞ்செய்வித்தவன்; பொருநராற்றுப்படை, பட்டினப்பாலை முதலிய பாட்டுகட் குத் தலைவன்; பட்டினப்பாலைபாடிய உருத்திரங்கண்ணனார் என்ற புலவர்க்குப் பதி னாறு நூறாயிரம் பொன் பரிசில் கொடுத்தவன்; மற்றும் இவன் பெருமைகளைப் பட் டினப்பாலை முதலியவற்றா னறிக. (ச)

பொன்னி நாடவன் வாயிலுள் ளானொரு புலவன்வந் தலர்வேம்பின்
கன்னி நாடனைக் கண்டுமுன் பரவுவான் கனைகழற் கரிகாலெம்
மன்ன வற்கறு பத்துநாற் கலைகளும் வரும்வரா தனக்கொன்று
தென்ன ரேறனை யாயது பரதநூ றெரிந்திலை யெனச் சொன்னான்.

(இ - ள்.) பொன்னி நாடவன் வாயில் உள்ளான் ஒரு புலவன் வந்து-காவிரி நாட்டையுடைய அக்கரிகாற் சோழனது வாயிலி னுள்ளவனாகிய ஒரு புலவன் வந்து, அலர் வேம்பின் கன்னிநாடனைக் கண்டு முன் பரவுவான் - அலர்ந்த வேப்ப மலர் மாலையை யணிந்த பாண்டி நாடனாகிய இராசசேகரனைக் கண்டு முன்னின்று துதிக் கின்றவன், தென்னர் ஏறு அனையாய் - பாண்டியருள் ஆண் சிங்கம் போன்றவனே, கனைகழல் கரிகால் எம்மன்னவற்கு அறுபத்துநால் கலைகளும் வரும் - ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த கரிகாலன் என்னும் எம் அரசனுக்கு அறுபத்துநான்கு கலைக ளும் கைவரும்; உனக்கு ஒன்றுவராது - உனக்கு ஒரு கலைவராது; அது பரதநூல் - அது யாதெனிற் பரதநூலாகும்; தெரிந்திலை எனச் சொன்னான் - ஆதலால் நீ கலை கள் முற்றும் அறிந்திலை என்று சொன்னான்.

வாயிலுள்ளான் - அரண்மனைப் புலவன். பரவுவான், பெயர். கரிகாலன், கரி கால் வளவன் என்றிங்ஙனம் இவன் பெயர் வழங்கும்; தீயாற் கரிந்த காலுடைமை யால் இப்பெயர் போந்தது;

"சுடப்பட் டுயிருய்ந்த சோழன் மகனும்"

என்னும் பழமொழி வெண்பாவும்,

"முச்சக்கரமும்...கரிகாலன் கானெருப்புற்று"

என்னும் பத்துப்பாட்டைச்சார்ந்துள்ள வெண்பாவும் முதலியவற்றால் தீயாற்கால் கரு கினமையறிக. அதனை என் தெரிந்திலையெனச் சொன்னான் எனினும் பொருந்தும். ()

கேட்ட மீனவன் மறுபுல விஞ்சையன் கிளத்துசொல் விகன்மானம்
மூட்ட வாருல மூழ்கிய மனத்தனாய் முதுமறைச் சிரமன்றுள்
நாட்ட மூன்றுடை நாயக னாடலை நானுமா டுதற்குள்ளம்
வேட்ட தேகொலா மிதுவுமெம் பிரானருள் விதியென வதுகற்பான்.

(இ - ள்.) கேட்ட மீனவன்-அதனைக் கேட்ட பாண்டியன், மறுபுல விஞ்சையன் கிளத்து சொல் இகல் மானம் மூட்ட - வேற்றரசன் வாயிற் புலவன் கூறிய கூற்று பகைமையையும் மானத்தையும் மூள்விக்க, ஆகுலம் மூழ்கிய மனத்தனாய் - துன்பத்துள் அழுந்திய மனத்தையுடையவனாய், முதுமறைச் சிரம் மன்றுள் - பழமையாகிய வேதமுடியின் வடிவாகிய மன்றின்கண், நாட்டம் மூன்று உடை நாயகன் ஆடலை - கண்கள் மூன்றுடைய இறைவன் ஆடியருளும் திருக்கூத்தினை, நானும் ஆடுதற்கு உள்ளம் வேட்டதே - ஒன்றுக்கும் பற்றாத சிறியனாகிய யானும் ஆடுதற்கு என் உள்ளம் விரும்பிற்றேயோ, இதுவும் எம்பிரான் அருள்விதி என அது கற்பான் - இதுவும் எம் இறைவனுடைய அருளாணையே என்று கருதி அதனைக் கற்பதற்கு.

விஞ்சையன் - கல்வி வல்லோன்; புலவன். இகல்மானம் - வலிய மானமும் ஆம். மானம் - தாழ்தற்கு ஒருப்படாமை. மன்றுள் ஆடும் ஆடலை யென விரிக்க. விரும்பியதனை வியந்து 'வேட்டதே' என்றான். கொல், ஆம் அசைகள். விதி-ஆணை. கட்டளை. கற்பான், வினையெச்சம்.　　(சு)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

ஆடனூல் வரம்பு கண்டவ ராகி யவ்வழி யாடலும் பயின்ற
நாடக நடைதேர் புலவரைத் துருவி நண்ணிய வவர்க்கெலா மகிழ்ச்சி
வீடருஞ் சிறப்பா லறுவையும் பூணும் வெறுக்கையும் வெறுத்திடக் கொடுத்துப்
பாடல்வண் டரற்றுந் தாரினான் பரதப் பனுவலுங் கசடறப் பயில்வான்.

(இ - ள்.) ஆடல் நூல் வரம்பு கண்டவராகி - நாடக நூலின் எல்லையைக் கண்டவராய், அவ்வழி ஆடலும் பயின்ற நாடக நடை தேர் புலவரைத் துருவி - அந் நூலிற் கூறிய வழியே ஆடுதலிலும் பழகிய நாடக நடையிற் றேர்ச்சிபெற்ற புலவரைத்தேடி, நண்ணிய அவர்க்கு எலாம் - வந்த அப்புலவரனைவர்க்கும், மகிழ்ச்சி வீடு அருஞ் சிறப்பால் - மகிழ்ச்சி நீங்குதலில்லாத வரிசையினால், அறுவையும் பூணும் வெறுக்கையும் வெறுத்திடக் கொடுத்து - ஆடையும் அணியும் பொன்னுமாகிய வற்றை (அவர்கள்) விருப்பமொழியக் கொடுத்து, பாடல்வண்டு அரற்றும் தாரினான் - இசைபாடுதலையுடைய வண்டுகள் ஒலிக்கும் மாலையை யணிந்த பாண்டியன் (அவர்களிடம்), பரதப்பனுவலும் கசடு அறப் பயில்வான் - நாடக நூலையும் குற்றமறக் கற்கத் தொடங்கினான்.

நாடக நடை - நாடக வொழுக்கம். துருவி - ஆராய்ந்து அழைத்து. சிறப்பால் - வரிசையாக. வெறுத்திட - அவாவடங்க; பின் வேண்டுதலில்லையாக; மிக என்றுமாம்.

> "உற்றுழி யுதவியும் உறுபொருள் கொடுத்தும்
> பிற்றைநிலை முனியாது கற்றல் நன்றே"

என்பவாகலின் 'வெறுத்திடக் கொடுத்து' என்றார். மீனவனாகிய தாரினான் என்க. பனுவலும், உம்மை எச்சப்பொருட்டு.　　(எ)

பாவமோ டராகந் தாளமிம் மூன்றும் பகர்ந்திடு முறையினாற் பரதம்
ஆவயி னங்க முபாங்கமே பிரத்தி யாங்கமே யலர்முக ராகம்
ஓவறு சீர்சால் கரப்பிர சார முவமையில் சிரக்கர கருமந்
தாவறு கரகேத் திரங்கர கரணந் தானக மேசுத்த சாரி.

(இ - ள்.) பாவமோடு அராகம் தாளம் இம்மூன்றும் பகர்ந்திடும் முறையினால் பரதம் - பாவமும் அராகமும் தாளமுமாகிய இந்த மூன்றையுங் கூறும் மரபினால் (அந்நூல்) பரதமென்னும் பெயரதாம்; ஆவயின் அங்கம் உபாங்கமே பிரத்தியாங்கமே அலர் முகராகம் - அந்நூலுட் கூறப்படும் அங்கமும் உபாங்கமும் பிரத்தியாங்கமும் தன்மை மிக்க முகராகமும், ஓவு அறுசீர் சால் கரப்பிரசாரம் - நீங்காத சிறப்பு நிறைந்த கரப்பிரசாரமும், உவமை இல் சிரக்கர கருமம் - ஒப்பில்லாத சிரக்கர கருமமும், தாவு அறு கர கேத்திரம் கரகரணம் தானகமே சுத்தசாரி - கெடுதலில்லாத கரகேத்திரமும் கரகரணமும் தானகமும் சுத்த சாரியும்.

பாவம், ராகம், தாளம் என்பவற்றின் முதற் குறிப்பாகிய ப, ர, த என்னும் மூன்றெழுத்துக்களாலாயது பரதமென்னும் பெயர்; எனவே நாடகத்திற்கு இன்றியமையாதன இம்மூன்று மென்பது பெற்றாம். பொறி யுணர்வாகிய சுவையும், அது பற்றி உள்ளத்தே நிகழும் குறிப்பும், அக்குறிப்புப் புறத்தே வெளிப்பட்டுத் தோன்றும் விறல் எனப்படும் மெய்ப்பாடும் பாவம் என்பதில் அடங்கும்; எடுத்த பொருளுக் கியைந்த தன்மையைப் பாவந்தோன்ற நிகழ்த்திக் காட்டுவது பாவகம் அல்லது அவிநயம் எனப்படும். வீரச்சுவை, அச்சச்சுவை, இழிப்புச்சுவை, வியப்புச்சுவை, இன்பச் சுவை, அவலச்சுவை, நகைச்சுவை, வெகுளிச்சுவை, நடுவுநிலைச்சுவை எனச் சுவை ஒன்பது வகைப்படும். விறல் அல்லது சத்துவம் என்பது மெய்ம்மயிர் சிலிர்த்தல், கண்ணீர் வார்தல், நடுக்க மதித்தல், வியர்த்தல், தேற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு, குரற்சிதைவு எனப் பத்து வகைப்படும். வெகுண்டோன் அவிநயம், ஐயமுற்றோ னவிநயம், சோம்பினோ னவிநயம், களித்தோ னவிநயம், உவந்தோ னவிநயம், அழுக்காறுடையோ னவிநயம், இன்பமுற்றோ னவிநயம், தெய்வ முற்றோ னவிநயம், அஞ்ஞையுற்றோ னவிநயம், உடன்பட்டோ னவிநயம், உறங்கினோ னவிநயம், துயிலுணர்ந்தோ னவிநயம், செத்தோ னவிநயம், மழை பெய்யப் பட்டோ னவிநயம், பனித்தலைப்பட்டோ னவிநயம், வெயிற்றலைப்பட்டோ னவிநயம், நாணமுற்றோ னவிநயம், வருத்த முற்றோ னவிநயம், கண்ணோவுற்றோ னவிநயம், தலைநோவுற்றோ னவிநயம், அழற்றிறம்பட்டோ னவிநயம், சீதமுற்றோ னவிநயம், வெப்பமுற்றோ ன்விநயம், நஞ்சுண்டோ னவிநயம் என அவிநயம் இருபத்து நான்கு வகைப்படும்; இவற்றினியல்புகளைச் சிலப்பதிகார அரங்கேற்று காதைக்கு அடியார்க்குநல்லார் கூறிய உரையிற் காண்க. அராகம் - இசை; இது மூலாதாரந் தொடங்கி ஆளத்தி எனப்பட்டு, பின்பு இசை யென்றும் பண்ணென்றும் சொல்லப் படும்; இஃது - ஆயம், சதுரம், வட்டம், திரிகோணம் என்னும் நால்வகைப்பாலையுள் ஆயப்பாலையாய்நின்ற பதினாற் கோவையிலே செம்பாலை, படுமலைப்பாலை, செவ்வழிப் பாலை, அரும்பாலை, கோடிப்பாலை, விளரிப்பாலை, மேற்செம்பாலை எனப்பட்ட எழு பாலையினையும் இணை நரம்புதொடுத்து நிறுத்த எழுகின்ற நூற்றுமூன்று பண்கள்

முதலாயினவாகும்; இனி, பைரவி முதலாகச் சொல்லப்படும் இராகங்களுமாம்; நரம்பின் அடைவால் உரைக்கப்பட்ட ஆதியிசை பதினாயிரத்துத் தொள்ளாயிரத்துத் தொண்ணூற்றொன்று என்பர். தாளம் - சச்சபுடம் முதலான பஞ்ச தாளமும், அரை மாத்திரையுடைய ஏக தாளம் முதலாகப் பதினாறு மாத்திரையுடைய பார்வதிலோசனம் ஈறாகச் சொன்ன நாற்பத்தொரு தாளமும், ஆறன் மட்டம் எட்டன் மட்டம் என்பனவும், தாளவொரியல் தனிநிலை யொரியல் என்பனவும், ஒன்றன் பாணி முதலாக எண்கூத்துப்பாணி இறுதியாகக் கிடந்த பதினொருபாணி விகற்பங்களும், முதனடை வாரம் முதலாயினவுமாம். அங்கம் முதலாகக் கூறப்படுவன நிருத்தத்தின் பொதுவிலக்கண வகைகள்; இவை வருஞ்செய்யுளிற் கூறப்படுவனவற்றோடு சேர்ந்து முடியும். (அ)

விண்டிடாத் தேசி சாரியே நியாயம் விருத்தியே பிரவிசா ரம்பூ
மண்டல முடனா காசமண் டலமே மாசில்சுத் தக்கர ணஞ்சீர்
கண்டவுற் புலித கரணமே யங்க காரமே யிரேசித மென்னக்
கொண்டநா லைந்து பேதமுங் கற்றுக் கோதறப் பயின்றபி னவற்றுள்.

(இ - ள்.) விண்டிடாத் தேசிசாரியே - நீங்காத தேசிசாரியும், நியாயம் விருத்தியே பிரவிசாரம் - நியாயமும் விருத்தியும் பிரவிசாரமும், பூ மண்டலமுடன் ஆகாச மண்டலம் - பூ மண்டலமும் ஆகாச மண்டலமும், மாசுஇல் சுத்தக் கரணம் - குற்றமில்லாத சுத்தக்கரணமும், சீர்கண்ட உற்புலித கரணமே அங்ககாரமே இரேசிதம் - சிறப்பமைந்த உற்புலித கரணமும் அங்ககாரமும் இரேசிதமும், என்னக் கொண்ட - என்று சொல்லப்பட்ட, நாலைந்து பேதமும் கற்றுக் கோதறப் பயின்ற பின்-இருபது பேதங்களையுங் கற்றுக் குற்றமறப் பழகிய பின்னர், அவற்றுள் - அவைகளுள்.

எண்ணேகாரம் இடையிட்டு வந்தன. (க)

வருத்தமின் மனோபா வாதியா மெட்டு வகைநிருத் தங்களிற் சாரி
நிருத்தமா கியதாண் டவமக மார்க்க நிகழ்த்திடுந் தேசியே வடுகே
அருத்தமா கியசிங் களமென மூன்று மதுநிலை யாறுமூ விரண்டு
திருத்தமாம் பதமுந் திகழிரே காதி செப்பிய வங்கமீ ரெட்டும்.

(இ - ள்.) வருத்தம் இல் மனோபாவ ஆதியாம் எட்டுவகை நிருத்தங்களில் - வருத்தமில்லாத மனோபாவ முதலிய எண்வகை நிருத்தங்களில், சாரி நிருத்தமாகிய தாண்டவம் அகமார்க்கம் ஆம் - சாரி நிருத்தமாகிய தாண்டவம் அகமார்க்க மாகும், நிகழ்த்திடும் தேசியே வடுகே அருத்தமாகிய சிங்களம் என மூன்றும் - (இன்னும் அவ் வகமார்க்கம்) கூறப்படும் தேசியும் வடுகும் பொருளமைந்த சிங்களமும் என மூன்று வகைப்படும்; அது நிலை ஆறும் - அவ்வக மார்க்கத்திற்குரிய அறுவகை நிலையும், மூவிரண்டு திருத்தம் ஆம் பதமும் - மூன்றும் இரண்டுஞ் சேர்ந்த திருத்தமாகிய ஐந்து பதமும், திகழ் இரேகை ஆதி செப்பிய அங்கம் ஈரெட்டும் - விளங்காநின்ற இரேகை முதலாகச் சொல்லிய அங்கங்கள் பதினாறும்.

அகக் [illegible] த்தின் வகையாகிய சொக்கம், மெய், அவிநயம், நாடகம் என்னும் நான்கனுள் மெய்க்கூத்தானது தேசி, வடுகு, சிங்களம் என மூவகைப்படும் என்பர். அறுவகை நிலை - வைணவம், சமநிலை, வைசாகம், மண்டலம், ஆலீடம், பிரத்தியாலீடம் என்பன. மூவிரண்டு என்பதனை மூன்றும் இரண்டும் எனக் கொள்க. பதம் - பாதம்; ஐவகைப் பாதம் - சமநிலை, உற்கடிதம், சஞ்சாரம், காஞ்சிதம், குஞ்சிதம் என்பன. அங்கம் - அங்கக் கிரியை; அங்கக் கிரியை பதினாறு - சரிகை, புரிகை, சமகலி, திரிகை, ஊர்த்துவகலிகை, பிருட்டகம், அர்த்த பிருட்டகம், சுவத்திகம், உல்லோலம், குர்த்தனம், வேட்டனம், உபவேட்டனம், தான பதப்பிராயவிருத்தம், உக்ஷேபணம், அவக்ஷேபணம், நிகுஞ்சனம் என்பன. 'திகழிரேகாதி' என்பதனை, திகழ் சரிகாதி எனப் பாடங் கொள்ளுதல் பொருத்தம். (௰)

நால்வகைத் தாகுங் கரணமு மேலோர் நாட்டிய விருவகைக் கரமுங்
கால்வகை புரிகை முதற்பதி னாறுங் கவான்மனை யாதியா மிரண்டும்
பாலது மடிப்பு வகையெழு நான்கும் பழிப்பறு சுத்தசா ரியெனும்
ஏ லுறு பூசா ரிகள்பதி னாறு மித்துணைக் ககனசா ரிகளும்.

(இ - ள்.) நால் வகைத்து ஆகும் கரணமும் - நான்கு வகைப்பட்டதாகிய கரணமும், மேலோர் நாட்டிய இருவகைக் கரமும் - மேலோர் நிலை பெறுத்திய இரு வகைக் கைகளும், கால்வகை புரிகை முதல் பதினாறும் - புரிகை முதலிய காலின் செய்கை பதினாறும், கவான்மனை ஆதியாம் இரண்டும் - மனை முதலிய தொடையின் றொழில் இரண்டும், பாலது மடிப்புவகை எழு நான்கும் - பக்கங்களின் தொழிலாகிய மடிப்புவகை இருபத்தெட்டும், பழிப்பு அறு சுத்தசாரி எனும் ஏல் உறு பூசாரிகள் பதினாறும்-குற்ற மில்லாத சுத்தசாரி என்னப்படும் பொருந்திய பூசாரிகள் பதினாறும், இத்துணைக் ககன சாரிகளும் - பதினாறு ககனசாரிகளும்.

கரணம் - கைத்தொழில்; இது வட்டணை எனப்படும். வட்டணை நான்கு - அபவேட்டிதம், உபவேட்டிதம், வியாவர்த்திதம், பரிவர்த்திதம் என்பன;

"தற்சனி முதலாப் பிடித்த லகம்வரின்
அத்தொழி லாகும் அபவேட் டிதமே"

"[illegible] றம்வர
உய்த்த லாகும் உபவேட் டிதமே"

"கனிட்ட முதலாப் பிடித்த லகம்வர
விடுத்த லாகும் வியாவர்த் திதமே"

"கனிட்ட முதலா விடுத்தல் புறம்வரப்
படுத்த லாகும் பரிவர்த் திதமே"

என்பவற்றால் அவற்றி னிலக்கணங்களையறிக. இருவகைக்கரம்-இணையாவினைக்கை, இணைக்கை என்பன; இவற்றுள் முன்னது ஒற்றைக்கை யெனவும், பிண்டி யெனவும் பெயர்பெறும்; பின்னது இரட்டைக்கை யெனவும், பிணையல் எனவும் பெயர் பெறும்; ஒற்றைக்கை - பதாகை, திரிபதாகை, கத்தரிகை, தூபம், அராளம், இளம்

பிறை, சுகதுண்டம், முட்டி, கடகம், சூசி, கமலகோசிகம், காங்கூலம், கபித்தம், விற்பிடி, குடங்கை, அலாபத்திரம், பிரமரம், தாம்பிரசூடம், பசாசம், முகுளம், பிண்டி, தெரிநிலை, மெய்ந்நிலை, உன்னம், மண்டலம், சதுரம், மான்றலை, சங்கு, வண்டு, இலதை, கபோதம், மகரமுகம், வலம்புரி என முப்பத்து மூன்று வகைப்படும்; இரட்டைக்கை-அஞ்சலி, புட்பாஞ்சலி, பதுமாஞ்சலி, கபோதம், கற்கடகம், சுவத்திகம், கடகாவருத்தம், நிடதம், தோரம், உற்சங்கம், புட்பபுடம், மகரம், சயந்தம், அபயவத்தம், வருத்தமானம் எனப் பதினைந்து வகைப்படும்; பிண்டியும், பிணையலும் அன்றி, எழிற்கை, தொழிற்கை என்ற இரண்டு வகையும் உண்டு. புரிகை என்பது அங்கக்கிரியை பதினாறனுள் ஒன்றாகக் காணப்படுகிறது. வேறு நூலிலுள்ளபடி கால்வகை காட்டுதும்: தேசிக்குரிய கால்-கீற்று, கடிசரி, மண்டலம், வர்த்தனை, கரணம், ஆலீடம், குஞ்சிப்பு, கட்டுப் புரியம், களியம், உள்ளாளம், கட்டுதல், கம்பித்தல், ஊர்தல், நடுக்கல், வாங்குதல், அப்புதல், அனுக்குதல், வாசிப்பு, குத்துதல், நெளிதல், மாறுகால், இட்டுப் புகுதல், சுற்றி வாங்குதல், உடற்புரிவு என இருபத்துநான்கு வகைப்படும்; வடுகிற்குரிய கால்கள் - சுற்றுதல், எறிதல், உடைத்தல், ஒட்டுதல், கட்டுதல், வெட்டுதல், போக்கல், நீக்கல், முறுக்கல், அனுக்கல், வீசல், குடுப்புக்கால், கத்தரிகைக்கால், கூட்டுதல் எனப் பதினான்கு வகைப்படும். கவான்-தொடையின் றொழில். மடிப்பு-பக்கங்களின் அசைவுத் தொழில். முன் அங்கம் முதலாக எண்ணப்பட்ட இருபது பேதங்களும், இச்செய்யுளிற் கூறிய பூசாரி, ககனசாரிகளும், மேல்வரும் தேசிசாரி முதலாயினவும் இன்னவென நன்கு விளங்கவில்லை. (கக)

ஏற்றதிக் கிராந்த மாதியா முப்பத் திருவகைத் தேசிசா ரிகளுங்
காற்றினுங் கடுந்தேர்ச் சக்கர முதலாங் ககனசா ரிகைகளே ழைந்துஞ்
சாற்றுவித் துவற்பி ராந்தமா தியவாஞ் சாரிபத் தொன்பது மாகப்
போற்றிவை யனைத்து முட்படப் புட்ப புடத்திலக் கணமுதற் பொருள்கள்.

(இ - ள்.) ஏற்ற திக்கிராந்தம் ஆதியாம் முப்பத்து இருவகைத் தேசிசாரிகளும் - பொருந்திய திக்கிராந்தம் முதலாகிய முப்பத்திரண்டு வகைப்பட்ட தேசிசாரிகளும், காற்றினும் கடுந்தேர்ச் சக்கரம் முதலாம் ககன சாரிகைகள் ஏழைந்தும்- காற்றினும் வேகத்தையுடைய தேர்ச் சக்கரம் முதலாகிய ககன சாரிகைகள் முப்பத்தைந்தும், சாற்று வித்துவற்பிராந்தம் ஆதிய ஆம் சாரி பத்தொன்பதும் ஆக-சொல்லாநின்ற வித்துவற்பிராந்தம் முதலாகிய சாரி பத்தொன்பதுமாக, போற்று இவை அனைத்தும் உட்பட - சொல்லப்பட்ட இவை யனைத்தும் அகப்பட, புட்பபுடத்து இலக்கணம் முதல் பொருள்கள் - புட்ப புடத்தின் இலக்கணங்களாகிய முதன்மையுள்ள பொருள்களாம். (கஉ)

ஆசவாத் தியமுன் பொருண்முதற் களாச மாதியாம் பாடபே தங்கள்
பேசிய பதினொ ன்றொன்பதும் படக பேதமொன் றொழிந்தநா லைந்தும்
மாசறு மளக மாதியாம் பாட வகைகளு லேழுமற் றவற்றிற்
பூசல்வார்த் திகந்தொட் டைவகைச் சச்ச புடாதியாந் தாளமாத் திரையும்.

(இ - ள்.) ஆசவாத்தியம் முன் பொருள் முதல்களாசம் ஆதியாம் பாடபேதங்கள் பேசிய பதினறு ஒன்பதும் - ஆச 'வாத்தியமும் முன் பொருளும் முதன்மையாகிய களாசமும் முதலாகிய பாட பேதங்கள் கூறப்பட்ட இருபத்தைந்தும், படக பேதம் ஒன்று ஒழிந்த நாலைந்தும் - படக பேதங்கள் பத்தொன்பதும், மாசு அறும் அளகம் ஆதியாம் பாட வகைகள் நாலேழும் - குற்றமற்ற அளகம் முதலாகிய பாட வகைகள் இருபத்தெட்டும், அவற்றில் - அவைகளுள், பூசல் வார்த்திகம் தொட்டு ஐவகைச் சச்சபுட ஆதியாம் தாள மாத்திரையும் - பூசல் வார்த்திகந் தொட்டு ஐந்து வகைப்பட்ட சச்சபுட முதலாகிய தாள மாத்திரைகளும்.

இதிற் கூறப்பட்டன வாத்திய வகைகள் போலும். (கங)

கிளந்தமாத் திரையின் கதிகளுஞ் சொல்லுங் கீதமும் பாடமு மெழுத்தும்
வளந்தரு மணிபக் தாதிகீ தத்தின் வகுத்தகட் டளையெழு நான்கும்
அளந்திடு சரளை யாதிகட் டளையே ழைந்துநன் கமைந்தபா வாதி
விளம்பிய மூன்று கலப்பு மீருக விளைத்திடுங் கூத்தக மார்க்கம்.

(இ - ள்.) கிளந்த மாத்திரையின் கதிகளும் - கூறப்பட்ட மாத்திரையின் கதிகளும், சொல்லும் கீதமும் பாடமும் எழுத்தும் - சொற்களும் கீதங்களும் பாடங்களும் எழுத்துக்களும், வளம்தரு மணி பந்தம் ஆதி கீதத்தின் வகுத்த கட்டளை எழு நான்கும் - வளப்பத்தைத் தருகின்ற மணிபந்தம் முதலாகக் கீதத்தின்கண் வகுத்த கட்டளைகள் இருபத்தெட்டும், அளந்திடு சரளை ஆதி கட்டளை ஏழைந்தும் - அளவறுக்கப்பட்ட சரளை முதலிய கட்டளைகள் முப்பத்தைந்தும், நன்கு அமைந்த பாவ ஆதி விளம்பிய மூன்று கலப்பும் ஈருக விளைத்திடும் கூத்து அகமார்க்கம் - நன்ருக அமைந்த பாவமும் தாளமும் அராகமுமாகப் பரதநூலுட் கூறப்பட்ட இம்மூன்றும் தம்முட் பிளவுபடாமல் ஒத்தபான்மை இறுதியாகச் செய்யப்படுங் கூத்து அகமார்க்க மாகும்.

தாள மாத்திரையின் கதிகள் - கொட்டு, அசை, தூக்கு, அளவு எனப்படும். சொல் - உட்சொல், புறச்சொல், ஆகாயச்சொல் என மூவகைப்படும்; உட்சொல் - நெஞ்சொடு கூறல்; புறச்சொல் - கேட்போர்க் குரைத்தல்; ஆகாயச்சொல் - தானே கூறல். இனி தற்கூற்று, புறக்கூற்று, முன்னிலைக் கூற்று, விண்ணின் கூற்று எனச் சொல்லை நான்கு வகையாகப் பிரிப்பாருமுளர். கீதம் - இசை. பாடம் - கீதவுரு; இசைப்பாட்டு. எழுத்து - ஆளத்திக்குரிய எழுத்துக்கள். கட்டளை - வரையறை. (கச)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

உரைத்தவிக் கூத்துக் கற்கும் போதுதன் னுடம்பிற் சால
வருத்தநோ யெய்தி யிந்த வருத்தநான் மறையுந் தேரு
அருத்தமா யறிவாய் வெள்ளி யம்பலத் தாடி நின்ற
நிருத்தனர் தமக்கு முண்டே யென்பது நினைவிற் கொண்டான்.

(இ - ள்.) உரைத்த இக்கூத்துக் கற்கும்போது - கூறிய இந்தக் கூத்தினைப் பயிலும் பொழுதில், தன் உடம்பில் சால வருத்த நோய் எய்தி - தனது உடம்பின்

கண் மிகவும் துன்பமாகிய நோய் எய்தப்பெற்று, இந்த வருத்தம் - இத்துன்பமானது, நால்மறையும் தேரு அருத்தமாய் - நான்கு மறைகளாலும் அறியப்படாத பொருளாயும், அறிவாய் - ஞான வடிவாயும், வெள்ளி அம்பலத்து ஆடிநின்ற நிருத்தனர் தமக்கும் - வெள்ளி மன்றின்கண் ஆடிநின்றருளும் கூத்தப்பிரானுக்கும், உண்டே என்பது நினைவிற் கொண்டான் - உளதாமே என்னும் எண்ணத்தை மனதிற்கொண்டான்.

இந்த வருத்தம் - இத்தன்மையான வருத்தம். எப்பொழுதும் ஆடுகின்றவரென்பார் 'ஆடி நின்ற' என்றார். என்பது - என்னும் எண்ணம்; என்று எனக் கொள்ளினுமாம். (கடு)

கரியதா மரைக்கண் ணானுங் கமலநான் முகனுங் காண்டற்
கரியதா ளொன்றே நோவ வாற்றநா ணிற்ப தந்தோ
உரியதா மிதனைக் கற்று வருத்தமுற் றோர்ந்து மீது
தெரியநா னிருப்ப தேயோ வறனெனச் சிந்தை நோவான்.

(இ - ள்.) கரிய தாமரைக் கண்ணனும் - கரிய நிறத்தினையுடைய தாமரை மலர்போலுங் கண்களையுடைய திருமாலும், கமல நான்முகனும் காண்டற்கு அரிய தாள் ஒன்றே - தாமரை மலரில் வசிக்கும் பிரமனும் காணுதற்கரிய திருத்தாள் ஒன்றே, நோவ - துன்பமுற, ஆற்ற நாள் நிற்பது - பல நாளாக ஆடி நிற்கின்றது; அந்தோ - ஐயோ, உரியது ஆம் இதனைக் கற்று வருத்தம் முற்றும் ஓர்ந்தும் - உரியதாகிய இப்பரதநூலைக் கற்று அதனால் நேரும் வருத்தம் அனைத்தையும் அறிந்து வைத்தும், ஈது தெரிய நான் இருப்பதேயோ அறன் எனச் சிந்தை நோவான் - இவ் வருத்தத்தைக் காண நான் உயிருடன் இருப்பதோ அறமாகும் என்று மனம் நோவானாயினன்.

தாளின் அருமையைப் புலப்படுப்பான் அரியும் அயனும் காண்டற்கரிய தாள் என்றான். தாள் ஒன்றே - தாள்களில் ஒன்றே; ஒன்றே நிற்பது எனக் கூட்டுக. இது தெரிந்து நான் வாளாவிருப்பது அறமோ என்றுரைப்பினும் அமையும். அந்தோ, இரக்கப் பொருள் குறித்த இடைச்சொல். (கசு)

வடுப்படு பிறவிப் பௌவ வரம்புகாண் கின்ற நாள்வந்
தடுப்பவர் யாவ ரேனு மவர்க்கெலாம் போகம் வீடு
கொடுப்பவர் செய்யு மிந்தக் கூத்தையெப் படிநாஞ் சென்று
தடுப்பது தகாதன் றேனும் வருந்துமே சரண மென்னா.

(இ - ள்.) வடுப்படு பிறவிப் பௌவம் வரம்பு காண்கின்ற நாள்வந்து அடுப்பவர் யாவரேனும் - குற்றம் பொருந்திய பிறவிக்கடலின் கரையைக் காணுதற்குரிய நன்னாள்வந்து பொருந்தப் பெற்றவர் யாவராயினும், அவர்க்கு எலாம் போகம் வீடு கொடுப்பவர் செய்யும் இந்தக் கூத்தை - அவரனைவருக்கும் இன்பத்தையும் வீடுபேற்றையும் அளித்தருளும் இறைவன் செய்கின்ற இந்தக் கூத்தினை, நாம் சென்று எப்படித் தடுப்பது - நாம்போய் எங்ஙனம் தடுப்பது; தகாது - தகுதியன்று; அன்

றேனும் - தடுப்பதன்றாயின், சரணம் வருந்துமே என்னு-திருவடி வருந்துமே என்று கருதி.

வந்து அடுப்பவர் யாவரேனும் அவர்க்கெலாம் போகத்தையும், காண்கின்ற நாள் வீட்டையும் கொடுப்பவர் என்றுரைத்தலுமாம்; காண்கின்ற நாளிலே வந்து அடுப்பவர்க்கெல்லாம் பேரின்பமாகிய வீட்டை யளிப்பவர் என்று கூறுதலும் பொருந்தும்; வந்து அடுக்கும் நாள் பிறவிக் கடலின் வரம்பு காண்கின்ற நாளாகு மென்க. எப்படித் தடுப்பது - தடுப்பது எங்ஙனம் பொருந்தும். அன்றேனும்-தகாதென ஒழியின்; உம் அசை. (கஎ)

இதற்கிது துணிவென் றுன்னி யெழுந்துபோய்ச் சிவனி ராவிற்
கதக்களிற் றொருத்த லேந்துங் கதிர்மணிக் குடுமிக் கோயில்
மதக்கரி யுரியி னாற்கு வரம்பறச் சிறந்த பூசை
விதப்பட யாம நான்கும் விதிவழி யியற்றல் செய்யா.

(இ - ள்.) இதற்கு இது துணிவு என்று உன்னி - இதற்கு இதுவே துணி பொருள் என்று ஒன்றைக் கருதி, எழுந்துபோய் - எழுந்து சென்று, சிவன் இரா வில் - சிவராத்திரியில், கதக்களிற்று ஒருத்தல் ஏந்தும் கதிர்மணிக் குடுமிக்கோயில் - சினத்தையுடைய எட்டு யானைகள் தாங்கும் ஒளி பொருந்திய மணிகளிழைத்த சிக ரத்தையுடைய இந்திர விமானத்தில் எழுந்தருளிய, மதக்கரி உரியினாற்கு - மதயானை யின் தோலாகிய போர்வையையுடைய சோமசுந்தரக் கடவுளுக்கு, வரம்பு அறச்சிறந்த பூசை - எல்லையில்லையாகச் சிறந்த பூசையினை, விதப்பட - வகைப்பட, யாமம் நான் கும் - நான்கு யாமங்களிலும், விதிவழி இயற்றல் செய்யா - (ஆகம) விதிப்படி செய்து.

துணிவு - செய்யத் தக்கது. களிறும் ஒருத்தலும் ஆண்பாற் பெயர்; களி றாகிய ஒருத்தலென்க. விதப்பட - பல் வகையாக. இயற்றல்செய்யா - இயற்றுதலைச் செய்து; இயற்றி. (கஅ)

விண்டக மலர்த்தா ளேத்தி வெள்ளியம் பலத்து ளன்பர்
தொண்டக மலர நின்ற சோதிமெய்ஞ் ஞானக் கூத்தைக்
கண்டக மகிழ்ந்து தாழ்ந்து கட்புனல் சோரச் செங்கை
முண்டக முடிமே லேற்றி முகிழ்த்துநின் றிதனை வேண்டும்.

(இ - ள்.) அகம் விண்டு - மனமுருகி, மலர்த்தாள் ஏத்தி - தாமரை மலர் போன்ற திருவடியைத் துதித்து, வெள்ளியம்பலத்துள் அன்பர் தொண்டு அகம் மலர நின்றசோதி - வெள்ளியம்பலத்திலே அன்பர்களின் தொண்டு பூண்ட உள்ளத் தாமரை மலரநின்ற பேரொளியாகிய இறைவனது, மெய்ஞ்ஞானக் கூத்தைக் கண்டு- உண்மைஞானத் திருக்கூத்தைத் தரிசித்து, அகம் மகிழ்ந்து தாழ்ந்து - மனமகிழ்ந்து வணங்கி, கண்புனல் சோர - கண்களில் ஆனந்த வருவி பொழிய, செங்கை முண் டகம் முடிமேல் ஏற்றி முகிழ்த்து நின்று - சிவந்த கையாகிய தாமரை மலர்களைத் தலையின்மேற் கூப்பி நின்று, இதனை வேண்டும் - இதனை வேண்டுவானாயினன்.

விண்ட என்னும் பெயரெச்சம் தொக்கதாகக் கொண்டு, அகத்தில் மலர்ந்த என்றுரைத்தலுமாம். அம்பலத்துள் நின்ற சோதியின் கூத்தைக்கண்டு என்க. (கக)

நின்றதா ளெடுத்து வீசி யெடுத்ததா ணிலமீ தூன்றி
இன்றுநான் காண மாறி யாடியென் வருத்த மெல்லாம்
பொன்றுமா செய்தி யன்றேற் பொன்றுவ லென்னு வன்பின்
குன்றனன் சுரிகை வாண்மேற் குப்புற வீழ்வே னென்னு.

(இ - ள்.) நின்றதாள் எடுத்து வீசி - (ஐயனே) ஊன்றிய திருவடியை மேலெடுத்து வீசியும், எடுத்ததாள் நிலம்மீது ஊன்றி - தூக்கிய திருவடியை நிலத்தின் மேல் ஊன்றியும், இன்று நான் காண மாறி ஆடி - இன்று அடியேன் காணுமாறு (இங்ஙனம் கால்) மாறி ஆடுதலைப் புரிந்து, என் வருத்தம் எல்லாம் பொன்றுமா செய்தி - என் துன்ப மனைத்தும் அழியுமாறு செய்தருள்க; அன்றேல் - அங்ஙனஞ் செய்தருளாவிடில், பொன்றுவல் என்னு - நான் இறந்துபடுவேன் என்று திருமுன் விண்ணப்பித்துக் கொண்டு, அன்பின் குன்று அனன் - அன்பில் மலையை ஒத்த இராசசேகர பாண்டியன், சுரிகை வாள்மேல் குப்புற வீழ்வேன் என்னு - உடைவாளின்மேற் குப்புற விழுவேன் என்று கருதி.

எடுத்த தாள் - குஞ்சித்த திருவடி. பொன்றுமாறு என்பது ஈறுதொக்கது. சலியாத அன்புடையான் என்பார் 'அன்பின் குன்றனன்' என்றார். சுரிகையாகிய வாள் என்க. குப்புற விழுதல் - வாளை எதிரே நிறுத்தி அதன்மேற் பாய்தல். (உ0)

நாட்டினன் குறித்துப் பாய நண்ணுமுன் னிடத்தா ளூன்றி
நீட்டினன் வலத்தாள் வீசி நிருமலன் மாறி யாடிக்
காட்டினன் கன்னி நாடன் கவலையும் பாச மூன்றும்
வீட்டினன் பரமா னந்த வேலையுள் வீட்டி னானே.

(இ - ள்.) நாட்டினன் குறித்துப்பாய நண்ணுமுன் - கீழே அவ்வுடைவாளை நட்டு அதன்மேற் பாய்தற்கு நண்ணு முன்னரே, இடத்தாள் ஊன்றி - இடது தாளைக் கீழே ஊன்றி, வலத்தாள் நீட்டினன் வீசி - வலது திருவடியை மேலெடுத்து வீசி, நிருமலன் - இறைவன், மாறி ஆடிக்காட்டினன் - கால்மாறி ஆடிக்காட்டி, கன்னி நாடன் கவலையும் பாசமூன்றும் வீட்டினன் - கன்னி நாடனாகிய பாண்டியனுடைய கவலையையும் மும்மலங்களையும் அழித்து, பரமானந்த வேலையுள் வீட்டினான் - (அவனைப்) பேரின்பக் கடலுள் வீழ்த்தினான்.

நான்கடியிலும் முன்னுள்ள முற்றுக்கள் எச்சமாயின. காட்டினன் என்பதனை முற்றாக்கியும் கன்னிநாடன் என்பதனை எழுவாயாக்கியும், பாண்டியனனவன் கவலையும் பாசமூன்றும் வீட்டித், தன்னை வேலையுள் வீழ்த்தினான் என்றுரைத்தலுமாம். வீழ்த்தி என்பது வீட்டியென மருவிற்று. (உக)

விளைகள்வாய் வீழ்ந்த வண்டின் மெய்யறி வின்ப மென்னும்
அளவிலா முந்நீர் வெள்ளத் தாழ்ந்தவ னெழுந்து பின்னும்
உளமும்வா சகமு மெய்யு முடையவ னதுவே யாகப்
பளகிலா வன்பு தானே படிவமாய்ப் பழிச்ச லுற்றான்.

(இ - ள்.) விளைகள்வாய் வீழ்ந்த வண்டின் - இனிமை மிக்க மதுவின்கண் வீழ்ந்த வண்டைப்போல, மெய் அறிவு இன்பம் என்னும் அளவு இலா முந்நீர் வெள்ளத்து ஆழ்ந்தவன்-உண்மை யறிவின்பம் என்று சொல்லப்படும் அளவில்லாத கடல் வெள்ளத்தில் மூழ்கிய பாண்டியன், எழுந்து பின்னும் - எழுந்து மீண்டும், உளமும் வாசகமும் மெய்யும் உடையவன் அதுவே ஆக - உள்ளமும் உரையும் உடலுமாகிய இம்மூன்றும் தன்னை ஆளாக வுடையவன் உடைமையாய் விட, பளகு இலா அன்பு தானே படிவமாய் - குற்றமில்லாத அன்பே வடிவமாயிருந்து, பழிச்சலுற்றான்-துதிக்கத் தொடங்கினான்.

விளைதல் - முதிர்தல்; இனிமை மிகுதல். வண்டின், இன் உருபு ஒப்புப் பொருட்டு. மதுவில் வீழ்ந்த வண்டு அதனை யுண்டு அதிலே மயங்கிக் கிடத்தல் போலச் சச்சிதானந்தமாகிய வெள்ளத்தில் முழுகி அதனை யுண்டு தற்போத மிழந்தான் என்றவாறு. கடல் வெள்ளம்போன்று இதுவும் உண்மை அறிவு இன்பம் என்னும் மூன்று நீர்மையுடையது என்பது போதர 'முந்நீர் வெள்ளம்' என்று பெயர் கூறினார். உடையவன் - உலகுயிர்களை யெல்லாம் உடைமையாகவும் அடிமையாகவும் உடையவன்; இறைவன். மூன்று கரணங்களையும் இறைவனிடத்தே ஒப்புவித்தா னென்க. உடையவனது, பன்மை யொருமை மயக்கம். (உஉ)

[கலிவிருத்தம்]

பெரியாய் சரணஞ் சிறியாய் சரணங்
கரியா கியவங் கணனே சரணம்
அரியா யெளியா யடிமா றிநடம்
புரிவாய் சரணம் புனிதா சரணம்.

(இ - ள்.) பெரியாய் சரணம்-பெரியதினும் பெரியவனே வணக்கம்; சிறியாய் சரணம் - சிறியதினுஞ் சிறியவனே வணக்கம்; கரியாகிய அங்கணனே சரணம்-சான்றாயுள்ள அழகிய கண்களை யுடையவனே வணக்கம்; அரியாய் - தேவர்க்கும் அரியவனே, எளியாய் - அடியார்க்கு எளியவனே, அடிமாறி நடம்புரிவாய் சரணம் - கால் மாறி நடம்புரிவோனே வணக்கம்; புனிதா சரணம் - தூயவனே வணக்கம்.

இறைவன் அண்டமோரணுவாம் பெருமையும் அணுவோ ரண்டமாம் சிறுமையும் உடையவனென்பது முன்னுங் கூறப்பட்டது. இறைவன் உயிருக்குயிராயிருந்து காட்டிக் கண்டு நிற்பானாகலின் 'கரியாகிய' என்றார். சரணம்-போற்றி யென்பதுபோல் வணக்கம் எனப் பொருள்படுவதோர் சொல்; அடைக்கலம் என்றுமாம். ()

நதியா டியசெஞ் சடையாய் நகைவெண்
மதியாய் மதியா தவர்தம் மதியிற்
பதியாய் பதினெண் கணமும் பரவுந்
துதியாய் சரணஞ் சுடரே சரணம்.

(இ - ள்.) நதி ஆடிய செஞ்சடையாய் - கங்கை விளையாடுஞ் சிவந்த சடையை யுடையவனே, நகைவெண் மதியாய் - ஒளிபொருந்திய வெள்ளிய பிறையை அணிந்தவனே, மதியாதவர் மதியில் பதியாய் - கருதாதவர்கள் கருத்திற் பொருந்தாதவனே, பதினெண் கணமும் பரவும் துதியாய் - பதினெண் கணங்களாலும் துதிக்கப்படுந் துதியினையுடையவனே, சரணம் - வணக்கம்; சுடரே சரணம் - பேரொளியாயுள்ளவனே வணக்கம்.

ஆடிய - பொருந்திய என்றுமாம். மதியாதவர் - சிந்தியாதவர். மதி - தற்போதமாகிய அறிவுமாம். பதிதல் - தங்குதல். பதினெண்கணம் முன்பு உரைக்கப்பட்டன. (உ௪)

பழையாய் புதியாய் சரணம் பணிலக்
குழையாய் சரணங் கொடுவெண் மழுவாள்
உழையாய் சரணம் முருகா தவர்பால்
விழையாய் சரணம் விகிர்தா சரணம்.

(இ - ள்.) பழையாய் - எல்லாவற்றினும் பழமையானவனே, புதியாய் - எல்லாவற்றினும் புதுமை யானவனே, சரணம் - வணக்கம்; பணிலக் குழையாய் சரணம் - சங்கக் குழையினையுடையவனே வணக்கம்; கொடுவெண் மழுவாள் உழையாய் சரணம் - கொடிய வெள்ளிய மழுப்படையையும் மானையுமுடையவனே வணக்கம்; உருகாதவர்பால் விழையாய் சரணம் - (நின்னை நினைந்து) மனமுருகாதவரிடத்துச் (செல்ல) விரும்பாதவனே வணக்கம்; விகிர்தா சரணம் - விகிர்தனே வணக்கம்.

இறைவன் பழமையுடைய எவற்றினும் பழமையுடையனும் புதுமையுடைய எவற்றினும் புதுமையுடையனுமாதலே,

"முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே
பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே"

என்னும் திருவாசகத்தானறிக; எல்லாம் தோன்றுதற்கு முன்னும் எல்லாம் அழிந்த பின்னும் இருப்பவன் என்பது கருத்து. உருகாதவர்பால் விழையாமையை,

"உள்ள முருகி லுடனுவ ரல்லது
தெள்ள வறியரென் றுந்தீபற
சிற்பரச் செல்வரென் றுந்தீபற"

என்னும் திருவுந்தியாராலும்,

"நெக்கு நெக்கு நினைப்பவர் நெஞ்சுளே
புக்கு நிற்கும்பொன் ஞர்சடைப் புண்ணியன்
பொக்க மிக்கவர் பூவுநீருங் கண்டு
நக்கு நிற்ப னவர்தமை நாணியே"

என்னும் தேவாரத்தாலும் அறிக. விகிர்தன் - வேறுபா டுடையவன். (உ௫)

இருளாய் வெளியாய் சரணம் மெனையும்
பொருளாக நினைந்து புரந்தரன் மால்
தெருளா தநடந் தெரிவித் தெனையாள்
அருளாய் சரணம் மழகா சரணம்.

(இ - ள்.) இருளாய் வெளியாய் சரணம் - இருளா யுள்ளவனே வெளியா யுள்ளவனே வணக்கம்; எனையும் பொருளாக நினைந்து - (ஒன்றுக்கும் பற்றாத) அடியேனையும் ஒரு பொருளாகக் கருதி, புரந்தரன் மால் தெருளாத நடம் தெரிவித்து எனை ஆள் அருளாய் சரணம் - இந்திரனும் திருமாலும் அறியாத திருக்கூத்தினைக் காண்பித்து என்னை ஆளும் அருளை யுடையவனே வணக்கம்; அழகா சரணம்-பேரழகனே வணக்கம்.

பாசத்தாற் கட்டுண்ட உயிர்களால் அறிய லாகாமையின் 'இருளாய்' என்றார்;

"அருக்கனேர் நிற்பினு மல்லிருளே காணார்க்
கிருட்கண்ணே பாசத்தார்க் கீசன்"

என்னும் மெய்கண்டார் திருவாக்கினை நோக்குக. 'யாவர்க்கு மேலாம் அளவிலாச் சீருடையான் யாவர்க்குங் கீழாம் அடியேனை'யும் பொருளாக நினைந்து என்க. இசைப் பொருட்டு மகரம் விரிந்து வருதல் காண்க. (உ௬)

அயனத் தனெனப் படுமா டாவச்
சயனத் தவனைத் தருதத் துவநால்
வயனத் தவவா னவர்வா னவசேல்
நயனத் தவனா யகனே சரணம்.

(இ - ள்.) அயன் அத்தன் எனப்படும் ஆடு அரவச் சயனத்தவனைத் தரு தத்துவ-பிரமனையும் சங்கினை ஏந்தியவனென்று சொல்லப்படும் ஆடுகின்ற அனந்தனைப் பாயலாகக் கொண்ட திருமாலையும் தந்தருளிய தத்துவ வடிவாயுள்ளவனே, நால் வயனத் தவ - நான்கு வேதங்களாகிய திருவாக்கினையுடையவனே, வானவர் வானவ - தேவ தேவனே, சேல் நயனத்தவள் நாயகனே-அங்கயற்கணம்மையின் நாயகனே, சரணம்-வணக்கம்.

அயனையும் சயனத்தவனையும் என உருபும் உம்மும் விரிக்க. அத்தன் எனப் பிரித்து, அயனுக்கு அத்தனெனப்படும் என்றுரைத்தலுமாம். சிவபெருமான் அயன் மால்களைத் தந்தமையை,

"மைந்த நின்னையென் வலப்புறத் தளித்தன னறிய
பைந்து ழாய்மணி வண்ணனை யெனதிடப் பாலில்
தந்த ளித்தன னீவிர்வெங் கரிமுகன் றழல்வேற்
கந்த னேரெனக் கருணையி னுச்சிமோந் தளித்தான்"

என்பதனுனறிக. வயனம் - வசனம்; நான்கு மாவாக்கியங்களின் பொருளாயுள்ள வன் எனலுமாம்.　(உஎ)

கதவெங் கரியின் னுரியாய் சரணம்
முதலந் தமிலா முதலே சரணென்
றதிர்பைங் கழனூ புரவண் டலறும்
பதபங் கயமுன் புபணிந் தரசன்.

(இ - ள்.) கதவெங் கரியின் உரியாய் சரணம் - சினத்தையுடைய கொடிய யானைத்தோலாகிய போர்வையை யுடையவனே வணக்கம்; முதல் அந்தம் இலா முதலே சரண் - முதலும் முடிவும் இல்லாத முதல்வனே வணக்கம்; என்று - என்று வழுத்தி, அதிர் பைங் கழல் நூபுரவண்டு அலறும் பதபங்கயம் முன்பு அரசன் பணிந்து - ஒலிக்கின்ற ஒளிபொருந்திய வீரக்கழலும் சிலம்புமாகிய வண்டுகள் ஆரவாரிக்கும் திருவடித் தாமரையின் முன்னர் மன்னன் வணங்கி.

ஆடுதலால் அலறுமென்க. பத பங்கயம் என்பதற் கேற்பக் கழலையும் சிலம்பையும் வண்டாக உருவகித்தார். பசுமை - பொன்னின் ஒளி மேற்று. பங்கயத்தை முன்பு பணிந்தென்றுமாம்.　(உஅ)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

என்றுமிப் படியே யிந்தத் திருநடம் யாருங் காண
நின்றருள் செய்ய வேண்டு நிருமல மான வெள்ளி
மன்றவ வடியேன் வேண்டும் வரமிது வென்று தாழ்ந்தான்
அன்றுதொட் டின்று மெங்கோ னந்நட நிலையாய் நின்றான்.

(இ - ள்) இந்தத் திருநடம் யாரும் காண-இந்த மாறியாடிய திருக்கூத்தினை யாவருந் தரிசித்துய்யுமாறு, என்றும் இப்படியே நின்று அருள் செய்ய வேண்டும் - எஞ்ஞான்றும் இவ்வாறே நின்று அருள் புரிய வேண்டும்; நிருமலம் ஆன வெள்ளி மன்றவ - தூய்மையாகிய வெள்ளியம்பலத்தையுடையானே, அடியேன் வேண்டும் வரம் இது என்று தாழ்ந்தான் - அடியேன் வேண்டுகின்ற வரம் இதுவே என்று வணங்கினான்; அன்று தொட்டு இன்றும் எங்கோன் அந்நட நிலையாய் நின்றான் - அன்று முதல் இன்றுகாறும் எம்பெருமானாகிய வெள்ளியம்பலவாணன் மாறியாடிய அந்நிலையாகவே நின்றருளினான்.

ஒன்றுக்கும் பற்றாத என்னையும் ஓர் பொருளாகக் கொண்டு ஆடிய பெருங் கருணைத் திறத்தை உலகம் அறிந்துய்ய வேண்டும் என்னும் உட்கிடையுடையனாய் இங்ஙனம் வேண்டினானென்க. தாழ்ந்தான்; தாழ, அங்ஙனமே அருள் செய்து நின்றான்; என விரித்துரைத்துக் கொள்க.　(உகூ)

## இருபத்தைந்தாவது

# பழியஞ்சின படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

ஈறிலான் செழிய னன்புக் கெளியவ னாகி மன்றுள்
மாறியா டியகூத் தென்சொல் வரம்பின தாமே கங்கை
ஆறுசேர் சடையான் றானோ ரரும்பழி யஞ்சித் தென்னன்
தேறலா மனத்தைத் தேற்றுந் திருவிளை யாடல் சொல்வாம்.

(இ - ள்.) ஈறு இலான் - அழிவில்லாதவனாகிய இறைவன், செழியன் அன்புக்கு எளியவனாகி - இராசசேகர பாண்டியன் அன்பிற்கு எளியனாய், மன்றுள் மாறி ஆடிய கூத்து - வெள்ளியம்பலத்திலே கான்மாறியாடிய திருக்கூத்து, என் சொல் வரம்பினது ஆமே - எனது சொல்லின் எல்லையுட் படுவதாமோ, கங்கை ஆறுசேர் சடையான் - (இனி) கங்கையாறு பொருந்திய சடையையுடையனாகிய சோமசுந்தரக் கடவுள், ஓர் அரும்பழி அஞ்சி - ஒரு கொடும்பழியை அஞ்சி, தென்னன் தேறலா மனத்தைத் தேற்றும் - குலோத்துங்க பாண்டியனுடைய தெளியாத மனத்தினைத் தெளிவித்த, திருவிளையாடல் சொல்வாம் - திருவிளையாடலைக் கூறுவாம்.

எளியவனாயினமையாற் கூத்தாடினன் என்பதொரு நயமுங் காண்க. ஏகாரம் எதிர்மறைப் பொருட்டு. தான், அசை; முதல் வேற்றுமைச் சொல்லுமாம். பழியின் கொடுமையை விளக்குவார் 'ஓர் அரும்பழி' என்றார்; அறிதற்கரிய பழி எனப் பொருள் படுமாயினும் அத்துணைச் சிறப்பின் றென்க. தேறலா, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (க)

இனையநாட் சிறிது செல்ல விராசசே கரன்றன் காதற்
றனையனாங் குலோத்துங் கற்குத் தன்னர சிருக்கை நல்கி
வினையெலாம் வென்று ஞான வெள்ளியம் பலத்து ளாடுங்
கனைகழ னிழலிற் பின்னிக் கலந்துபே ரின்ப முற்றான்.

(இ - ள்.) இனைய நாள் சிறிது செல்ல - இங்ஙனமாய நாட்கள் சில கழிய, இராசசேகரன் தன் காதல் தனையனாம் குலோத்துங்கற்கு - இராசசேகர பாண்டியன் தன் அன்பிற்குரிய புதல்வனாகிய குலோத்துங்கனுக்கு, தன் அரசிருக்கை நல்கி - தனது அரசியலைத்தந்து, வினை எலாம் வென்று - வினைகளையெல்லாம் வென்று போக்கி, ஞான வெள்ளி அம்பலத்துள் ஆடும் கனைகழல் நிழலில் - ஞானமயமாகிய வெள்ளி மன்றின்கண்; ஆடியருளும் ஒலிக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடி நீழலில், பின்னிக்கலந்து பேரின்பம் உற்றான் - இரண்டறக் கலந்து பேரின்பத்தை அடைந்தான்.

சிறிது - சில. அரசிருக்கை - அரியணை. வினையெலாம் வென்று-வினைகளை எஞ்சாமற் கெடுத்து. கழல், ஆகுபெயர். இரண்டறக் கலந்தென்பார் 'பின்னிக் கலந்து' என்றார். (உ)

குரவன்செங் கோல்கைக் கொண்ட குலோத்துங்க வழுதி செங்கண்
அரவங்கம் பூண்ட கூட லாதிநா யகனை நித்தம்
பரவன்பின் வழிபா டாறுப் பத்திமை நியமம் பூண்டான்
இரவஞ்சுங் கதுப்பி னல்லா ரீரையா யிரவ ருள்ளான்.

(இ - ள்.) குரவன் செங்கோல் கைக்கொண்ட குலோத்துங்க வழுதி-தந்தையினது செங்கோலைக் கையிற் கொண்ட குலோத்துங்க பாண்டியன், செங்கண் அரவு அங்கம் பூண்ட கூடல் ஆதி நாயகனை - சிவந்த கண்களையுடைய பாம்புகளைத் திருமேனியில் அணிந்த மதுரையில் எழுந்தருளிய சோமசுந்தரக்கடவுளை, நித்தம் அன்பின் பரவு வழிபாடு ஆறுப் பத்திமை நியமம் பூண்டான்-நாடோறும் அன்பினாற் பூசிக்கும் வழிபாடாகிய நீங்காத பத்திநியமத்தை மேற்கொண்டவன்; இரவு அஞ்சும் கதுப்பின் நல்லார் ஈரையாயிரவர் உள்ளான் - இருளும் அஞ்சுங் கூந்தலையுடைய மனைவியர் பதினாயிரவரையுடையவன்.

குரவன் - தந்தை. அரவினையும் என்பினையும் அணிந்த என்றுமாம். வழிபாடாகிய நியமம் என்க. நியமம்-செய்கடன். பூண்டான்; அவன் உள்ளவனாயினான்; என முற்றாகவுரைத்தலுமாம். கூந்தலின் கருமைக்கு முன்னிற்கலாற்றாது இரவும் அஞ்சு மென்க. (ங)

[கொச்சகக்கலிப்பா]

அப்பதினா யிரவர்க்கு மொவ்வொருத்திக் கவ்வாறாய்
ஒப்பரிய வறுபதினா யிரங்குமா ருளரவருட்
செப்பரிய வல்லாண்மைச் சிங்கவிள வேறனையான்
வைப்பனையான் முதற்பிறந்த மைந்தன்பே ரனந்தகுணன்.

(இ - ள்.) ஒவ்வொருத்திக்கு அவ்வாறாய் - ஒவ்வொரு மனைவிக்கும் ஆறு ஆறாக, அப்பதினாயிரவர்க்கும் - அந்தப் பதினாயிரம் மகளிர்க்கும், ஒப்பு அரிய அறுபதினாயிரம் குமரர் உளர் - ஒப்பில்லாத அறுபதினாயிரங் குமரர்கள் உளராயினர்; அவருள் - அக்குமரருள், முதல் பிறந்த மைந்தன் - முதலிற் றோன்றிய புதல்வன், செப்பு அரிய வல் ஆண்மைச் சிங்க இள ஏறு அனையான் - சொல்லுதற்கரிய வலிய ஆண்மையையுடைய இளமை பொருந்திய ஆண்சிங்கத்தை ஒத்தவன்; வைப்பு அனையான் - வைப்பு நிதியைப் போன்றவன்; பேர் அனந்த குணன் - அவன் பெயர் அனந்தகுணன்.

ஒருத்தி, ஆறு என்பன இரட்டித்த வழி ஒவ்வொருத்தி, அவ்வாறு என்றாயின; "எண்ணிறை யளவும்" "ஒன்ப தொழித்தவெண் ணொன்பது மிரட்டின்" என்னும் நன்னூற் சூத்திரங்கள் நோக்குக. ஆக்கச் சொற் கொடுத்து உளராயினர் என விரிக்க. வல்லாண்மை - மிக்க ஆண்மை. (ச)

கலைபயின்று பரிநெடுந்தேர் கரிபயின்று பலகைவாள்
சிலைபயின்று வருகுமரர் திறநோக்கி மகிழ்வேந்தன்
அலைபயின்ற கடலாடை நிலமகளை யடலணிதோள்
மலைபயின்று குளிர்தூங்க மகிழ்வித்து வாழுநாள்.

(இ - ள்.) கலைபயின்று - கற்றற்குரிய கலைகளைக்கற்று, பரிநெடுந் தேர் கரி பயின்று - குதிரை நெடியதேர் யானை என்பவற்றைச் செலுத்துந் திறமும் பயின்று, பலகை வாள் சிலை பயின்று - கேடகம் வாள் வில் என்பவற்றின் வரிசையையும் கற்று, வருகுமரர் திறம் நோக்கி மகிழ் வேந்தன் - வளர்கின்ற புதல்வர்களின் திறங்களைக் கண்டு மகிழும் அரசன், அலை பயின்ற கடல் ஆடை நிலமகளை - அலைகள் பொருந்திய கடலை ஆடையாக வுடுத்த புவிமகளை, அடல் அணி தோள்மலை பயின்று குளிர்தூங்க மகிழ்வித்து வாழும் நாள் - வெற்றியையே அணியாகப் பூண்ட தோளாகிய மலையின்கண் தங்கி இன்புறுமாறு மகிழ்வித்து வாழுங்காலத்தில்.

கலை - கற்கும் நூல்கள். பரி முதலியன, அவற்றை ஊருந் தொழிற்கும், பலகை முதலியன அவற்றாற் பொருந் தொழிற்கும் ஆயின. திறம் - கூறுபாடு. நிலமகளை மகிழ்வித்து எனக் கூட்டுக. மலையிலே தங்கிக் குளிர்ச்சியடைய என்பதொரு நயமுங் காண்க. உயிர்களெல்லாம் இன்புற வருத்த மின்றாகப் புரந்தான் என்பதனை இங்ஙனங் கூறினர். (ரு)

செய்யேந்து திருப்புத்தூர் நின்றுமொரு செழுமறையோன்
பையேந்து மரவல்குன் மனைவியொடும் பானல்வாய்க்
கையேந்து குழவியொடுங் கடம்புகுந்து மாதுலன்பால்
மையேந்து பொழின்மதுரை நகர்நோக்கி வருகின்றான்.

(இ - ள்.) ஒரு செழு மறையோன் - ஓர் அழகிய வேதியன், செய் ஏந்து திருப்புத்தூர் நின்றும்-வயல்கள் சூழ்ந்த திருப்புத்தூரினின்றும், அரவு ஏந்தும் பை அல்குல் மனைவியொடும்-பாம்பு ஏந்திய படத்தினை யொத்த அல்குலையுடைய மனைவியோடும், கை ஏந்து பால் நல்வாய்க் குழவியொடும் - கையிலேந்திய பால் மணமாறாத நல்ல வாயினையுடைய குழந்தையோடும், கடம் புகுந்து-காட்டின் வழியில் நுழைந்து, மாதுலன் பால்-மாமன் வீட்டிற்கு, மை ஏந்து பொழில் மதுரை நகர் நோக்கி வருகின்றான் - முகிலைச் சுமந்திருக்கும் சோலை சூழ்ந்த மதுரைப் பதியை நோக்கி வருகின்றான்.

செய் ஏந்து - கழனிகளை மிகுதியாகவுடைய. செழுமை குணத்தின் மேற்று. அரவு ஏந்தும் பை என மாறுக. மாதுலனிடத்தை யடைதற்கு நகர் நோக்கி வருகின்றான் என்க. மை - மேகம். (சு)

வருவானுண் ணீர்வேட்டு வருவாளை வழிநிற்கும்
பெருவானந் தடவுமொரு பேராலி னீழலின்கீழ்
ஒருவாத பசுங்குழவி யுடனிருத்தி நீர்தேடித்
தருவான்போய் மீண்டுமனை யிருக்குமிடந் தலைப்படுமுன்.

(இ - ள்.) வருவான் - அங்ஙனம் வரும் அம்மறையோன், உண் நீர் வேட்டு வருவாளை - உண்ணும் நீரினை விரும்பி வந்த தன் மனைவியை, வழிநிற்கும் பெரு வானம் தடவும் ஒரு பேர் ஆலின் நீழலின் கீழ் - வழியில் நிற்கின்ற பெரிய வானை யளாவிய ஒரு பெரிய ஆலமரத்தின் நிழற் கீழே, ஒருவாத பசுங் குழவியுடன் இருத்தி - நீங்காத இளங் குழந்தையோடும் இருக்கச் செய்து, நீர் தேடித் தருவான் போய் - நீரினைத் தேடிக்கொண்டு வரச்சென்று, மீண்டு மனை இருக்கும் இடம் தலைப்படுமுன் - (நீரினைக் கொண்டு) திரும்பி மனைவி யிருக்குமிடத்தை அடை தற்கு முன்.

வேட்டு வருவாள் என்றது வேட்கையுற்ற பொழுதே பருகுதற்கு நீரின்றி வந்து கொண்டிருப்பவள் என்றவாறு. ஒருவாத பசுங்குழவி - சிறிதும் விட்டுப் பிரியாத பச்சைக் குழந்தை; பசுமை - மிக்க இளமையைக் குறிப்பது. தருவான், வினையெச்சம். மனை, ஆகுபெயர். (எ)

இலைத்தலைய பழுமரத்தின் மிசைமுன்னா ளெய்ததொரு
கொலைத்தலைய கூர்வாளி கோப்புண்டு கிடந்ததுகால்
அலைத்தலைய வீழ்ந்தும்மை வினையுலப்ப வாங்கிருந்த
வலைத்தலைய மானோக்கி வயிறுருவத் தைத்தன்றால்.

(இ - ள்.) இலைத்தலைய பழுமரத்தின் மிசை - இலைகள் பொருந்திய தலையை யுடைய அந்த ஆலமரத்தின் மேல், முன்னாள் எய்தது - முன்னொரு நாளில் (ஒரு வேடனால்) எய்யப் பெற்றதாய், கோப்புண்டு கிடந்தது ஒரு கொலைத்தலைய கூர் வாளி - கோக்கப்பட்டுக் கிடந்த கொலைத்தொழிலைத் தன்னிடத்தேயுடைய ஒரு கூரிய வாளியானது, கால் அலைத்து அலைய வீழ்ந்து - காற்றினால் அலைக்கப்பட்டு மரம் அசைதலால் விழுந்து, உம்மைவினை உலப்ப - முன் வினைப்பயன் முடிய, ஆங்கு இருந்த வலைத்தலைய மான்நோக்கி வயிறு உருவத் தைத்தன்று - அங்கே தங்கியிருந்த வலையில் அகப்பட்ட மான்போன்ற கண்ணையுடைய பார்ப்பனியின் வயிற்றிலே ஊடுருவத் தைத்தது.

தலைய என்பன குறிப்புப் பெயரெச்சம். பழுமரம் - ஆலமரம். எய்தது, கிடந்தது என்பவற்றை முறையே வினையெச்சமும் பெயரெச்சமு மாக்குக. கொலை செய்யும் கூரிய நுதியையுடைய வாளி என்றலுமாம். அலைத்து - அலைக்கப்பட்டு; கடுங்காற்று வீசிற்றென்பது அலைத்தல் என்னும் சொல்லாற்றலாற் பெறப்படும். மரம் அலைதலால் என்க. உம்மைவினை - வாழ்நாட்கு அலகாகிய முன்வினை. உலத்தல் - முடிதல். வலைத்தலைய-வலையினிடத்துள்ள; மருட்சியைக் குறித்தற்கு 'வலைத்தலைய மான்' என்றார். தைத்தன்று - தைத்தது; அன் சாரியை. ஆல், அசை. (அ)

அவ்வாறவ் வணங்கனையா ளுயிரிழந்தா ளவ்வேலைச்
செவ்வாளி யேறிட்ட சிலையுடையா னொருவேடன்
வெவ்வாளி யேறனையான் வெயிற்கொதுங்கு நிழறேடி
அவ்வால நிழலெய்தி யயனின்றா னிளைப்பாற.

(இ - ள்.) அவ்வாறு அவ்வணங்கு அனையாள் உயிர் இழந்தாள் - அவ்வண்ண மாக அத்தெய்வ மகளையொத்த பார்ப்பனி உயிர் துறந்தாள்; அவ்வேலை - அப்பொழுது, வெம் ஆளி ஏறு அனையான் ஒரு வேடன் - கொடிய சிங்க வேற்றினை யொத்தவனாகிய ஒரு வேடன், செவ்வாளி எறிட்ட சிலையுடையான் - தெரிந்தெடுத்த வாளியினை எறிட்ட வில்லையுடையவனாய், வெயிற்கு ஒதுங்கு நிழல்தேடி - வெயிலுக்கு ஒதுங்கி யிருக்கத்தக்க நிழலினைத்தேடி, அவ்வால நிழல் எய்தி இளைப்பு ஆற அயல் நின்றான் - அந்த ஆலமரத்தின் நிழலை யடைந்து இளைப்பாறுதற்கு அம்மரத்தின் பக்கலில் நின்றான்.

செவ்வாளி - வடிவு செவ்விதாகிய அம்பு என்றும், குருதி தோய்ந்து சிவந்த அம்பு என்றும் கூறலுமாகும்; பார்ப்பனியைக் கொன்ற கொடுமையுடையதன்று என்னுங் குறிப்புத் தோன்றக் கூறிற்றுமாம். நிழல்தேடி என்றமையால் அவ்வால் ஒன்றே அங்கே நிழல் மரமாயது என்பது பெறப்படும். பார்ப்பனியைக் கண்டவனுமல்ல னென்பார் 'அயல் நின்றான்' என்றார். (க)

தண்ணீர்க்குப் போயாவி தலைப்பட்ட மறையவனும்
உண்ணீர்கைக் கொண்டுமீண் டொருங்கிருந்த குழவியொடும்
புண்ணீர்வெள் ளத்துக்கா ழ்ந்துயிரைப் புறங்கொடுத்த
பண்ணீர மழலைமொழிப் பார்ப்பனியைக் கண்ணுற்றான்.

(இ - ள்.) தண் நீர்க்குப் போய் ஆவி தலைப்பட்ட மறையவனும் - தண்ணிய நீரினைக் கொணர்தற் பொருட்டுச் சென்று நீரோடையை யடைந்த அவ்வந்தணனும், உண் நீர் கைக்கொண்டு மீண்டு - உண்ணும் நீரினைக் கைக்கொண்டு திரும்பி, ஒருங்கு இருந்த குழவியொடும் புண்ணீர் வெள்ளத்துக்கால் தாழ்ந்து - உடன் சேரவிருந்த குழவியோடும் குருதி வெள்ளத்தில் ஆழ்ந்து, உயிரைப் புறம் கொடுத்த - உயிரையிழந்த, பண்ணீர மழலைமொழிப் பார்ப்பனியைக் கண்ணுற்றான்-பண்போலும் இனிமைத் தன்மையையுடைய மழலைச் சொல்லையுடைய தன் மனைவியைப் பார்த்தான்.

ஆவி - பொய்கை. குழவியொடும் தாழ்ந்திருந்த பார்ப்பனி யென்றும் தன் உயிரைப் புறங்கொடுத்த பார்ப்பனி யென்றும் கொள்க. வெள்ளத்துக்கால் என்பதில், அத்து சாரியை; கால் ஏழனுருபு. புறங்கொடுத்தல் - புறம்பே போகவிடுத்தல். நீர - நீர்மையுடைய; ஈர எனப்பிரித்து, குளிர்ந்த என்றுரைத்தலு மாம். (ம)

✓ அயில்போலுங் கணையேறுண் டவ்வழிபுண் ணீர்சோர
மயில்போல வுயிர்போகிக் கிடக்கின்றாண் மருங்கணைந்தென்
உயிர்போல்வா யுனக்கிதுவென் னுற்றதென மத்தெறிதண்
தயிர்போலக் கலங்கியறி வழிந்துமனஞ் சாம்பினான்.

(இ - ள்.) அயில்போலும் கணை ஏறுண்டு - வேல்போலுங் கூரிய கணை தைத்து, அவ்வழி புண்ணீர் சோர - அவ்வழியே குருதி யொழுக, உயிர்போகி மயில்போலக் கிடக்கின்றாள் மருங்கு அணைந்து - உயிர் நீங்கி மயில்போன்று கிடக்கின்ற

மனைவியின் அருகிற் சென்று, என் உயிர்போல்வாய் - எனது உயிர் போன்றவளே, உனக்கு இது உற்றது என் என - உனக்கு இத்தீமை நேர்ந்தது என்னையென்று, மத்து எறி தண் தயிர்போலக் கலங்கி - மத்தினாற் கலக்கப்பட்ட தண்ணிய தயிர் போலக் கலக்கமுற்று, அறிவு அழிந்து மனம் சாம்பினான் - அறிவிழந்து மனஞ் சோர்ந்தான்.

வலியகணையென்பார் 'அயில்போலுங் கணை' என்றார். அவ்வழி - அவ்விடத்தில் என்றுமாம். அம்புதைத்த மயில்போல வென்க. நினக்கும் இது நேர்ந்ததோவென இரங்கினான். கலங்கி - உடைந்து; திட்பங் கெட்டு. (கக)

இனையதோர் பெண்பழியை யாரேற்றா ரெனத்தேர்வான்
அனையதோர் பழுமரத்தின் புறத்தொருசா ரழல்காலும்
முனையதோர் கணையோடு முடக்கியகைச் சிலையேந்தி
வினையதோர்ந் தெதிர்நின்ற விறல்வேடன் றனைக்கண்டான்.

(இ - ள்.) இனையது ஓர் பெண்பழியை ஏற்றார் யார் எனத் தேர்வான் - இங்ஙனமாகிய ஒரு பெண் பழியை ஏற்றுக் கொண்டவர் யார் என்று ஆராயப் புகுந்த அம் மறையோன், அனையது ஓர் பழுமரத்தின் புறத்து ஒரு சார் - அந்த ஆலமரத்தின் புறத்தே ஒரு பக்கத்தில், அழல் காலும் முனையது ஓர் கணையோடும் - நெருப்பினை உமிழும் முனையினையுடைய ஒரு வாளியோடும், முடக்கிய சிலை கை ஏந்தி - வளைத்த வில்லைக் கையிலேந்தி, வினையது ஓர்ந்து எதிர்நின்ற விறல்வேடன் தனைக் கண்டான் - தனக்கு வாய்க்கும் வேட்டை வினையினை ஆராய்ந்து எதிரில் நின்ற வெற்றி பொருந்திய வேடனைக் கண்டான்.

பெண்பழி - பெண்கொலை புரிந்தபழி; அதன் கொடுமையை விளக்க 'இனையதோர் பெண்பழி' என்றான்; இத்தகைய பழியை யேற்பாரும் உளரோ வென்று கருதினான் என்க. தேர்வான், பெயர். அனையது, சுட்டு; ஓர், அசை. முனையது; குறிப்புமுற்று எச்சமாகியது. வினையது, அது பகுதிப் பொருள் விகுதி. (கஉ)

[கலிநிலைத்துறை]

காப்பணி தாளன் வாளொடு வீக்கிய கச்சாளன்
கூர்ப்பக ழிக்கோ லேறிடு வில்லன் கொலைசெய்வான்
ஏற்பன கைக்கொண் டிவ்விடை நின்றா னிவனேயென்
பார்ப்பனி யைக்கொன் றின்னுயி ருண்டு பழிபூண்டான்.

(இ - ள்.) காப்பு அணிதாளன் - செருப்பினை யணிந்த தாளையுடையனாய், வாளொடு வீக்கிய கச்சாளன் - வாளோடு கட்டிய கச்சினையுடையனாய், கூர் பகழிக் கோல் ஏறிடு வில்லன் - கூரிய அம்பினை ஏறிட்ட வில்லை யுடையனாய், கொலை செய்வான்-கொலை செய்தற்கு, ஏற்பன கைக் கொண்டு இவ்விடை நின்றான் இவனே - ஏற்றவற்றைக் கையிற்கொண்டு இங்கு நிற்பவனாகிய இவனே, என் பார்ப்பனி

யைக் கொன்று இன் உயிர் உண்டு பழி பூண்டான் - என் மனைவியைக் கொன்று அவள் இனிய உயிரைப் பருகிப் பழிபூண்டவன்.

காப்பு - காலுக்கு அரணாயது; செருப்பு. தாளன் முதலிய குறிப்பு முற்றுக் கள் வினையெச்சமாயின. இவன் கொன்றானென்று துணிதற்குக் காரணம் கொலை செய்தற் குரியவற்றைக் கைக்கொண் டிருத்தலும் அவ்விடத்தில் நிற்றலுமாம். கொலைக் கருவிகளைக் கொண்டிருத்தலேயன்றி அவற்றைக் கொல்லுதற் கேற்ற பெற்றியமைத்துக் கொலையையே குறித்துக் கொண்டுள்ளான் என்பது தோன்ற 'கோல் ஏறிடு வில்லன்' என்றும், 'நின்றான்' என்றும் கூறினான். பகழிக்கோல்- இருபெயரொட்டு; கோல் என்பதும் அம்பிற்கோர் பெயர். நின்றான் ஆகலால் இவனே கொன்று பழிபூண்டான்; என்று முற்றாக்கி யுரைத்தலுமாம். ஏகாரம் தேற்றம். (௧௩)

என்ன மதித்தே யேடா வேடா வென்னேழை
தன்னை வதைத்தாய் நீயே யென்னாத் தழல்கால்கண்
மின்ன லெயிற்றுக் கூற்றென வல்வாய் விட்டார்த்து
மன்னவ னாணைப் பாச மெறிந்து வலித்தேகும்.

(இ - ள்.) என்ன மதித்தே - என்று கருதி, ஏடா வேடா - எண்டா வேடா, நீயே என் ஏழை தன்னை வதைத்தாய் என்னா - நீயே என் மனைவியைக் கொன்றாய் என்று, தழல் கால் கண் மின்னல் எயிற்றுக் கூற்றென - தீயினை உமிழுங் கண்களை யும் மின்னல்போன்ற பற்களையுமுடைய கூற்றுவனைப் போல, வல்வாய்விட்டு ஆர்த்து- வலிய வாயினைத் திறந்து முழக்கஞ் செய்து, மன்னவன் ஆணைப் பாசம் எறிந்து வலித்து ஏகும்-வேந்தனது ஆணையாகிய பாசத்தைவீசி இழுத்துச் செல்வானாயினன்.

மேற் செய்யுளிற் கூறியவற்றைச் சுட்டி 'என்ன மதித்து' என்றார். கண்ட வன் இங்ஙனங் கருதியென்க. ஏடா என்பது இக்காலத்தில் எண்டா எனத் திரிந் துளது. ஏழை - பெண். மின்னல், அல்பெயர் விகுதி. கண்ணினையும் எயிற்றினையும் பார்ப்பனனுக்கும், ஆர்த்தலைக் கூற்றுக்கும் கொள்க. ஆணையைப் பாசமாக உருவ கித்தார். 'அரசன் ஆணை' என்றுகூறி இழுத்தேகினா னென்க. இதனாற் காட்டி லுள்ள வேட்டுவரும் அரசனாணை யென்ற வளவில் அடங்கி நிற்பரென்பது பெறப் படும். (௧௪)

மாண்டவ ளைத்தன் வெந்நிடை யிட்டான் மகவொக்கற்
றாண்டவ ணைத்தான் றாய்முலை வேட்டழு தன்சேயைக்
காண்டொறும் விம்மாக் கண்புனல் சோரக் கடிதேகா
ஆண்டகை மாறன் கூட லணைந்தா னளியன்றான்.

(இ - ள்.) அளியன் தான்-இரங்கத் தக்கவனாகிய அம்மறையோன், மாண்ட வளை தன் வெந் இடை இட்டான் - இறந்துபோன தன் மனைவியைத் தனது முது கில் இட்டு, மகவு ஒக்கல் தாண்ட அணைத்தான்-குழந்தையைப் பக்கத்திற் பொருந்த அணைத்து, தாய் முலைவேட்டு அழு தன் சேயைக் காண்தொறும் - தாயின் பாலை விரும்பி அழுகின்ற அக்குழவியைப் பார்க்குந் தோறும், கண்புனல் சோர விம்மா -

கண்களில் நீர் ஒழுக அழுது, கடிது ஏகா-விரைந்து சென்று, ஆண்தகை மாறன் கூடல் அணைந்தான் - ஆண்டன்மையையுடைய பாண்டியனது மதுரையை அடைந்தான்.

ஒக்கல் - அரையின் பக்கம். தாண்ட - தவழ. இட்டான், அணைத்தான் என்பன முற்றெச்சங்கள். அளியன் - பிறர் இரங்கத் தக்கான். (௧௫)

மட்டவிழ் தாரான் வாயின் மருங்கே வந்தெய்தா
உட்டுக ளில்லா வேடனை முன்விட் டுயிரன்னாள்
சட்டக* நேரே யிட்டெதிர் மாறன் றமர்கேட்பக்
கட்டுளி சிந்தா முறையிடு கின்றான் கையோச்சா.

(இ - ள்.) மட்டு அவிழ்தாரான் வாயில் மருங்கே வந்து எய்தா - மணத்தொடு மலர்ந்த மலர் மாலையை யணிந்த பாண்டியனது கோயில் வாயிலை வந்தடைந்து, உள் துகள் இல்லா வேடனை முன்விட்டு - மனத்திலே குற்றமில்லாத வேடனை முன்னே விட்டு, உயிர் அன்னாள் சட்டகம் நேரே இட்டு - உயிர் போன்ற மனைவியின் உடலை எதிரே கிடத்தி, மாறன் தமர் கேட்ப-பாண்டியன் தமராகிய அமைச்சர் முதலியோர் கேட்ப, எதிர் - அவர்கட்கு நேரே, கை ஓச்சா - கையை மேலே ஓச்சி, கண் துளி சிந்தா முறையிடுகின்றான் - கண்ணீரைச் சொரிந்து முறையிடா நின்றான்.

உட்டுகளில்லா வேடன் என்றது புறத்தே கொலை செய்யுங் கருவிகளை யுடையனாயினும் பார்ப்பனியைக் கொல்லாமையால் அகத்தே குற்றமில்லானாகிய வேடன் என்றவாறு. சட்டகம் - வடிவு; உடம்பு. அரசனுக்குத் தமராவார் அமைச்சர் முதலாயினோர். எய்தா, சிந்தா, ஓச்சா என்பன செய்யா என்னும் வாய்பாட்டு வினை யெச்சங்கள். (௧௬)

கோமுறை கோடாக் கொற்றவ ரேறே முறையேயோ
தாமரை யாள்வாழ் தண்கடி மார்பா முறையேயோ
மாமதி வானோன் வழிவரு மைந்தா முறையேயோ
தீமைசெய் தாய்போற் செங்கை குறைத்தாய் முறையேயோ.

(இ - ள்.) கோமுறை கோடாக் கொற்றவர் ஏறே முறையேயோ - அரசியல் முறை கோணாத மன்னருள் ஆண் சிங்கம் போன்றவனே முறையோ, தாமரையாள் வாழ் தண்கடி மார்பா முறையேயோ - தாமரை மலரில் வசிக்குந் திருமகள் வாழ்கின்ற தண்ணிய விளக்கமமைந்த மார்பினை யுடையவனே முறையோ, மாமதி வானோன் வழிவரும் மைந்தா முறையேயோ - பெருமை பொருந்திய திங்கட் புத்தேளின் மரபில் வந்த மைந்தனே முறையோ, தீமை செய்தாய்போல் செங்கை குறைத்தாய் முறையேயோ - குற்றஞ் செய்தவன் போலச் சிவந்த கையைத் தறித்துக் கொண்டவனே முறையோ.

கோல் நிலை திரியாத கொற்றத்தினை யுடைய அரசரு ளெல்லாஞ் சிறந்தவனென்க. முறையேயோ என்றது நினது நாட்டிலும் இத்தகைய தீமை நிகழ்வது

(பா - ம்.) *கட்டழல்.

முறைதானே என்றவாறு. வலியரால் நலிவுற்றோர் இங்ஙனம் முறையேயோ என்றேனும், ஓலம் என்றேனும் பலகாற்கூறி வேண்டுதல் முறையிடுதல் எனப்படும். கடி - விளக்கம். தீமை செய்தாய்போற் செங்கை குறைத்தாய் என்றது பாண்டியருள் ஒருவன் புரிந்த அருஞ் செயலைக் குறிப்பிட்டவாறு.

கைகுறைத்த வரலாறாவது: ஓர் காலத்தில் மதுரைமா நகரில்வசித்த அந்தணனொருவன் தான் காசிக்குச் செல்ல விரும்பி அதனை இரவிலே தன் மனைவியிடம் கூறிக்கொண்டிருப்பவன், அவளைத் தேற்றுதற்பொருட்டு, 'பாண்டியனது செங்கோலாட்சியில் நினக்கு எத்தகைய துன்பமும் உண்டாகாது; நான் மீண்டு வருந்துணையும் நீ அஞ்சா திருப்பாயாக' என்று கூறினன்; நகரி சோதனையின் பொருட்டு இரவில் தனித்து வந்துகொண்டிருந்த அரசன் அம்மொழிகளைச் செவியுற்று, அன்று முதல் ஒவ்வொருநா ளிரவிலும் அம்மனையைக் கண்காணித்து வந்தனன்; ஒருநா ளிரவிலே காசிக்குச்சென்ற மறையோன் மீண்டு வந்து தன் மனைவியுடன் பேசிக்கொண்டிருக்கும் அரவங்கேட்ட அரசன் வேற்றுக்குரல் கேட்பதாக நினைந்து கதவைத் தட்டவும், அம்மறையோன் 'கதவு தட்டுவோன் யார்' என உரத்த குரலுடன் வினவினன்; வந்திருந்தவன் மனைக்குரிய மறையோன் என அரசன் அறிந்து, அவ்வந்தணனுக்குப் பெரியதோர் ஐயம் நிகழுமே யென வருந்தி, ஒருபாயங் கருதி, அங்குள்ள வேதியர்மனை ஒவ்வொன்றின் கதவையும் தட்டிச்சென்றனன்; விடிந்தபின் மறையோரெல்லோரும் அரசன் திருமுன் வந்து, இரவிலே தங்கள் இல்லங்களின் கதவுதட்டப் பட்டமையை அறிவிக்க, அரசன், அக்குற்ற மிழைத்தது தன் கையே யென்று கூறி, அதனைத் துணித்தனன் என்பது. இதனை,

"உதவா வாழ்க்கைக் கீரந்தை மனைவி
புதவக் கதவம் புடைத்தன னோர்நாள்
அரச வேலி யல்லதி யாவதும்
புரைதீர் வேலி யில்லென மொழிந்து
மன்றத் திருத்திச் சென்றீ ரவ்வழி
இன்றவ் வேலி காவா தோவெனச்
செவிச்சூட் டாணியிற் புகையழல் பொத்தி
நெஞ்சஞ் சுடுதலி னஞ்சிநடுக் குற்று
வச்சிரத் தடக்கை யமரர் கோமான்
உச்சிப் பொன்முடி யொளிவளை யுடைத்தகை
குறைந்த செங்கோற் குறையாக் கொற்றத்து
இறைக்குடிப் பிறந்தோர்க் கிழுக்க மின்மை"

என்று சிலப்பதிகாரமும்,

"எனக்குத் தகவன்றா லென்பதே நோக்கித்
தனக்குக் கரியாவான் றானாய்த்—தவற்றை
நினைத்துத்தன் கைகுறைத்தான் றென்னவனுங் காணா
ரெனச் செய்யார் மாணா வினை"

என்று பழமொழி வெண்பாவும் கூறுதல் காண்க. பரிமேலழகரும்,

"முட்டாமற் செலுத்தியவாறு...........
தன்கை குறைத்தான் கண்ணும் காண்க"

என்றனர்.

தீமை செய்தாய்போல் என்றது தீமை செய்யாமையைக் காட்டுகின்றது. (கஎ)

பிறங்கும் கோலான் மாறடு கொற்றம் பெறுவேந்தன்
உறங்கும் போதுந் தன்னரு ளாணை யுலகெங்கும்
அறங்குன் றுவாக் காப்பதை யென்ப வஃதியாதிம்
மறங்குன் றுதான் செய்கொலை காவா வழியென்றான்.

(இ - ள்.) பிறங்கும் கோலால் மாறுஅடு கொற்றம் பெறுவேந்தன் - விளங்குகின்ற செங்கோலினாலே பகைவரை வெல்லும் வெற்றியையுடைய அரசன், உறங்கும் போதும் - தூங்கும்போதும், தன் அருள் ஆணை - அவன் அருளாணையானது, உலகு எங்கும் அறம் குன்றுவா காப்பது என்ப - உலக முற்றும் அறங்கள் குறையாவாகக் காப்பது என்று நூலோர் கூறுவர்; அஃது - அக்கூற்றானது, இம்மறம் குன்றுதான் செய் கொலை காவா வழி - இக் கொலைத்தொழில் குறையாத வேடன் செய்த கொலையைக் காவாவிடத்து, யாது என்றான் - என்ன பயனுடைத்து என்றான்.

அரசனது வெற்றிக்கு அவனது செங்கோல் காரணம் என்பதை,

"வேலன்று வென்றி தருவது மன்னவன்
கோலதூஉம் கோடா தெனின்"

என்னும் வாயுறைவாழ்த்தா லறிக.

"மாண்ட, அறநெறி முதற்றே யரசின் கொற்றம்"

என்றார் பிறரும். கோலான் என்பதற்குக் கோலையுடையன் என்று பிறர் பொருள் கூறியது சிறிதும் சிறப்பின்றாதலறிக. மாறு - பகை; பகைவரை யுணர்த்திற்று. அருளாணை - அருளுடன் கூடிய ஆணை. அரசன் துயிலும் பொழுதும் அவனது தெய்வத் தன்மையாகிய ஆணையானது உலகம் புரத்தலை,

"உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி
கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்"

என்று சீவக சிந்தாமணி கூறுகின்றது. ஆகவென்பது ஈறு தொக்கது. காப்பதை, ஐகாரியை. யாது - எத்தன்மைத்து. காக்கவில்லை யென்பான் 'காவாவழி' என்றான். அஃது - அவ்வாணை யெனலுமாம். அஃதியாது, குற்றியலிகரம். (கஅ)

வாயிலு ளார்த மன்னவன் முன்போய் மன்னுநங்
கோயிலின் மாடோர் வேதியன் மாதைக் கொலைசெய்தான்
ஆயின னென்றோர் வேடனை முன்விட் டவிந்தானைத்
தாயினன் வந்திங் கிட்டயர் கின்றான் றமியென்றார்.

(இ - ள்.) வாயில் உளார்தம் மன்னவன் முன்போய் - வாயில் காப்போர் தம் அரசன் முன் சென்று, மன்னு நம் கோயிலின் மாடு - அரசே நமது அரண்மனை வாயிலின் பக்கத்தில், ஓர் வேதியன் அவிந்தாளைத் தாயினன் வந்து இங்கு இட்டு - ஒரு மறையோன் உயிரிழந்த தன் மனைவியின் உடலை எடுத்து வந்து அங்குப் போட்டு, மாதைக் கொலை செய்தான் ஆயினன் என்று ஓர் வேடனை முன் விட்டு - அவளைக் கொலை செய்தானென்று ஒருவேடனை முன்னே விட்டு, தமி அயர்கின்றான் என்றார்- தனியே வருந்துகின்றான் என்றனர்.

செய்தான் என்பது செய்தானுயினன் என விரிந்து நின்றது. தாயினன்-தாவினன்; அணைத்தனன்; முற்றெச்சம். வேதியன் வந்து இட்டு முன் விட்டு அயர்கின்றான் என்றும், வாயிலுளார் வேதியன் அயர்கின்றான் என்றார் என்றும் கூட்டுக.(கக)

இறைமக னஞ்சா வென்குடை நன்று லென்காவல்
அறமலி செங்கோ லஞ்சு பயந்தீர்த் தரசாளும்
முறைமையு நன்றுன் மண்கலி மூழ்கா* முயன்றேந்தும்
பொறைமையு நன்று லென்று புலந்து புறம்போந்தான்.

(இ - ள்.) இறைமகன் அஞ்சா - (அதனைக் கேட்டலும்) அரசன் அஞ்சி, என் குடை நன்று - (உயிர்களுக்குத் தண்ணிய நிழலைத் தரும்) எனது வெண்கொற்றக்குடை நன்று யிருந்தது; என் காவல் அறம்மலி செங்கோல் - எனது காப்பாகிய அறம்மிக்க செங்கோலானது, அஞ்சு பயம் நீர்த்து அரசு ஆளும் முறைமையும் நன்று- (குடிகளுக்கு) ஐவகை அச்சமும் உண்டாகாமற் போக்கி ஆட்சி புரியும் முறையும் நன்று யிருந்தது; மண்கலி மூழ்கா முயன்று எந்தும் பொறைமையும் நன்று - நிலவுலகம் கலியில் மூழ்காமல் தாளாண்மையுடன் தாங்கும் பொறையும் நன்று யிருந்தது; என்று புலந்து புறம் போந்தான்-என்று தன்னை வெறுத்துக்கொண்டு புறத்தே வந்தான்.

செங்கோலால் அரசாளும் முறைமையும் எனவும், என்காவலும் செங்கோலும் முறைமையும் எனவும் விரித் துரைத்தலுமாம். அஞ்சு என்பதனை இரட்டுற மொழிதலாக்கி, அஞ்சுகின்ற எனவும், ஐந்து எனவும் பொருள் கொள்க. ஐந்து பயம் - அரசனாலும், அரசன் நமராலும், பகைவராலும், கள்வராலும், ஏனை உயிர்களாலும் உண்டாகும் அச்சம்;

"மாநிலங்கா வலனுவான் மன்னுயிர்காக் குங்காலை
தானதனுக் கிடையூறு தன்னுற்றன் பரிசனத்தால்
ஊனமிகு பகைத்திறத்தாற் கள்வரா லுயிர்தம்மால்
ஆனபய மைந்துந்தீர்த் தறங்காப்பா னல்லனே"

என்று திருத்தொண்டர் புராணங் கூறுதல் காண்க. கலி - தீமை; துன்பம். மூழ்கா ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். நன்று என்பன இகழ்ச்சிக் குறிப்பு; ஆல் அசை. (உ)

---

(பா - ம்.) *மூழ்க.

வேதிய னிற்குந் தன்மை தெரிந்தான் மெலிவுற்றான்
சாதியின் மிக்காய் வந்த துனக்கென் றளர்கின்றாய்
ஓதுதி யென்னக் காவல னைப்பார்த் துரைசான்ற
நீதியு ளாய்கே ளென்றுரை செய்வா னிகழ்செய்தி.

(இ - ள்.) வேதியன் நிற்கும் தன்மை தெரிந்தான் மெலிவுற்றான் - மறையோன் (வந்து) நிற்கும் தன்மையைக் கண்டு மெலிந்து, சாதியின் மிக்காய்-வருணத்தாற் சிறந்தவனே, தளர்கின்றாய் - நீ வருந்துகின்றனையே, உனக்கு வந்தது என் - நினக்கு நேர்ந்த துன்பம் யாது, ஓதுதி என்ன - சொல்லக் கடவாயென்று வினவ, காவலனைப் பார்த்து - அம்மறையோன் மன்னனை நோக்கி, உரைசான்ற நீதியுளாய் கேள் என்று - புகழமைந்த நீதியுடையாய் கேட்பாயாக வென்று, நிகழ்செய்தி உரை செய்வான் - நடந்த செய்தியைக் கூறுவானாயினன்.

நிற்குந் தன்மை - துன்பத்தில் ஆழ்ந்து நிற்கும் நிலைமை. தெரிந்தான், மெலிவுற்றான் என்பன முற்றெச்சங்கள். மெலிதல் - உளம் வாடுதல். ஓதுதி, ஒருமையேவல்; த் எழுத்துப் பேறு. அரசன் தெரிந்து மெலிந்து ஓதுதி யென்ன மறையோன் உரை செய்வான் என்க. (உக)

இன்றிவ ளைக்கொண் டோர்வட நீழ லிடையிட்டுச்*
சென்றுத ணீர்கொண் டியான்வரு முன்னிச் சிலைவேடன்
கொன்றய னின்றா னென்றுலை யூட்டுங் கொலைவேல்போல்
வன்றிறன் மாறன் செவிநுழை வித்தான் மறையோனால்.

(இ - ள்.) இன்று இவளைக் கொண்டு ஓர் வட நீழல் இடையிட்டுச் சென்று - இன்று இவளை அழைத்துக்கொண்டுவந்து ஒரு ஆலமரத்தின் நிழலின்கண் இருத்தி (நீரின் பொருட்டுச்) சென்று, தண் நீர் கொண்டு யான் வருமுன் - தண்ணீரினை முகந்து கொண்டு யான் வருதற்கு முன்னரே, இச்சிலை வேடன் - இந்த வில் வேடனானவன், கொன்று அயல் நின்றான் என்று - கொலை புரிந்து அருகே நின்று கொண்டிருந்தான் என்று (இச்சொல்லை), உலை ஊட்டும் கொலை வேல்போல் - (கொல்லன்) உலையிற் காய்ச்சிய கொலைத் தொழிலையுடைய வேல் போல, மறையோன் - அவ்வேதியன், வல்திறல் மாறன் செவி நுழைவித்தான் - மிக்க வலியினையுடைய பாண்டியனது செவியில் நுழைவித்தான்.

தணீர், ணகரம் தொக்கது. கொண்டியான், குற்றியலிகரம். வன்றிறல், ஒருபொரு ளிருசொல். வேல் நுழைந்தாற்போல் நுழையச் செய்தான் என்க; இச்சொல் செவியுறும் பொழுதே அரசன் அளவற்ற வேதனை யெய்தினன் என்றபடி. முற்று வினை முன் வந்தது. ஆல், அசை. (உஉ)

---

(பா - ம்.) *இடைவிட்டு.

அந்தணன் மாற்றந் தன்னையு முட்கொண் டறநோக்குஞ்
சந்தன வெற்பன் மறவனை நோக்கத் தாழ்ந்தன்னான்
எந்தை பிரானே நாயடி யேனின் றெய்ப்பாற
வந்து புகுந்தே னந்த மரத்தின் மருங்கோர்சார்.

(இ - ள்.) அறம் நோக்கும் சந்தன வெற்பன்-அறத்திற் பிழையாமையையே குறிக் கொள்ளும் பொதியின் மலையையுடைய பாண்டியன், அந்தணன் மாற்றம் தன்னையும் உட்கொண்டு - மறையோன் சொல்லையும் கேட்டு மனத்திற் கொண்டு, மறவனை நோக்க - வேடனைப் பார்க்க, அன்னான் தாழ்ந்து - அவ்வேடன் வணங்கி, எந்தை பிரானே - எம் தந்தையாகிய பெருமானே, நாய் அடியேன் - அடி நாயே னாகிய யான், இன்று எய்ப்பு ஆற - இன்று இளைப்பாறுதற் பொருட்டு, அந்த மரத் தின் மருங்கு ஓர் சார் வந்து புகுந்தேன் - அவ்வால மரத்தின் அடியில் ஒரு பக்கத் தில் வந்தடைந்தேன்.

மாற்றந் தன்னையும், தன் சாரியை; வேடன் மாற்றத்தையும் கேட்க என்னும் பொருள் குறித்தலால் உம்மை எச்சப் பொருட்டு. உட்கொள்ளல் - கேட்டலும், மனத்திற் கொள்ளலும். நோக்கும் என்னும் பெயரெச்சம் வெற்பன் என்பதன் விகு தியைக் கொள்ளும். சந்தன வெற்பு - சந்தன மரங்களையுடைய மலை; பொதியில். நோக்க-நிகழ்ந்ததைச் சொல்லுமாறு நோக்கினாற் கட்டளையிட. அறத்தை நோக்கு வோனாகலின் அந்தணன் சொல்லைக்கேட்ட வளவில் வேடனை ஒறுத்தல் செய்யாது, அவன் வாய் மொழியையும் கேட்டறிய விரும்பினான் என்க. எத்துணையும் சிறுமை யுடைய ஏவலாளன் என்பான் 'நாயடியேன்' என்றான். (உ௩)

ஐயே நானுங் கொன்றவ னல்லேன் கொன்றாரைக்
கையேன் வேறுங் கண்டில னென்றா னிவளாகம்
எய்யே றுண்ட வாறெவ னென்றா ரெதிர்நின்றார்
மெய்யே யையா யானறி யேனிவ் விளைவென்றான்.

(இ - ள்.) ஐயே - ஐயனே, நானும் கொன்றவன் அல்லேன் - நானும் இவ ளைக் கொலை செய்தவ னல்லேன்; கையேன் - கீழ் மகனாகிய யான், வேறு கொன் றாரையும் கண்டிலன் என்றான் - வேறு கொன்றவரையுங் காணேன் என்றுகூறினான்; எதிர் நின்றார் - எதிர்நின்ற அமைச்சர், இவள் ஆகத்துஎய் ஏறுண்டவாறு எவன் என் றார் - (ஆயின்) இவள் உடலிலே அம்பு தைத்துருவியது எங்ஙனம் என்றார், ஐயா இவ் விளைவு மெய்யே யான் அறியேன் என்றான் - ஐயா இந்நிகழ்ச்சியை உண்மையாகவே யான் அறியேன் என்றான்.

ஐயனே யெனற்பாலது வேட்டுவர் பேசுமுறைக்கியைய 'ஐயே' என நின் றது; ஐ என்பது விளியுரு பேற்றதுமாம்; ஐ - தலைவன்; அரசன். கை - சிறுமை. வேறு கொன்றாரையும் என உம்மையை மாறுக. அன்னான் எய்ப்பாற வந்து புகுந் தேன் கொன்றவ னல்லேன் கண்டிலன் என்றான்; என மேற் செய்யுளோடு இயைத்

துரைக்க. எய் - எய்யப்படுவது; அம்பு. ஏறுண்டவாறு எவன் - தைத்த விதம் என்னை. நின்றார், பெயர். ஐயா, பன்மையி லொருமை. (உ௪)

இக்கொலை செய்தான் யானல னென்னு துளனென்னத்
தக்கவ னேயோ தறுகண் மறவ னுரைமெய்யோ
சிக்க வொறுத்தா லல்லதை யுண்மை செப்பானென்
றொக்க வுரைத்தார் மந்திர ருள்ளார் பிறரெல்லாம்.

(இ - ள்.) (என்ற வளவில்) மந்திரர் உள்ளார் பிறர் எல்லாம் - அமைச்சருள்ளிட்ட அனைவரும், தறுகண் மறவன் - வன்கண்மையுடைய வேடனாகிய இவன், இக்கொலை செய்தான் யான் அலன் என்னாது - இந்தக் கொலையினைச் செய்தவன் யானல்லேன் என்று கூறாது, உளன் என்னத் தக்கவனேயோ - யான் செய்தேன் என்று உண்மை கூறுந் தகுதியை யுடையவனோ, உரை மெய்யோ - (இவன்கூறும்) சொல் மெய்யாகுமோ, சிக்க ஒறுத்தால் அல்லது உண்மை செப்பான் - மிகுதியாகத் தண்டித்தாலன்றி உண்மையைக் கூறமாட்டான், என்று ஒக்க உரைத்தார் - என்று ஒருசேரக் கூறினர்.

அன் விகுதி தன்மைக்கண் வந்தது. உளன் - செய்துளேன். கொடுமையை இயல்பாகவுடைய வேடனாகலின் இவன் அலனென்னாது உளனென்னத் தக்கவனோ என்க. ஏகாரம் இசைநிறை. ஓகாரம் எதிர்மறைப் பொருட்டு. சிக்க - யாப்புடைத்தாக; நன்கு. அல்லதை, ஐ சாரியை. அமைச்சரும் பிறருமாக உள்ளா ரெல்லாருஞ் சேர வுரைத்தாரென்க. (உ௫)

மன்னன் றானு மற்றது செய்ம்மின் னெனமள்ளர்
பின்னந் தண்டஞ் செய்தனர் கேட்கப் பிழையில்லான்
முன்னஞ் சொன்ன சொற்பெய ரானாய் மொழியாநின்
றின்னந் தீரத் தேருமி னென்றா னென்செய்வான்.

(இ - ள்.) மன்னன் தானும் மற்றது செய்மின் என - அரசனும் அதனைச் செய்யுங்கள் என்று கட்டளையிட, மள்ளர் பின்னம் தண்டம் செய்தனர் கேட்க - ஏவலாளர் பின்பு தண்டத்தினைச் செய்து கேட்க, பிழை இல்லான் - குற்றமற்ற அவ் வேடன், முன்னம் சொன்னசொல் பெயரானாய் மொழியா நின்று - முன் சொன்ன சொல்லினின்றும் மாறுபடாது கூறாநின்று, இன்னம் தீரத்தேருமின் என்றான் - இன்னும் முற்ற ஆராயுங்கள் என்று கூறினான்; என் செய்வான் - (இதையன்றி) வேறு யாதுசெய்ய வல்லன்.

தான், மற்று என்பன அசைகள். பின்னம், முன்னம், இன்னம் என்பவற்றில் அம் சாரியை; பகுதிப் பொருள் விகுதியுமாம். செய்தனர், முற்றெச்சம். தீர-முடிவுற. மொழியா நின்று என்பதனை முற்றாக்கி, பிழையில்லான் மொழியா நின்றான்; பாண்டியன் தேருமின் என்றான்; என்று பிறர் பொருள் கூறுவாராயினர். (உ௬)

ஆற்ற வொறுக்குந் தண்டமு மஞ்சா னறைகின்ற
கூற்றமு மொன்றே கொன்ற குறிப்பு முகந்தோற்றான்
மாற்றவ ரேயோ மாவோ புள்ளோ வழிவந்த
கோற்றொடி யைக்கொன் றென்பெற வல்லான் கொலைசெய்வான்.

(இ - ள்.) ஆற்ற ஒறுக்கும் தண்டமும் அஞ்சான் - மிகவும் ஒறுக்கும் தண்டத்திற்கும் அஞ்சுகின்றிலன்; அறைகின்ற கூற்றமும் ஒன்றே - இவன் கூறுகின்ற மறுமொழியும் (வேறுபாடின்றி) ஒன்றேயாயுள்ளது; கொன்ற குறிப்பும் முகம் தோற்றான்-கொன்ற குறிப்பும் முகத்திலே தோன்றப் பெற்றிலன்; மாற்றவரேயோ மாவோ புள்ளோ - தனக்குப் பகைவரோ (அன்றி) விலங்கோ பறவையோ, வழிவந்த கோற்றொடியைக் கொன்று என்பெற வல்லான் - வழியில்வந்த பார்ப்பனியைக் கொல்லுதலால் என்ன பயனைப் பெறுவானாய், கொலை செய்வான் - (இவன், அவளைக்) கொலை செய்தற் குரியனாவான்.

"அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சங்
கடுத்தது காட்டு முகம்"

என்பவாகலின், இவன் கொன்றிருப்பானாயின் அக் குறிப்பு முகத்திலே தோன்ற வேண்டும்; அங்ஙனம் தோன்றிற் றில்லையென்பான் 'கொன்ற குறிப்பு முகந் தோற்றான்' என்றான். பகைவர், விலங்கு, புள் என்பவற்றுள் ஒன்றாயின் இவன் கொல்லுதல் பொருந்தும், அவற்றுள் ஒன்றல்லாத பார்ப்பனியைக் கொல்லுதலால் இவன் கொன்றானென்பது எங்ஙனம் என்பான் 'மாற்றவரேயோ......கொலை செய்வான்' என்றான். ஓகாரங்கள் தெரிநிலைப் பொருளன. கோற்றொடி - கோல்போற் றிரண்ட வளையினை யுடையாள்; அன்மொழித் தொகை. 'மாற்றவரேயோ மாவோபுள்ளோ' என்பதற்கு, அவளைக் கொன்றது அம் மறையோனுக்குப் பகைவராயினாரோ அன்றி விலங்கோ பறவையோ என்றும், 'கொலை செய்வான்' என்பதற்கு வேடன் என்றும் பிறர் பொருள் கூறுவாராயினர். இதுவும் வருஞ் செய்யுளும் அரசன் உட்கோள். (௨௭)

கைதவ னாமிக் கானவ னேயோ பிறரேயோ
செய்தவர் யாரே யிக்கொலை வேட்டஞ் செய்தோர்மா
எய்த விலக்கிற் றப்பிய கோறா னேறுண்டிம்
மைதவழ் கண்ணாள் மாய்ந்தன ளேயோ வறியேனால்.

(இ - ள்.) இக்கொலை செய்தவர் - இந்தக் கொலையினைப் புரிந்தவர், கைதவனாம் இக்கானவனேயோ - வஞ்சகனாகிய இவ்வேடன்றானோ, பிறரேயோ- (அன்றிப்) பிறரோ, யாரே - யாரோ, வேட்டம் செய்தோர் மா எய்த இலக்கில் தப்பிய கோல் தான் ஏறுண்டு-(அல்லது) வேட்டை யாடுவோர் விலங்கினை எய்த குறிப்பினின்றும் பிழைத்த கணைதான் தைத்தலால், இம் மைதவழ் கண்ணாள் மாய்ந்தனளேயோ - இந்த மைதீட்டிய கண்களை யுடையவள் இறந்தனளோ, அறியேன் - அறிந்திலேன்.

கைதவன் என்றது வேடுவனென்னும் பொதுமை குறித்தது. இவன் கொன் றிலனென்று துணிதலும் அரிதென்பான் 'கைதவனு மிக்காணவனேயோ' என்ருன் ஏகாரங்கள் இசை நிறைக்க வந்தன, தான், ஆல் அசை. (உ அ)

என்னு முன்னித் தென்னவ னின்ன மிதுமுன்னூல்
தன்னு லாயத் தக்கதை யென்ருன் றகவிற்றன்
அன்னு ரந்நூ லாய்ந்திது நூலா லமையாதால்
மன்னு தெய்வத் தாலே தேறும் வழியென்ருர்.

(இ - ள்.) என்னு தென்னவன் முன்னி - என்று பாண்டியன் நினைத்து, இன்னம் இது முன்னூல் தன்னல் ஆயத் தக்கது என்ருன் - இன்னும் இது அறநூலால் ஆராய்ந்து தெளியத் தக்கது என்ருன்; தகவில் தன் அன்னர் அந்நூல் ஆய்ந்து - தகுதியில் தன்னை யொத்தவர்களாகிய அமைச்சர்கள் அவ்வற நூலை ஆராய்ந்து, மன்னு - வேந்தனே, இது நூலால் அமையாது- இது நூலா ராய்ச்சியாலே தெளியத் தக்கதன்று; தெய்வத்தாலே தேறும்வழி என்ருர் - தெய்வத்தினுலே தெளியும் நெறி யினை யுடையது என்ருர்கள்.

முன்னூல் - தொன்மையாகிய நூல். தக்கதை, ஐசாரியை. அரசன் எவ்வளவு தகுதி யுடையனே அவ்வளவு தகுதியுடைய ரென்பார் 'தகவிற் றன்னன்னுர்' என்ருர். தன்னன்னுர் - புரோகிதருமாம். ஆராய்ந்து, அறியலாகாமையால், இது நூலாலமை யாது தெய்வத்தாலே தேறும் வழியென்ரு ரென்க. ஆல், அசை. தேறும் வழி-தெளி யும் வழியினை யுடையது; தெய்வத்தின் வழியாற் றெளியற்பால தென்பது. (உக)

வேந்தர்கள் சிங்கம் வேதிய னைப்பார்த் திதுதீர
ஆய்ந்தன துள்ளக் கவலை யொழிப்பே னஞ்சேனின்
ஏந்திழை யீமக் கடனிறு விப்போ தென்றேவித்
தேந்துணர் வேங்கைத் தார்மற வோனைச் சிறைசெய்தான்.

(இ - ள்.) வேந்தர்கள் சிங்கம் - (அதனைக் கேட்ட) மன்னர்களுட் சிங்கம் போன்ற பாண்டியன், வேதியனைப் பார்த்து - மறையவனை நோக்கி, இது தீர ஆராய்ந்து உனது உள்ளக்கவலை ஒழிப்பேன் - இதனை நன்கு ஆராய்ந்து உன் மனக் கவலையைப் போக்குவேன்; அஞ்சேல் - நீ அஞ்சற்க; நின் ஏந்திழை ஈமக்கடன் நிறு விப் போது என்று ஏவி - நின் மனைவியின் ஈமக்கடன்களை முடித்து வருக என்று போக்கி, தேம்துணர் வேங்கைத்தார் மறவோனைச் சிறை செய்தான் - தேன் சிந்தும் பூங்கொத்துக்களையுடைய வேங்கைமலர் மாலையை யணிந்த வேடனைச் சிறைப் படுத்தினன்.

பகை வேந்தர்களாகிய யானைகளுக்கு ஆண்சிங்கம் போன்றவன் என்றுமாம். ஏந்திழை, அன்மொழித் தொகை. போது - புகுது; வா. இப்போது என்று பிரிக் கலாமெனினும், வருகவென்று கூறல் வேண்டுமாகலின் இது சிறப்பின்று. வேங்கை யின் துணர்த்தார் என்று கூட்டலுமாம். (கூஙு)

மின்னனை யாடன் செய்கடன் முற்று மீண்டோனைத்
தன்னமர் கோயிற் கடைவயின் வைத்துத் தானேகிக்
கொன்னவில் வேலான் றங்கள் குடிக்கோர் குலதெய்வம்
என்ன விருந்தா ரடிகள் பணிந்தா னிதுகூறும்.

(இ - ள்.) மின் அனையாள் தன் செய்கடன் முற்று மீண்டோனை - மின்னலை யொத்த மனைவிக்கு இறக்க வேண்டிய கடன்களைச் செய்து முடித்துத் திரும்பிவந்த மறையோனை, தன் அமர்கோயில் கடைவயின் வைத்து - தன்னால் விரும்பப்பட்ட அரண்மனை வாயிலில் வைத்துவிட்டு, கொல்நவில் வேலான் தான் ஏகி - கொலைத் தொழில் பயின்ற வேற்படை யேந்திய பாண்டியன் தான் சென்று, தங்கள் குடிக்கு ஓர் குலதெய்வம் என்ன இருந்தார் - தமது குடிக்கு ஒரு குலதெய்வமாக எழுந்தருளி யுள்ள சோமசுந்தரக் கடவுளின், அடிகள் பணிந்தான் இது கூறும் - திருவடிகளை வணங்கி இதனைக் கூறுகின்றான்.

தவிராது இறுக்கத் தக்கது என்பார் 'செய்கடன்' என்றார். தன் அமர் கோயில் - தன்னால் விரும்பப்பட்ட கோயில்; தனது விருப்பம் பொருந்திய கோயில் என விரித்தலுமாம். அமர்தல் - உளம் மேவுதல். குலதெய்வமென்று உலகங்கூற என்றுமாம். பணிந்தான், முற்றெச்சம். இது வென்றது பின் வருவதனை. (௩க)

[கொச்சகக் கலிப்பா]

மன்றாடு மணியேயிம் மறவன்றான் பார்ப்பனியைக்
கொன்றானோ பிறர்பிறிதாற் கொன்றதோ விதுவறநூல்
ஒன்றாலு மளப்பரிதாக் கிடந்ததா லுன்னருளால்
என்றாழ்வு கெடத் தேற்றா யென்றிரந்தா னவ்வேலை.

(இ - ள்.) மன்று ஆடும் மணியே-வெள்ளியம்பலத்தில் ஆடியருளும் மாணிக் கமே, இம்மறவன் தான் பார்ப்பனியைக் கொன்றானோ - இவ்வேடன் தான் அப்பார்ப் பனியைக் கொன்றானோ (அன்றி), பிறர் பிறிதால் கொன்றதோ - பிறர் பிற கார ணத்தாற் கொன்றதோ, இது அறநூல் ஒன்றாலும் அளப்பரிதாக் கிடந்தது - இந் நிகழ்ச்சி அறநூல் முதலிய ஒன்றாலும் அளந்தறிதற் கரியதாகக் கிடக்கின்றது; உன் அருளால் என் தாழ்வு கெடத்தேற்றாய் என்று இரந்தான் - உனது திருவருளால் எனது குறைவு தீரத் தெளிவிப்பாயாக என்று குறையிரந்தான்; அவ்வேலை - அப் பொழுது.

கொன்றதோ இக்கொலை யென்க. அறநூலாலும் வேறொன்றாலும்; அறநூல் களுள் ஒன்றாலும் என்னலுமாம். அரிதாக என்பது ஈறுதொக்கது. ஆல், அசை. என் தாழ்வு - எனக்கு உண்டாகும் பழி. (௩௨)

திருநகரின் புறம்பொருசார் குலவணிகத் தெருவின்கண்
ஒருமனையின் மணமுளதங் கந்தணனோ டொருங்குநீ
வருதியுன துளந்தெரு மாற்றமெலாந் தேற்றுதுமென்
றிருவிசும்பி னகடுகிழித் தெழுந்ததா லொருவாக்கு.

(இ - ள்.) திருநகரின் புறம்பு ஒருசார் வணிகர் குலத் தெருவின்கண் - இத் திருநகரத்தின் புறம்பே ஒரு பக்கத்தில் வணிகர்குலத் தெருவிலுள்ள, ஒரு மனையில் மணம் உளது - ஒரு வீட்டில் மணவினை நிகழ்வதுளது; அங்கு அந்தணனோடு ஒருங்கு நீ வருதி - அவ்வில்லிற்கு அம்மறையவனோடு நீ ஒருசேர வருவாயாக; உனது உளம் தேறா மாற்றம் எலாம் தேற்றுதும் என்று - உன் உள்ளந் தெளியாத மாறுபாட்டினை யெல்லாம் தெளிவிப்போமென்று, இருவிசும்பின் அகடு கிழித்து ஒருவாக்கு எழுந்தது - பெரிய வானினது வயிற்றைக் கீண்டுகொண்டு ஒரு அசரீரிவாக்கு எழுந்தது.

திருநகர் - கோயில் எனினும் பொருந்தும். குலம் - சிறப்புமாம். மாற்றம் - செய்தி யென்றுமாம். விசும்பினின்றும் தோன்றியதனை 'விசும்பினகடு கிழித்தெழுந் தது' என்றார். ஆல், அசை. அவ்வேலை ஒருவாக்கு எழுந்தது என்க. (ருரு)

திருவாக்குச் செவிமடுத்துச் செழியன்றன் புறங்கடையிற்
பெருவாக்கு மறையவனோ டொருங்கெய்திப் பெரும்பகல்போய்க்
கருவாக்கு மருண்மாலைக் கங்குல்வாய்த் தன்னைவேற்
றுருவாக்கிக் கடிமனைபோ யொருசிறைபுக் கினிதிருந்தான்.

(இ - ள்.) திருவாக்குச் செவிமடுத்து - அத் திருவாக்கினைக் கேட்டு, செழியன் - பாண்டியன், தன் புறங்கடையில் பெருவாக்கு மறையவனோடு ஒருங்கு எய்தி- தனது கடைவாயிலுள்ள மறைகளை யுணர்ந்த அந்தணனோடும் ஒருங்குகூடி, பெரும் பகல் போய் - பெரிய பகற்பொழுது கழிந்து, கரு ஆக்கும் மருள்மாலை கங்குல்வாய்- கருமையை உண்டாக்கும் மயங்கிய மாலைப்பொழுதின் இருளில், தன்னைவேறு உரு வாக்கி - தன்னை வேற்றுருவ மாக்கிக் கொண்டு, கடிமனை போய் ஒரு சிறைபுக்கு இனிது இருந்தான் - மணவீடு சென்று ஒரு பக்கத்திற் புகுந்து இனிதே இருந்தனன்.

செவி நிரம்பக் கேட்டான் என்பார் 'செவி மடுத்து' என்றார். புறங்கடை இலக்கணப் போலி. பெருவாக்கு - பெருமையுடைய வாக்கு; மறை. கரு - கருமை. மருள்மாலை - பகலும் இரவும் மயங்கிய மாலை; மயக்கத்தைச் செய்யும் மாலை. வேற் றுரு வாக்கல் - அரச கோலமின்றி வேறு கோலங் கொள்ளல். பிறரால் அறியப்படா மல் இடையூறின்றி யிருந்தான் என்பார் 'இனிதிருந்தான்' என்றார். (ருச)

அன்றிறைவ னருளாலங் கவர்கேட்க வம்மனையின்
மன்றல்மகன் றனக்களந்த நாளுலப்ப மறலியிருட்
குன்றமிரண் டெனவிடுத்த கொடும்பாசக் கையினர்வாய்
மென்றுவருஞ் சினத்தவரி லொருவனிது விளம்புமால்.*

(இ - ள்.) அன்று இறைவன் அருளால் - அப்பொழுது சோமசுந்தரக் கடவு ளின் திருவருளால், அங்கு அவர் கேட்க-அங்கே பாண்டியனும் மறையோனும் கேட்கு மாறு, அம்மனையில் - அம்மண வீட்டின்கண், மன்றல் மகன் தனக்கு அளந்த நாள் உலப்ப - மணமகனுக்கு வரையறுத்த வாழ்நாள் முடிதலால், மறலி - கூற்றுவன்,

* (பா - ம்.) *வினவுமால்.

இரண்டு இருட்குன்றமென விடுத்த - இரண்டு கரியமலைபோல விடுத்த, கொடும் பாசக்கையினர் - கொடிய பாசத்தைக்கையிற் கொண்டவராய், வாய்மென்று வரும் சினத்தவரில் - வாயை மென்றுவருஞ் சினத்தையுடைய காலபடர் இருவருள், ஒரு வன் இது விளம்பும் - ஒருவன் இதனைக் கூறுவான்.

அளந்த - வரையறுத்த;

"அளந்தன போக மவரவ ராற்றால்"

என்பது காண்க. விடுத்த என்னும் பெயரெச்சம் சினத்தவர் என்பதன் விகுதி கொண்டு முடியும். நாளுலத்தலால் மறலிவிடுத்த சினத்தவரில் ஒருவன் இறைவ னருளால் அது கேட்க இது விளம்பும் என முடிக்க. ஆல், அசை. (நரு)

இன்றேயிங் கிவனுயிரைத் தருதிரெனு மிரும்பகட்டுக்
குன்றேறுங் கோனுரையாற் கொள்வதெவன் பிணியுடம்பின்
ஒன்றேனு மிலனொருகா ரணமின்றி யுயிர்கொள்வ
தன்றேயென் செய்துமென மற்றவனீ தறைகிற்பான்.

(இ - ள்.) இன்றே இங்கு இவன் உயிரைத் தருதிர் எனும் - இப்பொழுதே இங்கு இம்மணமகன் உயிரைக்கொண்டு வருவீராக என்று கூறிய, இரும்பகட்டுக் குன்று ஏறும்கோன் உரையால் - பெரிய எருமைக்கடாவாகிய மலையிலேறும் நம் தலைவனது ஆணையால், கொள்வது எவன் - இவனுயிரைக் கவர்வது எங்ஙனம்; உடம்பில் பிணி ஒன்றேனும் இலன் - உடலின்கண் ஒருபிணியும் இல்லாதவனுயுளன், ஒருகாரணம் இன்றி உயிர்கொள்வது அன்றே - ஒருகாரணமு மில்லாமல் ஒருயிரைக் கொள்வது இயல்வதன்றே, என்செய்தும் என - என்ன செய்வோம் என்று வினவ, மற்றவன் ஈது அறைகிற்பான் - மற்றொருவன் இதனைக் கூறுவான்.

இரும்பகடு - கரிய கடாவுமாம். தருதிரென்பது கோன் உரையாகும்; காரணமின்றி உயிர் கொள்வதன்றே: பிணி ஒன்றேனு மிலன்; ஆகலின் அவனுரை யாற் கொள்வது எவன்; என்செய்தும்; என்றிங்ஙனம் உரைத்துக் கொள்க. மற் றவன் - மற்றையான். (நசு)

ஆற்றாலே றுண்டகணை யருகொதுங்கும் பார்ப்பனியைக்
காற்றால்வீழ்த் தெவ்வாறு கவர்ந்தேமப் படியிந்தச்
சாற்றார வாரத்திற் றும்பறுத்துப் புறநின்ற
ஈற்றாவை வெருளவிடுத் திவனாவி கவர் கென்றான்.

(இ - ள்.) ஆற்று ஆல் அருகு ஒதுங்கும் பார்ப்பனியை - வழியிலுள்ள ஆல மரத்து நிழலினருகு ஒதுங்கிய பார்ப்பனியின் உயிரை, ஏறுண்ட கணைகாற்றால் வீழ்த்து எவ்வாறு கவர்ந்தேம் - (அம் மரத்தின்கண் முன்னரே) சிக்கிக் கிடந்த கணையைக் காற்றினால் வீழ்த்தி எங்ஙனம் கவர்ந்தோமோ, அப்படி - அவ்வாறே, புறம் நின்ற ஈற்று ஆவை - புறத்தே நின்ற புனிற்றுப் பசுவினை, இந்தச் சாற்று ஆர

வாரத்தில் தாம்பு அறுத்து வெருள விடுத்து-இந்த மணவிழாவின் ஆரவாரத்தினாலே கயிற்றை யறுத்து வெருண்டோடச் செய்து, இவன் ஆவி கவர்க என்றான் - இவனு யிரை வௌவுவேமாக என்றான்.

சாறு - விழா. ஈற்றா - கன்றினை யீன்ற அணிமையை யுடைய பசு; புனிற்றா, கவர்கவென வியங்கோள் தன்மைக்கண் வந்தது; அகரந் தொகுத்தல்; கவர்கும் என்னும் தன்மைப் பன்மை விகார மாயிற்றுமாம். பார்ப்பனி உயிரை எங்ஙனம் கவர்ந்தேமோ அங்ஙனம் இவனுவியைக் கவர்வேம் என்றானென்க. (௩எ)

அந்தமொழி கேட்டரச னருமறையோய் கேட்டனையோ
இந்தமொழி யெனப்பனவ னிவனிவ்வா றிறந்தாலென்
பைந்தொடியா ளிறந்ததுமப் படியேயென் மனக்கவலை
சிந்தவிது காண்பேனென் றொருங்கிருந்தான் றென்னனொடும்.

(இ - ள்.) அந்தமொழி அரசன் கேட்டு - அவ் வார்த்தையை மன்னவன் கேட்டு, அரு மறையோய் - அரிய வேதங்களையுணரும் அந்தணனே, இந்த மொழி கேட்டனையோ என - இவ் வார்த்தையைக் கேட்டாயோ என வினவ, பனவன் - அப் பார்ப்பனன், இவன் இவ்வாறு இறந்தால் - இம் மணமகன் இங்குக் கூறிய வாறே இறந்து படுவானாயின், என் பைந்தொடியாள் இறந்ததும் அப்படியே - என் மனைவி இறந்ததும் அங்ஙனமே தான், என் மனக்கவலை சிந்த இது காண்பேன் என்று - எனது மனத் துன்பங்கெட இந் நிகழ்ச்சியைக் காண்பேனென்று கூறி, தென்னனொடும் ஒருங்கு இருந்தான் - பாண்டியனோடும் ஒருசேர இருந்தனன்.

அப்படியே - அங்ஙனமே யென்பது உண்மை யாகும். (௩அ)

ஒட்டியபல் கிளைதுவன்றி யொல்லொலிமங் கலந்தொடங்கக்
கொட்டியபல் லியமுழங்கக் குழுமியவோ சையின் வெருண்டு
கட்டியதாம் பிறப்புனிற்றுக் கற்றாவொன் *றதிர்ந்தோடி
முட்டியதான் மணமகனை முடிந்ததா லவனாவி.

(இ - ள்.) ஒட்டிய பல் கிளை துவன்றி ஒல்லொலி மங்கலம் தொடங்க-நெருங்கிய பல சுற்றத்தாரும் சேர்ந்து ஒல்லென்னும் ஒலியுடன் மணவினையைத் தொடங்கவும், கொட்டிய பல் இயம் முழங்க - அடிக்கப்பட்ட பல இயங்களும் ஒலிக்கவும், குழுமிய ஓசையின் - இவை ஒருங்கு தொக்க பேரொலியால், கட்டிய தாம்பு இற - கட்டப்பட்ட கயிறு அறுமாறு, புனிற்றுக் கன்று ஆ ஒன்று-இளங் கன்றினையுடைய பசு ஒன்று, வெருண்டு அதிர்ந்து ஓடி மணமகனை முட்டியது - அஞ்சி அலறி ஓடி மணமகனை முட்டியது; அவன் ஆவி முடிந்தது - அவன் உயிர் முடிந்தது.

ஒட்டிய - அணுகிய. மங்கலந் தொடங்க - கடிசூத்திரம் அணியத் தொடங்குகையில் என்றுமாம். கொட்டப்பட்டனவாகி முழங்கவென்று கொள்க. புனிற்றுக்

(பா - ம்) *எதிர்ந்தோடி.

வாலவாயில் எழுந்தருளிய ஒப்பற்ற இறைவனும், இமையா அங் கயல் கண்ணியுடன் உறை ஒருவனை - இமையாத அங்கயற்கண்ணியுடன் உறைகின்ற ஒருவனுமாகிய சோமசுந்தரக் கடவுளை, சென்னிமேல் பன்னிரண்டு உம்பர் ஒன்ற வைத்து - முடியின் மீது பன்னிரண்டு அங்குலத்திற்கு அப்பால் பொருந்த வைத்து, நினைந்தான் - தியானித்தான்.

அருள்கனிந் தொழுகத் திருவாய்மலர்ந்த வாசகமும் என்று மாறுதலுமாம். சென்னி - பிரமரந்திரம். பன்னிரண்டு உம்பர் - துவாதசாந்தம். இறைவனும் இறைவியும் துவாதசாந்தத்தில் இருத்தலை,

> "உயிர்த்துணையாந் தோன்றாத் துணைக்கோர் துணையாகித்
> துவாதசாந்தப் பெருவெளியிற் றுரியங்கடந்த பரநாத
> மூலத்தலத்து முளைத்த முழுமுதலே"

எனக் குமரகுருபர வடிகள் மீனாக்ஷியம்மை பிள்ளைத்தமிழில் அருளிச் செய்தலானு மறிக. ஆலவாயாகிய திருப்பதி எனக் கொண்டு, அஃது அண்டத்தில் துவாதசாந்தத்தலம் எனப்படுமாகலின் அதனைப் பிண்டத்தினுள்ளே துவாதசாந்தத்துடன் ஒன்றவைத்து ஆண்டு அங்கயற்கண்ணியுடன் உறை ஒருவனை நினைந்தான் என்றுரைத்தலுமாம். (௫௬)

பரவச மடைந்து வழிகவர்ந் துண்ணும் பழிப்புல வேடர்போ யொளிப்ப
இருள்வெளி கடந்து திருவருள் வழிச்சென் றெண்ணிலாச் சராசர மனைத்தும்
புரையற நிறைந்து காட்சிகண் காண்பான் புதைபடத் தனித்தபூ ரணமாய்
உரையுணர் விறந்த வுண்மையா னந்த வுணர்வினை யுணர்வற நினைந்தான்.

(இ - ள்.) பரவசம் அடைந்து - சிவகரணம்பெற்று, வழிகவர்ந்து உண்ணும் பழிப்புல வேடர்போய் ஒளிப்ப - ஆறலைத் துண்ணுகின்ற பழிமிக்க ஐம்புல வேடர்கள் போய் மறைய, இருள் வெளி கடந்து-கேவல சகல அவத்தைகளைக் கடந்து, திருவருள் வழிச்சென்று - திருவருளின் வழியே சென்று, எண் இலாச் சர அசரம் அனைத்தும் நிறைந்து - அளவிறந்த இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளுமாகிய அனைத்திலுங் குற்றமற நிறைந்து, காண்பான் காட்சி கண்புதைபட - காண்பானுங் காட்சியுங் காட்சிப் பொருளு மறைய, தனித்த பூரணமாய் - ஒப்பற்ற பூரணவடிவாய், உரை உணர்வு இறந்த உண்மை ஆனந்த உணர்வினை - மாற்றமு மனமுங் கழிய நின்ற சச்சிதானந்த வடிவினை, உணர்வு அற நினைந்தான் - இடையறாது தியானித்தான்.

புலம் - பொறி. வழிகவர்ந்துண்ணும் வேடர்போலும் ஐயம்பொறிகள் என்க;

> "ஐம்புல வேடரி னயர்ந்தனை"

எனச் சிவஞான போதம் கூறுவதுங் காண்க. ஆன்மா இச்சை ஞானக்கிரியைகளின் நிகழ்ச்சி சிறிதுமின்றி ஆணவ மலத்தால் மறைப்புண்டு நிற்பது கேவலம் ஆகலின் அதனை 'இருள்' என்றும், மாயேயமாகிய தநுகரண புவன போகங்களைப் பொருந்தி இச்சை ஞானக் கிரியைகள் சிறிது விளங்கப் பெற்று நரகொடு சுவர்க்கம் நானிலங்களிற் போக்குவரவு புரிவது சகலம் ஆகலின் அதனை 'வெளி' என்றும் கூறினர்; எனவே நின்மலாவத்தையை யெய்தி என்றவாறு. அவனருளே கண்ணாகக் காண்பார்க்கன்றி இறைவன் அறியவாரானாகலின் 'திருவருள் வழிச்சென்று' என்றார். சென்று

(இ - ள்.) அந்தணன் கண்டான் - மறையோன் அதனைக் கண்டு, என்ன காரியம் செய்தேன் என்று - யாது காரியம் செய்து விட்டேனென்று இரங்கி, தன் வண்டு ஆர் பூங்குழல் மனைவி மாட்சியினும் கழிதுன்பம் கொண்டான் - தன் வண்டு மொய்க்கும் பூவை யணிந்த கூந்தலையுடைய மனைவியினது இறப்பினும் மிக்க துன்பத்தைக் கொண்டான்; அலர் வேப்பம் தண் தாரான் - மலர்ந்த வேப்பம் பூவாலாகிய தண்ணிய மாலையை யணிந்த பாண்டியன், அவனொடும் தன் கோயில் புகுந்து - அவ் வேதியனுடன் தனது மாளிகையை அடைந்து, அமைச்சர்க்கும் பிறர்க்கும் இது சாற்றினான் - அமைச்சர்களுக்கும் ஏனையோர்க்கும் இதனைக் கூறினான்.

என்ன காரியஞ் செய்தேன் என்றது குற்றமில்லாத வேடன்மேல் இவ்வடாத பழியைச் சுமத்தி அவனை யொறுக்குமாறு செய்தேனே என்று கழிந்ததற் கிரங்கிய படி. மாட்சி - இறப்பு; மாள் பகுதி. மாண்ட துன்பத்தினும் மிக்க துன்பமென்க. மற்று, அசை. வேம்பு என்பது அம் சாரியை பெற்று வலித்தது. (சக)

மறையவனை யின்னுமொரு மணமுடித்துக் கோடியென
நிறையவரும் பொருளீந்து நீபோதி யெனவிடுத்துச்
சிறையமுவத் திடைக்கிடந்த செடித்தலைய விடிக்குரல
கறையுடல்வே டனைத்தொடுத்த கால்யாப்புக் கழல்வித்து.

(இ - ள்.) மறையவனை நீ இன்னும் ஒரு மணம் முடித்துக் கோடி என - அந்தணனை (நோக்கி) நீ இன்னும் ஒரு மணஞ்செய்து கொள்வாயாக என்று, அரும் பொருள் நிறைய ஈந்து - அரிய பொருளை நிறையக் கொடுத்து, போதி எனவிடுத்து - செல்க என்று விடைகொடுத்தனுப்பி, சிறை அமுவத்து இடைக் கிடந்த - சிறைச் சாலையின்கண் (மனக்கவலையொடுங்) கிடந்த, செடித்தலைய இடிக்குரல கறை உடல் வேடனை - முடைநாற்றம் பொருந்திய தலையினையும் இடி போன்ற குரலினையும் கரிய உடம்பினையுமுடைய வேடனை, தொடுத்தகால் யாப்புக் கழல்வித்து - பூட்டிய கால் விலங்கினைக் கழற்றச் செய்து.

கோடி - கொள்ளுதி; பகுதி முதனீண்டது; த் எழுத்துப் பேறு; போதி என்பதிலும் த் எழுத்துப் பேறே. அமுவம் - பரப்பு, அரண். தலைய, குரல என்பவற்றில் அ அசை; குறிப்புப் பெயரெச்சமாகக் கொண்டு தனித்தனி கூட்டுவாருமுளர். கறை - கருமை; அழுக்குமாம். கால்யாப்பு - விலங்கு. (சஉ)

தெளியாதே யாமிழைத்த தீத்தண்டம் பொறுத்தியென
விளியாவின் னருள்சுரந்து வேண்டுவன நனிநல்கி
அளியாறு மனத்தரச னவனையவ னிடைச்செலுத்திக்
களியானை விழவெய்த கௌரியனைப்* போய்ப் பணிவான்.

(இ - ள்.) அளி ஆறு மனத்து அரசன் - தண்ணளி நீங்காத மனத்தையே யுடைய மன்னன், அவனை விளியா - அவனைத் தன் னருகிலழைத்து, தெளியாதே

(பா - ம்.) *எய்த காவலனை.

யாம் இழைத்த தீத்தண்டம் பொறுத்தி என - உண்மை அறியாமல் யாஞ்செய்த கொடிய தண்டத்தைப் பொறுக்கக்கடவை என்று கூறி, இன் அருள் சுரந்து-இனிய கருணை சுரந்து, வேண்டுவன நனி நல்கி - அவன் விரும்பிய பொருள்களை மிகவும் அளித்து, அவன் இடைச் செலுத்தி - அவனிடத்திற்குப் போக விடுத்து, களியானை விழ எய்த கௌரியனைப் போய்ப் பணிவான் - (சமணர்கள் ஏவிய) களிப்பினை யுடைய யானை விழும்படி அம்பெய்த சோமசுந்தரக் கடவுளைச் சென்று வணங்குவா னாயினான்.

அவனை விளியா எனக் கூட்டுக; விளியா - விளித்து; பெயரெச்சமாக்கி, கெடாத இனிய அருள் என்றுரைத்தலுமாம். வேண்டுவன - வரிசைகளுமாம். கௌரியன் - பாண்டியன்; இறைவன் சுந்தர பாண்டியனாக விருந்து அரசு புரிந்தன னாகலின் 'கௌரியன்' என்றார். (௩௩)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

ஆதரம் பெருகப் பாவியேன் பொருட்டெம் மடிகணீ ரரும்பழி யஞ்சு
நாதரா யிருந்தீ ரெந்தையார்க் குண்டோ* நான்செயத் தக்கதொன் றென்னக்
காதலிற் புகழ்ந்து பன்முறை பழிச்சிக் கரையின்மா பூசனை சிறப்பித்
தேதம தகற்றி யுலகினுக் குயிரா யிருந்தன னிறைகுலோத் துங்கன்.

(இ - ள்.) ஆதரம் பெருக - அன்பு மேலோங்கத் (திருமுன் நின்று), எம் அடிகள் - எம்மிறைவரே, பாவியேன் பொருட்டு நீர் அரும்பழி அஞ்சும் நாதராய் இருந்தீர் - பாவியேன் பொருட்டாகத் தேவரீர் அரிய பழியினை அஞ்சுகின்ற நாதரா யிருந்தீர்; எந்தையார்க்கு நான் செயத்தக்கது ஒன்று உண்டோ என்ன - (அங்ஙன மிருந்த) எம் தந்தையாகிய உமக்கு நான் செய்யத் தக்க கைம்மாறு ஒன்று உண்டோ என்று, காதலில் புகழ்ந்து - அன்பினாற் புகழ்ந்து, பல் முறை பழிச்சி - பல முறை துதித்து, கரை இல் மா பூசனை சிறப்பித்து - அளவில்லாத பெரிய பூசைகளைச் செய் வித்து, இறை குலோத்துங்கன் - அரசனாகிய குலோத்துங்க பாண்டியன், ஏதம் அகற்றி - துன்ப மூண்டாகாமற் போக்கி, உலகினுக்கு உயிராய் இருந்தனன் - உல கத்திற்கு ஓர் உயிராகி வீற்றிருந்தான்.

ஆதரம் பெருகத் திருமுன் நின்று கூறிப் புகழ்ந்து என்க. பாவியேனுக்கு வரக்கிடந்த பழிக்கு அஞ்சினமையால், பழியஞ்சுநாதர் என்பதொரு பெயருடைய ராயினீர் என்பான் 'பழியஞ்சுநாதரா யிருந்தீர்' என்றான். எளியேனாற் செய்யத்தக்க தொரு கைம்மாறும் உண்டோ வென்க. மா பூசனை - விழா முதலியன. ஏதம் - உலகிற்கு ஐவகையால் வருந் துன்பம். அது, பகுதிப் பொருள் விகுதி. "மன்ன னுயிர்த்தே மலர்தலை யுலகம்" என்பவாகலின் 'உலகினுக் குயிரா யிருந்தனன்' என்றார். (௩௪)

ஆகச் செய்யுள்—க௫௩௩.

(பா - ம்.) *உண்டே.

# இருபத்தேழாவது
# அங்கம்வெட்டின படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

வேதகந் தரத்து* முக்கண் வேதியன் மறையோன் செய்த
பாதகந் தவிர்த்த வாறு பகர்ந்தனம் விஞ்சை யீந்த
போதகன் மனைக்குத் தீங்கு† புந்திமுன் னாகச் செய்த
சாதகன் றனைப்போ ராற்றித் தண்டித்த தண்டஞ் சொல்வாம்.

(இ - ள்.) வேத கந்தரத்து முக்கண் வேதியன்-வேதம் பாடுந் திருமிடற்றினை யுடைய மூன்று கண்களையுடைய மறையோனாகிய சோமசுந்தரக்கடவுள், மறையோன் செய்த பாதகம் தவிர்த்தவாறு பகர்ந்தனம் - பார்ப்பனன் புரிந்த மாபாதகத்தினை நீக்கியருளிய திருவிளையாடலைக் கூறினோம்; விஞ்சை ஈந்த போதகன் மனைக்கு - (இனி) வாள் வித்தை கற்பித்த ஆசிரியன் மனைவிக்கு, புந்தி முன்னாகத் தீங்கு செய்த சாதகன்தனை - அறிவு சான்றாகத் தீங்கு புரிந்த மாணவனை, போர் ஆற்றித் தண்டித்த தண்டம் சொல்வாம்-போர் புரிந்து தண்டித்த திருவிளையாடலைக் கூறுவோம்.

வேதகந் தரித்த என்னும் பாடத்திற்கு இரத குளிகை போன்று வேதித் தலைக்கொண்ட என்றும், பிரமன் தலையைத் தாங்கிய என்றும் பொருள் கூறலாகும். போதகன் - ஆசிரியன். சாதகன் - மாணாக்கன். புந்தி முன்னாக என்பது மனப் பூர்வமாக என்று வடமொழியிற் கூறப்படும். (க)

கூர்த்தவெண் கோட்டி யானைக் குலோத்துங்க வழுதி ஞாலங்
காத்தர சளிக்கு நாளிற் கடிமதி லுடுத்த கூடல்
மாத்தனி நகருள் வந்து மறுபுலத் தவனா யாக்கை
மூத்தவ னொருவன் வைகி முனையவாள் பயிற்றி வாழ்வான்.

(இ - ள்.) கூர்த்த வெண் கோட்டு யானைக் குலோத்துங்கவழுதி - கூரிய வெள்ளிய கொம்புகளையுடைய யானைப் படையினையுடைய குலோத்துங்க பாண்டியன், ஞாலம் காத்து அரசு அளிக்கு நாளில் - புவியினைப் பாதுகாத்து ஆட்சி புரியுங் காலத்தில், மறுபுலத்தவனாய் யாக்கை மூத்தவன் ஒருவன் - அயல் நாட்டினனாய் மூப்பினால் உடம்பு முதிர்ந்த விஞ்சையனொருவன், கடி மதில் உடுத்த கூடல் மாத் தனி நகருள் வந்து வைகி - காவலையுடைய மதில் சூழ்ந்த கூடல் என்னும் பெரிய

---

(பா - ம்.) *வேதகந்தரித்த. †போதகன்றனக்கு.

(இ - ள்.) வெருவும் காய் சினம் மாறிய வேதியன் - யாவரும் அஞ்சத்தக்க சுடுகின்ற சினம் நீங்கிய அம் மறையோனுக்கு, காதல் மருவும் மனை எனும் பேரினாள் - விருப்பம் பொருந்திய மனைவி என்ற பெயரினை யுடையவள், திருவும் காமன் நல் தேவியும் - திருமகளும் மதவேளின் நல்ல மனைவியாகிய இரதியும், மண்புனை உருவும் - சுதையாற் செய்த பாவையும், காமுறும் - விரும்பத்தக்க, ஒப்பு இல் வனப்பினாள் - ஒப்பற்ற அழகினை யுடையாள்.

சினம் மாறிய - வெகுளி தன்கண் உண்டாகப் பெறாத. வேதியன் மனையெனக் கூட்டுக. மனை - மனையாள். மனைக்குரிய மாண்பு சிறிதுமில ளென்பார். 'மனையெனும் பேரினாள்' என்றார். திருவும் தேவியும் உருவும் என்னும் உம்மைகள் எண்ணுப் பொருளோடு சிறப்புங் குறித்தன. மண் - சுதை;

"மண்மாண் புனைபாவை"

என்பது திருக்குறள். (௩)

படியி லோவியப் பாவையொப் பாகிய
வடிவி னாளவள் பான்மக னென்றொரு
கொடிய பாவி பிறந்து கொலைமுதற்
கடிய பாவக் கலன்போல்* வளருநாள்.

(இ - ள்.) படி இல் ஓவியப் பாவை ஒப்பு ஆகிய வடிவினாள் அவள்பால் - ஒப்பில்லாத சித்திரப் பாவையை நிகர்த்த அழகினையுடைய அவளிடத்து, மகன் என்று ஒரு கொடிய பாவி பிறந்து - மகன் என்று ஓர் கொடும்பாவி தோன்றி, கொலை முதல் கடிய பாவக் கலன்போல் வளருநாள் - கொலை முதலிய கொடிய பாவங்களாகிய சரக்குகளை ஏற்றிய கப்பல்போல வளரு நாளில்.

படி - ஒப்பு. படியில் என்பதற்குப் புவியில் என்றுரைத்தலுமாம். வடிவினாளாகிய அவளென்க. நன்மக்கட்குரிய பண்பு சிறிதுமில்லா னென்பார் 'மகனென்று' என்றார். வளராநின்றான் அங்ஙனம் வளரும் நாளில் என விரிக்க. (௪)

கோடி கோடி யடுஞ்சிலை கோட்டியே
கோடி கோடி கொடுங்கணை பூட்டியே
கோடி கோடி விகாரமுங் கூட்டியே
கோடி கோடி யனங்கரெய் தார்கொலோ.

(இ - ள்.) கோடி கோடி அனங்கர்-அநேகங்கோடி காமர்கள், கோடி கோடி அடுஞ்சிலை கோட்டியே - பலகோடி கொல்லுதற் றொழிலையுடைய விற்களை வளைத்து, கோடி கோடி கொடுங்கணை பூட்டியே - பலகோடி கொடிய அம்புகளைப் பூட்டி, கோடி கோடி விகாரமும் கூட்டி - பல கோடி விகாரங்களைக் கூட்டி, எய்தார் கொலோ - எய்தார்களோ (யாம் அறியேம்).

---

(பா - ம்.) *கனல்போல்.

கோடி கோடி என்பன எண்ணிறந்தன வென்னும் பொருளன. பின் கூறப் போகிற தீக் காமத்திற்குக் காரணமாக 'எய்தார் கொலோ' என்றார்; அங்ஙன மில்லையேல் இவன் தன்னை யீன்றாளை விரும்பியது என்னையென அதன் கொடுமை விளக்கியபடி. விகாரமாவன,

"வேட்கை யொருதலை யுள்ளுதல் மெலிதல்
ஆக்கஞ் செப்பல் நாணுவரை யிறத்தல்
நோக்குவ வெல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு"

என்று தொல்காப்பியத்திற் கூறப்பட்டவை; சுப்பிரயோகம், விப்பிரயோகம் சோகம், மோகம், மரணம் என்றும் உரைப்ப. அனங்கர் - உருவ மில்லாதவர். கொல், அசை. (ரு)

இளமைச் செவ்விய யாக்கையன் மையல்கூர்
வளமைக் காமமும் வல்வினை யுந்நிறைத்
தலைவிட்* டீர்த்தலிற் றன்னை வயிற்றிடை
விளைவித் தீன்றவ டன்னை விரும்பினான்.

(இ - ள்.) இளமைச் செவ்விய யாக்கையன் - இளமைப் பருவமுடைய உடலை யுடையனாகிய அவன், மையல்கூர் வளமைக் காமமும் வல்வினையும் - மயக்கம் மிக்க குன்றாத காமமும் வலிய தீவினையும், நிறைத்தளை விட்டு ஈர்த்தலில் - நிறையாகிய கட்டினை விடுவித்து இழுத்தலால், தன்னை வயிற்று இடை விளைவித்து ஈன்றவள் தன்னை விரும்பினான் - தன்னைத் தனது வயிற்றின்கண் தோற்றுவித்துப் பெற்ற தாயை விரும்பினான்.

இளமைச் செவ்வி - இளமைக்குரிய அழகுமாம். வளமை - கொழுமை; மிகுதி. நிறை - ஆடூஉக் குணங்களி லொன்று; மனதை நிறுத்தல். நிறையாகிய தளையைநீக்கி யென்க. ஈன்றவடன்னை, தன் சாரியை. (சு)

அன்னை யென்னு மழிதகை யாளகத்
தின்னு யிர்த்துணை யும்மனக் காவலாய்
மன்னு நாண மடமுத னால்வருந்
தன்னை நீங்கலிற் றானுமொத் தாளரோ.

(இ - ள்.) அன்னை என்னும் அழிதகையாள் - தாய் என்று சொல்லப்படும் அக் கற்பழிந்தவள், அகத்து இன் உயிர்த்துணையும் - உள்ளத்தில் இனிய உயிர்த் துணையாகவும், மனக்காவலாய் - மனத்துக்குக் காவலாகவும், மன்னும்-பொருந்திய, நாணம் மடம் முதல் நால்வரும் தன்னை நீங்கலில் - நாணமும் மடமும் அச்சமும்

(பா - ம்.) *தளையிட்டு.

பயிர்ப்புமாகிய நால்வரும் தன்னைவிட்டு நீங்கினமையால், தானும் ஒத்தாள் - தானும் அதற்குடன்பட்டாள்.

அழிதகையாள் - கற்பழிந்தவள்; தீநெறிப் பட்டவள்; ஆண்பாலில் அழிதகன் என்று வரும். துணையாகவும் காவலாகவும் மன்னும் என விரிக்க. நாற்குணமும் நான்கு காவலர் போறலின் 'நால்வர்' என உயர்திணையாற் கூறினர்;

"நாற்குணமும் நாற்படையா"

என்பர் புகழேந்தியாரும். தானும் என்பதில் உம்மை இறந்தது தழுவிய எச்சம். அரோ, அசை. (எ)

இன்ப மோசிறி தாகு மிதில்வருந்
துன்ப மோகரை யில்லாத் தொடுகடல்
என்ப தாரு மிவனா லறியவிவ்
வன்ப தான வினையால் வருந்துவான்.

(இ - ள்.) இன்பமோ சிறிது ஆகும் - (காமத்தால் வரும்) இன்பமோ அற்பமாகும், இதில் வரும் துன்பமோ கரையில்லாத் தொடுகடல் - இதனால் விளையுந் துன்பமோ கரையில்லாத கடலாகும், என்பது - என்னும் உண்மையை, ஆரும் இவனால் அறிய - யாவரும் இப்பாவியினால் அறிந்துகொள்ள, இவ்வன்பது ஆன வினையால் வருந்துவான் - இக் கொடுமையான தீவினையால் வருந்துவானாயினன்.

கணத்துள் அழிவது என்பார் 'சிறிது' என்றும், அளவிறந்த காலம் நிற்பது என்பார் 'கரையில்லாத் தொடுகடல்' என்றும் கூறினர். தொடு - தோண்டப்பட்ட; கடலுக்கு அடை. வன்பது, அது பகுதிப்பொருள் விகுதி. (அ)

மையல் நாக மதியை விழுங்கவக்
கைய னாயைக் கலந்தொழு குஞ்செயல்
ஐயன் றன்குறிப் பாற்கண் டயற்செவிக்
குய்ய லாவண்ண முள்ளத் தடக்கினான்.

(இ - ள்.) மையல் நாகம் மதியை விழுங்க - காம மயக்கமாகிய இராகுவானது அறிவாகிய மதியை விழுங்கலால், அக் கையன் ஆயைக் கலந்து ஒழுகும் செயல் - அந்தக் கீழ்மகன் தாயைக்கூடி யொழுகுஞ் செயலினை, ஐயன் குறிப்பால் கண்டு - அவன் தந்தையானவன் குறிப்பாலறிந்து, அயல் செவிக்கு உய்யலா வண்ணம் உள்ளத்து அடக்கினான் - பிறர் செவிக்குச் செல்லாவாறு அதனை மனத்தின் கண் அடக்கி யொழுகினான்.

மதி என்பது இரட்டுற மொழிதலாய் அறிவையும் திங்களையும் குறித்தது; காம மயக்கத்தால் அறிவு முழுதையும் இழந்தானென்க. கையன் - சிறுமையுடையன்; கீழோன். ஆய் - தாய். ஐயன் - தந்தை. உய்யலா - செல்லாத; ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; அல் எதிர்மறை இடைநிலை. உய் என்னும் பகுதி தன்வினை குறித்து நின்றது. வேறு யாரும் அறியா வண்ணம் என்பார் 'அயற் செவிக்கு' என்றார். (க)

வேற்றோர் வைகல் வெளிப்படக் கண்டறஞ்
சாற்று நாவினன் வேறொன் றுஞ் சாற்றிலன்
சீற்ற மேல்கொடு செல்வன் கொல் வேனென
ஏற்றெ ழுந்தன னீன்றாள் விலக்குவாள்.

(இ - ள்.) வேறு ஓர் வைகல் - மற்றொரு நாளில், வெளிப்படக் கண்டு - புலப்படக் கண்டு, அறம் சாற்றும் நாவினன் - அறநெறியைக் கூறும் நாவினையுடையனாய், வேறு ஒன்றும் சாற்றிலன் - பிறிதொன்றும் கூறாதவனாய்; (அங்ஙனமாகவும்), செல்வன் - அவன் புதல்வன், சீற்றம் மேல்கொடு - சினத்தை மேற்கொண்டு, கொல்வேன் என ஏற்று எழுந்தனன் - அவனைக் கொல்வேனென்று எதிர்ந்து எழுந்தான்; ஈன்றாள் விலக்குவாள் - பெற்றவள் விலக்குவாளாய்.

அறங் கூறியதன்றி அவனை இகழ்ந் துரைத்திலனென்க. செல்வன் என்றது இகழ்ச்சி தோன்றக் கூறியது. நாவினன், விலக்குவாள் என்னும் முற்றுக்கள் எச்சமாயின. (ய)

தாயி லின்ப நுகர்ந்தனை தந்தையைக்
காயி லென்பெறு வாயெனக் காமுகர்க்
காயி லன்னையி லப்பனி லென்பயன்
ஏயி லின்னரு ளென்னற மென்னென்றான்.

(இ - ள்.) தாயில் இன்பம் நுகர்ந்தனை - தாயினிடத்துக் காம வின்பத்தினை நுகர்ந்தாய், தந்தையைக் காயில் 'என்பெறுவாய் என - (இன்னும்) தந்தையைக் கொன்றனையாயின் என்ன பயனை அடைவாய் என்றுகூற, காமுகர்க்கு - காமுகர்களுக்கு, ஆயில் - ஆராய்ந்து பார்க்கில், அன்னையில் அப்பனில் என் பயன் - தாயாலும் தந்தையாலும் என்ன பயன், இன் அருள் ஏயில் என் அறம் (ஏயில்) என் என்றான் - இனிய அருளைப் பொருந்தி லென்னபயன் அறத்தைப் பொருந்தி லென்ன பயன் என்றனன்.

தாயில், இல் ஏழனுருபு. தாயிலின்பம் நுகர்ந்ததே கொடு நிரயத் துன்ப முழத்தற்கு ஏதுவாகும்; அதனோடமையாது தந்தையைக் கொல்லுதலுஞ் செய்யின் நீ யெய்தும் துன்பத்திற்கு அளவில்லை யாகும் என்பாள் 'தாயில்...... என்பெறுவாய்' என்றாள். காய்தல் - சினத்தல்; கோறலை யுணர்த்திற்று. தாய் தந்தை யென்னும் முறைமையாலும், அருள் அறம் என்பவற்றாலும் என்ன பயனென்றான். ஏயில் என்பதனை அறம் என்பதனோடுங் கூட்டுக. நேயில் எனப் பிறர் பிரித்தது பொருந்தாமை யோர்க. விலக்குவாள் என அவன் என்னென்றான் எனக் கூட்டி யுரைக்க. (கக)

மண்டொ டுங்கரு விப்படை வன்கையிற்
கொண்டு தாதை குரவனென் றோர்கிலான்
துண்ட மாகத் துணித்தானாய் வாய்முகந்
துண்ட காம நறவா லுணர்விலான்.

(இ - ள்.) மண் தொடும் கருவிப் படை வன் கையில் கொண்டு - மண் வெட்டுங் கருவியாகிய படையினைத் தனது வலிய கையிலேந்தி, தாதை குரவன் என்று ஓர்கிலான் - தன் தந்தையை ஐங்குரவருள் ஒருவனென்று அறியாதவனாய், ஆய் வாய் முகந்து உண்ட காம நறவால் உணர்வு இலான் - தாயினிடத்து முகந்து உண்ட காமமாகிய கள்ளினால் அறிவிழந்த பாவி, துண்டமாகத் துணித்தான் - (அவனைத்) துண்டுபட வெட்டினான்.

மண்டொடுங் கருவி - மண் வெட்டி. கருவிப்படை, இருபெய ரொட்டு. வன் கை - கொலைசெய்யுங் கை. ஐங்குரவரிவ ரென்பதனையும், அவரை வழிபட வேண்டுமென்பதனையும்,

> "அரச னுவாத்தியான் றாய்தந்தை தம்முன்
> நிகரில் குரவ ரிவரிவரைத்.........
> தேவரைப் போலத் தொழுதெழுக வென்பதே
> யாவருங் கண்ட நெறி"

என்னும் ஆசாரக்கோவையா னுணர்க. (கஉ)

> மைக்க ருங்கங்குல் வாய்க்கொன்ற தாதைக்குத்
> தக்க தீத்தவி சிட்டன்னை தன்னொடுங்
> கைக்க டங்கு பொருளொடுங் கன்னெறி
> புக்க னன்புடை சூழ்ந்தார் புளிஞரே.

(இ - ள்.) மைக்கருங் கங்குல்வாய் - மைபோலும் கருமையாகிய இரவின் கண், கொன்ற தாதைக்கு - தன்னாற் கொல்லப்பட்ட தந்தைக்கு, தக்க தீத்தவிசு இட்டு - பொருந்திய தீயாகிய படுக்கை யமைத்து, அன்னை தன்னொடும் கைக்கு அடங்கு பொருளொடும் கல்நெறி புக்கனன் - தாயோடும் சுமக்கத் தகுந்த பொருளோடும் கற்கள் பொருந்திய சுர நெறியை அடைந்தனன்; புளிஞர் புடை சூழ்ந்தார் - ஆறலைக்கும் வேடர்கள் அவனைச் சுற்றிலும் வளைந்துகொண்டனர்.

இருள் மைபோலு மென்பது,

> "எண்ணு மிவ்வுல கத்தவர் யாவரும்
> துண்ணெ னும்படி தோன்றிமுன் றோய்ந்திடில்
> வண்ண நீடிய மைக்குழம் பாமென்று
> நண்ணல் செய்யா நடுவிருள் யாமத்து"

என்னும் பெரியபுராணச் செய்யுளிற் புனைந்துரைக்கப் பட்டிருத்தல் காண்க. கொன்ற, செயப்பாட்டுவினை. தீத்தவிசு - ஈமத் தீயாகிய படுக்கை; ஈமப் பள்ளியிற் கிடத்தி யெரித்தென்க. கைக்கடங்கு பொருள் - கையில் எடுக்கலான பொருள். ()

எய்யுங் கோறொடு வில்ல ரிடிக்குநேர்
செய்யுஞ் சொல்லினர் செல்லலை நில்லெனக்
கையி லுள்ளவுங் கைக்கொண்டு காரிகைத்
தைய றன்னையுந் தாங்கொடு போயினார்.

(இ - ள்.) எய்யும் கோல் தொடுவில்லர் - எய்யப்பெறும் வாளியை எறிட்ட வில்லினை யுடையவராய், இடிக்கு நேர் செய்யும் சொல்லினர் - இடியை யொக்குஞ் சொல்லினை யுடையராய், செல்லலை நில் என - செல்லாதே நில் என்று (நிறுத்தி), கையில் உள்ளவும் தாம் கைக்கொண்டு - கையிலுள்ள பொருளையும் தாம் பறித்துக் கொண்டு, காரிகை தையல் தன்னையும் கொடுபோயினர் - அழகிய அம்மாதையுங் கைக்கொண்டு சென்றார்கள்.

செல்லலை, அல் எதிர்மறை யிடைநிலை; ஐ முன்னிலை விகுதி காரிகை - அழகு. (கச)

சென்று சேணிடைச் சிக்கற வாழலாம்
என்ற வெண்ணமொன் றெய்திய வண்ணமொன்
றொன் று நாமெண்ணத் தெய்வமொன் றெண்ணிய
தென்ற வார்த்தை யிவனிடைப் பட்டதால்.

(இ - ள்.) சேண் இடைச் சென்று சிக்கு அற வாழலாம் என்ற எண்ணம் ஒன்று - தூரதேயத்திற் சென்று இடையூறின்றி வாழலாம் என அவன் கருதிய எண்ணம் ஒன்று; எய்திய வண்ணம் ஒன்று - நிகழ்ந்த செய்தி மற்றொன்று; நாம் ஒன்று எண்ணத் தெய்வம் ஒன்று எண்ணியது என்ற வார்த்தை - 'நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைத்தது' என்ற பழமொழி, இவன் இடைப்பட்டது - இந்த மாபாதகனிடத்திற் புலப்பட்டது.

சிக்கற வாழலாம் - தடையின்றாக இன்பந் துய்த்து வாழலாம். ஆகலான் வார்த்தை இவனிடைப்பட்டதென்க. பட்டது - வெளிப்பட்டது. ஆல், அசை. ()

தாதை தன்றன யற்கினி யார்துணை
மாதர் யாயை மறவர்கைக் கொள்ளவிப்
போது தான்றுணை யென்பவன் போன்றுமா
பாத கத்துரு வாய்வந்து பற்றினான்.

(இ - ள்.) தாதை - வெட்டுண்டிறந்த தந்தையானவன், மாதர் யாயை மறவர் கைக்கொள்ள - அழகிய தாயை வேடர் கவர்ந்து கொண்டமையால், தன் தனயற்கு துணை இனியார் - தன் புதல்வனுக்குத் துணையாவார் இனி யாவர் (என்று வருந்தி), இப்போது - துணை இழந்த இப்பொழுது, தான் துணை என்பவன் போன்று - யானே துணையாவேன் என்று தொடர்பவனைப்போல, மாபாதகத்து உருவாய் வந்து பற்றினான் - மாபாதக வடிவாய் வந்து அவனைப் பிடித்தான்.

யாய் - தாய். தந்தையைக் கொன்ற கொலைப்பாவம் வந்து பற்றியதனைத் தந்தை பாதகத்துருவாய் வந்து பற்றினன் என்றார். இது தற்குறிப்பேற்ற வணி. ()

ஆவ வென்னு மழுஞ்சிவ தாவெனும்
பாவம் பாவம் பழியிது வோவைய
கோவெ னுங்கை குலைத்தெறி யுந்நிழற்
பாவை போல விடாதுபின் பற்றுமால்.

(இ - ள்.) ஆவ என்னும் - (அங்ஙனம் பற்றிய கொலைப் பாவமானது) ஐயோ என்று அலறும்; அழும் - அழாநிற்கும்; சிவதா எனும் - சிவதா என்று முறையிடும்; பழி இதுவோ பாவம் பாவம் - கொலைப்பழி இத்தன்மையதோ பாவம் பாவம், ஐயகோ எனும் - ஐயகோ என்று புலம்பும்; கைகுலைத்து எறியும் - கையை அசைத்து நிலத்தில் மோதும்; நிழல் பாவைபோல விடாது பின்பற்றும் - உடம்பின் சாயையாகிய நிழல்போல விடாது பின்பற்றிச் செல்லும்.

சிவதா என்பது சிவபெருமானை நோக்கி முறையிடுஞ் சொல்; திருத்தொண்டர் புராணத்திலே,

"களியா னையினீ ருரியாய் சிவதா
எளியார் வலியா மிறைவா சிவதா
அளியா ரடியா ரறிவே சிவதா
தெளிவா ரமுதே சிவதா சிவதா."

என வருதல் காண்க. பாவம் பாவம் பழியிதுவோ என்பதனை ஆசிரியர் இரங்கிக் கூறியதாகக் கொள்க. பாவத்தாற் பற்றப்பட்டவனிடத்து நிகழ்வனவற்றிற்கு அதனையே வினை முதலாகக் கூறினர். ஆல், அசை. (கஎ)

[ஷை வேறு]

நல்லதீர்த் தஞ்சிவ தலநலோர் பக்கமுஞ்
செல்லவொட் டாதரன் சீர்த்திநா மஞ்செவிப்
புல்லவொட் டாதுளம் புகுதவொட் டாதுநாச்
சொல்லவொட் டாதுகண் டுயிலவொட் டாதரோ.

(இ - ள்.) நல்ல தீர்த்தம் சிவதலம் நல்லோர் பக்கமும் செல்ல ஒட்டாது - நல்ல தீர்த்தத்தி னருகிலும் சிவதலத்தி னருகிலும் நல்லவர்க ளருகிலும் போக விடாது; அரன் சீர்த்தி நாமம் செவி புல்ல ஒட்டாது - இறைவனது புகழும் அவன் திருப்பெயரும் செவியிற்பட விடாது; உளம் புகுத ஒட்டாது - (ஒருக்காற்படினும்) உள்ளத்திற் புகவிடாது; நாச்சொல்ல ஒட்டாது - (அவற்றை) நாவினாற் சொல்ல விடாது; கண் துயில ஒட்டாது - கண்ணுறங்க விடாது.

ஒட்டாது - இசையாது; தடுக்கும்;

"ஒட்டே னரசோ டொழிப்பேன்",

என்பது சிலப்பதிகாரம். அப் பாவத்தை யொழிக்க வேண்டித் தீர்த்தம் முதலிய வற்றை அடைதல் முதலியன செய்யக் கருதின் அவற்றைச் செய்யவிடாது தடுக்கு மென்க. அரோ, அசை. (கஅ)

சுற்றுமுன் பின்புறச் சூழ்ந்துதன் கொடுக்கினிற்*
பற்றிநின் றீர்க்குமா பாதகத் தாலலைந்
தெற்றினிச் செய்வதென் றாற்றலா திடருழந்
துற்றுவே† றுலகெலா மச்சமுற் றுழலுமால்.

(இ - ள்.) முன் பின்பு உறச் சுற்றும் - முன்னும் பின்னும் பொருந்தச் சூழும்; சூழ்ந்து தன் கொடுக்கினில் பற்றி நின்று ஈர்க்கும் - (அங்ஙனஞ்) சூழ்ந்து தன் கொய்சகத்தைப் பிடித்து நின்று இழுக்கா நின்ற, மாபாதகத்தால் அலைந்து - மாபாத கத்தினு லலைந்து, எற்று இனிசெய்வது என்று ஆற்றலாது இடர் உழந்து-இனியாது செய்வதென்று கருதிப் பொறுக்கலாற்ருது துன்பமுற்று, வேறு உலகு எலாம் உற்று அச்சம் உற்று உழலும்-தனியே உலக மெல்லாஞ் சென்று திரிந்து அஞ்சி வருந்துவானாயினன்.

கொடுக்கு - கொய்சகம்; ஆடையை மடித்து முன்புறந் தொங்கவிட் டிருப் பது. பாதகத்தால் அவன் அலைந்து உழலுவான் என்க. வேறு - தனி. ஆல், அசை. (கக)

உறுகணோ யாற்றநா ளுற்றுழன் றுலகெலாம்
மறுகவே திரியுமா பாதகன் வலியெலாஞ்
சிறுகுவான் சிவனருட் செயலினிற்‡ பாதகங்
குறுகுநாள் குறுகுநாள் கூடலைக் குறுகினன்.

(இ - ள்.) ஆற்ற நாள் உறுகண் நோய் உற்று உழன்று - (இங்ஙனம்) பன் னெடுநாள் துன்ப நோயடைந்து வருந்தி, உலகு எலாம் மறுகவே திரியும் மாபாத கன் - உலகின்கண் கண்டோரனைவரும் வருந்துமாறு திரியாநின்ற மாபாதகன், வலி எலாம் சிறுகுவான் - தனது வலிமுழுதுங் குறைந்தவனாய், சிவன் அருள் செய லினில் - சிவபெருமானது திருவருட் செயலினால், பாதகம் குறுகுநாள் குறுகுநாள் கூடலைக் குறுகினன் - அக் கொலைப் பாவமானது குறுகி ஒழியுநாள் வருநாளில் மதுரைப் பதியை அடைந்தான்.

உலகு என்பது உயிரை யுணர்த்திற்று; உலக முழுதும் சுழன்று திரியும் என்னலுமாம். சிறுகுவான், இறந்தகால எச்சமாயிற்று. செயலினிப் பாதகம் என் னும் பாடத்திற்கு, செயலால் இப்பாதகம் என்று பொருள் கூறிக்கொள்க. பாதகங் குறுகுதல் - பாவங் குறைதல். பின்னுள்ள குறுகுதல் அணுகுதல் என்னும் பொருட்டு. குறுகுநாள் குறுகுநாள் என்றும், கூடலைக் குறுகினன் என்றும் கூறிய ஈற்றடியின் நயம் போற்றற்பாலது; முற்று மோனையாதலுங் காண்க. (உ0)

---

(பா - ம்.) *கொடுக்கிறைப். †உற்றவே. ‡செயலினிப்.

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

அழிதகன் குறுகு வான்முன் னங்கயற் கண்ணி தந்தக்
குழையிரு காதுங் கோத்துக் கொலைகெழு* புலிப்பற் றாலி
நுழைமயிர் நெடுநாண் பின்ன னோன்பிட ரலைப்பப் பூண்டோர்
பழிதகை யாத வேடப் பாவையாய்ப் படிவங் கொள்ள.

(இ - ள்.) அழிதகன் குறுகுவான் முன் அத் தீநெறிப்பட்ட பாதகன் அங்கு வருதற்கு முன், அங்கயற்கண்ணி - அங்கயற்கண் அம்மையார், தந்தக்குழை இரு காதும் கோத்து - தந்தத்தாலாகிய குண்டலங்களை இருசெவியிலும் நுழைவித்து, கொலைகெழு புலிப்பல் தாலி நுழை - கொலை பொருந்திய புலியின் பல்லாகிய தாலி கோத்த, மயிர் பின்னல் நெடுநாண் - மயிராற் பின்னிய நீண்ட மங்கல நாணினை, நோன்பிடர் அலைப்பப் பூண்டு - பெருமை பொருந்திய பிடரில் அசைந் தலையத் தரித்து, பழிதகையாத ஓர் வேடப் பாவையாய் படிவம் கொள்ள - பழிக்குந் தன்மையில்லாத ஒரு வேடமகளாய்த் திருவுருவங் கொள்ள.

குறுகுவான், எச்சமாயிற்று. நுழை-கோத்தவெனப் பிறவினைப் பொருட்டு. பழிதகை - பழிக்குந் தன்மை. தகையில்லாத என்பது தகையாத என நின்றது. (உக)

கொலையிரும்* பழிக்கன் றஞ்சுங் கூடலெம் பெருமான் கொன்றை
மிலையிருங் குஞ்சி வேங்கை மெல்லிணர்க் கண்ணி வேய்ந்து
கலையிரு மருப்பிற் கோடிக் காதள வோடுந் தாடிச்
சிலையிருந் தடக்கை வேடத் திருவுருக் கொண்டு தோன்றி.

(இ - ள்.) கொலை இரும் பழிக்கு அன்று அஞ்சும் கூடல் எம்பெருமான் - கொலையாலாம் பெரிய பழிக்கு அன்று அஞ்சிய மதுரையி லெழுந்தருளிய எம்பெருமானாகிய சோமசுந்தரக் கடவுள், கொன்றைமிலை இருங் குஞ்சி வேங்கை மெல் இணர்க்கண்ணி வேய்ந்து - கொன்றைமாலை யணிந்த நீண்ட சிகையின்கண் வேங்கையின் மெல்லிய பூங்கொத்துக்களாலாகிய மாலையை யணிந்து, கலை இரு மருப்பில் கோடி காது அளவும் ஓடும் தாடி - கலைமானின் இருகொம்பைப்போல் வளைந்து காது மட்டுஞ் சென்ற மீசையையும், சிலை இருந்தடக்கை - வில்லை யேந்திய நீண்ட பெரிய கையையு முடைய, வேடத்திரு உருக்கொண்டு தோன்றி - வேடத் திரு வுருவங்கொண்டு தோன்றி யருளி.

அன்று பழிக்கஞ்சியவர் இன்று பாதகத்திற் கஞ்சினரென்பது தோன்றக் கூறினர். முறுக்குடன் வளைந்து இருபுறமும் மேலே சென்றிருப்பதற்குக் கலை மருப்பு உவமை. தாடியும் தடக்கையும் உடையவென விரிக்க. (உஉ)

கொண்டல்கண் படுக்கு மாடக் கோபுர மருங்கிற் போந்தின்
கண்டகக் கருக்கு வாய குரைக்குநாய் கதுவிக் காப்பப்
புண்டலை வாளி வில்லோர் புறங்கிடந் திமைப்பத் திங்கட்
டுண்டவா ணுதலா ளோடுஞ் சூதுபோ ராடல் செய்வான்.

(பா - ம்.) *கொலையெழு.

(இ - ள்.) கொண்டல் கண் படுக்கும் மாடக்கோபுரம் மருங்கில் - முகில்கள் துஞ்சும் மாடங்களை யுடைய கோபுரத்தின் பக்கத்தில், போந்தின் கண்டகக் கருக்கு வாய குரைக்கும் நாய் கதுவிக் காப்ப - பனையினது முட்களையுடைய கருக்குப் போன்ற வாயையுடைய குலைக்கின்ற நாய்கள் சிறிதும் நீங்காது காக்கவும், புண் தலை வாளி வில் ஓர் புறம் கிடந்து இமைப்ப-தசை பொருந்திய நுதியையுடைய கணையும் வில்லும் ஒரு புறத்திற் கிடந்து விளங்கவும், திங்கள் துண்டம் வாள் நுதலாளோடும் சூது போர் ஆடல் செய்வான் - திங்களின் ஒரு பாதியை ஒத்த ஒள்ளிய நெற்றியை யுடைய பிராட்டியோடும் சூதாடலாகிய போர்த் தொழிலைச் செய்வானாயினன்.

கருக்கு - மட்டையின் விளிம்பு. வாய, குறிப்புப் பெயரெச்சம். (உ௩)

வெருவரு வேழ முண்ட வெள்ளில்போல் வறிய னாகிப்
பருவா லுடனாங் கெய்தும் பாதகன் வரவு நோக்கி
ஒருவரு முள்ளத் தாலு முன்னருங் கொடிய பாவி
வருவது காண்டி யென்னா மாதரை நோக்கிக் கூறும்.

(இ - ள்.) வெருவு அரு வேழம் உண்ட வெள்ளில் போல் வறியனாகி - அச்சமில்லாத யானையா லுண்ணப்பட்ட விளாங்கனிபோல உள்ளீ டில்லாதவனாய், பருவாலுடன் ஆங்கு எய்தும் பாதகன் வரவு நோக்கி - துன்பத்துடன் அங்கு வருகின்ற மாபாதகனது வருகையை நோக்கி, ஒருவரும் உள்ளத்தாலும் உன் அரும் கொடிய பாவி வருவது - ஒருவரும் மனத்தாலும் நினைத்தற்கரிய கொடிய பாவத்தை யுடையவன் வருவதை, காண்டி என்னா - காண்பாயாக என்று, மாதரை நோக்கிக் கூறும்- இறைவியை நோக்கிக் கூறுவான்.

வெருவரு - அஞ்சத் தக்க என்றுமாம். வேழம் வெள்ளிலுக்கு வருவதோர் நோய் என்பர் நச்சினார்க்கினியர்;

"தூம்புடை நெடுங்கை வேழந் துற்றிய வெள்ளில்"

என்னும் சிந்தாமணி யடியின் உரையை நோக்குக; ஓர் கொதுகு என்பாரு முளர். வறியன் - ஆடூஉக் குணமொன்று மில்லாதவன். காண்டி - காண்பாய் ட் எழுத்துப் பேறு. (உ௪)

அணங்குநோ யெவர்க்குஞ் செய்யு மனங்கனா லலைப்புண் டாவி
உணங்கினா ருள்ளஞ் செல்லு மிடனறிந் தோடிச் செல்லா
குணங்குல னொழுக்கங் குன்றல் கொலைபழி பாவம் பாரா
இணங்குமின் னுயிர்க்கு மாங்கே யிறுதி வந்துறுவ தெண்ணா.

(இ - ள்.) எவர்க்கும் அணங்கு நோய் செய்யும் அனங்கனால் அலைப்புண்டு - யாவர்க்குங் காமநோயைச் செய்கின்ற மாரனாலே அலைக்கப்பட்டு, ஆவி உணங்கினார் உள்ளம் - உயிர் சோர்ந்தவர்களின் உள்ளங்கள், செல்லும் இடன் அறிந்து ஓடிச் செல்லா - செல்லுதற்குரிய இடத்தினை அறிந்து சென்று சேரா; குணம் குலன் ஒழுக்கம் குன்றல்-குணமும் குலமும் ஒழுக்கமும் குறைதலையும், கொலை பழி பாவம்-

கொலையும் பழி பாவங்களும் உண்டாதலையும், பாரா - பார்க்கமாட்டா; இணங்கும் இன் உயிர்க்கும் ஆங்கே இறுதி வந்து உறுவது எண்ணு - பொருந்திய தம் முயிர்க் கும் அவ் விடத்தே அழிவு வருதலையும் எண்ண மாட்டா.

எவர்க்கும் - எத் தன்மையோர்க்கும். இடங் கழிகாமத்தால் வருந்தினு ரென் பார் 'அலைப்புண்டாவி யுணங்கினர்' என்றார். செல்லுமிடன் - மணத்தற்குரிய கன் னியர் மனைவி காமக் கிழத்தியர் என்னு மிடங்கள். குன்றலையும் கொலை முதலியன உண்டாதலையும் எனவிரிக்க. ஆங்கே என்பதற்கு அவ்வாறே என்றும், அப்பொழுதே என்றும் உரைத்தலுமாம். (உரு)

கள்ளுண்டல் காம மென்ப கருத்தறை போக்குச் செய்வ*
எள்ளுண்ட காமம் போல வெண்ணினிற் காணிற் கேட்கிற்
றள்ளுண்ட விடத்தி னஞ்சந் தலைக்கொண்டா லென்ன வாங்கே
உள்ளுண்ட வுணர்வு போக்கா துண்டபோ தழிக்குங் கள்ளுண்.

(இ - ள்.) கள் உண்டல் காமம் என்ப கருத்து அறை போக்குச் செய்வ - கள்ளுண்ணலும் காமமும் என்று சொல்லப்படுமிரண்டும் அறிவினை நீங்குமாறு செய்வன; கள் ஊண் - (அவற்றுட்) கள்ளுணவானது, எள்ளுண்ட காமம் போல - இகழப்பட்ட காமத்தைப்போல, எண்ணினில் காணில் கேட்கில் தள் ளுண்ட இடத்தில் - எண்ணினும் காணினும் கேட்கினும் தவறுதலுற்ற இடத் தினும், நஞ்சம் தலைக் கொண்டால் என்ன-நஞ்சு தலைக்கேறியதுபோல,ஆங்கே-அப் பொழுதே, உள் உண்ட உணர்வு போக்காது-உள்ளே பொருந்திய அறிவினைப்போக் காது, உண்டபோது அழிக்கும் - உண்ட பொழுதில் மட்டுமே அதனை அழிக்கும்.

என்ப - என்பன; வினைப்பெயர்; என்று கூறுவர் என்றுமாம். அறைபோக்கு- அறை போதல்; உள்ளதுபோல் ஒழிதல். காமத்திற் கேற்றும் பொழுது - காமுறப் பட்டாரை எண்ணுதல் முதலிய செய்த விடத்தென்று கொள்க. எண்ணினில், இன் வேண்டாவழிச் சாரியை. தள்ளுண்ட இடம் - கிடைக்காவழி; விடத்தின் நஞ்சம் எனப் பிரித்து ஒரு பொரு ளிருசொல்லாகக் கொள்ளலுமாம். கள்ளுண்டலும் காம மும் உணர்வினை யிழப்பித்தலால் ஒக்கும் எனினும் கள்ளுண் காமம்போல உணர்வு போக்காது உண்டபோது அழிக்கும் என ஒப்புமையும் வேற்றுமையும் கூறினமை யின் இது வேற்றுமையணி.

"உள்ளக் களித்தலுங் காண மகிழ்தலும்
கள்ளுக்கில் காமத்திற் குண்டு"

என்னுங் குறள் ஒருபுடை யொத்துநோக்கற்பாலது. (உகூ)

காமமே கொலைகட் கெல்லாங் காரணங் கண்ணோ டாத
காமமே களவுக் கெல்லாங் காரணங் கூற்ற மஞ்சுங்
காமமே கள்ளுண் டற்குங் காரண மாத லாலே
காமமே நரக பூமி காணியாக் கொடுப்ப தென்றான்.

---

(பா - ம்.) *செய்வது.

(இ - ள்.) காமமே கொலைகட்கு எல்லாம் காரணம்-காமமே கொலைகளுக்கு எல்லாம் காரணமாயுள்ளது; கண்ணோடாத காமமே களவுக்கு எல்லாம் காரணம்- கண்ணோட்ட மில்லாத காமமே களவு அனைத்திற்குங் காரணமாகும்; கூற்றம் அஞ்சும் காமமே கள் உண்டற்கும் காரணம் - கூற்றுவனும் அஞ்சுதற்குரிய காமமே கள்ளினை நுகர்வதற்கும் காரணமாகும்; ஆதலாலே காமமே நரகபூமி காணியாக் கொடுப்பது என்றான் - ஆதலினாலே காம மொன்றே (அவை யனைத்தாலு நேரும்) நரக பூமியைக் காணியாட்சியாகக் கொடுக்க வல்லது என்றுகூறி யருளினான்.

காமமே என்பவற்றி னேகாரங்கள் தேற்றமும் பிரிநிலையுமாம். கண்ணோடாத காமம் - தன்னை யுடையாரைக் கண்ணோட்ட மின்றி வருத்தும் காமம். ஐம்பெரும்பாதகங்களுள் கொலை களவு கள் என்பவற்றை எடுத்தோதினமையின் இனம் பற்றிப் பொய்யையுங் கொள்க. காணியா - உரிமையாக; ஈறு தொக்கது. (உஎ)

கொலைப்பழி கோட்பட் டாங்கே குறுகியான் முகங்கண் டேட
அலைப்பட ருழந்து சாம்பி யழிவதென் பார்ப்பா னென்னக்
கலைப்படு திங்கள் வேணிக் கானவ னருட்க ணோக்கந்
தலைப்படச் சிறிது பாவந் தணிந்துதன் னறிவு தோன்ற.

(இ - ள்.) கொலைப்பழி கோள்பட்டு ஆங்கே குறுகியான் முகம் கண்டு - கொலைப் பாவத்தால் விழுங்கப்பட்டு அவ்விடத்தை யடைந்தவனது முகத்தை நோக்கி, ஏட பார்ப்பான் - ஏடா பார்ப்பானே, அலைப்படர் உழந்து சாம்பி அழிவது என் என்ன - அலைத்தலையுடைய துன்பத்தால் வருந்தி வாடி வருந்துவது என்னை என்று வினவியருள, கலைப்படு திங்கள் வேணிக் கானவன் அருள் கண் நோக்கம் சிறிது தலைப்பட - ஒரு கலையினைப் பொருந்திய பிறையை யணிந்த சடையையுடைய வேடனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவருட்பார்வை சிறிது தலைப்படுதலால், பாவம் தணிந்து தன் அறிவு தோன்ற - பாவங் குறைந்து தனது முன்னை யுணர்வு தோன்றா நிற்க.

பழி கோட்பட்டு, தம்மினாகிய தொழிற்சொல் வர வலியியல்பாயிற்று. அலை, முதனிலைத் தொழிற்பெயர்; "அலைமேற் கொண்டு" என்புழிப்போல. வேணிக்கானவன் - வேணியையுடைய வேடன், வேணியாகிய காட்டையுடையன் என இரு பொருள் தோன்ற நின்றது. பாவம் முழுது மொழிதல் பின் கூறப்படுதலின் ஈண்டுச் சிறிது தணிந்தென்றலுமாம். (உஅ)

முற்பக லிழைத்த பாவ முதிர்ச்சியாற்* பிறந்து தந்தை
தற்பக† னனை வாறுந் தாதைபை வதைத்த வாறும்
பிற்பக லந்தப் பாவம் பிடித்தலைந் தெங்குந் தீரா
திப்பதி புகுந்த வாறு மெடுத்துரைத் திரங்கி நின்றான்.

---

(பா - ம்.) *பாவமுயற்சியால். †தற்பகை.

(இ - ள்.) முன் பகல் இழைத்த பாவ முதிர்ச்சியால் பிறந்து - முற்பிறப்பிற் செய்த பாவ முதிர்ச்சியாலே பிறந்து, தந்தை தற்பகன் ஆனவாறும் - தந்தையின் மனைவியை அடைந்த தன்மையும், தாதையை வதைத்தவாறும்-(அது காரணமாகத்) தந்தையைக் கொன்ற தன்மையும், பின் பகல் அந்தப் பாவம் பிடித்து அலைத்து - பின்னாளில் அந்தக் கொலைப்பாவம் பிடித்து வருத்த, எங்கும் தீராது-எங்குந் திரிந்து அது நீங்கப் பெறாமல், இப்பதி புகுந்தவாறும் - இப்பதியை அடைந்த தன்மையும், எடுத்து உரைத்து இரங்கி நின்றான் - எடுத்துக்கூறிக் கவன்று நின்றான்.

தற்பகன் - தந்தையின் படுக்கையைப் பெற்றவன் என்பர்; தற்பகை என்னும் பாடத்திற்கு, தனக்குப் பகையென்பது பொருள். அலைத்து-அலைக்க; எச்சத்திரிபு. ()

மறப்பெரும் படிவங் கொண்டு மனத்தருள் சுரந்து நின்ற
அறப்பெருங் கருணை மூர்த்தி யழிதகை யவனைப் பார்த்தித்
திறப்பழி யாங்குச் சென்று மீங்கன்றித் தீரா தென்றக்
கறைப்பழி தீரும் வண்ணங் கருதியோ ருறுதி கூறும்.

(இ - ள்.) மறம் பெரு படிவம் கொண்டு - (புறத்தில்) மறத்தொழிலையுடைய பெரிய வேட்டுவ வடிவங் கொண்டு, மனத்து அருள் சுரந்து நின்ற அறப் பெருங் கருணை மூர்த்தி - அகத்தின்கண் அருள் ஊறி நின்ற அறவுருவாகிய பேரருட் பெருமான், அழிதகையவனைப் பார்த்து - அந்த அழிதகைமை யுடையவனை நோக்கி, இத் திறப்பழி - இக்கொடிய பழியானது, யாங்குச் சென்றும் ஈங்கு அன்றித் தீராது என்று - எங்கே செல்லினும் இப்பதியி லன்றி நீங்காது என்று கூறி, அக்கறைப் பழி தீரும் வண்ணம் கருதி ஓர் உறுதி கூறும்-அவ்வடிவாகிய பழிதீரும் வகையைக் கருதி ஒரு உபாயம் கூறி யருளுவான்.

இறைவன் கொள்ளுங் கோலங்களில் மறத்தன்மை யுடையனபோல்வனவும் அருளுருவங்களே என்பது தோன்றக் கூறியவாறு;

"வேகியா னாற்போற்செய்த வினையினை வீட்ட லோரார்"

எனச் சிவஞானசித்தி கூறுவது காண்க. திறப்பழி - ஏனைப் பழிகள் போல்வதன்றி வேறாகிய கொடும்பழி. ஈங்கன்றி யாங்குச் சென்றும் தீராது எனக் கூட்டுக. கறை- நீங்காது நிற்கும் மறு. (௩௰)

வருதிநின் னாமஞ் சொன்னோர் வருக்கமு நரகில் வீழக்
கருதிநீ செய்த பாவங் கழிப்பவ ரெவர்யா நோக்கந்
தருதலா லெளிதிற் றீரச் சாற்றுது மையங் கையேற்
றொருபொழு துண்டி யீச னுறுதவ* ரேவல் செய்தி.

(இ - ள்.) வருதி - வருவாய், நின் நாமம் சொன்னோர் வருக்கமும் நரகில் வீழ - உனது பெயரைக் கூறினவரின் மரபிலுள்ளோரும் நரகில் வீழுமாறு, நீ கருதி

(பா - ம்.) *ஈசனுற்றவர்.

செய்த பாவம் கழிப்பவர் எவர்-நீ அறிந்து செய்த பாவத்தைப் போக்குவார் யாவர், யாம் நோக்கம் தருதலால் எளிதில் தீரச் சாற்றுதும் - நாம் திருவருணோக்கஞ் செய்தமையால் எளிதினில் நீங்குமாறு கூறுகின்றோம்; ஐயம் கை ஏற்று ஒருபொழுது உண்டி - கையிலே பிச்சையேற்று ஒரு பொழுது உண்பாய், ஈசன் உறுதவர் ஏவல் செய்தி - சிவபெருமானுக்கு அடியார்களாகிய மிக்க தவத்தினை யுடையாரின் ஏவலைச் செய்வாய்.

வருக்கமும் நரகில் வீழ்தல் கூறவே சொன்னோர் வீழ்தலும், நாமஞ் சொன்னோர் வீழ்வர் எனவே இணங்கினோர் முதலானவர் வீழ்தலும் கூறவேண்டாவாயின. அறியாமற் செய்த பாவ மன்றென்பார் 'கருதி நீ செய்த பாவம்' என்றார். எவராலுங் கழித்தற் கரிதாயினும் எமது திருநோக்கிற் கிலக்கானமையின் தீரச் சாற்றுதும் என்றாரென்க. உண்டி - உண்ணுதி. உண்டி, செய்தி என்பவற்றில் த் எழுத்துப் பேறு; இ எதிர்கால விகுதி. (௩௧)

செங்கதிர்க் கடவுள் வானந் தீண்டுமுன் னெழுந்து தீந்தண்
பைங்கதி ரறுகு கொய்து பசுக்களை யருத்தி யார்வம்
பொங்கமுப் போதுங் கோயிற் புறத்தொட்டித் தீர்த்த மாடிச்
சங்கரன் றனைநூற் றெட்டு மெய்வலஞ் சாரச் செய்தி.

(இ - ள்.) செங்கதிர்க் கடவுள் வானம் தீண்டுமுன் எழுந்து-சிவந்த கிரணங்களையுடைய சூரியன் தோன்றி வானைத் தொடுவதற்கு முன்னமே எழுந்து, தீந்தண் பைங்கதிர் அறுகு கொய்து - இனிய தண்ணிய பசிய ஒளியையுடைய அறுகம் புல்லைக் கொய்து, பசுக்களை அருத்தி - பசுக்களை உண்பிப்பாய்; ஆர்வம் பொங்க முப்போதும் கோயில் புறத்தொட்டித் தீர்த்தம் ஆடி - அன்பு மேலோங்க மூன்று காலமும் திருக்கோயிலின் புறத்திலுள்ள தொட்டித் தீர்த்தத்தின்கண் நீராடி, சங்கரன் தனை நூற்றெட்டு மெய்சார வலம் செய்தி - சிவபெருமானை நூற்றெட்டு முறை உடம்பாலே பொருந்த வலஞ் செய்வாய்.

நல்ல நிலத்திலே செழுமையாக விருக்கும் அறுகென்க. அருத்துதி எனற்பாலது அருத்தி என நின்றது. முப்போது - காலை நண்பகல் மாலை. கோயிற் புறத்தொட்டி - அபிடேக நீர் வந்துவிழும் புறத்திலுள்ள தொட்டி. சங்கரன்றனை என்பதற்குச் சிவபெருமான் திருக்கோயிலை யென்பது கருத்தாகக் கொள்க. மெய்வலம் - அங்கப் பிரதக்கணம். (௩௨)

இத்தவ நெறியி னின்றா லிப்பழி கழியு மென்னாச்
சித்தவன் புடைய வேடத் திருவுருக் கொண்ட கொன்றைக்
கொத்தவ னுரைத்தான் கேட்டுக் கொடிச்சியா யிருந்த வம்மை
மத்தவன் கரித்தோல் போர்த்த மறவனை வினவு கின்றாள்.

(இ - ள்.) இத் தவநெறியில் நின்றால் இப்பழி கழியும் என்னா - இந்தத் தவ ஒழுக்கங்களி னின்றால் இந்தக் கொலைப்பழி நீங்கும் என்று, சித்தம் அன்பு உடைய

வேடத் திருவருக்கொண்ட கொன்றைக் கொத்தவன் உரைத்தான் - உள்ளத்தில் அன்புடைய வேடத் திருவுருவங்கொண்ட கொன்றைப் பூங்கொத்தினை யணிந்த சோமசுந்தரக் கடவுள் கூறியருளினன்; கேட்டுக் கொடிச்சியாய் இருந்த அம்மை - இதனைக் கேட்டு வேட்டுவிச்சியாய் இருந்த உமையம்மையார், மத்தம் வன் கரித் தோல் போர்த்த மறவனை வினவுகின்றாள்-மத மயக்கத்தையுடைய வலிய யானையின் தோலைப் போர்த்தருளிய வேடனை வினவுகின்றார்.

இத்தவநெறி - மேல் இருசெய்யுளிலும் உண்டி, ஏவல் செய்தி, அருத்தி, செய்தி எனக் கூறியவை. உடைய, கொண்ட என்னும் பெயரெச்சங்களைக் கொத்தவன் என்பதன் விகுதியோடு தனித்தனி கூட்டுக. கொடிச்சி-குறிஞ்சித் தலைமகள்; வேட்டுவனுக்குப் பெண்பால். (ஙங)

ஐயவிக் கொடியோன் செய்த பாவத்துக் களவில் காலம்
வெய்யநா லேழு கோடி நரகிடை வீழ்ந்தா னேனும்
உய்வகை யிலாத பாவி யிவனுக்கென் னுய்யுந் தேற்றஞ்
செய்வகை யென்று கேட்பச் செங்கண்மால் விடையோன் செப்பும்.

(இ - ள்.) ஐய - ஐயனே, இக்கொடியோன் - இத்தீயவன், செய்த பாவத்துக்கு - தான் செய்த பாவத்திற்கு, அளவு இல் காலம்-அளவிறந்த காலம் வரையும், வெய்ய நாலேழு கோடி நரகு இடை வீழ்ந்தானேனும் - கொடிய இருபத்தெட்டுக் கோடி நரகின் கண்ணும் வீழ்ந்தானாயினும், உய்வகை இலாத பாவி - பிழைக்கும் வழி இல்லாத பாவியாவான்; இவனுக்கு உய்யும் தேற்றம் செய்வகை என் என்று கேட்ப - இவனுக்கு உய்யும் தெளிவினைச் செய்யும் வகை என்னை என்று கேட்க, செங்கண்மால் விடையோன் செப்பும் - சிவந்த கண்களையுடைய திருமாலாகிய இடப ஊர்தியையுடைய பெருமான் கூறியருளுவான்.

கொடியோன் பாவியாவான் இவனுக்குச் செய்வகை என்னென்று கேட்பச் செப்பும் எனமுடிக்க. உய்யுந் தேற்றம்-பிழைக்கும் துணிவு; கடைத் தேற்றம். (ஙச)

அடுபழி யஞ்சா நீச ராயினு நினைக்கி னச்சம்
படுபழி யஞ்சான் செய்த பாதகத் தொடக்குண் டெங்கும்
விடுவகை* யின்றி வேறு களைகணு மின்றி வீயக்
கடவனைக் காப்ப தன்றோ காப்பென்றான் கருணை மூர்த்தி.

(இ - ள்.) கருணை மூர்த்தி - அருளேயுருவாகிய சோமசுந்தரக்கடவுள், அடு பழி அஞ்சா நீசர் ஆயினும்-கொல்லும் பழிக்கு அஞ்சாத புலையராயினும் (அவரும்), நினைக்கின் அச்சம் படுபழி அஞ்சான் செய்த-நினைத்தால் அச்சமுண்டாகும் கொடும் பழியை அஞ்சாது செய்த, பாதகத் தொடக்குண்டு - மாபாதகத்தாற் கட்டப்பட்டு, எங்கும் விடுவகை இன்றி - எவ்விடத்தும் தீரும் வகையில்லாமல், வேறு களைகணும்

(பா - ம்.) *விடுவதை.

இன்றி - வேறு பற்றுக் கோடுமில்லாது, வீயக்கடவனைக் காப்பது அன்றோ காப்பு என்றான் - அழியக் கடவோனைக் காப்பதல்லவா பாதுகாப்பாகும் என்று கூறி யருளினன்.

நீசர் நினைக்கினும் அவருக்கும் அச்ச முண்டாகும் பழி. அஞ்சான், முற்றெச்சம். காப்பன்றோ கருணையாற் காக்கும் காப்பென்று சொல்லப்படுவ தென்க.(௫௫)

நெய்தற்போ தனைய வுண்க ணேரிழை நீயா தொன்று
செய்தற்குஞ் செய்யா மைக்கும் வேறொன்று செயற்கு மாற்றல்
மெய்தக்க கருணை வள்ளல் வேண்டினெவ் வினைஞ ரேனும்
உய்தக்கோ ராதல் செய்கை யுன்னருள் விளையாட் டன்றோ.

(இ - ள்.) நெய்தல்போது அனைய உண்கண் நேரிழை-கருங்குவளை மலரை ஒத்த மையுண்ட கண்களையுடைய உமையம்மையார், நீ யாதொன்று செய்தற்கும் செய்யாமைக்கும் வேறு ஒன்று செயற்கும் மெய் ஆற்றல் தக்க கருணை வள்ளல் - நீ எதுவும் ஒன்றனைச் செய்தற்கும் செய்யாமைக்கும் மற்றொன்று செய்தற்கும் உண்மை வலியுடைய அருள் வள்ளலாவை; எவ்வினைஞரேனும் வேண்டின் உய்தக்கோர் ஆதல் செய்கை - எத்தகைய கொடுந்தொழிலினையுடையரேனும் விரும்பினால் அவர் உய்தி பெறுவாராகச் செய்தல், உன் அருள் விளையாட்டு அன்றோ-நினது திருவருள் விளையாட்டல்லவா.

நேரிழை, அன்மொழித்தொகை. செய்தல், செய்யாமை, வேறொன்று செய்தல் என்பன முறையே கர்த்திருத்துவம் அகர்த்திருத்துவம் அன்னியதாகர்த்திருத்துவம் என்று கூறப்படும். மெய் ஆற்றல் தக்க கருணை வள்ளல் நீ யென்க. உய்தக்கோராதல் செய்கை - உய்யத்தக்கோராகச் செய்வது.　　(௫௬)

என்றக மகிழ்ச்சி பொங்க வியம்பினா ளியம்ப லோடுங்
குன்றக நாட்ட வேடக் குழகனு மறைந்து வெள்ளி
மன்றக நிறைந்தான் மேக மறைந்திட மறைந்து செல்லும்
மின்றக விடாது பின்போம் விளங்கிழை மடந்தை யோடும்.

(இ - ள்.) என்று அகம் மகிழ்ச்சி பொங்க இயம்பினாள்-என்று மனக் களிப்பு மீக்கூரக் கூறியருளினார், இயம்ப லோடும் - அங்ஙனம் கூறிய வளவில், குன்றகம் நாட்ட வேடக் குழகனும் - மலை நாட்டையுடைய வேடனாகிய சோமசுந்தரக் கடவுளும், மறைந்து - திருவுருக்கரந்து, மேகம் மறைந்திட மறைந்து செல்லும் மின்தக - முகில் மறைய உடன் மறைந்து செல்லும் மின்போல, விடாது பின் போம் விளங்கு இழை மடந்தையோடும் - விடாது பின் செல்லும் விளங்கிய அணிகளையுடைய உமைப்பிராட்டியோடும், வெள்ளி மன்று அகம் நிறைந்தான் - வெள்ளியம்பலத்தில் நிறைந்தருளினன்.

நேரிழை, கருணை வள்ளல் நீ செய்கை உன் அருள் விளையாட்டன்றோ என்று இயம்பினாள் என்க. குன்றக நாடு - மலையின் கண்ணுள்ள நாடு. நாட்ட, குறிப்புப் பெயரெச்சம். குழகன்-சுந்தரன். கரிய வேட்டுருக்கொண்டு வந்தமையின் மேகத்தை

உவமை கூறினர். மின்தக - மின்னலை யொக்க. இறைவனுடன் இறைவி திருவுருக் கரந்தமைக்குக் கூறிய இவ்வுவமை மிகப் பாராட்டற்குரியது. (கூள)

ஆததா யியுங்கண்* டானு வற்புத மடைந்து கூடல்
நாதனர் நவின்ற வாற்ற னன்னெறி விரதச் செய்கை
மாதவ வொழுக்கந் தாங்கி வருமுறை மதிய மூன்றிற்
பாதகங் கழிந்து தெய்வப் பார்ப்பன வடிவ மானன்.

(இ - ள்.) ஆததாயியும் கண்டு ஆனுத அற்புதம் அடைந்து - மாபாதகனும் அதனைப் பார்த்து நீங்காத வியப்பினை எய்தி, கூடல் நாதனர் நவின்ற வாற்றல் - மதுரை நாயகன் கூறியருளிய நெறியே, நல் நெறி விரதச் செய்கை மாதவ ஒழுக்கம் தாங்கி வருமுறை - நல்வழிக் கேதுவாகிய விரதச் செயலையும் பெரிய தவவொழுக்கத்தையும் மேற்கொண்டு செய்து வருமுறைமையால், மதியம் மூன்றில் பாதகம் கழிந்து தெய்வப் பார்ப்பன வடிவமானன் - மூன்று மாதங்களிலே பாதகமுற்றுந் தொலைந்து தெய்வத்தன்மை பொருந்திய பார்ப்பன வடிவமாயினன்.

ஆததாயி - கொடியோன்; நஞ்சிடுவார், தீக்கொளுவுவார் கருவியாற் கொல்வார் முதலாயினோரை வடநூலார் ஆததாயிகள் என்ப; "கொலையிற் கொடியாரை வேந் தொறுத்தல்" என்னுங் குறளுரையிற் பரிமேலழகர் எழுதியிருப்பது நோக்குக. ஆதனுங்கது கண்டு என்பது பாடமாயின் அறிவில்லான் அதனைக் கண்டு என்பது பொருளாகும். முன்னுள்ள நிலைமையினும் உயர்ந்த நிலைமை யெய்தின னென்பார் 'தெய்வப் பார்ப்பன வடிவ மானன்' என்றார். (கூஅ)

சொற்பதங் கடந்த வெந்தை சுந்தர நாதன் றாளிற்
பற்பல வடசொன் மாலை பத்தியிற் றொடுத்துச் சாத்தித்
தற்பர வறிவா னந்தத் தனியுரு வுடைய சோதி
பொற்பத மருங்கிற் புக்கான் புண்ணிய மறையோ னம்மா.

(இ - ள்.) புண்ணிய மறையோன் - அங்ஙனம் புண்ணிய வடிவாகிய அந்தணன், சொல் பதம் கடந்த எந்தை சுந்தரநாதன் தாளில் - சொல்லி னெல்லையைக் கடந்த எம் தந்தையாகிய சோமசுந்தரக்கடவுள் திருவடியில், பற்பல வடசொல்மாலை பத்தியில் தொடுத்துச் சாத்தி - பற்பல வடமொழியா லாகிய பாமாலைகளைப் பத்தியுடன் தொடுத்து அணிந்து, தற்பர அறிவு ஆனந்தம் தனி உருவு உடைய சோதி - உண்மை யறிவானந்த மென்னும் ஒப்பற்ற திருவுருவையுடைய பரஞ்சுடராகிய சோமசுந்தரக் கடவுளின், பொன் பதம் மருங்கில் புக்கான் - அழகிய திருவடியின் கண்ணே கலந்தனன்.

இறைவன் சொற்பதங் கடந்தா னதலை,
"சொற்பதங் கடந்த தொல்லோன்"

என்று திருவாசகங் கூறுதல் காண்க. வடநாட்டினனாகலின் வடசொன்மாலை தொடுத்துச் சாத்தின னென்க. பத்தி - அன்பு, வரிசை. தற்பரம் - உண்மை யென்னும் பொருட்டு. அம்மா, வியப்பிடைச் சொல். (கூக)

(பா - ம்.) *ஆதனுங்கது கண்டு.

அன்னையைப் புணர்ந்து தாதை குரவனு மந்த ணாளன்
றன்னையுங் கொன்ற பாவந் தணித்துவீ டளித்த தென்றாற்
பின்னைநீ ரிழிநோய் குட்டம் பெருவயி றீளை வெப்பென்
றின்னநோய் தீர்க்குந் தீர்த்த மென்பதோ விதற்கு மேன்மை.

(இ - ள்) அன்னையைப் புணர்ந்து - தாயைப் புணர்ந்து, தாதை குரவன் ஆம் அந்தணாளன் தன்னையும் கொன்ற பாவம் - தந்தையும் குரவனுமாகிய அந்தணனையும் கொன்ற மாபாதகத்தையும், தணித்து வீடு அளித்தது என்றால் - போக்கி வீடு பேற்றை அளித்ததாயின், பின்னை - பின், நீர் இழி நோய் குட்டம் பெருவயிறு ஈளை வெப்பு என்று இன்ன நோய் - நீரிழிவும் குட்டமும் பெருவயிறும் ஈளையும் வெப்பு மாகிய இந்த நோய்களை, தீர்க்கும் தீர்த்தம் என்பதோ இதற்கு மேன்மை - போக்கு கின்ற தீர்த்தமென்று சொல்லுவதோ இதற்கு மேன்மையாகும்.

தந்தையும் குரவனும் அந்தணனு மாகியவனைக் கொன்றான் என்றார்;

"பாதக மென்றும் பழியென்றும் பாராதே
தாதையை வேதியனைத் தாளிரண்டும் —சேதிப்ப"

என்னும் திருக்களிற்றுப்படியாரில் தாதை யென்றும் வேதிய னென்றும் பிரித தோதினமையுங் காண்க. ஈளை - இருமல்; கபநோய். அவன் புரிந்த தவச்செயல்க ளுள் கோயிலின் புறத்தொட்டி நீரில் முழுகியதைச் சிறந்தெடுத்து, இஃது அளித்த தென்றால் என்பதோ இதற்கு மேன்மை யென்றார். (௬௰)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

அழிந்தவே தியன்மா பாதகந் தீர்த்த தறிந்துவேந் தமைச்சரூ ருள்ளார்
ஒழிந்தபா ருள்ளார் வானுளார் வியப்ப முற்றுநல் லுரையுணர் வெல்லாங்
கழிந்தபே ரருளிக் கயவன்மேல் வைத்த காரணம் யாதெனக் கண்ணீர்
வழிந்துநான் மாடக் கூடனா யகனை வழுத்தினர் மகிழ்ச்சியுட் டிளைத்தார்.

(இ - ள்.) வேந்து அமைச்சர் ஊர் உள்ளார் ஒழிந்த பார் உள்ளார் வான் உள்ளார் - மன்னனும் மந்திரிகளும் ஊரிலுள்ளவர்களும் ஏனைய நாட்டிலுள்ளவர் களும் தேவர்களுமாகிய அனைவரும், அழிந்த வேதியன் மாபாதகம் தீர்த்தது அறிந்து - நிலையழிந்த வேதியனது மாபாதகத்தைப் போக்கியதை அறிந்து, வியப் பம் உற்று - வியப்பெய்தி, நல் உரை உணர்வு எல்லாம் கழிந்த பேர் அருள் - நல்ல உரையையும் உணர்வையுங் கடந்த பெரிய திருவருளை, இக்கயவன்மேல் வைத்த காரணம் யாது என - இந்தக் கீழ்மகன்மீது வைத்ததற்குக் காரணம் யாதோ என்று, கண் நீர் வழிந்து - கண்களினின்றும் ஆனந்தவருவி பொழிய, நான்மாடக் கூடல் நாயகனை வழுத்தினர் மகிழ்ச்சியுள் திளைத்தார் - மதுரை நாயகனாகிய சோம சுந்தரக் கடவுளைத் துதித்து உவகைக் கடலில் அழுந்தினார்கள்.

வியப்பு என்பது வியப்பம் என்றாயது. திருவருளையுன்னிக் கண்ணீர் வழியத் திளைத்தார்களென்க. வழிந்து - வழிய; எச்சத்திரிபு. வழுத்தினர், முற்றெச்சம். ()

ஆகச்செய்யுள் - கஒஎ௪.

# இருபத்தேழாவது
# அங்கம்வெட்டின படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

வேதகந் தாத்து* முக்கண் வேதியன் மறையோன் செய்த
பாதகந் தவிர்த்த வாறு பகர்ந்தனம் விஞ்சை யீந்த
போதகன் மனைக்குத் தீங்கு† புந்திமுன் னாகச் செய்த
சாதகன் றனைப்போ ராற்றித் தண்டித்த தண்டஞ் சொல்வாம்.

(இ - ள்.) வேத கந்தரத்து முக்கண் வேதியன்-வேதம் பாடுந் திருமிடற்றினை யுடைய மூன்று கண்களையுடைய மறையோனாகிய சோமசுந்தரக்கடவுள், மறையோன் செய்த பாதகம் தவிர்த்தவாறு பகர்ந்தனம் - பார்ப்பனன் புரிந்த மாபாதகத்தினை நீக்கியருளிய திருவிளையாடலைக் கூறினோம்; விஞ்சை ஈந்த போதகன் மனைக்கு - (இனி) வாள் வித்தை கற்பித்த ஆசிரியன் மனைவிக்கு, புந்தி முன்னாகத் தீங்கு செய்த சாதகன்தனை - அறிவு சான்றாகத் தீங்கு புரிந்த மாணவனை, போர் ஆற்றித் தண்டித்த தண்டம் சொல்வாம்-போர் புரிந்து தண்டித்த திருவிளையாடலைக் கூறுவோம்.

வேதகந் தரித்த என்னும் பாடத்திற்கு இரத குளிகை போன்று வேதித் தலைக்கொண்ட என்றும், பிரமன் தலையைத் தாங்கிய என்றும் பொருள் கூறலாகும். போதகன் - ஆசிரியன். சாதகன் - மாணாக்கன். புந்தி முன்னாக என்பது மனப் பூர்வமாக என்று வடமொழியிற் கூறப்படும். (க)

கூர்த்தவெண் கோட்டி யானைக் குலோத்துங்க வழுதி ஞாலங்
காத்தர சளிக்கு நாளிற் கடிமதி லுடுத்த கூடல்
மாத்தனி நகருள் வந்து மறுபுலத் தவனா யாக்கை
மூத்தவ னொருவன் வைகி முனையவாள் பயிற்றி வாழ்வான்.

(இ - ள்.) கூர்த்த வெண் கோட்டு யானைக் குலோத்துங்கவழுதி - கூரிய வெள்ளிய கொம்புகளையுடைய யானைப் படையினையுடைய குலோத்துங்க பாண்டியன், ஞாலம் காத்து அரசு அளிக்கு நாளில் - புவியினைப் பாதுகாத்து ஆட்சி புரியுங் காலத்தில், மறுபுலத்தவனாய் யாக்கை மூத்தவன் ஒருவன் - அயல் நாட்டினனாய் மூப்பினால் உடம்பு முதிர்ந்த விஞ்சையனொருவன், கடி மதில் உடுத்த கூடல் மாத் தனி நகருள் வந்து வைகி - காவலையுடைய மதில் சூழ்ந்த கூடல் என்னும் பெரிய

---

(பா - ம்.) *வேதகந்தரித்த. †போதகன்றனக்கு.

ஒப்பற்ற நகரின் கண்வந்து தங்கி, முனையவாள் பயிற்றி வாழ்வான் - கூர்மையுடைய வாட்போர் விஞ்சையினைக் கற்பித்து வாழா நின்றான்.

கூர்த்த, முனைய என்பன குறிப்புப் பெயரெச்சம். (உ)

வாள்வினைக் குரவ னன்னான் வல்லமண் விடுத்த வேழந்
தோள்வினை வலியா லட்ட சுந்தர விடங்கன் றன்னை
ஆள்வினை யன்புந் தானும் வைகலு மடைந்து தாழ்ந்து
மூள்வினை வலியை வெல்லு மூதறி வுடைய னம்மா.

(இ - ள்.) வாள்வினைக் குரவன் அன்னான் - வாட்டொழில் பயிற்றுங் குரவனாகிய அம் முதியோன், வல் அமண் விடுத்த வேழம் - வலிய சமணர்கள் ஏவிய யானையை, தோள்வினை வலியால் அட்ட சுந்தர விடங்கன் தன்னை - தமது திருத்தோளின் போர்த்தொழில் வன்மையாற் கொன்றருளிய அழகனாகிய சோமசுந்தரக் கடவுளை, வைகலும்-நாள்தோறும், ஆள்வினை அன்பும் தானும் அடைந்து தாழ்ந்து- இடையறாத அன்பும் தானுமாகச் சென்று வணங்குதலால், மூள்வினை வலியை வெல்லும் மூதறிவு உடையன் - மூண்டெழுகின்ற வினையின் வலியை வெல்லும் பேரறிவுடையனாகும்.

அமண், குழூஉப் பெயர். ஆள்வினை - முயற்சி; இடையறாமையை உணர்த்திற்று; அடிமைத் தொழில். அம்மா, இடைச் சொல். (௩)

கைவினை மறவாள் விஞ்சைக் காவல னவனைத் தாழ்ந்து
தெவ்வினை வெல்வான் கற்குஞ் சிங்கவே றனையார் தம்முள்
உய்வினை யுணராப் பாவி சித்தனென் றொருவ னுள்ளான்
அவ்வினை நிரம்பக் கற்றா னாகலூழ் வலியா லன்னான்.

(இ - ள்.) மறம் வாள் கைவினை விஞ்சைக் காவலன் அவனைத் தாழ்ந்து - கொலைத் தொழிலையுடைய வாளினைக் கையிற் கொண்டு பொரும் வித்தையில் வல்லனாகிய அம்முதியோனை வணங்கி, தெவ்வினை வெல்வான் கற்கும் சிங்க ஏறு அனையார் தம்முள் - பகையை வெல்லுமாறு வாள் வித்தை பயிலும் சிங்கவேற்றினை ஒத்த மாணவர் பலருள், உய்வினை உணராப் பாவி சித்தன் என்று ஒருவன் உள்ளான்- உய்யு நெறியை அறியாத பாவியாகிய சித்தனென்று ஒருவனுளன்; அன்னான் ஆகலூழ் வலியால் அவ்வினை நிரம்பக் கற்றான் - அவன் ஆகூழின் வலியினால் அத் தொழிலைக் குறைவின்றிக் கற்றான்.

தெவ் - பகை; பகைவரை யுணர்த்திற்று. வெல்வான், வினை யெச்சம். உய்வு - தீ வினையினின்றும் பிழைத்தல். ஆகலூழ் - அவ்விஞ்சை பெருகுதற்குக் காரணமாகிய ஊழ்; "ஆகலூ ழுற்றக் கடை" என்பது திருக்குறள். (௪)

மானவாள் விஞ்சை யாலே தனைநன்கு மதிக்கத் தக்க
தானதோர் செருக்கி னாற்றன் னாசிரி யற்கு மாறாய்த்
தானுமோர் விஞ்சைக் கூடஞ் சமைத்துவாள் பலருங் கற்க
ஊனுலாம் படைவல் லானி லூதிய மிதப்பக் கொள்வான்.

(இ - ள்.) மான வாள் விஞ்சையாலே-பெருமை பொருந்திய வாள் வித்தையாலே, தனை நன்கு மதிக்கத்தக்கது ஆனது ஓர் செருக்கினால் - தன்னைப் பலரும் நன்கு மதிக்கத்தக்கதாகிய ஒரு செருக்கினால், தன் ஆசிரியற்கு மாறாய் - தன் குரவனுக்கு மாறாய், தானும் ஓர் விஞ்சைக்கூடம் சமைத்து - தானும் ஒரு வித்தைக் கூடமமைத்து, பலரும் வாள் கற்க - பலரும் வந்து வாள்விஞ்சை பயிலுமாறு (பயிற்றலால்), ஊன் உலாம் படை வல்லானில் ஊதியம் மிதப்பக் கொள்வான் - புலால் தங்கிய வாள் வல்லானாகிய ஆசிரியனிலும் ஊதியம் நிரம்பப் பெறுவானாயினன்.

வீரரது மானத்தை வாள்மேலேற்றிக் கூறிற்றுமாம். மதிக்கத்தக்க தன்மை உண்டானதா லாகிய செருக் கென்க. விஞ்சைக் கூடத்தைச் சிலம்பக்கூடம் என்று வழங்குவர். உலாம் - உலாவும்; பொருந்தும். மிதப்ப - மிக. (ரு)

ஒருத்தனே யிருவர் வாளின் விருத்தியு மொருங்கு கொள்ளுங்
கருத்தனாய் விருத்த னூரிற் கழிவது கருதி யன்னான்
வருத்துவா ளிளையர் தன்பால் வரமனந் திரித்து நாளும்
விருத்தமே செய்வான் றாயை விரும்பினோற் கிளையோ னன்னான்.

(இ - ள்.) ஒருத்தனே இருவர் வாளின் விருத்தியும் ஒருங்கு கொள்ளும் கருத்தனாய் - தான் ஒருவனே இருவரின் வாட்போர் பயிற்றலால் வரும் ஊதியத்தையும் ஒரு சேர அடையும் கருத்தினை யுடையவனாய், விருத்தன் ஊரில் கழிவது கருதி - அம் முதியோன் அவ் வூரினின்றும் நீங்குதல் கருதி, அன்னான் வருத்து வாள் இளையர் தன்பால் வர - அவனுடைய வருத்துகின்ற வாட்போர் பயிலும் மாணவர்கள் தன்னிடம் பயில வருமாறு, மனம் திரித்து நாளும் விருத்தமே செய்வான் - அவர்கள் மனத்தை வேறுபடுத்தி நாள்தோறும் பகைமையே செய்து வருவான்; தாயை விரும்பினோற்கு இளையோன் அன்னான்-(அன்றியும் அவன்) தாயை விரும்பிக் கூடிய மாபாதகனுக்கு இளையான்போல்வானாய்.

வாளின் விருத்தி - வாள் பயிற்றுதலாற் பெறும் நிவேதனம். இளையர் - இளம் பருவமுடையர்; வீரர் என்றுமாம். அன்னான் என்பது எச்சமாய் வருஞ் செய்யுளிற் கேட்டுக் கேட்டகல்வான் என்பது கொண்டு முடியும். (சு)

தொடத்தொடப் பொறுக்குந் திண்மைத் தொன்னில மனையா னில்லா
இடத்தவன் றேவி பாற்போ யிடனுண்டே யிடனுண் டேயென்
றடுத்தடுத் தஞ்சா தென்றுங் கேட்டுக்கேட் டகல்வா னாக
நடைத்தொழிற் பாவை யன்ன நங்கைவா ளாவி ருந்தாள்.*

(இ - ள்.) தொடத் தொடப் பொறுக்கும் திண்மைத்தொல் நிலம் அனையான் - தோண்டத் தோண்டப் பொறுக்குந் திண்ணிய பழமையாகிய நிலத்தினைப் போலும் பொறுமையுடைய அவ்வாசிரியன், இல்லா இடத்து அவன் தேவிபால் போய் - இல்லாத பொழுது அவன் மனைவியிடத்துச் சென்று, இடன் உண்டே இடன் உண்டே

* (பா - ம்.) வாளாதிருந்தாள்.

என்று - சமயமுண்டோ சமயமுண்டோ என்று, என்றும் அடுத்து அடுத்து அஞ்சாது கேட்டுக் கேட்டு அகல்வானுக - நாள்தோறும் அடுத்தடுத்துச் சிறிதும் அஞ்சாது கேட்டுக் கேட்டு நீங்க, நடைத்தொழில் பாவை அன்ன நங்கை வாளா இருந்தாள் - நடக்குந் தொழிலையுடைய பாவை போன்ற அம்மாதராள் ஒன்றும் பேசாது சும்மா இருந்தாள்.

அடுக்குகள் பன்மைப் பொருளில் வந்தன. தோண்டுந் தோறும் பொறுக்கும் நிலம் போலும் பொறுமை யென்னுங் கருத்தினை,

"அகழ்வாரைத் தாங்கு நிலம்போலத் தம்மை
இகழ்வார்ப் பொறுத்த றலை"

என்னுந் திருக்குறளிற் காண்க. இடன் - சமயம். எகாரம் வினு. நடைத்தொழிற் பாவையன்னுள் என்றது இல் பொருளுவமம். (எ)

பின்னெரு பகற்போய்ச் செங்கை பிடித்தனன் வலிப்பத் தள்ளி
வன்னிலைக் கதவ நூக்கித் தாழக்கோல் வலித்து மாண்ட
தன்னிலைக் காப்புச் செய்தா டனிமனக் காவல் பூண்டாள்
அந்நிலை பிழைத்த தீயோ னனங்கத்தீ வெதுப்பப் போனுன்.

(இ - ள்.) பின் ஒரு பகல்போய் செங்கை பிடித்தனன் வலிப்ப - பின்பு ஒரு நாட் சென்று அவள் சிவந்த கையைப் பிடித்து இழுக்க, தனிமனக்காவல் பூண்டாள் - ஒப்பில்லாத மனமாகிய காவலையுடைய அந்நங்கை, தள்ளிவல் நிலைக்கதவம் நூக்கித் தாழக்கோல் வலித்து - அவனைப் புறம்பே தள்ளி வலிய நிலையையுடைய கதவினைச் சாத்தித் தாழிட்டு, மாண்ட தன் நிலை காப்புச் செய்தாள் - மாட்சிமைப்பட்ட தனது கற்பு நிலையைக் காத்துக் கொண்டனள்; அந்நிலை பிழைத்த தீயோன் அனங்கத்தீ வெதுப்பப் போனுன் - அப்பொழுது தன் எண்ணம் தப்பிய அக்கொடியோன் காமத் தீயானது சுடச்சென்ருன்.

பிடித்தனன் வலிப்ப - வலிதிற் பற்றி யிழுக்க. தாழக்கோல்; தாழாகிய கோல்; அக்குச்சாரியை யென்று தொல்காப்பியரும், அகரம் சாரியை யென்று நன்னூலாரும் கூறுவர்:

"தாழென் கிளவி கோலொடு புணரின்
அக்கிடை வருத லுரித்து மாகும்"

என்பது தொல்காப்பியம். மனக்காவல் - மனத்தைக் கற்பு நெறியில் நிறுத்துங் காவல்; இது நிறை யெனப்படும்;

"சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை"

என்பது திருக்குறள். பிழைத்த - தவறு செய்த என்றுமாம். (அ)

அறங்கடை நின்ற ருள்ளு மாற்றவுங் கடைய ளுகிப்
புறங்கடை நின்றான் செய்த புலைமைதன் பதிக்குந் தேற்றாள்
மறந்தவிர் கற்பி னுடன் மனம்பொதிந் துயிர்க டோறும்
நிறைந்தநான் மாடக் கூட னிமலனை நினைந்து நொந்தாள்.

(இ - ள்.) அறங்கடை நின்ற ருள்ளும் ஆற்றவும் கடையளுகி - பாவநெறியில் நின்றாரெல்லா ருள்ளும் மிகவுங் கடையனுகி, புறங்கடை நின்றான் செய்த புலைமை - மனையின் வாயிற் புறத்தே வந்துநின்ற அக்கொடியோன் செய்த புலைத் தன்மையை, தன் பதிக்கும் தேற்றாள் - தன் நாயகனுக்குத் தெரிவியாது, மறம் தவிர் கற்பினுள் - மறம் நீங்கிய கற்பினையுடையாள், மனம் பொதிந்து - தன் மனத்தின் கண்ணே மூடிவைத்து, உயிர்கள் தோறும் நிறைந்த நான்மாடக் கூடல் நிமலனை நினைந்து நொந்தாள் - உயிர்கள் தோறும் நிறைந்துள்ள கூடலம்பதியில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக் கடவுளை நினைந்து வருந்தினுள்.

அறங்கடை - பாவம்;

"அறங்கடை நின்றாரு ளெல்லாம் பிறன்கடை
நின்றாரிற் பேதையா ரில்"

என்னும் வாயுறைவாழ்த்து இங்கு நோக்கற்பாலது. புலைமை - கீழ்மை. மறந்தவிர் கற்பினுள் - அறக்கற்புடையாள். அறக் கற்பினளாகலின் பதிக்கும் தெரிவியாது கூடனிமலனை நினைந்து நொந்தாள் என்க. (க)

தாதக நிறைந்த கொன்றைச் சடையவன் புறம்பு செய்த
பாதக மறுக்குங் கூடற் பகவனெவ் வுயிர்க்குந் தானே
போதக னுகித் தோற்றும் புண்ணியன் புலைஞன் செய்த
தீதக முணர்ந்து தண்டஞ் செய்வதற் குள்ளங் கொண்டான்.

(இ - ள்.) அகம் தாது நிறைந்த கொன்றைச் சடையவன் - உள்ளே மகரந்த நிறைந்த கொன்றை மலர் மாலையை யணிந்த சடையை யுடையவனும், புறம்பு செய்த பாதகம் அறுக்கும் கூடல் பகவன் - வேற்று நாட்டிற் செய்த மாபாதகத்தையும் போக்கும் மதுரைப் பிரானும், எவ்வுயிர்க்கும் தானே போதகன் ஆகித் தோற்றும் புண்ணியன் - எவ்வகை உயிர்களுக்குந் தானே உணர்த்துவோனுகி அறிவிக்கும் அறவடிவினனும் ஆகிய சோமசுந்தரக் கடவுள், புலைஞன் செய்த தீது அகம் உணர்ந்து தண்டம் செய்வதற்கு உள்ளம் கொண்டான் - நீசனுகிய சித்தன்செய்த தீங்கினை மனத்தி னுணர்ந்து அவனைத் தண்டிப்பதற்குத் திருவுள்ளங் கொண்டருளினுன்.

புறம்புசெய்த பாதகமறுக்கும் என்றதன் கருத்து பிற பதிகளிற் போக்கலாகாத பாவத்தையும் போக்கு மென்பதாம். பகவன் - இறைமைக் குணங்கள் ஆறுடையான். போதகனுகி - அறிவினை விளக்குவோனுகி; பக்குவ மெய்திய உயிர்களுக்கெல்லாம் ஆசானுகி மெய்ப்பொருளைத் தெளிவிக்கும் என்றுமாம். (௨)

கோளுடைக் குரவ னேபோற் சித்தனைக் குறுகிச் சித்தா
காளையா நீயுஞ் சாலக் கழியமூப் படைந்த யாமும்
வாளம ராடி நந்தம் வலிகளு மளந்து காண்டும்
நாளைவா வருது நாமு நகர்ப்புறத் தொருசா ரென்றான்.

(இ - ள்.) கோள் உடைக் குரவனே போல் சித்தனைக் குறுகி - வலியமைந்த அவ் வாளாசிரியனைப்போலத் திருவுருக் கொண்டு சித்தனை அடைந்து, சித்தா - சித்தனே, காளை ஆம் நீயும் - காளைப் பருவத்தினை யுடைய நீயும், சாலக் கழிய மூப்பு அடைந்த யாமும் - மிக்க மூப்பினையுற்ற யாமும், வாள் அமர் ஆடி - வாட்போர் புரிந்து, நம்தம் வலிகளும் அளந்து காண்டும் - நம் ஆற்றல்களையும் வரை செய்து காண்போம்; நகர்ப்புறத்து ஒருசார் நாளைவா நாமும் வருதும் என்றான் - நகரின் புறத்தே ஒருபக்கத்தில் நாளை நீ வருவாயாக நாமும் வருவோம் என்று கூறியருளினன்.

கோள் - வலிமை. சாலக்கழிய, ஒருபொருட் பன்மொழி; அளவின்றி மூத்த என்றபடி. 'காளையாநீயும் சாலக்கழிய மூப்படைந்தயாமும்' என்றது போரின் கண் அவனுக்கு ஊக்கத்தையும் மானத்தையும் எழுப்ப வேண்டி யென்க. குமரன் வலியையும் விருத்தன் வலியையும் காண்போ மென்றான். காண்டும், வருதும் என்பன தன்மைப் பன்மை யெதிர்கால முற்றுக்கள். (கக)

நாதனாங் குரவன் கூற நன்றென வுவந்து நாலாம்
பாதக னதற்கு நேர்ந்தான் படைக்கலக் குரவன் மீண்டு
போதரு மளவில் வையம் புதையிருள் வெள்ளத் தாழ
ஆதவன் வைய முந்நீர் வெள்ளத்து ளாழ்ந்த தம்மா.

(இ - ள்.) நாதன் ஆம் குரவன் கூற - இறைவனாகிய வாளாசிரியன் கூற, நாலாம் பாதகன் - நாலாவது பாதகமாகிய காமத்தை மேற்கொண்ட சித்தன், நன்று என உவந்து அதற்கு நேர்ந்தான் - நல்லது என்று மகிழ்ந்து அதனுக்கு உடன்பட்டான்; படைக்கலக் குரவன் மீண்டு போதரும் அளவில் - வாளாசிரியன் மீண்டு போகும்போது, வையம் புதை இருள் வெள்ளத்து ஆழ-புவியானது நிறைந்த இருள் வெள்ளத்தில் முழுகும்படி, ஆதவன் வையம்-சூரியன் தேரானது, முந்நீர் வெள்ளத்துள் ஆழ்ந்தது - கடல்வெள்ளத்தில் முழுகியது.

ஐம்பெரும் பாவங்களை யெண்ணுமிடத்துக் காமம் நான்காம் எண்ணு முறைக்கண் நிறுத்தப்படுதலின் 'நாலாம் பாதகன்' என்றார். வையம் - புவி, தேர். அம்மா, அசை. (கஉ)

ஆசினன் குரவற் கின்னா வாற்றினோன் பாவம் போல
மாசிருடணிந்த* கங்குல் வலிகெட வடிவாள் விந்தைத்
தேசிக னொருவ னன்னான் றிணியுடல் சிதைப்பத் தீட்டுங்
காய்சின வாள்போற் கீழைக் கல்லிடை முளைத்தான் வெய்யோன்.

---

* (பா - ம்.) மாசிருடணிந்த.

(இ - ள்.) ஆசு இல் நன்குரவற்கு இன்னா ஆற்றினோன் பாவம்போல - குற்றமில்லாத நல்ல குரவனுக்குத் துன்பஞ் செய்த சித்தனது பாவச் செறிவுபோல, மாசு இருள் திணிந்த கங்குல் வலிகெட - கரிய இருள் நிறைந்த இரவின் வன்மை கெடுமாறு, வடிவாள் விஞ்சைத் தேசிகன் ஒருவன் - கூரிய வாள்வித்தை கற்பிக்கும் குரவனாகிய ஒப்பற்ற இறைவன், அன்னான் திணி உடல் சிதைப்பத் தீட்டும் காய்சின வாள்போல் - அச்சித்தனது வலிய உடலைச் சேதிப்பதற்குத் தீட்டுகின்ற காயும் சினத்தினையுடைய வாட்படைபோல, வெய்யோன் கீழைக்கடலிடை முளைத்தான் - ஆதித்தன் கிழக்கு மலையிலே தோன்றினான்.

இருள் நிறைந்தது பின் அவ்விருளின் வலிகெட வெய்யோன் முளைத்தான் என்றுரைத்துக் கொள்க. தேசிகன் வடிவு கொண்டு வந்த ஒப்பற்றவன். (கரு)

நன்றியைக் கொன்று தின்றோ னாயக னாணைக் கஞ்சும்
வன்றிற லரிமா னூர்தித் தெய்வதம் வழிபட் டேத்தி
வென்றிவாள் பரவிக் கச்சு வீக்கிவாள் பலகை யேந்திச்
சென்றுவா ளுழவன் சொன்ன செருக்களங் குறுகி னானே.

(இ - ள்.) நன்றியைக் கொன்று தின்றோன்-குரவன் செய்த உதவியை முற்றுங் கெடுத்தவனாகிய சித்தன், நாயகன் ஆணைக்கு அஞ்சும்-சிவபெருமான் ஆணைக்கு அஞ்சும், வன்திறல் அரிமான் ஊர்தித் தெய்வதம் வழிபட்டு ஏத்தி - மிக்கவலியினையுடைய சிங்கவூர்தியையுடைய துர்க்கையை வணங்கித் துதித்து, வென்றிவாள் பரவி - வெற்றி பொருந்திய வாட்படையைத் துதித்து, கச்சு வீக்கி வாள் பலகை ஏந்திச் சென்று - கச்சினைக் கட்டி வாளையும் கேடகத்தையுங் கையிலேந்திச் சென்று, வாள் உழவன் சொன்ன செருக்களம் குறுகினான்-வாளாசிரியன் சொன்ன போர்க்களத்தை அடைந்தான்.

ஆசிரியன் செய்த நன்றியை மறந்து அவனுக்குப் பெருந்தீங்கியற்றலானான் ஆகலின் 'நன்றியைக் கொன்று தின்றோன்' என்றார். நன்றிகோறல் உய்தியில்லாத பாவமென்பது,

"எந்நன்றி கொன்றார்க்கு முய்வுண்டா முய்வில்லை
செய்ந்நன்றி கொன்ற மகற்கு"

என்னுந் திருக்குறளாற் பெறப்படும். கொற்றந்தரும் தெய்வமாயினும் இறைவனாணைக் கஞ்சுமதனை வழிபட்டு இறைவனை வெல்லுமா றெங்ஙனம் என்பார் 'நாயகனாணைக் கஞ்சும்......... தெய்வதம் வழிபட்டு' என்றார். வன்றிறல், ஒரு பொருட் பன்மொழி. வாளுழவன் - வாளாகிய ஏரால் உழுதுண்போன்; வாளாசிரியன்; "வில்லேருழவர்" என்பது திருக்குறள். (கச)

மதுகைவா ளமர்க்கு நென்னல் வந்தறை கூவிப் போன
முதுகடும் புலியே யன்ன முடங்குடற் குரவன் றானும்
அதிர்கழல் வீக்கிக் கச்சு மசைத்துவெண் ணீறுஞ் சாத்திக்
கதிர்கொள்வாள் பலகை தாங்கிக் கயவனுக் கெதிரே வந்தான்.

(இ - ள்.) நென்னல் வந்து மதுகைவாள் அவர்க்கு அறை கூவிப்போன - நேற்றுவந்து வலியவாட்போருக்கு அறை கூவிச்சென்ற, முதுகடும்புலி எறு அன்ன- முதிய கடிய புலியேற்றினை ஒத்த, முடங்கு உடல் குரவன் தானும் - வளைந்த உடலை யுடைய (இறைவனாகிய) ஆசிரியனும், அதிர் கழல் வீக்கி - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்து, கச்சும் அசைத்து - கச்சினையுங் கட்டி, வெள் நீறும் சாத்தி - வெள்ளிய திருநீற்றினையுந் தரித்து, கதிர் கொள்வாள் பலகை தாங்கிக் கயவனுக்கு எதிரே வந்தான் - ஒளியினைக் கொண்ட வாளையும் கேடகத்தையும் கையிற்றாங்கி அக்கீழ் மகனுக்கு எதிரே வந்தனன்.

அறை கூவல் - போருக் கழைத்தல். உடம்பு முதிர்ந்தோனாயினும் ஆண் மையிற் குன்றானென்பார் 'முதுகடும் புலியேறன்ன' என்றார். (கரு)

மடங்கலே றொன் றும் பைங்க ணரியொன் று மலைந்தா லென்ன
முடங்கல்வான் றிங்க ளொன் று முக்கணு நான்கு தோளும்
விடங்கலுழ் மிடறுந் தோற்ற வென்றிவாள் விஞ்சை வேந்தும்
அடங்கலன் றானு நேரிட் டாடம ராடல் செய்வார்.

(இ - ள்.) மடங்கல் எறு ஒன்றும் பைங்கண் நரி ஒன்றும் மலைந்தால் என்ன - சிங்க எறு ஒன்றும் பசிய கண்ணையுடைய நரி ஒன்றும் எதிர்த்துப் போர் புரிந்தாற் போல, முடங்கல் வான் திங்கள் ஒன்றும் முக்கணும் நான்கு தோளும் விடம் கலுழ் மிடறும் தோற்ற - வளைந்த வெள்ளிய பிறையும் மூன்று கண்களும் நான்கு திருத் தோளும் நஞ்சக்கறை விளங்குந் திருமிடறுமாகிய இவைகளைத் தோன்றாதுமறைத்த, வென்றி வாள் விஞ்சை வேந்தும்-வெற்றி பொருந்திய வாள் வித்தைக் கிறைவனும், அடங்கலன் தானும் நேரிட்டு ஆடு அமர் ஆடல் செய்வார்-பகைவனாகிய சித்தனும் எதிர்ந்து வெல்லும் போரினைச் செய்யத் தொடங்கினர்.

மலைந்தா லென்ன விஞ்சை வேந்தும் அடங்கலனும் ஆடல் செய்வாரென்க; மடங்க லேறுபோல் விஞ்சை வேந்தும், நரிபோல் அடங்கலனும் என நிரனிறை. ()

எதிர்ப்பர்பின் பறிவர் நேர்போ யெழுந்துவா னேறு போல
அதிர்ப்பர்கே டகத்துட் டாழ்வுற் றடங்குவர் முளைப்பர் வாளை
விதிர்ப்பர்சா ரிகைபோய் வீசி வெட்டுவர் விலக்கி மீள்வர்
கொதிப்பர் போய் நகைப்ப ராண்மை கூறுவர் மாறி நேர்வர்.

(இ - ள்.) எதிர்ப்பர் - ஒருவரை யொருவர் எதிர்ப்பர்; பின்பறிவர் - பின் வாங்குவர், நேர்போய் எழுந்துவான் எறுபோல அதிர்ப்பர் - (மீளவும்) முன்சென்று மேலெழுந்து இடியேறுபோல முழங்குவர்; கேடகத்துள் தாழ்வுற்று அடங்குவர் - கேடகத்தினுள்ளே பதுங்கி மறைவர்; முளைப்பர் - மீண்டு வெளிப்படுவர்; வாளை விதிர்ப்பர் - எந்திய வாளை அசைப்பர், சாரிகைபோய் வீசி வெட்டுவர் - இடசாரி வலசாரியாகச் சென்று வாளை வீசி வெட்டுவர், விலக்கி மீள்வர் - அவ்வெட்டினை விலக்கித் திரும்புவர்; கொதிப்பர் - வெகுள்வர்; போய் நகைப்பர் - சென்று சிரிப்

பர்; ஆண்மை கூறுவர் - செடு மொழி கூறுவர் - மாறி நேர்வர் - சாரிகை மாறி எதிர்ப்பர்.

பின்பறிதல் - பெயர்தல்; பின் வாங்குதல். வீரரின் தொழிலியற்கையைக் கூறுதலால் இது தொழிற்றன்மையணி. (கஎ)

வெந்நிடு வார்போற் போவர் வட்டித்து விளித்து மீள்வர்
கொன்னிடு வாண்மார் பேற்பர் குறிவழி பிழைத்து நிற்பர்
இந்நிலை நாலைங் கன்ன லெல்லைநின் றாடல் செய்தார்
அந்நிலை யடுபோர் காண்பா ரனைவருங் கேட்க வையன்.

(இ - ள்.) வெந்நிடுவார் போல் போவர் - புறங்காட்டிச் செல்வார் போலப் போவர்; வட்டித்து விளித்து மீள்வர் - சுழன்று போருக் கழைத்துத் திரும்புவர், கொன் இடுவாள் மார்பு ஏற்பர் - அச்சத்தைத் தருகின்ற வாள் வெட்டினைத் தமது மார்பின்கண் ஏற்பர்; குறிவழி பிழைத்து நிற்பர் - தாம் கொண்ட இலக்கின் நெறி தவற நிற்பர்; இந்நிலை நாலைங் கன்னல் எல்லை நின்று ஆடல் செய்தார் - இங்ஙனம் இருபது நாழிகை வரையும் நின்று போர் புரிந்தனர்; அந்நிலை - அப்பொழுது, அடு போர் காண்பார் அனைவரும் கேட்க - கொல்லுதலையுடைய போரினைக் காண்போரனைவரும் கேட்குமாறு, ஐயன் - இறைவன்.

வட்டித்தல் - சுழலல். கொன் - அச்சம். பிழைத்து - தப்ப; எச்சத்திரிபு; பகைவர் செய்யுங் குறி தப்ப வென்க. கன்னல் - நாழிகை. முதியோனாகி வந்ததற்கேற்ப இருபது நாழிகைவரை போர் செய்வதாக நடித்தான் என்க. (கஅ)

குரத்தியை நினைத்த நெஞ்சைக் குறித்துரை நாவைத் தொட்ட
கரத்தினைப் பார்த்த கண்ணைக் காத்தனை கோடி யென்றென்
றுரைத்துரைத் தவற்றுக் கெல்லா முறுமுறை தண்டஞ் செய்து
சிரத்தினைத் தடிந்து வீட்டித் திருவுரு மறைந்து நின்றான்.

(இ - ள்.) குரத்தியை நினைத்த நெஞ்சை - குருபத்தினியை விரும்பிக் கருதிய உள்ளத்தையும், குறித்து உரை நாவை - அவளை நோக்கித் தகாத மொழிகளைக் கூறிய நாவினையும், தொட்ட கரத்தினை - பிடித்த கையையும், பார்த்த கண்ணை - விரும்பிப் பார்த்த கண்களையும், காத்தனை கோடி என்று என்று உரைத்து உரைத்து - காத்துக் கொள்வாய் காத்துக் கொள்வாய் என்று சொல்லிச் சொல்லி, அவற்றுக்கு எல்லாம் உறுமுறை தண்டம் செய்து - அவ் வுறுப்புக்களுக்கெல்லாம் பொருந்துமாற்றால் ஒறுத்தலைச் செய்து, சிரத்தினைத் தடிந்து வீட்டி-பின்பு தலையையறுத்துக் கீழே தள்ளி, திரு உரு மறைந்து நின்றான் - திருவுருவம் மறைந்தருளினான்.

குரத்தி - குரவனுக்குப் பெண்பால். காத்தனை, முற்றெச்சம். இப்பொழுது முறையே அவற்றைப் பிளத்தலும் அறுத்தலும் தடிதலும் சூலுதலும் செய்யாநின்

றேம் வல்லையேல் காத்துக் கொள்ளுதி என்றவாறு. நெஞ்சு - உளத்திற்கு நிலைக்களமாகிய மார்பு. ஒவ்வொன்றையும் ஒறுக்குங்கால் இங்ஙனம் சொல்லிச் சொல்லி யொறுத்தென்க. வீட்டி, வீழ்த்தி யென்பதன் மரூஉ. (கக)

போர்கெழு களங்கண் டாருட் பொருபடைக் கேள்விச் செல்வர்
வார்கெழு கழற்கா லானைக் கண்டிலர் மனையிற் றேடி
ஏர்கெழு கற்பி னாளை யெங்குற்றான் குரவ னென்னக்
கூர்கெழு வடிவேற் கண்ணாள் போயினர் கோயிற் கென்றாள்.

(இ - ள்.) போர் கெழு களம் கண்டாருள் - போர் புரிதலைப் பொருந்திய களத்தின்கண் நின்று (அப் போரினைப்) பார்த்தவர்களுள்ளே, பொருபடைக் கேள்விச் செல்வர் - பொருதற்குரிய வாள் வித்தை பயிலும் மாணாக்கர்கள், வார் கெழு கழல் காலானைக் கண்டிலர் - நெடிய வீரக்கழ லணிந்த காலையுடைய குரவனைக் காணாது, மனையில் தேடி - இல்லின்கண் தேடிச் சென்று, ஏர் கெழு கற்பினாளை குரவன் எங்குற்றான் என்ன - அழகு பொருந்திய கற்பினையுடைய குரத்தியை நோக்கி ஆசிரியன் எங்குச் சென்றான் என்று வினவ, கூர்கெழு வடிவேல் கண்ணாள்-கூர்மை வாய்ந்த வடித்த வேல்போன்ற கண்களையுடைய அந் நங்கை, கோயிற்குப் போயினர் என்றாள் - திருக்கோயிலுக்குச் சென்றனர் என்று கூறினாள்.

களங்கண்டார்-களப்போரின் விநோதங்கண்டு நின்றவர். கேள்விச் செல்வர்-கேள்வியாகிய செல்வத்தை யுடையவர்; மாணாக்கர். வாரிற் கோத்தகழல் என்றுங் கூறுவர். கண்டிலர், முற்றெச்சம். தேடிச் சென்று, கற்பினாளை நோக்கி என ஏற்ற சொற்கள் வருவித் துரைக்க. (உ0)

என்றவப் போதே கோயிற் கேகினான் மீண்டான் றேடிச்
சென்றவர் சித்தன் றன்னைச் செருக்களத் தடுபோர் செய்து
வென்றனை யேபின் னந்த வெங்களத் தெங்குந் தேடி
நின்றனைக் காணா திங்கு நேர்ந்தனம் யாங்க ளென்றார்.

(இ - ள்.) என்ற அப்போதே கோயிற்கு ஏகினான் மீண்டான்-என்று கூறிய அப்பொழுதே கோயிலுக்குச் சென்ற குரவன் திரும்பி வந்தனன்; தேடிச் சென்றவர் - அவனைத் தேடிச்சென்ற மாணவர்கள், சித்தன் தன்னை செருக்களத்து அடுபோர் செய்து வென்றனையே - (குரவனை நோக்கி) சித்தனைப் போர்க்களத்திலே கொல்லும் போரினைப் புரிந்து வெற்றி பெற்றாயே, பின் யாங்கள் நின்றனை அந்த வெங்களத்து எங்கும் தேடிக் காணாது இங்கு நேர்ந்தனம் என்றார் - பின்பு யாங்கள் உன்னை அப் போர்க்கள முழுதும் தேடிக் காணாமல் இங்கு வந்தோம் என்றார்கள்.

ஏகினான், வினையாலணையும் பெயர். வென்றனையே பின் எங்ஙன் போந்தாயோ என விரித்துரைத்துக் கொள்க. நின்றனை, தன் சாரியை. (உக)

விரைசெய்தா ரவன்யா னங்கம் வெட்டினே னல்லே னீங்கள்
உரைசெய்வ தெவன்யா ரென்போற் சித்தனை யுடன்று மாய்த்து
வரைசெய்தோள் விந்தைக் கீந்தார் மற்றிது சுற்றும் வையைத்
திரைசெய்நீர்க் கூட லெந்தை திருவுளச் செயல்கொ லென்றான்.

(இ - ள்.) விரை செய் தாரவன் - (அதனைக்கேட்ட) மணம் வீசும் மாலையை யணிந்த குரவன், யான் அங்கம் வெட்டினேன் அல்லேன் - யான் சித்தனுடைய உடலை வெட்டினேனல்லேன்; நீங்கள் உரை செய்வது எவன் - நீங்கள் இங்ஙனம் கூறுவது என்னை, என்போல் உடன்று சித்தனை மாய்த்து - என்போல் வந்து போர் புரிந்து சித்தனைக் கொன்று, வரை செய்தோள் விந்தைக்கு ஈந்தார் யார் - மலை போலும் தம் தோள்களைக் கொற்றவைக்கு அளித்தார் யாவரோ, இது-இந்நிகழ்ச்சி, சுற்றும் திரை செய் நீர் வையை கூடல் எந்தை திருவுளச் செயல் கொல் என்றான் - சூழ்ந்திராநின்ற அலைகளை வீசும் நீரினையுடைய வையை யாற்றினையுடைய நான்மாடக் கூடலில் எழுந்தருளிய எம் தந்தையாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவுளச் செயலோ என்று கூறினான்.

வெட்டிலேன் என்பது வெட்டினேனல்லேன் என விரிந்து நின்றது. வரை செய், செய் உவமவுருபு. தோள்களை விந்தை குடியிருக்க அளித்தவர். அவன் தோளைத் தறித்துத் துர்க்கைக்குக் கொடுத்தவர் என்று பிறர் கூறுவர்; அது சிறவாமை காண்க. சுற்றும் வையை - மதுரையைச் சூழ்ந்திருக்கும் வையை. கொல், ஐயப் பொருட்டு. (உஉ)

மட்டித்த கலவைக் கொங்கை மனைவியுஞ் சித்தன் றன்னைக்
கிட்டிப்பல் காலும் வந்து கேட்டது நெருநல் வாய்வந்
தொட்டித்தன் கையைப் பற்றி யீர்த்தது முள்ளம் வெந்து
தட்டிப்போய்க் கதவந் தாழிட் டிருந்ததுஞ் சாற்றி னாளே.

(இ - ள்.) கலவை மட்டித்த கொங்கை மனைவியும் - கலவை பூசிய கொங்கையையுடைய குரவன் பன்னியும், சித்தன் தன்னைக் கிட்டி பல்காலும் வந்து கேட்டதும் - சித்தனவன் தன்னை நெருங்கி வந்து பல முறையும் (இடனுண்டா என்று) கேட்டதும், நெருநல் வாய் ஒட்டி வந்து தன் கையைப்பற்றி ஈர்த்ததும் - நேற்றைப் பொழுது நெருங்கி வந்து தனது கையைப் பிடித்து இழுத்ததும், உள்ளம் வெந்து தட்டிப் போய்க் கதவம் தாழிட்டு இருந்ததும் - மனம் நொந்து அவனை விலக்கிப் போய்க் கதவைத் தாழிட்டுக் கொண்டு இருந்ததும், சாற்றினாள்-கூறினாள்.

தட்டி - அகப்படாது தள்ளி. அம் கதவம், பகுதிப் பொருள் விகுதி. (உங)

அம்மனை யருளிச் சொன்ன படியெலா மருளிச் செய்து
தெம்முனை யடுவாள் வீரர் சித்தனை மாய்த்தா ரீது
மெய்ம்மையா மென்று கண்ட மைந்தரும் விளம்பக் கேட்டான்
எம்மையா ளுடைய கூட லிறைவிளை யாட்டே யென்றான்.

(இ - ள்.) அம்மனை அருளிச் சொன்னபடி எலாம் - எம் அன்னையாகிய இவர் கூறியருளினபடி யெல்லாம், தெவ் முனை அடுவாள் வீரர் அருளிச் செய்து சித்தனை மாய்த்தார் - பகைவர் முனையை மாய்க்கும் வாள் வீரர் கூறியருளிச் சித்தனை வதைத்தனர்; ஈது மெய்ம்மை ஆம் என்று கண்ட மைந்தரும் விளம்பக் கேட்டான் - இஃது உண்மையாம் என்று பார்த்த மாணவர்களுஞ் சொல்லக் கேட்டான் (ஆசிரியன்); எம்மை ஆள் உடைய கூடல் இறை விளையாட்டே என்றான் - (இஃது) எம்மை ஆளுதலையுடைய கூடல் நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலே என்றான்.

குரவனுவான் தந்தையாகலின் குரவன் பன்னியைத் தாய் என்றும், மாணாக்கரை மைந்தர் என்றும் கூறினர். அருளிச் சொன்ன என்பதைச் சொல்லி யருளின என்று விகுதி பிரித்துக் கூட்டுக. தெம் முனை - போர் முனையில் என்றுமாம். முன் எந்தை திருவுளச் செயல் கொல் என்று ஐயுற்றவன் இப்பொழுது துணிந்தான் என்பார் விளையாட்டே எனத் தேற்றேகாரங் கொடுத்தார். (உச)

கொடியையே ரிடையா ளோடுங் கொற்றவா ளிளைஞ ரோடுங்
கடியநான் மாடக் கூடற் கண்ணுத லடிக்கீழ்த் தாழ்ந்து
நெடியனுன் முகனுந் தேறு நெறியது சிறிய வேழை
அடியனே னளவிற் றேநின் னருள்விளை யாட லென்றான்,

(இ - ள்.) கொடியை நேர் இடையாளோடும் - கொடியை ஒத்த இடையினையுடைய தன் மனைவியோடும், கொற்றவாள் இளைஞரோடும் - வெற்றி பொருந்திய வாள் வித்தை பயிலும் மாணவர்களோடும் (சென்று), கடிய நான்மாடக் கூடல் கண்ணுதல் அடிக் கீழ்த் தாழ்ந்து - காவலை யுடைய நான்மாடக் கூடலில் எழுந்தருளிய நெற்றிக் கண்ணையுடைய இறைவனது திருவடியின்கீழ் வணங்கி, நெடியன்நான் முகனும் தேறு நெறியது நின் அருள் விளையாடல் - திருமாலும் பிரமனும் தெளியாத நெறியதாகிய உனது அருள் விளையாட்டு, சிறிய ஏழை அடியனேன் அளவிற்றே என்றான் - ஒன்றுக்கும் பற்றாத அறிவிலியாகிய அடியேன் அளவினதோ என்று துதித்தான்.

சென்று என ஒரு சொல் வருவிக்க. கடிய - காவலையுடைய; குறிப்புப் பெயரெச்சம். நெடியனும் என உம்மை விரிக்க. யாவர்க்கு மேலாம் இறைவன் எத்துணையும் சிறிய தமக்கு எளிவந்த பேரருளை நினைந்து 'அடியனேனளவிற்றே' என ஆராமை மேலிட்டுக் கூறியவாறு; 'ஏழை யேங்களுக் காவதோ எந்தை நின் கருணை' என முன் கூறினமையுங் காண்க. (உரு)

தண்மதி வழிவந் தோனு நகருளார் தாமும் பாறி
விண்மதி மிலைந்த வேணி விடையவ னடை னேக்கிக்
கண்மலர் வெள்ளத் தாழ்ந்து கனைகழ லடியிற் றாழ்ந்து
பண்மலர் கீதம் பாடி யாடினர் பழிச்சி நின்றார்,

(இ - ள்.) தண்மதி வழிவந்தோனும் - குளிர்ந்த திங்களினது மரபில் வந்த வனுகிய பாண்டியனும், நகர் உளார் தாமும் - நகரில் உள்ளோரும், பாதி விண் மதி மிலைந்தவேணி விடையவன் - வானினுள்ள பாதி மதியினை யணிந்த சடையை யுடைய இடபவூர்தியை யுடைய சோமசுந்தரக் கடவுளின், ஆடல் நோக்கி - திருவிளை யாடலை நோக்கி, கண்மலர் வெள்ளத்து ஆழ்ந்து - கண்களாகிய மலரினின்று ஒழு கும் ஆனந்தவருவியாகிய வெள்ளத்தில் முழுகி, கழல் அடியில் தாழ்ந்து - ஒலிக் கின்ற வீரக்கழ லணிந்த திருவடியில் வணங்கி, பண்மலர் கீதம் பாடி ஆடினர் பழிச்சி நின்றார் - பண் நிறைந்த இசைப் பாட்டுக்களைப்பாடி ஆடித்துதித்து நின்றார்கள்.

ஆடல் - அடியார்க்கு எளிவரும் திருவிளையாடல். கீதம் - இசைப் பாட்டு. உவகையால் ஆடின ரென்க. (உசு)

[வேறு]

அடியவருக் கெளியரிவர் பரதேசி காவலரென் றடிவீழ்ந் தேத்தி
வடியயில்வேற் குலோத்துங்கன் மாணிக்க மாலையெனு மனையா ளோடுந்
தொடியணிதோண் முதுமகனைக் களிறேற்றி நகரைவலஞ் சூழ்வித் திப்பால்
முடியணிவித் தனந்தகுண பாண்டியற்குத் தன்னிறைமை முழுது மீந்தான்.

(இ - ள்.) அடியவருக்கு எளியர் இவர் - அடியார்க் கெளியராகிய இச் சோம சுந்தரக் கடவுள், பரதேசி காவலர் என்று அடிவீழ்ந்து எத்தி - தமக்கு ஓர் களைகண் இல்லாதவரைக் காத்தலில் வல்லவர் என்று அவர் அடியில் வீழ்ந்து வணங்கித் துதித்து, வடி அயில் வேல் குலோத்துங்கன் - வடித்த கூரிய வேற்படை யேந்திய குலோத்துங்க பாண்டியன், தொடி அணி தோள் முதுமகனை - வீரவளை அணிந்த தோளையுடைய முதியோனை, மாணிக்க மாலை யெனும் மனையாளோடும் - மாணிக்க மாலை யென்று கூறப்படும் அவன் மனைவியோடும், களிறு ஏற்றி நகரை வலம் சூழ் வித்து - யானையின்மேல் ஏற்றி நகர் வலஞ் செய்வித்து, இப்பால் - பின், அனந்த குண பாண்டியற்கு முடி அணிவித்து - தன் புதல்வனுகிய அனந்தகுண பாண்டி யனுக்கு முடிசூட்டி, தன் இறைமை முழுதும் ஈந்தான் - தனது அரசுரிமை முழுதுங் கொடுத்தனன்.

பரதேசி - வேற்று நாட்டவன். வேற்று நாட்டினின்றும் போந்து வேறு களைகண் இலனு யிருந்த வாளாசிரியனைக் காத்தமையின் 'பரதேசி காவலர்' என்றா னென்க. முது மகன் - முதியோனுகிய வாளாசிரியன். அவர்கள் தம் பொருட்டு இறைவன் எளிவந்து அருள் புரியும் பேரன்புடைய ராயினமையின் அவர்களைக் களி றேற்றி நகர் வலஞ் செய்வித்தா னென்க. (உஎ)

நிலைநிலையாப் பொருளுணர்ந்து பற்றிகந்து கரணமொரு நெறியே செல்லப்
புலனெறிநீத் தருள்வழிபோய்ப் போதமாந் தன்வலியைப் பொத்தி நின்ற
மலவலிவிட் டகலவரா வுமிழ்ந்தமதி போல்விளங்கி மாறி யாடுந்
தலைவனடி நிழல்பிரியாப் பேரின்பக் கதியடைந்தான் றமிழர் கோமான்.

(இ - ள்.) நிலைநிலையாப் பொருள் உணர்ந்து - நிலையுள்ள பொருளையும் நிலையில்லாத பொருளையும் உணர்ந்து, பற்று இகந்து கரணம் ஒரு நெறியே செல்ல - இருவகைப் பற்றினின்றும் நீங்கி அந்தக் கரணம் ஒரு வழிச் செல்ல, புலன் நெறி நீத்து அருள் வழி போய் - ஐம்புலன்களின் நெறியி னின்றும் நீங்கித் திருவருள் நெறிச் சென்று, போதம் ஆம் தன் வலியைப் பொத்தி நின்ற மலவலி விட்டு அகல - போதமாகிய தனது வலியினை மறைத்து நின்ற ஆணவ மலவலி கழன்றொழிய, அரா உமிழ்ந்த மதிபோல் விளங்கி-இராகு வென்னும் பாம்பால் உமிழப்பட்ட சந்திரனைப் போல விளங்கி, மாறி ஆடும் தலைவன் அடிநிழல் பிரியாப் பேர் இன்பக் கதி - கால் மாறி ஆடிய சோமசுந்தரக் கடவுளின் திருவடி நிழலைப் பிரியாத பேரின்ப வீட்டினை, தமிழர் கோமான் அடைந்தான் - தமிழர் பெருமானாகிய குலோத்துங்க பாண்டியன் அடைந்தான்.

நிலைநிலையாப் பொருளுணர்ச்சி - நித்தியாநித்திய வத்து விவேகம் என்று கூறப்படும். நிலைப் பொருள் - என்றும் ஒரு பெற்றியே நிற்கும் மெய்ப் பொருள். நிலையாப் பொருள் - மாறி யொழியும் பொய்ப் பொருள். இவற்றை யுணர்ந்த வழி நிலையாப் பொருளின் மேலுள்ள பற்று ஒழியும்; பின்பு மனம் ஒருவழிப்படும்; அதன் பின் உயிர் அருள் வழிச் செல்லும்; அதனால் மலவலி கெடும்; ஆகலின் அம்முறையே கூறினார். ஆன்மாவின் அறிவு வலியை யென்க. ஆணவ மலத்தாற் கட்டுண்டு நீங்கிய ஆன்மாவிற்குப் பாம்பால் விழுங்கப்பட்டு அதினின்றும் நீங்கிய மதியை உவமை கூறியது மிகவும் பொருத்த முடைத்து. பிரியாமை யாகிய கதி யென்க. (உஅ)

ஆகச்செய்யுள் - கூசுளஉ.

# இருபத்தெட்டாவது
# நாகமெய்த படலம்

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

செங்கண் மால்விடை மேல்வி டங்கர் செருக்க ளத்திடை வாளெடுத்
தங்கம் வெட்டிய சேவ கத்தை யுறைந்த னந்தமிழ் மாறன்மேற்
சங்கை யிட்டம ணீச ராற்றிய தறுகண் வேள்வி முளைத்ததோர்
வெங்கண் வாளர வைத்து ணித்து விளித்த வாறு விளம்புவாம்.

(இ - ள்.) செங்கண் மால் விடைமேல் விடங்கர் - சிவந்த கண்களையுடைய திருமாலாகிய இடபவூர்தியின்மேல் இவர்ந்தருளும் பேரழகராகிய சோமசுந்தரக் கடவுள், செருக்களத்து இடைவாள் எடுத்து - போர்க் களத்தின்கண் வாட்படையைத் தாங்கி, அங்கம் வெட்டிய சேவகத்தை அறைந்தனம் - அங்கம் வெட்டிய திருவிளையாடலைக் கூறினோம்; தமிழ் மாறன்மேல் சங்கை இட்டு - (இனி) தமிழ் வேந்தனாகிய பாண்டியன்மேல் பகை கொண்டு, அமண் ஈசர் ஆற்றிய - சமணராகிய நீசர் செய்த, தறுகண் வேள்வி முளைத்தது ஓர் வெங்கண் வாள் அரவை - கொடிய வேள்வியின்கண் தோன்றியதாகிய ஒரு வெவ்விய கண்களையுடைய கொடிய பாம்பினை, துணித்து விளித்தவாறு விளம்புவாம் - துண்டு செய்து கொன்றருளிய திருவிளையாடலைக் கூறுவோம்.

சேவகம் - வீரம்; திருவிளையாடலை யுணர்த்திற்று. சங்கை - பகை யென்னும் பொருட்டு. வாளரவு - கொடிய பாம்பு. விளித்த, விளிந்த வென்பதன் பிறவினை. விளித்தவாறும் என உம்மை விரித்துரைத்தலுமாம். (க)

கோதி லாத குணத் தனந்த குணப்பெ ருந்தகை மீனவன்
ஆதி நாயக னுருவ மாகிய வைந்தெ ழுத்தொடு கண்டிவெண்
பூதி சாதன மாவ தேபொரு ளென்று பத்திமை பூண்டுதன்
தாதை யேமுத லாய மன்னவர் தம்மி னுந்தலை யாயினான்.

(இ - ள்.) கோது இலாத குணத்து - குற்றமில்லாத குணத்தினையுடைய, அனந்தகுணப் பெருந்தகை மீனவன் - அனந்தகுணன் என்னும் பெயரினையுடைய பெருந்தகுதியையுடைய பாண்டியன், ஆதிநாயகன் உருவம் ஆகிய ஐந்து எழுத்தொடு - முழுமுதற் றலைவனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவுருவாகிய திருவைந்தெழுத்துடன், கண்டி வெண்பூதி சாதனமே - உருத்திராக்கமும் வெள்ளிய திருநீறுமாகிய சாதனமே, பொருள் ஆவது என்று பத்திமை பூண்டு - மெய்ப்பொருளாவது என்று அன்பு கொண்டதால், தன் தாதையே முதல் ஆய மன்னவர் தம்மினும் - தன் தந்தை முதலாகிய அரசர்களினும், தலை ஆயினான் - சிறந்தவனானான்.



கூ.பு. 152 நாகமெய்தது

திருவைந்தெழுத்துச் சிவபெருமானுக்கு உருவமாதலைச் சிவஞானசித்தியார் முதற்சூத்திரத்தா லறிக; இது முன்னுங் காட்டப்பெற்றது. சாதனமே பொருளாவது எனப் பிரித்துக் கூட்டுக. தலை - முதல்; முதல்வன். (உ)

அத்த கைச்*சிவ சாத னந்தனி லன்பு மிக்கவ னொழுகலால்
அத்தன் மெய்த்திரு வைந்தெ ழுத்தொலி யாலு நீற்றொளி யாலுமுட்
பைத்த வல்லிரு ளும்பு றத்திரு ளுஞ்சி தைந்து பராபரன்
வித்த கத்திரு வேட மானது† மீன வன்றிரு நாடெலாம்.

(இ - ள்.) அத்தகைச் சிவசாதனம் தனில் - அத்தன்மையுடைய சிவசாதனத்தின்கண், அன்பு மிக்கு அவன் ஒழுகலால் - அன்புமிகுந்து அப் பாண்டியன் ஒழுகி வருதலால், மீனவன் திருநாடு எலாம் - அவன் திருநாடு முழுதும், அத்தன் மெய்த் திரு ஐந்து எழுத்து ஒலியாலும் - இறைவன் திருவுருவமாகிய திருவைந்தெழுத்தின் ஒலியாலும், நீற்று ஒளியாலும் - திருநீற்றினது ஒளியாலும் (முறையே), உள்பைத்த வல் இருளும் - உள்ளே பரந்த வலிய மலவிருளும், புறத்து இருளும் சிதைந்து - புறவிருளும் கெட்டு, பராபரன் வித்தகத் திருவேடம் ஆனது - சிவபெருமானது மேன்மையுடைய திருவேடமாகப் பொலிந்தது.

'மன்ன னெவ்வழி மன்னுயி ரவ்வழி' என்பவாகலின் அரசன் சிவசாதனத்தில் அன்பு மிக்கானாகவே நாட்டிலுள்ளாரும் அங்ஙனமாயின ரென்க. திருவைந்தெழுத் தொலியால் அக விருளும் திருநீற்றினொளியால் அகவிருளுடன் புறவிருளும் சிதைந்து என்றுமாம். புறத்திருள் - பூதவிருள். பைத்த - பரந்த. பராபரன் - பரமும் அபரமும் ஆனவன். (௩)

நாயி னுங்கடை யான மாசுட னள்ளி ருட்புரை நெஞ்சரெண்
ணாயி ரஞ்சமண் வேட ரன்ன தறிந்து கொண்டு வெகுண்டழற்
றோயி ரும்பென மான வெங்கனல் சுட்டி டத்தரி யார்களாய்
மாயி ருந்தமிழ் மாற னைத்தெற வஞ்ச வேள்வி யியற்றுவார்.

(இ - ள்.) நாயினும் கடை ஆன மாசு உடல் - நாயினுங் கடைப்பட்ட அழுக்குடம்பினையுடைய, நள் இருள் புரை நெஞ்சர் எண்ணாயிரம் சமண் வேடர் - நடு இரவின் இருளையொத்த நெஞ்சினை யுடையவராகிய சமணகுரவர் எண்ணாயிரவரும், அன்னது அறிந்துகொண்டு வெகுண்டு - அதனை அறிந்து சினந்து, அழல் தோய் இரும்பு என - நெருப்பிற் காய்ச்சிய இரும்புபோல, மான வெங்கனல் சுட்டிட - மானமாகிய கொடிய நெருப்புச் சுடாநிற்க, தரியார்களாய் - பொறார்களாகி, மா இருந்தமிழ் மாறனைத் தெற - பெரிய தமிழை வளர்க்கும் பாண்டியனைக் கொல்லுதற்கு, வஞ்ச வேள்வி இயற்றுவார் - வஞ்ச வேள்வி ஒன்றினைச் செய்வாராயினர்.

உடலையுடைய நெஞ்சராகிய என விரித்து வேடரென்பதனுடன் தனித்தனி கூட்டுக. தங்கள் சமயத்திற்குரிய ஒழுக்கமுடையரல்ல ரென்பார் 'சமண்

---

(பா - ம்.) *இத்தகை. †வேடமாயின.

வேடர்' என்றார், கொண்டு - உளங்கொண்டு என்றுமாம், மா இரு, ஒருபொருளிருசொல். வஞ்சவேள்வி - ஆபிசாரயாகம். (ச)

எல்லை காத மளந்து சாலை யெடுத்த ழற்படு குண்டமும்
கல்லி யாரழ லிட்டெ ழும்புகை கௌவி யெண்டிசை களுமுறச்
செல்ல வான வுடுக்க ளும்பொரி யிற்பொ ரிந்தன சிதறநீண்
டொல்லை தாவி விசும்பு தைவர வோட்டி* வெங்கனன் மூட்டினார்.

(இ - ள்.) காத எல்லை அளந்து சாலை எடுத்து - ஒரு காத அளவு அளந்து வேள்விச்சாலை கோலி, அழல்படு குண்டமும் கல்லி - தீவளர்க்கும் வேள்விக்குண்டமும் தோண்டி, ஆர் அழல் இட்டு - நிறைந்த தீயினை அதிலிட்டு, எழும் புகை எண் திசைகளும் கௌவி உறச் செல்ல - எழுகின்ற புகையானது எட்டுத் திசைகளையும் தன்னுட்படுத்தி மிகச் செல்லவும், வான உடுக்களும் பொரிந்தன பொரியில் சிதற - வானின்கண் உள்ள உடுக்கூட்டங்களும் பொரிந்து பொரிபோற் சிந்தவும், நீண்டு ஒல்லைதாவி விசும்பு தைவர-ஓங்கி விரைந்துதாவி வானுலகத்தைத் தடவவும், வெங்கனல் ஒட்டி மூட்டினார் - கொடிய நெருப்பினை எழுப்பி மூட்டினார்கள்.

பொரிந்தன; முற்றெச்சம். அழலிட்டு மூட்டினா ரென்க. (ரு)

அத்த ழன்றெரி குண்ட நின்று மகன்பி லத்தெழு வானெனப்
பைத்த துஞ்சிருள் வாயும் வாயிரு பாலும் வாலிய பகிர்மதிக்
கொத்து நஞ்சின† மொழுகு பற்களு மூழி யாரழல் விழிகளும்
வைத்த சைந்தொரு வெற்பு வந்தென வந்து ளானொரு தானவன்.

(இ - ள்.) அத் தழன்று எரிகுண்டம் நின்றும் - அந்தக் கொதித்து எரிகின்ற வேள்விக் குண்டத்தி னின்றும், அகன்பிலத்து எழுவான் என - அகன்ற பிலத்தினின்றும் எழுகின்றவனைப்போல (எழுந்து), பைத்த இருள் துஞ்சு வாயும் - பரந்த இருள் தங்கிய வாயினையும், வாய் இருபாலும் - வாயின் இரண்டு பக்கங்களிலும், வாலிய பகிர்மதிக்கு ஒத்து - வெள்ளிய அரைச்சந்திரனைப் போன்று, நஞ்சு இனம் ஒழுகு பற்களும் - நஞ்சின் பெருக்கு ஒழுகுகின்ற பற்களையும், ஊழி ஆர் அழல் விழிகளும் வைத்து - ஊழிக்காலத்தின் நிறைந்த தீயை உமிழும் கண்களையுங் கொண்டு, ஒரு வெற்பு அசைந்து வந்தென - ஒரு மலை அசைந்து வந்தாற்போல, ஒரு தானவன் வந்துளான் - ஒரு அவுணன் வந்தான்.

அக் குண்டத்தினின்றும் வாயும் பற்களும் விழிகளும் கொண்டு ஒரு தானவன் வந்தான் என்க. துஞ்சுதல் - தங்குதல். மதிக்கு ஒத்து - மதியை யொத்து; வேற்றுமை மயக்கம். வைத்து - கொண்டு என்னும் பொருட்டு. இஃது இல்பொருளுவமையணி. (சு)

---

(பா - ம்.) *ஒட்டி. †கொத்தடுஞ்சினம்.

உதித்த செங்க ணரக்க வஞ்ச னுருத்தெ ழுந்தெரி வடவையிற்
கொதித்த டும்பசி தாக முங்கொடி தாலெ னக்கொடி யோரைநீர்
விதித்தி டும்பணி யாதெ னக்கென மீன வன்றனை மதுரையோ
டெதிர்த் தெடுத்துவி ழுங்கி வாவென வேவி னுருட னேகினன்.

(இ - ள்.) உதித்த செங்கண் அரக்க வஞ்சன் - (அங்ஙனம்) தோன்றிய சிவந்த கண்களையுடைய அவுணனாகிய கொடியோன், உருத்து எழுந்து - வெகுண்டெழுந்து, எரி வடவையில் - எரிகின்ற வடவைத் தீயைப்போல, கொதித்து அடும்பசி தாகமும் கொடிது என - பொங்கி வருத்துகின்ற பசியும் நீர்வேட்கையும் கொடியவென்று, கொடியோரை நீர் விதித்திடும் பணி எனக்கு யாது என - அக்கொடிய சமணர்களை (நோக்கி) நீவிர் எனக்கு விதிக்கும் ஏவல் யாது என்று வினவ, மீனவன் தனை மதுரையோடு எதிர்த்து விழுங்கிவா என ஏவினர் - பாண்டியனை மதுரையோடும் எதிர்த்து எடுத்து விழுங்கிவருவாயாக என்று விடுத்தனர்; உடன் ஏகினன் - அவனும் விரைந்து சென்றான்.

பசியும் என உம்மை விரிக்க. கொடிது, பன்மையி லொருமை. ஆல், அசை.

[அறுசீரடியாசிரியவிருத்தம்.]

பாயுடை யவர்விட விடநாகப் படிவுகொ ணிசிசர னிலனண்டந்
தோயுட லினனுடல் விடமூறிச் சொரிதுளை யெயிறினன் வடவைச்செந்
தீயுடை யனவென வெரிகண்ணன் றிணியிருள் வரைமுழை யெனவிண்ட
வாயுடை யவனெடு நெறிமுன்னி மழைநுழை வரையென வருகின்றான்.

(இ - ள்.) பாய் உடையவர் விட - பாயினை உடையாகவுடைய சமணர்கள் ஏவ, விடநாகப் படிவுகொள் நிசிசரன் - நஞ்சினையுடைய பாம்பின் வடிவினைக் கொண்ட அவுணன், நிலன் அண்டம் தோய் உடலினன் - நிலவுலகினின்றும் அண்டத்தை அளாவும் உடலையுடையவனாய், உடல்விடம் ஊறிச் சொரிதுளை எயிறினன் - வருத்துகின்ற நஞ்சு சுரந்து பொழியுந் துளையினையுடைய பற்களையுடையவனாய், வடவைச்செந்தீ உடையன என எரி கண்ணன் - வடவைச் செந்தீயை உடையன என்று சொல்ல எரிகின்ற கண்களையுடையவனாய், திணி இருள் வரை முழை என விண்ட வாய் உடையவன் - இருள் செறிந்த மலையின் குகைபோலத் திறந்த வாயினையுடையவனாய், நெடுநெறி முன்னி - நீண்ட வழியில் முற்பட்டு, மழை நுழை வரை என வருகின்றான் - முகில் தவழும் மலைபோல வாராநின்றான்.

நிசிசரன் - இரவிற் சரிப்போன்; அரக்கன். எயிற்றினன் எனற்பாலது விகாரமாயிற்று. உடலினன், எயிறினன், கண்ணன், வாயுடையவன் என்னும் குறிப்பு முற்றுக்கள் எச்சமாயின. (அ)

அரவிறை யுறைபிலம் வெளிகாண வரையுடல் புதைபட நிலம்விள்ள*
வருவிழி† யழலெழ வுயிர்கான்முன் வளியுளர் கிளர்வலி விளிவெய்தப்
பொருசின விழியெதிர் படுபைங்கூழ் புகையெழ வனமரை பொரிபொங்கர்
கருகிட முதுசினை யிறைகொள்ளுங் ககநிரை சிறைசுருள் படவீழ.

(இ - ள்.) அரை உடல் புதைபட - பாதி உடல் புதைபடுதலாலே, அரவு இறை உறை பிலம் வெளி காண - பாம்புகளின் தலைவனாகிய அனந்தன் உறையும் பாதலம் வெளியாகத் தெரியும்படி, நிலம் விள்ள - நிலம் பிளக்கவும், விழி வரு அழல் எழ உயிர் கால் முன் - கண்களினின்று வரும் நெருப்பு எழ உயிர்க்கின்ற பெருமூச்சின்முன், உளர்வளி கிளர்வலி விளிவு எய்த - சலிக்கின்ற காற்றினது மிக்க வலியானது இறத்தலைப் பொருந்தவும், பொரு சின விழி எதிர்படு பைங்கூழ் புகை எழ - மாறுபடும் சினத்தினையுடைய விழிகளுக்கு எதிர்ப்பட்ட பயிர்கள் புகைந்து வாடவும், வனம் பொரி அரை பொங்கர் கருகிட - காடுகளும் பொருக்கினையுடைய அடியினையுடைய மரச்செறிவுகளும் கருகவும், முதுசினை இறைகொள்ளும் ககநிரை சிறை சுருள்பட வீழ - பெரிய மரக்கிளைகளில் வசிக்கும் பறவைக் கூட்டங்கள் சிறைகள் கருகிச் சுருண்டு கீழே விழவும்.

காற்றினால் நெருப்பு மூளுமாகலின் 'விழியழலெழ உயிர்கால்' என்றார். உளர் வளி என்றும், பொரி அரை என்றும் மாறுக. இறைகொள்ளும் - தங்கும். ககம் - பறவை. (கூ)

அகனிலம் வெருவுற நிலனேந்து மரவிறை வெருவுற வெயில்காலும்
பகன்மதி வெருவுற விவைகௌவும் பணிகளும் வெருவுற வகறிக்கின்
புகர்மலை வெருவுற வடுதண்டப் புரவலன் வெருவுற வருசெங்கண்
நகைமதி புரையெயி றவன்மாட நகரெதிர் குடவயின் வருமெல்லை.

(இ - ள்.) அகல் நிலம் வெருவுற - அகன்ற நிலவுலகம் அஞ்சவும், நிலன் ஏந்தும் அரவு இறை வெருவுற - அந் நிலத்தைத் தாங்கும் அரவரசன் அச்சமெய்தவும், வெயில்காலும் பகல்மதி வெருவுற - கிரணத்தை வீசும் சூரியனும் சந்திரனும் துணுக்குறவும், இவை கௌவும் பணிகளும் வெருவுற - இவற்றை விழுங்கும் இராகு கேதுக்களாகிய பாம்புகளும் உட்கவும், அகல் திக்கின் புகர்மலை வெருவுற - அகன்ற திசைகளிலுள்ள (முகத்திற்) புள்ளிகளையுடைய மலைபோன்ற யானைகள் அஞ்சவும், அடுதண்டப் புரவலன் வெருவுற - கொல்லுகின்ற தண்டினை ஏந்திய கூற்றுவன் அஞ்சவும், வருசெங்கண் நகைமதி புரை எயிறவன் - வருகின்ற சிவந்த கண்களையும் ஒள்ளிய (அரை) மதியினை ஒத்த வளைந்த பற்களையுமுடைய அவுணன், மாடம் நகர் எதிர் குடவயின்வரும் எல்லை - மாடங்கள் நிறைந்த மதுரைப்பதியின் நேரே மேற்றிசைக்கண் வரும் பொழுதில்.

(பா - ம்.) *விள்ளா. †வருவழி.

பகல் - ஞாயிறு. வெயில்காலும் என்பது பகலுக்கு அடை; ஒளிப்பொது வாக்கி, மதிக்கும் ஏற்றலுமாம். புகர்மலை, யானைக்கு வெளிப்படை. எயிறவன், ஒற்றிரட்டாது நின்றது. (ம)

கண்டவர் கடிநகர் கடிதோடிக் கௌரிய னடிதொழு தடிகேணங்
கொண்டல்கண் வளர்மதில் வளைகூடற் குடவயி னொருபெரு விடநாகம்
அண்டமு மகிலமு மொருவாயிட் டயிர வருவதை யெனநீள்வாய்
விண்டுகொண் டணைவதை யெனவோடும் வெருவலன் மதிகுல மறவீரன்.

(இ - ள்.) கண்டவர் கடிநகர் கடிது ஓடி - (அதனைப்) பார்த்தவர்கள் காவலையுடைய நகர்க்கண் விரைந்து ஓடி, கௌரியன் அடி தொழுது - பாண்டியன் அடிகளை வணங்கி, அடிகேள் - அடிகளே, நம் கொண்டல் கண்வளர் மதில்வளை - நமது முகில் உறங்கும் மதில் சூழ்ந்த, கூடல் குடவயின் - மதுரைப்பதியின் மேற்றிசையில், ஒரு பெருவிடநாகம் - ஒரு பெரிய நஞ்சினையுடைய பாம்பானது, அண்டமும் அகிலமும் ஒருவாய் இட்டு அயில்தர வருவது என - அண்டங்களையும் மற்றெல்லாவற்றையும் ஒரு வாயிற்போட்டு உண்ணுதற்கு வருவதுபோல, நீள் வாய் விண்டுகொண்டு அணைவது எனவோடும் - பெரிய வாயைத் திறந்துகொண்டு வருகின்றது என்று கூறவும், மதிகுல மறவீரன் வெருவலன் - திங்கள் மரபில்வந்த வெற்றியையுடைய வீரனாகிய அனந்தகுணபாண்டியன் அதுகேட்டு அஞ்சானாயினன்.

அடிகேள் - பெருமானீர். நம் கூடற்குடவயின் என்க. அயிலவருவது போல அணைவது என்றனர் என்னவும் எனவிரிக்க. வருவதை, அணைவதை என்பவற்றில் ஐ சாரியை. (கக)

மற்றிது முனமத கரிவிட்டோர் வரவிட வருவதை யெனவெண்ணம்
உற்றிது தனையும் விளித்தற்கெம் முடையவர் விடையவர் விடநாகஞ்
சுற்றிய சடையின ருளரென்னுச் சுரருல கிழிசுட ரெனநிற்குங்
கற்றளி யிடையுறை யிறைமுன்போய்க் கனைகழ லடிதொழு தறைகிற்பான்.

(இ - ள்.) இது முனம் மதகரி விட்டோர் வரவிடவருவது என - இப்பாம்பானது முன்னர் மதயானையை விடுத்த சமணர்கள் ஏவுதலால் வருவதாகும் என்று, எண்ணம் உற்று - கருதி, இதுதனையும் விளித்தற்கு - இதனையும் கொல்லுதற்கு, எம் உடையவர் விடையவர் - எம்மை ஆளாக உடையவரும் இடபவூர்தியினை உடையவரும், விடநாகம் சுற்றிய சடையினர் உளர் என்னு - நஞ்சினையுடைய பாம்பினை அணிந்த சடையினை யுடையவருமாகிய சோமசுந்தரக்கடவுள் இருக்கின்றாரென்று, சுரர் உலகு இழிசுடர் என நிற்கும் ; கல்தளி இடை உறை இறை முன்போய் - தேவருலகினின்றும் இறங்கிய சூரியனைப்போல நிற்கும் மாணிக்க விமானத்தில் எழுந்தருளிய இறைவன் திருமுன் சென்று, கனைகழல் அடிதொழுது அறைகிற்பான் - ஒலிக்கின்ற வீரக்கழலணிந்த திருவடியை வணங்கிக் கூறுகின்றான்.

மற்று, அசை நிலை. வருவதை, ஐ சாரியை. விளித்தல் - இறப்பித்தல்; விளிதல் என்பதன் பிறவினை. உடையவர் விடையவர் சடையினர் என ஒரு பொருள் மேற் பல பெயர் வந்தன. சுடரென நிற்கும் என்றமையால் கல் என்பது மாணிக்கத்தை உணர்த்துவதாயிற்று. தளி - கோயில்; விமானம். (கஉ)

வழிவழி யடிமைசெய் தொருபோது மறவலன் வழிபடு மடியேனின்
மொழிவழி முறைசெய்து வருவேனிம் முதுநக ரடையவு மமணீசர்
அழிவது கருதினர் விடுநாக மடைவது னருள்வழி யதனாவி
கழிவது கருதிய வடியேனைக் கருணைசெய் தருளிது கடனென்றான்.

(இ - ள்.) வழி வழி அடிமை செய்து - வழி வழியாகத் தொண்டு பூண்டு, ஒரு போதும் மறவலன் வழிபடும் அடியேன்-ஒரு பொழுதும் மறவாது வழிபடுகின்ற அடியேன், நின் மொழி வழி முறை செய்து வருவேன் - நின் ஆணை வழியே ஆட்சி புரிந்து வாராநின்றேன், அமண் ஈசர் - சமணராகிய கீழோர், இம்முது நகர் அடையவும் அழிவது கருதினர் விடுநாகம் அடைவது - இந்தத் தொன்னகர் முழுதும் அழிவதைக் கருதி விடுத்த பாம்பு வாரா நின்றது; உன் அருள் வழி அதன் ஆவி கழிவது கருதிய அடியேனை - உனது திருவருளின் நெறியே அதன் உயிர் போவதைக் கருதிய அடியேனுக்கு, கருணை செய்தருள் இது கடன் என்றான் - அருள் பாலிப்பாயாக இது நினது கடனாகும் என்று குறையிரந்தான்.

மொழி - வேதம் முதலியன. அடையவும் - முழுதும். மறவலன், கருதினர் என்பன முற்றெச்சம். அழிவது, கழிவது என்பன தொழிற்பெயர். அடியேனை-அடியேனுக்கு. (கங)

அனுமதி கொடுதொழு திறைபாத மகமதி* கொடுபுற னடைகின்ற
பனிமதி வழிவரு தமிழ்மாறன் பகழியொ டடுசிலை யினனேகிக்
குனிமதி தவழ்தரு மதினீடுங் கொடியணி குடகடை குறுகாமுன்
தனிவரை யெனநிகர் தருகோபத் தழல்விழி யரவினை யெதிர்கண்டான்.

(இ - ள்.) அனுமதி கொடு-அருள் பெற்றுக் கொண்டு, தொழுது-வணங்கி, இறை பாதம் அகம் மதிகொடு-இறைவனது திருவடியை உள்ளத்திற் சிந்தித்தலோடு, புறன் அடைகின்ற - புறத்தேவருகின்ற, பனிமதி வழிவரு தமிழ் மாறன் - தண்ணிய சந்திரன் மரபில் வந்த தமிழ் வேந்தனாகிய அனந்தகுண பாண்டியன், பகழியொடு அடுசிலையினன் ஏகி - கணையுடன் கொல்லுதற்குரிய வில்லையுடையவனாய்ச் சென்று, குனிமதி தவழ் தருமதில் - வளைந்த மதிதவழுகின்ற மதிலினது, நீடும் கொடி அணி குடகடை குறுகாமுன் - நெடிய கொடி கட்டிய மேற்கு வாயிலை அடைதற்கு முன்னரே, தனிவரை என நிகர்தரு கோபத்தழல் விழி அரவினை எதிர் கண்டான் - ஒப்பற்ற மலை யென்று சொல்லுமாறு எதிர்ந்த சினத்தீ சிந்தும் விழியினையுடைய பாம்பினை நேரே கண்டனன்.

---

(பா - ம்.) * அகமதிற் கொடு.

அனுமதி - உடன்பாடு; அரவினைக் கொல்லுதற்கு இறைவன் அருளிப்பாடு. மதிகொடு - மதித்தல் கொண்டு; சிந்தித்து. அடைகின்ற மாறன் எதிக்குறுகாமுன் என்க. நிகர்தரு - எதிர்ந்த;

"நிகர்த்து மேல்வந்த வேந்தனொடு"

என்பது தொல்காப்பியம். (கச)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

பல்பொறிப் பகுவாய்ப் படம்புடை பரப்பிப் பக்கமெண் டிசையொடு விசும்பிற்
செல்கதிர் புதைத்துத் திணியிருள் பரப்பித் திங்களின் பகிர்புரை நஞ்சம்
பில்கெயி றதுக்கிப் பெரிதுயிர்த் தகல்வாய் பிளந்துமா நகரெலா மொருங்கே
ஒல்லெனக் கௌவி விழுங்குவான் சீறி யுருத்தன னுரகவா ளவுணன்.

(இ - ள்.) உரகவாள் அவுணன் - பாம்பின் வடிவாகிய கொடிய அவுணன், பல்பொறிப் பகுவாய்ப் படம்புடை பரப்பி - பல பொறிகளையும் பிளந்த வாயையுமுடைய படங்களைப் பரப்பி, பக்கம் எண் திசையொடு - எட்டுத் திக்குகளாகிய பக்கங்களோடு, விசும்பில் செல்கதிர் புதைத்து - வானிற் செல்லுகின்ற சூரியனையும் மறைத்து, திணி இருள் பரப்பி - செறிந்த இருளை விரித்து, திங்களின் பகிர்புரை - சந்திரனது பிளவினை ஒத்த, நஞ்சம் பில்கு எயிறு அதுக்கி - நஞ்சினை உமிழும் பல்லினை அதுக்கி, பெரிது உயிர்த்து - பெருமூச்சு விட்டு, அகல் வாய் பிளந்து - அகன்ற வாயைப் பிளந்து, மாநகர் எலாம் ஒருங்கே ஒல்லெனக் கௌவி விழுங்குவான் - பெரிய நகர் முழுதையும் ஒரு சேர விரைந்து கௌவி விழுங்குதற்கு, சீறி உருத்தனன் - சீறிச்சினந்தான்.

ஒல்லென, விரைவுக் குறிப்பு. விழுங்குவான், வினையெச்சம். (கரு)

அடுத்தன னரச சிங்கவே றிடியே றஞ்சவார்த் தங்கையிற் சாபம்
எடுத்தன னெடுநா ணிருதலை வணக்கி யெரிமுகக் கூர்ங்கணை தொடுத்து
விடுத்தனன் விடுத்த சரமெலா முரகன் வெறுந்துகள் படக்கறித் துமிழ்ந்து
படுத்தனன் பொருது பஞ்சவன் புராரி பங்கயச் சேவடி நினையா.

(இ - ள்.) அரச சிங்க ஏறு அடுத்தனன் இடி ஏறு அஞ்ச ஆர்த்து - அரசருள் ஆண் சிங்கம் போன்ற பாண்டியன் நெருங்கி இடியேறும் அஞ்சப் பெருமுழக்கஞ் செய்து, அங்கையில் சாபம் எடுத்தனன் நெடு நாண் இருதலை வணக்கி - அழகிய கையில் வில்லை எடுத்து நீண்ட நாணினால் (அவ்வில்லின்) இரண்டு தலையையும் வளைத்து, எரிமுகக் கூர்ங்கணை தொடுத்து விடுத்தனன் - கூரிய தீமுகக் கணைகளைப் பூட்டி விடுத்தனன்; விடுத்த சரம் எலாம் - (அங்ஙனம்) விடப்பட்ட கணைகளனைத்தையும், உரகன் வெறுந் துகள்படக் கறித்து உமிழ்ந்து படுத்தனன் - பாம்பின் வடிவாய அவுணன் வெறிய தூளாமாறு கடித்து உமிழ்ந்து சிதைத்தான்; பஞ்சவன் - (அதனைக்கண்ட) பாண்டியன், பொருது - மனம் பொறாமல், புராரி பங்கயச்சேவடி நினையா - சோமசுந்தரக்கடவுளின் தாமரை மலர் போன்ற சிவந்த திருவடிகளைச் சிந்தித்து.

எடுத்து வணக்கி நாணிலே கணை தொடுத்து என்றுமாம். அடுத்தனன், எடுத்தனன் என்பன முற்றெச்சம். புராரி - புரப்பகைவன்; முப்புரங்களை யெரித்தவன். (கசு)

கொடியதோர் பிறைவா யம்பினை விடுத்துக் கோளரா வளையுட றுணித்தான்
இடியதோ வெனவார்த் தெரிநிறக் குருதி யிரங்கிவீ ழருவியிற் கவிழ
நெடியதோ ருடலம் புரள்படக் கூர்வா னெளிதர விளிபவன் மேலைக்
கடியதோ ரால காலவெள் ளம்போற்* கக்கினான் கறையிரு ணஞ்சம்.

(இ - ள்.) கொடியது ஓர் பிறை வாய் அம்பினை விடுத்து - கொடியதாகிய ஒரு பிறைபோலும் வாயினையுடைய கணையை எவி, கோள் அரா வளை உடல் துணித்தான் - வலிய பாம்பினது நெளிந்த உடலைத் துண்டு படுத்தினான்; இடியதோ என ஆர்த்து - இடி யொலியோ என்று ஐயுறப்பேரொலி செய்து, எரி நிறக்குருதி-தீயின் நிறம் போன்ற குருதி, இரங்கி வீழ் அருவியில் கவிழ - ஒலித்து வீழ்கின்ற அருவி போல ஒழுகவும், நெடியது ஓர் உடலம் புரள்பட - நீண்டதாகிய ஒப்பற்ற உடல் புரளவும், கூர்வால் நெளிதர - கூரியவால் நெளியவும், விளிபவன் - இறக்கின்ற அவ் வவுணன், மேலைக் கடியது ஓர் ஆலகால வெள்ளம்போல் - முன்னாளிற்றோன்றிய கடியதாகிய ஒப்பற்ற ஆலகால நஞ்சின் பெருக்குப்போல, கறை இருள் நஞ்சம் கக்கினான் - கரிய இருள் போன்ற நஞ்சினைக் கக்கினான்.

இடியதோ, அது பகுதிப்பொருள் விகுதி. கொடியது, நெடியது, கடியது என்பன எச்சமாயின. ஓர் என்பன அசைகளுமாம். ஆர்த்துவிளிபவன் கக்கினான் என்க. (யஎ)

தீவிட முருத்துத் திணியிருள் கடுப்பத் திருநக ரெங்கணுஞ் செறிந்த
காவிடங் கூவல் கயந்தலை சதுக்கங் கழகமா வணமக ழிஞ்சி
கோவிட மாட முபரிகை மேடை கோபுர மரங்கெலாம் பரந்து
தாவிட மயங்கி யுறங்கினர் போலச் சாம்பினர் தனிநகர் மாக்கள்.

(இ - ள்.) தீவிடம் உருத்து - அந்தக் கொடிய நஞ்சானது சினந்து, திணி இருள் கடுப்ப - செறிந்த இருள் பரவியதைப்போல, திருநகர் எங்கணும் - அழகிய நகர் முழுதும், செறிந்த கா இடம் - நெருங்கிய சோலைகளும், கூவல் கயந்தலை - கிணறும் குளமும், சதுக்கம் கழகம் ஆவணம் - நாற்றெருக் கூடுமிடமும் கல்விக் கழகமும் கடைவீதியும், அகழ் இஞ்சி - அகழியும் மதிலும், கோ இடம் - அரசன் மாளிகையும், மாடம் உபரிகை மேடை கோபுரம் அரங்கு - மாடமும் உப்பரிகையும் மேடையும் கோபுரமும் நாட்டியசாலையும், எலாம் பரந்து தாவிட - ஆகிய எல்லா விடங்களிலும் பரந்து தாவுதலால், தனிநகர் மாக்கள் - ஒப்பற்ற அந் நகரிலுள்ள மாந்தர்கள், மயங்கி உறங்கினர்போலச் சாம்பினர் - நஞ்சினால் மயங்கி உறங்கினவர்கள்போல வாடினார்கள்.

---

(பா-ம்.) *ஆலாகல வெள்ளம்போலக்.

விடம் உருத்து இருள் கடுப்ப நகர் முழுதும் எல்லாவிடங்களிலும் பரந்து தாவிட என்க. ஆலாலத்தால் உறங்கிய வானோர்போல என்றுரைப்பாரு முளர். ()

நிலைதளர்ந் துடலந் திமிர்ந்துவேர் வரும்பி நிறைபுலன் பொறிகர ணங்கள்
தலைதடு மாறி யுரைமொழி குழறித் தழுதழுப் படைந்துநா வுணங்கி
மலைதரு கபமே னிமிர்ந்துணர் வழிந்து மயங்கிமூச் சொடுங்கியுள் ளாவி
அலைதா வூச லாடினர் கிடந்தா ரன்னதொன் னகருளா ரெல்லாம்.

(இ - ள்.) நிலைதளர்ந்து உடலம் திமிர்ந்து வேர்வு அரும்பி - நிலை கெட்டு உடல் கம்பித்து வெயர்வை தோன்றி, நிறை புலன் பொறி கரணங்கள் தலை தடு மாறி - நிறைந்த புலன்களும் பொறிகளும் அந்தக்கரணங்களும் தலைதடுமாறி, உரை மொழி குழறி தழுதழுப்பு அடைந்து நா உணங்கி - உரைக்கின்ற மொழிகள் குழறி நாத் தழுதழுப்புற்றுக் காய்ந்து, மலைதரு கபம் மேல்நிமிர்ந்து உணர்வு அழிந்து - பொருகின்ற கபம் மேலோங்கி அறிவழிந்து, மயங்கி மூச்சு ஒடுங்கி - மயங்கி உயிர்ப்பு அடங்கி, உள் ஆவி அலைதர - உள்ளேயுள்ள உயிர் அலைய, அன்னதொல் நகர் உளார் எல்லாம் ஊசல் ஆடினர் கிடந்தார் - அப் பழையநகரிலுள்ளா ரனைவரும் ஊஞ்சல்போல ஆடிக்கிடந்தனர்.

உடலம், அம் சாரியை. தலை தடுமாறி - தடுமாற்றமுற்று; ஒருசொல். உரை மொழி, வினைத்தொகை. ஆடினர், முற்றெச்சம். (கக)

தென்னவன் விடங்கண் டஞ்சுமால் போலச் சினகா மடைந்துதாழ்ந் தெந்தாய்
முன்னவ வாதி முதல்வ வித்தின்றி முளைத்தவ முடிவிலா முனிவ
என்னவ வன்பர்க் கெளியவ யார்க்கு மிறையவ விந்நகர்க் கென்றும்
மன்னவ வனாதி மறையவ முக்கண் வானவ நினைச்சா ணடைந்தேன்.

(இ - ள்.) தென்னவன் - அனந்தகுணபாண்டியன், விடம் கண்டு அஞ்சும் மால் போலச் சினகரம் அடைந்து - ஆலால விடத்தைக் கண்டு அஞ்சிய திருமால்போலத் திருக்கோயிலை அடைந்து, தாழ்ந்து - வணங்கி, எந்தாய் - எந்தையே, முன்னவ - யாவர்க்கும் முற்பட்டவனே, ஆதி முதல்வ - ஆதியாகிய முதல்வனே, வித்து இன்றி முளைத்தவ - மூலமின்றித் தோன்றியவனே, முடிவு இலா முனிவ - இறுதியில்லாத முனிவனே, என்னவ - எனக்குரிமையானவனே, அன்பர்க்கு எளியவ - அன்பர் கட்கு எளியவனே, யார்க்கும் இறையவ - எல்லோருக்குந் தலைவனே, இந்நகர்க்கு என்றும் மன்னவ - இம் மதுரைப்பதிக்கு எக்காலத்திலும் மன்னவனே, அனாதி மறையவ - அனாதியாயுள்ள மறையவனே, முக்கண் வானவ - மூன்று கண்களை யுடைய தேவனே, நினைச் சரண் அடைந்தேன் - நின்னைப் புகலாக அடைந்தேன்.

விடங்கண்டஞ்சிய திருமால் திருக்கைலையை அடைந்து சரண்புக்காற் போல என்க. அருகன் கோட்டம் என்னும் பொருளுள்ள சினகரம் என்னும் பெயர் பின் பொதுப்படக் கோயிலைக் குறிப்பதாயிற்று. என்னவ - எனக் குரிமை

யுடையவனே; "அப்பனீ அம்மைநீ" என்னும் திருத்தாண்டகம் முதலியவற்றுள் இறைவன் தமக் குரிமையுடையார் பலராகவும் கூறப்படுதல் காண்க; என் நவ எனப் பிரித்து, எனக்குப் புதுமையை விளைப்பவனே என்று பிறர் கூறுவாராயினர். (உ0)

அடுத்துவந் தலைக்கு மாழியைத் துரந்து மாழியுண் டேழு மொன் றாகத்
தொடுத்துவந் தலைக்கும் பெருமழைதடுத்துந் துளைக்கைவிண் டுழாவவெண் பிறைக்கோ
டெடுத்துவந் தலைக்குங் களிற்றினை விளித்து மிந்நகர் புரந்தனை யின்று
மடுத்துவந் தலைக்கும் விடத்தினுன் மயங்கும் வருத்தமுங் களைதியென் றிரந்தான்.

(இ - ள்.) அடுத்து வந்து அலைக்கும் ஆழியைத் துரந்தும் - நெருங்கிவந்து வருத்துங் கடலைச் சுவறச் செய்தும், ஆழி உண்டு எழும் ஒன்றாகத் தொடுத்துவந்து அலைக்கும் பெருமழை தடுத்தும் - கடல்நீரைப் பருகி எழுமேகங்களும் ஒன்றாகத் திரண்டுவந்து பெய்து வருத்தும் பெருமழையைத் தடுத்தும், துளைக்கை விண் துழாவ - துளையையுடைய துதிக்கை வானைத் தடவுமாறு, வெண்பிறைக் கோடு எடுத்துவந்து அலைக்கும் களிற்றினை விளித்தும் - வெள்ளிய பிறைபோன்ற கொம்பினிடையே மேலெடுத்துவந்து வருத்தும் யானையைக் கொன்றும், இந்நகர் புரந்தனை - இந்த நகரத்தைப் பாதுகாத்தனை, இன்று மடுத்துவந்து அலைக்கும் - இப்பொழுது அகப்படுத்துவந்து வருத்துகின்ற, விடத்தினால் மயங்கும் வருத்தமும் களைதி என்று இரந்தான் - நஞ்சினாலே மயங்குகின்ற வருத்தத்தையும் நீக்கியருள்வாயென்று வேண்டினான்.

எழ், தொகைக் குறிப்பு. துளைக்கை யெடுத்துவந்தென்க. விளித்து - விளியச் செய்து; பிறவினை. மடுத்து - நகரினை அகப்படுத்தி. இன்றும் அடுத்து எனப் பிரிப்பாருமுளர். முன்னுண்டாகிய துன்பங்களை யெல்லாம் போக்கி இந்நகரைக் காத்தருளிய நீயே இப்பொழுது இத்துன்பத்தினின்றும் காக்கற்பாலை யென வேண்டினான். (உக)

அருட்கட லனைய வாதிநா யகன்ற னவிர்சடை யணிமதிக் கொழுந்தின்
பெருக்கடை யமுதத் தண்டுளி சிறிது பிலிற்றினன் பிலிற்றிட லோடும்
பொருக்கென வெங்கும் பாலினிற் பிரைபோற் புரையறக் கலந்துபண் டுள்ள
திருக்கிளர் மதுரா நகரமாப் புனிதஞ் செய்ததச் சிறுதுளி யம்மா.

(இ - ள்.) அருள் கடல் அனைய ஆதி நாயகன் - கருணைக்கடலனைய ஆதி நாயகனாகிய சோமசுந்தரக்கடவுள், தன் அவிர் சடை அணிமதிக் கொழுந்தின் - தனது விளங்கா நின்ற சடையின்கண் அணிந்த இளம் பிறையினது, பெருக்கு அடை அமுதத்தண் துளி சிறிது பிலிற்றினன் - பெருக்கமைந்த அமுதத்தின் தண்ணிய துளியிற் சிறிது சிந்தினான்; பிலிற்றிடலோடும் - அங்ஙனம் சிந்திய வளவில், அச்சிறு துளி - அந்தச்சிறிய திவலையானது, பொருக்கென பாலினில் பிரைபோல் எங்கும் புரை அறக்கலந்து - விரைந்து பாலிற் பிரைபோல எவ்விடத்துங் குற்ற

மறக் கலந்து, பண்டு உள்ள திருக்கிளர் மதுரா நகரம் ஆக - முன்னுள்ள செல்வ மிக்க மதுரை நகர் ஆகுமாறு, புனிதம் செய்தது - தூய்மை செய்தது.

புரையற - இடை வெளியின்றி என்றுமாம். முன்பு மதிக்கலையின் அமிழ் தாற் சாந்தி செய்யப்பெற்று அதனால் மதுரையெனப் பெயரெய்தினமை திருநகரங் கண்ட படலத்துட் கூறப்பட்டது; இப்பொழுதும் அவ்வமிழ்தால் நஞ்சினைப் போக் கித் தூய்மை செய்தமையின் பண்டுள்ள மதுரா நகரமா என்றார். அம்மா, வியப் பிடைச்சொல். (உஉ)

இரவிமுன் னிருள தெனவிறை யருண்முன் னிருண்மல வலியென வெங்கும்
பரவிய வமுதால் விடமகன் றவசப் படிவொழிந் தியாவரு மின்பம்
விரவிய களிப்பின் மேவினா ரிருந்தார் மீனவர் பெருந்தகை வேந்தன்
அரவணி சடையாற் கன்புருத் தானே யாகிமண் காவல்செய் திருந்தான்.

(இ - ள்.) இரவி முன் இருளது என - சூரியன் முன்னர் இருள் ஓடுதல் போலவும், இறை அருள் முன் இருள் மலவலி என - இறைவனது திருவருள் முன்னே ஆணவ மலவன்மை கெடுதல் போலவும், எங்கும் பரவிய அமுதால் - எவ் விடத்தும் பரவிய அமுதத்தினால், விடம் அகன்று - நஞ்சு நீங்கப்பெற்று, அவசப் படிவு ஒழிந்து - மயக்க வடிவம் நீங்கி, யாவரும் - அனைவரும், இன்பம் விரவிய களிப்பின் மேவினார் இருந்தார் - இன்பங்கலந்த மகிழ்ச்சியிற் பொருந்தி இருந்தனர்; மீனவர் பெருந்தகை வேந்தன்-பாண்டியர் பெருந்தகையாகிய அனந்த குணமன்னன், அரவு அணிசடையாற்கு அன்பு உருத்தானே ஆகி - பாம்பினை அணிந்த சடையை யுடைய சோமசுந்தரக்கடவுளுக்கு அன்பே வடிவமாகி, மண் காவல் செய்து இருந் தான் - நிலவுலகைப் பாதுகாத் திருந்தனன்.

இருளது, அது பகுதிப்பொருள் விகுதி. திருவருளால் ஆணவவலி கெடுதற் குக் கூறற்பாலவாய உவமைகளில் ஒன்றாகும் அமுதால் விட மொழிதல் இங்கு உவமேயமாக, அஃது உவமையாயிற்று. அவசம் - வசமின்மை; மூர்ச்சை. மேவி னார், முற்றெச்சம். (உங)

ஆகச்செய்யுள் - ௩௯உ௫.

# இருபத்தொன்பதாவது
# மாயப்பசுவைவதைத்தபடலம்

[கலிநிலைத்துறை]

சுருதி யின்புறத் தவர்விடு மராவினைச் சுருதி
கருத ரும்பர னருளுடைக் கௌரியன் றுணித்த
பரிசி தங்கது பொருதமண் படிறர்பின் விடுப்ப
வருபெ ரும்பசு விடையினான் மாய்த்ததும் பகர்வாம்.

(இ - ள்.) சுருதியின் புறத்தவர் விடும் அராவினை - வேதநெறிக்குப் புறம்பாகிய சமணர்கள் ஏவிய பாம்பினை, சுருதி கருத அரும் பரன் அருள் உடைக் கௌரியன் - வேதமுஞ் சிந்தித்தற்கரிய இறைவனது திருவருளைப் பெற்ற அனந்த குணபாண்டியன், துணித்த பரிசு இது - துண்டுபடுத்திய திருவிளையாடல் இது; அங்கு அது பொருது - (இனி) அங்கு அதனைப் பொறுக்காது, அமண் படிறர் - சமணராகிய வஞ்சகர், பின் விடுப்ப வரு பெரும்பசு - பின்பு ஏவவருகின்ற பெரிய (மாயப்) பசுவினை, விடையினால் மாய்த்ததும் பகர்வாம் - (சோமசுந்தரக் கடவுள்) இடபத்தினால் வதைத்தருளிய திருவிளையாடலையுங் கூறுவாம்.

புறம் - மாறுபாடு. கௌரியன் துணித்ததும் இறைவன் புரிந்த திருவிளையாடலே யென்பார் 'பரனரு ளுடைக் கௌரியன் றுணித்த' என்றார். விடையினான் என்பதனை இரட்டுற மொழிதலாகக் கொண்டு இடபத்தையுடைய சோமசுந்தரக் கடவுள் என்றும், இடபத்தினால் என்றும் உரைத்துக் கொள்க. (க)

பணப்பெ ரும்பகு வாயுடைப் பாந்தளை யனந்த
குணப்பெ ருந்தகை துணித்தபின் பின்வரு குண்டர்
தணப்ப ருங்குழாங் காலினாற் றள்ளுண்டு செல்லுங்
கணப்பெ ரும்புயல் போலுடைந் தோடின கலங்கி.

(இ - ள்.) பணம் பெரும்பகுவாய் உடை பாந்தளை - படம் பொருந்திய பெரிய பிளந்த வாயையுடைய பாம்பினை, அனந்தகுணப் பெருந்தகை துணித்த பின் - அனந்தகுணன் என்னும் பெரிய தகுதியையுடைய பாண்டியன் துணித்த பின்பு, பின்வரு குண்டர் தணப்பு அரும் குழாம் - பின்னே வந்த சமணர்களின் நீங்காத கூட்டங்கள், காலினால் தள்ளுண்டு செல்லும் - காற்றினாற் றள்ளப்பட்டு ஓடும், பெரும்புயல் கணம்போல் - பெரிய முகிற்படலம் போல, உடைந்து கலங்கி ஓடின - இரிந்து மனங் கலங்கி ஓடுவ வாயின.

குண்டர் குழாங்கள் புயற்கணம்போல் கலங்கியோடின என்க. (உ)

உடைந்து போனவ ரனைவரு மோரிடத் திருள்போல்
அடைந்து நாமுன்பு விடுத்தமால் யானைபோ லின்று
தொடர்ந்த பாம்பையுந் தொலைத்தனர் மேலினிச் சூழ்ச்சி
மிடைந்து செய்வதை யாதென வினையமொன் றோர்வார்.

(இ - ள்.) உடைந்து போனவர் அனைவரும் - (அங்ஙனம்) இரிந்து ஓடினவ ராகிய அச்சமண ரனைவரும், ஓர் இடத்து இருள்போல் அடைந்து - ஓரிடத்தில் இருள் செறிந்ததுபோலச் செறிந்து, நாம் முன்பு விடுத்த மால் யானைபோல் - நாம் முன் விடுத்த பெரிய யானையைக் கொன்றதுபோல, இன்று தொடர்ந்த பாம்பையும் தொலைத்தனர் - இன்று சென்ற பாம்பினையும் அழித்தார்கள்; இனிமேல் மிடைந்து யாது சூழ்ச்சி செய்வது என - இனி நாம் நெருங்கி யாது சூழ்ச்சி செய்வது என்று, வினையம் ஒன்று ஓர்வார் - ஓர் வஞ்சத்தை எண்ணுவாராயினர்.

செய்வதை, ஐ சாரியை. வினையம் - வஞ்சம். யாதெனக் கருதினவர் பின் ஓர்வாராயின ரென்க. (௩)

ஆவை யூறுசெய் யார்பழி யஞ்சுவா ரதனை
ஏவு வாமிது வேபுணர்ப் பென்றுசூழ்ந் திசைந்து
பாவ காரிகள் பண்டுபோற் பழித்தழல் வளர்த்தார்
தாவி லாவுரு வாகியோர் தானவன் முளைத்தான்.

(இ - ள்.) ஆவை ஊறு செய்யார் - பசுவிற்குத் துன்பஞ் செய்யார்கள், பழி அஞ்சுவார் - (அதற்குத் துன்பஞ் செய்தலால் வரும்) பழியை அஞ்சுவார்கள் (ஆகலின்), அதனை ஏவுவாம் - அப் பசுவை விடுப்போம், இதுவே புணர்ப்பு என்று சூழ்ந்து இசைந்து - இதுவே தக்க சூழ்ச்சியென்று கருதி யாவருங் கருத்தொத்து, பாவகாரிகள் - பாவகாரிகளாகிய அச்சமணர், பண்டுபோல் பழித்தழல் வளர்த்தார் - முன்போலவே கொடிய வேள்வி ஒன்றினைச் செய்தனர்; தாவு இல் ஆ உரு ஆகி ஓர் தானவன் முளைத்தான் - கெடுதலில்லாத பசுவின் வடிவாகி ஒரு அவுணன் தோன்றினன்.

புணர்ப்பு - சூழ்ச்சி. பாவகாரிகள் - பாவமே செய்வோர்;

"பாவ காரிகள் பார்ப்பரி தென்பரால்
தேவ தேவன் சிவன்பெருந் தன்மையே"

என்பது தேவாரம். ஆவின் சாதியியற்கை பற்றித் 'தாவில் ஆ' என்றார்;

"விடுநில மருங்கிற் படுபுல் லார்ந்து
நெடுநில மருங்கின் மக்கட் கெல்லாம்
பிறந்தநாட் டொட்டுஞ் சிறந்ததன் றீம்பால்
அறந்தரு நெஞ்சோ டருள்சுரந் தூட்டும்
இதனொடு வந்த செற்ற மென்னை";

என்று மணிமேகலை கூறுதல் சிந்திக்கற்பாலது. (௪)

குண்ட ழற்கணின் றெழுந்தவக் கொடியவெம் பசுவைப்
பண்டு போலவர் விடுத்தனர் கூடலம் பதிமேல்
உண்டு மில்லையு மெனத்தடு மாற்றநூ லுரைத்த
பிண்டி யானுரை கொண்டுழல் பேயமண் குண்டர்.

(இ - ள்.) குண்டு அழல்கண் நின்று எழுந்த அக் கொடிய வெம் பசுவை - வேள்விக் குண்டத்தின் தீயினின்றுந் தோன்றிய அந்தக் கொடிய பசுவினை, கூடலம்பதிமேல் - மதுரைப்பதியின் மேல், உண்டும் இல்லையும் எனத் தடுமாற்றநூல் உரைத்த பிண்டியான் - அத்திநாத்தி என்று தடுமாற்றநூலினைக் கூறிய அசோக மரத்தினடியிலுள்ள அருகனது, உரை கொண்டு உழல் பேய் அமண் குண்டர் அவர் - உரையினைக் கொண்டு உழலுகின்ற பேய்போன்ற சமணக் கீழ்மக்களாகிய அன்னார், பண்டுபோல் விடுத்தனர் - முன்போல விடுத்தார்.

குண்டு - வேள்விக்குண்டம். கொடிய வெம், ஒரு பொருளன. பண்டு போல் - முன்பு யானையையும் நாகத்தையும் விடுத்தமைபோல. கூடலம்பதி, அம் சாரியை. உண்டு இல்லை - அத்திநாத்தி; அநேகாந்தமாக விரித்துரைக்கும் எழுவகையும் இவ்விரண்டுள் அடங்குதலின் யாண்டும் இவையே கூறப்படும். பிண்டி - அசோகு. குண்டராகிய அவர் பசுவைக் கூடலம்பதிமேல் விடுத்தனர் என்க. (கு)

(கலிவிருத்தம்)

மாடமலி மாளிகையி லாடுகொடி மானக்
கோடுகளி னோடுமுகில் குத்திமிசை கோத்துச்
சேடன்முடி யுங்கதிர்கொள் சென்னிவரை யுந்தூள்
ஆடவடி யிட்டுலவை யஞ்சிட வுயிர்த்தே.

(இ - ள்.) மாடம் மலி மாளிகையில் ஆடு கொடி மான - மாடங்கள் நிறைந்த மாளிகையின்கண் ஆடுகின்ற கொடியை யொப்ப, கோடுகளின் - கொம்புகளினால், ஓடுமுகில் குத்திமிசை கோத்து - வானில் ஓடுகின்ற மேகங்களைக் குத்தி மேலே கோத்து, சேடன் முடியும் - அனந்தனது முடியும், கதிர்கொள் சென்னி வரையும் தூள் ஆட - ஒளியினைக் கொண்ட முடியினையுடைய மேருமலையும் புழுதியாட, அடி இட்டு - அடி பெயர்த்துவைத்து, உலவை அஞ்சிட உயிர்த்து - காற்று அஞ்சுமாறு மூச்செறிந்து.

மாடம் - மேனிலை. (சு)

விடுத்திடு முயிர்ப்பினெதிர் பூளைநறை வீபோல்
அடுத்திடு சராசர மனைத்துமிரி வெய்தக்
கடுத்திடு சினக்கனலி னுக்குலக மெல்லாம்
மடுத்திடு தழற்கடவுள் வார்புனலை மான.

(இ - ள்.) விடுத்திடும் உயிர்ப்பின் எதிர் - விடுகின்ற மூச்சினெதிரே, அடுத்திடு சராசரம் அனைத்தும் - நேர்படுகின்ற இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளுமாகிய எல்லாம், நறை பூளை வீபோல் இரிவு எய்த - தேனையுடைய பூளைப் பூப்போலப் பறக்கவும், கடுத்திடு சினக்கனலினுக்கு - மிக் கெழுகின்ற கோபத்தீயினுக்கு, உலகம் எல்லாம் மடுத்திடு தழல் கடவுள் வார் புனலை மான - உலகமனைத்தையும் அழிக்கும் தீக்கடவுள் பெருகிய நீரினை யொப்பதாகவும்.

சினக்கனலின் வெம்மையை நோக்குழி ஊழித்தீயும் நீர்போலத் தண்ணிதாய்த் தோன்ற வென்க. (எ)

உடன்றிறைகொள் புள்ளொடு விலங்கலறி யோட
மிடைந்தபழு வத்தொடு விலங்கலை மருப்பால்
இடந்தெறி மருத்தென வெறிந்தளவி லோரைத்
தொடர்ந்துடல் சிதைத்துயிர் தொலைத்திடியி னார்த்தே.

(இ - ள்.) இறைகொள் புள்ளொடு - தங்கிய பறவைகளோடு, விலங்கு அலறி ஓட - மிருகங்களும் அலறி ஓடுமாறு, மிடைந்த பழுவத்தொடு விலங்கலை - நெருங்கிய வனங்களோடு மலைகளையும், உடன்று மருப்பால் இடந்து - வெகுண்டு கொம்பினால் அடியொடு பெயர்த்து, எறி மருத்து என எறிந்து - வீசுகின்ற காற்றைப்போல எறிந்து, அளவிலோரைத் தொடர்ந்து உடல் சிதைத்து உயிர் தொலைத்து - அளவிறந்த மக்களைப் பின்தொடர்ந்து அவர்கள் உடலைச் சேதித்து உயிரைத் தொலைத்து, இடியின் ஆர்த்து - இடிபோலப் பேரொலிசெய்து.

இறைகொள் - வனங்களிலும் மலைகளிலும் தங்குதலைக் கொண்ட. உடன்று இடந்து எறிந்து எனக் கூட்டுக. (அ)

மறலிவரு மாறென மறப்பசு வழிக்கொண்
டறலிவர் தடம்பொருனை யாறுடைய மாறன்
திறலிமலர் மங்கையுறை தென்மதுரை முன்னு
விறலிவரு கின்றதது மீனவ னறிந்தான்.

(இ - ள்.) மறலி வருமாறு என மறப்பசு வழிக் கொண்டு - கூற்றுவன் வருந் தன்மைபோலக் கொலைத்தொழிலையுடைய பசுவானது வழிநடந்து, அறல் இவர் தடம் பொருனை ஆறு உடைய மாறன் - கருமணல் பரந்த பெரிய பொருனை யாற்றினையுடைய பாண்டியனது, திறலி மலர் மங்கை உறை தென்மதுரை முன்னு - வீரமகளும் திருமகளும் உறைகின்ற தென்றிசைக்கணுள்ள மதுரையை நோக்கி, விறலி வருகின்றது - வெற்றிகொண்டு வாராநின்றது; அது மீனவன் அறிந்தான் - அதனைப் பாண்டியன் அறிந்தான்.

திறலி - திறல் உடையவள்; கொற்றவை; இ பெயர் விகுதி. விறலி - விறல் கொண்டு. "மாடமலி" என்பது முதலிய செய்யுட்களிலுள்ள எச்சங்களை 'வருகின்றது' என்பதனோடு முடிக்க.

(பா - ம்.) * திறலி மரைமங்கை. (க)

மீனவனு மாநகருண் மிக்கவரு முக்கண்
வானவனை மாமதுரை மன்னவனை முன்னோர்
தானவனை யாழிகொடு சாய்த்தவனை யேத்தா
ஆனதுரை செய்துமென வாலய மடைந்தார்.

(இ - ள்.) மீனவனும் - அனந்தகுண பாண்டியனும், மாநகருள் மிக்கவரும் - பெரிய அந் நகரத்துள் மேம்பட்டவரும், முக்கண் வானவனை - மூன்று கண்களை யுடைய தேவனை, மா மதுரை மன்னவனை - பெரிய மதுரைக்கு மன்னனாகிய சுந்தர பாண்டியனை, முன் ஓர் தானவனை ஆழிகொடு சாய்த்தவனை - முன்னாளிலே சலந் தரன் என்னும் ஓர் அசுரனைத் திகிரிப்படையினால் வதைத்தவனை, ஏத்தா ஆனது உரை செய்தும் என - துதித்து நிகழ்ந்த செய்தியைக் கூறுவேமென்று, ஆலயம் அடைந்தார் - திருக்கோயிலை அடைந்தார்கள்.

மிக்கவர் - மேலோர். ஒரு பொருள்மேற் பலபெயர் வந்தன. ஆனது - நிகழ்ந்தது. உரை செய்தும் என - உரைப்பேம் என்று. (ய)

நாதமுறை யோபொதுவின் மாறிநட மாடும்
பாதமுறை யோபல வுயிர்க்குமறி விக்கும்
போதமுறை யோபுனித பூரண புராண
வேதமுறை யோவென விளித்துமுறை யிட்டார்.

(இ - ள்.) நாதமுறையோ - நாதனே முறையோ; பொதுவில் மாறி நடம் ஆடும் பாதமுறையோ - வெள்ளியம்பலத்திலே கால்மாறி ஆடியருளும் திருவடியை யுடையவனே முறையோ; பல உயிர்க்கும் அறிவிக்கும் போதமுறையோ - எல்லா உயிர்களுக்கும் அறிவிக்கின்ற போதனே முறையோ; புனித - தூயவனே, பூரண - எங்கும் நிறைந்தவனே, புராண - பழம்பொருளானவனே, வேதமுறையோ - வேதத்தை அருளியவனே முறையோ; என விளித்து முறையிட்டார் - என்று கூவி முறையிட்டார்கள்.

நாதன் - தலைவன்; நாதத்தின் வடிவானவன் என்றுமாம். உயிர்களெல்லாம் இறைவன் அறிவிக்க அறியு மியல்பின வாகலின் 'பலவுயிர்க்கும் அறிவிக்கும் போத' என்றார். நாத, பாத என்றிங்ஙனம் விளித்து, முறையோ என முறையிட்டார் என்க. முறையிடுதல் - பிறரால் நலிதலுறுவார் தம்மைக் காக்கவேண்டுமெனக் கூவி வேண்டுதல். (கக)

நின்றுமுறை யிட்டவரை நித்தனரு ளோக்கால்
நன்றருள் சுரந்திட பநந்தியை விளித்துச்
சென்றமண ரேவவரு தீப்பசுவை நீபோய்
வென்றுவரு வாயென விளம்பினன் விடுத்தான்.

(இ - ள்.) நின்று முறையிட்டவரை - (அங்ஙனம் திருமுன்) நின்று முறை யிட்டவர்களை, நித்தன் - இறைவன், அருள் நோக்கால் நன்று அருள் சுரந்து - திரு

வருள் நோக்கத்தாலே மிகவும் கருணைபுரிந்து, இடபநந்தியை விளித்து - இடப வடிவாயுள்ள திருநந்திதேவரை அழைத்து, நீ போய் - நீ சென்று, அமணர் ஏவ சென்று வரு தீப்பசுவை வென்று வருவாய் என - சமணர்கள் ஏவுதலால் வருகின்ற கொடிய பசுவை வென்று வருவாயாக என்று, விளம்பினன் விடுத்தான் - கூறி விடுத்தான்.

நன்று - பெரிது. சென்று, வரு என்பன ஒரு பொருளே குறித்தன. விளம்பினன், முற்றெச்சம். (கஉ)

[கலிநிலைத்துறை]

தண்டங் கெழுகூற் றமுமஞ்சத் தறுகட் செங்கட்
குண்டந் தழன்று கொதிப்பக்கொடு நாக்கெ றிந்து
துண்டந் துழாவக் கடைவாய்நுரை சோர்ந்து சென்னி
அண்டந் துழாவ வெழுந்தன்றட லேறு மாதோ.

(இ - ள்.) தண்டம் கெழு கூற்றமும் அஞ்ச - தண்டப்படையை ஏந்திய கூற்றுவனும் அஞ்சும்படி, தறுகண் செங்கண் குண்டம் தழன்று கொதிப்ப - கொடிய சிவந்த கண்களாகிய குழிகள் அழற்சிகை விட்டுக் கொதிக்கவும், கொடு நாக்கு எறிந்து துண்டம் துழாவ - வளைந்த நாவானது தாவி மூக்கினைத் துழாவவும், கடைவாய் நுரை சோர்ந்து சென்னி அண்டம் துழாவ - கடைவாய் நுரை ஒழுகப் பெற்றுத் தலையானது அண்டத்தைத் தடவவும், அடல் ஏறு எழுந்தன்று - வலி மிக்க இடபம் எழுந்தது.

குண்டம் - தீ வளர்க்கும் குழி. எறிந்து - தாவி யென்னும் பொருட்டு. துண்டம் - மூக்கு. எழுந்தன்று - எழுந்தது; அன் சாரியை. மாது, ஓ அசைகள்.

நெற்றித் தனியோடை நிமிர்ந்து மறிந்த கோட்டிற்
பற்றிச் சுடர்செய் மணிப்பூண்பிறை பைய நாகஞ்
சுற்றிக் கிடந்தா லெனத் தோன்றவெள் ளாழியீன்ற
கற்றைக் கதிர்போற் பருமம்புறங் கௌவி மின்ன.

(இ - ள்.) நெற்றித் தனி ஓடை நிமிர்ந்து - நெற்றியிலுள்ள ஒப்பற்ற பட்டமானது சிறக்கப்பெற்று, மறிந்த கோட்டில் பற்றிச் சுடர் செம்மணிப் பூண் - வளைந்த கொம்பினைப் பொருந்தி ஒளிவிடும் சிவந்த மாணிக்கத்தாலாகிய பூணானது, பிறை - மூன்றாம்பிறையை, பைய நாகம் சுற்றிக் கிடந்தாலெனத் தோன்ற - படத்தையுடைய கேதுவென்னும் பாம்பானது வளைந்து கிடந்தாற்போலத் தோன்றவும், வெள் ஆழி ஈன்ற கற்றைக் கதிர்போல் பருமம் புறம் கௌவி மின்ன - வெள்ளிய கடல் பெற்ற நெருங்கிய கிரணத்தையுடைய சூரியனைப்போலப் பொன்னாலாகிய கவசம் உடம்பின் புறத்திலே பொருந்தி விளங்கவும்.

செம்மணிப் பூணுக்கேற்பச் செம்பாம்பாகிய கேதுவைக் கொள்க. வளைந்த கொம்பிற்குப் பிறையும், பூணுக்குக் கேதுவும், நெற்றிப்பட்டத்திற்கு அதன் பட

மும் உவமங்களாம். பைய, சினையடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். வெள் ஆழி - வெள்ளிய அலையையுடைய கடல் என்றுவது, பாற்கடல் என்றுவது கொள்க. வெண்ணிற உடம்பிற் கிடந்த பொற் கவசத்திற்கு வெண்கடலில் முளைத்து விளங் கும் ஞாயிறு உவமமாயிற்று. பருமம் - கலனை, கவசம். (கச)

கோட்டுப் பிறைகால் குளிர்வெண்கதிர்க் கற்றை போலச்
சூட்டுக் கவரித் தொடைத்தொங்கலு நெற்றி முன்னுப்
பூட்டுத் தாள முகவட்டும் பொலியப் பின்னல்
மாட்டுச் சதங்கைத் தொடைகல்லென வாய்விட் டார்ப்ப.

(இ - ள்.) கோட்டுப் பிறைகால் குளிர் வெண்கதிர்க்கற்றைபோல - கொம் பாகிய பிறை கக்கிய குளிர்ந்த வெள்ளிய கதிர்த்திரளைப்போல, கவரித்தொடை சூட்டுத் தொங்கலும் - கவரியின் மயிராற் றொடுக்கப்பட்ட சூட்டாகிய தொங்கலும், நெற்றி முன்னுப் பூட்டுத் தாள முகவட்டும் பொலிய - நெற்றிக்கு முன்னுகப் பூட்டு தலையுடைய முத்தாலாகிய முகவட்டும் பொலிந்து விளங்கவும், பின்னல் மாட்டுச் சதங்கைத் தொடை கல்லென வாய்விட்டு ஆர்ப்ப - பின்னலாகிய மாட்டுச் சதங்கை மாலை கல்லென்று வாய்விட்டு ஒலிக்கவும்.

சூட்டு - உச்சியிலணிவது; ஈண்டுக் கொம்பினுச்சி. தொங்கல் - குஞ்சம். வட்டு - வட்டம். தொங்கலும் முகவட்டும் கதிர்க்கற்றைபோலப் பொலிய என்க. கல்லென, ஒலிக்குறிப்பு. (கரு)

பணிநா வசைக்கும் படியென்னக் கழுத்தில் வீர
மணிநா வசைப்ப நகைமுத்தின் வகுத்த தண்டை
பிணிநாண் சிறுகிங் கிணிபிப்பல மாலைத் தொங்கல்
அணிநா ணலம்பச் சிலம்பார்ப்ப வடிக ணான்கும்.

(இ - ள்.) பணி நா அசைக்கும்படி என்ன - பாம்பு நாவினை அசைக்குந் தன்மைபோல, கழுத்தில் வீரமணி நா அசைப்ப - கழுத்திலணிந்த வீரகண்டை நாவினை அசைத்து ஒலிக்கவும், நகை முத்தின் வகுத்த தண்டை - ஒளிபொருந்திய முத்தை உள்ளிடு பருக்கையாகக் கொண்டு செய்த தண்டையும், நாண் பிணி சிறு கிங்கிணி - கயிற்றிற் கோத்த சிறு சதங்கை மாலையும், நாண் மாலை அணி பிப்பலம் தொங்கல் - கயிற்றில் வரிசைப்படக் கோத்த அழகிய அரசிலை வடிவமாகச் செய்த மாலையும், அலம்ப - ஒலிக்கவும், அடிகள் நான்கும் சிலம்பு ஆர்ப்ப - நான்கு கால் களிலும் சிலம்புகள் ஒலிக்கவும்.

பிப்பலம் - அரசு. பிப்பல மாலையாகிய தொங்கல் என்றும், நாணுகிய அணி என்றும் வேறு வேருகக் கொள்ளலுமாம். (கசு)

அடியிட்டு நிலங்கிளைத் தண்டமெண் டிக்கும் போர்ப்பப்
பொடியிட் டுயிர்த்துப் பொருகோட்டினிற் குத்திக் கோத்திட்
டிடியிட் டதிர்கா ரெதிரேற்றெழுந் தாங்கு நோக்கிச்
செடியிட் டிருகண் ணழல்சிந்த நடந்த தன்றே.

(இ - ள்.) அடி யிட்டு நிலம் கிளைத்து - அடியினால் நிலத்தைக் கிளைத்து, அண்டம் எண் திக்கும் போர்ப்பப் பொடி இட்டு - அண்டத்தையும் எட்டுத் திசைகளையும் மூடுமாறு புழுதிசெய்து, உயிர்த்து - பெருமூச்செறிந்து, பொரு கோட்டினில் குத்திக் கோத்திட்டு - பொருதற்குரிய கொம்பினாற் குத்தி (மண்ணைக்) கோத்துக்கொண்டு, இடி இட்டு அதிர் கார் எதிர் ஏற்று எழுந்தாங்கு நோக்கி - இடித்து முழங்கும் முகிலினை எதிர்த்தெழுந்ததுபோல (மேல்) நோக்கி, இரு கண் செடி இட்டு அழல் சிந்த நடந்தது - இரண்டு கண்களும் ஒளி கான்று தீயினைச் சிந்த நடந்தது.

அடி யிட்டு, இட்டு மூன்றனுருபின் பொருட்டு. பொடியிட்டு - பொடியாக்கி. இடியிட்டு - இடித்து. செடி - ஒளி; கற்றையுமாம். அன்று, ஏ அசை. (கஎ)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

பால்கொண்ட நிழல்வெண் டிங்கட் பகிர்கொண்ட மருப்பிற் கொண்மூச்
சூல்கொண்ட வயிற்றைக் கீண்டு துள்ளியோர் வெள்ளிக் குன்றங்
கால்கொண்டு நடந்தா லென்னக் கடிந்துடன் றுவைச் சீற்றம்
மேல்கொண்டு நாற்றம் பற்றி வீங்குயிர்ப் பெறிந்து கிட்டா.

(இ - ள்.) பால் கொண்ட நிழல் வெண் திங்கள் பகிர் கொண்ட மருப்பில் - பால்போலும் வெள்ளிய ஒளியினையுடைய திங்களின் பிளவையொத்த கொம்பினால், கொண்மூ சூல் கொண்ட வயிற்றைக் கீண்டு துள்ளி - முகிலினது சூலைக்கொண்ட வயிற்றைக் கிழித்துத் துள்ளிக்கொண்டு, ஓர் வெள்ளிக்குன்றம் கால் கொண்டு நடந்தால் என்னக் கடிந்து - வெள்ளி மலை ஒன்று கால் பெற்று நடந்தாற்போல விரைந்து சென்று, உடன்று - பகைத்து, சீற்றம் மேல் கொண்டு - வெகுளி மீக்கொண்டு, நாற்றம் பற்றி வீங்கு உயிர்ப்பு எறிந்து ஆவைக் கிட்டா - நாற்றம் பிடித்துப் பெருமூச்செறிந்து பசுவினை நெருங்கி.

பால் கொண்ட வெண்ணிழல் என்க. பால் கொண்ட, பகிர் கொண்ட என்பவற்றில் கொண்ட என்பது உவமவுருபு. கீண்டு, மரூஉ. நாற்றம் பற்றுதல் நிலத்தை மோந்து நாற்றமறிதல். நாற்றம் பிடித்தலும் வீங்குயிர்ப் பெறிதலும் ஏற்றின் சாதித்தன்மை. வெள்ளிக் குன்றம் கால்கொண்டு நடந்தாலென்ன என்பது இல் பொருளுவமை. (கஅ)

குடக்கது குணக்க தென்னக் குணக்கது குடக்க தென்ன
வடக்கது தெற்க தென்னத் தெற்கது வடக்க தென்ன
முடுக்குறு மருப்பிற் கோத்து முதுகுகீ ழாகத் தள்ளும்
எடுக்குறு மலையைக் கால்பேர்த் தெனத்திசைப் புறத்து வீசும்.

(இ - ள்.) குடக்கது குணக்கது என்ன - மேலைத்திசையில் உள்ள பசு அப்பொழுதே கீழைத்திசையில் உள்ளது என்று சொல்லவும், குணக்கது குடக்கது என்ன - கிழக்கேயுள்ளது மேற்கேயுள்ளதென்னவும், வடக்கது தெற்கது என்ன -

வடக்கிலுள்ளது தெற்கேயுள்ளதென்னவும், தெற்கது வடக்கது என்ன - தெற்கிலுள்ளது வடக்கேயுள்ளதென்னவும், மூடுக்குறும்-இந் நான்கு திசைகளிலும் அதனை இடையறாது தாக்கும்; மருப்பில் கோத்து முதுகுகீழ் ஆகத் தள்ளும் - கொம்பிற் கோத்து முதுகு கீழாமாறு தள்ளும்; எடுக்குறும் - மீண்டு எடுக்கும்; மலையைக் கால் பேர்த்து என - மலையைக் காற்றுப் பெயர்த்து வீசியதுபோல, திசைப்புறத்து வீசும் - திசைகளின் புறத்தில் எறியும்.

குடக்கது, குணக்கது, வடக்கது, தெற்கது என்பன வினைக்குறிப்புப்பெயர். ஊழிக்காற்றானது மலையினைப் பெயர்த்தெறிந்தாற்போல வென்க. பேர்த்தென, விகாரம். (கக)

கொழுமணிச் சிகர கோடி சிதைபடக் குவட்டில் வீசும்
பழுமரச் செறிவில் வான்றோய் பணையிற வெறியும் வானின்
விழுமறப் பசுப்போல் வீழ வேலைவாய் வீசு மிங்ஙன்
செழுமதிக் கோட்டு நந்தித் தேவிளை யாடல் செய்து.

(இ - ள்.) கொழுமணிச் சிகரகோடி சிதைபடக் குவட்டில் வீசும் - உருப்பெற்ற மணிகள் நிறைந்த சிகரவரிசைகள் தூளாகும்படி மலையின்கண் எடுத்து எறியும்; பழுமரச் செறிவில் - ஆலமரங்களின் நெருக்கின்கண், வான் தோய் பணை இற எறியும் - வானை யளாவிய அவற்றின் கிளைகள் முறியுமாறு வீசும்; வானின் விழும் அறப் பசுப்போல் வீழ வேலைவாய் வீசும் - வானுலகினின்றும் கடலில் விழும் காமதேனுவைப்போல விழுமாறு கடலின்கண் எடுத்து வீசும்; இங்ஙன் - இங்ஙனம், செழுமதிக் கோட்டு நந்தித்தே விளையாடல் செய்து - செழுவிய (அரை) மதி போன்ற கொம்பினையுடைய திருநந்தியாகிய தேவு போர்விளையாடல் செய்து.

துருவாச முனிவன் சாபத்தால் இந்திரன் செல்வமுற்றும் கடலில் ஒளித்த ஞான்று காமதேனுவும் அதன்கண் விழுந்ததாகலின் 'வானின் விழும் அறப் பசுப்போல்' என்றார். வானின், ஐந்தனுருபு நீக்கப்பொருட்டு. அவ் வறப் பசுப்போல் இம் மறப்பசு வீழ வென்க. தே - தெய்வம். (௨)

பூரிய ரெண்ணி யாங்கே பொருதுயி ரூற்றஞ் செய்யா
தாரிய விடைதன் மாண்ட வழகினைக் காட்டக் காமுற்
றீரிய நறும்பூ வாளி யேறுபட் டாவி யோடும்
வீரியம் விடுத்து வீழ்ந்து வெற்புரு வாயிற் றன்றே.

(இ - ள்.) பூரியர் எண்ணி யாங்கே - கீழ்மக்களாகிய சமணர்கள் எண்ணிய வண்ணமே, பொருது உயிர் ஊற்றம் செய்யாது - பொருதலினால் உயிர்க்குத் துன்பஞ் செய்யாது, ஆரிய விடை தன் மாண்ட அழகினைக் காட்ட - அழகிய இடபமானது தனது மாட்சிமைப்பட்ட அழகைக் காட்ட, காமுற்று - (அப் பசுவானது) அதனை விரும்பி, ஈரிய நறும்பூவாளி ஏறுபட்டு - குளிர்ந்த நறிய மலரம்புகளால் எறுண்டு, ஆவியோடும் வீரியம் விடுத்து - உயிரோடு வீரியத்தையும் விட்டு, வீழ்ந்து வெற்பு உரு ஆயிற்று - கீழே விழுந்து மலைவடிவமாயிற்று.

ஆவை யூறு செய்யார் எனக் கருதினராகலின் அவர் எண்ணியாங்கே என்றூர். ஊற்றம் - ஊறு. ஆரிய விடை - அரிய விடையென்றும், குரவுத்தன்மையுடைய விடையென்றும் உரைத்தலுமாம். வீரியத்துடன் ஆவியை விடுத்தென்க. அன்று, ஏ அசைகள். (௨௧)

வாங்கின புரிசை மாட மாநக ராறு வின்பந்
தூங்கின வரவாய் வேம்பின் றோடவிழ் தாரான் றிண்டோள்
வீங்கின விரவி தோன்ற வீங்கிரு ளுடைந்த தென்ன
நீங்கின நாண மோடு நிரையமண் குழாங்க ளெல்லாம்.

(இ - ள்.) வாங்கின புரிசைமாட மாநகர் - வளைந்த மதிலையுடைய மாடங்கள் நிறைந்த பெரிய மதுரைப்பதி முழுதும், ஆறு இன்பம் தூங்கின - நீங்காத இன்பத்தில் அழுந்தின; அரம் வாய் வேம்பின் தோடு அவிழ் தாரான் திண் தோள் வீங்கின - அரம்போல இரு புறத்தும் வாயுள்ள இலைகளையுடைய வேம்பின் இதழ் விரிந்த மாலையையுடைய அனந்தகுண பாண்டியனின் திண்ணிய தோள்கள் பூரித்தன; இரவி தோன்ற வீங்கு இருள் உடைந்தது என்ன - பரிதி உதித்தகாலை செறிந்த இருள் சிதைந்தாற்போல, நிரை அமண் குழாங்கள் எல்லாம் நாணமோடு நீங்கின - வரிசை வரிசையாயுள்ள சமணக்கூட்டங்க ளனைத்தும் நாணத்துடன் புறங்கொடுத்தோடின.

நகரிலுள்ளா ரனைவரும் என்பார் 'நகர்' என்றூர். அரம் - வாளரம்; இவ்வுவமம் பழஞ் செய்யுட்களிற் பயின்றுளது. நாணம் - வெள்குதல்; நாணும் நீங்கிற்று அவர்களும் நீங்கினர் எனலுமாம். (௨௨)

உலகறி கரியாத் தன்பே ருருவினை யிடபக் குன்றாக்
குலவுற நிறுவிச் சூக்க வடிவினாற் குறுகிக் கூடற்
றலைவனை வணங்க வீசன் றண்ணருள் சுரந்து பண்டை
இலகுரு வாகி யிங்ங னிருக்கென விருத்தி னானே.

(இ - ள்.) உலகு அறிகரியா - உலகத்தார் அறியுஞ் சான்றாக, தன் பேர் உருவினை இடபக் குன்றாக் குலவுற நிறுவி - நந்தி தனது பெரிய வடிவினை இடப மலையாக விளங்க நிறுத்தி, சூக்க வடிவினால் கூடல் தலைவனைக் குறுகி வணங்க - நுண்ணிய வடிவினோடு மதுரைநாயகனை அடைந்து வணங்க, ஈசன் தண் அருள் சுரந்து - அவ் விறைவன் தண்ணிய கருணை சுரந்து, பண்டை இலகு உருவு ஆகி இங்ஙன் இருக்க என இருத்தினான் - முன்னைய விளங்கிய வடிவமாகி இங்கு இருப்பாயாகவென்று இருத்தி யருளினான்.

இந் நிகழ்ச்சியை உலகினர் அறியுஞ் சான்றாக வென்க. பேருரு - தூலவடிவம். சூக்கம் - சூக்குமம்; நுண்மை. இருக்கென, அகரந் தொகுத்தல். (௨௩)

அந்நிலை நகரு ளாரு மரசனு மகிழ்ச்சி தூங்கிச்
சன்னிதி யிருந்த நந்தி தாளடைந் திறைஞ்சிப் போக
மின்னவிர் சடையா னந்தி வெற்றிசால் வீறு நோக்கி
இன்னமு தனையா ளோடுங் களிசிறந் திருக்கு நாளில்.

(இ - ள்.) அந்நிலை நகருளாரும் அரசனும் மகிழ்ச்சி தூங்கி - அப்பொழுது நகரிலுள்ளாரும் மன்னனும் களிப்பு மிக்கு, சன்னிதி இருந்த நந்தி தாள் அடைந்து இறைஞ்சிப் போக - திரு முன்பே இருந்த திருநந்தி தேவரின் திருவடியை அடைந்து வணங்கிச் செல்ல, மின் அவிர் சடையான் - மின்போல் விளங்குஞ் சடையையுடைய சோமசுந்தரக்கடவுள், நந்தி வென்றி சால் வீறு நோக்கி-அந் நந்தி தேவரின் வெற்றி மிக்க பெருமிதத்தினைக் கண்டு, இன் அமுது அனையாளோடும் களி சிறந்து இருக்கும் நாளில் - இனிய அமுதத்தை யொத்த உமைப்பிராட்டியோடும் களிப்பு மிக்கு இருக்கும்பொழுது.

வீறு - பிறிதொன்றற் கில்லாத சிறப்பு. (உச)

அவ்விடை வரைமேன் முந்நீ ரார்கலி யிலங்கைக் கேகுந்
தெவ்வடு சிலையி ராமன் வானர சேனை சூழ
மைவரை யனைய தம்பி மாருதி சுக்கி ரீவன்
இவ்வடல் வீர ரோடு மெய்தியங் கிறுத்தான் மன்னோ.

இ - ள்.) அவ்விடை வரைமேல் - அந்த இடப மலையின்மேல், முந்நீர் ஆர்கலி இலங்கைக்கு ஏகும் - மூன்று நீர்களையுடைய கடல் சூழ்ந்த இலங்கைக்குச் செல்லா நின்ற, தெவ் அடுசிலை இராமன் - பகைவரைக் கொல்லும் கோதண்டத்தை யேந்திய இராமபிரான், வானர சேனை சூழ - குரக்குப் படைகள் சூழ, மைவரை அனைய தம்பி மாருதி சுக்கிரீவன் - நீலமலையை ஒத்த இலக்குவனும் அனுமானும் சுக்கிரீவனுமாகிய, இவ்வடல் வீரரோடும் எய்தி - இந்த வெற்றியையுடைய வீரர்களோடும் அடைந்து, அங்கு இறுத்தான் - அங்கே தங்கினன்.

மைவரை - மேகந் தவழும் மலையுமாம். மாருதி - காற்றின் மைந்தன். மாருதம் - காற்று. அவ் விடைவரைமேல் எய்தி அங்கு இறுத்தான் என்க. மன், ஓ அசைகள். (உரு)

அன்னது தெரிந்து விந்த மடக்கிய முனியங் கெய்தி
மன்னவற் காக்கங் கூறி மழவிடைக் கொடியோன் கூடற்
பன்னரும் புகழ்மை யோது பனுவலை யருளிச் செய்ய
முன்னவன் பெருமை கேட்டு முகிழ்த்தகை முடியோ னாகி.

இ - ள்.) விந்தம் அடக்கிய முனி - விந்த மலையை அடக்கிய அகத்திய முனிவன், அன்னது தெரிந்து அங்கு எய்தி - அதனை உணர்ந்து அங்குச் சென்று, மன்னவற்கு ஆக்கம் கூறி - மன்னனாகிய இராமனுக்கு ஆக்கமொழி கூறி, மழவிடைக்

கொடியோன் கூடல் - இளமை பொருந்திய இடபமாகிய கொடியையுடைய சோம சுந்தரக் கடவுளது மதுரைப் பதியின், பன் அரும் புகழ்மை ஓது பனுவலை-சொல்லு தற்கரிய புகழைக் கூறும் நூலை, அருளிச் செய்ய-கூறியருள, முன்னவன் பெருமை கேட்டு - அம் முதல்வனது பெருமையைக் கேட்டு, முகிழ்த்தகை முடியோன் ஆகி - கூப்பிய கையையுடைய முடியை யுடையவனாய்.

விந்தம் அடக்கிய - மேருவோடு இகலியோங்கிய விந்தத்தின் வீற்றினை யடக்கிய. புகழ்மை, மை பகுதிப் பொருள் விகுதி. முடியின்மேற் குவித்த கைகளை யுடையனாகி என்க. முனி அருளிச் செய்ய இராமன் கேட்டு என இயையும். (உசு)

முனியொடு குறுகிச் செம்பொன் முளரியுண் மூழ்கி யாதித்
தனிமுத லடியை வேணி முடியுறத் தாழ்ந்து வேத
மனுமுறை சிவாக மத்தின் வழிவழா தருச்சித் தேத்திக்
கனிவுறு மன்பி லாழ்ந்து முடிமிசைக் கரங்கள் கூப்பி.

(இ - ள்.) முனியொடு குறுகி - அம் முனிவனோடு சென்று, செம்பொன் முளரியுள் மூழ்கி-சிவந்த பொற்றாமரையில் நீராடி, ஆதித் தனிமுதல் அடியை வேணி முடி உறத் தாழ்ந்து - யாவர்க்கும் ஆதியாகிய ஒப்பற்ற முதற் கடவுளின் திருவடியைச் சடையையுடைய தனது முடி பொருந்துமாறு வணங்கி, வேத மனுமுறை சிவாகமத்தின் வழி வழாது அருச்சித்து எத்தி - வேத மந்திரத்தின் முறையும் சிவாகம நெறியும் வழுவாது அருச்சித்துத் துதித்து, கனிவுறும் அன்பில் ஆழ்ந்து- கனிந்த பேரன்பில் அழுந்தி, முடிமிசைக் கரங்கள் கூப்பி - முடியின்மேற் கைகளைக் குவித்து நின்று.

தனிமுதல - முழுமுதல். இராமன் தவக்கோலந் தாங்கி வனம்போந்தானாகலின் 'வேணிமுடியுற' என்றார். மனு - மந்திரம். (உஎ)

புங்கவ சீவன் முத்தி புராதிப புனித போக
மங்கல மெவற்றி னுக்குங் காரண வடிவ மான
சங்கர நினது தெய்வத் தானங்க ளனந்த மிந்த
அங்கண்மா ஞால வட்டத் துள்ளன வவைக டம்மில்.

(இ - ள்.) புங்கவ - தேவர் யாவர்க்கும் உயர்ந்தோனே, சீவன் முத்தி புர அதிப - சீவன் முத்திபுரத்திற்குத் தலைவனே, புனித போக மங்கலம் எவற்றினுக்கும் காரண வடிவம் ஆன சங்கர - தூய போக நலன்கள் எவற்றுக்குங் காரணவடிவாகிய சங்கரனே, இந்த அம் கண் மா ஞாலவட்டத்து - இந்த அழகிய இடத்தையுடைய பெருமை பொருந்திய நிலவுலகின்கண், நினது தெய்வத் தானங்கள் அனந்தம் உள்ளன - நின்னுடைய தெய்வத்தன்மை பொருந்திய பதிகள் பல உள்ளன; அவைகள் தம்மில் - அவற்றுள்.

புங்கவன் - உயர்ந்தோன், வானோன். சீவன் முத்திபுரம் - மதுரை; தலவிசேடத்திற் காண்க. புராதிப, நெடிற் சந்தி. புனித என விளியாக்கித் தூயனே என்

றுரைத்தலும், தூய போகங்கட்கும் மங்கலங்கட்கும் காரண வுருவான என்றுரைத்த லும் பொருந்தும். சங்கரன் - சுகத்தை யருளுபவன். அனந்தம்-வரம்பில்லன. ஞால வட்டம் - பூ மண்டலம். (உஅ)

[கலிநிலைத்துறை]

அற்பு தப்பெரும் பதியிந்த மதுரையீ தாற்றப்
பொற்பு டைத்தென்ப தெவன்பல புவனமு நின்பாற்
கற்பு வைத்துய நீசெய்த கருமத்தின் விருத்தம்
வெற்பு ருக்களாய்ப் புடைநின்று விளங்கலான் மன்னோ.

(இ - ள்.) அற்புதப் பெரும்பதி இந்த மதுரை - அற்புதம் பொருந்திய சிறந்த பதியாகும் இந்த மதுரையானது; ஈது ஆற்றப் பொற்பு உடைத்து என்பது எவன் - இது மிக்க மேன்மை யுடைத்தென்று கூறுவது என்னை, பல புவனமும் நின்பால் கற்பு வைத்து உய - எல்லா வுலகமும் நின்னிடத்தே தியானம் வைத்துப் பிழைக்குமாறு, நீ செய்த கருமத்தின் விருத்தம் - நீ செய்தருளிய திருவிளையாடல் களின் வரலாறு, வெற்பு உருக்களாய்ப் புடை நின்று விளங்கலால் - மலைவடிவங்க ளாய்ப் பக்கத்தே நின்று விளங்குதலால்.

கூறுதல் மிகை யென்பார் 'எவன்' என்றார். கற்பு - கற்றல்; ஈண்டுத் தியா னம். கருமம் - காரியம். விருத்தம் - செய்தி. கொலைத் தொழில் என்பது கொண்டு கருமத்தின் ஒவ்வாமை என்றுரைத்தலுமாம். இங்கு நீ புரிந்த கருமத்தின் விருத்தம் வெற்புருக்களாய் இப் பதியின் மேன்மைக்கு அழியாத சான்றுகளாக விளங்குதலின் இது பொற்புடைத் தென்பது எவன் என விரித்துரைத்துக் கொள்க. மன், ஓ அசை கள். (உகூ)

கண்ட வெல்லையிற் றுன்பங்கள் களைதற்கு மளவைக்
கண்ட ரும்பெருஞ் செல்வங்க ளளித்தற்குங் கருணை
கொண்டு நீயுறை சிறப்பினாற் குளிர்மதிக் கண்ணி
அண்ட வாணவிவ் விலிங்கத்துக் கொப்புவே றாமோ.

(இ - ள்.) கண்ட எல்லையில் துன்பங்கள் களைதற்கும் - பார்த்த வளவிலே துன்பங்களைப் போக்குதற்கும், அளவைக்கு அண்டு அரும் பெருஞ் செல்வங்கள் அளித்தற்கும் - அளவைக்குப் பொருந்துதல் இல்லாத பெரிய செல்வங்களை அருளு தற்கும், கருணை கொண்டு நீ உறை சிறப்பினால் - திருவருள் கொண்டு நீ வீற்றிருக் குஞ் சிறப்பினாலே, குளிர்மதிக் கண்ணி அண்ட வாண - குளிர்ந்த பிறையை மாலை யாகவுடைய தேவனே, இவ்விலிங்கத்துக்கு வேறு ஒப்பு ஆமோ - இந்தச் சொக்க லிங்கத்துக்கு வேறொன்று ஒப்பாகுமோ.

அண்டு - கிட்டுதல்; முதனிலைத் தொழிற்பெயர். அளவைக்கு அண்டு அரும் - அளக்க வொண்ணாத என்றபடி. கண்ணி - முடியிற் சூடுமாலை. அண்ட வாணன் - தேவன். வாழ்நன் என்பது வாணன் என மருவிற்று. ஓகாரம் எதிர் மறை. (ஙய)

தோய்ந்தி டும்பொழு தீட்டிய தொல்வினைப் படலம்
மாய்ந்தி டும்படி மாய்த்துநின் மங்கல போகம்
ஈந்தி டும்படிக் கிருந்தமா தீர்த்தத்தி னியல்பை
ஆய்ந்தி டும்பொழு ததற்கொரு தீர்த்தமொப் பாமோ.

(இ - ள்.) தோய்ந்திடும் பொழுது - (தன்னில்) மூழ்கும் பொழுதில், ஈட்டிய தொல்வினைப்படலம் மாய்ந்திடும்படி மாய்த்து—தேடிவைத்த பழவினைத் தொகுதி நசிக்குமாறு சிதைத்து, நின் மங்கலபோகம் ஈந்திடும்படிக்கு இருந்த-நினது நன்மையாகிய போகத்தை அருளும்படி அமைந்த, மாதீர்த்தத்தின் இயல்பை ஆய்ந்திடும் பொழுது—பெருமை பொருந்திய பொற்றாமரைப் பொய்கையின் தன்மையை ஆராயுங்கால், அதற்கு ஒரு தீர்த்தம் ஒப்பு ஆமோ - அதற்கு மற்றொரு தீர்த்தம் ஒப்பாகுமோ.

ஈட்டிய - பல பிறவிகளிலும் தேடிய. தொல்வினைப்படலம் - சஞ்சித கன்மத் தொகுதி. நின் மங்கலபோகம் என்றது சிவபோகத்தை. படிக்கு, கு பகுதிப் பொருள் விகுதி. (௩௧)

எத்த லத்தினு மொவ்வொன்று விழுமிதா மிந்த
மெய்த்த லத்திலிம் மூவகை விழுப்பமும் விளங்கும்
அத்த வாதலா லித்தல மடைந்தவ ரெவர்க்குஞ்
சித்த சுத்தியும் பல்வகைச் சித்தியும் பயக்கும்.

(இ - ள்.) எத்தலத்தினும் ஒவ்வொன்று விழுமிதாம் - எந்தத் தலங்களிலும் மூர்த்தியும் தீர்த்தமும் தலமுமாகிய மூன்றனுள் ஒவ்வொன்று சிறப்புடைத்தாகும்; இந்த மெய்த்தலத்தில் இம் மூவகை விழுப்பமும் விளங்கும் - இந்த உண்மைத்தலத்தின்கண் இம் மூவகைச் சிறப்பும் விளங்கும்; ஆதலால் - ஆதலினால், அத்த - இறைவனே, இத்தலம் - இப்பதியானது, அடைந்தவர் எவர்க்கும் - தன்னைச் சார்ந்தவரனைவருக்கும், சித்தசுத்தியும் பல்வகைச் சித்தியும் பயக்கும் - மனத்தூய்மையையும் அணிமா முதலிய பலவகைச் சித்திகளையும் அருளா நிற்கும்.

மேல் மூன்று செய்யுட்களால் தலம், மூர்த்தி, தீர்த்தம் என்பவற்றின் சிறப்பு முறையே கூறப் பெற்றமையின் அவற்றைச் சுட்டி 'இம் மூவகை விழுப்பமும்' எனப்பட்டது. (௩௨)

அடிய னேனெண் ணுங் கருமமுஞ் சரதமே யாக
முடியு மாறரி தச்செயன் முடியுமெப் படியப்
படியு ரிந்தருள் கடிதெனப் பணிந்தனன் பரனும்
நெடிய வான்படு மமுதென வெதிர்மொழி நிகழ்த்தும்.

(இ - ள்.) அடியனேன் எண்ணும் கருமமும் சரதமே ஆக முடியுமாறு அரிது - அடியேன் எண்ணிய செயலும் உண்மையாக முடியுந்தன்மை அரிதோ; அச் செயல் எப்படி முடியும் அப்படி - அச் செயலானது எவ்வாறு முடியுமோ அந்

நெறியை, கடிது புரிந்தருள் எனப் பணிந்தனன் - விரைந்து செய்தருளவேண்டும் என்று இரந்து வணங்கினன்; பரனும் - சோமசுந்தரக்கடவுளும், நெடிய வான்படும் அமுது என எதிர்மொழி நிகழ்த்தும் - பரந்த வானின்கண் உண்டாகும் அமிழ் தென்னுமாறு எதிர்மாற்றம் கூறியருளுவான்.

முடியுமா, ஈறு தொக்கது. அரிதோ என ஓகாரம் விரிக்க. புரிதல் - செய் தல்; ஈண்டு உணர்த்துதல்; விரும்பியருள் எனலுமாம். வான்மொழியாகக் கூறு தலின் 'வான்படும் அமுதென' என்றார். இஃது இல்பொருளுவமை. (கூ௩)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

இரவிதன் மரபின் வந்த விராமகே ளெமக்குத் தென்கீழ்
விரவிய திசையிற் போகி விரிகடற் சேது கட்டிக்
கரவிய வுள்ளக் கள்வன் கதிர்முடி பத்துஞ் சிந்தி
அரவமே கலையி னாளை யருஞ்சிறை யழுவ நீக்கி.

(இ - ள்.) இரவி தன் மரபில் வந்த இராமகேள் - சூரியன் மரபில் வந்த இராமனே கேட்பாயாக; எமக்குத் தென்கீழ் விரவிய திசையில் போகி - எமக்குத் தென்கிழக்காகப் பொருந்திய திசையிற் சென்று, விரிகடல் சேதுகட்டி - விரிந்த கடலிலே சேதுபந்தனஞ் செய்து, கரவிய உள்ளக்கள்வன் கதிர்முடி பத்தும் சிந்தி - வஞ்சனையையுடைய உள்ளத்தையுடைய இராவணனது விளக்கமுள்ள பத்துத் தலை களையுந் துணித்து, அரவம் மேகலையினாளை - ஒலிக்கின்ற மேகலையணிந்த சானகியை, அருஞ்சிறை அழுவம் நீக்கி - பொறுத்தற்கரிய சிறைக்கூடத்தினின்றும் நீக்கி.

தெற்கும் கிழக்கும் கலந்த திசை என்றுமாம். சேது - அணை. கரவிய - கரந்த. சிந்தி, தன் வினைக்கும் பிற வினைக்கும் பொதுவாய சொல். அழுவம் - பரப்பு, கூடம். (௩௪)

மீண்டுநின் னயோத்தி யெய்தி விரிகட லுலகம் பன்னாள்
ஆண்டினி திருந்து மேனாள் வைகுண்ட மடைவா யாக
ஈண்டுநீ கவலை கொள்ளே லெனு* மசரீரி கேட்டு
நீண்டவன் மகிழ்ந்து தாழ்ந்து நிருத்தனை விடைகொண் டேகி.

(இ - ள்.) மீண்டும் நின் அயோத்தி எய்தி - மீளவும் நினது அயோத்தியை அடைந்து, விரி கடல் உலகம் பல் நாள் ஆண்டு இனிது இருந்து - பரந்த கடல் சூழ்ந்த உலகத்தை நெடுங்காலம் ஆட்சி புரிந்து இனிதாக இருந்து, மேல் நாள் வைகுண்டம் அடைவாயாக - பின்னாளில் வைகுண்டத்தைச் சேர்வாயாக; ஈண்டு நீ கவலை கொள்ளேல் - இப்பொழுது நீ கவலை கொள்ளாதே, எனும் அசரீரி கேட்டு - என்னும் அசரீரியுரையைக் கேட்டு, நீண்டவன் மகிழ்ந்து தாழ்ந்து - நெடியவனாகிய

(பா - ம்.) *கொள்ளேலென.

இராமன் மகிழ்ந்து வணங்கி, நிருத்தனை விடைகொண்டு ஏகி - சோமசுந்தரக்கடவுளிடத்து விடைபெற்றுச் சென்று.

அயோத்தி - யுத்தத்தில் வெல்லப்படாதது என்னும் பொருளது. பதினோராயிரம் ஆண்டு இராமன் அரசு புரிந்தனன் என்பர். மேனாள் - ஆண்டிருந்த பின்பு. ஈண்டு, காலங்குறித்தது. அசரீரி - சரீரம் இல்லது; வானில் எழும் உரை. (௬௫)

மறைப்பொரு ளுரைத்தோன் சொன்ன வண்ணமே யிலங்கை யெய்தி
அறத்தினைத் தின்ற பாவி யாவிதின் றனையான் செல்வத்
திறத்தினை யிளவற் கீந்து திருவிரா மேசங் கண்டு
கறைப்படு மிடற்றி னானை யருச்சித்துக் கருணை வாங்கி.

(இ - ள்.) மறைப்பொருள் உரைத்தோன் சொன்ன வண்ணமே - வேதத்துக்குப் பொருளருளிச் செய்த சோமசுந்தரக்கடவுள் கூறியருளியபடியே, இலங்கை எய்தி - இலங்கையை அடைந்து, அறத்தினைத் தின்றபாவி ஆவிதின்று - அறத்தை அழித்த பாவியாகிய இராவணனது ஆவியைப் பருகி, அனையான் செல்வத்திறத்தினை இளவற்கு ஈந்து - அவனுடைய செல்வக்கூறுகளை அவன் தம்பியாகிய விபீடணனுக்குக் கொடுத்து, திருஇராமேசம் கண்டு - திருவிராமேச்சுரத்தை ஆக்கி, கறைப்படும் மிடற்றினானை அருச்சித்து - நஞ்சக்கறை பொருந்திய திருமிடற்றையுடைய சிவபெருமானை வழிபட்டு, கருணை வாங்கி - அவனருளைப் பெற்று.

அறத்தை அடியொடுங் கெடுத்தவன் என்பார் 'அறத்தினைத் தின்றபாவி' என்றார். 'அறத்தினைத் தின்றபாவி யாவிதின்று' என்பது மிக்க நயமுடைத்து. தின்னாதவற்றைத் தின்பனவாகக் கூறுதல்

"வாரா மரபின வரக்கூ றுதலும்"

என்னும் தொல்காப்பியச்சூத்திரத்து 'அன்னவை யெல்லாம்' என்பதனால் முடியும். காணல் - உண்டாக்கல். (௬௬)

பற்றிய பழியி னீந்தி யிந்திரன் பழியைத் தீர்த்த
வெற்றிகொள் விடையி னானை மீளவும் வந்து போற்றி
அற்றிர ளனைய கோதைக் கற்பினுக் கரசி யோடுஞ்
சுற்றிய சடையி ராமன் றொன்னக ரடைந்தா னிப்பால்.

(இ - ள்.) பற்றிய பழியின் நீந்தி - தன்னைப் பற்றித் தொடர்ந்த கொலைப் பாவத்தினின்றும் நீங்கி, இந்திரன் பழியைத்தீர்த்த வெற்றிகொள் விடையினானை - தேவேந்திரனது பழியினைப் போக்கிய வெற்றி பொருந்திய இடபவூர்தியையுடைய சோமசுந்தரக்கடவுளை, மீளவும்வந்து போற்றி - மீண்டும் வந்து துதித்து, அல்திரள் அனைய கோதைக் கற்பினுக்கு அரசியோடும் - இருளின் திரட்சியை ஒத்த கூந்தலையுடைய கற்புக்கிறைவியாகிய சானகியோடும், சுற்றிய சடை இராமன் - சுற்றிக்கட்டிய சடையினையுடைய இராமன், தொல்நகர் அடைந்தான் - தொன்மையுடைய தனது அயோத்திநகரத்தை அடைந்தான்; இப்பால் - பின்பு.

முனி மரபில் வந்து வேதம் வல்லனுய்ச் சிவவழிபாட்டினை மேற்கொண்ட இராவணனைக் கொன்றமையின் இராமனைக் கொலைப்பழி பற்றிய தென்க. இராமேச்சுரம் இராவணனைக் கொன்ற பழிதீர இராமன் பூசித்த தென்பதனைத் திருஞான சம்பந்தரும், திருநாவுக்கரசரும் பல திருப்பாட்டுக்களிற் கூறியுள்ளார்கள்; அவற்றுள் முறையே ஒவ்வொன்று பின்வருவன:

"தேவியை வவ்விய தென்னிலங் கைத்தச மாமுகன்
பூவிய லும்முடி பொன்று வித்தபழி போயற
ஏவிய லுஞ்சிலை யண்ணல் செய்தவிரா மேச்சுரம்
மேவிய சிந்தையி னர்கடம் மேல்வினை வீடுமே"

"கோடிமா தவங்கள்செய்து குன்றினர் தம்மையெல்லாம்
வீடவே சக்கரத்தா லெறிந்துபின் னன்புகொண்டு
தேடிமால் செய்தகோயி திருவிரா மேச்சுரத்தை
நாடிவாழ் நெஞ்சமேநீ நன்னெறி யாகு மன்றே"

சீதையின் கற்புமாண்பினைக் கம்பராமாயணம், திருவடிதொழுதபடலத்தில், அனுமான் இராமனுக்குக் கூறுங் கூற்றுக்களாகும். (௩எ)

[கலிநிலைத்துறை]

செங்கோ லனந்த குணமீனவன் றேயங் காப்பக்
கொங்கோ டவிழ்தார்க் குலபூடணன் றன்னை யீன்று
பொங்கோத ஞாலப் பொறைமற்றவன் பாலி றக்கி
எங்கோ னருளாற் சிவமாநக ரேறி னனே.

(இ - ள்.) செங்கோல் அனந்தகுண மீனவன் - செங்கோலையுடைய அனந்த குண பாண்டியன், தேயம் காப்ப - நிலவுலகைப் பாதுகாப்பதற்கு, கொங்கோடு அவிழ்தார்க் குலபூடணன் தன்னை ஈன்று - மகரந்தத்தோடு மலர்ந்த மலர் மாலையை யுடைய குலபூடணனைப் பெற்று, பொங்கு ஓதம் ஞாலப்பொறை - பொங்குகின்ற கடல் சூழ்ந்த நிலச்சுமையை, அவன்பால் இறக்கி-அக்குலபூடணனிடத்தில் இறக்கி, எங்கோன் அருளால் சிவமாநகர் ஏறினன்-எம்பெருமானுகியசோமசுந்தரக்கடவுளின் திருவருளால் பெருமை பொருந்திய சிவபுரத்தை அடைந்தான்.

ஓதம் - கடல்;

"ஓதமலி நஞ்சுண்ட வுடையானே"

எனத் திருவாசகம் கூறுவது காண்க. மற்று, அசை. பொறையை இறக்கிச் சிவமாநகர் ஏறினன் என நயந்தோன்றக் கூறினர். (௩அ)

ஆகச்செய்யுள் - ௩௯௩.

முப்பதாவது

# மெய்க்காட்டிட்டபடலம்

[கொச்சகக்கலிப்பா]

பாவமென வடிவெடுத்த படிற்றமணர் பழித்தழல்செய்
தேவவரு மறப்பசுவை யேறுயர்த்தோன் விடைநந்திக்
காவலனை விடுத்தழித்த கதையுரைத்து மட்டாலைச்
சேவகன்மெய்க் காட்டிட்டு விளையாடுந் திறமுரைப்பாம்.

(இ - ள்.) பாவம் என வடிவு எடுத்த படிற்று அமணர் - பாவமே என்னும் படி வடிவந்தாங்கிய வஞ்சனையையுடைய சமணர்கள், பழித்தழல் செய்து ஏவவரும் - பழி வேள்விசெய்து (தோற்றுவித்து) ஏவ வந்த, மறப்பசுவை - கொலைத்தொழிலையுடைய பசுவினை, ஏறு உயர்த்தோன் - இடபக்கொடியுயர்த்திய சோமசுந்தரக் கடவுள், விடை நந்திக் காவலனை விடுத்து அழித்த கதை உரைத்தும் - இடப வுருவினையுடைய திரு நந்தியாகிய காவலனை ஏவி வதைத்தருளிய திருவிளையாடலைக் கூறினோம்; அட்டாலைச் சேவகன் - (இனி) அட்டாலைச் சேவகனாகிய அவ்விறைவன், மெய்க்காட்டிட்டு விளையாடும் திறம் உரைப்பாம் - மெய்க்காட்டிட்டு விளையாடின திருவிளையாடலைக் கூறுவோம்.

பாவம் வடிவெடுத்தாலொத்த என மாறியுரைத்தலுமாம். தோற்றுவித்து என்னுஞ் சொல்விரிக்க. காவலன் - காத்தல் வல்லோன்; தலைவன். உரைத்தும், இறந்தகாலமுற்று. இறைவன் அட்டாலை மண்டபத்திற் சேவகனாய் வந்தமையை யானையெய்த படலத்திற் காண்க. அட்டாலை - மதிலின்மேலே பரண்போலுள்ள மண்டபம். மெய்க்காட்டிட்டு - திருமேனியைக் காட்டுதலைச் செய்து. (௧)

வெவ்வியமும் மதயானை விறற்குலபூ டணன்சமணர்
அவ்வியவஞ் சனைகடந்த வனந்தகுணச் செழியன்பாற்
செவ்வியசெங் கோல்வாங்கித் திகிரிதிசை செலவுருட்டி
வவ்வியவெங் கலிதுரந்து மண்காத்து வருகின்றான்.

(இ - ள்.) வெவ்விய மும்மத யானை விறல் குல பூடணன்-கொடிய மும்மதங்களையுடைய யானையையுடைய வெற்றி பொருந்திய குலபூடண வழுதி, சமணர் அவ்விய வஞ்சனை கடந்த அனந்தகுணச் செழியன்பால் - சமணர்களது தீய வஞ்சனையைக் கடந்த அனந்தகுண பாண்டியனிடத்து, செவ்விய செங்கோல் வாங்கி - கோடாத செங்கோலைப் பெற்று, திகிரி திசை செல உருட்டி-ஆணையாகிய நேமியைத் திசை முழுதுஞ் செல்லுமாறு உருட்டி, வவ்விய வெங்கலி துரந்து - உலகினைப்

பற்று நின்ற கொடிய கலியினை ஓட்டி, மண்காத்து வருகின்றான் - புவியினைப் பாது காத்து வருகின்றான்.

அவ்வியம் - தீமை; அழுக்காறுமாம். செவ்விய செங்கோல் - கோடாத செங் கோல்; செங்கோல் என்பதனைப் பெயர் மாத்திரையாகக் கொள்ளலுமாம். வவ்விய என்பதனை நிகழ் காலமாக வுரைக்க; வெம்மை பொருந்திய கலி யென்றுமாம். (௨)

சவுந்தரசா மந்தனெனத் தானைகா வலனொருவன்
சிவந்தசடை முடியண்ண லடியவரே சிவமாகக்
கவர்ந்தொழுகி யருச்சிக்குங் கடப்பாட்டி னெறிநின்றோன்
உவந்தரசற் கிருமைக்குந் துணையாகி யொழுகுநாள்.

(இ - ள்.) சவுந்தர சாமந்தன் எனதானை காவலன் ஒருவன் - சுந்தரசாமந் தன் என்று சேனாபதி ஒருவன் உள்ளான்; சிவந்த சடைமுடி அண்ணல் அடியவரே - சிவந்த சடாமுடியையுடைய சிவபெருமான் அடியாரையே, சிவமாகக் கவர்ந்து அருச்சித்து ஒழுகும் - அச் சிவபெருமானாக மனத்திற் கொண்டு வழிபட்டொழு கும், கடப்பாட்டின் நெறி நின்றோன் - கடமை நெறியில் நின்றவனாகிய அவன், உவ ந்து அரசற்கு இருமைக்கும் துணை ஆகி ஒழுகுநாள் - விரும்பி மன்னனுக்கு இம்மைக் கும் மறுமைக்குந் துணையாக நின்று ஒழுகு நாளில்.

சாமந்தன் - படைத் தலைவன். சவுந்தர சாமந்தன், சிறப்புப் பெயர். ஒருவன் உளன் எனவும், நின்றோனாகிய அவன் எனவும் விரிக்க. கவர்ந்து - உளங் கொண்டு, அருச்சித்து ஒழுகும் என மாறுக. உவந்து துணையாகி என இயையும். (௩)

வல்வேடர்க் கதிபதியாய் வருசேதி ராயனெனும்
வில்வேட னொருவனவன் விறல்வலியான் மேலிட்டுப்
பல்வேறு பரிமான்றேர்ப் பஞ்சவன்மேற் படையெடுத்துச்
செல்வேனென் றுறவலித்தான் றென்னர்பிரா னஃதறிந்தான்.

(இ - ள்.) வல் வேடர்க்கு அதி பதியாய் வரு - வலிய வேடர்களுக்குத் தலை வனாயிருந்து வருகின்ற, சேதிராயன் எனும் வில் வேடன் ஒருவன் - சேதிராயன் என்னும் வில்லையுடைய வேடன் ஒருவன் உளன்; அவன் விறல் வலியால் மேலிட்டு - அவன் வெற்றியின் வலியினால் மேம்பட்டு, பல் வேறு பரிமான் தேர்ப் பஞ்சவன் மேல்-பல வேறு வகைப்பட்ட குதிரைகளையும் தேர்களையுமுடைய பாண்டியன்மேல், படை எடுத்துச் செல்வேன் என்று உற வலித்தான் - படை யெடுத்துப் போருக்குச் செல்லுவேன் என்று உறுதியாகக் கருதினான்; தென்னர்பிரான் அஃது அறிந்தான்- பாண்டியர் தலைவனாகிய குலபூடணன் அதனை அறிந்தான்.

சேதிராயன் - சேதி நாட்டுக்கு அரையன். சேதிநாடு - திருமுனைப்பாடி நாடு;

"சேதிநன் னாட்டுநீடு திருக்கோவ லூரின் மன்னி"

என்பது பெரியபுராணம். தமிழ் நாட்டு மூவேந்தரல்லாத குறுநில மன்னர்களை வேடர், காடவர் முதலிய பெயர்களால் ஒரு காலத்தில் இழித்துரைத்து வந்தனர் எனத் தெரிகிறது. பரிமான், இருபெயரொட்டு; விரைந்த செலவினையுடைய குதிரையுமாம். படை யெடுத்தல் - சேனையுடன் மேற்சேறல். உற - மிக. அறிந்தான் என்பதனை எச்சமாக்கலுமாம். (௪)

தன்னதுதா ணிழனின்ற சாமந்தன் றனைப்பார்த்தெம்
பொன்னறைதாழ் திறந்துநிதி முகந்தளித்துப் புதிதாக
இன்னமுநீ சிலசேனை யெடுத்தெழுதிக் கொள்கென்றான்
அன்னதுகேட் டீசனடிக் கன்புளா னென்செய்வான்.

(இ - ள்.) தன்னது தாள் நிழல் நின்ற சாமந்தன் தனைப் பார்த்து - தனது அடி நிழலில் நின்ற சாமந்தனை நோக்கி, எம் பொன் அறை தாழ் திறந்து நிதிமுகந்து அளித்து - எமது நிதி அறையின் தாழைத் திறந்து பொருளை முகந்து கொடுத்து, புதிது ஆக இன்னமும் நீ சில சேனை எடுத்து எழுதிக்கொள்க என்றான் - புதிதாக இன்னுஞ் சில சேனைகளைச் சேர்த்துப் பதிவுசெய்து கொள்வாயாக என்றான்; அன்னது கேட்டு ஈசன் அடிக்கு அன்பு உளான் என் செய்வான் - அதனைக் கேட்டு இறைவன் திருவடிக்கு அன்புள்ளவனாகிய சுந்தரசாமந்தன் என்ன செய்கின்றானென்னில்.

தன்னது, னகரம் விரித்தல். அடங்கி நின்றமையைத் தாணிழல் நின்ற என்றார். தன், சாரியை. புதிது - புதுமை; பண்பு மாத்திரையாக நின்றது. எடுத்து - தேர்ந்து திரட்டி. எழுதுதல் - உரிமையைப் பதிவு செய்தல். கொள் கென்றான், அகரந் தொக்கது. (௫)

தென்னவர்கோன் பணித்தபணி பின்றள்ளச் சிந்தையிலன்
புன்னவர னருள்வந்து முன்னீர்ப்ப வொல்லைபோய்ப்
பொன்னறைதாழ் திறந்தறத்தா றீட்டியிடும் பொற்குவையுட்
டன்னதுளத் தவாவமையத் தக்கநிதி கைக்கவரா.

(இ - ள்.) தென்னவர்கோன் பணித்த பணி பின் தள்ள - பாண்டியர் தலைவனாகிய குலபூடணன் இட்டபணி பின்னே நின்று தள்ளவும், சிந்தையில் அன்பு உன்ன அரன் அருள் வந்து முன் ஈர்ப்ப - மனத்தில் அன்புடன் நினைத்த வளவிலே சிவபெருமான் திருவருள் வந்து முன்னே இழுக்கவும், ஒல்லைபோய்-விரைந்து சென்று, பொன் அறை தாழ் திறந்து - கருவூலத்தின் தாழைத் திறந்து, அறத்து ஆறு ஈட்டியிடும் பொன் குவையுள் - அறநெறியால் ஈட்டிவைத்த நிதிக் குவியலுள், தன்னது உளத்து அவா அமையத்தக்க - தனது உள்ளத்து விருப்பம் அடங்கத்தக்க, நிதிகைக் கவரா - பொருளைக் கைக்கொண்டு.

பணி பின்றள்ளவும் அருள் முன்னீர்ப்பவும் ஒல்லைபோய் என்க. அவாவிற்குப் பொருந்த மிகுதியான நிதியைக் கவர்ந்து என்றுமாம். (௬)

எண்ணிறந்த களிப்பினொடுந் திருக்கோயி லிடத்தணைந்து
கண்ணிறைந்த பொன்முளரிக் கயந்தலைநீர் படிந்துதன
துண்ணிறைந்த மெய்யன்பி னொளியுருவாய் முளைத்தெழுந்த
பண்ணிறைந்த மறைப்பொருளைப் பணிந்திறைஞ்சி யிதுவேண்டும்.

(இ - ள்.) எண் இறந்த களிப்பினொடும்-அளவிறந்த மகிழ்ச்சியோடும், திருக்கோயில் இடத்து அணைந்து - திருக்கோயிலுட் சென்று, கள் நிறைந்த பொன் முளரிக் கயந்தலை நீர் படிந்து - தேன் நிறைந்த பொற்றாமரை வாவியில் நீராடி, தனது உள் நிறைந்த மெய் அன்பின் - தனது உள்ளத்தின்கண் நிறைந்த உண்மை யன்பினாலே, ஒளி உருவாய் முளைத்து எழுந்த - ஒளி வடிவாய்த் தோன்றி யருளிய, பண் நிறைந்த மறைப்பொருளைப் பணிந்து இறைஞ்சி - இசை நிறைந்த வேதப் பொருளாகிய சோமசுந்தரக்கடவுளைக் கும்பிட்டு வணங்கி, இது வேண்டும்-இதனை வேண்டுவானாயினன்.

கண் நிறைந்த எனப் பிரித்துக் கண்ணுக்கு நிறைந்த பொலிவினையுடைய முளரி என்றுரைத்தலுமாம். கயந்தலை, மெலிந்து நின்றது. அன்பினது ஒளியுருவாய் முளைத்தெழுந்த பொருளை என்றுரைப்பாருமுளர். பணிந்து இறைஞ்சி என்பன வணங்கி யென்னும் ஒரு பொருள் குறித்தனவுமாம். (எ)

பண்ணியனான் மறைவிரித்த பரமேட்டி யெங்கோமான்
எண்ணியகா ரியமுடிப்பா யிவையுனக்கு முன்னடிக்கீழ்
அண்ணியமெய் யடியவர்க்கு மாதக்க வெனவிரந்தப்
புண்ணியமா நிதிமுழுது மவ்வழியே புலப்படுப்பான்.

(இ - ள்.) பண் இயல் நான்மறை விரித்த பரமேட்டி - இசை அமைந்த நான்கு மறைகளையும் வெளிப்படுத்த பரமேட்டியே, எம்கோமான்-எம்பெருமானே, எண்ணிய காரியம் முடிப்பாய் - அடியார் கருதிய கருமங்களை முடித்தருளுபவனே, இவை - இப்பொருள்கள், உனக்கும் - நினக்கும், உன் அடிக்கீழ் அண்ணிய மெய் அடியவர்க்கும் ஆதக்க - நின் திருவடிக்கீழ்ப் பொருந்திய உண்மை யடியார்க்கும் ஆகக்கடவன; என இரந்து - என்று வேண்டி, அப்புண்ணியமா நிதி முழுதும் அவ்வழியே புலப்படுப்பான் - அந்த அறத்தாற்றின் வந்த பெரிய நிதி முழுதையும் அந்நெறியிலேயே செலுத்துவானாயினன்.

பரமேட்டி - மேலோன்; கடவுள். எங்கோமான் எண்ணிய காரிய முடிப்பாய் என்பதற்கு எம் அரசன் நினைத்த காரியத்தை முற்றுவிப்பாய் என்றுரைத்தலும் பொருந்தும். ஆதக்க - ஆகத் தக்கன; முதனிலை வினையெச்சப் பொருட்டாய் நின்றது; "செய் தக்க" என்புழிப்போல. செலவிடுதலைப் புலப்படுத்தல் என்றார், அதன் பயன் நின்று விளங்குதலின். (அ)

அண்டமுக டுரிஞ்சிநிமிர் கோபுரமு மாயிரக்கான்
மண்டபமுங் கண்டிகையும் வயிரமணிக் கோளகையுங்
குண்டலமுந் தண்டரளக் குடைநிரையுங் கொடிநிரையுங்
கண்டனன்முன் னவனருளாற் பிறப்பேழுங் கரைகண்டோன்.

(இ - ள்.) அண்ட முகடு உரிஞ்சி நிமிர் கோபுரமும் - வானத்தின் உச்சியைத் தடவி உயர்ந்த கோபுரமும், ஆயிரக்கால் மண்டபமும் - ஆயிரம் தூண்களையுடைய மண்டபமும், கண்டிகையும் வயிரமணிக் கோளகையும் - கண்டிகையும் வயிரமணியாற் செய்த தோளணியும், குண்டலமும் - குண்டலங்களும், தண் தரளக்குடை நிரையும் - தண்ணிய முத்துக்குடை வரிசைகளும், கொடி நிரையும் - கொடிவரிசைகளும் ஆகிய இவற்றை, முன்னவன் அருளால் எழு பிறப்பும் கரைகண்டோன் கண்டனன் - முதல்வனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவருளால் எழுவகைப் பிறப்பென்னுங் கடலின் கரையைக் கண்டவனாகிய சாமந்தன் செய் தமைத்தான்.

கோளகை - யானைக்கொம்பின் முனையிற் செறிக்கும் குமிழ்; ஈண்டுத் தோள்வலயத்தைக் குறிக்கின்றது போலும். முன்னவனருளாற் கண்டனன் என்று கூட்டி யுரைத்தலும் பொருந்தும். கண்டனன் அதனாற் கரைகண்டோனாயினன் என்னுங் கருத்துங் கொள்க. (௧)

வானாடர்க் கவியுணவின் வகைமுந்நூன் மன்றன்முதல்
நானாவாஞ் சிறுவேள்வி நான்மறையோர்க் கறுசுவையின்
ஆனாத பேருண்டி துறவடைந்தோர்க் கருத்துபலி
தானாதி பலவேறு தருமநனி தழைவித்தான்.

(இ .- ள்) வானாடர்க்கு அவி உணவின் வகை - தேவர்களுக்கு ஊட்டும் அவியாகிய உணவின் வகைகளும், முந்நூல் மன்றல் முதல் நானாவாம் சிறு வேள்வி- பூணூல் மங்கலம் முதலிய பல வகையான சிறிய வேள்விகளும், நான்மறையோர்க்கு அறுசுவையின் ஆனாத பேர் உண்டி - நான்கு வேதங்களையு முணர்ந்த அந்தணர்க்கு அறுசுவையின் நீங்காத பேருண்டிகளும், துறவு அடைந்தோர்க்கு அருத்து பலி - துறவிகளுக்கு ஊட்டுந் திருவமுதும், ஆதி - முதலாகிய, பல வேறு தருமம் நனி தழைவித்தான் - பல வேறு வகையான தருமங்களை மிகவும் பெருகச் செய்தனன்.

நானா - பல. தான், அசை. தான ஆதி எனப் பிரித்து, பல்வகைத் தானம் முதலிய என்றுரைத்தலுமாம். (௨)

எவரேனு முருத்திரசா தனங்கண்டா லெதிர்வணங்கி
அவரேம் பிறப்பறுக்க வடிவெடுத்த வரெனென்று
கவராத வன்புள்ளங் கசிந்தொழுக வருச்சித்துச்
சுவையாறி னமுதருத்தி யெஞ்சியபின் சுவைதெரிவான்.

(இ - ள்.) எவரேனும் - யாவராயினும், உருத்திர சாதனம் கண்டால் எதிர் வணங்கி - சிவசாதனந் தாங்கினவரைக் காணின் எதிர்சென்று வணங்கி, அவரே நம் பிறப்பு அறுக்க வடிவு எடுத்த அரன் என்று - அவரே நமது பிறப்பைப் போக்கத் திருவுருவமெடுத்த சிவபெருமானென்று, கவராத அன்பு உள்ளம் கசிந்து ஒழுக அருச்சித்து - பிளவுபடாத அன்பால் உள்ளம் நெக்குருக வழிபட்டு, சுவை ஆறின் அமுது அருத்தி - அறுசுவையோடு கூடிய திருவமுதை உண்பித்து, எஞ்சிய இன்சுவை தெரிவான் - (அவர் உண்டு) மிஞ்சியவற்றை இனிய சுவை பார்ப்பான்.

எவரேனும் - உருப்பொலாதவர் இழிகுலத்தவர் முதலானோ ராயினும். உருத்திர சாதனம் - திருநீறு உருத்திராக்கம். கவராத - ஐயுறாத. எஞ்சிய - மிச்சிலா யுள்ளன; வினையாலணையும் பெயர். சுவை தெரிதல் உண்டலாகிய காரியத்தை உணர்த்திற்று.

"எவரேனுந் தாமாக விலாடத் திட்ட
திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
உவராதே யவரவரைக் கண்ட போதே
யுகந்தடிமைத் திறநினைந்தங் குவந்து நோக்கி
இவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி
யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமே பேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சி னுள்ளே
கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே"

என்னும் திருத்தாண்டகம் இங்கே சிந்திக்கற்பாலது. (கக)

இன்றைக்கா யிரநாளைக் கிருமடங்கு வருநாட்கும்
அன்றைக்கன் றிருமடங்கா வரசனது* பொருளெல்லாங்
கொன்றைச்செஞ் சடையார்க்கு மடியார்க்குங் கொடுப்பதனைத்
தென்றற்கோன் செவிமடுத்தான் சேனைக்கோ னிதுசெய்வான்.

(இ - ள்.) இன்றைக்கு ஆயிரம் நாளைக்கு இருமடங்கு - இன்றைக்கு ஆயிரம் பொன்னும் நாளைக்கு இரட்டிப்பும், வரு நாட்கும் - மேலே வருகின்ற நாட்களுக்கும், அன்றைக்கு அன்று இருமடங்கா - அன்றைக்கன்று இரட்டிப்பும் ஆக, அரசனது பொருள் எல்லாம் - மன்னனுடைய பொருள் முழுதையும், கொன்றைச் செஞ்சடையார்க்கும் அடியார்க்கும் கொடுப்பதனை - கொன்றைமாலையை யணிந்த சிவந்த சடையையுடைய சிவபெருமானுக்கும் அவனடியாருக்குங் கொடுக்குஞ் செய்தியை, தென்றல்கோன் செவிமடுத்தான் - தென்றல் தோன்றும் பொதியின் மலைக்குத் தலைவனாகிய குலபூடணன் கேள்வியுற்றான்; சேனைக்கோன் இது செய்வான் - சேனையின் தலைவனாகிய சுந்தரசாமந்தன் இதனைச் செய்வானாயினன்.

இன்றைக்கு நாளைக்கு என்பவற்றில் நான்கனுருபு ஏழாவதன் பொருளில் வந்தது. நாளை - அடுத்து வருநாள்; "நாளைச் செய்குவம் அறமெனில்" எனச்

---

(பா - ம்.) *அரசனருள் பொருள்.

சிலப்பதிகாரத்து வருதல் காண்க. அன்றைக்கு அன்று - அற்றையினும் மற்றை நாள். ஆக வென்பது ஈறு தொக்கது. கொடுப்பது, தொழிற்பெயர். தென்றல் அதற்கிடமாகிய வெற்றியினை யுணர்த்திற்று. (கஉ)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

காவல னவையத் தெய்திக் காரியஞ் செய்வா ரோடு
மேவினன் பிறநாட் டுள்ள வீரர்க்கு வெறுக்கை போக்கிச்
சேவகம் பதிய வோலை செலவிடுத் தழைப்பான் போலப்
பாவகஞ் செய்து தீட்டிப் பட்டிமை யோலை யுய்ப்பான்.

(இ - ள்.) காவலன் அவையத்து எய்திக் காரியம் செய்வாரோடு மேவினன்- அரசன் அவைக்குச் சென்று வினையாளரோடு கலந்து, பிறநாட்டு உள்ள வீரர்க்கு வெறுக்கை போக்கி - வேறு நாட்டிலுள்ள வீரர்களுக்குப் பொருளை அனுப்பி, சேவகம் பதிய - போர்ச்சேவகத்திற் பதிவு செய்ய, ஓலை செல விடுத்து அழைப்பான் போல - திருமுகம் போக்கி அழைப்பவன்போல, பாவகம் செய்து - பாவனை காட்டி, பட்டிமை ஓலை தீட்டி உய்ப்பான் - பொய்யோலை எழுதி விடுப்பவனாய்.

காரியஞ் செய்வார் - வினை செய்வார். போக்கி விடுத்து அழைப்பான் போல வென்க. சேவகம், பதிதல் என்பன பொதுச் சொற்களாயினும் படையின் ஊழியத்தையும் அதிற் பதிவு செய்தலையும் சிறப்பாகக் குறிப்பனவாகும். பட்டிமை - படிறு. மேவினன், உய்ப்பான் என்பன முற்றெச்சம். (கங)

எழுதுக தெலுங்கர்க் கோலை யெழுதுக கலிங்கர்க் கோலை
எழுதுக விராடர்க் கோலை யெழுதுக மராடர்க் கோலை
எழுதுக கொங்கர்க் கோலை யெழுதுக வங்கர்க் கோலை
எழுதுக துருக்கர்க் கோலை யென்றுபொய் யோலை விட்டான்.

(இ - ள்.) தெலுங்கர்க்கு ஓலை எழுதுக - தெலுங்கநாட்டினர்க்கு ஓலை யெழுதுக; கலிங்கர்க்கு ஓலை எழுதுக - கலிங்கநாட்டினர்க்கு ஓலை யெழுதுக; விராடர்க்கு ஓலை எழுதுக - விராட நாட்டினர்க்கு ஓலை யெழுதுக; மராடர்க்கு ஓலை எழுதுக - மராட நாட்டினர்க்கு ஓலை யெழுதுக; கொங்கர்க்கு ஓலை எழுதுக - கொங்க நாட்டினர்க்கு ஓலை யெழுதுக; வங்கர்க்கு ஓலை எழுதுக - வங்க நாட்டினர்க்கு ஓலை யெழுதுக; துருக்கர்க்கு ஓலை எழுதுக - துருக்க நாட்டினர்க்கு ஓலை யெழுதுக; என்று பொய் ஓலை விட்டான் - என்று கூறிப் பொய்யோலை போக்கினான்.

என்று - எனத் திருமுகம் வரைவானுக்குக் கூறி. அரசன் அறியும்படி இங்ஙனம் கூறியதன்றி, ஓலை யெழுதுவித்ததுமிலன், அவ்வந் நாடுகட்கு அனுப்பியதுமிலன் என்பார் 'என்று பொய்யோலை விட்டான்' என்றார். (கச)

எங்குமிப் படியே யோலை செலவிடுத் திருப்ப வாறு
திங்களி னளவு மந்தச் சேவகர் வரவு காணு
தங்கதிர் வேலோன் சேனைக் கரசனை யழைத்து நாளை
வெங்கதிர் படுமுன் சேனை யாவையும் விளித்தி யென்றான்.

(இ - ள்.) எங்கும் இப்படியே ஓலை செல விடுத்து இருப்ப - எவ்விடத்தும் இங்ஙனமே பொய்யோலை போக விடுத்து இருக்க, ஆறு திங்களின் அளவும் அந்தச் சேவகர் வரவு காணாது - ஆறு மாதங்கள் வரையும் அந்த வீரர்கள் வரவினைக் காணாமல், அம் கதிர் வேலோன் - அழகிய ஒளியினையுடைய வேற்படையேந்திய குலபூடண பாண்டியன், சேனைக்கு அரசனை அழைத்து - தானைக் காவலனாகிய சுந்தர சாமந்தனை அழைத்து, நாளை வெங்கதிர் படுமுன் - நாளைச் சூரியன் மறையு முன்னே, சேனை யாவையும் விளித்தி என்றான் - படைவீரர்க ளனைவரையும் அழைப்பாயாக என்று கூறினான்.

படுதல் - மறைதல். விளித்தி, ஏவலொருமை முற்று; த் எழுத்துப்பேறு. ()

என்றமன் னவனுக் கேற்கச் சாமந்த னிசைந்து வெள்ளி
மன்றவ னடிக்கீழ் வீழ்ந்து வள்ளலே யரச னீந்த
குன்றுறழ் நிதிய மெல்லாங் கொண்டெனைப் பணிகொண் டாயே
வன்றிறற் சேனை யீட்டும் வண்ணம்யா தென்ன நின்றான்.

(இ - ள்.) என்ற மன்னவனுக்கு ஏற்கச் சாமந்தன் இசைந்து - என்று கூறிய வேந்தனுக்குப் பொருந்தச் சாமந்தன் உடன்பட்டு, வெள்ளி மன்றவன் அடிக்கீழ் வீழ்ந்து - வெள்ளியம்பலவாணன் திருவடியின் கீழே விழுந்து வணங்கி, வள்ளலே - என் வள்ளால், அரசன் ஈந்த குன்று உறழ் நிதியம் எல்லாம் கொண்டு - மன்னன் அளித்த மலைபோலும் பொருள் முழுதையும் ஏற்றுக்கொண்டு, எனைப் பணிகொண்டாயே - என்னை அடிமை கொண்டனையே, வன் திறல் சேனை ஈட்டும் வண்ணம் யாது என்ன நின்றான் - மிக்க வலியுடைய சேனைகளைத் திரட்டும்வகை யாது என்று குறையிரந்து நின்றான்.

வள்ளல் - வரையா தளிப்போன். தான் விரும்பியதனை அளிக்கவேண்டு மென்னுங் கருத்தால் 'வள்ளலே' என்றான். மலைபோலும் நிதியமெல்லாம் கொள்ளைகொண்ட வள்ளலே என நகை தோன்றுமாறுங் கொள்க. வன்றிறல், ஒருபொரு ளிருசொல். (௧௬)

அடியவர் குறைவு தீர்த்தாண் டருள்வதே விரதம் பூண்ட
கொடியணி மாடக் கூடற் கோமகன் காமற் காய்ந்த
பொடியணி புராணப் புத்தேட் புண்ணிய னருளினாலே
இடியதிர் விசும்பு கீறி யெழுந்ததோர் தெய்வ வாக்கு.

(இ - ள்.) அடியவர் குறைவு தீர்த்து ஆண்டருள்வதே விரதம் பூண்ட - அடியாரின் குறையினைப் போக்கி ஆண்டருள்வதையே விரதமாகக் கொண்டருளி,

கொடி அணி மாடக் கூடல் கோமகன் - கொடிகள் கட்டிய மாடங்களையுடைய கூடலம்பதிக்கு நாயகனும், காமன் காய்ந்த பொடி அணி புராணப் புத்தேள் புண்ணியன் - மன்மதனை எரித்த திருநீறு தரித்த முது தெய்வமாகிய அறவுருவனும் ஆகிய சோமசுந்தரக் கடவுளின், அருளினால் - திருவருளாலே, இடி அதிர் விசும்பு கீறி ஓர் தெய்வ வாக்கு எழுந்தது - இடி முழங்கும் வானைக் கிழித்து ஒரு தெய்வ வாக்கு எழுந்தது.

விரதமாகப் பூண்ட என விரிக்க. அடியார்களின் அல்லல் தீர்த்து ஆளுவதையன்றி இறைவனுக்கு வேறு கடப்பாடில்லை என்றவாறாயிற்று. காய்ந்த புண்ணியன், பொடியணிந்த புண்ணியன் எனத் தனித்தனி சென்றியையும். (கஎ)

சூழ்ந்தெழு சேனை யோடுந் தோற்றுது நாளை நீயும்
வீழ்ந்தர சவையத் தெய்தி மேவுதி யென்ன விண்ணம்
போழ்ந்தெழு மாற்றங் கேட்டிப் பொருநரே றுவகை வெள்ளத்
தாழ்ந்தனன் முந்நீர் வெள்ளத் தலர்கதி ரவனு மாழ்ந்தான்.

(இ - ள்.) சூழ்ந்து எழு சேனையோடும் தோற்றுதும் நாளை - சூழ்ந்து எழுகின்ற தானை வீரர்களோடு நாமும் நாளை வருவோம்; நீயும் வீழ்ந்த அரசு அவையத்து எய்தி மேவுதி என்ன - நீயும் (வீரர் வரவை) விரும்பிய அரசனது அவையின்கட் சென்று இருப்பாயாக என்று, விண்ணம் போழ்ந்து எழு மாற்றம் கேட்டு - வானைப் பிளந்தெழுந்த வார்த்தையைக் கேட்டு, பொருநர் ஏறு உவகை வெள்ளத்து ஆழ்ந்தனன் - வீரருள் ஆண்சிங்கம்போன்ற சுந்தரசாமந்தன் மகிழ்ச்சி வெள்ளத்தில் மூழ்கினான்; அலர் கதிரவனும் முந்நீர் வெள்ளத்து ஆழ்ந்தான் - விரிந்த கிரணத்தை யுடைய சூரியனும் கடல் வெள்ளத்தில் மூழ்கினான்.

வீழ்ந்த என்னும் பெயரெச்சத்து அகரந் தொக்கது; விரும்பி யெய்தி என்றுமாம். விண்ணம், அம் சாரியை. பொருநர் - வீரர். முந்நீராகிய வெள்ளம் என்க. ()

மீனவன் காண மேரு வில்லிதன் றமரை வன்கண்
மானவேன் மறவ ராக்கி வாம்பரி வீர னாகத்
தானுமோர் கூத்தக் கோலஞ் சமைந்துவந் தாட விட்ட
நீனிற வெழினி போலக் காரிரு ணிவந்த தெங்கும்.

(இ - ள்.) மீனவன் காண - பாண்டியன் காணுமாறு, மேருவில்லி-மேருவை வில்லாகக் கொண்ட சோமசுந்தரக்கடவுள், தன் தமரை - தன்னுடைய கணங்களை, வன்கண் மான வேல் மறவர் ஆக்கி - அஞ்சாமையையுடைய மான மிக்க வேலையேந்திய வீரர்களாகச் செய்து, தானும் ஓர் வாம் பரி வீரன் ஆகக் கோலம் சமைந்து வந்து - தானும் ஒரு தாவுகின்ற குதிரைவீரனாகக் கோலம் பூண்டுவந்து, கூத்து ஆட இட்ட - திருக்கூத்து ஆடுதற்கு இடப்பட்ட, நீல் நிற எழினிபோலக் கார் இருள் எங்கும் நிவந்தது - நீலநிறத்தையுடைய திரைபோலக் கரிய இருளானது எங்கும் மிக்கது.

தமர் - சிவகணங்கள். ஆட - நடிக்க, திருவிளையாடல் செய்ய. நீலம் என்பது கடைக்குறையாயிற்று. இது தற்குறிப்பேற்றவணி. (கக)

புண்ணிய மனையிற் போகிப் புலர்வதெப் போழ்தென் றெண்ணி
அண்ணல்சா மந்தன் றுஞ்சா னடிக்கடி யெழுந்து வானத்
தெண்ணிறை மீனை நோக்கி நாழிகை யெண்ணி யெண்ணிக்
கண்ணுத லெழுச்சி காண்பா னளந்தனன் கங்கு லெல்லாம்.

(இ - ள்.) அண்ணல் சாமந்தன் - பெருமையுடையனாகிய சுந்தரசாமந்தன், புண்ணிய மனையில் போகி - அறம் நிலைபெற்ற தன் இல்லிற் சென்று, புலர்வது எப்போழ்து என்று எண்ணி - விடிவது எப்போது என்று கருதி, துஞ்சான் - தூங்காமல், அடிக்கடி எழுந்து - அடிக்கடி எழுந்தெழுந்து, வானத்து எண் நிறை மீனம் நோக்கி - வானின்கண் உள்ள எண் மிக்க மீன்களை நோக்கி, நாழிகை எண்ணி எண்ணி - நாழிகையை எண்ணி யெண்ணி, கண்ணுதல் எழுச்சி காண்பான் - சோமசுந்தரக் கடவுளின் வருகையைக் காணுதற்கு, கங்குல் எல்லாம் அளந்தனன் - இரவு முழுதையும் அளந்தனன்.

அண்ணல் சாமந்தன், உயர்திணைப் பெயராகலின் வலி வர இயல்பாயிற்று. மீனம் - நாண் மீன்கள். இருபத்தேழு நாண்மீன்களில் உச்சியில் வருவதனைக் கொண்டு இரவு நாழிகை கணிக்கப்படும். எழுச்சி - எழுந்தருளுகை. இரவில் சென்ற நாழிகை இத்துணை, நின்ற நாழிகை இத்துணை என்று பன்முறையும் எண்ணினமையின் 'கங்கு லெல்லாம் அளந்தனன்' என்றார். துஞ்சான், முற்றெச்சம். காண்பான், வினையெச்சம். (உ௰)

தெருட்டரு மறைக டேறாச் சிவபரஞ் சுடரோ ரன்பன்*
பொருட்டொரு வடிவங் கொண்டு புரவிமேற் கொண்டு போதும்
அருட்படை யெழுச்சி காண்பான் போலவார் கலியின் மூழ்கி
இருட்டுகள் கழுவித் தூய விரவிவந் துதயஞ் செய்தான்.

(இ - ள்.) தெருள் தரு மறைகள் தேறாச் சிவபரஞ்சுடர் - அறிவை விளக்குகின்ற மறைகளுந் தெளியாத சிவபரஞ்சோதி, ஓர் அன்பன் பொருட்டு ஒரு வடிவம் கொண்டு - ஒரு அன்பன் காரணமாக ஒரு திருவுருவங்கொண்டு, புரவிமேற் கொண்டு போதும் - குதிரைமேற்கொண்டுவருகின்ற, அருள் படை எழுச்சி காண்பான் போல - அருட்படையெழுச்சியைக் காணவந்தவன்போல, ஆர் கலியில் மூழ்கி - கடலில் முழுகி, இருள் துகள் கழுவி - இருளாகிய அழுக்கினைப் போக்கி, தூய இரவி வந்து உதயம் செய்தான் - தூயனாகிய பரிதி வந்து தோன்றினான்.

தெருள்-தெளிந்த அறிவு. தெருட்டு எனப் பிரித்து, உயிர்கட்கு விதி விலக்குகளைத் தெளிவிக்கின்ற என்றுரைத்தலுமாம். அருளினாலாகிய படையெழுச்சி என்க. படையெழுச்சி - படையுடன் புறப்படுதல். பெரியாரைக் காணவருவார் நீராடித்

(பா - ம்.) *சுடரோனன்பன்.

தூயவுடம்புடன் வருவராகலின் இரவியும் அங்ஙனம் வந்தான் என்றார். இதுவும் தற்குறிப்பேற்றவணி. (உக)

பொருநரே றனையா னேர்ந்து போந்துநான் மாடக் கூடற்
கருணைநா யகனைத் தாழ்ந்து கைதொழு திறந்து வேண்டிப்
பரவிமீண் டொளிவெண் டிங்கட் பன்மணிக் குடைக்கீ ழேகிக்
குருமதி மருமான் கோயிற் குறுகினான் குறுகு மெல்லை.

(இ - ள்) பொருநர் ஏறு அனையான் எர்ந்து போந்து - வீரருள் ஆண் சிங்கம்போன்ற சுந்தர சாமந்தன் எழுந்து சென்று, நான்மாடக் கூடல் கருணை நாயகனைத் தாழ்ந்து கைதொழுது - நான்மாடக் கூடலில் வீற்றிருக்கும் அருட் கோமானாகிய சோமசுந்தரக்கடவுளைப் பணிந்து கைகூப்பி, இரந்து வேண்டிப் பரவி மீண்டு-குறையிரந்து வேண்டித் துதித்து மீண்டு, ஒளிவெண் திங்கள் பன்மணிக் குடைக் கீழ் ஏகி - ஒளி பொருந்திய வெள்ளிய சந்திரனை ஒத்த முத்துக் குடையின் கீழ்ச் சென்று, குருமதி மருமான் கோயில் குறுகினான் - நிறம் பொருந்திய சந்திரன் மரபினனாகிய பாண்டியன் மாளிகையை அடைந்தான்; குறுகும் எல்லை - அங்ஙனம் அடையும்போது.

நேர்ந்து எனப் பிரித்து, ஞாயிற்றின் உதயத்தை எதிர்ந்து என்றும், செய்கடன் முற்றி என்றும், திருக்கோயிலை நோக்கி என்றும் உரைத்தலுமாம். பன்மணி-பலவாகிய முத்து; விலையேறிய முத்துமாம். திங்கட்குடை எனவியையும். குரு - நிறம். மருமான் - வழித்தோன்றல். (உஉ)

கரைமதி யெயிற்றுச் சங்கு கன்னன்முன் னான வென்றிப்
பிரமத கணமுங் குண்டப் பெருவயிற் றொருவ னாதி
வரைபுரை குறுத்தாட்* பூத மறவருங் குழுமி வீக்கு
குரைகழல் வலிய நோன்றாட் கோளுடை வயவ ராகி.

(இ - ள்.) கரைமதி எயிற்றுச் சங்கு கன்னன் முன்னான வென்றிப் பிரமத கணமும்-தேய்ந்தமதி போன்ற பற்களையுடைய சங்கு கன்னன் முதலிய வெற்றியையுடைய சிவகணங்களும், குண்டப்பெரு வயிற்று ஒருவன் ஆதி-ஆழ்ந்த பெரு வயிற்றினையுடைய குண்டோதரன் முதலிய, வரை புரை குறுதாள் பூதமறவரும் குழுமி - மலையை ஒத்த குறியதாளையுடைய பூதவீரருங்கூடி, வீக்கு குரை கழல் வலிய நோன் தாள் - கட்டப்பட்ட ஒலிக்கும் வீரக்கழலையுடைய வலிய பெரிய தாள்களையும், கோள் உடைவயவர் ஆகி - வலியினையுமுடைய வீரர்களாகி.

கரைதல் - தேய்தல்; குறைதல். குண்ட வயிற்றோன் - குண்டோதரன். குறுத்தாள் வலித்தல் விகாரம். வலிய குரைகழல் வீக்கு நோன்றாள் என இயைத்தலுமாம். (உங)

---

(பா - ம்.) *குறுந்தாள்.

நெட்டிலை வடிவாள் குந்தந் தோமர நேமி நெய்த்தோர்
ஒட்டிய கணிச்சி சாப முடம்பிடி முதலா வெண்ணப்
பட்டவெம் படைமூ வாறும் பரித்தசெங் கையர் காலிற்
கட்டிய கழலர் காலிற் கடியராய்ப் புறம்பு காப்ப.

(இ - ள்.) நெடு இலை வடி வாள் - நெடிய தகட்டு வடிவமமைந்த வடித்த வாளும், குந்தம் - பெருஞ்சவளமும், தோமரம் - இருப்புலக்கையும், நேமி-திகிரியும், நெய்த்தோர் ஒட்டிய கணிச்சி - குருதி பொருந்திய மழுவும், சாபம்-வில்லும், உடம்பிடி - வேலும், முதலா எண்ணப்பட்ட-முதலாக எண்ணப்பட்ட, வெம்படை மூவாறும் பரித்த செங்கையர் - வெவ்விய பதினெட்டுப் படைக்கலங்களையும் ஏந்திய சிவந்த கையையுடையவரும், காலில் கட்டிய கழலர் - காலிற்கட்டிய வீரக்கழலை யுடையவரும், காலில் கடியராய்ப் புறம்பு காப்ப - காற்றினும் விரைந்த செலவினை யுடையவருமாய்ப் புறத்திற் சூழ்ந்து காக்கவும்.

நெய்த்தோர்-குருதி. படைக்கலங்களிற் சிறந்தனவாகக் கொள்ளப்பட்டன பதினெட்டுப் போலும். பிரமத கணமும் பூதமறவரும் இங்ஙனம் புறம்பு காப்ப வென்க. (உச)

வார்கெழு கழற்கா ணந்தி மாகாளன் பிருங்கி வென்றித்
தார்கெழு நிகும்பன் கும்போ தரன்முதற் றலைவர் யாரும்
போர்கெழு கவசந் தொட்டுப் புண்டர நுதலிற் றீட்டிக்
கூர்கெழு வடிவா ளேந்திக் குதிரைச்சே வகராய்ச் சூழ.

(இ-ள்.) வார் கெழு கழல்கால் நந்தி-நீட்சி பொருந்திய வீரக்கழல் அணிந்த காலையுடைய நந்தியும், மாகாளன் - மாகாளனும், பிருங்கி-பிருங்கியும், வென்றித்தார் கெழு நிகும்பன் - வெற்றிமாலை பொருந்திய நிகும்பனும், கும்போதரன் - கும்போதரனும், முதல் தலைவர் யாரும்-முதலிய சிவகணத் தலைவர் அனைவரும், போர் கெழுகவசம் தொட்டு-போரிற்குரிய கவசம் பூண்டு, நுதலில் புண்டரம் தீட்டி - நெற்றியிலே திருநீறு தரித்து, கூர்கெழு வடிவாள் ஏந்தி-கூர்மை பொருந்திய வடித்தவாளை ஏந்தி, குதிரைச் சேவகராய்ச் சூழ - குதிரை வீரராய்ச் சூழ்ந்து வரவும்.

தொட்டு-பூண்டு. (உரு)

கற்றைச்சா மரைகள் பிச்சங் கவிகைபூங் கொடிக்கா டெங்கும்
துற்றக்*கா ரொலியு நாணத் தூரிய முழுது மேங்கக்
கொற்றப்போர் விடையைத் தானே குரங்குளைப் பரியா மேற்கொண்
டொற்றைச்சே வகராய் மாறியாடிய வொருவர் வந்தார்.

(இ-ள்.) கற்றைச் சாமரைகள் பிச்சம் கவிகை பூங்கொடிக் காடு எங்கும் துற்ற- திரளாகிய சாமரைகளும் பீலிகளும் குடைகளும் பொலிவினையுடைய துவசக்காடும் எங்கும் நெருங்கவும், கார் ஒலியும் நாணத் தூரியம் முழுதும் ஏங்க - முகிலின் இடி

(பா - ம்.) *எங்கு முற்ற.

யொலியும் நாணுமாறு இயங்களனைத்தும் முழங்கவும், கொற்றப் போர்விடையைத் தானே - வெற்றியையுடைய போருக்குரிய இடப வூர்தியையே, குரங்கு உளைபரியா மேற்கொண்டு - வளைந்த பிடர் மயிரையுடைய குதிரையாக (ஆக்கி) அதில் எறி யருளி, ஒற்றைச் சேவகராய் - ஒப்பற்ற வீரராய், மாறியாடிய ஒருவர் வந்தார் - கான் மாறியாடிய பெருமானார் வந்தருளினார்.

சாமரை, பிச்சம், கவிகை, கொடி ஆகிய காடு என்னலுமாம். முற்ற என்னும் பாடத்திற்குச் சூழ என்பது பொருள். தான், அசை. குரங்கல் - வளைதல்;

"குரங்கமை யுடுத்த மரம்பயி லடுக்கத்து"

என்பது சிலப்பதிகாரம். (உசு)

பல்லிய மொலிக்கு மார்ப்பும் பாய்பரி கலிக்கு மார்ப்புஞ்
செல்லொலி மழுங்க மள்ளர் தெழித்திடு மார்ப்பு மொன்றிக்
கல்லெனுஞ் சும்மைத் தாகிக் கலந்தெழு சேனை மேனாள்
மல்லன்மா நகர்மேற் சீறி வருகடல் போன்ற தன்றே.

(இ - ள்.) பல் இயம் ஒலிக்கும் ஆர்ப்பும் - பல இயங்களும் ஒலிக்கின்ற ஒலியும், பாய் பரி கலிக்கும் ஆர்ப்பும் - பாய்கின்ற குதிரைகள் கனைக்கும் ஒலியும், செல் ஒலி மழுங்க மள்ளர் தெழித்திடும் ஆர்ப்பும்-முகிலின் இடியொலியும் மழுங்கும் படி வீரர்கள் உரப்பும் ஒலியும், ஒன்றி - கலந்து, கல்லெனும் சும்மைத்து ஆகி கலந்து எழுசேனை - கல்லென்னும் ஓசையையுடையதாகிக் கலந்தெழுந்த சேனையானது, மேல் நாள் - முன்னாளில், மல்லல் மாநகர்மேல் சீறி வருகடல் போன்றது - வளப்ப மிக்க பெரிய மதுரையின்மேற் சீறிவந்த கடலை ஒத்தது.

தெழித்தல் - உரப்புதல்; அதட்டுதல். ஓசையாலும் பரப்பாலும் கடல் போன்றது. மதுரையை நோக்கி வந்தமையின் முன்பு அங்ஙனம் வந்த கடலைக் கூறினார். அன்று, ஏ அசைகள். (உஎ)

சேனையின் வரவு நோக்கித் திருமகன் திருமுன் னேகுந்
தானையந் தலைவன்* றென்னன் றாணிழல் குறுகிக் கூற
மீனவ னுவகை பூத்து வெயின்மணிக் கடையிற் போந்தங்
கானமண் டபத்திற் செம்பொ னரியணை மீது வைகி.

(இ - ள்.) சேனையின் வரவு நோக்கி - தானையின் வருகையைப் பார்த்து, திருமகன் திருமுன் ஏகும் - அரச சமுகத்திற்குச் செல்லும், தானை அம் தலைவன் - படைத்தலைவனாகிய சுந்தரசாமந்தன், தென்னன் தாள் நிழல் குறுகிக் கூற - குல பூடண பாண்டியனது அடி நிழலை அடைந்து கூற, மீனவன் உவகை பூத்து - அவ் வழுதியானவன் மகிழ்ந்து, வெயில்மணிக் கடையில் போந்து - ஒளிபொருந்திய மணிகள் பதித்த கடைவாயிலில் வந்து, அங்கு ஆன மண்டபத்தில் - அங்கு இருத்

* (பா - ம்.) தானையர் தலைவன்.

தற்கு அமைந்த மண்டபத்தின்கண், செம்பொன் அரி அணை மீது வைகி - செம்பொன்னாலாகிய சிங்காதனத்தின்மீது அமர்ந்து.

திருமகன் - சிறந்தோன், அரசன். அம், சாரியை. தென்னன், மீனவன் என்பவற்றைச் சுட்டாகக் கொள்க. (உ அ)

தெவ்வடு மகிழ்ச்சி பொங்கச் சேனையின் செல்வ* நோக்கி
எவ்வெவ தேயத்† துள்ளா ரிவரென வெதிரே நின்று
கௌவையின் மனச்சா மந்தன் கையிற்பொற் பிரம்பு நீட்டி
அவ்வவர் தொகுதி யெல்லா மணியணி நிறுவிக் கூறும்.

(இ - ள்.) தெவ் அடு மகிழ்ச்சி பொங்க - பகைவனாகிய சேதிராயனைக் கொல்லும் மகிழ்ச்சி மிக, சேனையின் செல்வம் நோக்கி-சேனையின் பெருக்கத்தைப் பார்த்து, இவர் எவ்வெவதேயத்து உள்ளார் என - இவர்கள் எந்தெந்தத் தேயத்திலுள்ளவர்கள் என்று பாண்டியன் வினவ, கௌவை இல் மனச்சாமந்தன் - துன்பமில்லாத மனத்தினையுடைய சாமந்தன், எதிரே நின்று கையில் பொன் பிரம்பு நீட்டி-எதிரில் நின்று கையிலுள்ள பொற் பிரம்பினை நீட்டி, அவ்வவர் தொகுதி எல்லாம் அணி அணி நிறுவிக்கூறும் - அவரவர் கூட்டங்களை யெல்லாம் அணியணியாக நிறுத்திக் கூறுவான்.

நோக்கி மகிழ்ச்சிபொங்க வினவ என்க; பொங்கு அச்சேனை எனப் பிரித்துரைத்தலுமாம். எவ்வெவ, அ அசை. அவரவர் என்பது அவ்வவர் என்றாயது. ()

[கலிவிருத்தம்]

கொங்கரிவ ரையகுரு நாடரிவ ரைய
கங்கரிவ ரையகரு நாடரிவ ரைய
அங்கரிவ ரையவிவ ராரியர்க ளைய
வங்கரிவ ரையவிவர் மாளவர்க ளைய.

(இ - ள்.) ஐய இவர் கொங்கர் - ஐயனே இவர் கொங்கநாட்டினர்; ஐய இவர் குருநாடர் - ஐயனே இவர் குருநாட்டினர்; ஐய இவர் கங்கர் - ஐயனே இவர் கங்கநாட்டினர்; ஐய இவர் கருநாடர் - ஐயனே இவர் கருநாடநாட்டினர்; ஐயஇவர் அங்கர் - ஐயனே இவர் அங்கநாட்டினர்; ஐய இவர் ஆரியர்கள் - ஐயனே இவர்கள் ஆரிய நாட்டினர்கள்; ஐய இவர் வங்கர் - ஐயனே இவர் வங்கநாட்டினர்; ஐய இவர் மாளவர்கள் - ஐயனே இவர்கள் மாளவநாட்டினர்கள். (க0)

குலிங்கரிவ ரையவிவர் கொங்கணர்க ளைய
தெலுங்கரிவ ரையவிவர் சிங்களர்க ளைய
கலிங்கரிவ ரையகவு டத்தரிவ ரைய
உலங்கெழு புயத்திவர்க ளொட்டியர்க ளைய.

---

(பா - ம்.) *சேனையின் செல்வி. †எவ்வெத்தே யத்திலுள்ளார்.

(இ - ள்.) ஐய இவர் குலிங்கர் - ஐயனே இவர் குலிங்கநாட்டினர்; ஐய இவர் கொங்கணர்கள் - ஐயனே இவர்கள் கொங்கண நாட்டினர்கள்; ஐய இவர் தெலுங்கர் - ஐயனே இவர் தெலுங்கநாட்டினர்; ஐய இவர் சிங்களர்கள் - ஐயனே இவர்கள் சிங்களநாட்டினர்கள்; ஐய இவர் கலிங்கர் - ஐயனே, இவர் கலிங்கநாட்டினர்; ஐய இவர் கவுடத்தர் - ஐயனே இவர் கவுடநாட்டினர்; ஐய உலம் கெழு புயத்து இவர்கள் ஒட்டியர்கள் - ஐயனே திரண்ட கற்போலும் புயத்தினையுடைய இவர்கள் ஒட்டிய நாட்டினர்கள். (ருக)

கொல்லரிவ ரையவிவர் கூர்ச்சரர்க ளைய
பல்லரிவ ரையவிவர் பப்பரர்க ளைய
வில்லரிவ ரையவிவர் விதேகரிவ ரைய
கல்லொலி கழற்புனை கடாரரிவ ரைய.

(இ - ள்.) ஐய இவர் கொல்லர் - ஐயனே இவர் கொல்லநாட்டினர்; ஐய இவர் கூர்ச்சரர்கள் - ஐயனே இவர்கள் கூர்ச்சரநாட்டினர்கள்; ஐய இவர் பல்லர் - ஐயனே இவர் பல்லவநாட்டினர்; ஐய இவர் பப்பரர்கள் - ஐயனே இவர்கள் பப்பர நாட்டினர்கள்; ஐய இவர் வில்லர் - ஐயனே இவர்கள் வில்லர்கள்; ஐய இவர் விதேகர் - ஐயனே இவர் விதேகநாட்டினர்; ஐய இவர் கல் ஒலி கழல்புனை கடாரர் - ஐயனே இவர் கல்லென்னும் ஒலியையுடைய வீரக்கழலையணிந்த கடாரநாட்டினர்.

பல்லவர் என்பது பல்லர் என நின்றது. வில்லர் - விற்கொடியையுடைய சேரரின் நாட்டினர். கல்லென்னு மொலி என்பது கல்லொலி என நின்றது. (ருஉ)

கேகயர்க ளாலிவர்கள் கேழ்கிளர் மணிப்பூண்
மாகதர்க ளாலிவர் மராடரிவர் காஞ்சி
நாகரிக ராலிவர்க ணம்முடைய நாட்டோர்
ஆகுமிவர் தாமெனமெய்க்* காட்டியறி வித்தான்.

(இ - ள்.) இவர்கள் கேகயர்கள் - இவர்கள் கேகயநாட்டினர்கள்; கேழ்கிளர் மணிப்பூண் இவர் மாகதர்கள் - ஒளி விளங்கும் மணிகள் பதித்த அணிகளையணிந்த இவர்கள் மகதநாட்டினர்கள்; இவர் மராடர் - இவர் மராடநாட்டினர்; இவர்கள் காஞ்சிநாகரிகர் - இவர்கள் காஞ்சிநாட்டிலுள்ள நாகரிகமுடையவர்கள்; இவர் நம்முடைய நாட்டோர் ஆகும்-இவர் நமது நாட்டினராவர்; என-என்று, மெய்க்காட்டி அறிவித்தான் - அவரவர் உருவினைக் காட்டித் தெரிவித்தான்.

ஆல் மூன்றும், தாம் என்பதும் அசைகள். காஞ்சி நாகரிகர் என்றது சோழரை யாதல்வேண்டும். (ருங)

இத்தகைய சேட்புல னுளாரையிவ ணுய்த்த
வித்தகைமை யென்னென வினவியருள் செய்யேல்
அத்தநின் னரும்பொரு ளனைத்தும்வரை யாதே
உய்த்தலி னடைந்தனர்க ளாமெனவு ரைத்தான்.

---

(பா - ம்.) *மெய்காட்டி.

(இ - ள்.) இத்தகைய சேண் புலன் உளாரை - இத்தன்மையுடைய சேய்மை நாடுகளில் உள்ளாரை, இவண் உய்த்த வித்தகைமை என் என - இங்கு வருவித்த சாமர்த்தியம் யாது என்று, வினவி யருள் செய்யேல் - வினவியருளாதே, அத்த - பெருமானே, நின் அரும் பொருள் அனைத்தும் - நினது அரிய பொருள் முற்றும், வரையாது உய்த்தலின் - வரையறையின்றிச் செலவு செய்தமையால், அடைந்தனர்கள் என உரைத்தான் - இவர்கள் யாவரும் வந்தார்கள் என்று கூறினன்.

வித்தகம் - சதுரப்பாடு; இது மை என்னும் பகுதிப்பொருள் விகுதிபெற்று வித்தகைமை எனத் திரிந்தது. இவர்கள் வந்தமைக்கு நின் பொருள் காரணமா மன்றி என் வித்தகம் காரணமன்று என அடங்கிக் கூறினன். அரும் பொருள் - பெறுதற்கரிய பொருள், அறநெறியால் வந்த பொருள். ஆல், அசை. அறிவித்த வன் வினவற்க உய்த்தலின் அடைந்தனர் என உரைத்தான் என்க. இவ்வைந்து செய்யுட்களிலும் பலர்பாலில் இரு விகுதிபெற்றுவந்த சொற்களுள்ளமை காண்க. ()

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

அந்நெடுஞ் சேனை தன்னுட் சேணிடை யடன்மா வூர்ந்து
பின்னுற நிற்கு மொற்றைச் சேவகப் பிரானை நோக்கி
மன்னவ னவன்யா ரென்னச் சாமந்தன் வணங்கி யைய
இன்னவர் சேனை வெள்ளத் தியாரையென் றறிவ தென்றான்.

(இ - ள்.) அந் நெடுஞ்சேனை தன்னுள் - அப் பெரிய சேனையின்கண், சேண் இடை அடல்மா ஊர்ந்து பின்உற நிற்கும் - சேய்மையில் வலிய குதிரையைச் செலுத்திப் பின்னாக நிற்கின்ற, ஒற்றைச் சேவகப்பிரானை - ஒப்பில்லாத வீரனாகிய இறைவனை, மன்னவன் நோக்கி - பாண்டிவேந்தன் பார்த்து, அவன் யார் என்ன - அவன் யார் என்று வினவ, சாமந்தன் வணங்கி - சாமந்தன் தொழுது, ஐய-ஐயனே, இன்னவர் சேனை வெள்ளத்து - இவர்களின் சேனைப் பெருக்கத்துள், யார் என்று அறிவது என்றான் - யார் என்று அறிந்து சொல்லக்கூடும் என்று கூறினன்.

இச் சேனைவெள்ளத்திலே தனித்தனியாக அறியலுறின் யாரை அறியக் கூடும் என்றானென்க. இன்னவர் யாரென்று அறிவது என இயைத்தலுமாம். (௩௫)

அவரையிங் கழைத்தி யென்றா னரசன்றன் வழிச்செல் வார்போற்
கவயமிட் டவரும் போந்தார் காவலன் களிகூர்ந் தம்பொன்
நவமணிக் கலன்பொன் னாடை நல்கினா னுள்ளத் தன்பு.
தவறிலான் பொருட்டு வாங்கித் தரித்துத்தன் றமர்க்கு மீந்தார்.

(இ - ள்.) அவரை இங்கு அழைத்தி என்றான் - அவரை இங்கு அழைப்பாயாக என்றான் வேந்தன்; அரசன் தன்வழிச் செல்வார்போல் - அவனது வழிப்பட்டுச் செல்பவரைப்போல, கவயம் இட்டவரும் போந்தார் - கவசமணிந்த அவ் வீரரும் போந்தார்; காவலன் களிகூர்ந்து - மன்னன் மகிழ்ச்சிமிக்கு, அம்பொன் நவமணிக்கலன் பொன்ஆடை நல்கினான் - அழகிய பொன்னாலாகிய நவமணியிழைத்த

அணிகளையும் பொன்னுடைகளையும் கொடுத்தான்; உள்ளத்து அன்பு தவறிலான் பொருட்டு வாங்கித் தரித்து - அவர் மனத்தின்கண் அன்பு நீங்காத சாமந்தன் பொருட்டு அவற்றை வாங்கி அணிந்துகொண்டு, தன் தமர்க்கும் ஈந்தார் - தம் பரிசனங்கட்குங் கொடுத்தருளினர்.

அழைத்தியென்றான் அழைக்கவே அவரும் போந்தார் என விரித்துரைக்க. அவரது தோற்றத்தால் அரசன் களிகூர்ந்தானுயிற்று. தன்றமர்க்கும் ஈந்தார் என ஒருமைச் சொல்லும் பன்மைச் சொல்லும் விரவி வந்தன. (ருசு)

ஆய்ந்தவெம் பரிமாத் தூண்டி யைங்கதி நடத்திக் காட்டி
ஏய்ந்ததஞ் சேனை வெள்ளத் தெய்தினு ரெய்து மெல்லை
வேய்ந்ததார்ச் சேதி ராயன் வேட்டைபோய்ப் புலிகோட் பட்டு
மாய்ந்தன னென்றோ ரொற்றன் வேந்தன்முன் வந்து சொன்னான்.

(இ - ள்.) ஆய்ந்த வெம் பரிமாத்தூண்டி - ஆராய்ந்துகொண்ட கடிய செலவினையுடைய குதிரையைச் செலுத்தி, ஐங்கதி நடத்திக்காட்டி - ஐவகைக் கதிகளிலும் நடத்திக் காண்பித்து, ஏய்ந்த தம் சேனைவெள்ளத்து எய்தினர் - பொருந்திய தமது தானைவெள்ளத்தை அடைந்தார்; எய்தும் எல்லை - அங்ஙனம் அடையும் பொழுது, தார் வேய்ந்த சேதிராயன் வேட்டைபோய் - மாலையணிந்த சேதிராயன் என்பான் வேட்டைக்குச் சென்று, புலிகோட்பட்டு மாய்ந்தனன் என்று - புலியினுற் கொள்ளப்பட்டு இறந்துபட்டனன் என்று, வேந்தன்முன் ஓர் ஒற்றன் வந்து சொன்னான் - மன்னன் முன்னே ஒரு ஒற்றன்வந்து கூறினன்.

ஐங்கதி இவை யென்பதனை,

"விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்டம்
மத்திமம் சாரியோ டைந்து"

என்பதனு லறிக. கோட்பட்டு, தம்பினுய தொழிற்சொல். (ருஎ)

முரசதி ரனிக நோக்கி முகமலர்ந் துவகை பூத்த
அரசனு மனிக வேந்தற் களவில்சீர்த் தலைமை யோடும்
வரிசைகண் மிதப்ப நல்கி வந்துமெய்க் காட்டுத் தந்து
பரசிய பதாதி தத்தம் பதிபுகச் செலுத்து கென்றான்.

(இ - ள்.) முரசு அதிர் அனிகம் நோக்கி - முரசுமுழங்குஞ் சேனையைப் பார்த்து, முகம் மலர்ந்து உவகை பூத்த அரசனும் - முகமலர்ந்து மகிழ்ச்சியுற்ற வேந்தனும், அனிக வேந்தற்கு - சேனைத்தலைவனுகிய சுந்தரசாமந்தனுக்கு, அளவு இல் சீர்த்தலைமையோடும் வரிசைகள் மிதப்ப நல்கி - அளவில்லாத சிறப்பினையுடைய தலைமையோடு வரிசைகளையும் நிரம்பக் கொடுத்து, வந்து மெய்க்காட்டுத் தந்து பரசியபதாதி தத்தம் பதிபுகச் செலுத்துக என்றான் - வந்து மெய்க்காட்டுக் கொடுத்துத் துதிக்கப்பெற்ற சேனைகள் தத்தம் நகரிற் செல்லுமாறு விடுக்க என்று கூறினன்.

தலைமை - முதன்மைக்குரிய பட்டம்; வேறு சிறந்த வினைத்தலைமையுமாம். மெய்யைக் காட்டிய அளவானே புகழ்ப்பெற்ற. பதாதி - காலாள். செலுத்து கென்றான், அகரந் தொக்கது. (௬௮)

அறைந்தவார் கழற்காற் சேனை காவல னனிகந் தத்தஞ்
சிறந்தசே ணாட்டிற் செல்லச் செலுத்துவான் போன்று நிற்ப
நிறைந்தநான் மாடக் கூட னிருத்தனந் நிலைநின் றாங்கே
மறைந்தனன் மனித்த வேடங்* காட்டிய மறவ ரோடும்.

(இ - ள்.) அறைந்த வார்கழல் கால் சேனை காவலன் - ஒலிக்கின்ற நீண்ட வீரக்கழலையணிந்த காலையுடைய படைத்தலைவனாகிய சுந்தரசாமந்தன், அனிகம் - சேனைகள், தத்தம் சிறந்த சேண் நாட்டில் செல்ல - தத்தமக்குரிய சிறந்த சேய்மையிலுள்ள நாடுகளிற் செல்லுமாறு, செலுத்துவான்போன்று நிற்ப - செலுத்துகின்றவனைப்போலப் பாவனைசெய்து நிற்க, நிறைந்த நான்மாடக்கூடல் நிருத்தன்-பெருமை நிறைந்த மதுரையில் எழுந்தருளியிருக்கும் சோமசுந்தரக்கடவுள், அந்நிலை நின்றாங்கே - அங்கு நின்றபடியே, மனித்தவேடம் காட்டிய மறவரோடும் மறைந்தனன்- மனிதவேடம் காட்டிய வீரராகிய சிவகணங்களோடும் மறைந்தருளினான்.

நிறைந்த என்பதனை நிருத்தனுக் கேற்றி யுரைத்தலுமாம். அங்கே தோன்றி நின்றாற்போன்றே மறைந்தனன் என்க. நின்று ஆங்கே எனப் பிரித்து, அந்நிலை நின்றும் அப்பொழுதே மறைந்தனன் என்னலுமாம். (௬௯)

கண்டனன் பொருநை நாடன் வியந்தனன் கருத்தா சங்கை
கொண்டனன் குறித்து நோக்கி யீதுநங் கூடன் மேய
அண்டர்தம் பெருமான் செய்த வாடலென் றெண்ணிக் கண்ணீர்
விண்டனன் புளகம் போர்ப்ப மெய்யன்பு வடிவ மானான்.

(இ - ள்.) பொருநைநாடன் கண்டனன் வியந்தனன் - பொருநையாறு சூழ்ந்த நாட்டினையுடைய குலபூடணபாண்டியன் இதனைக் கண்டு வியந்து, கருத்து ஆசங்கை கொண்டனன் - கருத்தில் ஐயுறவு கொண்டு, குறித்து நோக்கி - உய்த்துணர்ந்து, ஈது நம் கூடல் மேய அண்டர்தம் பெருமான் செய்த ஆடல் என்று எண்ணி - இது நமது கூடலில் வீற்றிருக்குந் தேவதேவனாகிய சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய திருவிளையாடலென்று துணிந்து, கண்ணீர் விண்டனன் - கண்களில் ஆனந்த அருவி பொழியப் பெற்று, மெய் புளகம் போர்ப்ப அன்பு வடிவம் ஆனான் - உடல்முழுதும் புளகம் மூட அன்பே வடிவமாயினன்.

முதற்கண் வியப்பும் ஐயமும் எய்தியவன் பின்பு குறித்து நோக்கி ஆடல் என்று துணிந்து அன்பு வடிவமானான் என்க. எண்ணி - துணிந்து என்னும் பொருட்டு. கண்டனன் முதலிய முற்றுக்கள் நான்கும் எச்சமாயின. தம், சாரியை; மெய் என்பதனை அன்புடன் கூட்டி, உண்மையன்பு என்னலுமாம். (௭0)

---

(பா - ம்.) *மனித வேடம்.

தனக்குயிர்த் துணையா நின்ற சாமந்தன் றன்னை நோக்கி
உனக்கெளி வந்தார் கூட லுடையநா யகரே யென்றால்
எனக்கவ ராவார் நீயே யென்றவற் கியாவு நல்கி
மனக்கவல் பின்றி வாழ்ந்தான் மதிவழி வந்த மைந்தன்.

(இ - ள்.) **தனக்கு உயிர்த்துணையா நின்ற சாமந்தன் தன்னை நோக்கி** - தனக்கு உயிர்த்துணையாகப் பொருந்தி நின்ற சுந்தரசாமந்தனைப் பார்த்து, **கூடல் உடைய நாயகரே** - மதுரையில் வீற்றிருக்கும் எல்லாமுடைய சோமசுந்தரக்கடவுளே, **உனக்கு எளிவந்தார் என்றால்** - நினக்கு எளிதில் வந்தருளினாரென்றால், **எனக்கு அவராவார் நீயே என்று** - எனக்கு அக்கடவுள் நீயே என்று, **அவற்கு யாவும் நல்கி** - அவனுக்குப் பல சிறப்புக்களையுங் கொடுத்து, **மதிவழி வந்த மைந்தன்** - சந்திரன் மரபில் வந்த குலபூடண பாண்டியன், **மனக்கவல்பு இன்றி வாழ்ந்தான்** - மனத்திற் கவலை என்பதில்லாமல் வாழ்ந்துவருவா னாயினன்.

நாயகரே என்பதில் ஏகாரம் சிறப்புணர்த்திற்று. ஆவார், முதல் வேற்றுமைச்சொல். சிவனடியாரைச் சிவனெனவே தேறி வழிபடுதல் முறையாகலின் 'அவர் நீயே' என்றான். (சுக)

ஆகச் செய்யுள் - கஎளசு.

முப்பத்தொன்ருவது

# உலவாக்கிழியருளிய படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

அடியார் பொருட்டுப் பரிவயவ ராகிச் செழியன் காணவிடைக்
கொடியார் வந்து மெய்க்காட்டுக் கொடுத்த வண்ண மெடுத்துரைத்துங்
கடியார் கொன்றை முடியாரக் கன்னி நாடன் றனக்கிசைந்த
படியா லுலவாக் கிழிகொடுத்த படியை யறிந்த படிபகர்வாம்.

(இ - ள்.) விடைக்கொடியார் - இடபக்கொடியையுடைய சோமசுந்தரக் கடவுள், அடியார் பொருட்டு - அடியராகிய சாமந்தர் பொருட்டு, பரிவயவராகி - குதிரை வீரராகி, செழியன் காணவந்து - பாண்டியன் காணுமாறு வந்து, மெய்க் காட்டுக் கொடுத்த வண்ணம் எடுத்து உரைத்தும் - மெய்க்காட்டுக் கொடுத்தருளிய திருவிளையாடலைக் கூறினேம்; கடி ஆர் கொன்றை முடியார் - (இனி) மணம் நிறைந்த கொன்றை வேணியராகிய அவரே, அக்கன்னி நாடன் தனக்கு இசைந்தபடியால் - அப்பாண்டி நாடன் தனக்கு மனமொத்த அன்பனுனபடியினுல், உலவாக்கிழி கொடுத்த படியை - (அவனுக்கு) உலவாக்கிழி அளித்த திருவிளையாடலை, அறிந்த படி மொழிவாம் - அறிந்தவாறு கூறுவாம்.

உரைத்தும் - உரைத்தாம். கன்னி நாடனுக்குப் பொருந்தியவாறு கொடுத்த படி என்றலுமாம். உலவாக்கிழி - எடுக்கக் குறையாத பொன் முடிப்பு. (க)

வள்ளல் குலபூ டணன்றிங்கள் வாரந் தொடுத்துச் சிவதருமம்
உள்ள வெல்லாம் வழாதுநோற் றொழுகும் வலியாற் றன்னாட்டில்
எள்ள லில்லா வேதியரை யிகழ்ந்தா னதனுன் மழைமறுத்து
வெள்ள மருக வளங்குன்றி விளைவஃகி யது நாடெல்லாம்.

(இ - ள்.) வள்ளல் குலபூடணன் - வள்ளலாகிய குலபூடண பாண்டியன், திங்கள்வாரம் தொடுத்துச் சிவதருமம் உள்ள எல்லாம் - சோமவார விரதம் முதலாக உள்ள சிவபுண்ணியங்களனைத்தையும், வழாது நோற்று ஒழுகும் வலியால் - தவருமல் நோற்று நடக்கும் வன்மையினுல், தன் நாட்டில் எள்ளல் இல்லா வேதியரை இகழ்ந்தான் - தனது நாட்டிலுள்ள இகழ்தற்குரியரல்லாத மறையோரை அவமதித்தான்; அதனுல் மழை மறுத்து வெள்ளம் அருக - அதனுலே மழை பெய்யாதொழிதலால் நீர்ப்பெருக்குக்குறைய, நாடு எல்லாம் விளைவு அஃகி வளங்குன்றியது - நாடு முழுதும் விளைவு சுருங்கி வளங்குறைந்தது.

திங்கள் வாரம், நோன்பிற்கு ஆகு பெயர். தொடுத்து - தொடங்கி. திங்கள் வாரந் தொடுத்து என்றும், நோற்று என்றும் கூறினமையால் சிவதருமம் என்றது சிவ விரதங்களைக் குறிக்கும். நோற்றமையாலே தருக்குற்று இகழ்ந்தானென்க. எள்ளலில்லா வேதியர் - மறைகளையுணர்ந்து அந்நெறி யொழுகும் சிறப்பினையுடைய அந்தணர். மழை வளந்தரும் அழலோம்பாளரை இகழ்ந்தமையின் அவர் அழலோம் புதலைக் கைவிட அதனுல் மழை மறுத்ததென்க. மறுத்தலால் என்பது மறுத்து எனத் திரிந்து நின்றது. விளைவஃகி வளங்குன்றியது என விகுதி பிரித்துக்கூட்டப் பட்டது. (உ)

அறவோ ரெல்லாம் நிரப்பெய்தி யாகங் கிடந்த நூலன்றி
மறைநூ லிழந்து முனிவேள்வி வானோர் வேள்வி தென்புலத்தின்
உறைவோர் வேள்வி யிழந்திழிந்த தொழில்செய் தாற்ரு துயிர்வளர்ப்பான்
புறநா டணைந்தார் பசியாலே புழுங்கி யொழிந்த குடியெல்லாம்.

(இ - ள்.) அறவோர் எல்லாம் நிரப்பு எய்தி - அந்தணரெல்லாம் வறுமையுற்று, ஆகம் கிடந்த நூல் அன்றி மறைநூல் இழந்து - மார்பிற் கிடந்த பூணூலன்றி வேத மாகிய நூலை இழந்து, முனிவேள்வி வானோர் வேள்வி தென்புலத்தின் உறைவோர் வேள்வி இழந்து - முனிவர் வேள்வியும் தேவர் வேள்வியும் பிதிரர் வேள்வியுமாகிய இவற்றைக் கை விட்டு, ஆற்ருது - வறுமைத் துன்பம் பொறுக்காது, இழிந்த தொழில் செய்து உயிர் வளர்ப்பான் புறநாடு அணைந்தார் - இழிவாகிய தொழிலைச் செய்தேனும் உயிரினை ஓம்புதற்பொருட்டு வேற்று நாடு சென்றனர்; ஒழிந்த குடி எல்லாம் பசியாலே புழுங்கி - அவரொழிந்த குடிகளெல்லாம் பசியினுலே மனம் புழுங்கி.

அறவோர் - அறநெறி யொழுகுவோர். நிரப்பு, எதிர்மறை யிலக்கணையாக வறுமையைக் குறிக்கும் பெயர். அவரை வேதியரெனக் காட்டுதற்குப் பூணூலன்றிப் பிறிதொன்று மிலதாயிற்று என நகைதோன்றக் கூறினுர். முனி வேள்வி முதலாயின அவ்வவர்க்கு இறுக்கப்படும் கடன்கள். முனிவர் கடன் கேள்வியானும், தேவர்கடன் வேள்வியானும், தென்புலத்தார் கடன் புதல்வரைப் பெறுதலானும் இறுக்கப்படும் என்பர்;

"வேள்வியிற் கடவு ளருத்தினை கேள்வி
உயர்நிலை யுலகத் தையரின் புறுத்தினை
வணங்கிய சாயல் வணங்கா வாண்மை
இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணித்
தொல்கட னிறுத்த வெல்போ ரண்ணல்"

எனப் பதிற்றுப்பத்துக் கூறுவது காண்க. (ட)

எந்நா டணைவோ மெனவிரங்க விரங்கி மதிக்கோன் மறுநாளிற்
பொன்னுண் முளரித் தடங்குடைந்து சித்திக் களிற்றைப் பூசித்துத்
தன்னு தரவாற் கயற்கண்ணி தலைவன் றன்னை யருச்சித்து
முன்னு வீழ்ந்து காமுகிழ்த்துப் பழிச்சி மகிழ்ந்து மொழிகின்ருன்.

(இ - ள்.) எந்நாடு அணைவோம் என இரங்க - எந்த நாட்டிற் செல்வோம் என்று வருந்த, மதிக்கோன் இரங்கி - திங்கள் மரபினனாகிய குலபூடணன் மனங் கவன்று, மதிநாளில் - திங்கட்கிழமையில், நாள் பொன் முளரித் தடம் குடைந்து - அன்றலர்ந்த மலர்களையுடைய பொற்றாமரை வாவியில் நீராடி, சித்திக் களிற்றை பூசித்து - சித்தி விநாயகனை வணங்கி, தன் ஆதரவால் - தனது அன்பினால், கயல் கண்ணி தலைவன் தன்னை அருச்சித்து - அங்கயற்கண்ணி தலைவனாகிய சோமசுந்தரக் கடவுளை அருச்சித்து, முன்னா வீழ்ந்து - திருமுன் வீழ்ந்து, கரம் முகிழ்த்து - கை கூப்பி, பழிச்சி மகிழ்ந்து மொழிகின்றான் - துதித்து மகிழ்ந்து கூறுகின்றான்.

அரசன் மன்னுயிர்களைத் தன்னுயிர்போற் கருதுபவனாகலின் 'இரங்க இரங்கி' என்றார். முன்னா-முன்னாக. வீழ்ந்து பின் எழுந்து கரமுகிழ்த்து என விரிக்க. (ச)

அத்த வுலகி லுயிர்க்குயிர்நீ யல்லை யோவவ் வுயிர்பசியால்
எய்த்த வருத்த மடியேனை வருத்து மாறென் யானீட்டி
வைத்த நிதியம்* தருமத்தின் வழியே சென்ற தினியடிகள்
சித்த மலர்ந்தென் னிடும்பைவினை தீரவருட்கண் செய்கவென.

(இ - ள்.) அத்த - ஐயனே, உலகில் உயிர்க்கு உயிர் நீ அல்லையோ - உலகின் கண் உள்ள உயிர்களுக்கு உயிரா யுள்ளவன் நீ யல்லவோ, அவ்வுயிர் பசியால் எய்த்த வருத்தம் அடியேனை வருத்துமாறு என் - அந்த உயிர்கள் பசியால் இளைத்த வருத்தம் (தேவரீரைச் சாராது) அடியேனைச் சார்ந்து வருத்துங் காரணம் யாது, யான் ஈட்டிவைத்த நிதியம் தருமத்தின் வழியே சென்றது - யான் தேடிவைத்த பொருள் முழுதும் சிவபுண்ணிய நெறியிலே செலவாயது; அடிகள் - தேவரீர், இனி சித்தம் மலர்ந்து என் இடும்பை வினை தீர - இனித் திருவுள்ளமலர்ந்து எனது துன்ப வினை நீங்குமாறு, அருள்கண் செய்க என - திருவருள் நோக்கம் செய்தருளுக என்று குறையிரக்க.

உயிர்கட்கெல்லாம் உயிராகிய நீயே அவ்வுயிர்களின் வருத்தத்தையும் அதனால் யானெய்தும் துன்பத்தையும் போக்கி யருளவேண்டுமென இரந்தான். என்னால் இயலுமளவு பொருளீட்டி அறம் புரிந்தேன்; பொருளும் சென்றது; இனி யான் செய்யலாவ தொன்றில்லை; என விரித்துரைத்துக் கொள்க. நீ எனவும் அடிகள் எனவும் ஒருமையும் பன்மையும் விரவி வந்தன. நிதியம், அம் சாரியை. (ரு)

கோளா டரவ மரைக்கசைத்த கூடற் பெருமான் குறையிரக்கும்
ஆளா மரசன் றவுறுசிறி தகங்கொண் டதனைத் திருச்செவியிற்
கேளார் போல வாளாதே யிருப்ப மனையிற் கிடைத்தமலன்
தாளா தரவு பெறநினைந்து தரையிற் கிடந்து துயில்கின்றான்.

(இ - ள்.) கோள் ஆடு அரவம் அரைக்கு அசைத்த கூடல் பெருமான் - கொலைத் தொழிலுடைய ஆடும் பாம்பினை அரையிற்கட்டியருளிய சோமசுந்தரக்

---

(பா - ம்.) *வைத்த பொருளும்.

கடவுள், குறை இரக்கும் ஆளாம் அரசன் - குறையிரவா நின்ற அடியனாகிய அரசனது, தவறு சிறிது அகம் கொண்டு - தவற்றினைச் சிறிது திருவுள்ளத்திற் கொண்டு, அதனைத் திருச் செவியில் கேளார்போல வாளாது இருப்ப - அவன் மொழியைத் தனது திருச்செவியிற் கேளாதவர்போலச் சும்மா இருப்ப, மனையில் கிடைத்து - மன்னன் தனது மாளிகையிற் சென்று, அமலன் தாள் ஆதரவுபெற நினைந்து - இறைவனது திருவடியை அன்புமிகச் சிந்தித்து, தரையில் கிடந்து துயில்கின்றான் - தரையிற் படுத்து உறங்குவானாயினன்.

கோள் என்பதற்கு வலிமை என்றும், ஆடு என்பதற்குக் கொலை என்றும் உரைத்தலுமாம். இரக்கும் அரசன் ஆளாம் அரசன் எனத் தனித்தனி இயையும். வாளா என்னும் சொல் வாளாது வாளாங்கு என்றிங்ஙனம் திரிந்தும் வழங்கும். கிடைத்து - அடுத்து. (௬)

அங்கண் வெள்ளி யம்பலத்து ளாடு மடிக ளவன்கனவிற்
சங்கக் குழையும் வெண்ணீறுஞ் சரிகோ வணமுந் தயங்கவுரன்
சிங்க நாதங் கிடந்தசையச் சித்த வடிவா யெழுந்தருளி
வெங்கண் யானைத் தென்னவர்கோன் முன்னின் றிதனை விளம்புவார்.

(இ - ள்.) அங்கண் - அப்பொழுது, வெள்ளி அம்பலத்துள் ஆடும் அடிகள் - வெள்ளியம்பலத்திலே திருநடம் புரியும் சோமசுந்தரக்கடவுள், அவன் கனவில் - அவனது கனவின்கண், சங்கக்குழையும் - சங்கினாலாய குண்டலமும், வெண்நீறும் - வெள்ளிய திருநீறும், சரிகோவணமும் - சரிந்த கோவணவுடையும், தயங்க - விளங்கவும், உரன் சிங்கநாதம் கிடந்து அசைய - மார்பின்கண் சிங்க நாதம் கிடந்து அசையவும், சித்த வடிவாய் எழுந்தருளி - சித்தமூர்த்தியாக எழுந்தருளி, வெங்கண் யானைத் தென்னவர்கோன் முன்நின்று இதனை விளம்புவார் - தறுகண்மையுடைய யானையையுடைய பாண்டி வேந்தனாகிய குலபூடணன் முன்னே நின்று இதனைக் கூறியருளுகின்றார்.

சிங்க நாதம் - கொம்பினாற் செய்யப்பட்ட ஒருவகைத் தூளைக்கருவி. தென்னவர்கோன், சுட்டு. அடிகள் அவன் கனவில் எழுந்தருளி முன்னின்று இதனை விளம்புவார் என்க. (எ)

ஏடா ரலங்கல் வரைமார்ப வெம்பா லென்று மன்புடைமை
வாடா விரத விழுச்செல்வ முடையாய் வைய மறங்கடிந்து
கோடா தளிக்குஞ் செங்கோன்மை யுடையா யுனக்கோர் குறையுளதுன்
வீடா வளஞ்சேர் நாட்டிந்நாள் வேள்விச் செல்வ மருகியதால்.

(இ - ள்.) ஏடு ஆர் அலங்கல் வரைமார்ப - இதழ்கள் நிறைந்த மலர் மாலையணிந்த மலை போலும் மார்பினை உடையானே, என்றும் எம்பால் அன்பு உடைமை - எப்பொழுதும் என்னிடத்து அன்புடைமையும், வாடா விரதம் - கெடாத விரதமும் ஆகிய, விழுச்செல்வம் உடையாய் - சிறந்த செல்வத்தினை உடையவனே, வையம்

மறம் கடிந்து கோடாது அளிக்கும் செங்கோன்மை உடையாய் - புலியை மறத் தினைக் கடிந்து கோடுதலின்றிப் புரக்கும் செங்கோலை உடையாய், உனக்கு ஒரு குறை உளது - நின்பால் ஒரு குறை உண்டு; உன் வீடாவளம் சேர் நாட்டு - அதனால் உனது அழியாத வளம் பொருந்திய நாட்டின்கண், இந்நாள் வேள்விச் செல்வம் அருகியது - இப்பொழுது வேள்வியாகிய செல்வம் குறைந்தது.

வரை-உத்தம விலக்கணமாகிய கீற்றுமாம். அன்புடைமை கெடாத விரதம் என்றுமாம். நீ இத்தன்மையை ஆயினும் நின்பால் ஓர் குறையுளது அதனால் அருகியது என விரித்துரைக்க. வாடா, வீடா என்னும் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள் ஒரு பொருள் குறித்தன. ஆல், அசை. (அ)

மறையே நமது பீடிகையா மறையே நமது பாதுகையாம்
மறையே நமது வாகனமா மறையே நமது நூபுரமாம்
மறையே நமது கோவணமா மறையே நமது விழியாகும்
மறையே நமது மொழியாகு மறையே நமது வடிவாகும்.

(இ - ள்.) மறையே நமது பீடிகை ஆம் - வேதமே நமது ஆதனமாகும்; மறையே நமது பாதுகை ஆம் - வேதமே நமது பாதுகையாகும்; மறையே நமது வாகனம் ஆம் - வேதமே நமது ஊர்தியாகும்; மறையே நமது நூபுரம் ஆம்-வேதமே நமது காற்சிலம்பாகும்; மறையே நமது கோவணம் ஆம் - வேதமே நமது கோவணமாகும்; மறையே நமது விழி ஆகும் - வேதமே நமது கண்ணாகும்; மறையே நமது மொழி ஆகும் - வேதமே நமது மொழியாகும்; மறையே நமது வடிவு ஆகும் - வேதமே நமது திருவுருவமாகும். (க)

வேதந் தானே நமதாணைச் சத்தி வடிவாய் விதிவிலக்காய்ப்
போதங் கொளுத்தி நிலைநிறுத்திப் போகங் கொடுத்துப் பல்லுயிர்க்கும்
பேதஞ் செய்யும் பிணியவிழ்த்தெம் பிரியா வீடு தருவதுதேன்
நாதஞ் செய்யுந் தார்வேந்தே நமது செங்கோ லதுவாகும்.

(இ - ள்.) வேதம் தானே நமது ஆணைச்சத்தி வடிவாய் - வேதமே நமது ஆணையாகிய சத்தி வடிவாகியும், விதிவிலக்காய் - விதி விலக்குகளாகியும், போதம் கொளுத்தி நிலை நிறுத்தி - அறிவு கொளுத்தி நன்னெறியில் நிறுத்தி, போகம் கொடுத்து - போகத்தை அளித்து, பேதம் செய்யும் பிணி அவிழ்த்து - திரிபினை விளைக்கும் ஆணவ மலக்கட்டினை அவிழ்த்து, பல் உயிர்க்கும் - ஆன்ம கோடிகளுக்கெல்லாம், எம்பிரியா வீடு தருவது - எமது பிரியாத வீடுபேற்றை அருளுவதாகும்; தேன் நாதம் செய்யும் தார் வேந்தே - வண்டுகள் ஒலிக்கும் மாலையையணிந்த மன்னனே, அது நமது செங்கோல் ஆகும் - அவ்வேதமே நமது செங்கோலுமாகும்.

போகம் - இம்மை மறுமையின்பங்கள். பேதஞ்செய்யும் - அறிவை வேறுபடுத்தும். எம்மைப் பிரியாதிருத்தலாகிய எமது வீடு என்க. (ம)

அந்த மறைக டமக்குறுதி யாவா ரந்நூல் வழிகலிநோய்
சிந்த மகத்தீ வளர்த்தெம்பாற் சிந்தை செலுத்து மந்தணரால்
இந்த மறையோர் வேள்விமழைக் கேது வாகு மிவர்தம்மை
மைந்த விகழ்ந்து கைவிட்டா யதனுன் மாரி மறுத்தன்றால்.

(இ - ள்.) அந்த மறைகள் தமக்கு உறுதியாவார் - அந்த வேதங்களுக்கு உறுதி யாவார், அந்நூல் வழி - அந்த வேதநூல் வழியே, கலிநோய் சிந்த மகத்தீ வளர்த்து - கலித்துன்பம் கெடுமாறு வேள்வித் தீயினை வளர்த்து, எம்பால் சிந்தை செலுத்தும் அந்தணர் - எம்மிடத்துச் சிந்தையைச் செலுத்துகின்ற அந்தணராவர்; இந்த மறையோர் வேள்வி மழைக்கு ஏதுவாகும் - இவ்வந்தணர் வேட்கும் வேள் வியே மழைக்குக் காரணமாகும்; மைந்த இவர் தம்மை இகழ்ந்து கை விட்டாய் - மைந்தனே நீ இவர்களை இகழ்ந்து கை விட்டனை, அதனால் மாரி மறுத்தன்று - அத னால் மழை பெய்யா தொழிந்தது.

உறுதியாவார் - பாது காவலாவார். சிந்தை செலுத்தல் - தியானித்தல். மறுத்தன்று, உடன்பாட்டு வினைமுற்று. ஆல் இரண்டும் அசை. (கக)

மும்மைப் புவனங் களுமுய்ய முத்தீ வேட்கு மிவர்தம்மை
நம்மைப் போலக் கண்டொழுகி நாளு நாளு வளம்பெருக்கிச்
செம்மைத் தருமக் கோலோச்சித் திகிரி யுருட்டி வாழ்தியென
உம்மைப் பயன்போ லெளிவந்தா ருலவாக் கிழியொன் றுதவுவார்.

(இ - ள்.) மும்மைப் புவனங்களும் உய்ய - மூன்று உலகங்களும் உய்திபெற, முத்தீ வேட்கும் இவர் தம்மை - மூன்று தீயையும் வளர்க்கும் இவ் வந்தணரை, நம் மைப்போல கண்டு ஒழுகி - நம்மைப்போலவே கருதி ஒழுகி, நாளும் நாளுவளம் பெருக்கி - எப்பொழுதும் பல வளங்களையும் பெருகச் செய்து, தருமம் செம்மை கோல் ஓச்சித் திகிரி உருட்டி - அறவடிவான செங்கோலைச் செலுத்தி ஆக்கினை சக் கரத்தை நடத்தி, வாழ்தி என - வாழ்வாயாக வென்று, உம்மைப் பயன்போல் எளி வந்தார் - முற் பிறப்பிற்செய்த நல்வினைப் பயன்போல் எளிவந்த அவ்விறைவர், உல வாக்கிழி ஒன்று உதவுவார் - உலவாக்கிழி ஒன்று தந்தருளுவார்.

மும்மை - மூன்று; மை பகுதிப்பொருள் விகுதி. முத்தீ - காருகபத்தியம், ஆகவனீயம், தென்றிசையங்கி என்பன. சிவனை வழிபடும் திருமறையோராகலின் அவரைச் சிவனைப்போற் காணவேண்டும் என்றவாறு. உம்மை - முற்பிறப்பு; தவத் திற்காயிற்று. (கஉ)

இந்தக் கிழியி லெத்துணைப்பொன் னெடுத்து வழங்குந் தொறுநாங்கள்
தந்த வளவிற் குறையாத தன்மைத் தாகு மிதுகொண்டு*
வந்த விலம்பா டகற்றென்று கொடுத்து வேந்தன் மனக்கவலை
சிந்தத் திருநீ றதுசாத்தி மறைந்தா ரையர் திருவுருவம்.

---

(பா - ம்.) *அதுகொண்டு.

(இ - ள்.) இந்தக் கிழியில் எத்துணைப்பொன் எடுத்து வழங்கும் தொறும் - இந்தப் பொற்கிழியில் எவ்வளவு பொன்னாயினும் எடுத்து வழங்குந் தோறும், நாங்கள் தந்த அளவில் குறையாத தன்மைத்து ஆகும் - அது நாம் கொடுத்த அளவினின்றும் குறையாத தன்மையுடையதாகும்; இது கொண்டு வந்த இலம்பாடு அகற்று என்று கொடுத்து - இதனைக்கொண்டு வந்த வறுமையைப் போக்குவாயாக என்று கொடுத்தருளி, வேந்தன் மனக்கவலை சிந்த - மன்னனது மனக்கவலை கெட, திருநீறு சாத்தி - திருநீறு தரிப்பித்து, ஐயர் திரு உருவம் மறைந்தார் - இறைவர் திருவுருக்கரந்தருளினர்.

எத்துணைப்பொன் எடுத்து வழங்கினும் வழங்குந்தோறும் என விரித்துரைக்க. நாம் என்பது நாங்கள் என நின்றது. திருநீறது, அது பகுதிப்பொருள் விகுதி. (கங)

கண்ட கனவு நனவாகத் தொழுதா னெழுந்து கௌரியர்கோன்
அண்டர் பெருமான் றிருவடிபோ லம்பொற் கிழியை முடித்தலைமேற்
கொண்டு மகிழ்ச்சி தலைசிறப்ப நின்றோர் முகூர்த்தங் கூத்தாடித்
தண்டா வமைச்சர் படைத்தலைவர் தமக்குங் காட்டி யறைவித்தான்.

(இ - ள்.) கௌரியர்கோன் கண்ட கனவு நனவு ஆக எழுந்து தொழுதான் - குலபூடண பாண்டியன் தான் கண்ட கனவு நனவாக எழுந்து வணங்கி, அண்டர் பெருமான் திருவடிபோல் - தேவ தேவனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவடியைப்போல, அம் பொன்கிழியை முடித் தலைமேல் கொண்டு - அழகிய பொன் முடிப்பினை முடியினை யணிந்த தலைமேற் கொண்டு, மகிழ்ச்சி தலைசிறப்ப நின்று - மகிழ்ச்சி மேலோங்க நின்று, ஓர் முகூர்த்தம் கூத்து ஆடி - ஒரு முகூர்த்த நேரம் வரை ஆனந்தக் கூத்தாடி, தண்டா அமைச்சர் படைத்தலைவர் தமக்கும் காட்டி அறிவித்தான் - நீங்காத மந்திரிகளுக்கும் படைத்தலைவர்களுக்கும் அதனைக் காண்பித்து நிகழ்ந்த செய்தியைத் தெரிவித்தான்.

விழித்தவுடன் கனவிற் கண்டவாறே தனது நெற்றியில் திருநீறு சாத்தப் பெற்றிருந்ததனாலும், உலவாக்கிழி கைவரப் பெற்றமையாலும் 'கண்டகனவு நனவாக' என்றார். சிவபெருமான் திருவடியைத் தனது முடிமேற் கொள்ளுமாறுபோல அவன் திருவருளாற் கிடைத்த கிழியையும் முடிமேற் கொண்டான் என்க. அமைச்சர் அரசனை நீங்காராகலின் 'தண்டா வமைச்சர்' என்றார்; "உழையிருந்தான்" என்று தெய்வப் புலவர் கூறுதலுங் காண்க. (கச)

செங்க ணரிமான் பிடர்சுமந்த தெய்வ மணிப்பூந் தவிசேற்றிச்
சங்க முழங்க மறைமுழங்கச் சாந்தந் திமிர்ந்து தாமதொழுகத்
தொங்க லணிந்து தசாங்கவிரைத் தூப நறுநெய்ச் சுடர்வளைத்துக்
கங்கை மிலைந்த கடவுளெனக் கருதிப் பூசை வினைமுடித்தான்.

(இ - ள்.) செங்கண் அரிமான் பிடர் சுமந்த - சிவந்த கண்களையுடைய சிங்கத்தின் பிடர் சுமந்த, தெய்வமணிப் பூந்தவிசு ஏற்றி - தெய்வத் தன்மை பொருந்

திய மணிகளிழைத்த அழகிய ஆதனத்தில் ஏற்றி, சங்கம் முழங்க - சங்கங்கள் (ஒரு பால்) முழங்கவும், மறை முழங்க - வேதம் (ஒருபால்) ஒலிக்கவும், சாந்தம் திமிர்ந்து-சந்தனக் குழம்பைப் பூசி, தாது ஒழுகத் தொங்கல் அணிந்து - மகரந்தஞ் சிந்த மாலையைச் சூட்டி, தசாங்கம் விரைத்தூபம் நறுநெய்ச் சுடர் வளைத்து - தசாங்கத்தாலாகிய நறும் புகையினையும் நறுமணங் கமழும் நெய் விளக்கினையும் வளைத்து, கங்கை மிலைந்த கடவுளெனக் கருதி - கங்கையைத் தரித்த சோமசுந்தரக் கடவுளைப்போல அவ் வுலவாக்கிழியைக் கருதி, பூசைவினை முடித்தான்-பூசையாகிய தொழிலை முற்றுவித்தான்.

தசாங்கம்-சந்தனம் அகில் முதலிய பத்துவகைப் பொருள் கலந்தது; தசாங்க உபசார மென்றுரைப் பாருமுளர்; தசாங்க வுபசாரமாவன: ஆவாகனம், தாபனம், சந்நிதானம், சந்நிரோதனம், அவ குண்டனம், தேனுமுத்திரை, பாத்தியம், ஆசமனீயம், அருக்கியம், புட்பதானம் என்பன. (௧௫)

அடுத்து வணங்கி வலஞ்செய்திட் டம்பொற் கிழியைப் பொதிநீக்கி
எடுத்து முத்தீ வினைஞர்க்கும் யாகங் களுக்கும் யாவர்க்கும்
மடுத்து நாளும் வரையாது வழங்க வழங்க வடியார்க்குங்
கொடுக்கக் குறையா வீட்டின்ப மாயிற் றையர் கொடுத்தகிழி.

(இ - ள்.) அடுத்து வணங்கி வலஞ் செய்திட்டு - நெருங்கி வணங்கி வலஞ் செய்து, அம்பொன் கிழியைப் பொதி நீக்கி எடுத்து - அழகிய பொன் முடிப்பைக் கட்டவிழ்த்து எடுத்து, முத்தீவினைஞர்க்கும் யாகங்களுக்கும் யாவர்க்கும் மடுத்து நாளும் வரையாது வழங்க வழங்க - முத்தீயினை ஓம்பும் அந்தணர்கட்கும் வேள்விகளுக்கும் அனைவருக்கும் முகந்து நாள்தோறும் வரைவின்றிக் கொடுக்கக் கொடுக்க, ஐயர்கொடுத்த கிழி - சோமசுந்தரக்கடவுள் கொடுத்த அப் பொற்கிழியானது, அடியார்க்குக் கொடுக்கக் குறையா வீட்டு இன்பம் ஆயிற்று - அடியார்கட்குக் கொடுத்தலாற் குறைவுபடாத முத்தி யின்பம் போலாயிற்று.

எடுத்து மடுத்து வழங்கவென்க. தீவினைஞர் - தீ வளர்த்தலாகிய தொழிலையுடையார். அடுக்கு பன்மைப் பொருட்டு. சிவபோகமாகிய வீட்டின்பமானது எல்லையற்ற பூரணமாகலின் எண்ணிறந்த அடியார்கள் நுகரினும் அது குறைவின்றியே யுள்ளதாகும். இன்பமாயிற்று - இன்பம்போல்வதாயிற்று. (௧௬)

ஆய பொதியில் விளைபொன்னு* லசும்பு செய்து விசும்பிழிந்த
கோயி லதனை யகமபுறமுங் குயின்று ஞானக் கொழுந்தனைய
தாயி லறுகாற் பீடிகைவான் றடவு கொடிய நெடியபெரு
வாயில் பிறவு மழகெறிப்ப வேய்ந்தான் மறையின் வரம்பறிந்தான்.

(இ - ள்.) ஆய பொதியில் விளை பொன்னால்-அந்த உலவாக்கிழியில் விளைந்த பொன்னினால், அசும்பு செய்து விசும்பு இழிந்த கோயில் அதனை - ஒளி வீசி

---

(பா - ம்.) *வளை பொன்னால்.

விண்ணினின்று மிழிந்த இந்திரவிமானத்தை, அகம் புறமும் குயின்று - உள்ளும் புறமும் இழைத்து, ஞானக்கொழுந்து அனைய தாய் இல் - ஞானக்கொழுந்துபோலும் அங்கயற்கண்ணம்மையின் திருக்கோயிலும், அறுகால் பீடிகை - அறுகாற் பீடமும், வான் தடவு கொடிய நெடிய பெருவாயில் - விண்ணினைத் தடவுகின்ற கொடியை யுடைய நீண்ட பெரிய கோபுரவாயிலும், பிறவும் - மற்றுள்ளனவும், அழகு எறிப்ப - அழகு வீச, மறையின் வரம்பு அறிந்தான் - வேதத்தின் எல்லையை அறிந்தவனாகிய குலபூடணபாண்டியன், வேய்ந்தான் - தகடு வேய்ந்தான்.

ஆய - ஆகிய; அத்தன்மையுடைய. அசும்பு - ஒளியின் கசிவு. கொடிய, பொருட் பெயரடியாக வந்த குறிப்புப் பெயரெச்சம். வாயில், இலக்கணப்போலி. ()

முந்திக் குறையா நிதிக்கடலை முகந்து முகந்து நாடோறுஞ்
சிந்திக் குலபூ டணக்கொண்ட றெய்வ தருமப் பயிர்வளர்ப்பப்
பந்தித் திரைமுந் நீர்மேகம் பருகிச் சொரியப் பல்வளனும்
நந்திக் கன்னி நாடளகை நகர்போற் செல்வந் தழைத்தன்றே.

(இ - ள்.) குலபூடணக் கொண்டல் - குலபூடண வழுதி என்னும் முகிலானது, முந்தி - முற்பட்டு, குறையா நிதிக்கடலை முகந்து முகந்து - குறையாத நிதியாகிய கடலினை மொண்டு மொண்டு, நாள்தோறும் சிந்தி தெய்வ தருமப்பயிர் வளர்ப்ப - நாள்தோறும் பொழிந்து தெய்வத்தன்மை பொருந்திய தருமமாகிய பயிரை வளர்க்க, மேகம் - முகில்கள், பந்தித்திரை முந்நீர் பருகிச் சொரிய - வரிசையாய் வரும் அலைகளையுடைய கடல்நீரைக் குடித்து மழையினைப் பொழிய, பல்வளனும் நந்தி - பல வளங்களும் மிகுந்து, கன்னிநாடு - பாண்டி நாடானது, அளகை நகர்போல் செல்வம் தழைத்தன்று - அளகாபுரியைப்போலச் செல்வந் தழைத்தது.

குலபூடணன் அளவின்றி அறத்தினை வளர்க்கவே பின்பு மேகமும் மழை பொழிந்தது; நாடும் தழைத்தது என்க. அடுக்கு மிகுதிப் பொருட்டு. தெய்வதருமம் - சிவபுண்ணியம் என்றுமாம். அளகைநகர் நிதியின் கிழவனாகிய குபேரனுடையது ஆகலின் குறையாத செல்வமுடையதாம். தழைத்தன்று - தழைத்தது; அன் சாரியை. நாடு செல்வம் தழைத்தது என இடத்து நிகழ் பொருளின்றொழில் இடத்தின்மேல் நின்றது. முன்னிரண்டடியும் உருவகம். (கஅ)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

வையா கரணர்க ணையா யிகர்மறை வல்லோர் மறைமுடி சொல்லாய்வோர்
மெய்யா மிருதிகள் பொய்யா விரதிகள் வேள்வித் தழல்களை வாழ்விப்போர்
பையா டரவணி யையா னனனுரை பகர்வோ ருலகிய லகல்வோர்கள்
எய்யா துறைதலி னையா தளகைய தென்னப் பொலிவது தென்னாடு.

(இ - ள்.) வையாகரணர்கள் - வியாகரண பண்டிதர்களும், நையாயிகர் - நியாயநூற் புலவர்களும், மறை வல்லோர் - வேதமுணர்ந்தவர்களும், மறைமுடி சொல் ஆய்வோர் - உபநிடதம் கூறுவதனை ஆராய்வோரும், மெய்யாம் மிருதிகள் -

உண்மையாகிய மிருதிநூல் கற்றவர்களும், பொய்யா விரதிகள்-பொய்யாத நோன் பினர்களும், வேள்வித்தழல்களை வாழ்விப்போர் - வேள்வித்தீக்களை ஓம்புவோர் களும், பை ஆடு அரவு அணி ஐ ஆனனன் உரை பகர்வோர் - படம் விரித்து ஆடு கின்ற பாம்பினை அணிந்த ஐந்து முகங்களை உடையனாகிய சிவபெருமானது உரை யாகிய ஆகமங்களைப் போதிப்பவர்களும், உலகு இயல் அகல்வோர்கள் - உலகியலி னின்றும் நீங்கியவர்களும், எய்யாது உறைதலின் - வறுமையால் வருந்தாது வசிப் பதனால், தென்னாடு நையாத அளகையது என்னப் பொலிவது - பாண்டிநாடானது வறுமையால் வருந்தாத அளகையைப்போல விளங்கா நின்றது.

வையாகரணர், நையாயிகர் என்பன வடமொழித் தத்திதாந்தங்கள். வியா கரணம் - இலக்கணம். நியாயம் - ஆறு தரிசனங்களில் ஒன்று; அக்கபாதர் என் னும் முனிவரால் உரைக்கப்பட்டது. சொல், முதனிலைத் தொழிற்பெயர். மறை முடி சொல் என்பதற்கு வேதத்தின் முடிந்த பொருளையுணர்த்தும் மாவாக்கியம் என்றுரைத்தலுமாம். மிருதிகள் - மிருதியைக் கற்றவர்கள்; வினைமுதற்பொரு ளுணர்த்தும் விகுதி புணர்ந்து கெட்டது. பொய்யா - பயன் பொய்த்தலில்லாத. இன்னோரெல்லாம் வருந்தாது உறையச் செல்வம் மிக்கிருத்தலால் அளகை யென் னப் பொலிவ தென்க. நையாத என்னும் பெயரெச்சத்து அகரந் தொக்கது. அளகையது, அது பகுதிப்பொருள் விகுதி. (கக)

ஆகச் செய்யுள் - கஎஉரு.

முப்பத்திரண்டாவது

# வளையல்விற்றபடலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

வேதந் தனது வடிவென்று விண்ணின் றிழிந்த விமானமறைக்
கீதன் செழியன் றனக்குலவாக் கிழிதந் தளித்த வழியிதுவப்
போதங் கடந்த பொருள்வணிகப் புத்தேண் மாட மணிமறுகு
பாதந் தடவ நடந்துவளை பகர்ந்த பரிசு பகர்கிற்பாம்.

(இ - ள்.) வேதம் தனது வடிவு என்று - மறையே தனது திருவுருவம் என்று கூறியருளி, விண் நின்று இழிந்த விமானம் மறைக்கீதன் - வானினின்றும் இறங்கிய விமானத்தின்கண் வீற்றிருக்கும் வேதகீதனுகிய சோமசுந்தரக்கடவுள், செழியன் தனக்கு உலவாக்கிழி தந்தளித்த வழி இது - பாண்டியனுக்கு உலவாக் கிழி தந்தருளிய திருவிளையாடல் இதுவாகும்; அப் போதம் கடந்த பொருள் - (இனி) சுட்டறிவினைக் கடந்த அவ்விறைவன், புத்தேள் வணிகன் - தெய்வத்தன் மையையுடைய வணிகனுய், மாடம் மணி மறுகு பாதம் தடவ நடந்து - மாடங்கள் நிறைந்த அழகிய வீதியிலே திருவடிகள் தோய நடந்தருளி, வளை பகர்ந்த பரிசு பகர்கிற்பாம் - வளையல் விற்ற திருவிளையாடலைக் கூறுவாம்.

'வேதந் தனது வடிவென்று' என்றது மேற்படலத்தில் 'மறையே நமது வடிவாகும்' என்றதைச் சுட்டிற்று; வேதமே தனது வடிவமென்று இழிந்த என விமானத்திற்கு அடையாக்கி யுரைத்தலுமாம். வணிகரது தெய்வத்தன்மையுடைய மறுகில் என்றுரைத்தலும் பொருந்தும். போதங் கடந்த பொருள் பாதந் தடவ நடந்து என அருமையும் எளிமையும் தோன்றக் கூறினர். (க)

இறைவன் குலபூ டணன்றிகிரி யிவ்வா றுருட்டு நாண்முன்னட்
சிறைவண் டறையுந் தாருவன தெய்வ முனிவர் பன்னியர்தந்
நிறையன் றளந்து* காட்டுகென நெடியோன் மகனைப் பொடியாக்கும்
அறவன் றூனோர் காபாலி யாகிப் பலிக்கு வருகின்றான்.

(இ - ள்.) இறைவன் குலபூடணன் திகிரி இவ்வாறு உருட்டுநாள் - மன்னனாகிய குலபூடணன் தனது ஆணையாகிய திகிரியை இங்ஙனம் செலுத்தும்பொழுது, முன்னாள் - முன்னொரு காலத்தில், சிறைவண்டு அறையும் தாருவன தெய்வமுனிவர் பன்னியர்தம் - சிறைகளையுடைய வண்டுகள் ஒலிக்கும் தாருகவனத்துத் தெய்

(பா - ம்.) *நிறையன்றளந்து.

வத்தன்மை பொருந்திய முனிபத்தினிகளின், நிறை - கற்பினை, அளந்து காட்டுகு என - அளந்து காட்டுவேனென்று, நெடியோன் மகனைப் பொடி ஆக்கும் அறவன் - திருமாலின் புதல்வனாகிய மதவேளைப் பொடியாக்கிய அறவடிவினனாகிய இறைவன், அன்று தான் ஓர் காபாலி ஆகிப் பலிக்கு வருகின்றான் - அப்பொழுது தான் ஒரு தலையோட்டை ஏந்தினவனாய்ப் பலிக்கு வருவானாயினான்.

இவ்வாறுருட்டுநாள் என்றது பின் சென்று இயையும். தாருகவனம் என்பது விகாரமாயிற்று. பன்னி - பத்தினி. காட்டுகு - காட்டுவேன்; கு தன்மையொருமை முற்றுவிகுதி. மறவன் எனப் பிரித்து, வீரத்தையுடையான் என்றுரைத்தலுமாம். காபாலி - கபாலத்தையுடையவன்; தத்திதாந்தம். தம், சாரியை. தான், அசை. (உ)

வேத மசைக்குங் கோவணமு மெய்யி னீறு முள்ளாளக்
கீத மிசைக்குங் கனிவாயு முள்ளே நகையுங் கிண்கிணிசூழ்
பாத மலரும் பாதுகையும் பலிகொள் கலனுங் கொண்டிரதி
மாதர் கணவன்* றவவேட மெடுத்தா லொத்து வருமெல்லே.

(இ - ள்.) அசைக்கும் வேத கோவணமும் - கட்டிய வேதமாகிய கோவணமும், மெய்யில் நீறும் - திருமேனியிலே திருநீறும், உள்ளாளக் கீதம் இசைக்கும் கனிவாயும் - உள்ளாளமாகிய கீதத்தினைப்பாடும் கொவ்வைக் கனிபோன்ற வாயும், உள்ளே நகையும் - உள்ளே அரும்பிய புன்முறுவலும், கிண்கிணிசூழ் பாதமலரும் - கிண்கிணி சூழ்ந்த திருவடித் தாமரையும், பாதுகையும் - திருவடியிற் றரித்த பாதுகையும், பலிகொள் கலனும் கொண்டு - பலியேற்கும் கலனுமாகிய இவற்றைக் கொண்டு, இரதி மாதர் கணவன் தவவேடம் எடுத்தால் ஒத்து வரும் எல்லே - அழகிய இரதியின் நாயகனாகிய மதவேள் தவவேடம் எடுத்து வந்தாற் போன்று வரும் பொழுது.

உள்ளாளம் - காற்றினை உள்வாங்கிப் பாடும் பாட்டு; இது பதினொருவகைப் படும்;

"உள்ளாளம் விந்துவட னாத மொலியுருட்டுத்
தள்ளாத தூக்கெடுத்த றான்படுத்தல்—மெள்ளக்
கருதி நலிதல்கம் பித்தல் குடிலம்
ஒருபதின்மே லொன்றென் றுரை"

"கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா—எண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர்
உள்ளாளப் பாட லுணர்"

என்னும் இசை மரபுச் செய்யுட்களால் உள்ளாளத்தின் வகையும், இயல்பும் உணர்க. கொண்டு - உடையவனாய். காமக் குறிப்புத் தோற்றும் பேரழகும் தவவேடமும்

---

(பா - ம்.) *மாது கணவன்.

உடையனாய் வருதலின் 'இரதி மாதர் கணவன் றவவேட மெடுத்தாலொத்து' என்றார். (கூ)

விள்ளுங் கமலச் சேவடிசூழ் சிலம்பி னொலியு மிடறதிரத்
துள்ளுங் கீத வொலியுங்கைத் துடியி னொலியுஞ் செவித்துளைகீண்
டுள்ளம் பிளந்து நிறைகளைந்தீர்த் தொல்லை வருமுன் வல்லியர்கள்
பள்ளங் கண்டு வருபுனல்போற் பலிகொண் டில்லின் புறம்போந்தார்.

(இ - ள்.) விள்ளும் கமலச் சேவடிசூழ் சிலம்பின் ஒலியும் - மலர்ந்த தாமரை மலர்போன்ற சிவந்த திருவடியிற் சூழ்ந்த சிலம்பின் ஒலியும், மிடறு அதிரத் துள்ளும் கீதவொலியும் - திருமிடறானது துடிக்கத் துள்ளுகின்ற கீத ஒலியும், கைத்துடியின் ஒலியும்-திருக் கரத்திலேந்திய உடுக்கையின் ஒலியும், செவித்துளை கீண்டு-செவியின் துளையைக் கிழித்து, உள்ளம்பிளந்து - மனத்தை ஊடறுத்து, நிறை களைந்து ஈர்த்து ஒல்லை வருமுன் - நிறையினைப் போக்கி இழுத்து விரைய வருதற்கு முன்னரே, வல்லியர்கள்-அம்முனி பன்னியர்கள், பள்ளம் கண்டு வருபுனல்போல் - பள்ளத்தைக் கண்டு வருகின்ற நீரைப்போல, பலிகொண்டு இல்லின் புறம் போந்தார் - பலியினைக் கொண்டு மனையின் புறத்தே வந்தார்கள்.

செவித் துளையில் மண்டிச் சென்றதனை 'செவித்துளை கீண்டு' என்றும், உள்ளத்தை வெளி செய்ததனை 'உள்ளம் பிளந்து' என்றும் கூறினர், இவ் வொலிகள் செவி வழியே உள்ளம் புகுமுன் வல்லியர்கள் நிறையினை யிழந்து விரைந்து பலி கொண்டு புறம் போந்தார் என்பது கருத்தாகக் கொள்க. தடுமாற்ற முற்று விரைந்து வருதலின் 'பள்ளங் கண்டு வருபுனல் போல்' என்றார். (ௐ)

[வேறு]

ஐயங்கொண் டணைவா ரையர் பரிகலத் தைய மன்றிக்
கையம்பொன் வளையும் பெய்வார் கருத்துநா ணன்றிக் காசு
செய்யும்பொன் மருங்கு னாணு மிழப்பர்வேள் சிலையம் பன்றிக்
கொய்யுந்தண் மலர்க்க ணம்புங் கொங்கையிற் சொரியச் சோர்வார்.

(இ - ள்.) ஐயம் கொண்டு அணைவார் - அங்ஙனம் பலிகொண்டு வருபவராகிய அம்முனி பன்னியர், ஐயர் பரிகலத்து ஐயம் அன்றி - இறைவனது பலி ஏற்கும் கலத்தின்கண் அப்பலியை யன்றி, கை அம்பொன் வளையும் பெய்வார் - கையிலணிந்த அழகிய பொன்னாலாகிய வளையலையும் சொரிவார்கள்; கருத்து நாண் அன்றி - மனத்தின்கண் உள்ள நாணினையன்றி, காசு செய்யும் பொன் மருங்குல் நாணும் இழப்பர் - மணிகள் அழுத்திய பொன்னாலாகிய இடை நாணையு மிழப்பார்கள்; வேள்சிலை அம்பு அன்றி - மன்மதனது வில்லிலிருந்து வரும் கணைகளன்றி, கொய்யும் தண் மலர்க்கண் அம்பும் - கொய்யப் பெறுகின்ற தண்ணிய மலர்போன்ற கண்களினின்றும் வரும் அம்பும், கொங்கையில் சொரியச் சோர்வார் - தமது கொங்கைகளிற் சிந்த நிலைதளர்வார்கள்.

கருத்து நாண் - மகளிர் நாற்குணத்து ளொன்றாகிய நாண். மருங்குல்நாண் - மேகலை. சிலையம்பு - கருப்பு வில்லி லேறிட்ட மலர்க்கணை. கண்ணம்பு - கண்ணீர். வேட்கை நோயால் உடல் மெலிந்தமையால் வளைகளும் மேகலையும் கழன்றன. விரகவேதனை பொறுக்கலாற்றாது கண்ணீர் சொரிந்து சோர்ந்தனர். இதனால் மெலிதலும் நாணுவரை யிழத்தலும், மயக்கமும் கூறினர். (ரு)

மடமயி லனையா ரெங்கள் வளையினைத் தருதி ரென்றார்
கடல்விட மயின்றா னுங்கள் கந்தரத் துள்ள தென்றான்
தடமதிக் கொம்ப னாரெங் கலையினைத் தருதி ரென்றார்
முடமதி மிலைந்தா னுங்கண் முகமதி யிடத்த தென்றான்.

(இ - ள்.) மடமயில் அனையார் - இளமையாகிய மயிலையொத்த அம்மகளிர், எங்கள் வளையினைத் தருதிர் என்றார் - எங்கள் வளையைத் தாரும் என்று கேட்டனர்; கடல் விடம் அயின்றான் - கடலிற்றோன்றிய நஞ்சினையுண்ட நாயகன், உங்கள் கந்தரத்து உள்ளது என்றான் - (அது) உங்கள் கழுத்தில் உள்ளது என்று விடையிறுத்தான்; தடம் மதிக்கொம்பு அன்னார் - நிறைந்த மதியினையுடைய பூங்கொம்பு போன்ற அம்மாதரார், எம் கலையினைத் தருதிர் என்றார் - எமது கலையைக் கொடுத்து விடுமென்றுகேட்டனர்; முடம்மதி மிலைந்தான் - வளைவாகிய பிறையை யணிந்த பெருமான், நுங்கள் முகமதி இடத்தது என்றான் - (அது) உங்கள் முகமாகிய சந்திரனிடத்துள்ளது என்று விடையிறுத்தான்.

வளை என்பது வளையலுக்கும் சங்கிற்கும், கலை என்பது மேகலைக்கும் சந்திர கலைக்கும் சிலேடை. மகளிர் கழுத்துச் சங்குபோல்வதாகலின் 'உங்கள் கந்தரத் துள்ளது' என்றானென்க. தடமதிக் கொம்பனார் என்றது இல்பொருளுவமை. கலை முதற்குறை; ஆடை யென்றுமாம். நீர் வவ்விய எம் வளையையும் கலையையும் தருவீராக என்று மகளிர் தம் காமவேட்கை புலப்படக் கூறாநிற்க, அவ்வேட்கை சிறிதும் பற்றப் பெறாதவனாகிய இறைவன் அவர் கூறியவற்றுக்கு வேறு பொருள் கற்பித்துக் கொண்டு, வளையும் கலையும் நும்மிடத்தவேயாகவும் நீர் எம்மை வினவுவ தென்னையென நகையாடினன். காமக் குறிப்பிலனாய இறைவன் அக்குறிப்புடையான் போன்று நடித்தனனென்க. (சு)

இடையறிந் தெம்மைச் சேர்மி னென்றன ரிளைய ரெங்கோன்
கடலமு தனையீர் நுங்கட் கிடையினிக் காணா தென்றான்
மடநலா ரஃதேற் பண்டை வண்ணமீந் தில்லிற் செல்ல
விடையளித் தருண்மி னென்றார் வேலைபுக் குறங்கு மென்றான்.

(இ - ள்.) இளையர் - அம்மங்கையர், இடை அறிந்து எம்மைச் சேர்மின் என்றனர் - செவ்வி யறிந்து எம்மைச் சேரும் என்று வேண்டினர்; எம் கோன் - எமது பெருமான், கடல் அமுது அனையீர் - கடலிற் றோன்றிய அமுதத்தை ஒத்த பெண்களே, நுங்கட்கு இனி இடை காணாது என்றான் - உங்களுக்கு இனி இடை காணப்பெறாது என்று கூறினன்; மடநலார் - மடப்பத்தையுடைய அம் மகளிர்,

அஃதேல் பண்டை வண்ணம் ஈந்து - அங்ஙனமாயின் எமது முன்னை நிறத்தைக் கொடுத்து, இல்லில் செல்ல விடை அளித்தருண்மின் என்றார் - எங்கள் வீட்டிற் செல்ல விடைகொடுத்தருளும் என்று வேண்டினர்; வேலை புக்கு உறங்கும் என்றான்- (அவன் அது) கடலிற் சென்று தூங்கும் என்று கூறினன்.

இடை என்பது சமயத்திற்கும் மருங்குலுக்கும், விடை என்பது உத்தரவிற்கும் இடபத்திற்கும் சிலேடை. இடை சமயம் என்னும் பொருளாதலை "உடையோர் போல இடையின்று குறுகி" என்பதனாலறிக. காணாது - காணப்படாது. மடம் - மகளிர் நாற்குணத்துளொன்று. நல்லார் என்பது தொக்கது. இப்பொழுது நிறம் பசந்து வேறுபட்டிருத்தலின் 'பண்டை வண்ண மீந்து' என்றார். கூடினாலன்றிப் பண்டை வண்ணம் எய்துமாறின்மையின், அதனையே வேறோராற்றாற் கூறினாராயிற்று. வண்ணம் - தன்மை யென்றுமாம். இறைவர்க்கு ஊர்தியாகிய விடை திருமால் ஆகலின் 'வேலைபுக் குறங்கும்' என்றனன். கடலமுதனையீர் என்றது நயப்புத் தோன்றக் கூறியது. (எ)

நங்கையர் கபாலிக் கென்று நடுவிலை போலு மென்றார்
அங்கண னடுவி லாமை நும்மனோர்க் கடுத்த தென்றான்
மங்கைய ரடிக ணெஞ்சம் வலியகற் போலு மென்றார்
கொங்கலர் கொன்றை யானுங் கொங்கையே வன்கலென்றான்.

(இ - ள்.) நங்கையர் - அம்மகளிர், கபாலிக்கு என்றும் நடு இலைபோலும் என்றார் - இக்காபாலிக்கு எப்பொழுதும் நடுவில்லைபோலும் என்றனர்; அங்கணன் - இறைவன், நடு இலாமை நும் அன்னோர்க்கு அடுத்தது என்றான் - நடுவில்லாமை நும்மைப்போல்வார்க்கே பொருந்தியது என்றனன்; மங்கையர்-அப்பெண்கள், அடிகள் நெஞ்சம் வலிய கல்போலும் என்றார் - அடிகளின் நெஞ்சமானது வலிய கல்லை யொக்கும் என்று கூறினர்; கொங்கு அலர் கொன்றையான்-மகரந்தத்தோடு மலர்ந்த கொன்றை மாலையை அணிந்த சிவபெருமான், நும் கொங்கையே வன்கல் என்றான்- நுங்கள் கொங்கையே வலிய கல்லாகும் என்று கூறினன்.

நடு என்பது நடுவு நிலைமைக்கும் இடைக்கும் சிலேடை. நடுவுடையராயின் பிறர் துன்பத்தைத் தம்மையுற்ற துன்பம்போற் கருதி நீக்கலுறுவர்; இவன் அங்ஙனஞ் செய்யாமையின் நடுவிலனுவன் என்று மகளிர் கூற, நடு என்பதற்கு மருங்குல் என்று பொருள் கொண்டு நடுவிலாமை நும்மனோர்க்கே அடுத்ததென்று இறைவன் கூறினன். இடை இல்லை யென்னுமாறு நுண்ணிதாதல் குறித்து 'நடுவிலாமை' என்றார். 'கற்போலும்' என்றதில் போலும் ஒப்பில் போலியுமாம். வன்கல் - மலை. கொங்கைக்கு மலை உவமமாகலின் 'கொங்கையே வன்கல்' என்றனனென்க. (அ)

காதுவே லன்ன கண்ணார் கங்கைநீர் சுமந்த தேதுக்
கோதுமி னென்றார் நும்பா லுண்பலி யேற்க வென்றான்
ஏதுபோ லிருந்த தைய னிசைத்தசெப் பென்றா ரீசன்
கோதறு வமுதன் னீர்நுங் கொங்கைபோ லிருந்த தென்றான்.

(இ - ள்.) காதுவேல் அன்ன கண்ணார் - கொலைபுரியும் வேலினை ஒத்த கண்களையுடைய அம்மகளிர், கங்கை நீர் சுமந்தது எதுக்கு ஓதுமின் என்றார் - நீர் கங்கை தாங்கியது எதன் பொருட்டு என்று வினவினர்; நும்பால் உண் பலி ஏற்க என்றான் - (இறைவன்) அது நும்மிடத்து உண்ணும் பலியை ஏற்பதற்கு என்று விடை யிறுத்தான்; ஐயன் இசைத்த செப்பு எதுபோல் இருந்தது என்றார் - இவ்வையன் உரைத்த செப்பு யாதுபோ லிருந்தது என்று கூறினர்; ஈசன் - இறைவன், கோது உறா அமுது அன்னீர்-குற்றமில்லாத அமுதம் போன்றவர்களே, நும் கொங்கைபோல் இருந்தது என்றான் - (அது) நுமது கொங்கைபோல இருந்த தென்று கூறினன்.

கங்கை, செப்பு என்பன சிலேடைப் பொருளன. கங்கை நீர் சுமந்தது – நீர் கங்கையாற்றைத் தரித்தது, நீர் கையிலே பிரம கபாலத்தை ஏந்தியது; கம் – தலை. செப்பு-விடை, கிண்ணம். நீர் கங்கை யாற்றினைத் தரித்திருந்தும் தண்ணளியுடைய ரல்லர் என்பது தோன்ற 'கங்கை நீர் சுமந்த தேதுக்கு' என மங்கையர் கூறினர். தம் வினாவிற்கு ஏற்ற விடையன் றென்பார் 'எதுபோலிருந்ததைய னிசைத்த செப்பு' என்றனர். (க)

கறுத்ததை யெவன் கொலைய கந்தர மென்றார் வேளை
வெறுத்தவன் மாரி பெய்தற் கென்றனன் விழியால் வேலை
ஒறுத்தவர் யாவ தென்றீ ருத்தர மென்றார் கூற்றைச்
செறுத்தவன் றென்பா னின்று நோக்கினுற் றெரிவ தென்றான்.

(இ - ள்.) ஐய - ஐயனே, கந்தரம் கறுத்தது எவன் கொல் என்றார் - கந்தரம் கறுத்தது யாது காரணம் என்று மங்கையர் வினவினர்; வேளை வெறுத்தவன் - மன்மதனை யெரித்த பெருமான், மாரி பெய்தற்கு என்றனன் - மழை பெய்தற்கு என்று விடை யிறுத்தான்; விழியால் வேலை ஒறுத்தவர்-கண்களால் வேற்படையை வென்ற அம்மகளிர், உத்தரம் யாவது என்றீர் என்றார் - உத்தரம் என்னவென்று கூறினீர் என்றனர்; கூற்றைச் செறுத்தவன் - காலனை உதைத்த இறைவன், தென்பால் நின்று நோக்கினுல் தெரிவது என்றான் - (அது) தெற்கே நின்று எதிர்முகமாக நோக்கின் தெரியப் பெறுவது என்று கூறினன்.

கந்தரம் மிடற்றுக்கும் மேகத்திற்கும், உத்தரம் விடைக்கும் வடக்கிற்கும் சிலேடை. இவற்றை முறையே மிடறு விடை என்னும் பொருள்களில் வைத்து மக ளிர் வினவ, இறைவன் இவற்றுக்கு மேகம் வடக்கு எனப் பொருள் கொண்டு விடை யிறுத்தனன். கறுத்ததை, ஐ சாரியை. கொல், அசை. (ω)

செக்காஞ் சடையான் கண்ணிற் றம்முருத் தெரிய நோக்கி
இக்கொடி யார்போற் கண்ணு ளெம்மையு மிருத்தி ரென்றார்
நக்கனுந் தனையன் ஞர்கண் ணிடைக்கண்டு நகைத்து நம்மின்
மிக்கவர் நுங்க ணுள்ளார் விழித்தவர்க் காண்மி னென்றான்.

(இ - ள்.) செக்கர் அம் சடையான் கண்ணில் - (அம்மகளிர்) சிவந்த அழகிய சடையையுடைய இறைவன் கண்களில், தம் உருத்தெரிய நோக்கி - தங்கள் வடிவம் புலப்பட நோக்கி, இக்கொடியார் போல் - இந்தக் கொடிபோன்ற மகளிரைப்போல, கண்ணுள் எம்மையும் இருத்திர் என்றார் - நும் விழியுள் எம்மையும் வைத்துக்கொள்ளும் என்று வேண்டினர்; நக்கனும் - இறைவனும், தனை அன்னார் கண் இடைக் கண்டு - தன்னை அப்பெண்களின் விழியுட்கண்டு, நகைத்து - சிரித்து, நம்மின் மிக்கவர் நும்கண் உள்ளார் - நம்மைப்போல் அழகில் மிக்கார் நுமது கண்களில் உள்ளார், விழித்து அவர்க் காண்மின் என்றான் - செவ்வனே விழித்து அவரைப் பாருங்கள் என்று கூறினன்.

தமக்குமாறாக இருக்கின்றனர் என்னுங் கருத்தால் கொடுமையுடையார் என்னும் பொருள் தோன்றவும் 'கொடியார்' என்றார். இருத்திர் - இருத்துவீர். நும் கண்ணுளே பிறரை வைத்துக்கொண்டிருக்கும் நீவிர் எம்மை இங்ஙனம் வேண்டுவதென்னென்று இறைவன் நகைத்தனன். இவற்றால் ஒருவரை யொருவர் பருகுவார் போல் நோக்கினமை புலனும். இறைவன் காம மயக்கமின்றியே விளையாடுகின்றானாகலின் நகைத்தனன் என்க. நம்மைக்காட்டினும் மிக்கவர் என்று பொருள்கொண்டு, நீர் பிறரைக் கண்ணுள் வைத்திருப்பது நம்மினும் மிக்காரென்னுங் கருத்தாலாம் என்பது தோன்றக் கூறினனென்னலுமாம். கண்ணுள் இருப்பவரை விழித்துக் காண்மின் என்றது நகைச்சுவையுடைத்து. "கண்ணுளார் நுங்காதலர்" என்னும் சிந்தாமணிச் செய்யுள் இங்கு நினைக்கற்பாலது. (கக)

அஞ்சலிப் போது பெய்வார் சரணமென் றடியில் வீழ்வார்
தஞ்செனத் தளிர்க்கை நீட்டித் தழுவிய கிடைக்குந் தோறும்
எஞ்சுவா னெஞ்சா தேத்தி யெதிர்மறை யெட்டுந் தோறும்
வஞ்சனு யகல்வான் மையல் வஞ்சியர்க் கணிய னாமோ.

(இ - ள்.) அஞ்சலிப் போது பெய்வார் - (அம் மகளிர்) அஞ்சலியாகிய மலரைச் சொரிவாராய், சரணம் என்று அடியில் வீழ்வார் - அடைக்கலமென்று திருவடியில் வீழ்ந்து, தஞ்சம் எனத் தளிர்க்கை நீட்டி - பின்பு நீரே துணை என்று தளிர் போன்ற கைகளை நீட்டி, தழுவிய கிடைக்குந் தோறும் - தழுவநெருங்குந்தோறும், எஞ்சுவான் - அப்பாற் படுவானாயினன், எஞ்சாது ஏத்தி எதிர்மறை எட்டுந் தோறும் வஞ்சனாய் அகல்வான் - சலிக்காது துதித்து எதிர்கின்ற வேதங்கள் எட்டுந்தோறும் வஞ்சனாய் அகப்படாது நீங்கும் பெருமான், மையல் வஞ்சியர்க்கு அணியன் ஆமோ - காம மயக்கத்தையுடைய பெண்களுக்கு அண்மையனாவானோ.

மலர் போன்ற கைகளைச் சென்னியிற் கூப்பி வணங்கினவர்கள் அங்ஙனம் கூப்பியவாறே அடியில் வீழ்வதனை அஞ்சலிப்போது பெய்வார் வீழ்வார் என்றனர். குவித்த கையிலுள்ள மலரைச் சொரிந்தென்றுமாம். பெய்வார், வீழ்வார் என்பன முற்றெச்சங்கள். தஞ்சம் - பற்றுக்கோடு; ஈறு தொக்கது. தழுவிய, செய்யிய வென்னும் வினையெச்சம். எஞ்சுவான் - கடப்பான் என்னும் பொருள் குறித்தது. 'இரக்குவாரேன் எஞ்சிக்கூறேன்" எனப் பதிற்றுப்பத்திலும் இப்பொருளில் வந்துள்

ளமை காண்க. நேர் நின்று துதித்து எட்டுந்தோறும் அகப்படாதொழிதலின் 'வஞ்சனுயகல்வான்' என்ருர். ஓகாரம் எதிர் மறை. இது வேற்றுப் பொருள் வைப் பின்பாற்படும். (௬௨)

அடுத்தெமைத் தழாதி ரேனீ ரவிழ்த்தபூங் கலையை மீள
உடுத்துமி னும்பால் யாங்கண் மையனோ யுழப்ப நோக்கிக்
கடுத்தெமர் முனியா முன்னங் கழற்றிய வளையுங் கையில்
எடுத்திடு மென்ருர் நாளை யிடுதுமென் றேகினுனே.

(இ - ள்.) நீர் எமை அடுத்துத் தழாதிரேல்-நீர் எம்மை நெருங்கித் தழுவாது போவீராயின், அவிழ்த்த பூங்கலையை மீள உடுத்துமின் - அவிழ்த்த அழகிய கலையை யேனும் மீள உடுத்தும்; நும்பால் யாங்கள் மையல் நோய் உழப்ப - நும் மிடத்து யாங்கள் கொண்ட காம மயக்கத்தாலே துன்பமுற, எமர் நோக்கிக் கடுத்து முனியா முன்னம் - எம் கணவர் அதனை நோக்கி எங்களைச் சினந்து வெறுக்கா முன், கழற்றிய வளையும் கையில் எடுத்து இடும் என்ருர் - கழற்றிய வளையலையும் எடுத்துக் கையில் இடும் என்று வேண்டினர்; நாளை இடுதும் என்று ஏகினுன் - நாளை வந்து இடுவோம் என்று சென்றனன்.

தழுவாதிர் என்பது தழாதிர் என்ருயிற்று. கடுத்து என்பதற்கு விரைந்து என்றும், மிக்கு என்றும் பொருள் கூறலுமாம். கலை அவிழ்தலும் வளை கழலுதலும் அவர் காரணமாக நிகழ்ந்தமையின், நீர் அவிழ்த்த கலை என்றும் கழற்றிய வளை என்றும் கூறினர். அத்துணைப் பரிச வின்பமேனும் நுகருங் கருத்தால் இங்ஙனம் வேண்டினர். மறு பிறப்பில் அவர்கட்கு வளையிடுதல் குறித்து நாளை யிடுதுமென் றேகினுன் என்க. தாருக வனத்து முனிவர்கள் சிவ வழிபாட்டைக் கைவிட்டு வேள் வியே பொருளெனக் கொண்டிறுமாந்திருக்க, அவர் மனைவியர் கற்பிலே தமக்கு நிகராவார் யாருமிலரெனச் செருக்குற்றிருந்தனர்; அன்னுரின் தருக்கை யொழிக்கும் பொருட்டுச் சிவபெருமான் பிச்சைப் பெருமாளுகப் போந்து முனிபன்னியர் கற்பி னின்றும் நெகிழுமாறு செய்தனர் என்பது புராண வரலாறு. (௬௩)

பிள்ளைவெண் டிங்கள் வேய்ந்த பிரான்கொண்டு போன நாணும்
உள்ளமு மீட்க லாற்ரு துயங்கினுர் கலையுஞ் சங்குந்
துள்ளவைங் கணையான் வாளி துளைப்பவெம் பசலை யாகங்
கொள்ளைகொண் டுண்ண நின்ருர் நங்நிலை கொழுநர் கண்டார்.

(இ - ள்.) பிள்ளை வெண் திங்கள் வேய்ந்த பிரான் கொண்டு போன-வெள் ளிய இளமதியை அணிந்த இறைவன் கொண்டுபோன, நாணும் உள்ளமும் மீட்க லாற்ருது உயங்கினுர் - நாணினையும் மனத்தையும் மீட்க முடியாமல் அம் மகளிர் வாட்ட முற்று, கலையும் சங்கும் துள்ள-ஆடையும் வளையும் சரியவும், ஐங்கணையான் வாளி துளைப்ப - பஞ்ச பாணனுடைய கணைகள் உடலைத் துளைக்கவும், வெம்பசலை ஆகம் கொள்ளை கொண்டு உண்ண - காம விருப்பாலாகிய நிற வேறுபாடு உடம்பு முழுதையும் கவர்ந்து படரவும், நின்ருர் - நின்றனர்; அந்நிலை - அங்ஙனம் நின்ற நிலை

மையை, கொழுநர் கண்டார் - அவர்கள் கணவராகிய தாருகவன முனிவர்கள் கண்டனர்.

உயங்கினர், முற்றெச்சம். கலை - மேகலையுமாம். துள்ள - சரிய என்னும் பொருட்டு. ஐங்கணையான் - காமன்; பெயர். வெம்மை - விருப்பம்; கொடுமையுமாம். உடல் முழுதும் போர்த்து வருத்துதலை 'ஆகங்கொள்ளை கொண்டெண்ண' என்றார். (கச)

பொய்தவ வடிவாய் வந்து நம்மனைப் பொன்னி னன்னார்
மெய்தழை கற்பை நாணை வேரொடுங் களைந்து போன
கைதவன் மாடக் கூடற் கடவுளென் றெண்ணித் தேர்ந்தார்
செய்தவ வலியாற் கால மூன்றையுந் தெரிய வல்லார்.

(இ - ள்.) செய்தவ வலியால் காலம் மூன்றையும் தெரிய வல்லார் - செய்கின்ற தவத்தின் வன்மையால் முக்கால நிகழ்ச்சிகளையும் அறியவல்ல அத்தாருகவன முனிவர், பொய்தவ வடிவாய் வந்து - பொய்த்த தவவேடத்துடன் வந்து, நம்மனைப் பொன்னின் அன்னார் - நமது மனையிலுள்ள திருமகள்போலும் மனைவியரின், மெய் தழை கற்பை நாணை - உண்மை மிக்க கற்பினையும் நாணையும், வேரொடும் களைந்து போன கைதவன் - அடியொடும் களைந்து சென்ற வஞ்சகன், மாடக் கூடல் கடவுள் என்று எண்ணித் தேர்ந்தார் - மாடங்கள்நெருங்கிய கூடலில் வீற்றிருக்கும் சோமசுந்தரக் கடவுளே என்று சிந்தித்துணர்ந்தார்கள்.

பொய்தவ வடிவு, வினைத் தொகையாகலின் இயல்பாயிற்று; தொடை நோக்கித் தகரம் தொக்கதென்றுமாம். பொன்னினன்னார், சாரியை நிற்க உருபு தொக்கது. எண்ணும்மைகள் தொக்கன. மாடக் கூடல் - நான்மாடக் கூடல் எனலுமாம். காலம், ஆகு பெயர். கால மூன்றையும் தெரிய வல்லாரை "மறுவில் செய்தி மூவகைக் காலமும், நெறியினாற்றிய அறிவர்" எனக் கூறுவர் தொல்காப்பியர். ()

[வேறு]

கற்புத் திரிந்தார் தமைநோக்கிக் கருத்துத் திரிந்தீர் நீராழி*
வெற்புத் திரிந்த மதிற்கூடன் மேய வணிகர் கன்னியராய்ப்
பொற்புத் திரியா தவதரிப்பீர் போமென் றிட்ட சாபங்கேட்
டற்புத் திரிந்தா ரெங்களுக்கி தகல்வ தெப்போ தெனமுனிவர்.

(இ - ள்.) கற்புத் திரிந்தார்தமை நோக்கி - கற்புநிலை மாறுபட்ட தம் மனைவியரைப் பார்த்து, நீர் கருத்துத் திரிந்தீர் - நீவிர் மனம் வேறுபட்டீர்கள் (ஆதலால்) ஆழி வெற்புத் திரிந்த மதில் கூடல் மேய - சக்கரவாளகிரி தனது வடிவந் திரிந்து வந்தாலொத்த மதில் சூழ்ந்த கூடலில் வசிக்கும், வணிகர் கன்னியராய்ப் பொற்புத் திரியாது அவதரிப்பீர் - வணிகர் மகளிராய் அழகு சிறிதும் குறைபடாது தோன்று

(பா - ம்.) *நீளாழி.

வீர்கள், போம் - செல்லுங்கள், என்று இட்ட சாபம் கேட்டு - என்று அளித்த சாபத்தினைக் கேட்டு, அன்பு திரிந்தார் - நாயகனிடத்து வைத்த அன்பு வேறுபட்ட அம் மகளிர், எங்களுக்கு ஈது அகல்வது எப்போது என - எங்கட்கு இச் சாபம் நீங்குவது எப்பொழுது என்று வினவ, முனிவர் - அம் முனிவர்கள்.

கருத்துத் திரிந்தீர் என்பது விளியுமாம். திரிந்தாலனைய என்பது திரிந்த என நின்றது. அவதரிப்பீர் - பிறக்கக் கடவீர்கள். போம் - போமின்; பன்மை யேவல். அற்பு, வலித்தல். திரிந்தார், பெயர். (கசு)

அந்த மாட மதுரைநகர்க் கரசா கியசுந் தரக்கடவுள்
வந்து நும்மைக் கைதீண்டும் வழியிச் சாபங் கழியுமெனச்
சிந்தை தளர்ந்த பன்னியருந் தென்னர் மதுரைத் தொன்னகரிற்
சுந்த முல்லைத் தார்வணிகர் காதன் மகளி ராய்ப்பிறந்தார்.

(இ - ள்.) அந்த மாட மதுரை நகர்க்கு அரசு ஆகிய சுந்தரக் கடவுள் வந்து - மாடங்கள் நெருங்கிய அம் மதுரைப் பதிக்கு இறைவனாகிய சோமசுந்தரக் கடவுள் வந்து, நும்மைக் கைதீண்டும் வழி இச்சாபம் கழியும் என - உங்களைக் கைதீண்டும் பொழுது இந்தச் சாபம் நீங்குமென்று கூற, சிந்தை தளர்ந்த பன்னியரும் - (அச் சாபத்தால்) மனம் வாடிய முனி பன்னியரும், தென்னர் மதுரைத் தொல் நகரில் - பாண்டியரின் மதுரையாகிய தொன்மையுடைய நகரின் கண், கந்த முல்லைத் தார் வணிகர் - மணம் பொருந்திய முல்லை மலர் மாலையை யணிந்த வணிகர்களின், காதல் மகளிராய்ப் பிறந்தார் - அன்புடைய புதல்வியராய்த் தோன்றினார்கள்.

கைதீண்டல் - கையாற்றொடுதல்: சாபத்தாற் சிந்தை தளர்ந்த வென்க; தம் கற்பிற்கு இழுக்குண்டானமை கருதித் தளர்ந்த என்றுமாம். முல்லைமாலை வணிகர்க்குரித்து. (கஎ)

வளர்ந்து பேதை யிளம்பருவ மாறி யல்குற் புடையகன்று
தளர்ந்து காஞ்சி மருங்கொசியத் ததும்பி யண்ணுந் தரும்புமுலை
கிளர்ந்து செல்லும் பருவத்திற் கிடைத்தா ராக விப்பான்மண்
அளந்த விடையான் வந்துவளை பகரும் வண்ண மறைகிற்பாம்.

(இ - ள்.) வளர்ந்து பேதை இளம் பருவம்மாறி - வளர்ந்து இளமையாகிய பேதைப்பருவங் கடந்து, அல்குல் புடை அகன்று - அல்குலானது புடை பரக்க, காஞ்சிமருங்கு தளர்ந்து ஒசிய-மேகலை யணிந்த இடையானது தளர்ந்து வளையுமாறு, அரும்புமுலை - அரும்பிய கொங்கைகள், ததும்பி அண்ணாந்து கிளர்ந்து செல்லும்-விம்மி நிமிர்ந்து பூரித்து ஓங்கும், பருவத்தில் - மங்கைப் பருவத்தில், கிடைத்தாராக-அடைந்தாராக; இப்பால்-இப்புறம், மண் அளந்த விடையான் வந்து-புவியை அளந்த திருமாலாகிய இடப வூர்தியையுடைய இறைவன் வந்து, வளை பகரும் வண்ணம் அறைகிற்பாம்-வளையல் விற்குந் தன்மையைக் கூறுவாம்.

அகன்று - அகல; எச்சத் திரிபு. அகல ஒசிய கிளர்ந்து செல்லும் என்க. அரும்புபோலும் முலை என்றுமாம். பருவத்திற் கிடைத்தார் - பருவமெய்தினர். இப்பால் - இனி; அது நிற்க என்றபடி. சூலபூடணன் திகிரியுருட்டுநாள் விடையான் வந்து வளைபகரும் வண்ணம் என இயையும். (கஅ)

கங்கை கரந்து மணிகண்டங் கரந்து நுதற்கண் கரந்தொருபால்
மங்கை வடிவுங் கரந்துழையு மழுவுங் கரந்து மழவிடையூர்
அங்க ணழகர் வளைவணிக ராகி யேன மளந்தறியாச்
செங்க மலச்சே வடியிரண்டுந் திரைநீர் ஞால மகள்சூட.

(இ - ள்.) மழவிடை ஊர் அம்கண் அழகர் - இளமையாகிய இடபத்தை ஊர்ந்தருளும் அழகிய கண்களையுடைய சோமசுந்தரக்கடவுள், கங்கை கரந்து - கங்கையை மறைத்து, மணிகண்டம் கரந்து - நீலமிடற்றினை ஒளித்து, நுதல் கண் கரந்து - நெற்றிக் கண்ணை மறைத்து, ஒரு பால் மங்கை வடிவும் கரந்து - ஒரு கூறாகிய உமை வடிவையும் மறைத்து, உழையும் மழுவும் கரந்து - மானையும் மழுவையும் ஒளித்து, வளை வணிகர் ஆகி - வளையல் விற்கும் வணிகராய், ஏனம் அளந்து அறியாச் செங்கமலச் சேவடி இரண்டும் - திருமாலாகிய பன்றியினால் தேடி அறியப்படாத செந்தாமரை போன்ற சிவந்த இரண்டுதிருவடிகளையும், திரைநீர் ஞால மகள் சூட - அலைகளையுடைய கடல் சூழ்ந்த புவிமாது (தனது முடியிற்) சூட.

யாவர்க்கும் மேலோனாகிய இறைவன் ஈண்டு எளிவந்தருளும் அருமைப் பாட்டை வியந்து 'கங்கை கரந்து மணிகண்டங் கரந்து' என்றிங்ஙனம் தனித்தனி கூறினார். ஊர்தற்கு விடை யிருக்கவும் தாளால் நடந்துவந்தா ரென்பார் 'விடையூர் அழகர்' என்றார். மணி கண்டம் - நீல மணிபோலும் திருமிடறு. கரந்து, தன்வினை பிறவினைக்குப் பொது; ஈண்டுப் பிறவினை; இது பல்கால் வந்தது பின்வருநிலை என்னும் அணி. இதுவும் வருஞ் செய்யுளும் ஒரு தொடர். (கக)

பண்டு முனிவர் பன்னியர்பாற் கவர்ந்த வளையே பட்டுவடங்
கொண்டு தொடுத்து மீண்டவர்க்கே யிடுவே மெனுமுட் கோளினர்போற்
றொண்டர் தொடுத்த வைவண்ணத் துணர்த்தார் போலத் தோள்சுமந்து
மண்டு வளையை விலைபகர்ந்து வணிக மறுகில் வருகின்றார்.

(இ - ள்.) பண்டு முனிவர் பன்னியர் பால் கவர்ந்த வளையே - முன்னே முனிவரின் மனைவியரிடத்துக் கவர்ந்த வளைகளையே, பட்டுவடம் கொண்டு தொடுத்து - பட்டுக் கயிற்றாற் கோத்து வந்து, மீண்டு அவர்க்கே இடுவேம் எனும் உட்கோளினர் போல் - மீள அம் மகளிர்க்கே இடுவேம் என்னுங் கருத்துடையார் போல, தொண்டர் தொடுத்த ஐவண்ணத் துணர்த்தார் போலத் தோள் சுமந்து - அடியார்கள் தொடுத்துச் சூட்டிய ஐந்து நிறங்களையுடைய பூங்கொத்துக்களா லமைந்த மாலையைப்போலத் தோளிற் றாங்கி, மண்டு வளையை விலை பகர்ந்து வணிக மறுகில் வருகின்றார் - நெருங்கிய வளையல்களை விலைகூறி வணிக வீதியில் வருகின்றார்.

வேறெங்குஞ் செல்லாது வணிக மறுகில் வருதலின் 'அவர்க்கே யிடுவே மெனும் உட்கோளினர் போல்' என்றார். வளையை உட்கோளினர் போற் சுமந்து என்றும், தார்போலச் சுமந்து என்றும் தனித்தனி கூட்டுக. பட்டுக் கயிற்றிலே பல நிற வளைகள் கோத்திருப்பது ஐவண்ணத் துணர்த்தார் போன்றது. அதனைச் சுமத் தற்கண் உள்ள விருப்பம் புலப்பட 'தொண்டர் தொடுத்த தார்போல்' என்றார்.(உ0)

மன்னு மறையின் பொருளுரைத்த மணிவாய் திறந்து வளைகொண்மின்
என்னு மளவிற் பருவமுகி லிமிழின் னிசைகேட் டெழுமயில்போற்
றுன்னு மணிமே கலைமிழற்றத் தூய வணிக குலமகளிர்
மின்னு மணிமா ளிகைநின்றும் வீதி வாயிற் புறப்பட்டார்.

(இ - ள்.) மன்னும் மறையின் பொருள் உரைத்த மணிவாய் திறந்து - நிலை பெற்ற வேதத்தின் பொருளை அருளிச் செய்த அழகிய திருவாயைத் திறந்து, வளை கொண்மின் என்னும் அளவில் - வளையல் கொள்ளுங்கள் என்று கூறிய வளவில், பருவம் முகில் இமிழ் இன் இசை கேட்டு எழு மயில்போல் - கார் காலத்துச் சூற் கொண்ட மேகம் ஒலிக்கும் இனிய ஒலியினைக் கேட்டு (ஆடுதற்கு) எழும் மயில் போல, துன்னும் மணிமேகலை மிழற்ற - நெருங்கிய மணிகளையுடைய மேகலை ஒலிக்க, தூய வணிககுல மகளிர் - களங்க மில்லாத வணிககுல மகளிர், மின்னும் மணி மாளிகை நின்றும் - ஒளி விடுகின்ற மணிக ளழுத்திய மாளிகையி னின்றும், வீதி வாயில் புறப்பட்டார் - வீதியின்கண் புறப்பட்டனர்.

முனிபுங்கவர்களாலும் உணர்தற்கரிய மறைப்பொருளை அவர்கட்கு உணர்த்தி யருளிய திருவாயால் அறிவு சிறிது மில்லாரும் கூறி விற்கும் மொழிகளைக் கூறுவா னாயிற்று, அவனது அருள் இருந்தவாறென்னே என வியந்துரைத்தவாறு. வளை வாங்குவாருளரோ எனக் கூவி விற்குமளவில் என்க. மயில் சாயலால் மகளிர்க்கு உவமம். ஈண்டு உவகை மிகுதியைக் குறிக்க முகிலிசை கேட்டெழும் மயிலைக் கூறி னார். மாளிகை நின்றும் என்பதற்கியைய மலையினின்றெழும் மயில்போல் என விரித் துரைத்தலும் பொருந்தும். வாய் - இடம். (உக)

வளைக ளிடுவா ரெனத்தங்கண் மனமெல் லாந்தம் புடையொதுங்கத்
தளைக ளிடுவார் வருகின்றார் தம்மைக் கொம்மை வெம்முலையார்
துளைக ளிடுதீங் குழலிசைபோற் சுரும்பு பாடக் கருங்குழன்மேல்
விளைக ளொழுக நுடங்கிவரு மின்போ லடைந்து கண்டார்கள்.

(இ - ள்.) வளைகள் இடுவார் என - கைக்கு வளையல் இடுவார் போன்று, தங்கள் மனம் எல்லாம் தம்புடை ஒதுங்க-தங்கள் மனம் முழுதும் தம்மிடம் ஒதுங்கு மாறு, தளைகள் இடுவார் வருகின்றார் தம்மை - (அவற்றை) விலங்கிடுதற்கு வருகின்ற அவ்வணிகரை, கொம்மை வெம்முலையார் - திரட்சியுடைய விருப்பந்தரும் கொங் கையையுடைய அம்மகளிர், துளைகள் இடு தீங்குழல் இசைபோல் சுரும்பு பாட-துளை களிட்ட இனிய வேய்ங்குழலின் இசைபோல வண்டுகள் பாடவும், கருங்குழல்மேல்

விளைகள் ஒழுக - கரிய கூந்தலின்மேனின்று சுரக்குந் தேன் ஒழுகவும், நுடங்கி வரும் மின்போல் அடைந்து கண்டார்கள் - அசைந்து வருகின்ற மின்னல்போலச் சென்று பார்த்தார்கள்.

இடுவார் இரண்டனுள் முன்னது பெயர்; பின்னது வினையெச்சப் பொருட்டு. வெம்மை - விருப்பம். குழல்மேல் சுரும்புபாடவும் கள் ஒழுகவும் என்க. நுடங்கி வருமின்போல் என்றது இல்பொருளுவமை. (உஉ)

கண்ட வடிவாற் றிளைப்பதற்குக் கழிபே ரன்பு காதல்வழிக்
கொண்டு செல்ல வொருசார்தங் குணனு நாணமுத னான்கும்
மண்டி யொருசார் மறுதலைப்ப மனமு முழன்று தடுமாற
அண்டர் பெருமான் விளையாடற் கமையச் சூழ்ந்தா ரமுதனையார்.

(இ - ள்.) கண்ட வடிவால் திளைப்பதற்கு - நோக்கிய அவ்வடிவுடன்கூடி இன்பம் நுகர்தற்கு, கழிபேர் அன்பு - மிகவும் பெரிய அன்பானது, ஒருசார் காதல் வழிக்கொண்டு செல்ல-ஒரு பக்கம் ஆசையின் வழியே கொண்டுபோக, ஒரு சார் தம் குணன் ஆம் நாணம் முதல் நான்கும் மண்டி மறுதலைப்ப - மற்றொரு பக்கம் தங்கள் குணமாகிய நாண் முதலிய நான்கும் நெருங்கித் தடுப்ப, மனமும் உழன்று தடுமாற - (அதனால்) மனமும் சுழன்று தடுமாற, அண்டர் பெருமான் விளையாடற்கு அமைய - தேவர் பிரானாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலுக்குப் பொருந்த, அமுது அனையார் சூழ்ந்தார் - அமுதினை ஒத்த அம்மகளிர் சூழ்ந்து மொய்த்தனர்.

வடிவால் - வடிவோடு கூடி; ஆல் ஒடுவின் பொருட்டாயது. அகண்டனாகிய இறைவனைத் தமது கண்ட வடிவால் திளைப்பதற்கு என்னும் தொனிப்பொருளும் கொள்க. கழி என்னும் உரிச்சொல் அன்பின் பெருமையைச் சிறப்பித்து நின்றது. நான்கு - நாண், மடம், அச்சம், பயிர்ப்பு. ஒரு சார் கொண்டு செல்ல ஒருசார் மறு தலைப்ப அதனால் மனம் தடுமாறு நிற்கவும் சூழ்ந்தார் என்க. மறுதலைப்ப என்பது மறுதலிப்ப என வழங்கும். (உ௩)

[கலிவிருத்தம்]

இரங்குமே கலைசிலம் பன்றி யேனைய
விரும்பிய குழைதொடி மின்செய் கண்டிகை
மருங்கிறச் சுமப்பினும் வளைகைக் கில்லெனின்
அரும்பிய முலையினார்க் கழகுண் டாகுமோ.

(இ - ள்.) இரங்கும் மேகலை சிலம்பு அன்றி - ஒலிக்கின்ற மேகலையும் சிலம்பும் அல்லாமலும், ஏனைய - அவை ஒழிந்த, விரும்பிய குழைதொடி மின்செய் கண்டிகை - விரும்பப்பட்ட குழையும் தொடியும் ஒளிவீசுங் கண்டிகையுமாகிய இவற்றை, மருங்கு இற சுமப்பினும்-இடை முறியுமாறு தாங்கினாலும்,கைக்கு வளை இல் எனின்- கைகளுக்கு வளையல் இல்லையானால், அரும்பிய முலையினார்க்கு - முகிழ்த்த தனங்களை யுடைய மகளிர்க்கு, அழகு உண்டாகுமோ - அழகுண்டாகுமோ.

தொடி - ஈண்டுக் கங்கணம். கண்டிகை - கழுத்தணி. அரும்பிய - கோங் கரும்புபோல் முகிழ்த்த. ஓகாரம் எதிர் மறை. இச்செய்யுளை மகளிர் கூற்றாக்கி, ஆதலால் என விரித்து, வருஞ் செய்யுளோடு கூட்டி முடிக்க; கவிக் கூற்றுமாம். (உச)

செல்வநல் வணிகிரெஞ் செங்கைக் கேற்பன
நல்வளை தெரிந்திடு மென்று நாய்கர்முன்
வல்வள ரிளமுலை மகளிர் மின்னுமிழ்
கல்வளர் கடகமென் காந்த ணீட்டினார்.

(இ - ள்.) செல்வ நல்வணிகிர் - செல்வ மிக்க நல்ல வணிகீரே, எம் செங் கைக்கு ஏற்பன - எம்முடைய சிவந்த கைகளுக்குப் பொருந்திய, நல் வளை தெரிந்து இடும் என்று - நல்ல வளைகளை ஆராய்ந்து இடுவீராக என்று, வல் வளர் இளமுலை மகளிர் - சூதாடு கருவிபோலக் குவிந்து வளர்ந்த இளமையாகிய கொங்கையையுடைய மகளிர், நாய்கர் முன் - வணிகர் முன்னே, மின் உமிழ் கல்வளர் கடகம் மென் காந்தள் நீட்டினர் - ஒளிவீசும் கற்கள் அழுத்திய கடகத்தையுடைய காந்தள் மலர் போன்ற கையை நீட்டினார்கள்.

ஏற்பனவும் நல்லனவுமாகிய வளை என்றுமாம். கணந்தோறும் வேட்கை மிகலால் உடல் மெலிந்து வளை கழலுதலின் 'ஏற்பன நல்வளை தெரிந்து இடும்' எனக் காமக் குறிப்புத் தோன்றக் கூறினரென்க. கல் - மாணிக்கம் முதலியன. கல்வளர்- கற்கள் பொருந்திய. (உரு)

பண்டருங் கிளவியங் கயற்கட் பாவைகைத்
தண்டளிர் பற்றிய தடக்கை மாதர்கைம்
முண்டகம் பற்றியே முகிழ்த்துப் பல்வரி
வண்டுக ளேற்றுவார் மைய லேற்றுவார்.

(இ - ள்.) பண்தரும் கிளவி அங்கயற்கண் பாவை - இசைபோலு மினிமையைத்தரும் சொற்களையுடைய அங்கயற்கண் ணம்மையினது, கைத்தண் தளிர் பற்றிய தடக்கை - திருக்கரமாகிய குளிர்ந்த தளிரைப் பிடித்த நெடிய கையால், மாதர் கைம்முண்டகம் பற்றியே முகிழ்த்து-வணிக மகளிரின் கைகளாகிய தாமரை மலரைப் பிடித்து முகிழ்ப்பித்து, பல்வரி வண்டுகள் ஏற்றுவார் மையல் ஏற்றுவார் - பல வரிகளையுடைய வளையல்களைச் செறிப்பாராய்க் காம மயக்கத்தை மிகுவிப்பாராயினர்.

மாதர் - வணிக மாதர். வண்டு - வளை. முண்டகம் என்பதற்கேற்ப வண்டு என நயமுறக் கூறினர். வளையலைக் கையில் ஏற்றுவதுடன் மயக்கத்தை மனத்தில் ஏற்றினர் என்க. (உசு)

புங்கவ னிடுவளை புடைத்து மீளவந்
தெங்களுக் கிடவிலை யிடுதி ராலெனக்
கொங்கவிழ் பைங்குழ லெருத்தங் கோட்டிநின்
றங்கர நீட்டுவா ராசை நீட்டுவார்.

(இ-ள்.) புங்கவன் இடுவளை புடைத்து மீளவந்து-இறைவனுகிய அவ்வணிகன் இட்ட வளையை உடைத்துவிட்டு மீளவும் வந்து, எங்களுக்கு இடவில்லை - எங்களுக்கு இன்னும் இடவில்லை, இடுதிர் என-இப்பொழுது இடுவீராக என்று, கொங்கு அவிழ் பைங்குழல் எருத்தம் கோட்டி நின்று - மணம் விரிந்த பசிய கூந்தல் சரிந்த கழுத்தினை வளைத்து (முகத்தை மறைத்து) நின்று, அம் கரம் நீட்டுவார்-அழகிய கைகள் நீட்டுவாராய், ஆசை நீட்டுவார் - தமது வேட்கையைத் தோற்றுவிப்பார்கள்.

அவனது கையைப் பரிசித்தலாகிய இன்பத்தை மேன்மேல் நுகர விரும்பி இங்ஙனம் வளையை உடைத்து வந்து மீள இட வேண்டுவர் என்க. முன்பு வளையல் இடப் பெற்றவராகலின் தமதுருவைக் காட்டாது முகத்தை மறைத்தற்கு எருத்தங் கோட்டுவாராயினர். கூந்தலில் முகம் மறைய என்பார் 'பைங்குழல் எருத்தங்கோட்டி' என்றார். நாணுற் கோட்டுதலுங் கொள்க. ஆசை நீட்டுதல் - ஆசையைத் தோற்றுவித்தல்; மிகுவித்தலுமாம். ஆல், அசை. மேற்செய்யுளில் 'வண்டுகளேற்றுவார் மையலேற்றுவார்' என்றும், இச்செய்யுளில், 'அங்கர நீட்டுவார் ஆசை நீட்டுவார்' என்றும் கூறிய அழகு பாராட்டற்பாலது. (உஎ)

எமக்கிடு மெமக்கிடு மெனப்பின் பற்றியே
அமைத்தடந் தோளினு ரனங்கன் பூங்கணை
தமைத்துளை படுத்தவோர் சார்பி லாமையாற்
கமைப்புறு நாண்முதற் காப்பு நீங்கினர்.

(இ - ள்.) எமக்கு இடும் எமக்கு இடும் எனப் பின்பற்றி - எங்களுக்கு இடும் எங்களுக்கு இடும் என்று பின் தொடர்ந்து, அமை தடம் தோளினர்-மூங்கிலை ஒத்த பருத்த தோளையுடைய வணிககுல மகளிர், அனங்கன் பூங்கணை தமைத் துளைபடுத்த-மத வேளின் மலர் வாளிகள் தம்மைத் துளைக்க, ஓர் சார்பு இலாமையால் - (அதனை நீக்க) ஓர் பற்றுக்கோ டில்லாமையால், கமைப்பு உறு நாண்முதல் காப்பு நீங்கினர் - பொறுத்தலையுற்ற நாண முதலாகிய காவலினின்றும் நீங்கினர்கள்.

சார்பு - துணை. கமைப்பு - பொறுத்தல்; தம்மாற் பொறுக்கப் பெற்றிருந்த நாண்முதலாகிய என்க. நாண்முதலியன காவலாதலையும், காமமானது அதனையழிப்பதனையும்

"காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னும்
நாணுத்தாழ் வீழ்த்த கதவு"

என்னும் முப்பாலால் அறிக. (உஅ)

முன்னிடு வளையெலாங் கழல முன்புசூழ்ந்
தின்னவை பெரியவே திடுமென் றிட்டபின்
அன்னவு மனையவே யாக மீளவந்
தின்னமுஞ் சிறியவா விடுமென் றேந்துவார்.

(இ - ள்.) முன் இடுவளை எலாம் கழல - முன்னே இட்ட வளைகளனைத்துங் கழன்றுவிட, முன்பு சூழ்ந்து - (அம்மகளிர்) வணிகர் முன்பு மொய்த்து, இன்னவை

பெரிய இவ்வணைகள் அளவிற் பெரியன (ஆதலின் கழன்றன): வேறு இடும் என்று - வேறு வளைகள் இடுமென்று கூறி, இட்டபின் - அங்ஙனம் இட்டபின், அன்னவும் அனையவே ஆக - அவையும் அங்ஙனமே கழல, மீளவந்து - மீண்டும் வந்து; இன்னமும் சிறியவா இடும் என்று எந்துவார் - இன்னுஞ் சிறிய வளைகளாக இடும் என்று கையை எந்துவார்.

பெரிய, அன்பெறாத பலவின்பாற் குறிப்புமுற்று. சிறியவாக என்பது விகாரமாயிற்று. எந்துதல் - கையை நிமிர்த்தி நீட்டுதல். (உ௧)

பின்னிடு வளைகளுஞ் சரியப் பேதுறா
முன்னெதிர் குறுகிநீர் செறித்த மொய்வளை
தன்னொடு கலைகளுஞ் சரிவ தேயென
மின்னென நடங்கினார் வேனெடுங்கணார்.

(இ - ள்.) பின் இடு வளைகளும் சரிய - பின் இட்ட வளைகளுங் கழல, பேதுறா - மனமயங்கி, முன் எதிர் குறுகி - வணிகர் முன் சென்று எதிர் நின்று, நீர் செறித்த மொய்வளை தன்னொடு - நீர்செறிய இட்ட நெருங்கிய வளையோடு, கலைகளும் சரிவதே என - மேகலைகளுங் கழல்கின்றனவே என்று, வேல் நெடுங்கணார் - வேல்போன்ற நெடிய கண்களையுடைய அம்மகளிர், மின் என நடங்கினார் - மின்னல்போலத் துவண்டு (வெள்கினார்கள்).

பேது - மயக்கம். பேதுறா, செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம், சரிவது எனப் பன்மையில் ஒருமை வந்தது. சரிவதே என - சரியா நிற்கின்றது. இஃதொரு வியப்பிருந்தவாறென்னே என்று. நடங்குதல் நாணினாலாயது. (௨௰)

இவ்வளை போல்வளை* யாமுன் கண்டிலேம்
மெய்வளை வணிகிரிவ் வரிய வெள்வளை
எவ்வயி னுள்ளவின் றினிய வாகியெம்
மெய்ம்மயிர் பொடிப்பெழ† வீக்கஞ் செய்தவே.

(இ - ள்.) வளைவணிகிர் - வளையல் விற்கும் வணிகிரே, இவ்வளைபோல் வளை யாம் முன் கண்டிலேம் - இந்த வளையல்போன்ற வளைகளை யாம் முன்னே பார்த்திலோம்; மெய் - இது உண்மை; இவ்வரிய வெள்வளை எவ்வயின் உள்ள - இந்த அருமையான வெள்ளிய வளையல்கள் எவ்விடத்தில் உள்ளன? இன்று இனிய ஆகி எம் மெய் மயிர் பொடிப்பு எழ வீக்கம் செய்த - இன்று இனியனவாய் எம் உடம்பினை மயிர் முகிழ்ப்பு உண்டாகப் பூரிக்கச் செய்தன.

உடல்கூனிய வணிகரே எனப் பொருள்கூறுவாருமுளர்; அது பொருந்தாமை யுணர்க. உள்ள, இனிய, செய்த என்பன அன்சாரியை பெறாது நின்றன. வீக்கஞ்

(பா - ம்.) *இவ்வளை போல்வன. †மெய்வளர் பொடிப்பெழ.

செய்த என்பது ஒருசொல்லாகி மெய்யை என்னும் இரண்டாவதற்கு முடிபா யிற்று. (௩௧)

நாளையும் வளையிட நண்ணுமிங் கென்பார்
கோள்வளை விலையிது கொண்டுபோ மென்பார்
வாள்விழி யீர்பினுள் வாங்கிக் கோடுமென்
றாளரி யேறனா ராடிப் போயினார்.

(இ - ள்.) நாளையும் வளை இட இங்கு நண்ணும் என்பார் - நாளையும் வளை இடுதற்கு இங்கு வருவீராக என்பார்கள் (மற்றும்), கோள்வளை விலை இது கொண்டு போம் என்பார் - நாங்கள் கொண்ட வளைக்கு விலையாகும் இதனைக் கொண்டுபோம் என்பார்கள்; ஆள் அரி ஏறு அனார் - ஆண்மையுடைய சிங்கவேறு போன்ற வணிகேசர் (அம் மகளிரை நோக்கி), வாள் விழியீர் - வாள்போலும் கண்களை யுடையவர்களே, பின் நாள் வாங்கிக் கோடும் என்று - நாளை வாங்கிக்கொள்வோம் என்று கூறி, ஆடிப் போயினார் - திருவிளையாடல் செய்து சென்றருளினார்.

கோள், முதனிலை திரிந்தது. கோடும்-கொள்ளுதும். ஆள்-ஆண்மை. ஆடி என்பதனை இரட்டுற மொழிதலாகக் கொண்டு, உரைத்து என்று கூறுதலுமாம். (௩௨)

போயின வணிகர்தம் புடையின் மின்னெனப்
பாயின மகளிரும் பலருங் காணமுன்
மேயின விண்ணிழி விமானத் துள்ளொளி
ஆயின திருவுரு வாகித் தோன்றினார்.

(இ - ள்.) போயின வணிகர் - அங்ஙனஞ் சென்ற வணிகராகிய பெருமானார், தம்புடையில் மின் எனப் பாயின மகளிரும் பலரும் காண - தமது பக்கத்தில் மின்னலைப்போலப் பரந்து நின்ற மகளிரும் ஏனையோருங் கண்டு வியக்க, முன் மேயின - முன் தாம் எழுந்தருளி யிருந்த, விண் இழி விமானத்துள் ஒளி ஆயின திரு உரு ஆகித் தோன்றினார் - விசும்பினின்று இழிந்த விமானத்தின்கண் ஒளி மயமாகிய திருவுருவமாகித் தோன்றி யருளினார்.

பாயின - பரந்த. மேயின - மேவின; பெயரெச்சம் இடப்பெயர் கொண்டது, சென்றவர் மறைந்து சிவலிங்கத் திருவுருவிற் கலந்தருளினார் என்க. (௩௩)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

மட்ட லம்பு கோதை யார்முன் வளைப கர்ந்த வணிகர்தாம்
பட்டி சைந்த வல்கு னங்கை பாக ராகு மெனவியந்
துட்ட தும்பு முவகை வெள்ள முற்றெ ழுந்த குமிழிபோற்
கட்ட தும்பு புனலி லாழ்ந்து களிய டைந்த நகரெலாம்.

(இ - ள்.) மட்டு அலம்பு கோதையார் முன் - தேன் ததும்பும் மாலையை யணிந்த மகளிர் முன்னே, வளைபகர்ந்த வணிகர் தாம் - வளையல் விற்ற வணிகரான

வர், பட்டு இசைந்த அல்குல் நங்கை பாகர் ஆகும் என வியந்து-பட்டாடை பொருந்திய அல்குலையுடைய உமாதேவியை ஒரு பாகத்திலுடைய இறைவராவார் என்று வியப்புற்று, உள் ததும்பும் உவகை வெள்ளம் உற்று எழுந்த குமிழிபோல் - உள்ளத்திற் றதும்பிய மகிழ்ச்சி வெள்ளத்திற் பொருந்தி யெழுந்த குமிழிபோல, கண் ததும்பு புனலில் ஆழ்ந்து - கண்களிலே ததும்புகின்ற நீரில் அமிழ்ந்து, நகர் எலாம் களி அடைந்த - நகரிலுள்ளா ரனைவரும் களிப்புற்றனர்.

அலம்புதல் - ஈண்டுத் ததும்புதல். அல்குல்-அரை;

"பட்டிசைந்த வல்குலாள்"

என்பது தேவாரம். குமிழிபோலத் ததும்புகின்ற புனல் என்க. அடைந்த, அன் பெறாத முற்று. நகரிலுள்ளார் அனைவரும் களிப்படைந்தார் என்பதனை 'நகரெலாம் களியடைந்த' என்றார். (௩௪)

உருவி லாளி யுடல் பொடித்த வொருவர் கூட லிருவரான்
மருவி லார்தி ருக்கை தொட்டு வளைசெ றித்த நீர்மையாற்
கருவின் மாத ராகி நாய்கர் கன்னி மார்கண் மின்னுவேற்
பொருவில் காளை யெனவ ரம்பில் புதல்வ ரைப்ப யந்தனர்.

(இ - ள்.) உருவிலாளி உடல் பொடித்த ஒருவர் - மன்மதனுடைய உடலை நீறாக்கிய ஒருவரும், கூடல் இருவரால் மருவிலார் - திருமாலும் அயனுமாகிய இருவராலும் அடையப் படாத கூடல் நாயகருமாகிய சோமசுந்தரக்கடவுள், திருக்கை தொட்டு வளைசெறித்த நீர்மையால் - தமது திருக்கையாலே தொட்டு வளையல் இட்ட தன்மையால், நாய்கர் கன்னிமார்கள் - வணிக மங்கையர்கள், கருவின் மாதராகி - கருவுற்ற மகளிராகி, மின்னுவேல் பொருவு இல் காளை என - ஒளி விடுகின்ற வேலினையுடைய ஒப்பில்லாத காளையாகிய முருகவேளைப் போல, வரம்பு இல் புதல்வரைப் பயந்தனர் - அளவில்லாத மைந்தர்களைப் பெற்றார்கள்.

உருவிலாளி - உருவின்மையை ஆள்பவன்; அனங்கன்; ஈண்டு மதனன் என்னும் பெயர் மாத்திரையாக நின்றது. இறைவர் காமவயத்தராய் அம்மகளிரைப் பரிசித்தாரல்லர் என்பது தோன்ற 'உருவிலாளி யுடல் பொடித்த வொருவர்' என்றார்.

மருவு - அடையப்படுதல். வளை செறித்த நீர்மையால் என்னும் ஏதுவைக் கருவின் மாதரானமைக்கும், வேற்காளை யெனப் புதல்வரைப் பயந்தமைக்கும் தனித்தனி கொள்க. (௩௫)

பிறந்த மைந்த ரளவி றந்த பெருமை கொண்ட பெருமிதஞ்
சிறந்த வீர மாற்ற லேற்ற திறல்பு னைந்து வைகினார்
மறந்த தும்பு வேனெ டுங்கண் வணிக மாதர் சிறிதுநாள்
துறந்த ரன்ற னருள டைந்து துணைய டிக்கண் வைகினார்.

(இ - ள்.) பிறந்த மைந்தர் - (அங்ஙனம்) தோன்றிய புதல்வர்கள், அளவு இறந்த பெருமை கொண்ட பெருமிதம் - அளவற்ற பெருமை கொண் களிப்பும், சிறந்த வீரம் - மிக்க வீரமும், ஆற்றல் - வலிமையும், ஏற்ற திறல் - தக்க வெற்றியும் (ஆகிய இவற்றை), புனைந்து வைகினர் - அணிகலமாகச் சூடி வாழ்ந்தனர்; மறம் ததும்பு வேல் நெடுங்கண் வணிகமாதர் - கொலை மிக்க வேல்போலும் நீண்ட விழிகளையுடைய வணிக மகளிர், சிறிது நாள் துறந்து - சின்னாட் கழித்து, அரன் தன் அருள் அடைந்து - சிவபெருமானது திருவருளைப் பெற்று, துணை அடிக்கண் வைகினர் - அவருடைய இரு திருவடிக்கண்ணும் கலந்து தங்கினார்கள்.

பெருமிதம் ஈண்டுக் களிப்பினை யுணர்த்திற்று. பெருமை கொண்ட, பெருமிதஞ் சிறந்த, வீரம் ஆற்றல் ஏற்ற எனப் பிரித்துத் திறலுக்கு அடையாக்கித் தனித்தனி கூட்டி யுரைத்தலுமாம். சிறிது நாள் - சின்னாள். (௩௬)

ஆகச் செய்யுள்—௲எ௫௬.

முப்பத்து மூன்றாவது

# அட்டமாசித்தியுபதேசித்த படலம்

[எழுசீரடியாசிரிய விருத்தம்]

கொத்தி லங்கு கொன்றை வேய்ந்த கூட லாதி மாடநீள்
பத்தி யம்பொன் மறுக ணைந்து வளைப கர்ந்த பரிசுமுன்
வைத்தி யம்பி னுமி யக்க மாதர்* வேண்ட வட்டமா
சித்தி தந்த திறமி னித்தெ ரிந்த வாறு செப்புவாம்.

(இ - ள்.) இலங்கு கொன்றைக் கொத்து வேய்ந்த கூடல் ஆதி - விளங்கா நின்ற கொன்றையினது பூங்கொத்தினை யணிந்த கூடற்பதியில் எழுந்தருளிய முதல்வராகிய சோமசுந்தரக்கடவுள், நீள்மாடபத்தி அம்பொன் மறுகு அணைந்து - நீண்ட மாட வரிசைகளையுடைய அழகிய செல்வத்தையுடைய வீதியிற் சென்று, வளைபகர்ந்த பரிசு முன் வைத்து இயம்பினும் - வளையல் விற்ற திருவிளையாடலை முன் எடுத்துக் கூறினும்; இயக்க மாதர் வேண்ட - இயக்க மகளிர் குறையிரக்க, அட்டமா சித்தி தந்த திறம் - பெரிய எட்டுச் சித்திகளையும் உபதேசித்த திருவிளையாடலை, இனி தெரிந்தவாறு செப்புவாம் - இனி அறிந்தவாறு கூறுவோம் எ - று.

அம்பொன் மாடம் என இயைத்தலுமாம். பரிசு, திறம் என்பவற்றைத் திருவிளையாடல் என்றுரைத்துக் கொள்க. (க)

மின்ன லங்கல் வாகை வேல்வி ழுப்பெருங் குலத் தினிற்
றென்ன வன்ற னாணை நேமி திசையெ லாமு ருட்டுநாள்
முன்னை வைக லூழி தோறு மோங்கு மொய்வ ரைக்கணே
மன்னு தன்ப ராரை† யால நிழன்ம ருங்கு மறைமுதல்.

(இ - ள்.) வாகை அலங்கல் மின்வேல் - வெற்றி மாலை சூடிய மின்போலும் வேற்படையினை ஏந்திய, விழுப்பெருங்குலத்தினில் - மேன்மை மிக்க பாண்டியர் குலத்தில்வந்த, தென்னவன் - குலபூடண வழுதியானவன், தன் ஆணை நேமி திசை எலாம் உருட்டு நாள் - தனது ஆணைத்திகிரியைத் திசை முழுதும் செலுத்தி வரு நாளில், ஊழிதோறும் ஓங்கும் மொய் வரைக்கண் - ஊழிக்காலந் தோறும் வளரு கின்ற வலிய திருக்கைலாய மலையின்கண், மன்னு தன் பராரை ஆல நிழல் மருங்கு - நிலைபெற்ற தனது பருத்த அரையினையுடைய வடவாலின் நிழலின்கண், மறை முதல் - வேத முதல்வனாகிய இறைவன், முன்னைவைகல் - முன்னொரு நாள்.

---

(பா - ம்.) * இயக்கி மாதர். †தண்பராரை.

தன் குலத்திற்கு அணிகலன் போன்றவன் என்னும் காரணப் பெயருடையான் என்பார் 'விழுப்பெருங் குலத்தினிற் றென்னவன்' என்றார். திருக்கைலை ஊழி தோறு முயர்தல்,

"ஊழிதோ றூழிமுற்று முயர்பொன் னொடித்தான் மலையே"

என்று தம்பிரான் றோழரால் அருளிச் செய்யப்பெற்றுளது; முன்பும் வந்தமை காண்க. பராரை, மரூஉ முடிபு, (உ)

அடுப்ப மாசில் வெள்ளி வெற்பி னருகி ருக்கு மரகதங்
கடுப்ப வாம மிசை யிருந்து கனக வெற்பன் மகளெனும்
வடுப்ப டாத கற்பி னண்ம டித்து வெள்ளிலைச் சுருள்
கொடுப்ப நேச மூறுபோக குரவ னாகி வைகினான்.

(இ - ள்.) அடுப்ப-தங்கியருள, மாசு இல் வெள்ளி வெற்பின் அருகு இருக்கும் மரகதம் கடுப்ப-குற்றமில்லாத வெள்ளி மலையின் பக்கத்திலிருக்கும் மரகதத்தையொப்ப, வாமமிசை இருந்து - வலப்பாகத்திலிருந்து, கனக வெற்பன் மகளெனும் வடுப்படாத கற்பினாள்-மலையரையன் புதல்வியாகிய குற்றமில்லாத கற்பினையுடைய உமையம்மையார், வெள்ளிலைச் சுருள்மடித்துக் கொடுப்ப - வெற்றிலைச் சுருளை மடித்துக்கொடா நிற்க, நேசம் ஊறுபோக குரவனாகி வைகினான் - (அவ்விறைவன்) அன்பு சுரக்கும் போக குரவனாய் இருந்தருளினான்.

நிழல் மருங்கு அடுப்ப எனக் கூட்டுக. இமயம் பொன்மலை யெனப்படும் ஆகலின் மலையரையனைக் 'கனக வெற்பன்' என்றார். வெள்ளிலை - வெறுவிதாகிய இலை. இறைவன் போகம் நுகர்தல் உயிர்களுக்குப்போக நுகர்ச்சி காட்டுங் கருத்தால் ஆகலின் 'போக குரவனாகி' என்றார்;

"போகமாயிருந் துயிர்க்குப் போகத்தைப் புரிதலோரார்"

என்பதுங் காண்க. (ங)

பிருங்கி நந்தி யேமு தற்பெ ருந்த கைக்க ணத்தரும்
மருங்கி ருந்த சனக னாதி மாத வத்தர் நால்வரும்
ஒருங்கி றைஞ்சி யுண்ண வுண்ண வமுத மூறு சிவகதைக்
கரும்ப ருந்த வாய்ம லர்ந்து கருணை செய்யு மெல்லைவாய்.

(இ - ள்.) பிருங்கி நந்தி முதல் பெருந்தகைக் கணத்தரும் - பிருங்கியும் திரு நந்தி தேவரும் முதலிய பெருந்தகுதியையுடைய சிவகணத் தலைவரும், மருங்கு இருந்த சனகன் ஆதி மாதவத்தர் நால்வரும் - அருகில் இருந்த சனகன் முதலிய பெரிய தவத்தினையுடைய முனிவர் நால்வரும், ஒருங்கு இறைஞ்சி - ஒரு சேர வணங்கி, உண்ண உண்ண அமுதம் ஊறு - உண்ணுந்தோறும் அமுதம் ஊற்றெடுக்கும், சிவகதைக் கரும்பு அருந்த - சிவகதையாகிய கரும்பினைச் (செவிவாயால்)

உண்ண, வாய் மலர்ந்து கருணை செய்யும் எல்லைவாய் - திருவாய் மலர்ந்து அருள் புரியும் பொழுதில்.

ஒருங்கிறைஞ்சி அருந்த எனக் கூட்டுக. (௪)

பௌவ மூழ்கு சூர்த டிந்த பால னுக்கு முலைகொடுத்
தெவ்வ மாய வினைக டீரி யக்க மாத* ரறுவருந்
தெய்வ நீறு முழுத ணிந்து செய்ய வேணி கண்டிகைச்
சைவ வேட மாதவந் தரித்து வந்து தோன்றினர்.

(இ - ம்.) பௌவம் மூழ்கு சூர் தடிந்த பாலனுக்கு - கடலின்கண் மூழ்கி யொளித்த சூரபன்மனை வதைத் தருளிய முருகக்கடவுளுக்கு, முலை கொடுத்து - பால் கொடுத்தலினால், எவ்வம் ஆய வினைகள் தீர் இயக்கமாதர் அறுவரும் - துன்பமாகிய வினைகள் நீங்கப்பெற்ற இயக்க மகளிர் அறுவரும், தெய்வ நீறு முழுது அணிந்து - தெய்வத் திருநீற்றினை உடல் முழுதும் பூசி, செய்ய வேணி கண்டிகை - சிவந்த சடையையும் உருத்திராக்க வடத்தையும் (தாங்கி,) மா சைவ தவ வேடம் தரித்து - (இங்ஙனமாகப்) பெருமை பொருந்திய சைவ தவக்கோலம் பூண்டு, வந்து தோன்றினர் - வந்து தோன்றினர்கள்.

துன்பத்திற்குக் காரணமாகிய வினையைத் துன்பமாகிய வினையென உபசரித்தார். அறுவர் கார்த்திகை மகளிர் என்று கூறப்படுவர். வேணியும் கண்டிகையும் தாங்கி என ஒருசொல் வருவித்துரைக்க. (௫)

மந்தி ரச்சி லம்ப லம்பு மலர டிக்கண் வந்திசெய்
தெந்தை யட்ட சித்தி வேண்டு மெங்க ளுக்கெ னத்தொழா
அந்த ளிர்க்கை யவரி ரப்ப வண்ண றன்ம டித்தலந்
தந்தி ருக்கு மாதை யங்கை சுட்டி யீது சாற்றுமால்.

(இ - ள்) அம் தளிர்க்கையவர் - (அங்ஙனம் தோன்றிய) அழகிய தளிர் போலும் கையையுடைய அம் மகளிர், மந்திரச் சிலம்பு அலம்பும்-வேதமாகிய சிலம்பு ஒலிக்கும், மலர் அடிக்கண் வந்தி செய்து - மலர் போன்ற திருவடியின் கண் (வீழ்ந்து) வணங்கி, தொழா - தொழுது, எந்தை - எமது தந்தையே, எங்களுக்கு அட்டமாசித்தி வேண்டும் என - அடியேங்களுக்கு அட்டமாசித்தியைத் தெரித்தருள வேண்டுமென்று, இரப்ப - குறையிரப்ப, அண்ணல் - இறைவன், தன் மடித்தலம் தந்து இருக்கும் மாதை-தனது மடித்தலத்தினைப் பெற்றிருக்கும் உமை நங்கையை, அம் கை சுட்டி ஈது சாற்றும் - அழகிய கையினாற் சுட்டி இதனைக் கூறியருளுவானாயினன்.

மந்திரம் என்றது ஈண்டு வேதத்தை. கை அவர் எனப் பிரித்துரைத்தலுமாம் தந்து - தரப்பெற்று. ஆல், அசை. (௬)

(பா - ம்.) *இயக்கி மாதர்.

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

அலர்பசும் பொலங்கொம் பன்ன வணங்கிவ ணிறைவா லெங்கும்
மலர்பரா சத்தி யாகி மகேசையா யணிமா வாதிப்
பலர்புகழ் சித்தி யெட்டும் பணிந்துகுற் றேவல் செய்யுஞ்
சிலதிய ராகிச் சூழ்ந்து சேவகஞ் செய்ய வைகும்.

(இ - ள்.) அலர் பசும் பொலம் கொம்பு அன்ன அணங்கு இவள் - மலர்ந்த பசிய பொற்கொம்பு போன்ற இவ்வுமை நங்கை, நிறைவால் - பூரணத்தன்மையால், எங்கும் மலர் பராசத்தி ஆகி - எங்கும் வியாபித்த பராசத்தி யாகியும், மகேசை ஆய் - மகேச்சுவரி எனப் பெறுவாளாகியும், அணிமா ஆதி - அணிமா முதலிய, பலர் புகழ் சித்தி எட்டும் - பலரும் புகழ்கின்ற எட்டுச் சித்திகளும், பணிந்து குற்றேவல் செய்யும் சிலதியராகி - வணங்கிக் குற்றேவல் புரியும் சேடியராகி, சூழ்ந்து சேவகம் செய்ய - சூழ்ந்து நின்று பணிசெய்யா நிற்க, வைகும் - வீற்றிருப்பாள்.

நிறைவு - பூரணம். மலர்தல் - பரத்தல், வியாபித்தல். பராசத்தி, மகேசை என்னும் சத்திகளாய் நிற்பவள் இவ்வுமையே என்றார்;

"சத்தியாய் விந்துசத்தி யாய் மனோன் மணிதா னாகி
ஒத்துறு மகேசை யாகி யுமைதிரு வாணி யாகி
வைத்துறுஞ் சிவாதிக் கிங்ஙன் வருஞ்சத்தி யொருத்தி யாகும்
எத்திற னின்றா னீச னத்திற மவளு நிற்பள்"

என்று சிவஞானசித்தியார் கூறுதல் காண்க. (எ)

இவளைநீர் சிந்தித் தான்முன் னீட்டிய வினையை நீக்கித்
தவலருஞ் சித்தி யெட்டுந் தருமெனக் கருணை பூத்துச்
சிவபரஞ் சோதி யெட்டுச் சித்தியுந் தெளித்தல் செய்தான்
அவாது மறந்தா ரும்மை யாழ்வினை வலத்தான் மன்னோ.

(இ - ள்.) இவளை நீர் சிந்தித்தால் - இப்பிராட்டியை நீவிர் சிந்திப்பீராயின், முன் ஈட்டிய வினையை நீக்கி - முற்பிறப்புக்களிலே செய்து தொகுத்த வினையைப் போக்கி, தவல் அரும் சித்தி எட்டும் தரும் என - கெடுதலில்லாத எட்டுச் சித்திகளையும் தந்தருளுவாளென்று, கருணை பூத்து - அருள் புரிந்து, சிவபரஞ்சோதி எட்டுச் சித்தியும் தெளித்தல் செய்தான் - சிவபரஞ்சுடர் எட்டுச் சித்திகளையுந் தெளிவித்தருளினான்; அவர் உம்மை ஆழ்வினை வலத்தால் அது மறந்தார் - அம்மகளிர் பிராரத்த வினையின் வலியால் அதனை மறந்தனர்.

அது மறந்தார் என்பதற்கு உமையைச் சிந்தியாமல் அச்சித்தியை மறந்தார் என்க. உம்மை யென்றது ஈண்டு முற்பிறப்புக்களை. ஆழ்வினை - ஆழமாகிய வினை. மன்னும் ஓவும் அசைகள். (அ)

செழுமதிப் பிளவு வேய்ந்த தேவுமக் குற்ற நோக்கி
முழுமதி முகத்தி னாரை முனிந்துநீர் பட்ட மங்கைப்
பழுமர முதலஞ் ஞானப் பாறையாய்க் கிடமி னென்னக்
கழுமலுற் றவர்தாழ்ந் தென்று கழிவதிச் சாப மென்றார்.

(இ - ள்.) செழுமதிப் பிளவு வேய்ந்த தேவும் - செழுமையாகிய மதியின் பிளவினை அணிந்த இறைவனும், அக்குற்றம் நோக்கி - அப்பிழையை நோக்கி, முழுமதி முகத்தினாரை முனிந்து - நிறைமதி போன்ற முகத்தினையுடைய அப்பெண்களைச் சினந்து, நீர் - நீவிர், பட்டமங்கைப் பழுமர முதல் - பட்டமங்கை யென்னும் பதியிலே ஆலமரத்தினடியில், அஞ்ஞானப் பாறையாய்க் கிடமின் என்ன - அசேதனமாகிய கற்பாறையாய்க் கிடப்பீராக என்று சபிக்க, கழுமல் உற்று அவர் தாழ்ந்து - அவர்கள் மயக்கமுற்று வணங்கி, இச்சாபம் என்று கழிவது என்றார் - இந்தச் சாபம் நீங்குவது எப்பொழுது என்று வினவினர்.

உபதேசத்தை மறந்த குற்றத்தால் அறிவில்லாத பாறையாய்க் கிடக்குமாறு சபித்தார். கழுமல் - மயங்கல். உற்றவர் என வினைப் பெயருமாம். (௬)

இப்படிக் கருங்க லாகிக் கிடத்திரா யிரமாண் டெல்லைக்
கப்புற மதுரை நின்று மடுத்துமைத் தொடுத்த சாபத்
துப்பற நோக்கி நுங்க டொல்லுரு நல்கிச் சித்தி
கைப்படு கனிபோற் காணக் காட்டுதும் போதி ரென்றான்.

(இ - ள்.) ஆயிரம் ஆண்டு எல்லைக்கு - ஆயிரம் ஆண்டளவு காறும், இப்படி கருங்கல் ஆகி கிடத்திர் - இங்ஙனங் கருங்கற் பாறையாய்க் கிடப்பீர்; அப்புறம், அதன்மேல், மதுரை நின்றும் அடுத்து - மதுரையினின்றும் வந்து, உமைத்தொடுத்த சாபத்துப்பு அற நோக்கி, உங்களைத் தொடுத்த சாபத்தின் வலிமை நீங்குமாறு கடைக்கணித்து, நுங்கள் தொல் உரு நல்கி-உங்கள் பழைய வடிவையுங் கொடுத்து-சித்தி-எட்டுச் சித்திகளையும், கைப்படு கனிபோல் காணக் காட்டுதும் - கையிலுள்ள நெல்லிக்கனிபோல ஐயந்திரிபின்றிக் காணுமாறு காட்டுவோம்; போதிர் என்றான் - செல்வீர் என்று அருளிச்செய்தான்.

எல்லைக்கு - எல்லைகாறும். துப்பு - வலி. கிடத்திர், போதிர் என்பனவற்றில் த் எழுத்துப்பேறு. (௭)

[வஞ்சித்துறை]

கொடியனார்க ளறுவரும்
நெடியவானி மிர்ந்துகார்
படியும்பட்ட மங்கையால்
அடியிற்பாறை யாயினார்.

(இ - ள்.) கொடி அனார்கள் அறுவரும் - பூங்கொடி போன்ற அம்மாதர் அறுவரும், நெடியவான் நிமிர்ந்து - நீண்ட விசும்பின்கண் உயர்ந்து, கார்படியும்-

மேகம் பொருந்தப்பெற்ற, பட்ட மங்கை ஆல் அடியில் - பட்ட மங்கை என்னும் பதியில் உள்ள ஆலமரத்தினடியில், பாறை ஆயினர் - கருங்கற் பாறையாயினர்கள்.

நிமிர்ந்து படியும் ஆல் என்க. இதனை முச்சீரடியாக்கி வஞ்சி விருத்தம் என்னலுமாம். (௧௧)

கதிர்கலம்பெய் காட்சிபோல்
உதிர்பழத்தி னுடலெலாம்
புதைபடக் கிடந்தனர்
மதாரித் தடங்கணார்.

(இ - ள்.) மதர் அரி தடங்கணார் - மதர்த்த அரி பரந்த பெரிய கண்களையுடைய அம்மகளிர், கதிர் கலம்பெய் காட்சிபோல் உதிர் பழத்தின் - (வேட்கோவர் வனைந்த) ஒளிவிடுகின்ற புதுக்கலம் வீழுந் தோற்றம்போல உதிர்கின்ற ஆலம் பழத்தினால், உடல் எலாம் புதைபடக் கிடந்தனர் - உடல் முழுதும் புதையக் கிடந்தனர்.

கதிர் கலம், வினைத்தொகை; இயல்பாகலின்.

"புதுக்கலத் தன்ன கனிய வாலம்"

என ஐங்குறு நூற்றிலும்,

"புதுக்கலம் போலும் பூங்கனி யாலும்"

எனச் சீவகசிந்தாமணியிலும் ஆலம் பழத்திற்குப் புதுக்கலம் உவமையாக வந்துள்ளமை காண்க. (௧௨)

பருவமா யிரங்கழிந்
தொருவமாட மதுரையெங்
குரவனெண் குணத்தினன்
திருவுளந் திரும்பினன்.

(இ - ள்.) ஆயிரம் பருவம் கழிந்து ஒருவ - ஆயிரம் ஆண்டு கழிந்துபோக, மாடமதுரை எம் குரவன் - மாடங்கள் நிறைந்த மதுரையின்கண் எழுந்தருளிய எமது குரவனும், எண் குணத்தினன் - எட்டுக் குணங்களை யுடையவனுமாகிய சோமசுந்தரக் கடவுள், திருவுளம் திரும்பினன் - தனது திருவுள்ளத்திற் கருணை கொண்டருளினன்.

பருவம் என்றது ஈண்டு ஆண்டினை. நீங்க அதன்பின் என்க. உளந் திரும்புதல் - கருணை கூர்தல். (௧௩)

தன்னதிச்சை கொண்டதோர்
இன்னருட் குரவனைப்
அந்நெடுங்க லாயினர்
முன்னர்வந்து தோன்றினன்.

(இ - ள்.) தன்னது இச்சை கொண்டது ஓர் இன் அருள் குரவனாய் - தனது இச்சையினாலே திருமேனி கொண்டருளிய இனிய கருணைக் குரவனாகி, அங்கு ஒடுங்கல் ஆயினார் முன்னர் வந்து தோன்றினான் - நீண்ட கருங்கல்லாய்க் கிடக்கும் அப்பெண்களின் முன்வந்து தோன்றி யருளினான்.

தன்னது னகரம் விரித்தல். கொண்டது - கொண்ட திருமேனியையுடைய. இறைவன் சுதந்தரனாகலின் அவன் கொள்ளும் திருமேனி அவனது இச்சையாலாவதென்க;

"நிறுத்துவ னினைந்த மேனி நின்மல னருளி னாலே"

எனச் சிவஞானசித்தியார் கூறுதல் காண்க. (௧௪)

இருட்டதும்பு கோதையார்
மருட்டதும்பு வினைகெட
அருட்டதும்பு கண்ணினாற்
றெருட்டதும்ப நோக்கினான்.

(இ - ள்.) இருள் ததும்பு கோதையார் - இருள் மிக்க கூந்தலையுடைய அப் பெண்களின், மருள் ததும்பு வினைகெட - அஞ்ஞானத்தால் வந்த பெருந்தீவினை கெடுமாறு, அருள் ததும்பு கண்ணினால் - அருள் நிறைந்த திருவிழியால், தெருள் ததும்ப நோக்கினான்-ஞான மிக நோக்கி யருளினான்.

ததும்புதல் - நிறைதல். மருள் - அஞ்ஞானம். தெருள் - ஞானம். இசைப் பொருட்டு நான்கடியிலும் டகரம் விரிந்து நின்றது. (௧௫)

அடிகணோக்க வம்புயங்
கடிகொணெய்தல் காந்தள்பைங்
கொடிகொண்முல்லை குமுதமேற்
படியப்பூத்த பாறையே.

(இ - ள்.) அடிகள் நோக்க - இறைவன் அங்ஙனம் நோக்கியருள, பாறை - அக்கற் பாறைகள், அம்புயம் - தாமரை மலர்களையும், கடிகொள் நெய்தல் - மணத்தினைக் கொண்ட நெய்தல் மலர்களையும், காந்தள் - காந்தட் பூக்களையும், பைங் கொடி கொள் முல்லை - பசிய கொடியிற் பொருந்திய முல்லையரும்புகளையும், குமுதம் - ஆம்பல் மலர்களையும், மேல் படியப் பூத்த - தம்மேற் பொருந்துமாறு பூத்தன.

அடிகள் நோக்க பாறை பூத்தன வென்க. அம்புயம் முதலியவற்றை எழுவாயாக்கி, பாறையின்மேற் படியப் பூத்தன என்னலுமாம். கல்லுருநீங்கிப் பெண்ணுருவெய்தினமையை இங்ஙனங் கூறினார். அம்புயம் முதலிய உவமைகளால் முகம், கண், கை, பல், வாய் என்னும் பொருள்களை இலக்கணையாகச் சொல்லினமையின் இச்செய்யுள் உருவகவுயர்வு நவிற்சியணி. (௧௬)

தாக்கவேத கத்திரும்
பாக்கமுற்ற பொன்னென
நீக்கமற்ற விருண்மல
வீக்கமற்று விட்டதே.

(இ - ள்.) வேதகத்து இரும்பு தாக்க - பரிசவேதியில் இரும்பு தாக்குற, ஆக்கம் உற்ற பொன் என - (அவ்விரும்பின் றன்மை கெட்டு) ஆகிய பொன்னைப் போல, நீக்கம் அற்ற இருள் மலவீக்கம் அற்று விட்டது - (இறைவன் திருவருட் பார்வையால்) நீங்காத ஆணவமலத்தின் கட்டு அற்று விட்டது.

மேற்செய்யுளிலுள்ள 'அடிகள் நோக்க' என்பதனை ஈண்டும் கூட்டியுரைக்க. நீக்க மற்ற - பிரிப்பின்றியிருந்த. வீக்கம் - செறிவுமாம். (௧௭)

நிறையுமன்பெ னுந்நதி
பொறையெனுங் கரைகடந்
திறைவனின்ன ருட்கடற்
றுறையின்வாய் மடுப்பவே.

(இ - ள்.) நிறையும் அன்பு எனும் நதி - நிறைந்த அன்பு என்னும் யாறானது, பொறை எனும் கரை கடந்து - பொறுமை யென்னுங் கரையைக் கடந்து, இறைவன் இன் அருள் கடல் துறையின்வாய் மடுப்ப - சிவபெருமானது இனிய திருவருளாகிய கடலின் துறையின்கண் (சென்று) கலக்க.

அடக்கலாற்றாது பொங்கி யெழுந்த தென்பார் 'பொறை யெனுங் கரை கடந்து' என்றார். (௧௮)

எழுந்திறை யடிக்கணே
அழுந்துநேச மொடுதவக்
கொழுந்தனார்க ளறுவரும்
வீழுந்திறைஞ்சி னாரரோ.

(இ - ள்.) தவக்கொழுந்து அனார்கள் அறுவரும் - தவத்தின் கொழுந்து போன்றாராகிய அம் மகளிராறுவரும், எழுந்து-எழுந்து, அழுந்து நேசமொடு-ஆழ்ந்த அன்புடன், இறை அடிக்கண் விழுந்து இறைஞ்சினார்-இறைவன் திருவடியின்கண் வீழ்ந்து வணங்கினார்கள்.

அறுவரும் எழுந்து நேசமொடு இறைஞ்சினார் என்க. அரோ, அசை. (௧௯)

குமாரற்கூட்டு மிளமுலை
உமையொப்பார்கள் சென்னிமேல்
அமலச்சோதி யங்கையாங்
கமலப்போது சூட்டினான்.

(இ - ள்.) குமரற்கு ஊட்டும் இளமுலை உமை ஒப்பார்கள் சென்னிமேல் - முருகக் கடவுளுக்குப் பால் அருத்தும் இளமையாகிய கொங்கையையுடைய உமையம்மை போலும் அப்பெண்களின் முடியின்மேல், அமலச்சோதி - தூய ஒளிவடிவினனாகிய இறைவன், அம் கை ஆம் கமலப்போது சூட்டினான் - அழகிய கையாகிய தாமரை மலரைச் சூட்டினான்.

சென்னியிற்கை வைத்தல் பரிச தீக்கை. போது என்றதற் கேற்பச் சூட்டினான் என்றார். (உ௰)

சித்தியெட்டு மங்கலார்
புத்தியிற் கொளுந்தவே
கைத்தலத்தில் வைத்ததோர்
முத்தெனத் தெருட்டுவான்.

(இ - ள்.) சித்தி எட்டும் - எட்டுச் சித்திகளையும், அங்கலார் புத்தியில் கொளுந்த - அம்மகளிரின் அறிவிற் பொருந்த, கைத்தலத்தில் வைத்தது ஓர் முத்து எனத் தெருட்டுவான் - கையின்கண் வைத்த முத்தினைப் போலத் தெளிவிப்பானாயினன்.

கைக்கனி என்பதுபோல் மணி முதலியவும் கூறப்படும். ஓர், இசை நிறைக்க வந்தது. (உக)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

அணிமா மகிமா விலகிமா வரிய கரிமா பிராத்திமலப்
பிணிமா சுடையோர்க் கடைவரிய பிராகா மியமீ சத்துவமெய்
துணிமா யோகர்க் கெளியவசித் துவமென் றெட்டா மிவையுளக்கண்
மணிமா சறுத்தோர் விளையாட்டின் வகையா மவற்றின் மரபுரைப்பாம்.

(இ - ள்.) அணிமா மகிமா இலகிமா அரிய கரிமா பிராத்தி - அணிமாவும் மகிமாவும் இலகிமாவும் அருமையையுடைய கரிமாவும் பிராத்தியும், மலப்பிணி மாசு உடையோர்க்கு அடைவு அரிய பிராகாமியம் ஈசத்துவம் - மல நோயாகிய குற்றமுடையார்க்கு அடைதலரிய பிராகாமியமும் ஈசத்துவமும், மெய்துணிமா யோகர்க்கு எளிய வசித்துவம் என்று எட்டு ஆம் - மெய்ப்பொருளை யுணர்ந்த பெரிய யோகியருக்கு எளிய வசித்துவமும் என்று அச்சித்தி எட்டு வகைப்படும்; இவை உளக்கண் மணி மாசு அறுத்தோர் விளையாட்டின் வகையாம் - இவைகள் உள்ளத்தின்கண் கரிய அவிச்சையை நீக்கினவர்களின் விளையாட்டின் வகையாகும்; அவற்றின் மரபு உரைப்பாம் - அவற்றின் தன்மையைக் கூறுவாம்.

மாயோகர்க்கு எளிய என்றது ஏனையர்க்கு அரிய என்றபடி. மணி-கருமை. ()

அறவுஞ் சிறிய வுயிர்தொறுந்தான் பரம காட்டை யணுவாய்ச்சென்
றுறையுஞ் சிறுமை யணிமாவா மூவரி ஞால முதன்மேலென்
றறையுஞ் சிவாந்த மாரூறு முள்ளும் புறனு மகலாதே
நிறையும் பெருமை தனையன்றோ மகிமா வென்னு நிரம்பியநூல்.

(இ - ள்.) அறவும் சிறிய உயிர் தொறும் - மிகவும் நுண்ணிய உயிர்கள் தோறும், தான் பரமகாட்டை அணுவாய்ச் சென்று உறையும் சிறுமை அணிமா ஆம் - தான் (சிறுமையில்) முடிவாகிய பரமாணுவாய்ச் சென்று தங்கும் நுண்மையே அணிமாவாகும்; நிரம்பிய நூல் - பொருள் நிரம்பிய நூல்கள், உவரி ஞால முதல் மேல் என்று அறையும் சிவ அந்தம் ஆரூறும் - கடல் சூழ்ந்த நில முதலாக எல்லா வற்றினும் மேல் என்று கூறப்படும் சிவம் ஈறாகவுள்ள முப்பத்தாறு தத்துவங்களின், உள்ளும் புறனும் அகலாது நிறையும் பெருமைதனை - அகத்தும் புறத்தும் நீங்காது உறையும் பெருமையை, மகிமா என்னும் - மகிமா என்று கூறுநிற்கும்.

காட்டை - முடிவு; வரம்பு. பிருதிவு தத்துவத்தை ஞாலம் என்றதற் கேற்ப உவரியென அடைகொடுத்துக் கூறினர். சிவம்-சிவதத்துவம். சிவாந்தம், நெடிற் சந்தி. நிரம்பிய நூல் - மெய்ந்நூல். அன்று, ஓ அசைகள். (உ௩)

இலகு மேரு பாரம்போ லிருக்கும் யோகி தனையெடுத்தால்
இலகு வான பரவணுப்போ* லிருப்ப திலகி மாவாகும்
இலகு வான பரவணுப்போ லிருக்கும் யோகி தனையெடுத்தால்
இலகு மேரு பாரம்போ லிருப்ப தன்றோ கரிமாவாம்.

(இ - ள்.) இலகு மேரு பாரம்போல் இருக்கும் யோகிதனை எடுத்தால் - விளங்காநின்ற மேருமலையின் பாரம்போலக் கனத்திருக்கும் யோகியை எடுத்தால், இலகு ஆன பர அணுப்போல் இருப்பது இலகிமா ஆகும்-இலேசான பரமாணுவைப் போலக் கனமற்று இருப்பது இலகிமாவாம்; இலகு ஆன பர அணுப்போல் இருக்கும் யோகிதனை எடுத்தால்-இலேசான பரமாணுவைப்போல மெலிந்திருக்கும் யோகியை எடுத்தால், இலகு மேரு பாரம்போல் இருப்பது கரிமா ஆம் - விளங்காநின்ற மேரு மலையின் கனம்போலக் கனமாக இருப்பது கரிமாவாம்.

அன்று, ஓ அசைகள். தூலம் என்பது பாடமாயின் பஞ்சு என்பது பொருளாம். (உ௪)

பிலத்தி லிருந்தோ னயனுலகிற் புகுதன் மீண்டும் பிலமடைதல்
பலத்தின் மிகுந்த பிராத்தியதாம் பரகா யத்தி னண்ணுதல்வான்
புலத்தி னியங்க லிச்சித்த போக மனைத்துந் தானிருக்குந்
தலத்தி னினைந்த படிவருதல் பிராகா மியமாந் தவக்கொடியீர்.

---

(பா - ம்.) *இலகுவான தூலமென.

(இ - ள்.) தவக் கொடியீர் - தவக்கொடிபோலும் நங்கைமீர், பிலத்தில் இருந்தோன் அயன் உலகில் புகுதல் - பிலத்தின்கண் இருந்தவன் பிரமனுலகில் அடைதலும், மீண்டும் பிலம் அடைதல் - மீளவும் பிலத்திற் புகுதலும், பலத்தின் மிகுந்த பிராத்தியதாம் - பயனால் மிக்க பிராத்தியாகும்; பரகாயத்தில் நண்ணுதல் - வேறு உடலிற் புகுதலும், வான் புலத்தின் இயங்கல் - வானின்கண் சஞ்சரித்தலும், இச்சித்த போகம் அனைத்தும் - விரும்பிய போகமெல்லாம், தான் இருக்கும் தலத்தில் நினைத்தபடி வருதல் - தான் இருக்குமிடத்தில் நினைந்த வண்ணமே வரச்செய்தலும், பிராகாமியம் ஆம் - பிராகாமிய மாகும்.

அது பகுதிப்பொருள் விகுதி. வருவித்தல் என்பது விவ்விகுதி குன்றி நின்றது. (உ௫)

விண்ணி லிரவி தன்னுடம்பின் வெயிலா லனைத்தும் விளக்குதல்போல்
மண்ணி லுளவாம் பொருள்பலவுங் கால மூன்றும் வானத்தின்
கண்ணி லுளவாம் பொருளுந்தன் காயத் தொளியா லிருந்தறிதல்
எண்ணி லிதுவு மறையொருசார் பிராகா மியமென் றியம்புமால்.

(இ - ள்.) விண் இல் இரவி தன் உடம்பின் வெயிலால் - வானின்கண் உள்ள சூரியன் தனது உடலின் ஒளியால், அனைத்தும் விளக்குதல்போல் - எல்லாவற்றையும் விளங்கச் செய்தல்போல, மண்ணில் உளவாம் பொருள் பலவும் - நிலவுலகில் உள்ள பொருளனைத்தையும், காலம் மூன்றும் - மூன்று காலங்களையும், வானத்தின் கண்ணில் உளவாம் பொருளும் - விண்ணுலகிலுள்ள பொருள்களையும், தன் காயத்து ஒளியால் இருந்து அறிதல் - தனது உடம்பின் ஒளியினால் (விளங்கச் செய்து) தானிருந்த வண்ணமே அறிதலாகிய, இதுவும் - இதனையும், எண்ணில் - ஆராயுமிடத்து, மறை ஒருசார் பிராகாமியம் என்று இயம்பும் - வேதம் ஒருபுடை பிராகாமியம் என்று கூறாநிற்கும்.

தான் ஓரிடத்திருந்தே யாவற்றையும் தன் காயத்தொளியால் விளங்கச் செய்து அறிதல் என்க. (உ௬)

ஈச னெனமுத் தொழிலுந்தன் னிச்சை வழிசெய் தெழுபுரவித்
தேசன் முதற்கோள் பணிகேட்பத் திகழ்வ தீசத் துவமாகும்
பூச லவுணர் புள்விலங்கு பூத மனிதர் முதலுலகும்
வாச வாதி யெண்மருந்தன் வசமாக் கொள்கை வசித்துவமாம்.

(இ - ள்.) ஈசன் என முத் தொழிலும் தன் இச்சை வழிசெய்து - சிவபெருமானைப்போல ஆக்கலும் அழித்தலும் காத்தலுமாகிய மூன்று தொழில்களையும் தன் இச்சையின்படியே இயற்றி, எழு புரவித் தேசன் முதல் கோள் பணி கேட்ப - எழு குதிரைகளையுடைய சூரியன் முதல் ஒன்பது கோள்களும் ஏவல் கேட்க, திகழ்வது ஈசத்துவம் ஆகும் - விளங்குவது ஈசத்துவமாகும்; பூசல் அவுணர் புள்விலங்கு பூதம்

மனிதர் முதல் உலகும் - போர்த் தொழிலையுடைய அவுணரும் பறவையும் விலங்கும் பூதமும் மனிதரும் முதலிய பல்வகை உயிர்களையும், வாசவ ஆதி எண்மரும் - இந்திரன் முதலிய திக்குப்பாலர் எண்மரையும், தன் வசமாக் கொள்கை வசித்துவம் ஆம் - தன் வசமாகச் செய்து கொள்வது வசித்துவம் ஆகும்.

தேசன் - ஒளியுருவன்; ஆதித்தன். உலகு என்பது ஈண்டு உயிர் என்னும் பொருட்டு. வாசவாதி, தீர்க்க சந்தி. (உஎ)

எம்மை யுணர்ந்த யோகியர்க ளிவற்றை விரும்பா ரெனினுமவர்
தம்மை நிழல்போ லடைந்துலகர்க் கனையார் பெருமை தனையுணர்த்தும்
செம்மை யுடைய விவையென்னச் சித்தி யெட்டுந் தெளிவெய்தக்
கொம்மை முலையா ரறுவருக்குங் கொளுத்தி னனெண் குணச்செல்வன்.

(இ - ள்.) எம்மை உணர்ந்த யோகியர்கள் - எம்மை யறிந்த சிவயோகியர், இவற்றை விரும்பார் எனினும் - இச் சித்திகளை விரும்பாராயினும், அவர் தம்மை நிழல்போல் அடைந்து - அவர்களை உடம்பின் நிழல்போலத் தொடர்ந்து, உலகர்க்கு அனையார் பெருமைதனை உணர்த்தும் செம்மையுடைய இவை என்ன - உலகினருக்கு அவர் பெருமையை அறிவிக்கும் தகுதியை யுடையனவாம் இச் சித்திகள் என்று, சித்தி எட்டும் தெளிவு எய்த - அவ்வெண் சித்திகளையும் தெளிவுபட, கொம்மை முலையார் அறுவருக்கும் - திரண்ட கொங்கைகளையுடைய மகளிர் அறுவருக்கும், எண்குணச் செல்வன் கொளுத்தினன் - எட்டுக் குணங்களாகிய செல்வத்தினை யுடைய இறைவன் அறிவித்தான்.

சிவஞானச் செல்வமுடைய பெரியார் இச் சித்திகளை விரும்பாராதலை,

> "இந்திரச் செல்வமு மெட்டுச் சித்தியும்
> வந்துழி வந்துழி மறுத்தன ரொதுங்கி"

என்று பட்டினத்தடிகள் கூறுமாறு காண்க. செம்மையுடைய இவை உணர்த்தும் என முடித்தலுமாம். (உஅ)

[வேறு]

தேவதே வுபதே சித்த சித்தியைச் சிலம்பன் செல்வி
பாவனை வலத்தா னன்கு பயின்றுவான் வழிக்கொண் டேகிப்
பூவலர் கதுப்பி னல்லா ரறுவரும் புரமூன் றட்ட
காவலன் விரும்பி வைகுங் கயிலைமால் வரையிற் புக்கார்.

(இ - ள்.) பூ அலர் கதுப்பின் நல்லார் அறுவரும் - மலர்கள் நிறைந்த கூந்தலையுடைய மகளிரறுவரும், தேவதே உபதேசித்த சித்தியை - தேவ தேவனாகிய சோமசுந்தரக்கடவுள் உபதேசித்தருளிய அட்டமாசித்தியையும், சிலம்பன் செல்வி பாவனை வலத்தால் நன்கு பயின்று - மலையரையன் புதல்வியாகிய உமையம்மையின்

தியானவலியால் நன்ருகப் பயின்று, வான் வழிக்கொண்டு ஏகி - வான் வழியாற் சென்று, புரம் மூன்று அட்ட .காவலன் விரும்பி வைகும் - திரிபுரங்களை எரித்த இறைவன் விரும்பி வீற்றிருக்கும், கயிலைமால் வரையில் புக்கார் - கைலை என்னும் பெரிய மலையிற் புகுந்தனர்.

தேவு எனப் பிரித்தலுமாம். சிவன் தேவ தேவனுதலை,

"தேவதேவன் சிவன் பெருந் தன்மையே"

என்னும் திருநாவுக்கரசர் தேவாரத்தா லறிக.

"இவளைநீர் சிந்தித் தால்முன் னீட்டிய வினையை நீக்கித்
தவலருஞ் சித்தி யெட்டுந் தரும்"

என முன்பு சிவபெருமான் அருளிச் செய்தமையால் உமையின் பாவனை வலத்தால் நன்கு பயின்ருரென்க. இங்ஙனம் பட்டமங்கையில் அட்டமாசித்தி உபதேசித்த வரலாறு,

"பட்ட மங்கையிற் பாங்கா யிருந்தங்
கட்டமா சித்தி யருளிய வதுவும்"

எனத் திருவாசகத்திற் குறிப்பிடப்பெற்றது. (உக)

ஆகச்செய்யுள் - கூஎஅஅ.

முப்பத்துநான்காவது

# விடையிலச்சினையிட்டபடலம்

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

சந்து சூழ்மல யச்சி லம்பர் தவம்பு ரிந்த வியக்கிமார்க்
கந்த நாலிரு சித்தி தந்த தறைந்த னந்தன தடிதொழா
வந்த மீள்வள வன்பொ ருட்டு வடாத வாயிற் றந்தழைத்
திந்த சேகரன் விடையி லச்சினை யிட்ட வாறுவி ளம்புவாம்.

(இ - ள்.) சந்து சூழ்மலயச் சிலம்பர் - சந்தன மரங்கள் சூழ்ந்த பொதியின் மலையையுடைய சோமசுந்தரக் கடவுள், தவம்புரிந்த இயக்கி மார்க்கு - தவமியற்றிய இயக்க மாதர் அறுவர்க்கு, அந்தநாலிருசித்தி தந்தது அறைந்தனம் - அந்த எட்டுச் சித்திகளையும் அருளிச் செய்த திருவிளையாடலைக் கூறினோம்; வந்து தனது அடி தொழா மீள்வளவன் பொருட்டு - வந்து தனது திருவடிகளை வணங்கித் திரும்பும் சோழமன்னன் பொருட்டு, வடாது வாயில் திறந்து அழைத்து - வடக்கு வாயிலைத் திறந்து உள்ளே அழைத்து, இந்து சேகரன் விடை இலச்சினை இட்டவாறு விளம்புவாம் - பிறை முடியனாகிய இறைவன் இடபக்குறியினைப் பொறித்த திருவிளையாடலை (இனிக்) கூறுவாம்.

எண் சித்திகளும் முன் கூறினமையால் 'அந்த' எனச் சுட்டினார். வளவன் பொருட்டு அங்ஙனந் தொழுதற்குத் திறந்தழைத்து இலச்சினை யிட்டவாறு என்க.

வடாது - வடக்கிலுள்ளது. (க)

தோடு வெட்டி மலைத்து வாள்விதிர் துணைவி ழிக்குயி லிளமுலைக்
கோடு வெட்டிய குறிகொள் மேனியர் குடிகொள் மாநகர் கடிகொள்பைங்
காடு வெட்டிய கார ணக்குறி காடு வெட்டிய சோழனென்
றேடு வெட்டிய வண்டு சூழ்பொழி லெயில்கொள் கச்சியு ளானவன்.

(இ - ள்.) தோடு மலைத்து வெட்டி - (காதின்) தோட்டினைப் போர்புரிந்து வெட்டி, வாள் விதிர் துணைவிழிக் குயில் - வாளை அசைத்தாலொத்த இரண்டு விழிகளையுடைய குயில்போலும் உமைப்பிராட்டியின், இளமுலைக்கோடு வெட்டிய குறிகொள் மேனியர் - இளமையாகிய கொங்கை யென்னுங் கொம்பினாற் போழப்பட்ட குறியினைக் கொண்ட திருமேனியை யுடைய ஏகம்பவாணர், குடிகொள் மாநகர் - எழுந்தருளி யிருக்கும் பெருமை பொருந்திய காஞ்சி நகரில், கடிகொள் பைங்காடு வெட்டிய காரணக்குறி - (கண்டோர்க்கு) அச்சம் விளைத்தலைக் கொண்ட பசிய காடுகளை வெட்டிய காரணக் குறியினானே, காடுவெட்டிய சோழன் என்று - காடு

வெட்டிய சோழனென்று பெயர் கூறப்பட்டு, ஏடு எட்டிய வண்டுசூழ் பொழில் எயில்கொள் கச்சியுளான் - இதழ்கள் பொருந்திய வண்டுகள் மொய்க்கும் சோலைகளையுடைய மதிலையுடைய காஞ்சிநகரி லுள்ளான் ஒருவன்; அவன்-அம்மன்னன்.

மாநகரைச் சூழவென்க. கடி - மணமுமாம். ஏடுவெட்டிய வண்டு - இதழினைக் கிண்டியவண்டு என்றுமாம். சிவபெருமான் உமையின் தனக்குறி யணிந்த வரலாற்றைக் காஞ்சிப் புராணம் - தழுவக் குழைந்த படலத்திலும், திருத்தொண்டர் புராணம் - திருக்குறிப்புத் தொண்டர் புராணத்திலும் காண்க. (௨)

உத்த மச்சிவ பத்த ரிற்பெரி துத்த மன்புது விரைகலன்
மித்தை யென்றுவெ ணீறு கண்டிகை யார மென்றணி மெய்யினான்
நித்த வேத புராண மாதி நிகழ்த்தி டும்பொருள் கண்ணுதல்
அத்த னேபர தத்து வப்பொரு ளென்ற ளந்தறி கேள்வியான்.

(இ - ள்.) உத்தம சிவபத்தரில் பெரிது உத்தமன் - உத்தமமாகிய சிவபத்தியுடைய அடியாருள் மிகவும் உத்தமன்; புது விரைகலன் மித்தை என்று - புதிய மணமுடைய சந்தனமும் அணிகலனும் அழியும் பொருளென்று கருதி, வெள்நீறு கண்டிகை - வெள்ளிய திருநீறும் உருத்திராக்க மாலையுமே, ஆரம் என்று அணி மெய்யினான் - சந்தனமும் முத்தாரமு மென்று அணிந்த மேனியை யுடையவன்; நித்த வேதம் புராணம் ஆதி - அழியாத மறைகளும் புராணங்களும் முதலிய நூல்கள், நிகழ்த்திடும் பொருள் கண்நுதல் அத்தனே - கூறும் பொருள் நுதற்கண்ணை யுடையராகிய சிவபெருமானே; பரதத்துவப் பொருள் என்று அளந்து அறி கேள்வியான் - (ஆகலின் அவனே) மேலான உண்மைப் பொருள் என்று அளந்தறிந்த கேள்வியை யுடையவன்.

மித்தை - பொய்; ஈண்டு அநித்த மென்னும் பொருட்டு. அவற்றால் விளையும் இன்பம் நிலையற்ற தென்றபடி. ஆரம் என்பது இரட்டுற மொழிதலாற் சந்தனத்தையும் முத்தையும் உணர்த்திற்று. வெண்ணீறு சாந்தமும், கண்டிகை முத்து வடமும் எனக் கொள்க. அளந்தறி - வேதம் முதலிய அளவைகளால் அளந்தறிந்த. (௩)

அங்க மாறொடு வேத நான்கு மறிந்து மெய்ப்பொரு ளாய்ந்துளஞ்
சங்கை கொண்டனு தினம ரன்புகழ் சாற்று சைவபு ராண நூல்
பொங்கு மின்சுவை யமுதந் தன்செவி வாய்தி றந்து புகட்டியுண்*
டெங்க ளையனடிபி ணைக்க ணிருத்து மன்பு கருத்துளான்.

(இ - ள்.) அங்கம் ஆறொடு வேதம் நான்கும் அறிந்து - இங்ஙனம் ஆறு அங்கங்களையும் நான்கு மறைகளையும் கற்று, மெய்ப்பொருள் ஆய்ந்து - உண்மைப் பொருளை ஆராய்ந்து துணிந்து, உளம் சங்கை கொண்டு - உள்ளத்தால் (அப்பொருளைச்) சிந்தித்தல் செய்து, அனுதினம் - எப்பொழுதும், அரன் புகழ் சாற்று - சிவபெருமான் புகழைக் கூறுகின்ற, சைவ புராண நூல் - சிவ புராண நூல்களாகிய,

(பா - ம்.) *புகட்டவுண்டு.

பொங்கும் இன்சுவை அமுது - மிக்க இனிய சுவையோடு கூடிய அமுதினை, தன் செவிவாய் திறந்து - தனது செவியாகிய வாயினைத்திறந்து, புகட்டி உண்டு - (பெரியோர்) ஊட்ட உண்டு, எங்கள் நாயகன் அடி இணைக்கண் - எங்கள் பெருமானாகிய அவ்விறைவனுடைய இரு திருவடியின்கண்ணும், இருத்தும் அன்பு கருத்துளான் - பதிய வைத்த அன்பு மிக்க மனத்தினையுடையவன்.

அங்கம் ஆறு - சிட்சை, வியாகரணம், நிருத்தம், கற்பம், சந்தம், சோதிடம் என்பன; இவை வேதத்திற்கு உறுப்புக்கள் போறலின் அங்கம் எனப்படும்; இவற்றின் இயல்பு முன் உரைக்கப் பெற்றமை காண்க. சங்கை - ஈண்டுச் சிந்தித்தல் என்னும் பொருட்டு. புகட்டி - ஊட்டப்பெற்று. (௬)

முக்க ணாயகன் முப்பு ரத்தை முனிந்த நாயகன் மங்கையோர்
பக்க நாயகன் மிக்க வானவர் பரவு நாயக னரவணிச்
சொக்க* நாயக னாடலுஞ் செவி யான்மு கந்து சுவைதருந்†
தக்க பாலொடு தேன்க லந்துத ருக்கி யுண்பவ னாயினான்.

(இ - ள்.) முக்கண் நாயகன் - மூன்று கண்களையுடைய இறைவனும், முப்புரத்தை முனிந்த நாயகன் - திரிபுரங்களை எரித்தருளிய இறைவனும், மங்கை ஓர் பக்க நாயகன் - உமையை ஒரு கூற்றில் வைத்த இறைவனும், மிக்க வானவர் பரவும் நாயகன் - சிறந்த தேவர்கள் வழிபடும் இறைவனுமாகிய, அரவு அணிச்சொக்க நாயகன் ஆடலும் - பாம்பாகிய அணியினையுடைய சொக்கலிங்க மூர்த்தியின் திருவிளையாடலையும், செவியால் முகந்து - செவியினால் மொண்டு, சுவைதரும் தக்க பாலொடு தேன் கலந்து - சுவையினைத் தருகின்ற சிறந்த பாலுந்தேனுங் கலந்து, தருக்கி உண்பவன் ஆயினான் - உண்டு களிப்பானாயினன்.

ஒரு பொருள்மேற் பல பெயர் வந்தன. அரவணி சொக்கநாயகன் என இயல்பாயின் வினைத்தொகையாகும், சைவ புராணங்களுடன் சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடலைக் சேடடலைப் பாலுந் தேனும் கலந் துண்பதாகக் கூறினார். உண்டு தருக்குபவனாயினான் எனப் பிரித்துக் கூட்டுக. (௭)

அங்க யற்கண் மடந்தை பாக னடித்த லந்தொழு மாசைமேற்
பொங்கி மிக்கெழு மன்ப னாய்மது ரேசன் மின்னு பொலங்கழற்
பங்க யப்பத மென்று நான்பணி வேனெ னப்பரி வெய்தியே
கங்கு லிற்றுயில் வான்க யற்புரை கண்ணி பங்கனை யுன்னியே.

(இ - ள்.) அங்கயற்கண் மடந்தை பாகன் - அங்கயற்கண்ணம்மையை ஒரு பாகத்திலுடைய சோமசுந்தரக்கடவுளின், அடித்தலம் தொழும் ஆசைமேல் பொங்கி மிக்கு எழும் அன்பனாய் - திருவடிகளை(க் கண்டு) தொழவேண்டுமென்னும் ஆசை மேலே பொங்கி எழுதலால் அதிகரித் தெழுகின்ற அன்புடையனாகி, மதுரேசன் மின்னு பொலம் கழல் பங்கயப்பதம் - மதுரைப்பிரானின் விளங்குகின்ற பொன்னா

(பா - ம்.) *அரவணி சொக்க. †சுவைத்தருந்.

லாகிய வீரக்கழலணிந்த தாமரை மலர்போலுந் திருவடிகளை, நான் என்று பணி வேன் எனப் பரிவு எய்தி - யான் என்று கண்டு வணங்குவேன் எனப் பரிவுகூர்ந்து, கயல்புரை கண்ணி பங்கனை உன்னி - கயல்போலும் கண்களையுடைய உமை பாக னாகிய அப்பெருமானைச் சிந்தித்துக் கொண்டே, கங்குலில் துயில்வான் - இரவில் உறங்குவா னாயினன்.

பரிவு - அன்பு, துன்பம். கயற்புரை கண்ணிபங்கன் என்பதனைச் சுட்டாகக் கொள்க. (சு)

அன்று செம்பியர் கோம கன்கன வின்கணே யருள் வெள்ளிமா
மன்று ணின்றவர் சித்த ராயெதிர் வந்து மன்னவ நின்னுளத்
தொன்று மஞ்ச லொருத்த னாகி யுருத்தி ரிந்துத னித்துவந்
தின்று வந்தனை செய்து போதி யெனப்பு கன்றன ரேகினார்.

(இ - ள்.) அன்று - அப்பொழுது, செம்பியர் கோமகன் கனவின்கண்-காடு வெட்டி என்னும் சோழர் பெருமானது கனவினிடத்து, அருள் வெள்ளி மாமன்றுள் நின்றவர் சித்தராய் எதிர்வந்து - அருள் மயமாகிய பெரிய வெள்ளியம்பலத்திலே நின்றருளிய இறைவர் சித்தமூர்த்தியாய் எதிரே வந்து, மன்னவ - அரசனே, நின் உளத்து ஒன்றும் அஞ்சல் - நின் மனதின்கண் சிறிதும் அஞ்சற்க; ஒருத்தனாகி உரு திரிந்து - நீ ஒருவனாய் மாறுவேடம் பூண்டு, தனித்து வந்து இன்று வந்தனைசெய்து போதி என - துணையின்றி வந்து இன்று வணங்கிப் போவாயாக என்று, புகன்றனர் ஏகினார் - திருவாய்மலர்ந்தருளிச் சென்றனர்.

போதி, த் எழுத்துப்பேறு. புகன்றனர், முற்றெச்சம். (எ)

கேட்டு வேந்தன் விழித்து ணர்ந்து கிளர்ந்த வற்புத னாகியே
ஈட்டு சேனை யமைச்சு ளார்பிறர் யாரு மின்றி வழிக்கொளீஇ
நாட்ட மூன்றவ னாம வாள்கொடு நல்ல ருட்டுணை யாய்வழி
காட்ட வன்பெனு மிவுளி மேல்கொடு கங்குல் வாய்வரு வானரோ.

(இ - ள்.) வேந்தன் கேட்டு விழித்து உணர்ந்து - சோழமன்னன் (அவ்வரு ளிப் பாட்டினைக்) கேட்டு விழித்து அறிந்து, கிளர்ந்த அற்புதனாகி - மிக்க வியப் புடையவனாய், ஈட்டு சேனை அமைச்சுளார் பிறர் யாரும் இன்றி - தொகுக்கப்பட்ட சேனைகளும் மந்திரிகளும் வேறு யாரும் இல்லாமல், கங்குல்வாய்-அவ்விரவிலேயே, நல் அருள் துணையாய் வழிகாட்ட - நல்ல திருவருள் துணையாய் நின்று வழிகாண் பிக்க, அன்பு எனும் இவுளி மேல்கொடு - அன்பு என்னுங் குதிரையிலேறி, நாட்டம் மூன்று உடையவன் நாமவாள் கொடு - கண்கள் மூன்றுடைய இறைவனது திரு நாமமாகிய திருவைந்தெழுத்தென்னும் வாட்படை யேந்தி, வழிக்கொளீஇ வருவான் - வழிக்கொண்டு வருவானாயினன்.

இறைவன் திருநாமம் பஞ்சாக்கர மென்பதனையும், அஃது அடியார்களின் இடையூறுகளையும் வாள்போல்வ தென்பதனையும்,

"படைக்கல மாகவுன் னுமத் தெழுத்தஞ்செ னுவிற் கொண்டேன்"

என்று திருநாவுக்கரசர் அருளிச்செய்தலால் அறிக. நாமம் முதலியவற்றை வாள முதலியவாக உருவகஞ் செய்தமையால் இஃது உருவகவணி. அரோ, அசை. (அ)

கல்லு மாரழ லத்த மும்பல கலுழி யுங்குண கனைகடற்
செல்லு மாநதி பலவும் வானிமிர் கன்ன லுஞ்செறி செந்நெலும்
புல்லு மாநில னுங்க ழிந்து புறங்கி டக்கந டந்துபோய்
வல்லு மாமுலை யார்க ணம்பயில் வையை யந்துறை யெய்தினன்.

(இ - ள்.) கல்லும் - மலைகளும், ஆர் அழல் அத்தமும் - நிறைந்த நெருப்புப் போலும் பாலைநிலமும், பல கலுழியும்-பல காட்டாறுகளும், குண கனைகடல் செல்லும் மாநதி பலவும் - ஒலிக்கின்ற கீழ்க்கடலிற் சென்று கலக்கும் பெரிய பல நதிகளும், வான்நிமிர் கன்னலும் செந்நெலும் புல்லும் மாநிலனும் - வானை யளாவிய கரும்பும் செந்நெற் பயிரும் பொருந்திய பெருமை பொருந்திய மருத நிலங்களும், கழிந்து புறம் கிடக்க நடந்துபோய் - பிற்பட்டுப் புறத்தே கழிய நடந்து சென்று, வல்லு மா முலையார் கணம்பயில் வையை அம்துறை எய்தினன் - சூதாடு கருவிபோன்ற பெரிய கொங்கையினையுடைய மகளிர் கூட்டம் நீராடிப் பயிலும் வையையாற்றின் அழகிய நீர்த்துறையை யடைந்தனன்.

ஆர் அழல் அத்தம் - இயங்குதற்கரிய அழலையுடைய சுரம் என்றுமாம். குறிஞ்சி, பாலை, முல்லை, மருதம் என்பன முறையே கூறப்பட்டன. (கூ)

குறுகு முன்ன ரதிர்ந்து வையை கொதித்த கன்கரை குத்திவேர்
பறிய வன்சினை முறிய விண்டொடு பைந்த ருக்களை யுந்தியே
மறுகி வெள்ள மெடுத்த லைத்தர மன்ன வன்கரை தன்னினின்
றிறுதி யில்லவ னைத்தொ ழற்கிடை யூறி தென்றஞ ரெய்துவான்.

(இ - ள்.) குறுகு முன்னர் - அரசன் அங்கு வருவதற்கு முன்னரே, வையை வெள்ளம் எடுத்து - வையையாறு வெள்ளம் பெருகி, கொதித்து அதிர்ந்து-கொந்தளித்து ஆரவாரித்து, அகன்கரை குத்தி - அகன்ற கரையை அகழ்ந்து, விண்தொடு பைந்தருக்களை-வானை யளாவிய பசிய மரங்களை, வேர்பறிய வன்சினை முறிய உந்தி-வேர் அறவும் வலிய கிளைகள் முறியவும் தள்ளி, மறுகி அலைத்தர - சுழன்று அலைக்க, மன்னவன் கரைதன்னில் நின்று - சோழமன்னன் கரையின்கண்ணே நின்றுகொண்டு, இறுதி இல்லவனைத் தொழற்கு - அழிவில்லாத சோமசுந்தரக் கடவுளை வணங்குதற்கு, இது இடையூறு என்று அஞர் எய்துவான் - இஃது இடையூறாயிரா நின்றதென்று துன்புறுவானாயினன்.

வெள்ளமெடுத்து - பெருக்கெடுத்து. அலைத்தர - அலைத்தலைச் செய்ய; அலை வீச. (ம)

இழுதொ டுஞ்சுவை யமுது பொற்கல னிட்டு ணுதிரு கண்கணீர்
வழிய வந்து விலக்கு வாரின் வளைந்த தாறு பகற்செயும்
பொழுதெ ழும்பொழு தோம றுக்கம் விளைக்கு மேயிகல் பூழியன்
வழுதி யன்றியும் வையை யும்பகை யான தென்று வருந்துவான்.

(இ - ள்.) இழுதொடும் சுவை அமுது பொன்கலன் இட்டு - நெய்யோடு சுவை மிக்க அமுது (பசித்தவனுக்குப்) பொற் கலத்தில் இட்டிருக்க, உண்ணுது இரு கண்கள் நீர் வழிய - (அவன் அதனை) உண்ணப் பெருமல் இரண்டு விழிகளினின் றும் நீர் சொரியுமாறு, வந்து விலக்குவாரின் - வந்து தடுப்பவரைப்போல, ஆறு வளைந்தது - இந்நதி தடுத்தது; பகல் செயும் பொழுது எழும் பொழுதோ - பகலைச் செய்யும் சூரியன் உதிக்கும் பொழுது வந்தாலோ, இகல் பூழியன் மறுக்கம் விளைக் கும் - பகை கொண்டுள்ள பாண்டியன் துன்பஞ் செய்வான்; வழுதி அன்றியும் வையையும் பகை ஆனது என்று வருந்துவான் - பாண்டியனே அல்லாமல் இவ் வையை யாறும் பகையாயிற்று என்று வருந்தினன்.

இட்டு என்பதற்கு இடப்பட்டிருக்க என்று பொருள் கூறுக. 'கைக்கெட்டி யது வாய்க் கெட்டவில்லை' என்னும் உலக வசனம் இங்கே கருதற் பாலது. பகற் செயும் பொழுது - பகலைச் செய்யும் ஞாயிறு. இகல் பூழியன் - மாறுபாடு கொண்ட பாண்டியன்; வினைத்தொகை. (கக)

வெள்ள நோக்கி யழுங்கு செம்பியன் மெலிவு நோக்கி விரைந்தெழீஇக்
கள்ள நோக்கி லகப்ப டாதவர் கனவு போலவ னனவில்வந்
துள்ள நோக்குடை யன்ப ருக்கரு ளுருவ மாகிய சித்தர்தாம்
பள்ள நோக்கி வரும்பெ ரும்புனல் வற்ற நோக்கினர் பார்த்தரோ.

(இ - ள்.) கள்ள நோக்கில் அகப்படாதவர் - கரவினையுடைய பார்வைக்குக் கிட்டாதவராகிய சோமசுந்தரக் கடவுள், வெள்ளம் நோக்கி அழுங்கு செம்பியன் மெலிவு நோக்கி - வெள்ளத்தைக் கண்டு மனம் வருந்துஞ் சோழனது துன்பத்தைப் பார்த்தருளி, கனவுபோல் அவன் நனவில் விரைந்து எழீஇ வந்து - கனவின்கண் வந்ததுபோல அவன் நனவின் கண்ணும் விரைந்து எழுந்து வந்து, உள்ள நோக்கு உடை அன்பருக்கு - ஞானக் கண்ணாகிய அகப் பார்வையினையுடைய அன்பர்கட்கு, அருள் உருவம் ஆகிய சித்தர்தாம் - கருணை வடிவமாய்த் தோன்றி யருளும் சித்த மூர்த்தி, பள்ளம் நோக்கி வரும் பெரும்புனல் - பள்ளத்தினை நோக்கி வருகின்ற வெள்ளநீரை, பார்த்துவற்ற நோக்கினர் - நோக்கி வற்றுமாறு திருவுளங் கொண் டனர்.

கள்ள நோக்கில் அகப்படார் என்ற கருத்தை,

"உள்ள முள்கலந் தேத்தவல் லார்க்கலாற்
கள்ள முள்ளவ ருக்கருள் வானலன்"

என்பது முதலிய அருள் வாக்குகளிற் காண்க. நோக்கினர் - கருதினர். அரோ அசை. (கஉ

வறந்த வாறுக டந்து வந்து வடக்கு வாயிறி றந்துபோய்
நிறைந்த காவல்க டந்து வீதிக ணீந்தி நேரியர் வேந்தனைச்
சிறந்த வாடக புனித பங்கய திப்பி யப்புன லாடுவித்
தறந்த வாதறை சாம கண்டர்க்* மால யம்புகு வித்தரோ.

(இ - ள்.) வறந்த ஆறு கடந்து வந்து - (அங்ஙனந் திருவுளங் கொண்ட வளவில்) வற்றிய ஆற்றினை (அச்சோழ மன்னனோடும்) கடந்து வந்து, வடக்கு வாயில் திறந்துபோய் - வடக்கு (மதில்) வாயிலைத் திறந்து உள்ளே சென்று, நிறைந்த காவல் கடந்து வீதிகள் நீந்தி - (போர் வீரர்கள்) நிறைந்த காவல்களைக் கடந்து பல வீதிகளையுந் தாண்டி, நேரியர் வேந்தனை-சோழ மன்னனை, சிறந்த புனித ஆடக பங்கயத் திப்பியப் புனல் ஆடுவித்து - மேலான தூய பொற்றாமரையின் இனிய நீரில் மூழ்குவித்து, அறம் தவாது அறை சாம கண்டர்-அறத்தினைப் பிறழாது கூறுஞ் சாமகானஞ் செய்யும் கண்டத்தினையுடைய இறைவர், தம் ஆலயம் புகுவித்து - தமது திருக்கோயிலுட் புகச்செய்து.

ஆடக புனித பங்கய திப்பியம், வட சொற்களாகலின் இயல்பாயின. திப்பியம் - இனிமை. அரோ, அசை. (கரு)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

வெம்மைசெய் கதிர்கால்† செம்பொன் விமானசே கரத்தின் மேய
தம்மையும் பணிவித் தெண்ணில் சராசர மனைத்து மீன்ற
அம்மையங் கயற்க ணாளா மணங்கையும் பணிவித் துள்ளஞ்
செம்மைசெய் தின்ப வெள்ளத் தழுத்தினர் சித்த சாமி.

(இ - ள்.) சித்தசாமி - அச் சித்தமூர்த்தியாகிய பெருமான், வெம்மை செய் கதிர்கால் செம்பொன் - வெப்பத்தைச் செய்கின்ற ஒளியினைவீசும் சிவந்த பொன்னாலாகிய, விமான சேகரத்தில் மேய தம்மையும் பணிவித்து - விமானங்களுள் முடி போல்வதாகிய இந்திர விமானத்தி லெழுந்தருளிய தம்மையும் வணங்கச்செய்து, எண்இல் சர அசரம் அனைத்தும் ஈன்ற - அளவிறந்த சராசரங்களனைத்தையும் பெற்றருளிய, அம்மை - தாயாகிய, அங்கயற்கண்ணாளாம் அணங்கையும் பணிவித்து - அங்கயற்கண்ணியாகிய அணங்கினையும் வணங்கச்செய்து, உள்ளம் செம்மை செய்து இன்ப வெள்ளத்து அழுத்தினர் - உள்ளத்தைத் தூய்மைசெய்து பேரின்பப் பெருக்கில் ஆழச்செய்தருளினர்.

வெம்மை - விருப்பமுமாம். உள்ளம் என்றது ஈண்டு உயிரை. செம்மை செய்தல் - ஆணவமல வழுக்கைப்போக்கித் தூய்மை செய்தல். (கச)

எண்ணிய வெண்ணி யாங்கே யான்பெற முடித்தாய் போற்றி
பண்ணியன் மறைக டேறாப் பான்மொழி மணாள போற்றி
புண்ணியர் தமக்கு வேதப் பொருளுரை பொருளே போற்றி
விண்ணிழி விமான மேய சுந்தர விடங்க போற்றி.

---

(பா - ம்.) *காளகண்டர்த. †கதிர்காய்.

(இ - ள்.) எண்ணிய எண்ணியாங்கே யான்பெற முடித்தாய் போற்றி - எண்ணியவற்றை எண்ணியவண்ணமே யான் பெறுமாறு முடித்தவனே வணக்கம்; பண் இயல்மறைகள் தேரா - பண் அமைந்த மறைகளால் அறியப்படாத, பால்மொழி மணாளபோற்றி - பால்போலும் இனிய மொழிகளையுடைய அங்கயற்கணம்மையின் தலைவனே வணக்கம்; புண்ணியர் தமக்கு வேதப்பொருள் உரைபொருளே போற்றி- சண்ணுவர் முதலிய முனிவர்கட்கு வேதத்தின் பொருளை அருளிச்செய்த மெய்ப் பொருளே வணக்கம்; விண் இழி விமானம் மேய சுந்தரவிடங்க போற்றி - வானினின்றும் இறங்கிய விமானத்தின்கண் எழுந்தருளிய சோமசுந்தரனென்னும் பேரழகுடையவனே வணக்கம்.

"எண்ணிய வெண்ணியாங் கெய்துப"

என்னும் திருக்குறட்டொடர் இங்கே கருதற்பாலது. தேரா மணாள என்க. பான் மொழி, அன்மொழித்தொகை. உரைபொருள் - உரைத்த மெய்ப்பொருள்; வினைத் தொகை. (கரு)

எவ்வுட லெடுத்தேன் மேனா ளெண்ணிலாப் பிறவி தோறும்
அவ்வுட லெல்லாம் பாவ மறம்பொருட் டாக வன்றோ
தெவ்வுடல் பொடித்தா யுன்றன் சேவடிக் கடிமை பூண்ட
இவ்வுட லொன்றே யன்றோ வெனக்குட லானதையா.

(இ - ள்.) மேல்நாள் எண் இலாப் பிறவிதோறும் - முன்னாளில் எண்ணிறந்த பிறவிகள்தோறும், எவ்வுடல் எடுத்தேன் - எவ்வெவ்வுடல்கள் எடுத்தேனோ, அவ் வுடல் எல்லாம் - அவ்வுடல்களனைத்தும், பாவம் அறம்பொருட்டாக அன்றோ - தீவினையும் நல்வினையுமாகிய அவ்விரண்டின் பொருட்டாக அல்லவா, தெவ்உடல் பொடித்தாய் - பகைவனாகிய மதவேளின் உடலை நீறாக்கியவனே, உன்றன் சேவடிக்கு அடிமைபூண்ட இவ்வுடல் ஒன்றே அன்றோ - உனது சிவந்த திருவடிக்கு அடிமைபூண்ட இந்த உடல் ஒன்றுமட்டுமல்லவா, ஐயா - ஐயனே, எனக்கு உடல் ஆனது - எனக்கு உடலாய்நின்று பயன் தந்தது.

பிறவி எண்ணிலாதன என்பதை,

"தொல்லைநம் பிறவியெண்ணிற் றொடுகடல் மணலுமாற்றா
எல்லைய"

என்னும் சிந்தாமணிச் செய்யுளாலும், பல்வகை உடலெடுத்தலை,

"புல்லாகிப் பூடாய்ப் புழுவாகி மரமாகிப்
பல்விருக மாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
கல்லாய் மனிதராய்ப் பேயாய்க் கணங்களாய்
வல்லசுர ராகி முனிவராய்த் தேவராய்ச்
செல்லாஅ நின்றவித் தாவர சங்கமத்துள்
எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தே னெம்பெருமான்"

என்னும் வாதவூரடிகளின் மணிவாசகத்தாலும் அறிக. அவ்வுடலெல்லாம் இரு வினைப் பயன்களை நுகர்தற்பொருட்டன்றி, என் உயிர்க்கு உறுதி பயத்தற்பொருட்டு வந்தனவல்ல என்றார். பாவமறம், செவ்வெண்; இரண்டென்னும் தொகை விகாரத் தாற் றொக்கது. (கசு)

இன்னன பலவு மேத்தி யிறைஞ்சிப்பல் வரமும் வேண்டும்
மின்னகு வேலி னானை வேந்தநீ போந்த வண்ணந்
தென்னவ னறிந்தா லேதஞ் செய்யுமென் றார்த்தார்க் கண்ணி
மன்னனைச் சித்த சாமி யுத்தர வழிக்கொண் டேகா.

(இ - ள்.) இன்னன பலவும் ஏத்தி இறைஞ்சி - இவைபோன்ற பலவுங்கூறித் துதித்து வணங்கி, பல்வரமும் வேண்டும்-பல வரங்களையும் வேண்டுகின்ற, மின் நகு வேலினானை - மின்னலைப்போல விளங்கும் வேற்படையினை யுடைய சோழனை, வேந்த - மன்னனே, நீ போந்தவண்ணம் - நீ இங்கு வந்த செய்தியை, தென்னவன் அறிந்தால் ஏதம் செய்யும் என்று - பாண்டியன் அறிவனேல் துன்பஞ் செய்வான் என்று கூறி, ஆர்தார் கண்ணி மன்னனை - ஆத்திமாலையை யணிந்த அச் சோழ மன்னனை, சித்தசாமி - சித்த மூர்த்திகள், உத்தர வழிக்கொண்டு ஏகா - வடக்கு வழிக்கொண்டு சென்று.

மேல் இரண்டு செய்யுளிலும் கூறியவற்றைச் சுட்டி 'இன்னன' என்றார். மின்நகு - மின்னலை எள்ளிநகும் என்றுமாம். தாராகிய கண்ணி யென்க. (கஎ)

மண்ணினை வளர்க்கும் வையை வடகரை யளவு நண்ணிப்
புண்ணிய நீற்றுக் காப்புப் புண்டர நுதலிற் சாத்தி
உண்ணிறை கருத்துக் கேற்ப வுறுதுணை யுனக்குண் டாகி
நண்ணுக வென்று பொன்னி நாடனை விடுத்து மீண்டு.

(இ - ள்.) மண்ணினை வளர்க்கும் வையை - நிலவுலகின்கண் உள்ள உயிர் களை யூட்டிவளர்க்கும் வையை யாற்றின், வடகரையளவும் நண்ணி - வடகரை வரை யுஞ் சென்று, புண்ணிய நீற்றுக்காப்பு புண்டரம் நுதலில்சாத்தி - புண்ணிய வடிவா யுள்ள திருநீற்றுக் காப்பினைத் திரிபுண்டரமாக நெற்றியில் அணிவித்து, உள்நிறை கருத்துக்கு ஏற்ப - உனது உள்ளத்தில் நிறைந்த கருத்துக்குப் பொருந்த, உறுதுணை உனக்கு உண்டாகி - மிக்கதுணை உனக்கு உண்டாகப்பெற்று, நண்ணுக என்று - செல்லக்கடவாய் என்று, பொன்னி நாடனை விடுத்து - காவிரி நாடனை அனுப்பி மீண்டு - மீள.

திருநீறு துன்பம் புகுதாமற் காப்பதாகலின் 'காப்பு' எனப்பெறும்;

"ஆனநீற்றுக் கவசம் அடையப் புகுமின்கள்"

என்பது திருவாசகம். கருத்து - சிவநேயம். உறுதுணை - இறைவன் திருநாமம் முதலியன : மேல்

"நாட்ட மூன்றவன் நாம வாள்கொடு நல்ல ருட்டுணை யாய்வழி
காட்ட அன்பெனு மிவுளி மேல்கொடு கங்குல்வாய் வருவான்"

என்று கூறினமையுங் காண்க. (௧௮)

[கலிவிருத்தம்]

காப்புச் செய்து* கதவில் விடைக்குறி
யாப்புச் செய்தமைத் தீர்ஞ்சடைச் சித்தர்போய்த்
தூப்புக் கைவரை சூழ்வட மேருவிற்
கோப்புச் செய்தபொற் கோயிலின் மேயினர்.

(இ - ள்.) காப்புச் செய்து - முன் திறந்த கதவினைச் சாத்தி, கதவில் விடைக்குறி யாப்புச்செய்து அமைத்து - அதன்கண் இடப முத்திரையைப் பொறித் தமைத்து, ஈர்சடைச் சித்தர்போய் - குளிர்ந்த சடையையுடைய சித்தசாமி சென்று, தூப்புக் கைவரைசூழ் - துளையையுடைய துதிக்கையையுடைய யானைகள் சூழ்ந்து நின்று சுமக்கும், வடமேருவில் கோப்புச் செய்த - வடக்கின்கண் உள்ள மேரு மலையைப்போல் இயற்றிய, பொன் கோயிலில் மேயினர் - அழகிய விமானத்தின் கண் எழுந்தருளினர்.

தூம்பு தூப்பு என வலித்தது; கைக்கு அடை. கைவரைசூழ் மேருவின் என இல்பொருளுவமை யாக்கலுமாம். கோப்புச்செய்த - ஒழுங்குற இயற்றிய. ()

கங்கு லின்கருங் கைகுறைப் பானெனச்
செங்கை நீட்டித் தினகரன் றோன்றலும்
எங்க ணாயக னிட்ட குறியறிந்
தங்கண் வாயி றிறப்பவ ரையுறா.

(இ - ள்.) கங்குலின் கருகை குறைப்பான் என - இரவாகிய அரக்கியின் கருமையாகிய கையினைத் தறிப்பவன்போல, தினகரன் செங்கை நீட்டித் தோன்றலும் - சூரியன் சிவந்த கிரணமாகிய கைகளை நீட்டித் தோன்றுதலும், அங்கண்வாயில் திறப்பவர் - அவ்விடத்து அவ்வாயிலைத் திறப்பவர்கள், எங்கள் நாயகன் இட்டகுறி அறிந்து ஐயுறா - எங்கள் பெருமானாகிய சோமசுந்தரக் கடவுள் இட்ட விடைக் குறியினைக்கண்டு ஐயுற்று.

கருங்கை செங்கை என்றது சொல் முரண். (உ௰)

மற்றை வாயில்கண் மூன்றினும் வல்லைபோய்
உற்று நோக்கினர் தாநென்ன லொற்றிய
கொற்ற மீனக் குறிபிழை யாமைகண்
டெற்றி தாங்கொலென் றேந்தன்மு னெய்தினர்.

---

(பா - ம்.) *காப்புச் செய்த.

(இ - ள்.) மற்றை மூன்று வாயில்களினும் - ஏனை மூன்று வாயில்களினும், வல்லைபோய் உற்றுநோக்கினர் - விரைந்துசென்று உற்றுப் பார்த்து, தாம் நென்னல் ஒற்றிய - தாம் நேற்றுவைத்த, கொற்ற மீனக்குறி பிழையாமைகண்டு - வெற்றி பொருந்திய கயல் முத்திரை பிறழாமையைக் கண்டு, இது எற்று ஆம் கொல் என்று-இது யாதாய் முடியுமோ என்று, ஏந்தல் முன் எய்தினர் - மன்னன் முன்னே சென்றனர்.

நோக்கினர், முற்றெச்சம். ஓர் புறம் குறி பிறழ்ந்திருத்தலின் முடிபு யாதாகுமோ எனத் துணுக்குற்றா ரென்க. (உக)

போற்றி மன்னநம் பொன்னங் கயற்குறி
மாற்றி யுத்தர வாயிற் கதவதில்
ஏற்றி லச்சினை யிட்டவர் யாரையென்
றாற்றல் வேந்த வறிகிலம் யாமென்றார்.

(இ - ள்.) மன்ன போற்றி - வேந்தனே வணக்கம்; உத்தர வாயில் கதவில் - வடக்கு வாயிற் கதவின்கண், நம்பொன் அம் கயற்குறி மாற்றி - நமது அழகிய மீனக்குறியை மாற்றி, ஏற்று இலச்சினை இட்டவர் யார் என்று - விடைக் குறியினை இட்டவர் யார் என்று, ஆற்றல் வேந்த அறிகிலம் யாம் என்றார் - வலியமைந்த வேந்தனே யாங்களறியோம் என்று கூறினர்.

கயற்குறி மாற்றி ஏற்றிலச்சினை இடப்பட்டுளது, அங்ஙனம் இட்டவர் யாரென அறிகிலம்; என விரித்துரைக்க. பொன் அம் எனும் இரண்டும் அழகினை உணர்த்தின; அம் சாரியையுமாம். கதவதில், அது பகுதிப் பொருள் விகுதி. யாரை, ஐ சாரியை. (உஉ)

வையை நாடனும் வந்தது நோக்குறீஇ
ஐய வின்னதோ ரற்புத மாயையைச்
செய்ய வல்லவர் யாரெனத் தேர்கிலான்
ஐய மெய்தி யகன்மனை நண்ணினான்.

(இ - ள்.) வையை நாடனும் வந்து அது நோக்குறீஇ - வையை யாறு பாயும் நாட்டையுடைய பாண்டியனும் வந்து அதனை நோக்கி, ஐய இன்னது ஓர் அற்புத மாயையை - வியப்பினையுடைய இந்த அதிசய மாயையை, செய்ய வல்லவர் யார் எனத் தேர்கிலான் ஐயம் எய்தி-செய்தற்கு வல்லவர் யாரென்று தெளியாது ஐயுற்று, அகல்மனை நண்ணினான் - அகற்சி பொருந்திய தனது கோயிலை அடைந்தான்.

அளபெடை சொல்லிசை நிறைக்க வந்தது. ஐய, ஐ என்னும் வியப் புணர்த்தும் உரிச் சொல்லடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். தேர்கிலான், முற்றெச்சம். (உங)

மறுத்த வுண்டியன் மாமலர்ப் பாயலை
வெறுத்த கன்றரை மேற்பள்ளி கொள்ளவும்
பொறுத்த னன்றுயின் றானிருட் போழ்தினிற்
கறுத்த கண்டர் கனவினிற் கூறுவார்.

(இ - ள்.) மறுத்த உண்டியன் - உணவை மறுத்தவனாய், மாமலர்ப் பாயலை வெறுத்து - பெருமை பொருந்திய மலர்ப் படுக்கையை வெறுத்து, அகன் தரை மேல் பள்ளி கொள்ளவும் பொறுத்தனன் துயின்றான் - அகன்ற தரையின்மீது பள்ளி கொள்ளவும் மனம் பொறுத்து உறங்கினன்; இருள் போழ்தினில் - இருட் போதில், கறுத்த கண்டர் கனவினில் கூறுவார் - கரிய திருமிடற்றினையுடைய சோமசுந்தரக் கடவுள் கனவின்கண் வந்து கூறி யருளுவார்.

உணவு மறுத்தல் - உணவுண்ணாமை. மலர்ப்பாயல் - பூவணை; மலர் பரப்பிய பாயலுமாம். மலரணையிற் றுயிலுதற் குரியோர் தரையிற் றுயிலுதல் அரிதாகலின் 'பொறுத்தனன் றுயின்றான்' என்றார். இருட் போழ்தினில் கனவினிற் கூறுவார் என்க; இருட் போழ்துபோலக் கறுத்த கண்டம் என்றுமாம். பொறுத்தனன், முற்றெச்சம். (உச)

மட்ட லம்பிய தாதகி மாலையான்
உட்ட தும்பி யொழுகிய வன்பினாற்
கட்டி லங்கெயிற் கச்சியிற் காடெலாம்
வெட்டி நம்புடை வித்திய பத்தியான்.

(இ - ள்.) மட்டு அலம்பிய தாதகி மாலையான்-தேன் சிந்தும் ஆத்தி மாலையை யணிந்த சோழன், உள் ததும்பி ஒழுகிய அன்பினால் - உள்ளத்தில் நிறைந்து வழிந்த அன்பினாலே, கட்டு இலங்கு எயில் கச்சியில் - காவலாக விளங்கும் மதிலையுடைய காஞ்சிமா நகரின்கண், காடு எலாம் வெட்டி நம்புடை வித்திய பத்தியான் - காடு அனைத்தையும் வெட்டி நம்மிடத்தும் பத்தியாகிய விதையை விதைத்தவன்.

கட்டு - காவல் என்னும் பொருட்டு; கட்டப்பட்ட என்றுமாம். காடெலாம் வெட்டி என்றதற்கேற்பப் பத்தி வித்தியவன் என்றார்; காட்டினை அழித்து நாடாக்கி அந்நாடு முழுதும் சிவபத்தி வளரச் செய்தவன் என்பது கருத்து. (உரு)

வந்து நம்மை வழிபட வேண்டினான்
இந்த வாயி றிறந்தழைத் தின்னருள்
தந்து மீள விடுத்துப்பின் றாட்கொளீஇ
நந்த மால்விடை நாம்பொறித் தேமெனா.

(இ - ள்.) வந்து நம்மை வழிபட வேண்டினான் - (அவன் இங்கு) வந்து நம்மை வணங்க விரும்பினான்; நாம் இந்த வாயில் திறந்து - நாம் இந்த வடக்கு வாயிலைத் திறந்து, அழைத்து இன் அருள் தந்து - (அவனை உள்ளே) அழைத்து இனிய அருள் பாலித்து, மீளவிடுத்து பின் தாள் கொளீஇ - மீண்டும் அனுப்பிவிட்டுப் பின்

தாழிறுக்கி, நந்தம் மால் விடை பொறித்தேம் என - நமது பெரிய விடை யிலச்சினையை வைத்தோ மென்று.

தாள்-தாழக்கோல்; கொளீஇ - கொளுவி; செறித்து. நந்தம், தம் சாரியை. ()

அருளி னையந் தேற்றி யகன்றபின்
மருளி னீங்கி மலர்க்கண் விழித்தெழீஇ
வெருளி னன்வெயர்த் தான்விம்மி னன்பல
பொருளி னற்றுதித் தான்குல பூடணன்.

(இ - ள்.) அருளினன் - அருளையுடைய சோமசுந்தரக் கடவுள், ஐயம் தேற்றி அகன்ற பின் - ஐயத்தைத் தெளிவித்து நீங்கிய பின், குலபூடணன் - குல பூடண பாண்டியன், மலர்க்கண் விழித்து எழீஇ-மலர்போலும் கண்டுயி லுணர்ந்து எழுந்து, மருளின் நீங்கி - ஐயுறவினின்றும் நீங்கி, வெருளினன் வெயர்த்தான் விம்மினன் - அஞ்சி வியர்த்து உடல் பூரித்து, பல பொருளினல் துதித்தான் - பொருள் நிறைந்த பல பாக்களாலே துதித்தான்.

அருளினன் என்பதனை எச்சமாக்கி, அருள்புரிந்து என்றுரைத்தலுமாம். ஐயம்தேற்றி - ஐயத்தின் நீக்கித் தெளிவித்து. வெருளினன் முதலிய மூன்றும் முற்றெச்சம். பொருள் - பொருளையுடைய பாடல்; சொற்களுமாம். (உஎ)

வள்ள லன்புக் கெளிவந்த மாண்புகண்
டுள்ள வுள்ளநின் றூற்றெழு மற்புத
வெள்ள மும்பர மானந்த வெள்ளமுங்
கொள்ளை கொண்டுதன் கோமனை நீங்கினன்.

(இ - ள்.) வள்ளல் - சோமசுந்தரக்கடவுள், அன்புக்கு எளிவந்த மாண்பு கண்டு - அன்பினுக்கு எளியனாய் வெளிவந்த மாட்சியை நோக்கி, உள்ள உள்ள நின்று ஊற்று எழும் அற்புத வெள்ளமும் - நினைக்குந்தோறும் இடையறாது சுரந்து எழுகின்ற அதிசய வெள்ளமும், பரமானந்த வெள்ளமும் கொள்ளை கொண்டு - சிவாநந்த வெள்ளமும் தன்னைக் கொள்ளை கொள்ள, தன் கோமனை நீங்கினன் - தனது அரண்மனையை நீங்கினன்.

உள்ள உள்ளத்தினின்று ஊற்றெழும் என உரைத்தலுமாம். அற்புதத்தைச் சிவஞானம் என்றும், பரமானந்தத்தைச் சிவபோகம் என்றும் உரைப்பாருமுளர். அளவின்மை தோன்ற வெள்ளம் என்றார். கொண்டு என்பதைக் கொள்ள வெனத் திரிக்க. (உஅ)

அளிய ருமனத் தன்புடை யன்பருக்
கெளிய ராடலை யார்க்கும் வெளிப்படத்
தெளியு மாறு தெளிவித்துத் தன்னைப்போல்
விளிவிலா வின்ப வெள்ளத் தழுத்தினன்.

(இ - ள்.) அளி அருமனத்து அன்பு உடை அன்பருக்கு - உயிர்களிடத்து அருள் நீங்காத மனத்தின்கண் அன்பு நிறைந்த அடியார்கட்கு, எளியர் ஆடலை - எளியராயுள்ள சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலை, யார்க்கும் வெளிப்படத் தெளியுமாறு தெளிவித்து-யாவருக்கும் புலப்படத் தெளியும் வண்ணம் தெளிவித்து, தன்னைப்போல் விளிவு இலா இன்ப வெள்ளத்து அழுத்தினான் - தன்னைப்போல யாவரும் அழியாத பேரின்ப வெள்ளத்தில் முழுகும்படி அழுத்தினான்.

அளி - கனிவுமாம். தன்னைப்போல் முழுகுமாறு அழுத்தினான் என விரிக்க. (உக)

[கொச்சகக்கலிப்பா]

கோடாத செங்கோலும் வெண்குடையுங் கோமுடியும்
ஏடா ரலங்க லிராசேந் திரற்களித்துத்
தோடா ரிதழியான் றாட்கமலஞ் சூடிவான்
நாடா ளரசுரிமை பெற்றா னரபதியே.

(இ - ள்.) நரபதி - குலபூடண பாண்டியன், கோடாத செங்கோலும் வெண் குடையும் - கோணாத செங்கோலையும் வெண்கொற்றக் குடையையும், கோமுடியும்- அரச முடியையும், ஏடு ஆர் அலங்கல் இராசேந்திரற்கு அளித்து-இதழ்கள் நிறைந்த மலர் மாலையை யணிந்த இராசேந்திர பாண்டியனுக்குக் கொடுத்து, தோடு ஆர் இதழியான் - இதழ்கள் நிறைந்த கொன்றை மாலையையுடைய இறைவனது, தாள் கமலம் சூடி - திருவடித் தாமரையைத் (தனது முடியில்) அணிந்து, வான் நாடு ஆள் அரசு உரிமை பெற்றான் - வானநாட்டை ஆளும் அரசுரிமையைப் பெற்றனன்.

கோடாத என வந்தமையால் செங்கோல் என்பது கோல் என்னுந் துணை யாய் நின்றது; என்றும் கோடுதலில்லாத என்றுமாம். செங்கோல் வெண்குடை என் பன சொல்முரண். இராசேந்திரனை முடிசூட்டி என்பார் 'இராசேந்திரற் களித்து' என்றார். (உஉ)

ஆகச்செய்யுள் - கஅகஅ.

முப்பத்தைந்தாவது

# தண்ணீர்ப்பந்தல் வைத்தபடலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

சம்பு மதுரைப் பரனிரவு தனியே வந்து தனைப்பணிந்த
வெம்பு கதிரோன் மருமானை விடுத்து மீண்டு தாழிறுக்கி
அம்பொற் கதவின் விடைபொறித்த தறைந்துந் தென்ன னடுபடைக்கு
வம்பு மலர்தோய் புனற்பந்தர் வைத்துக் காத்த வகைசொல்வாம்.

(இ - ள்.) சம்பு மதுரைப் பரன் - சம்புவாகிய மதுரைச சோமசுந்தரக் கடவுள், இரவு தனியே வந்து தனைப் பணிந்த - இரவில் ஒருவனாய் வந்து தன்னை வணங்கிய, வெம்பு கதிரோன் மருமானை - வெப்பமாகிய கிரணத்தையுடைய சூரியன் மரபினனாகிய சோழனை, விடுத்து - அனுப்பி, மீண்டு தாழ் இறுக்கி - திரும்பித் தாழிட்டு, அம்பொன் கதவின் விடை பொறித்தது அறைந்தும் - அழகிய பொன்னாலாகிய கதவின்கண் விடை யிலச்சினையிட்ட திருவிளையாடலைக் கூறினோம்; தென்னன் அடுபடைக்கு - பாண்டியனது போர் செய்யும் படைகளுக்கு, வம்பு மலர் தோய் புனல் பந்தர் வைத்துக் காத்த வகை சொல்வாம் - மணத்தினையுடைய மலர் தோய்ந்த தண்ணீர்ப் பந்தர் வைத்துக் காத்தருளிய திருவிளையாடலை (இனிக்) கூறுவாம்.

அறைந்தும், இறந்தகாலத் தனித் தன்மைப் பன்மைமுற்று. தண்ணீர்க்கு மலரால் மண மூட்டுதலை,

"ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலாற் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு"

என்னும் நாலடியார்ச் செய்யுளா னறிக. (க)

தென்ன னரச புரந்தரன்கோல் செலுத்து நாளிற் காடெறிந்த
மன்னன் பின்னர் வெளிப்படையாய்ப் போந்து போந்து மதுரேசன்
பொன்னங் கமலத் தாள்வணங்கிப் போவான் முன்னிப் பொரும்பொருநைக்
கன்னி நாடன் கேண்மைபெற விடுத்தான் வரிசைக் கையுறையே.

(இ - ள்.) தென்னன் அரச புரந்தரன் கோல் செலுத்துநாளில் - பாண்டியனாகிய இராசேந்திரன் செங்கோல் செலுத்தும் நாளில், காடு எறிந்த மன்னன் - காடு வெட்டிய சோழன், பின்னர் வெளிப்படையாய்ப் போந்து போந்து - பின் யாவருமறிய வெளிப்படையாய் வந்துவந்து, மதுரேசன் பொன் அம் கமலத்தாள் வணங்கிப் போவான் கருதி - சோமசுந்தரக்கடவுளின் அழகிய பொற்றாமரை மலர் போன்ற திருவடிகளை வணங்கிப் போகக்கருதி, பொரும் பொருநைக் கன்னி

நாடன் - கரையை மோதும் பொருநையாற்றினையுடைய கன்னி நாடனாகிய இராசேந்திர பாண்டியனது, கேண்மை பெற - நட்பைப் பெறுதற்கு, வரிசைக்கையுறை விடுத்தான் - வரிசையாகிய கையுறையை அனுப்பினான்.

இந்திரனுக்குப் புரந்தரன் என்பது ஒரு பெயராகலின் இராசேந்திரனை அரச புரந்தரன் என்றார். போவான், வினையெச்சம். வரிசை, கையுறை என்பன காணிக்கை என்னும் பொருளன. (உ)

பொன்னி நாடன் வரவிடுத்த பொலம்பூ ணுடை முதற்பிறவுங்
கன்னி நாடன் கைகவர்ந்து தானுங் கலக்குந் தொடர்பினால்
உன்னி வேறு கையுறையுய்த் துறவு செய்ய வுவப்பெய்திச்
சென்னி காதன் மகட்கொடுப்பா னிசைந்தா னந்தச் செழியற்கு.

(இ - ள்.) பொன்னி நாடன் வரவிடுத்த - காவிரி நாடனாகிய சோழ மன்னன் வரவிடுத்த, பொலம் பூண் ஆடை முதல் பிறவும் - பொன்னாலாகிய அணிகலன்களையும் பொன்னாடை முதலாக வுள்ள பிறபொருள்களையும், கன்னிநாடன் கைகவர்ந்து - கன்னிநாடனாகிய பாண்டியன் ஏற்றுக்கொண்டு, தானும் கலக்கும் தொடர்பினால் உன்னி - தானும் (மனம்) ஒன்று படும் நட்பினைப் பெறக் கருதி, வேறு கையுறை உய்த்து உறவுசெய்ய-வேறு காணிக்கை விடுத்து நட்புச் செய்ய, சென்னி-சோழன், உவப்பு எய்தி - மகிழ்ச்சியுற்று, அந்தச் செழியற்கு - அந்த இராசேந்திர பாண்டியனுக்கு, காதல் மகள் கொடுப்பான் இசைந்தான்-தன் அன்புள்ள மகளைக் கொடுத்தற்கு மனமிசைந்தான். (௩)

பொலம், பொன் என்பதன் றிரிபு. கலக்குந் தொடர்பு - ஒருவர் ஒருவரோடு அளவளாவும் தொடர்பு. தானும் வேறு கையுறையுய்த்து என்க.

செழியன் றனக்கு வரையறுத்த செய்தி கேட்டுச் செம்பியர்கோன்
கழியன் புடைய குலமகளைத் தான்போய்க் கொள்வான் கருதிமதி
வழிவந் தவற்குத் தம்பியென வந்த வரச சிங்கமெனும்
பழியஞ் சாதான் வஞ்சித்துப் பழனக் காஞ்சிப் பதிபுகுவான்.

(இ - ள்.) செழியன் தனக்கு வரையறுத்த செய்தி கேட்டு - இராசேந்திர பாண்டியனுக்கு உறுதி செய்த செய்தியினைக் கேட்டு, செம்பியர்கோன் கழி அன்பு உடைய குலமகளை - சோழ மன்னனது மிக்க அன்புடைய சிறந்த புதல்வியை, தான் போய்க் கொள்வான் கருதி - தான்போய் மணந்து கொள்ளக் கருதி, மதி வழிவந்த அவற்குத் தம்பி என வந்த - சந்திரன் மரபில் வந்தவனாகிய அவனுக்குத் தம்பி என்று சொல்லத் தோன்றிய, அரசசிங்கம் எனும் பழி அஞ்சாதான்-அரச சிங்கனென்னும் பெயரினையுடைய பழியினை அஞ்சாத ஒருவன், வஞ்சித்துப் பழனக் காஞ்சிப் பதி புகுவான் - (முன்னவனை) வஞ்சித்து வயல்சூழ்ந்த காஞ்சிநகரிற் செல்வானாயினன்.

கொள்வான், வினையெச்சம். வந்த அவற்கு என்பது வந்தவற்கு எனத் தொகுத்தலாயிற்று. தம்பி யெனற்குத் தகாதவன் என்பார் 'தம்பி யென வந்த'

என்றார். அரச சிங்கம் - இராச சிம்மன். தமையனுக்கு மனைவியாக வரையறுக்கப் பட்டவள் தனக்கு அன்னைபோல்வாளாகவும் அவளை மணக்கக் கருதினமையின் 'பழியஞ்சாதான்' என்றார். (௪)

காஞ்சிப் பதிமுன் குறுகுமிளங் காவ லோனைக் கடற்சேனை
தாஞ்சுற் றியவந் தெதிர்கொடுபோய்த் தன்முன் றனக்கென் றிருந்தமகள்
ஆஞ்சிற் றிடையை மணம்புணர்த்தி யந்த மருகற் கரசுநிலை
வாஞ்சித் தரச புரந்தரனைப் பிடிக்க மதித்தான் வனமெறிந்தான்.

(இ - ள்.) காஞ்சிப்பதிமுன் குறுகும் - காஞ்சி நகரை நோக்கிவரும், இளங் காவலோனை - சிற்றரசனாகிய அரச சிங்கனை, வனம் எறிந்தான் - காடு வெட்டிய சோழன், கடல்சேனை தாம் சுற்றியவந்து எதிர்கொடுபோய் - கடல் போன்ற சேனை கள் சூழ எதிர்வந்து அழைத்துச் சென்று, தன் முன் தனக்கு என்று இருந்த மகள் ஆம் சிற்றிடையை-அவன் தமையனுக்கு என்று வரையறுத்திருந்த சிறிய இடையை யுடையவளாகிய தன் புதல்வியை, மணம் புணர்த்தி - மணம் புரிவித்து, அந்த மரு கற்கு அரசு நிலை வாஞ்சித்து - அந்த மருகனுக்கு அரசுரிமை (கிடைத்தலை) விரும்பி, அரச புரந்தரனைப் பிடிக்க மதித்தான் - இராசேந்திரனைப் பிடிக்கக் கருதினன்.

சுற்றிய, செய்யிய வென்னும் வினையெச்சம். அவன்றன் முன்றனக்கு என்க. வனமெறிந்தான், பெயர். (௫)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

மருமகன்ற னுடனெ ழுந்து மாம னான வளவர்கோன்
பொருமகன்ற சேனை யானை புடைநெ ருங்க மதிவழித்
திருமகன்றன் மேல மர்த்தி றங்கு றித்து முரசறைந்
துருமகன்ற பல்லி யம்மொ லிப்ப வந்து ளானரோ.

(இ - ள்.) மாமனான வளவர்கோன் - மாமனாகிய சோழ மன்னன், மருமகன் உடன் எழுந்து - மருகனோடு புறப்பட்டு, பொரும் அகன்ற சேனை யானை புடை நெருங்க - போர் செய்தற்குரிய பரந்த சேனையும் யானையும் பக்கத்தில் நெருங்கி வர, மதிவழித் திருமகன்மேல் அமர்த்திறம் குறித்து - சந்திரன் மரபினனாகிய இரா சேந்திர வழுதியின்மேல் போர் செய்தலைக் குறித்து, முரசு அறைந்து - முரசு அறை வித்து, உரும் அகன்ற பல்இயம் ஒலிப்பவந்துளான் - இடியும் அஞ்சி அகலுதற் கேது வாகிய பல இயங்களும் ஒலிப்ப வந்தனன்.

சிறப்பு நோக்கி யானையை வேறு பிரித்துச் சேனை யானை என்றார். மரு மகன்றன், திருமகன்றன் என்பவற்றில் தன் சாரியை. அகன்ற - அகலுதற்கேது வாகிய. அரோ, அசை. (௬)

திரண்ட திர்ந்தெ ழுந்து வந்த சென்னி சேனை தன்னகர்க்
கிரண்டு யோச னைப்பு றத்தி றுக்கு முன்ன ரொற்றரால்
தெருண்டு தென்னன் மாட நீடு கூடன் மேய சிவனதாள்
சரண்பு குந்து வேண்டு கென்று சார்ந்து தாழ்ந்து கூறுவான்.

(இ - ள்.) எழுந்து திரண்டு அதிர்ந்து வந்த சென்னி சேனை - (போர் குறித்து) எழுந்து நெருங்கி முழங்கி வந்த சோழனுடைய அப்படைகள், தன் நகர்க்கு இரண்டு யோசனைப் புறத்து இறுக்கும் முன்னர் - தனது நகருக்கு இரண்டு யோசனையில் வந்து தங்குதற்கு முன்னரே, ஒற்றரால் தென்னன் தெருண்டு - ஒற்றர்களாலே பாண்டியன் அறிந்து கொண்டு, மாடம் நீடு கூடல்மேய சிவனதாள் - மாடங்கள் நிறைந்த கூடலின்கண் எழுந்தருளிய சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளில், சரண்புகுந்து வேண்டுகு என்று - அடைக்கலம் புகுந்து குறையிரப்பேனென்று கருதி, சார்ந்து தாழ்ந்து கூறுவான் - சென்று வணங்கிச் சொல்லுவான்.

சிவன, அகரம் ஆறனுருபு;

"சிவன தாட் சிந்தியாப் பேதைமார் போல"

என்பது தேவாரம். வேண்டு கு - வேண்டுவேன்; கு, தன்மை யொருமை யெதிர் கால விகுதி. (எ)

அன்று பாதி யிரவில் வந்து னடிப ணிந்து தமியனாய்ச்
சென்ற சென்னி யென்னு நின்ன திருவ டிக்க ணன்பினான்
இன்று மந்நி லைய னா*யெ னக்கு வேண்டு வனவிடுத்
தொன்று கேண்மை புரிகு வானு ளத்தி லொன்றை யுன்னினான்.

(இ - ள்.) அன்று பாதி இரவில் தமியனாய் வந்து - அன்று அரையிரவில் ஒருவனாய் வந்து, உன் அடி பணிந்து சென்ற - நினது திருவடியை வணங்கிப்போன, சென்னி என்னும் நின்ன திருவடிக்கண் அன்பினான் - காடு வெட்டிய சோழனென்னும் உன் திருவடியின்கண் அன்புடையவன், இன்றும் அந்நிலையன் ஆய் - இப்பொழுதும் அந்நிலையை யுடையவனாதற்கு, எனக்கு வேண்டுவன விடுத்து - எனக்கு வேண்டும் பொருள்களை அனுப்பி, ஒன்று கேண்மை புரிகுவான் - கலந்த நட்பினைப் பெற விரும்பியவன், உளத்தில் ஒன்றை உன்னினான் - மனத்தின்கண் மற்றொன்றைக் கருதினான்.

நின்ன, அகரம் ஆறனுருபு. நிலையனாய் - நிலையனாக. ஒன்று, அதற்கு மாறாய தொன்று. (அ)

அறத்தி னுக்கு ளாகி யன்று நின்ற நீய வன்செயும்
மறத்தி னுக்கு ளாகி யின்று வன்மை செய்வ தேயறப்
புறத்தி னர்பு ரம்பொ டித்த புண்ணி யாவெ னக்கரைந்
துறைத்து வேண்டி னான வேலை யும்பர் நாத னருளினால்.

(இ - ள்.) அறப்புறத்தினர் புரம்பொடித்த புண்ணியா-அறத்திற்கு வேறாகிய மறத்தினை யுடையார் முப்புரங்களையும் நீறாக்கிய புண்ணியனே, அன்று அறத்தினுக்கு உள்ளாகி நின்ற நீ - அவன் வந்து வணங்கிய அப்பொழுது அறத்திற்கு உடன்பட்டு நின்ற நீ, இன்று அவன் செய்யும் மறத்தினுக்கு உள்ளாகி வன்மை செய்வதே எனக்

---

(பா - ம்.) *என்று மந்நிலையனாய்.

கரைந்து - இன்று அவன் செய்யும் தறுகண்மைக்கும் உடன்பட்டு நின்று கொடுமை செய்வது நன்றோ எனக் கூறி, உறைத்து வேண்டினன் - உறைப்புடன் குறை யிரந் தான்; அவ்வேலை-அப்பொழுது, உம்பர் நாதன் அருளினல் - தேவர்க்கு நாயகனுகிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளால்.

செய்வதே - செய்வது அழகிதோ என்றபடி. அறப்புறம் - பரவம்; "அறங் கடை" என்புழிப்போல. தீயோரை யொறுத்தல் அறமாகலின் 'புரம் பொடித்த புண்ணியன்' என்றார். உறைத்து-அழுத்தமுற்று; "திருத்தொண்டி னுறைப்பாலே" என்பது காண்க. உள்ளாகி, அவ்வேலை என்பன ளகர வகரம் தொக்கு நின்றன. அறப் புறத்தினர் புரம் பொடித்த என்னும் அடை இன்றும் அறத்திற்கு மாருகிய வனை அழிக்கற்பாலை என்னும் கருத்துடன் கூடி யிருத்தலால் இது கருத்துடை யடையணி. (கூ)

மெய்து றந்த வாய்மை யொன்று விண்ணி னின்று மண்ணலே
ஐது நுங்கள் சேனை யோடு* மாக வத்து நாளைநீ
எய்தி வந்த தெவ்வ ரோடெ திர்ந்து ருத்து நின்றுபோர்
செய்தி வென்றி நின்ன தாதல் செய்து மென்றெ ழுந்ததால்.

(இ - ள்.) விண்ணின் நின்றும் மெய்துறந்த வாய்மை ஒன்று - வானினின் றும் அசரீரி மொழி ஒன்று, அண்ணலே - வேந்தனே, நாளை நீ நுங்கள் ஐது சேனை யோடும் ஆகவத்து எய்தி - நாளை நீ நும் அற்பமாகிய சேனையோடும் போர்க்களஞ் சென்று, வந்த தெவ்வரோடு எதிர்ந்து உருத்து நின்று போர் செய்தி - வந்த பகைவ ரோடு எதிர்த்துச் சினந்து நின்று போர் புரிவாயாக; வென்றி நின்னது ஆதல் செய் தும் - வெற்றி நின்னுடையதாகச் செய்வோம்; என்று எழுந்தது - என்று உண்டா யது.

மெய் துறந்த வாய்மை - அசரீரி வாக்கு; அசரீரி - சரீரம் இல்லது. வாய்மை- ஈண்டு மொழியென்னும் பொருட்டு. ஐது - நுண்ணியது; அழகிதாக என்றுமாம். நுங்கள் நீ எனப்பன்மை யொருமை மயங்கிற்று. ஆகவம் - போர்க்களம். ஆல், அசை. (௰)

காய வாணி செவிநு ழைந்த காலை வேந்த ரிந்திரன்
நாய னார டிக்கணே நயந்த வன்பு முவகையும்
ஆய வேலை வீழ்ந்து தாழ்ந்த கன்று தன்னி ருக்கைபோய்
மேயி னானி மிர்ந்த கங்குல் விடியு மெல்லை நோக்குவான்.

(இ - ள்.) காயவாணி செவி நுழைந்த காலை - ஆகாய வாக்குச் செவியிற் புகுந்த பொழுது, வேந்தர் இந்திரன் - இராசேந்திர பாண்டியன், நாயனார் அடிக்கண் நயந்த - இறைவரது திருவடிக்கண் விரும்பிய, அன்பும் உவகையும் ஆயவேலை வீழ்ந்து தாழ்ந்து அகன்று - அன்பும் மகிழ்ச்சியுமாகிய கடலுள் வீழ்ந்து வணங்கி அங்கு நின்றும் நீங்கி, தன் இருக்கைபோய் மேயினன் - தனது இருப்பிடஞ் சென்று

(பா - ம்.) *சேனை யேனும்.

அடைந்து, நிமிர்ந்த கங்குல் விடியும் எல்லை நோக்குவான் - மிகுந்த இரவு விடியு மெல்லையை நோக்குவானாயினன்.

காயம் - ஆகாயம்; முதற்குறை; இது காயமென்றே தொல்காப்பியம் முதலிய வற்றில் வழங்குவது ஆராய்தற் குரியது. வாணி - வாக்கு. இராசேந்திரனை முன்பு அரச புரந்தரன் என்றதுபோல் ஈண்டு வேந்தரிந்திரன் என்றார். நாயன் - தலைவன். விடியலை எதிர் நோக்கினானாகலின் இரவு மிக்குத் தோன்றிற் றென்பார் 'நிமிர்ந்த கங்குல்' என்றார். (கக)

கழித்த கங்கு லிறவி சும்பு கண்வி ழிக்கு முன்னரே
விழித்தெ ழுந்து சந்தி யாதி வினைமு டித்து வானநீர்
சுழித்த லம்பு வேணி யண்ண லாய பூசை செய்தெழீஇத்
தெழித்தெ ழுந்த சேனை யோடு செருநி லத்தை நண்ணினான்.

(இ - ள்.) கழித்த கங்குல் இற - மிக்க இராப் பொழுது ஒழிய, விசும்பு கண் விழிக்கு முன்னரே - ஆகாயம் கண் விழிக்கு முன்னரே, விழித்து எழுந்து சந்தி ஆதி வினை முடித்து - விழித்தெழுந்து சந்தி முதலிய வினைகளை முடித்துக் கொண்டு, வானநீர் சுழித்து அலம்பு வேணி அண்ணல் - கங்கைநீர் சுழித்து ஒலிக்கும் முடியினை யுடைய இறைவனது, பூசை செய்து - பூசையை முடித்து, எழீஇ - எழுந்து, தெழித்து எழுந்த சேனையோடு செரு நிலத்தை நண்ணினான் - ஆரவாரித்தெழுந்த படையுடன் போர்க்களத்தை அடைந்தான்.

கழிந்த என்பது கழித்த என வலித்தலாயிற்று. ஞாயிற்றை விசும்பிற்குக் கண்ணாக்கி, ஞாயிறு தோன்றுதலை விசும்பு கண் விழித்தல் என்றார்;

"வான்கண் விழியா வைகறை யாமத்து"

என்றார் இளங்கோவடிகளும். காலை மாலையாகிய சந்திகளிற் செய்யப்படும் நாட் கடன் சந்தி எனப்படும். தெழித்தல் - உரப்புதல். (கஉ)

அலைசி றந்த சலதி மீதொ ராறு செல்லு மாறுபோல்
மலைசி றந்த நேரி வெற்பன் மள்ளர் சேனை வெள்ளமேற்
கலைசி றந்த மதிநி றைந்த கன்னி நாடு காவலான்
சிலைசி றந்த சிறிய சேனை சென்ற லைத்து நின்றதே.

(இ - ள்.) அலை சிறந்த சலதி மீது ஒரு ஆறு செல்லு மாறுபோல் - அலை மிக்க கடலின்மேல் ஒரு நதி சென்று பாயுமாறுபோல, மலை சிறந்த நேரி வெற்பன் - மலைகளிற் சிறந்த நேரி மலையினையுடைய சோழனது, மள்ளர் சேனை வெள்ளமேல் - படை வீரராகிய கடலின்மேல், கலை சிறந்த மதி நிறைந்த கன்னி நாடு காவலான் - கலைப் பயிற்சியாற் சிறந்த அறிவு நிறைந்த கன்னி நாட்டு மன்னனாகிய பாண்டிய னது, சிலை சிறந்த சிறிய சேனை சென்று அலைத்து நின்றது - விற்போரிற் றலைசிறந்த சிறிதாகிய சேனை சென்று வருத்தி நின்றது.

சிறத்தல் - மிகுதல், மேம்படுதல். சோழன் சேனையின் பெருமையும் பாண்டியன் சேனையின் சிறுமையும் தோன்றக் கடலின்மேல் ஆறு செல்லுமாறுபோல் என உவமை கூறினர். மள்ளர் - வீரர். கலை சிறந்த மதி நிறைந்த என்னும் அடை நாட்டிற்கும் காவலானுக்கும் பொருந்தும். (கங)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

உருமு வன்ன குரலினு ருலவை யன்ன செலவினர்
வெருவு தீயின் வெகுளியார் வெடித்த வீர நகையினர்
செருவின் மான வணியினர் சினைஇ மடித்த வாயினர்
இருவர் சேனை மள்ள ரும் மெதிர்ந்து கைக லந்தனர்.

(இ - ள்.) உருமு அன்ன குரலினர் - இடிபோன்ற குரலினை யுடையவரும், உலவை அன்ன செலவினர் - காற்றினைப் போன்ற கடிய செலவினை யுடையவரும், வெருவு தீயின் வெகுளியார் - அஞ்சப்படும் தீப்போன்ற சினமுடையவரும், வெடித்த வீர நகையினர் - வெடிப்புடன் தோன்றிய வீர நகையினை உடையவரும், செருவில் மான அணியினர் - போரின்கண் மானமாகிய அணியினை யுடையவரும், சினைஇ மடித்தவாயினர் - சினந்து மடித்த வாயினை யுடையவருமாகி, இருவர் சேனை மள்ளரும் எதிர்ந்து கை கலந்தனர் - இருவர் படை வீரரும் நேர்ந்து போர்புரியத் தொடங்கினர்.

இருதிறத்து வீரரும் ஒரு பெற்றியே ஆற்றலும் தறுகண்மையு முடையராய் எதிர்ந்தமை கூறினர். வெடித்தல் - ஒலியுடன் புறப்படுதல். சினைஇ, சொல்லிசை யளபெடை. கை, துணைமொழி. குரலினர் முதலியன வினையெச்சப் பொருளன. (கச)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

மன்ற லந்தெ ரிய னேரி மலைய வன்ற மர்க்கெலாந்
தென்ற லம்பொ ருப்பி னன்றி ரண்ட நான்கு கருவியும்
மின்ற யங்கு செய்ய வேணி விடைய வன்ற னருளினல்
ஒன்ற னந்த மாக வந்து ருத்தெ திர்ந்து தோன்றுமால்.

(இ - ள்.) மன்றல் அம் தெரியல் நேரி மலையவன் தமர்க்கு எலாம் - மணம் பொருந்திய அழகிய மாலையை யணிந்த நேரி மலையையுடைய சோழன் படை வீரர்கட் கெல்லாம், தென்றல் அம் பொருப்பினன் - தென்றலுக்கிடமாகிய அழகிய பொதியின் மலையையுடைய பாண்டியனது, திரண்ட நான்கு கருவியும் - திரண்ட நால்வகைப் படையும், மின்தயங்கு செய்ய வேணி விடையவன் தன் அருளினால் - மின்போல விளங்குஞ் சிவந்த சடையையும் இடபவூர்தியையுமுடைய சோமசுந்தரக் கடவுளின் திருவருளால், ஒன்று அனந்தமாக உருத்துவந்து எதிர்ந்து தோன்றும் - ஒன்று அளவில்லவாக உருக்கொண்டு வந்து எதிரே தோன்றா நிற்கும்.

அம் இரண்டும் சாரியையுமாம். கருவி - சேனை. வேணியையுடையவனாகிய விடையவன் என்க. அனந்தம் - முடிவின்மை. உருத்து - உருக்கொண்டு, தன், சாரியை. ஆல், அசை. இச்செய்யுள் முதலியவற்றை அறுசீராகப் பிரித்தலுமாம். (கரு)

தேரி னோதை கந்து கஞ்சி ரிக்கு மோதை சொரிமதக்
காரி னோதை பேரி யங்க றங்கு மோதை மறவர்தம்
போரி னோதை வீரர் தோள்பு டைக்கு மோதை யோடுமுந்
நீரி னோதை யொன்றெ னக்க லந்தொ டுங்கி* நின்றதே.

(இ - ள்.) தேரின் ஓதை - தேர்செல்லும் ஒலியும், கந்துகம் சிரிக்கும் ஓதை - குதிரைகள் கனைக்கு மொலியும், சொரிமதக்காரின் ஓதை - மதஞ்சொரிகின்ற யானைகளின் பிளிறொலியும், பேர் இயம் கறங்கும் ஓதை - பெரிய வாத்தியங்கள் ஒலிக்கு மொலியும், மறவர்தம் போரின் ஓதை - வீரர்கள் புரியும் போரினொலியும், வீரர் தோள்புடைக்கும் ஓதையோடு - அவர்கள் தோளினைத்தட்டு மொலியுமாகிய இவற்றோடு, முந்நீரின் ஓதை ஒன்று எனக்கலந்து ஒடுங்கி நின்றது - கடலினொலி ஒன்றென்று கூறுமாறு அஃது அவ்வொலிகளிற் கலந்து அடங்கி நின்றது.

சொரிமதம் என்னும் அடையால் கார் யானையாயிற்று. தம், சாரியை. தேரொலி முதலியவற்றோடு கடலொலியும் ஒன்றென்னும்படி அது அவற்றில் ஒடுங்கியது என்றது தேரொலி முதலிய ஒவ்வொன்றும் கடலொலிபோல் விஞ்சியிருந்தமை கூறியவாறாயிற்று. ஒன்றென என்பதற்கு அற்பமென்ன என்றுரைத்தலுமாம்.

சிலைப யின்ற வீர ரோடு சிலைப யின்ற வீரரே
கலைப யின்ற வாள ரோடு கலைப யின்ற வாளரே
கொலைப யின்ற வேல ரோடு கொலைப யின்ற வேலரே
மலைப யின்ற மல்ல ரோடு மலைப யின்ற மல்லரே,

(இ - ள்.) சிலை பயின்ற வீரரோடு சிலை பயின்ற வீரர் - விற்றொழில் பயின்ற வீரர்களோடு விற்றொழில் பயின்ற வீரர்களும், கலைபயின்ற வாளரோடு கலைபயின்ற வாளர் - படைக்கல நூன்முறையிற் பயின்ற வாள்வீரரோடு அங்ஙனம் பயின்ற வாள் வீரர்களும், கொலை பயின்ற வேலரோடு கொலை பயின்ற வேலர் - கொல்லுதலைப் பழகிய வேல்வீரரோடு வேல் வீரர்களும், மலை பயின்ற மல்லரோடு மலை பயின்ற மல்லரே - மற்போரிற் பழகிய மல்லரோடு மற்போரிற் பழகிய மல்லர்களும்.

கலை - ஒளியுமாம். மல் என்பது ஐ என்னும் பகுதிப் பொருள் விகுதி பெற்று மலை யென நின்ற தென்க; இரண்டனுருபாயின் மலைப்பயின்ற என ஒற்று இரட்டுதல் வேண்டும்; மலையை யொத்த, என்றலுமாம். வீரரே முதலியன வருஞ்செய்யுளில் மலைவர் என்பது கொண்டு முடியும். (கஎ)

கரியு கைத்த பாக ரோடு கரியு கைத்த பாகரே
பரியு கைத்த மறவ ரோடு பரியு கைத்த மறவரே
கிரியு கைத்த† வலவ ரோடு கிரியு கைத்த வலவரே
எரியு கைத்தெ திர்ந்த காலெ னக்க லந்து மலைவரால்.

---

(பா - ம்.) * ஒடுங்க. † தேர்க்கிரியுகைத்த.

(இ - ள்.) கரி உகைத்த பாகரோடு கரி உகைத்த பாகரே - யானையைச் செலுத்தியவீரரோடு யானையைச் செலுத்திய வீரரும், பரி உகைத்த மறவரோடு பரி உகைத்த மறவரே - குதிரையைச் செலுத்திய வீரரோடு குதிரையைச் செலுத்திய வீரரும், கிரி உகைத்த வலவரோடு கிரி உகைத்தவலவரே-மலை போலும் தேரைச் செலுத்திய வீரரோடு தேரைச் செலுத்திய வீரரும், எரி உகைத்து எதிர்ந்த கால் எனக் கலந்து மலைவர் - நெருப்பினை மூட்டி எதிர்ந்த காற்றைப்போல எதிர்ந்து போர் செய்வாராயினர்.

யானை வீரரும் தேர் வீரரும் அவற்றைச் செலுத்துதல் நோக்கி முறையே பாகர் எனவும் வலவர் எனவும் கூறப்பட்டனர். கிரி, உவமையாகு பெயராய்த் தேரினைக் குறித்தது; திகிரி என்பது முதற்குறையாயிற்றென்பாருமுளர். வடவைத்தீயை மூட்டி யெழுந்த ஊழிக்காற்றுப்போல் எனலுமாம். தீயுங்காற்றுங்கூடி எதிர்ந்து பொருதாற்போல வென்க. ஆல், அசை. (௪௬)

விடுக்கும் வாளி யெதிர் பிழைப்பர் வெய்ய வாளி யெய்துபின்
தொடுக்கும் வாளி வில்லொ டுந்து ணிப்பர் பின்க ணிப்பற
மடுக்கும் வாளி மார்பு தைப்ப வாங்கி மற்றவ் வாளி*கொண்
டடுக்கு மேவ லாரை யெய்த டர்ப்பர் கிள்ளி மள்ளரே.

(இ - ள்.) கிள்ளி மள்ளர் - சோழனுடைய சேனை வீரர், விடுக்கும் வாளி எதிர் பிழைப்பர் - பாண்டியன் வீரர் விடும் கணைகளை எதிர் நின்று தப்புவர்; வெய்ய வாளி எய்து - கொடிய அம்புகளைத் தாம் விடுத்து, பின் தொடுக்கும் வாளி வில்லொடும் துணிப்பர் - பின் அவர்கள் தொடுக்கும் அம்புகளை வில்லோடும் துண்டுபடுத்துவர்; பின் கணிப்பு அற மடுக்கும் வாளி மார்புதைப்ப - பின் அவர்கள் அளவின்றிச் செலுத்தும் அம்புகள் தம் மார்பிற்றைக்க, வாங்கி - அவற்றைப் பிடுங்கி, அவ்வாளி கொண்டு - அவ்வம்புகளால், அடுக்கும் மேவலாரை எய்து அடர்ப்பர் - நெருங்கும் பகைவரை எய்து கொல்லுவர்.

எதிர் பிழைத்தல் - அவைதம்மீது படாது தப்பச்செய்தல். மற்று, அசை. வினைமாற்றுமாம். வாங்கி என்பதற்கு வளைத்து என்றுரைத்தலுமாம். தம் உடம்பிற் றைத்த அம்புகளைப் பிடுங்கிப் பகைவர்மேற் செலுத்தினர் என்பது நூழிலாட்டு எனப்படும்;

"களங்கழுமிய படையிரிய
உளங்கழிந்தவேல் பறித்தோச்சின்று"

என்பது அதன் இலக்கணம்.

"கைவேல் களிற்றொடு போக்கி வருபவன்
மெய்வேல் பறியா நகும்"

என வள்ளுவனார் கூறுதலுங் காண்க. (௪௭)

---

(பா - ம்.) *மற்றை வாளி.

சோனை மாரி யிற்சரஞ் சொரிந்து நின்று துள்ளுவார்
ஆன வாளி யெதிர்பி ழைத்தொ துங்கி நின்ற ழற்சரங்
கூனல் வாளி சிலையி றத்தொ டுத்தெ றிந்து கூவுவார்
மீன கேத னத்து வேந்தன் வீரர் சென்னி வீரர்மேல்.

(இ - ள்.) மீனகேதனத்து வேந்தன் வீரர் - கயற்கொடியினையுயர்த்திய பாண்டியன் படை வீரர்கள், சென்னி வீரர்மேல் - சோழன் படை வீரர்களின்மேல், சோனை மாரியில் சரம் சொரிந்து-சோனை மழையைப்போல வாளிகளைப்பொழிந்து, நின்று துள்ளுவார் - களித்து நின்று துள்ளுவார்கள்; ஆனவாளி எதிர் பிழைத்து ஒதுங்கி நின்று - அங்ஙனமே பகைவர் சொரிந்த அம்புகளுக்கு எதிர்தப்பி ஒதுங்கி நின்று, வாளி கூனல் சிலை இற - அவர்களுடைய அம்பும் வளைந்த வில்லும் முறியு மாறு, அழல் சரம் தொடுத்து எறிந்து கூவுவார் - கொடிய கணைகளைத் தொடுத்து விடுத்து வீர முழக்கஞ் செய்வார்கள்.

சோனைமாரி-விடாது பெய்யும் மழை. எறிந்து-துணித்து என்றுமாம். (உ0)

தறிந்த தாட கர்ந்த சென்னி தரையு ருண்ட வரையெனச்
செறிந்த தோள் சரிந்த தேர் சிதைந்த பல்ப டைக்கலம்
முறிந்த யானை கையி ருமு ழங்கி வீழ்ந்த செம்புனல்
பறிந்த பாறு பாரி டங்கள் பைத்த கூளி மொய்த்தவே.

(இ- ள்.) தாள் தறிந்த - (படைவீரர்களின்) கால்கள் முறிந்தன; தகர்ந்த சென்னி தரை உருண்ட - அறுபட்ட தலைகள் நிலத்தில் உருண்டன; வரை எனச் செறிந்த தோள் சரிந்த - மலைபோலத் திரண்ட தோள்கள் துண்டாகிச் சரிந்தன; தேர் சிதைந்த - தேர்கள் அழிந்தன; பல்படைக்கலம் முறிந்த - பல படைக்கலங் களும் முறிந்தன; யானை கைஇரு முழங்கி வீழ்ந்த - யானைகள் துதிக்கை அறுபடு தலால் அலறி வீழ்ந்தன; செம்புனல் பறிந்த - குருதிவெள்ளம் ஓடின; பாறு பாரிடங்கள் பைத்தகூளி மொய்த்த - பருந்துகளும் பூதங்களும் கரிய பேய்களும் (போர்க்களமெங்கும்) நெருங்கின.

தறிந்த முதலியன அன்பெறாத பலவின்பால் முற்றுக்கள். இரு, செய்யா என்னும் எச்சம். பறிதல் - செல்லுதல். பைத்த - பரந்த என்றுமாம். (உக)

மடலி னீடு தார லங்கன் மன்னர் சேனை யின்னவா
றுடலி னீழ லடிய கத்தொ டுங்க வும்ப ருச்சியிற்
கடலி னீடு கதிர்ப ரப்பு கடவு ளெய்து மளவு நின்
றடலி னீடி யிடைவி டாம லமரு ழந்த தாலரோ.*

(இ - ள்.) மடலின் நீடு தார் அலங்கல் மன்னர்சேனை - இதழ்கள் பொருந்திய (மண) மிக்க மாலையை யணிந்த இரண்டு மன்னர்களின் சேனைகளும், இன்னவாறு - இவ்வகையாக, உடலின் நீழல் அடியகத்து ஒடுங்க - உடம்பின் நிழல் அடியின்கண்

---

(பா - ம்.) *உழந்தவாலரோ.

ஒடுங்குமாறு, உம்பர் உச்சியில் - வானின் நடுவிடத்தில், கடலின் நீடு கதிர் பரப்பு கடவுள் எய்தும் அளவும் - கடல்போல அளவின்றிப் பரந்த கிரணங்களை வீசுகின்ற சூரியன் வரும் அளவும், அடலின் நீடி நின்று இடைவிடாமல் அமர் உழந்தது - வெற்றியில் மிக்கு நின்று இடைவிடாது போர் செய்தன.

சேனை இன்னவாறு எய்துமளவும் நின்று அமருழந்த தென்க. சேனை என்றதற்கேற்ப உழந்ததென ஒருமையாற் கூறினார். ஆல், அரோ என்பன அசைகள்.

அந்த நாள னைத்தை யும்ம ழிக்க நின்ற வரனுதற்
சிந்து தீயெ னக்க னன்று ருத்து நின்று தெறுதலால்
எந்த யாறு மறவ றப்ப விம்ப ரன்றி யும்பரும்
வெந்து வான யாறும் வற்ற வேனில் வந்தி றுத்ததால்.

(இ - ள்.) அந்தம் நாள் - முடிவுநாளில், அனைத்தையும் அழிக்க நின்ற - எல்லாவற்றையும் அழிக்குமாறு நின்ற, அரன் நுதல் சிந்து தீஎன - உருத்திரமூர்த்தியின் நெற்றியினின்று சிந்திய தீயைப்போல, கனன்று உருத்துநின்று தெறுதலால் - (ஞாயிறு) கொதித்துச் சினந்துநின்று எரித்தலால், எந்த யாறும் அறவறப்ப - எல்லா நதிகளும் முற்றும்வற்ற, இம்பர் அன்றி உம்பரும் வெந்து - இந்நிலவுலக மல்லாமல் வானுலகும் கருகி, வானயாறும் வற்ற - ஆகாய கங்கையும் வற்ற, வேனில்வந்து இறுத்தது - வேனிற் பொழுது வந்து தங்கியது.

அந்த நாள் - உக முடிவாகிய நாள்; அந்நாளில் வேனில் வந்திறுத்தது என்றுமாம். நுதல் - நுதற்கண்; ஆகுபெயர். ஆல், அசை. (உரு)

மண்பி ளந்து பிலநு ழைந்து வரைபி ளந்து நிரையவாய்
எண்பி ளந்து நின்ற பொங்க ரிலையு கப்பி ளந்துமேல்
விண்பி ளந்து பரிதி நீடு வெங்க ரங்கள் யாரையுங்
கண்பி ளந்த ழன்று வீசு கான லெங்கு மானதே.

(இ - ள்.) பரிதி நீடு வெங்கரங்கள் - சூரியனுடைய நீண்ட வெய்ய கிரணங்கள், மண்பிளந்து - நிலவுலகைப் பிளந்து, பிலம் நுழைந்து - பாதலவுலகிற் சென்று, வரைபிளந்து - மலைகளைப் பிளந்து, நிரையவாய் எண்பிளந்து நின்ற பொங்கர் - ஒழுங்குபட்டனவாய் அளவிறந்து நின்ற சோலைகளின், இலை உகப்பிளந்து - இலைகள் உதிருமாறு வெதுப்பி, மேல் விண்பிளந்து - மேலுள்ள வானுலகையும் பிளந்து, யாரையும் கண்பிளந்து - யாவரையும் கண்ணைப் பிளந்து, அழன்று வீசுகானல் - கொதித்து வீசும் கானல், எங்கும் ஆனது - எவ்விடத்தும் ஆயிற்று.

எண் பிளந்து - எண்ணைக் கடந்து. இலை உக மரக்கோடுகளைப் பிளந்தென்றுமாம். கண் பிளந்து என்பது ஒரு சொல்லாய் இரண்டாவதற்கு முடிபாயிற்று; யாருடைய கண்ணையும் எனமாற்றி யுரைத்தலுமாம். கண்பிளந்து - கண் கூசச் செய்து. வீசுகானல் - வீசுதலாலாகிய கானல். பேய்த்தேரைக் கானல் என்பது பிற்கால வழக்கு. (உசு)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

ஆயிடை யலகைத் தேரு மடைந்தவர் வெயர்வு மன்றித்
தூயநீர் வறந்த வந்தச் சுடுபுலந் தோய்ந்த காலும்
மீயுயர் மதிநி லாவும் வெய்யவாய்ச் சுடுநல் லோருந்
தீயவர் தம்மைச் சேர்ந்தாற் றீயவ ராவ ரன்றோ.

(இ - ள். ஆயிடை - அவ்விடத்து, அலகைத்தேரும்-பேய்த்தேரும், அடைந்தவர் வெயர்வும் அன்றி - அங்குச் சென்றவர்களின் வியர் நீருமல்லாமல், தூயநீர் வறந்த - நல்ல நீர்கள் சிறிதுமின்றி வற்றின; அந்தச் சுடுபுலம் தோய்ந்தகாலும் - அந்த வெப்பு நிலத்திற் படிந்துவரும் காற்றும், மீ உயர்மதி நிலாவும் - வானின்கண் உயர்ந்து விளங்கும் திங்களின் ஒளியும், வெய்யவாய்ச் சுடும் - கொடியனவாய்ச் சுடாநிற்கும்; நல்லோரும் - நல்லவரும், தீயவர் தம்மைச் சேர்ந்தால் - தீயவரைக்கூடினால், தீயவர் ஆவர் அன்றோ - தீயவராவ ரல்லவா.

அலகைத்தேர் நீர்போலும் தோற்றமுடைத் தாகலின் 'அலகைத்தேரும் வெயர்வும்' என்றார். கால் ஈண்டுக் காற்று. தட்பமுடைய காற்றும் மதியின் கிரணமும் வெப்பமுடைய நிலத்தைச் சார்ந்து வெய்யவாய்ச் சுடும் என்ற பொருளைச் சாதித்தற்கு நல்லோரும் தீயவரைச் சேர்ந்தால் தீயவராவர் என்னும் வேறு பொருளைக் கூறினமையால் இது வேற்றுப் பொருள் வைப்பணி. (உ௫)

விளைமத வூற்று மாறி வெகுளியுஞ் செருக்கு மாறித்
துளையுடைக் கைம்மான் றூங்கு நடையவாய்ச் சாம்பிச்சோர்ந்த
உளர்தரு மூழிக் காலி னோடுவாம் புரவி யெய்த்துத்
தளர்நடை யுடைய வாகித் தைவரு தென்றல் போன்ற.

(இ - ள்.) துளைஉடைக் கைமான் - துளை பொருந்திய கையையுடைய யானைகள், விளைமத ஊற்றுமாறி - இடையறாதொழுகும் மதநீர் சுரத்தல் மாறி, வெகுளியும் செருக்கும் மாறி - சினமும் செருக்கும் ஒழிந்து, தூங்கு நடையவாய் சாம்பிச் சோர்ந்த - மந்த நடையையுடையனவாய் வாடிச் சோர்ந்தன; உளர்தரும் ஊழிக் காலின் ஓடு - சஞ்சரிக்கும் ஊழிக் காற்றைப்போல ஓடும், வாம்புரவி - தாவுங் குதிரைகள், எய்த்து - இளைத்து, தளர்நடை உடையவாகி - தளர்ந்த நடையினை உடையனவாய், தைவரு தென்றல் போன்ற - தவழ்ந்து செல்லுந் தென்றலை ஒத்தன.

விளைதல் - உண்டாதல். உளர்தரல் - அசைதல். காலின், இன் ஒப்புப் பொருட்டு. சோர்ந்த, போன்ற என்பன அன்பெறாத பலவின்பால் முற்றுக்கள். (உ௬)

கானலந் தேர்மேற் சூறைக் காலெனும் பாகன் றூண்ட
வேனில்வேந் தேறிச் சீறி வெப்பமாம் படைகள் வீச
மாநிலங் காவல் பூண்ட மன்னவ ரிருவர்* தங்கள்
தானையு முடைந்து தண்ணீர் நசைசுடச் சாம்பிற் றன்றே.

---

(பா - ம்.) *மானவரிருவர்

(இ - ள்.) கானல் தேர்மேல் - கானலாகிய தேரின்மேல், சூறைக்கால் எனும் பாகன் தூண்ட - சூறைக்காற்று என்னும் பாகன் செலுத்த, வேனில் வேந்து எறி - வேனிலாகிய வேந்தன் எறி, சீறி வெப்பமாம் படைகள் வீச - சினந்து வெப்பமாகிய படைக்கலங்களை வீச, மாநிலம் காவல் பூண்ட மன்னவர் இருவர் தங்கள் தானையும் உடைந்து - பெரிய நிலவுலகத்தைக் காத்தலை மேற்கொண்ட இரண்டு மன்னர்களின் சேனையும் (அவ் வெம்மைக்குத்) தோற்று, தண்ணீர் நசைசுட சாம்பிற்று - நீர் வேட்கை வருத்த வாடியது.

வேனிற் காலத்தில் கானலும் சூறைக்காற்றும் வெப்பமும் மிக்கமையை இங்ஙனங் கூறினர். அம் அன்று ஏ அசைகள். கானல் முதலியவற்றைத் தேர் முதலியவாக உருவகப்படுத்தினமையால் இஃது உருவகவணி. (உஎ)

இரக்கமில் கொடிய செல்வர் மருங்குபோ யிரப்பார் போல
உருப்பமொண் டிறைக்குங் கள்ளி நீழல்புக் கொதுங்கு வாரும்
தருக்கற நிரப்பா லெய்த்தோர் தம்மினும் வறியர் பாற்சென்
றிரப்பபோ லிலைதீந் துக்க மாநிழ லெய்து வாரும்.

(இ - ள்.) இரக்கம் இல் கொடிய செல்வர் மருங்குபோய் - இரக்கமற்ற கொடிய செல்வரிடஞ் சென்று, இரப்பார்போல - இரப்பவரைப்போல, உருப்பம் மொண்டு இறைக்கும் - வெப்பத்தை முகந்து வீசுகின்ற, கள்ளி நீழல் புக்கு ஒதுங்கு வாரும் - கள்ளி நிழலிற் சென்று ஒதுங்குபவரும், தருக்கு அற நிரப்பால் எய்த்தோர் - களிப்பு நீங்க வறுமையால் மெலிந்தோர்கள், தம்மினும் வறியர்பால் சென்று இரப்ப போல் - தம்மைக் காட்டிலும் வறுமையை யுடையாரிடஞ் சென்று இரத்தலைப்போல, இலை தீந்து உக்க மரம் நிழல் எய்துவாரும் - இலைகள் கருகி உதிரப்பட்ட மரத்தின் கண் நிழலுக்குச் செல்பவரும்.

உருப்பம் - வெப்பம். மொண்டு, முகந்து என்பதன் மரூஉ. உருப்ப மொண் டிறைக்கும் என்னும் பொருளடையால் கொடிய செல்வர் கடுஞ் சொற்களைப் பெய்வ ரென்பது பெறப்படும். இரப்ப, தொழிற் பெயர். குளகம். (உஅ)

கொல்லிபம் பரிமான் றேரின் குறுநிழ லொதுங்கு வாரும்
அல்லிருள் வட்டத் தோல்வெண் கவிகையு ளடங்கு வாருஞ்
செல்லிடம் பிறிது காணார் வீரவான் சென்றோர் நின்ற
கல்லுடை* னிழல்சேர் வாரு மாயினர் களம செல்லாம்.

(இ - ள்.) கொல் இபம் பரிமான் தேரின் - கொல்லுதற் றொழிலையுடைய யானையும் குதிரையும் தேருமாகிய இவற்றின், குறுநிழல் ஒதுங்கு வாரும்-சிறு நிழலில் ஒதுங்குகின்றவரும், அல் இருள் வட்டத்தோல் வெண்கவிகையுள் அடங்கு வாரும்- மிக்க இருள்போன்ற கேடகத் துள்ளும் வெள்ளிய குடையினுள்ளும் சென்று ஒடுங்கு வாரும், செல் இடம் பிறிது காணார் - செல்லுதற்கு இடம் வேறு காணாதவராய், வீர

(பா - ம்.) *கல்லிடை.

வான் சென்றோர் நின்ற கல் உடல் நிழல் சேர்வாரும் - வீர சுவர்க்கஞ் சென்ற வீரர்கள் நின்ற கல்லாகிய உடம்பின் நிழலை அடைவாரும், ஆயினர் களமர் எல்லாம் - ஆயினர் வீர ரனைவரும்.

அல் இருள் - நள்ளிரவின் இருள். வட்டத்தோல் - பரிசை. வீரவான் சென்றோர் - போரிற் புறங் கொடாது உயிர் துறந்து வீரசுவர்க்க மடைந்தோர். அங்ஙனம் துறக்க மெய்திய வீரர்க்குக் கல்லில் உருச்செய்து பெயரும் பீடும் எழுதி நடுதல் பண்டை வழக்கமாகும்:

> "என்னைமுன் னில்லன்மின் றெவ்விர் பலரென்னை
> முன்னின்று கன்னின்றவர்"

எனத் திருக்குறளிலும் இது கூறப்படுதல் காண்க. களமர் - போர்க்களத்தி லிருப்போர், வீரர். (உக)

> ஆயதோ ரமையந் தன்னி லளவிலா வுயிர்க்கு மீன்ற
> தாயனார் துலைபோல் யார்க்குஞ் சமநிலை யாய கூடல்
> நாயனார் செழியன் றானை நனந்தலை வேத நாற்காற்
> பாயதோர் தண்ணீர்ப் பந்தர் பரப்பியப் பந்தர் நாப்பண்.

(இ - ள்.) ஆயது ஓர் அமையம் தன்னில் - இவ்வாறான அமையத்தில், அளவு இலா உயிர்க்கும் ஈன்றதாய் அன்னார் - அளவிறந்த உயிர்களனைத்திற்கும் பெற்ற தாய் போன்றவராகிய, துலைபோல் யார்க்கும் சமநிலை ஆய-தராசின் நாவினைப்போல் யாவரிடத்தும் நடுவு நிலையைப் பொருந்திய, கூடல் நாயனார் - மதுரைப் பெருமானாகிய சோமசுந்தரக் கடவுள், செழியன் தானை நனந்தலை - பாண்டியன் படையின் நடுவுள், வேதம் நால்கால் பாயது ஓர் தண்ணீர்ப் பந்தர் பரப்பி-நான்கு வேதங்களும் நான்கு கால்களாகப் பொருந்தியதொரு தண்ணீர்ப் பந்தர் வைத்து, அப்பந்தர் நாப்பண் - அப்பந்தரின் நடுவில்.

ஓர், அசை. எல்லாவுயிர்களிடத்தும் பேரருளுடைய இறைவனுக்குப் பகையும் நொதுமலும் நண்பும் இல்லை யென்பார் 'யார்க்கும் சம நிலையாய' என்றார். யாவர் கண்ணும் நடுவுநிலையுடைய பெருமான் ஈண்டுச் செழியன்றானை நாப்பண் தண்ணீர்ப் பந்தர் வைத்துச் செழியற்கு வெற்றியும் சோழற்குத் தோல்வியும் எய்துவித்தது ஆன்மாக்களின் வினைகட் கீடாக அறக்கருணையால் அருளலும் மறக்கருணையால் ஒறுத்துக் குற்றந் தீர்த்தலுமாகிய அவரது அருட் செயலின் பெற்றியே யாமென்க. பாயது - பொருந்திய தென்னும் பொருட்டு. பரப்பி - பரப்புடைத்தாக வைத்து. பந்தர், ஈற்றுப்போலி. (கூ)

> புண்டர நுதலுங் காதின் புறத்தணி மலரும் பாத
> முண்டக மலர்மே லொற்றைக் கிண்கிணி முழக்குங் கச்சியாப்
> புண்டதோ லுடையுங் கண்டோ ருள்ளமுங் கண்ணுங்கொள்ளை
> கொண்டபுன் னகையு முள்ளக் கருணையின் குறிப்புந் தோன்ற.

(இ - ள்.) புண்டர நுதலும் - திரிபுண்டர மணிந்த நெற்றியும், காதின் புறத்து அணி மலரும் - காதின் மீது அணிந்த மலரும், பாத முண்டக மலர்மேல் -

திருவடியாகிய தாமரை மலர் மேல், ஒற்றைக்கிண்கிணி முழக்கும் - ஒற்றைச் சதங்கையின் ஒலியும், கச்சுயாப்புண்டதோல் உடையும் - கச்சினால் இறுகக்கட்டப்பட்ட புலித்தோலாடையும், கண்டோர் உள்ளமும் கண்ணும் - நோக்கினவர்களின் உள்ளத்தையும் விழிகளையும், கொள்ளை கொண்ட புன்னகையும் - கொள்ளை கொண்ட புன்முறுவலும், உள்ளக்கருணையின் குறிப்பும் தோன்ற - திருவுள்ளத்திலெழுந்த அருட் குறிப்பும் புலப்பட.

புறம் என்பதை ஏழனுருபாக்கிக் காதினிடத் தணிந்த என்றலுமாம். கச்சியாப்பு, குற்றிகரம். கருணையின் குறிப்பு - கருணையை வெளிப்படுத்தும் தோற்றம். (௬க)

அருமறை யகத்து ணின்றாங் கருந்தவ ராகி வேணிப்
பொருபுனல் பூரித் தாங்கோர் புண்ணியச் சிரகந் தாங்கி
ஒருவருக் கொன்றே யாகி யிலக்கருக் கிலக்க மாகித்
தருகுறும் புழையால் வாக்கித் தணித்தனர் தண்ணீர்த்தாகம்.

(இ - ள்.) அருமறை அகத்துள் நின்றாங்கு - அரிய வேதத்தினுள்ளே நின்ற நிலைபோல, அருந்தவர் ஆகி - அரிய தவக்கோல முடையராகி, ஓர் புண்ணியச் சிரகம் - ஒரு புண்ணிய வடிவாகிய நீர்க் கரகத்தினை, வேணிப் பொரு புனல் பூரித்துத் தாங்கி-சடையிலுள்ள (அலைகள்) மோதுங் கங்கைநீரை நிறைத்து ஏந்தி, ஒருவருக்கு ஒன்றே ஆகி இலக்கருக்கு இலக்கம் ஆகித் தரு - ஒருவருக்கு ஒரு தாரையாகவும் இலக்கம் பேருக்கு இலக்கந் தாரையாகவு மிருந்து நீரைத் தருகின்ற, குறும் புழையால் வாக்கி - (அதன்) சிறிய துவாரத்தால் நீரை வார்த்து, தண்ணீர்த் தாகம் தணித்தனர் - நீர் வேட்கையைப் போக்கினர்.

வேதத்துள் நின்ற நிலை - வேதத்தாற் கூறப்படும் நிலை; இறைவன் தவ வடிவினனாகக் கூறப்படுதலை

"நீரற வறியாக் கரகத்துத்
தாழ்சடைப் பொலிந்த வருந்தவத் தோற்கே"

என்னும் புறப்பாட்டானு மறிக. பூரித்தாங்கு என்பதில் ஆங்கு அசை; பூரித்தாற் போல என்பாருமுளர். இலக்கர் - நூறாயிரவர்; எண்ணிலார் என்றபடி. வாக்கி - வார்த்து. இங்ஙனம் இறைவன் தண்ணீர்ப்பந்தர் வைத்த அருட் செயல்,

"தண்ணீர்ப் பந்தர் சயம்பெற வைத்து
நன்னீர்ச் சேவக னாகிய நன்மையும்"

எனத் திருவாசகத்திற் குறிக்கப் பெற்றுளது. (௬உ)

சுந்தரப் புத்தேள் வைத்த நறுமலர் வாசத் தெண்ணீர்ப்
பந்தர்புக் கடைந்து நன்னீர் பருகியெய்ப் பகல வாற்றல்
வந்தபின் செழியன் றன்னோர் வளவன்மே லேறிச் சீறி
அந்தமி லனிகஞ் சிந்தித் தும்பைவேய்ந் தடுபோர் செய்தார்.

(இ - ள்.) சுந்தரப் புத்தேள்வைத்த - சோமசுந்தரக் கடவுள் வைத்தருளிய, துறுமலர் வாசத் தெள்நீர்ப் பந்தர்புக்கு அடைந்து - மணமிக்க மலரால் மணம் ஊட்டிய தெளிந்த நீரினையுடைய பந்தர் சென்று அடைந்து, நல்நீர்பருகி - நல்ல நீரினைப்பருகி, எய்ப்பு அகல - இளைப்பு நீங்க, ஆற்றல் வந்தபின் - முன் இழந்த வலிமை மீண்டவளவில், செழியன்தன்னோர் - பாண்டியன் சேனைவீரர், வளவன் மேல் எறி - சோழன்மேற் போருக்கெழுந்து, சீறி - சினந்து, அந்தம்இல் அனிகம் சிந்தி - அளவிறந்த அவன் படைகள் சிதறும்படி, தும்பை வேய்ந்து அடுபோர் செய்தார் - தும்பைமாலை யணிந்து கொல்லுதலையுடைய போரினைப் புரிந்தனர்.

துறு - நெருங்கிய. தன்னோர் - தமர்; படைவீரர். சிந்த வென்பது சிந்தி யெனத் திரிந்து நின்றது. அடுபோர் செய்து சிந்தினர் என விகுதி பிரித்துக் கூட்டலுமாம். (நந)

கடலுடைந் தென்னப் பொன்னிக் காவலன் றானை சாய
மடலுடை வாகை வேய்ந்து வளவனை மருக னோடும்
மிடலுடைத் தறுகட் சேனை வீரர்வெங் கையாற் பற்றி
அடலுடைக் கன்னி நாடர்க் கரசன்முன் கொண்டு போந்தார்.

(இ - ள்.) கடல் உடைந்து என்ன - கடற்பெருக்கு நிலை கடந்து புறம் போனாற்போல, பொன்னி காவலன் தானைசாய - காவிரியையுடைய சோழ மன்னன் சேனைகள் புறங்கொடுக்க, மடல் உடை வாகை வேய்ந்து - இதழ்களையுடைய வாகை மாலை சூடி, வளவனை மருகனோடும் - காடு வெட்டிய சோழனை அவன் மருகனாகிய இராச சிங்க பாண்டியனோடு, மிடல் உடைத் தறுகண் சேனை வீரர் - வலிமையுடைய அஞ்சாமை மிக்க படை வீரர்கள், வெங்கையால் பற்றி - தம் வெவ்விய கையாற் பிடித்து, அடல் உடைக் கன்னி நாடர்க்கு அரசன்முன் - வெற்றியையுடைய கன்னி நாட்டிலுள்ளவர்கட்கு அரசனாகிய இராசேந்திர பாண்டியன் முன்பு, கொண்டு போந்தார் - கொண்டு வந்தனர்.

கடல் போலுஞ் சேனையாகலின் அது நிலை கெட்டோடுதலைக் கடலுடைந் தென்ன என்றார். உடைந்ததென்ன என்பது விகார மாயிற்று. மடலுடை வாகை, சினைக்கேற்ற அடையடுத்தது: அடலுடை அரசன் என்க. (நச)

கொடுவந்த வளவன் றன்னைக் கோப்பெருஞ் செழியர்கோமான்
வடுவந்த தம்பி யோடு மாடநீள் கூடன் மேய
கடுவந்த மிடற்றார் முன்போய் விடுத்தெந்தை கருத்தியாதென்ன
நடுவந்த நிலையான் கேட்ப நாயக னிகழ்த்து மன்னே.

(இ - ள்.) கோப்பெரும் செழியர் கோமான் - பெரிய தலைமையையுடைய செழியர் பெருமானாகிய இராசேந்திர பாண்டியன், கொடுவந்த வளவன்தன்னை-அங் ஙனங் கொண்டுவரப்பட்ட சோழனை, வடுவந்த தம்பியோடு - (தனது குடிக்கு) வடு வாகத் தோன்றிய தம்பியோடு, மாடம்நீள் கூடல்மேய - மாடங்கள் மிக்க கூடலில் எழுந்தருளிய, கடுவந்த மிடற்றார் முன்போய் விடுத்து - நஞ்சு தங்கிய திருமிடற்

றினையுடைய இறைவன் திருமுன் கொடுபோய் விடுத்து, எந்தை கருத்து யாது என்ன - எந்தையே நின் திருவுள்ளம் யாதென்று, நடுவந்த நிலையான் கேட்ப - நடுவு நிலைமைபொருந்திய பாண்டியன் வினவ, நாயகன் நிகழ்த்தும் - இறைவன் கூறி யருளுவன்.

கோ - தலைமை. தமையனுக்கு மனைவியாகக் குறித்தவளை மணஞ் செய்தமை யாலும் தமையனது அரசினை வௌவப் போர்க்கு வந்தமையாலும் 'வடுவந்த தம்பி' என்றார். கடுவந்த - கடுப்பொருந்திய. நடுவந்தநிலை - நடுவாகப் பொருந்திய நிலை. என்ன என்பதற்கு என்று வினவ என்று கூறி, கேட்ப என்பதற்குச் செவியேற்க என்றுரைத்தலுமாம். மன்னும் ஓவும் அசைகள். (௩௫)

அறவனீ யல்லை யோவுன் னகத்தினுக் கிசைந்த செய்கென்
றிறைவன தருளால் வானின் றெழுமொழி கேட்டு வையைத்
துறைவனு மறத்தி னாற்றாற் சோழனைச் சிலமால் யானை
மறவயப் பரிபூண் மற்றும் வழங்கினான் விடுத்தான் பின்னர்.

(இ - ள்.) நீ அறவன் அல்லையோ - நீ அறநெறி பிழையாதவ னல்லையோ, உன் அகத்தினுக்கு இசைந்த செய்க என்று - உன் உள்ளத்திற்குப் பொருந்திய செய்கையைச் செய்யக்கடவை என்று, இறைவனது அருளால் வான் நின்று எழும் மொழிகேட்டு - இறைவன் திருவருளால் வானினின்று உண்டாகும் மொழியைக் கேட்டு, வையைத்துறைவனும் - வையையின் நீர்த்துறையை யுடைய பாண்டியனும், அறத்தின் ஆற்றால் - அறநெறியால், சோழனை - காடுவெட்டிய சோழனை, சிலமால் யானை மறவயப்பரி பூண்மற்றும் வழங்கினான் விடுத்தான் - சில மத யானைகளையும் வெற்றியையும் வன்மையையுமுடைய குதிரைகளையும் அணிகளையும் பிறவற்றையும் கொடுத்து விடுத்து, பின்னர் - பின்பு.

போரில் அகப்பட்ட வேந்தரைக் கொடுமையாக நடத்துதல் தகாதென்பதும், சோழனும் தமக்கு அன்பனும் பாண்டியற்கு நண்பனும் இருந்தவனென்பதும் தோன்ற 'அறவன் நீ அல்லையோ' எனக் கூறியருளினார். செய்கென்று, அகரம் தொகுத்தல். எழுந்தது அங்ஙனம் எழுந்த மொழியைக் கேட்டு என விரிக்க. வழங் கினான், விடுத்தான் என்பன எச்சங்களாயின. (௩௬)

வள்ளறன் றம்பி யென்னு மன்னவர் சிங்கந் தன்னைத்*
தள்ளருந் தறுக ணாண்மைத் தருக்கறத் தானாள் செல்வம்
உள்ளன சிறிது மாற்றி யொதுக்கியெவ் வுயிர்க்குந் தாயாய்ப்
பள்ளநீ ரகலங் காத்துப் பல்வளம் பழுக்க வாழ்ந்தான்.

(இ - ள்.) வள்ளல் - இராசேந்திர பாண்டியன், தன் தம்பி என்னும் மன்ன வர் சிங்கம் தன்னை - தனது இளவல் என்று சொல்லப்படும் இராச சிங்கனை, தள் அருந்தறுகண் ஆண்மைத் தருக்கு அற - தள்ளுதற்கரிய அவனது அஞ்சாமையும் ஆண்மைச் செருக்கும் நீங்க, தான் ஆள் செல்வம் உள்ளன - தான் ஆளுஞ் செல்வங்

(பா - ம்.) * சிங்கன் றன்னை.

களா யுள்ளவற்றுள், சிறிது மாற்றி ஒதுக்கி - சிறிது கொடுத்து அவனை வேறாக ஒதுக்கி விட்டு, எவ்வுயிர்க்கும் தாயாய் - எல்லா வுயிர்களுக்கும் அன்னையாய், பள்ளி நீர் அகலம் காத்து - கடல் சூழ்ந்த நிலவுலகினைப் புரந்து, பல்வளம் பழுக்க வாழ்ந் தான் - பல வளங்களும் சிறக்க வாழ்ந்தனன்.

பிறர் செய்த தீங்கினைப் பொறுத்ததன்றி அவர்க்கு உதவி செய்யவும் மூற் பட்டானாகலின் 'வள்ளல்' என்றார். தம்பி யாதற்குத் தக்கவனல்ல னென்பார் 'தம்பி யென்னும்' என்றார். மாற்றி - அவனுக் குரியதாகச் செய்து. எல்லா வுயிர்களிடத் தும் தலையளி யுடையவனாய் என்பார் 'எவ்வுயிர்க்குத் தாயாய்' என்றார். (௩௭)

ஆகச் செய்யுள் ௩௮௫௫.

முப்பத்தாறுவது

# இரசவாதஞ்செய்த படலம்

[கலி நிலைத்துறை]

வரதன் மீனவன் படையிடை வந்துநீர்ப் பந்தர்
விரத னாகிநீ ரருத்திய வினையுரை செய்தும்
பரத நூலிய னாடகப் பாவையா ளொருத்திக்
கிரத வாதஞ்செய் தருளிய வாடலை யிசைப்பாம்.

(இ - ள்.) வரதன்-வள்ளலாகிய சோமசுந்தரக்கடவுள், மீனவன் படையிடை-பாண்டியன் சேனை நடுவுள், நீர்ப்பந்தர் விரதனாகி வந்து - தண்ணீர்ப் பந்தர் வைக்கு முனிவனாய் வந்து, நீர் அருத்திய வினை உரைசெய்தும் - நீரைப்பருகுவித்த திருவிளையாடலைக்கூறினோம்; பரத நூல் இயல் நாடகப்பாவையாள் ஒருத்திக்கு - பரத நூல் இலக்கணமமைந்த நாடகத்தில் வல்ல பதுமைபோல்வாளாகிய பொன்னனையாளுக்கு, இரத வாதம் செய்தருளிய ஆடலை இசைப்பாம் - இரச வாதஞ் செய்த திருவிளையாடலை (இனிக்) கூறுவாம்.

வரதன் - வேண்டுவன அளிப்போன். விரதன் - நோன்பினை மேற்கொண்டுளோன். (௧)

பருங்கை மால்வரைப் பூழியன் பைந்தமிழ் நாட்டின்
இரங்கு தெண்டிரைக் கரங்களா லீர்ப்புனல் வையை
மருங்கி னந்தன மலர்ந்தபன் மலர்கடூய்ப் பணியப்
புரங்க டந்தவ னிருப்பது பூவண நகரம்.

(இ - ள்.) பருகை மால்வரை பூழியன் - பருத்த கையையுடைய கரிய மலைபோலும் யானைப் படையையுடைய பாண்டியனது, பைந்தமிழ் நாட்டின் - அழகிய தமிழ் நாட்டின்கண், ஈர்புனல் வையை - குளிர்ந்த நீரையுடைய வையை யாறு, இரங்கு தெள் திரைக் கரங்களால் - ஒலிக்கின்ற தெளிந்த அலையாகிய கைகளால் - மருங்கில் நந்தனம் மலர்ந்த - பக்கங்களிலுள்ள நந்தன வனங்கள் மலர்ந்த, பல்மலர்கள் தூய்ப்பணிய - பல மலர்களையும் தூவி இறைஞ்ச, புரம் கடந்தவன் இருப்பது - திரிபுரங்களையும் நீறாக்கிய இறைவன் வீற்றிருக்கப் பெறுவது, பூவண நகரம்-திருப்பூவண மென்னும் பதியாகும்.

மால் - பெருமையும், மத மயக்கமும் ஆம். பூழியர் என்னும் பெயர் பூழி நாட்டையுடைய காரணத்தால் முன்பு சேரர்க்குளதாகிப் பின் பாண்டியர்க்கு வந்திருத்தல் வேண்டும்; பூழி - கொடுந்தமிழ் நாடு பன்னிரண்டனுள் ஒன்று; மேற்குச்

கடலோரத்தில் உள்ளது. பசுமை தமிழுக்கு அடை; தமிழ் மொழியானது மென்மையும் ஒண்மையும் இனிமையும் வளமையும் செம்மையும் சீர்மையும் உடையதாய் விளங்குதலால் இதனைச் சான்றோர்கள் பலவாறு அடையடுத்து வழங்குவாராயினர் என்க. துவி என்பது விகாரமாயிற்று. பூவணம் - பாண்டி நாட்டிலுள்ள தேவாரம் பெற்ற பதினான்கு திருப்பதிகளிலொன்று. இருப்பது - இருக்கும் இடமாவது. (உ)

எண்ணி லங்குறை சராசர மிலிங்கமென் றெண்ணி
விண்ணி னாள்களுங் கோள்களும் விலங்குவ தியாக்கைக்
கண்ணி னன்கதிர் முதற்பல கடவுளர் பூசை
பண்ணி வேண்டிய நல்வர மடைந்ததப் பதியில்.

(இ - ள்.) அங்கு உறை எண் இல் சர அசரம் - அங்கு வசிக்கும் அளவற்ற சரா சரங்களனைத்தும், இலிங்கம் என்று எண்ணி - சிவலிங்க மூர்த்தமென்று கருதி, விண்ணின் நாள்களும் கோள்களும் விலங்குவது-வானின்கணுள்ள நாண்மீன்களும் நவக்கோள்களும் விலகிச் செல்லப் பெறுவது; ஆக்கைக் கண்ணினன் கதிர் முதல் பல கடவுளர் - உடலிற் கண்களையுடைய இந்திரனும் சூரியனு முதலிய பல தேவர்கள், பூசை பண்ணி - வழிபட்டு, வேண்டிய நல்வரம் அடைந்தது - தாம் விரும்பிய நல்ல வரங்களை அடையப்பெற்றது; அப்பதியில் - அத்தன்மை வாய்ந்த அந்நகரில்,

எண்ணில் சராசரங்களையும் என்றியைத்து விரிக்க. சிவலிங்கமாகத் தோன்றுதலின் எண்ணி விலங்குவவாயின; பதியின் மேன்மை கூறியவாறு. பூவணநகரம் விளங்கப்பெறுவது, அடையப்பெற்றது என்க. (௩)

கிளியு ளார்பொழிற் பூவணக் கிழவர்தங் கோயிற்
றளியு ளார்தவப் பேறனை டாதுகு பூந்தார்
அளியு ளார்குழ லணங்கனை ளந்தரத் தவர்க்குங்
களியு ளார்தர மயக்குறாஉங் கடலமு தனையாள்.

(இ - ள்.) கிளி உள் ஆர் பொழில் பூவணக் கிழவர்தம் - கிளிகள் உள்ளே நிறைந்துவாழும் சோலைசூழ்ந்த திருப்பூவண நாதருடைய, கோயில் தளியுளார் தவப் பேறு அனள் - திருக்கோயிற் பணிபுரியும் உருத்திரகணிகையர் தவப்பயன்போலும் ஓர் நங்கை உளள்; தாது உகுபூந்தார் உள் அளி ஆர் குழல் அணங்கு அனள் - அவள் மகரந்தஞ் சிந்தும் மலர்மாலையுள் வண்டுகள் பொருந்தி இசைபாடுங் கூந்தலையுடைய அணங்கினை யொப்பாள்; அந்தரத்தவர்க்கும் - தேவர்கட்கும், களிஉள் ஆர்தர - உள்ளத்திற் களிப்புமிக, மயக்குறாஉம் - மயக்குகின்ற, கடல் அமுது அனையாள் - கடலிற் றோன்றிய அமுதம்போல்வாள். (௪)

நரம்பி னேழிசை யாழிசைப் பாடனு நடநூல்
நிரம்பு மாடலும் பெண்ணல நீர்மையும் பிறவும்
அரம்பை மாதரை யொத்தன ளறநெறி யொழுகும்
வரம்பி னலவர் தமக்குமே லாயினண் மன்னே.

(இ - ள்.) நரம்பின் எழு இசை யாழிசைப் பாடலும் - நரம்பின் கண்ணமைந்த குரல் முதலிய ஏழிசைகளையுடைய யாழின் வழியே பாடும் மிடற்றுப்பாடலும், நடநூல் நிரம்பும் ஆடலும் - பரதநூலிற் கூறும் இலக்கணம் நிரம்பிய ஆடலும், பெண் நல நீர்மையும் - பெண்கட்குரிய அழகின் றன்மையும், பிறவும் - ஏனையவுமாகிய இவற்றால், அரம்பை மாதரை ஒத்தனள் - அரம்பை மகளிரை நிகர்த்தனள், அறன் நெறி ஒழுகும் வரம்பினால் - சிவபுண்ணிய நெறியில் நடக்குங் கடப்பாட்டால், அவர் தமக்கு மேல் ஆயினாள் - அவ்வர மகளிரினும் மேம்பட்டவளானாள்.

ஏழிசை - குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன. யாழ்ப்பாடலும் அதன்வழியே அதனை யொத்துப்பாடும் மிடற்றுப் பாடலும் என்பார், 'ஏழிசை யாழிசைப் பாடலும்' என்றார். பெண்ணலம் - பெண்டிர்க்குரிய அழகு. நாடக மகளிர் ஆடல் பாடல் அழகு என்பவற்றாற் சிறந்திருக்க வேண்டுமென்பதனை,

"ஆடலும் பாடலு மழகு மென்றிக்
கூறிய முறைமையி னொன்றுகுறை படாமல்"

என்னும் சிலப்பதிகார அரங்கேற்றுகாதை யடிகளானறிக. பிறவென்றது இன்சொல் முதலியவற்றை. அரம்பை மாதர் - ஊர்வசி முதலாயினார். தவப்பேறனாள் ஒருத்தியுளள் அவள் அணங்கனாள் அமுதனையாள் ஒத்தனள் மேலாயினாள் என முடிக்க. மன்னும் ஓவும் அசைகள். (ரு)

ஆய மாதர்பேர் பொன்னனை யாளென்ப வவடன்
நேய வாயமோ டிரவிரு ணீங்குமு னெழுந்து
தூய நீர்குடைந் துயிர்புரை சுடர்மதிக் கண்ணி
நாய னாரடி யருச்சனை நியமமு நடாத்தி.

(இ - ள்.) ஆய மாதர்பேர் பொன்னனையாள் என்ப - அன்னளாகிய மாதின் பெயர் பொன்னனையாளென்று கூறுவர், அவள் தன் நேய ஆயமோடு - அவள் தன்னுடைய அன்புள்ள தோழியர் கூட்டத்தோடும், இரவு இருள் நீங்குமுன் எழுந்து - இரவின் இருள் புலர்தற்கு முன்னரே துயிலுணர்ந் தெழுந்து, தூயநீர் குடைந்து - புனிதமாகிய நீரில் மூழ்கி, உயிர்புரை - உயிரையொத்த, சுடர்மதிக்கண்ணி நாயனார் - ஒளிபொருந்திய பிறைமதியைக் கண்ணியாகச் சூடிய சிவபெருமானுடைய, அடி அருச்சனை நியமமும் நடத்தி - திருவடிகளை அருச்சித்தலாகிய கடனையும் இயற்றி.

என்ப, அசையுமாம். இருணீங்குமுன் - வைகறையில். கண்ணி - முடியிற் சூடும் மாலை. நாயனார் - தலைவர். உயிர்புரை நாயனார் என்க. (சு)

திருந்தர் பூவண வாணரைச் சேவித்துச் சுத்த
நிருத்த மாடிவந் தடியரைப் பொருளென நினையுங்
கருத்த ளாயருச் சித்தவர் களிப்பவின் சுவையூண்
அருத்தி யெஞ்சிய தருந்துவா ளஃதவ ணியமம்.

(இ - ள்.) திருத்தர் பூவணநாதரைச் சேவித்து - தூயராகிய திருப்பூவண நாதரை வணங்கி, சுத்த நிருத்தம் ஆடி - சுத்தநாடகம் ஆடி, வந்து - இல்லிற்குவந்து, அடியரைப் பொருள் என நினையும் கருத்தளாய் - சிவனடியார்களை மெய்ப்பொருளென்று கருதும் உள்ளமுடையாளாய், அருச்சித்து - பூசித்து, அவர் களிப்ப இன்சுவை ஊண் அருத்தி - அவர் மகிழுமாறு இனிய சுவையோடு கூடிய உணவினை உண்பித்து, எஞ்சியது அருந்துவாள் - எஞ்சிய உணவினை உண்பாள்; அஃது அவள் நியமம் - அஃது அவள் நாடோறும் இயற்றும் கடனாகும்.

வாணர், வாழ்நர் என்பதன் மரூஉ. சுத்த நிருத்தம் - சொக்கம்; சாந்தமாக ஆடும் சாந்திக் கூத்தின் வகை நான்கனுள் ஒன்று; நூற்றெட்டுக் கரணமுடையது. இனி மத்தள முதலியனவின்றிச் செய்யப்படும் கூத்து என்றுமாம். அடியர் - வினைத் துயர் தீர்க்கும் திருவேடமுடைய சிவனடியார். எஞ்சியது - மிச்சில். நியமம் - தவிராக்கடன். (எ)

மாத ரிங்நெறி வழங்குநாண் மற்றவ ளன்பைப்
பூத லத்திடைத் தெருட்டுவான் பொன்மலை வல்லி
காத லாயகன் றிருவுருக் காணிய வுள்ளத்
தாத ரங்கொடுத் தருளினார் பூவணத் தையர்.

(இ - ள்.) மாதர் இந்நெறி வழங்கும் நாள் - பொன்னனையாள் இந்த நெறியில் ஒழுகும் நாளில், பூவணத்து ஐயர் - திருப்பூவணத்து இறைவர், மற்றவள் அன்பை - அப்பொன்னனையாள் அன்பினை, பூதலத்திடைத் தெருட்டுவான் - நிலவுலகிலுள்ளாருக்கு அறிவிக்க, பொன்மலை வல்லி காதல் நாயகன் - உமையம்மையின் அன்புள்ள நாயகனாகிய சிவபெருமானுடைய, திரு உருக்காணிய - திருமேனியைச் சமைக்க, உள்ளத்து ஆதரம் கொடுத்தருளினார் - (அவள்) மனத்தின்கண் ஆசையைக் கொடுத்தருளினார்.

காதல் எனப் பொருள்படும் மாதர் என்னும் உரிச்சொல்லே பின்மகளிரைக் குறித்ததாகலின், அஃது ஒருமையிலும் வழங்கும். மற்று, அசை. தெருட்டுவான், வானீற்று வினையெச்சம். பொன்மலைவல்லி காதலாயகன் றிருவுரு - தமது திருவுரு. காணிய - இயற்ற; செய்யிய என்னும் வினையெச்சம். ஐயர் அவள் அன்பைத் தெருட்டுவான் திருவுருக்காணிய ஆதரங் கொடுத்தருளினார் என்க. (அ)

ஐயர் தந்தபே ரன்புரு வாயினாண் மழுமான்
கையர் தந்திரு வுருவினைக் கருவினாற் கண்டு
மைய கண்ணினாள் வைகலும் வரும்பொரு ளெல்லாம்
பொய்யி லன்புகொண் டன்பர்தம் பூசையி னேர்வாள்.

(இ - ள்.) மைய கண்ணினாள் - மைதீட்டிய விழிகளையுடைய பொன்னனையாள், ஐயர் தந்தபேர் அன்பு உரு ஆயினாள் - இறைவர் கொடுத்தருளிய பெரிய அன்பே வடிவமாகியவளாய், மழுமான்கையர் தம் திரு உருவினை - மழுவையும்

மானையும் திருக்கரத்திலேந்திய சிவபெருமானது திருமேனியை, கருவினுல் கண்டு - கருவில் உளதாக்கி, வைகலும் வரும் பொருள் எல்லாம் - நாள்தோறும் வருகின்ற பொருள் முழுதையும், பொய்இல் அன்புகொண்டு - பொய்யில்லாத (மெய்) அன்பினுல், அன்பர்தம் பூசையில் நேர்வாள் - அடியார் பூசையிலே செலுத்துவாள்.

ஆயினுள், முற்றெச்சம். தம் இரண்டும் சாரியை. கரு - குழவியுருத் தோன்றும் தாயின் கருப்போன்று உலோகங்களினுய உரு வார்க்கப்படுதற்கு மெழுகினுல் அமைக்கப்படும் வடிவம். இம் மெழுகுருவமைத்தலைக் கருக்கட்டுதல் என்பர். மைய, குறிப்புப் பெயரெச்சம். வரும்பொருள் - ஆடல் பாடல் முதலியவற்ருல் வரும் பொருள். (கூ)

அடியர் பூசனைக் கன்றியெஞ் சாமையா லடிகள்
வடிவு காண்பதெப் படியென்று மடியிலச் செழியற்
கொடிவில்* பொற்கிழி நல்கிய வள்ளலை யுன்னிப்
பிடிய னுளிருந் தாளஃ தறிந்தனன் பெருமான்.

(இ - ள்.) அடியர் பூசனைக்கு அன்றி - அடியார்களின் வழிபாட்டிற்கே யல்லாமல், எஞ்சாமையால் - பொருள் மிஞ்சாமையினுல், அடிகள் வடிவுகாண்பது எப்படி என்று - இறைவரின் திருவுருவமைத்தல் எங்ஙனமென்று கருதி, மடிஇல் அச் செழியற்கு - சோம்பலில்லாத அக்குல பூடண பாண்டியனுக்கு, ஒடிவு இல் பொற்கிழி நல்கிய வள்ளலை உன்னி - குறையாத பொற்கிழியினையருளிய சோமசுந்தரக் கடவுளைச் சிந்தித்து, பிடிஅனுள் இருந்தாள் - பெண் யானைபோல்பவளாகிய அப் பொன்னனையாள் இருந்தனள்; பெருமான் அஃது அறிந்தனன் - இறைவன் அதனைத் திருவுளங் கொண்டான்.

அகரம் பண்டறிசுட்டு. ஒடிவில்கிழி - உலவாக்கிழி. தனக்கும் பொன்னருளுவர் என்னுங் கருத்துடன் சிந்தித்தாள் என்பார் ' பொற்கிழி நல்கிய வள்ளலை யுன்னி ' என்ருர். (ய)

துய்ய நீறணி மெய்யினர் கட்டங்கந் தொட்ட
கையர் யோகபட் டத்திடைக் கட்டினர் பூதிப்
பையர் கோவண மிசையசை யுடையினர் பவளச்
செய்ய வேணிய ரங்கொரு சித்தராய் வருவார்.

(இ - ள்.) துய்யநீறு அணி மெய்யினர் - தூய திருநீறு தரித்த மெய்யினை யுடையவரும், கட்டங்கம் தொட்ட கையர்-மழு ஏந்திய திருக்கரத்தையுடையவரும், யோகபட்டத்து இடைக்கட்டினர் - யோகபட்டிகையை இடையிற்கட்டியவரும், பூதிப்பையர் - திருநீற்றுப்பையினையுடையவரும், கோவணமிசை அசை உடையினர்- கோவணமீது கட்டிய ஆடையையுடையவரும், பவளச்செய்ய வேணியர் - பவளம்

---

(பா - ம்.) *மடிவில்.

போன்ற சிவந்த சடையையுடையவருமாகி, ஒரு சித்தராய் அங்கு வருவார் - ஒரு சித்த மூர்த்தியாய் அங்கு வருவாராயினர்.

கட்டங்கம் - மழு ; முன்னர் உரைத்தமை காண்க. அசை - அசைத்த, கட்டிய. மெய்யினர் முதலிய குறிப்பு முற்றுக்கள் எச்சமாயின. (கக)

வந்து பொன்னனை யாண்மணி மாளிகை குறுகி
அந்த மின்றிவந் தமுதுசெய் வாரொடு மணுகிச்
சிந்தை வேறுகொண் டடைந்தவர் திருவமு தருந்தா
துந்து மாளிகைப் புறங்கடை யொருசிறை யிருந்தார்.

(இ - ள்.) வந்து பொன் அனையாள் மணிமாளிகை குறுகி - (அங்ஙனம்) வந்து பொன்னனையாளின் அழகிய திருமாளிகையை அடைந்து, சிந்தை வேறு கொண்டு அடைந்தவர் - வேறு கருத்துடன்வந்த அச்சித்த மூர்த்திகள், அந்தம் இன்றிவந்து அமுது செய்வாரோடும் அணுகி - அளவில்லாமல் வந்து உண்பவரோடும்கூடி, திரு அமுது அருந்ாது - திருவமுது செய்யாமல், உந்தும் மாளிகைப் புறங்கடை - ஒளிவீசும் மாளிகையின் கடைவாயிலில், ஒருசிறை இருந்தார் - ஒரு பக்கத்தில் இருந்தருளினார்.

சிந்தை வேறுகொண்டு அடைந்தவர் - ஏனையடியார்போலத் திருவமுதருந்துங் கருத்தின்றி இரசவாதஞ் செய்யுங் கருத்துடன் போந்தவர். உந்துதல் - (ஒளி) வீசுதல் ; மேல் நிவத்தலுமாம். வந்து குறுகி அருந்தாது ஒரு சிறையிருந்தார் என்க. (கஉ)

அமுது செய்தருந் தவரெலா மகலவே றிருந்த
அமுத வாரியை யடிபணிந் தடிச்சிய ரைய
அமுது செய்வதற் குள்ளெழுந் தருள்கென வுங்கள்
அமுத னனையிங் கழைமினென் றருளலு மனையார்.

(இ - ள்.) அமுதுசெய்து அருந்தவர் எலாம் அகல - அரிய தவத்தினையுடைய அடியவரெல்லாருந் திருவமுதுசெய்து செல்ல, வேறு இருந்த அமுதவாரியை அடிச்சியர் அடிபணிந்து - வேறாக இருந்த அமுத வெள்ளமாகிய சித்த மூர்த்திகளைத் தாதியர் அடிவணங்கி, ஐய - ஐயனே, அமுதுசெய்வதற்கு உள் எழுந்தருள்க என - திருவமுது செய்வதற்கு உள்ளே எழுந்தருளவேண்டுமென்று வேண்ட, உங்கள் அமுது அன்னாளை இங்கு அழைமின் என்று அருளலும் - அவர் உங்கள் அமுதம் போன்ற தலைவியை இங்கே அழைமின்கள் என்று அருளிச்செய்யவும், அனையார் - அந்த ஏவன்மகளிர்.

அடிபணிந்து என்பது ஒரு சொல்லாய் இரண்டாவதற்கு முடிபாயிற்று. அடிச்சியர் - அடித்தொண்டு புரியும் தாதியர், குற்றேவன் மகளிர். அருள்கென, அகரம் தொகுத்தல். (கங)

முத்த ராமுகிழ் வாணகை யல்குலாய் முக்கண்
அத்த ரானவர் தமரெலா மமுதுசெய் தகன்றார்
சித்த ராயொரு தம்பிரான் சிறுநகை யினராய்
இத்த ராதலத் தரியரா யிருக்கின்றா ரென்றார்.

(இ - ள்.) முத்து அரா - முத்தினையும் பாம்பின் படத்தினையும் முறையே நிகர்த்த, வாள்முகிழ் நகை அல்குலாய் - ஒள்ளிய புன்னகையையும் அல்குலையு முடைய அம்மையே, முக்கண் அத்தர் ஆனவர்தமர் எலாம் - மூன்று கண்களை யுடைய சிவபெருமானுடைய சுற்றமாகிய அடியார்களனைவரும், அமுதுசெய்து அகன்றார் - திருவமுதுசெய்து நீங்கினர்; ஒரு தம்பிரான் சித்தராய் - ஒரு தம்பிரான் சித்தமூர்த்தியாய், சிறுநகையினராய் - புன்னகையுடையராய், இத்தராதலத்து அரியராய் இருக்கின்றார் என்றார் - இந்நிலவுலகின்கண் கிடைத்தற்கரியராய் இருக்கின்றார் என்று கூறினர்.

முத்துப்போலும் நகை அராப்போலும் அல்குல் என நிரனிறை. இருக்கின்றார் - அமுது செய்யாதிருக்கின்றார். (கசு)

நவம ணிக்கலன் பூத்தபூங் கொம்பரி னடந்து
துவரி தழ்க்கனி வாயினாள் சுவாகதங் கிலவென்
றுவமை யற்றவர்க் கருக்கிய மாசன முதவிப்
பவம கற்றிய வடிமலர் முடியுறப் பணிந்தாள்.

(இ - ள்.) துவர் இதழ்க்கனிவாயினாள் - பவளம்போன்ற இதழையும் கொவ்வைக் கனிபோன்ற வாயையுமுடைய பொன்னனையாள், நவமணிக்கலன்பூத்த - நவரத்தினங்களாலாகிய அணிகலன்கள் மலர்ந்த, பூங்கொம்பரின் நடந்து - பூங்கொம்புபோல நடந்து, சு ஆகதம் கில என்று - (தேவரீர் வரவு) நல்வரவல்லவா என்று கூறி, உவமை அற்றவர்க்கு - ஒப்பற்ற சித்த மூர்த்திகளுக்கு, அருக்கியம் ஆசனம் உதவி - அருக்கியமும் ஆசனமுங் கொடுத்து, பவம் அகற்றிய அடிமலர் - அடியார் பிறப்பை நீக்கிய திருவடிமலர்கள், முடி உறப் பணிந்தாள் - முடியிற் பொருந்த வணங்கினாள்.

முதலடி இல்பொருளுவமை. கொம்பர், ஈற்றுப்போலி. அருக்கியம் என்றதனால் இனம் பற்றிப் பாத்தியம் ஆசமனீயம் என்பவும் கொள்க. அகற்றிய என்பதனைச் செய்யியவென்னும் வினையெச்சமாக்கித், தனது பிறப்பைப் போக்குதற்கு என்றுரைத்தலுமாம். அடிமலரை முடிபொருந்த என்றுமாம். (கஎ)

எத்த வஞ்செய்தே னிங்கெழுந் தருளுதற் கென்னுச்
சித்தர் மேனியும் படிவெழிற் செல்வமு நோக்கி
முத்த வாணகை யரும்பநின் றஞ்சலி முகிழ்ப்ப
அத்தர் நோக்கினா ரருட்கணா லருள்வலைப் பட்டாள்.

(இ - ள்.) சித்தர்மேனியும் - சித்தமூர்த்திகளின் திருமேனியையும், படிவு எழில் செல்வமும் நோக்கி - வடிவினது அழகின் செல்வத்தையுங்கண்டு, முத்த வாள் நகை அரும்ப நின்று - முத்துப்போன்ற ஒள்ளிய புன்னகைதோன்ற நின்று, இங்கு எழுந்தருளுதற்கு எத்தவம் செய்தேன் என்னா - (தேவரீர்) இங்கு எழுந்தருளு தற்கு என்ன தவஞ் செய்தேனோவென்று, அஞ்சலி முகிழ்ப்ப - கையைச் சென்னி யிற் குவித்து வணங்க, அத்தர் நோக்கினார் அருள் கண்ணால் - இறைவர் திருவருள் நாட்டத்தால் நோக்கி யருளினார் ; அருள்வலைப்பட்டாள் - (பொன்னனையாள்) திரு வருளாய வலையில் அகப்பட்டனள்.

படிவு - படிவம் ; ஈறு தொக்கது. செல்வம் - பெருக்கம். நோக்குதல் - சட்சு தீட்சையாகும். பத்தி வலையிற்பட்ட பரமனது அருள் வலையிற்பட்டாள் பொன்னனையாள் என்க. அருள்வலைப்பட்டாள் என்பதனை வினையாலணையும் பெயராக்கி வருஞ் செய்யுளிற் கூட்டியுரைத்தலுமாம். (௧௬)

ஐய *உள்ளெழுந் தருளுக வடிகணீ ரடியேன்
உய்ய வேண்டிய பணிதிரு வுளத்தினுக் கிசையச்
செய்ய வல்லனென் றஞ்சலி செய்யவுண் ணகையா
மைய னோக்கியை நோக்கிமீ னோக்கிதன் மணாளன்.

(இ-ள்.) ஐய-ஐயரே, உள் எழுந்தருளுக - உள்ளே எழுந்தருளக்கடவீர் ; அடிகள் நீர் - அடிகளாகிய நீர், அடியேன் உய்ய-அடியாளாகிய யான் ஈடேற, வேண் டிய பணி - விரும்பிய தொண்டினை, திருவுளத்தினுக்கு இசையச் செய்யவல்லன் என்று - திருவுள்ளத்திற்குப் பொருந்துமாறு செய்யவல்லேன் என்று கூறி, அஞ்சலி செய்ய - வணங்க, மீன் நோக்கி தன் மணாளன் - அங்கயற்கண்ணி மணாளனாகிய சோமசுந்தரக் கடவுள், உள்நகையா - உள்ளே நகைத்து, மையல் நோக்கியை நோக்கி - மையல் விளைக்கும் பார்வையுடைய பொன்னனையாளைப் பார்த்து.

ஐய அடிகள் என ஒருமையும் பன்மையும் விரவிவந்தன ; ஐய, அசையுமாம். யான் உய்ய நீர் வேண்டிய பணி என்க. உள் நகையா என்றும், மையல் நோக் கியை என்றும் கூறிய குறிப்பால், அவர் தம்மை அணைய வேண்டினாரெனக் கருதி, வேண்டிய பணி திருவுளத்தினுக் கிசையச்செய்ய வல்லன் என்று மறைத்துக் கூறி னள் என்க. உள் நகையா - புன் முறுவல்செய்து. தன் சாரியை. (௧௭)

வடியை நேர்விழி யாய்பெரு வனப்பினை சிறிதுன்
கொடியை நேரிடை யெனவிளைத் தனையெனக் கொன்றை
முடியி னடி யாரமென் முகிழ்முலைக் கொடிதாழ்த்
தடிய னேற்குவே றுமொரு மெலிவில்லை யையா.

(இ - ள்.) வடியை நேர்விழியாய் - மா வடுவின் பிளவினையொத்த விழிகளை யுடையாய், பெருவனப்பினை - பேரழகுடைய நீ, உன் கொடியை நேர் இடை எனச்

(பா - ம்.) * ஐயருள்.

சிறிது இளைத்தனை என - உனது கொடிபோன்ற இடைபோலச் சிறிது உடல் மெலிந்திருக்கின்றாய் (அதன் காரணம் யாது) என்று வினவ, மெல்முகிழ் முலைக் கொடி - மெல்லிய அரும்பாகிய கொங்கை முகிழ்த்த கொடிபோன்ற அவள், கொன்றை முடியினான் அடி ஆரத்தாழ்ந்து - கொன்றை மலரணிந்த திருமுடியை யுடைய சிவபிரான் திருவடிகளைப் பொருந்த வணங்கி, ஐயா-ஐயனே, அடியனேற்கு வேறாய் ஒரு மெலிவு இலை - அடியேற்கு வேறொரு மெலிவு இல்லை (ஆனால்).

இளைத்திருப்பதன் காரணம் யாதென்று வினவ என விரித்துரைக்க. வேறாயொரு மெலிவிலை என்றதனால் ஒரு மெலிவுண்டென்பது குறிப்பிட்டவாறாயிற்று. ; அது வருஞ் செய்யுளிற் பெறப்படும். மெலிவின் காரணம் மெலிவு எனப்பட்டது.

எங்க ணாயகர் திருவுருக் காண்பதற் கிதயந்
தங்கு மாசையாற் கருவுருச் சமைத்தனன் முடிப்பேற்
கிங்கு நாடொறு மென்கையில் வருபொரு ளெல்லாம்
உங்கள் பூசைக்கே யல்லதை யொழிந்தில வென்றாள்.

(இ - ள்.) எங்கள் நாயகர் - எங்கள் தலைவராகிய சிவபெருமானுடைய, திரு உருக் காண்பதற்கு - திருவுருவத்தை ஆக்குவதற்கு, இதயம் தங்கும் ஆசையால் - உள்ளத்தில் நிலைபெற்ற விருப்பத்தினால், கரு உருச் சமைத்தனன் - மெழுகினாற் கருக்கட்டி வைத்தேன் ; முடிப்பேற்கு - அதனைப் பொன்னினால் (செய்து) முடிக்கக் கருதிய எனக்கு, இங்கு நாள்தொறும் என்கையில் வருபொருள் எல்லாம் - இங்கு நாள்தோறும் என்கையில் வருகின்ற பொருள் முழுதும், உங்கள் பூசைக்கே அல்லது - அடியார்களாகிய உங்கள் பூசனைக்கே சரியாவதல்லாமல், ஒழிந்தில என்றாள் - எஞ்சவில்லை என்று கூறினாள்.

சிவபெருமானாகிய சித்த மூர்த்திகளைச் சிவனடியாராகக் கருதி 'உங்கள் பூசைக்கே' என்றாளென்க. அல்லதை, ஐ சாரியை. (கக)

அருந்து நல்லமு தனையவ ளன்புதித் திக்கத் *
திருந்து தேனென விரங்குசொற் செவிமடுத் தையர்
முருந்து மூரலாய் செல்வமெய் யிளமைநீர் மொக்குள்
இருந்த வெல்லையு நிலையில வென்பது துணிந்தாய்.

(இ - ள்.) அருந்து நல் அமுது அனையவள் - உண்ணுதற்குரிய இனிய அமிழ்தம்போன்ற பொன்னனையாள், அன்பு - அன்போடு, தித்திக்க - இனிமை பொருந்த, திருந்து தேன் என - இனிமை திருந்திய தேன்போல, இரங்குசொல் - கூறுஞ் சொற்களை, ஐயர் செவிமடுத்து - சித்தமூர்த்திகள் கேட்டு, முருந்து மூரலாய் - மயிலிறகினடிபோன்ற பற்களையுடையவளே, செல்வம் மெய் இளமை - செல்வமும் யாக்கையும் இளமையும், நீர்மொக்குள் இருந்த எல்லையும் நிலை இல என்பது துணிந்

(பா - ம்). * அன்பு சித்திக்க.

தாய் - நீரிற் றோன்றுங் குமிழி இருந்த அளவும் நிலைபெறுவன அல்லவென்பதனை நன்கு உணர்ந்தாய்.

சித்திக்க என்னும் பாடத்திற்கு அன்புகைகூட என்றுரைக்க. இரங்கு சொல் - இரக்கந் தோன்றக் கூறுஞ்சொல் எனலுமாம். (உ0)

அதிக நல்லற நிற்பதென் றறிந்தனை யறத்துள்
அதிக மாஞ்சிவ புண்ணியஞ் சிவார்ச்சனை யவற்றுள்
அதிக மாஞ்சிவ பூசையு ளடியவர் பூசை
அதிக மென்றறிந் தன்பரை யருச்சனை செய்வாய்.

(இ - ள்.) நல் அறம் அதிகம் நிற்பது என்று அறிந்தனை - நன்றாகிய அறமே சிறப்புடையதும் நிலைபெறுவதும் என்று உணர்ந்தனை ; அறத்துள் - அவ்வறங்களுள்ளே, சிவபுண்ணியம் அதிகம் ஆம் - சிவ புண்ணியங்கள் சிறந்தனவாகும் (என்றும்), அவற்றுள் சிவார்ச்சனை அதிகம் ஆம் - அச் சிவ புண்ணியங்களுள்ளும் சிவபூசை சிறந்ததாகும் (என்றும்), சிவபூசையுள் அடியவர் பூசை அதிகம் என்று அறிந்து - அச் சிவபூசையினும் அடியார் பூசை சிறந்தது என்றும் அறிந்து, அன்பரை அருச்சனை செய்வாய் - அடியார்களைப் பூசிப்பாயாயினை (அதனால்),

என்று என்பதனைப் பிறவிடத்துங் கூட்டுக. ஏனை அறங்களினும் சிவபுண்ணியம் சிவார்ச்சனைகளினும் அடியார் பூசை சிறந்ததென்பதனைப் பின்வரும் திருமந்திரங்களால் அறிக.

" ஆறிடும் வேள்வி யருமறை நூலவர்
கூறிடு மந்தணர் கோடிபே ருண்பதில்
நீறிடுந் தொண்டர் நினைவின் பயனிலை
பேறெனி லோர்பிடி பேறது வாகுமே "

" அகர மாயிர மந்தணர்க் கீயிலென்
சிகர மாயிரஞ் செய்து முடிக்கிலென்
பகரு ஞானி பகலூண் பலத்துக்கு
நிகரிலை யென்பது நிச்சயந் தானே "

" படமாடக் கோயிற் பகவற்கொன் றீயின்
நடமாடக் கோயி னம்பர்க்கங் காகா
நடமாடக் கோயி னம்பர்க்கொன் றீயிற்
படமாடக் கோயிற் பகவற்க தாமே " (உக)

உறுதி யெய்தினை யிருமையு முன்பெயர்க் கேற்ப
இறுதி யில்லவன் றிருவுரு வீகையாற் காணப்
பெறுதி யாகநின் மனைக்கிடைப் பித்தளை யீயம்
அறுதி யானபல் கலன்களுங் கொணர்தியென் றறைந்தார்.

(இ - ள்.) இருமையும் உறுதி எய்தினை-இம்மை மறுமை இரண்டிலும் பயன் பெற்றனை ; உன் பெயர்க்கு ஏற்ப - பொன்னனையாள் என்னும் உன் பெயருக்குப் பொருந்த, இறுதி இல்லவன் திரு உரு - அழிவில்லாத இறைவன் திருமேனியை, ஈகையால் காணப் பெறுதியாக - பொன்னாற் செய்யப்பெறுவாயாக ; நின்மனைக் கிடை - நினது மனையிற் கிடக்கும், பித்தளை ஈயம் அறுதியான பல் கலன்களும் - பித்தளையும் ஈயமும் முடிவாகவுள்ள பல உலோகங்களாற் செய்யப்பட்ட கலன்களை யும், கொணர்தி என்று அறைந்தார் - கொண்டு வருவாய் என்று கூறினார்.

ஈகை - பொன். தாழ்ந்த உலோகங்களைக் கூறி அவை முடிவாகவுள்ள என ஏனையவற்றைத் தழுவினார். (உஉ)

ஈயஞ் செம்பிரும் பிரசித மென்பவும் புணர்ப்பாற்
றோயும் பித்தளை வெண்கலந் தராமுதற் றொடக்கத்
தாயும் பல்வகை யுலோகமுங் கல்லென வலம்பத்
தேயுஞ் சிற்றிடை கொண்டுபோய்ச் சித்தர்முன் வைத்தாள்.

(இ - ள்.) ஈயம் செம்பு இரும்பு இரசிதம் என்பவும்-ஈயமும் செம்பும் இரும் பும் வெள்ளியும் என்பனவும், புணர்ப்பால் தோயும் பித்தளை வெண்கலம் தராமுதல் தொடக்கத்து - ஒன்றோடொன்று கல்த்தலால் உண்டாகும் பித்தளையும் வெண்கல மும் தராவு முதலிய தொடக்கத்தையுடையவும் ஆகிய, ஆயும் பல்வகை உலோக மும் - ஆராயும் பலவகை உலோகங்களையும்; கல் என அலம்ப-கல்லென்று ஒலிக்க, தேயும் சிற்றிடை - தேய்ந்த சிறிய இடையையுடைய பொன்னனையாள், கொண்டு போய்ச் சித்தர்முன் வைத்தாள் - கொண்டுபோய்ச் சித்தமூர்த்திகள் முன்னர் வைத்தனள்.

ஈயம் முதலியன தனியுலோகமும், பித்தளை முதலியன கலப்பு லோகமும் என்றார். கல்லென, ஒலிக்குறிப்பு. சிற்றிடை அன்மொழித் தொகை. (உங)

வைத்த வேறுவே றுலோகமு மழுவுழை கரந்த
சித்த சாமிக ணீற்றினைச் சிதறினர் பாவித்*
தித்தை நீயிரா வெரியிலிட் டெடுக்கினன் பொன்னும்
அத்தை நாயகன் றிருவுருக் கொள்கென வறைந்தார்.

(இ - ள்.) வைத்த வேறுவேறு உலோகமும் - (அங்ஙனம் கொண்டுவந்து) வைத்த வெவ்வேறு வகையான உலோகங்க ளெல்லாவற்றிலும், மழு உழை கரந்த சித்தசாமிகள் - மழுவையும் மானையும் மறைத்துவந்த சித்தமூர்த்திகள், நீற்றினைச் சிதறினர் - திருநீற்றைச் சிதறி, பாவித்து - (இவை பொன்னாகவென்று) சிந்தித்து, இத்தை நீ இரா எரியில் இட்டு எடுக்கில் - இவற்றை நீ இரவில் நெருப்பிலிட்டு எடுத் தாயானல், நன்பொன் ஆம் - நல்ல பொன்னாகும் ; அத்தை - அப் பொன்னினால்,

(பா - ம்.) * சிதறினர் பார்த்தே.

நாயகன் திரு உருக்கொள்க என அறைந்தார் - இறைவன் திருமேனி செய்யக் கடவை எனக் கூறியருளினார்.

உலோகங்களிலும் என எழனுருபு விரிக்க. சிதறினர், முற்றெச்சம். இது அது என்பன அன்சாரியைப் பெறாமல் இரட்டித்தன. உலோகமென்னும் பொது மையால் இத்தை என ஒருமையாற் கூறினார். எரியிலிடுதல் - புடமிடுதல். அத்தை - அதனால் ; வேற்றுமை மயக்கம். கொள்கென, தொகுத்தல். (உ௪)

மங்கை பாகரை மடந்தையு மிங்குநீர் வதிந்து
கங்குல் வாயமு தருந்தியிக் காரிய முடித்துப்
பொங்கு காரிருள் புலருமுன் போமெனப் புகன்றாள்
அங்க யற்கணா டனைப்பிரி யாரதற் கிசையார்.

(இ - ள்.) மங்கைபாகரை - அங்ஙனங் கூறியருளிய உமை பாகராகிய சிவபெருமானை, மடந்தையும் - பொன் னனையாளும், இங்கு நீர் வதிந்து - இங்கு நீர் தங்கி, கங்குல்வாய் அமுது அருந்தி - இரவில் திருவமுதுசெய்து, இக்காரியம் முடித்து - இவ்வினையையும் முடித்து, பொங்குகார் இருள் புலருமுன்போம் எனப் புகன்றாள் - மிக்க கரிய இருள் விடியுமுன் போவீராக என்று வேண்டினள் ; அங்கயற்கணாள் தனைப் பிரியார் - அங்கயற் கண்ணம்மையைப் பிரியாதவராகிய இறைவர், அதற்கு இசையார் - அதற்கு உடன்படாமல்.

என்னுடன் கலந்து செல்லும் என்பதனை இடக்க ரடக்கலாக 'இங்குநீர் வதிந்து......போம்' என்றாளென்க. கங்குல்வாய் அமுதருந்தி என்பதற்கு இரவின்கண் அடிசில் உண்டு என்றும், இரவில் என்வாயிலுண்டாகும் 'வாலெயிறூறிய நீர்' ஆகிய அமுதினை யுண்டு என்றும் சிலேடைப்பொருள் கொள்க. இக்காரியம்- உலோகங்களைப் பொன்னாக்கும் காரியம். நீர் என்னுடன் அணைந்தமையைப் பிறர் அறிதலால் நுமக்குப் பழியுண்டாகாதவாறு செல்லும் என்பாள் 'காரிருள் புலருமுன்போமெனப் புகன்றாள்' என்க. ஒரு காதலியைப் பிரியாதுறையும் இயல்பினர் மற்றொருத்தியைக் கூடுதல் அரிதென்பார் 'அங்கயற்கணாள் தனைப்பிரியார் அதற் கிசையார்' என்றார். இறைவன் அருளாகிய சத்தியைப் பிரியாமை யுணர்க. பிரியார், பெயர். இசையார், முற்றெச்சம். (உ௫)

சிறந்த மாடநீண் மதுரையிற் சித்தர்யா மென்று
மறைந்து போயினார் மறைந்தபின் சித்தராய் வந்தார்
அறைந்த வார்கழ லலம்பிட வெள்ளிமன் றாடி
நிறைந்த பேரொளி யாயுறை நிருத்தரென் றறிந்தாள்.

(இ - ள்.) சிறந்த மாடம் நீள் மதுரையில் சித்தர் யாம் என்று - சிறப்புடைய மாடங்கள் உயர்ந்த மதுரையில் வசிக்குஞ் சித்தர் யாம் என்று கூறி, மறைந்து போயினார் - மறைந்து சென்றனர் ; மறைந்தபின் - (அங்ஙனம் அவர்) மறைந்தருளியபின், சித்தராய் வந்தார் - இங்குச் சித்தசாமியாய் வந்தவர், அறைந்தவார்கழல் அலம்பிட - (பலரும்) புகழும் நீண்ட வீரக்கழல் ஒலிக்க, வெள்ளிமன்று ஆடி - வெள்ளியம்பலத்

திலே திருக்கூத்தாடி, எங்கும் நிறைந்தபேர் ஒளியாய் உறை நிருத்தர் என்று அறிந் தாள் - எங்கும் நிறைந்த பெரிய ஒளிவடிவாய்த் தங்கிய திருக்கூத்தர் என்று உணர்ந்தனள்.

அறைந்த - ஒலிக்கின்ற என்றுமாம். வந்தவர் வெள்ளிமன்றிலே ஆடி உறை யும் நிருத்தரென் றறிந்தாள் என முடிக்க. மதுரையிற் சித்தர் என்று கூறி மறைந்த குறிப்பால் இங்ஙன் அறிந்தாள் என்க. (உசு)

மறைந்து போயினா ரெனச்சிறி தயர்ச்சியு மனத்தில்
நிறைந்த தோர்பெருங் கவற்சியை நீக்கினா ரென்னச்
சிறந்த தோர்பெரு மகிழ்ச்சியு முடையளாய்ச் சித்தர்
அறைந்த வாறுதீப் பெய்தன ளுலோகங்க ளனைத்தும்.

(இ - ள்.) மறைந்து போயினார் எனச் சிறிது அயர்ச்சியும் - மறைந்து போனாரே என்று சிறிது வருத்தமும், மனத்தில் நிறைந்தது ஓர் பெருங் கவற்சியை நீக்கினார் என்ன - மனத்தில் நிறைந்துள்ள தாகிய ஒரு பெரிய கவலையைப் போக்கி னாரென்று, சிறந்தது ஓர் பெருமகிழ்ச்சியும் - சிறந்ததாகிய ஒரு பெரிய மகிழ்ச்சியும், உடையளாய் - உடையவளாகி, சித்தர் அறைந்தவாறு - சித்த மூர்த்திகள் கட்டளை யிட்ட வண்ணமே, உலோகங்கள் அனைத்தும் தீப் பெய்தனள் - உலோகங்கள் அனைத்தையுந் தீயிற் புடமிட்டனள்.

அயர்ச்சி - சோர்வு. கவற்சி - திருவுருச் சமைத்தற்குப் பொன்னில்லையே என்னும் கவலை (உஎ)

அழலடைந் தபி னிருண்மல வலிதிரிந் தரன்றாள்
நிழலடைந் தவர் காட்சிபோ னீப்பருங் களங்கங்
கழல வாடக மானதா லதுகொண்டு கனிந்த
மழலை யீர்ஞ்சொலாள் கண்டனள் வடிவிலான் வடிவம்.

(இ - ள்.) அழல் அடைந்த பின் - (உலோகம்) நெருப்பினைச் சேர்ந்தபின், இருள்மல வலி திரிந்து - ஆணவமல சத்திகெட்டு, அரன் தாள் நிழல் அடைந்தவர் காட்சிபோல் - இறைவனது திருவடி ஞானத்தை அடைந்தவர் சிவமாக விளங்குதல் போல, நீப்பருங் களங்கம் கழல - நீங்குதலில்லாத களிம்பு நீங்க, ஆடகம் ஆனது - பொன்னாகியது ; அது கொண்டு - அப்பொன்னினால், கனிந்த மழலை ஈர்ஞ்சொல் லாள் - சுவைமுதிர்ந்த தண்ணிய மழலைச் சொற்களையுடைய பொன்னனையாள், வடிவு இலான் வடிவம் கண்டனள் - ஒரு வடிவமுமில்லாத இறைவனுக்கு ஓர் திரு வுருவம் சமைத்தனள்.

இருள் மலம் - உயிரின் அறிவை மறைக்கும் இருளாகிய ஆணவமலம். தாள் நிழல் என்றது ஈண்டுத் திருவடி ஞானத்தை. ஆன்மாத் திருவடி ஞானத்தால் ஆணவமாகிய பசுத்துவம் நீங்கிச் சிவத்தன்மை யெய்தினாற்போல உலோகம் எரி யாற் களிம்பு நீங்கிப் பொன்னாகியது என்க. ஆணவம் செம்பிற் களிம்புபோல் அனாதியே உயிரைப்பற்றி யிருப்பதென்பதும், அது ஞானத்தால் நீங்கவே ஆன்மா

சிவமாய் விளங்கு மென்பதும் உண்மை நூற் கொள்கை. அழலடைந்தபின் களங்கம் கழல ஆடகமானது எனக் கூட்டுக. ஆல், அசை. கொண்டு, மூன்றும் வேற்றுமைச் சொல். (உ௰)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

மழவிடை யுடையான் மேனி வனப்பினை நோக்கி யச்சோ
அழகிய பிரானே யென்று வள்ளிமுத் தங்கொண் டன்பிற்
பழகிய பிரானை யானுப் பரிவினாற் பதிட்டை செய்து
விழவுதேர் நடாத்திச் சின்னாள் கழிந்தபின் வீடு பெற்றாள்.

(இ - ள்.) மழவிடை உடையான் மேனி வனப்பினை நோக்கி - (அங்ஙனம் சமைக்கப் பெற்ற) இளமையாகிய இடப வூர்தியை யுடைய இறைவன் திருமேனியின் அழகினைப் பார்த்து, அழகிய பிரானே என்று - சுந்தரநாதனே இவன் என்று, அள்ளி முத்தம் கொண்டு - (கபோலத்தில்) அள்ளி முத்தமிட்டு, அன்பில் பழகிய பிரானை - தனது மெய்யன்பில் இடைவிடாதிருந்த இறைவனை, ஆனுப்பரிவினால் பதிட்டை செய்து - நீங்காத அன்பினாலே பிரதிட்டை செய்து, விழவுதேர் நடாத்தி - திருவிழாவுந் தேரும் நடாத்தி, சில்நாள் கழிந்தபின் வீடு பெற்றாள் - சிலநாட்கள் சென்றபின் பொன்னனையாள் வீடுபேற்றினை யெய்தினாள்.

அச்சோ, வியப்பிடைச் சொல்; பிரானே என்பதில் ஓகாரமும் அப்பொருட்டு. பதிட்டை, வடசொற் சிதைவு. தேர் - இரதோற்சவம். (உ௧)

நையுநுண் ணிடையி னாளந் நாயகன் கபோலத் திட்ட
கையுகிர்க் குறியுஞ் சொன்ன காரணக் குறியுங் கொண்டு
வெய்யவெங் கதிர்கால்* செம்பொன் மேனிவே றாகி நாலாம்
பொய்யுகத் தவர்க்குத் தக்க பொருந்துரு வாகி மன்னும்.

(இ - ள்.) நையும் நுண் இடையினாள் - தேய்ந்த நுண்ணிய இடையை யுடைய பொன்னனையாள், அந்நாயகன் கபோலத்து இட்ட கை உகிர்க்குறியும் - அவ்விறைவன் கபோலத்தின்கண் அள்ளுதற்கிட்ட கையிலுள்ள நகக்குறியையும், சொன்ன காரணக் குறியும் கொண்டு - அவள் கூறிய அழகிய பிரான் என்னும் காரணப் பெயரையுங் கொண்டு, வெய்ய வெம் கதிர்கால் செம்பொன் மேனி வேறு ஆகி - மிக்க விருப்பந் தருதலையுடைய ஒளிவீசும் சிவந்த பொன்னாலாகிய திருமேனி வேறுபட்டு, நாலாம் பொய் உகத்தவர்க்கு - பொய்மிக்க கலியுகத்தார்க்கு, தக்க பொருந்து உரு ஆகி மன்னும் - தக்க பொருந்திய திருவுருவமாய் நிலைபெறும்.

உலகிற்கு இறைவனும் அவளால் விரும்பப்பட்டவனும் என்பது தோன்ற 'அந்நாயகன்' என்றார். வெய்ய வெம், ஒருபொரு ளிருசொல்; விருப்பத்தைச் செய்யும் ஞாயிற்றின் கதிர் என்னலுமாம். உகிர்க் குறியும் காரணக் குறியும் கொண்டு மன்னும், பொருந்துருவாகி மன்னும் எனத் தனித்தனி கூட்டுக. (உ௨)

ஆகச் செய்யுள் - ௬௱அ௮௫.

(பா - ம்.) *கதிர்காய்.

முப்பத்தேழாவது

# சோழனை மடுவில்வீட்டிய படலம்

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

மின்னனை யார்பூங் கொன்றை வேணிய ரிரத வாதம்
பொன்னனை யாண்முன் செய்து போந்தது புகன்றே மார்த்தார்
மன்னனை மடுவில் வீட்டி மலரடிக் கன்ப னானை
தென்னனை யமரிற் காத்த திருவிளை யாடல் சொல்வாம்.

(இ - ள்.) நனை ஆர்பூங் கொன்றை மின்வேணியர்-தேன் நிறைந்த கொன்றை மலர் மாலையை யணிந்த மின்போலும் சடையையுடைய சோமசுந்தரக் கடவுள், பொன்னனையாள்முன் இரதவாதம் செய்து போந்தது புகன்றேம் - பொன்னனை யாள் முன்னர் இரசவாதஞ் செய்து சென்றருளிய திருவிளையாடலைக் கூறினோம்; ஆர்தார் மன்னனை-(இனி) ஆத்திமாலையை யணிந்த சோழமன்னனை, மடுவில்வீட்டி-மடுவின்கண் வீழ்த்தி, மலர் அடிக்கு அன்பன் ஆன தென்னனை - மலர்போன்ற திருவடிகட்கு அன்பனாகிய சுந்தரபாத சேகர பாண்டியனை, அமரில் காத்த திருவிளையாடல் சொல்வாம் - போரின்கண் காத்தருளிய திருவிளையாடலைக் கூறுவாம்.

மின்போலும் வேணி என்க; சித்தராய்வந்து தோன்றி மறைதலின் மின்னை யொத்தவராகிய வேணியர் என்றுரைத்தலுமாம். வீட்டி, வீழ்த்தி என்பதன் மரூஉ. (க)

பொன்னெடுந் தேரி ராச புரந்தரன் புரந்த ராதி
பன்னெடுந் தேவ ரேத்தப் பரனுல கடைந்தா னிப்பால்
அந்நெடுந் தகையோன் மைந்த னடலிரா சேசனென்போன்
இந்நெடுந் தகையோன் மைந்த னிராசகம் பீர னென்போன்.

(இ - ள்.) பொன் நெடுந் தேர் இராச புரந்தரன் - பொன்னாலாகிய பெரிய தேரினையுடைய இராசேந்திர பாண்டியன், புரந்தர ஆதி பல் நெடும் தேவர் ஏத்த - இந்திரன் முதலிய பல பெரிய தேவர்களும் புகழ, பரன் உலகு அடைந்தான் - சிவலோகமடைந்தனன்; இப்பால் - பின், அந்நெடுந் தகையோன் மைந்தன்-அப்பெரிய தகுதியை யுடையான் புதல்வன், அடல் இராசேசன் என்போன் - வெற்றியையுடைய இராசேச பாண்டியன் என்று சொல்லப்படுவோன்; இந்நெடுந் தகையோன் மைந்தன் - இந்த நெடுந்தகையின் மகன், இராச கம்பீரன் என்போன் - இராச கம்பீர னென்று சொல்லப்படுவோன். (உ)



சோழனை மடுவில் விட்டியது

கூ- ப. 37

மற்றிவன் குமரன் பாண்டி வங்கிய தீப னன்னன்
பொற்றிணி தடந்தோண் மைந்தன் புரந்தர சித்தா மன்னன்
வெற்றிகொள் குமரன் பாண்டி வங்கிய பதாகன் வீரம்
பற்றிய சுந்த ரேச பாதசே கரன வன்சேய்.

(இ - ள்.) இவன் குமரன் - இந்த இராச கம்பீரபாண்டியன் புதல்வன், பாண்டிவங்கிய தீபன் - பாண்டிவங்கிய தீபனென்பவன்; அன்னன் பொன்திணி தடந்தோள் மைந்தன் - அவனுடைய பொன்னிறம் வாய்ந்த திண்ணிய பெரிய தோள்களை யுடைய புதல்வன், புரந்தரசித்தாம் - புரந்தரசித்து என்பான்; அன்னன் வெற்றிகொள் குமரன் - அவனுடைய வெற்றி பொருந்திய மகன், பாண்டிவங்கிய பதாகன் - பாண்டிவங்கிய பதாகனென்போன்; அவன் சேய் - அவன் மைந்தன், வீரம்பற்றிய - வீரத்தைப் பொருந்திய, சுந்தரேச பாதசேகரன் - சுந்தரேச பாதசேகர னென்பவன்.

மற்று - அசை. வங்கியம் - வமிசம். (ங)

பலர்புகழ் சுந்த ரேச பாதசே கரனுந் தென்னன்
அலைபுன லுடுத்த கூட லடிகளுக் கன்ப னாகிக்
கொலைபுணர் வேலால் வெங்கோற் குறும்பெ னுங் களைக டீர்த்து
மலர்தலை யுலக மென்னும் வான்பயிர் வளர்க்கு நாளில்.

(இ - ள்.) பலர்புகழ் சுந்தரேச பாதசேகரனும் தென்னன் - பலரும் புகழ்கின்ற சுந்தரேச பாதசேகரன் என்னும் அப்பாண்டியன், அலைபுனல் உடுத்த கூடல் அடிகளுக்கு அன்பனாகி - அலையும் நீரையுடைய வையை சூழ்ந்த கூடலின்கண் எழுந்தருளியுள்ள சோமசுந்தரக் கடவுளுக்கு அன்பனாகி, கொலைபுணர் வேலால்-கொலைத் தொழில் பொருந்திய வேற்படையால், வெங்கோல் குறும்பு எனும் களைகள்தீர்த்து-கொடுங் கோலையுடைய குறுநில மன்னரென்னுங் களைகளைப் போக்கி, மலர்தலை உலகம் என்னும் வான்பயிர் வளர்க்கு நாளில் - பரந்த இடத்தையுடைய உலகிலுள்ள உயிர்கள் என்னுஞ் சிறந்த பயிரை வளர்க்கு நாளில்.

சுட்டு வருவிக்க. குறும்பு - குறுநில அரசு. உலகம் ஈண்டு உயிர்களை யுணர்த்திற்று. வளர்க்கலுற்றான் அங்ஙனம் வளர்க்கு நாளில் என விரித்துரைக்க. (ச)

பத்துமான் றடந்தேர் நூறு பனைக்கைமா நூற்றுப் பத்துத்
தத்துமா னயுத மள்ளர் தானையிவ் வளவே யீட்டி
இத்துணைக் கேற்ப நல்கி யெஞ்சிய பொருள்க ளெல்லாஞ்
சித்துரு வான கூடற் சிவனுக்கே செலுத்து மன்னே.

(இ - ள்.) மான்தடந் தேர்பத்து - குதிரை பூட்டிய பெரிய தேர்பத்தும், பனைக்கைமாநூறு - பனைபோன்ற துதிக்கையை யுடைய யானைகள் நூறும், தத்து மான் நூற்றுப் பத்து - தாவுகின்ற குதிரைகள் ஆயிரமும், மள்ளர் அயுதம் - காலாள்

பதினாயிரமு மாகிய, இவ்வளவே தானை ஈட்டி - இவ்வளவு படைகளையே தொகுத்து வைத்து, இத்துணைக்கு எற்பநல்கி - இவ்வளவிற்குப் பொருந்திய பொருள்களைக் கொடுத்து, எஞ்சிய பொருள்கள் எல்லாம் - மிஞ்சிய பொருள் முழுதையும், சித்து உருவான - அறிவே வடிவமாகிய, கூடல் சிவனுக்கே செலுத்தும் - மதுரையில் எழுந்தருளிய சிவபெருமானுக்கே செலவிடுவான்.

அயுதம் - பதினாயிரம். அரசன் பொருளிற் பெரும்பகுதி படையின் பொருட்டுச் செலவிடப்படுதல் வழக்காகவும் இவன் அதனைக் குறைத்து இறைவன் பொருட்டுச் செலவிட்டனன் என்க ; இதனால், இவன் பகை வெல்லுதற்கன்றி அரசன் என்பதற்கு ஓர் அறிகுறியாகவே சிறிது படை வைத்திருந்தனன் என்பதும், தனக்கும் தனது நாட்டிற்கும் பகைவரால் நலிவுண்டாகாமல் இறைவன் காத்தருள்வன் எனக் கருதி யிருந்தனன் என்பதும் பெறப்படும். எற்ப - ஏற்றவளவாக ; சிறிதென்றபடி. மன், ஓ அசைகள். (ரு)

கண்டிகை மகுட மாதிக் கலனிரை குயின்றுந் திங்கண்
மண்டல மிடறுஞ் சென்னிக் கோபுர மாட மாதி
எண்டிசை யிருள்கால் சீப்ப வெரிமணி யிழைத்து வேய்ந்துந்
திண்டிற லுடையா னின்ன திருப்பணி பிறவுஞ் செய்தான்.

(இ - ள்.) கண்டிகை மகுடம் ஆதி - கண்டிகையும் முடியு முதலாகிய, கலன் நிரை குயின்றும் - அணிகல வரிசைகளை இயற்றியும், திங்கள் மண்டலம் இடறும் - சந்திர மண்டலத்தை இடறும்படி யோங்கிய, சென்னி - சிகரத்தையுடைய, கோபுரம் மாடம் ஆதி - கோபுரமும் திருமாளிகையு முதலியவற்றை, எண்திசை இருள் கால் சீப்ப - எட்டுத் திக்கிலுமுள்ள இருளைப் போக்குமாறு, எரிமணி இழைத்து வேய்ந்தும் - மாணிக்க மணிகள் இழைத் தியற்றியும், திண்திறல் உடையான் - மிக்க வலியினை யுடைய சுந்தரபாத சேகர பாண்டியன், இன்ன திருப்பணி பிறவும் செய்தான்- இவைபோன்ற பிற திருப்பணிகளையும் செய்தனன்.

கால் சீப்ப - ஓட்ட ; கால், துணைச்சொல் ; கால் என்பதனை ஒளியாக்கி, ஒளியால் இருளையோட்ட என்றுரைத்தலுமாம். கோபுர மாடமாதி வேய்ந்தும் என்க. எரிமணி - நெருப்புப் போலும் ஒளியுடைய மாணிக்க மணி. (சு)

கல்லுமா றகன்ற மார்பன் கருவியின் சிறுமை நோக்கி
மல்லுமா றுத திண்டோள் வளவர்கோ னொருவன் காலிற்
செல்லுமா யிரம்ப ரிக்கோர் சேவக னென்போன் றனை
வெல்லுமா றெண்ணி வஞ்சி வேய்ந்துகொண் டெழுந்து போந்தான்.

(இ - ள்.) கல்லு மாறு அகன்ற - (திண்மையாலும் பரப்பினாலும்) மலையுடன் மாறுபட்டு அகன்ற, மார்பன் - மார்பினையுடைய பாண்டியனது, கருவியின் சிறுமை நோக்கி - சேனையின் சிறுமையைக் கருதி, மல்லுமாறுத திண்தோள் - மற்போர் இடையறாது செய்யும் திண்ணிய தோளையுடைய, வளவர்கோன் ஒருவன் - சோழர் மன்னன் ஒருவன், காலில் செல்லும் - காற்றைப்போல விரைந்து செல்லும், ஆயிரம்

பரிக்கு ஓர் சேவகன் என்போன் - ஆயிரங் குதிரைகட்கு ஒரு சேவகனென்று சொல்லப் படுவோன், தானே வெல்லுமாறு எண்ணி - தானே வெற்றி பெறுமாறு துணிந்து, வஞ்சிவேய்ந்து கொண்டு எழுந்து போந்தான் - வஞ்சிமாலை சூடிப் புறப் பட்டு வந்தான்.

கல்லு - மலை ; உ சாரியை; கல்லுடன் என விரிக்க. கல்லு மாறு - மலை தோற்கும்படியான என்றுரைத்தலுமாம். கருவீ - படை. சேவகனென்போனாகிய ஒருவன் என்க. தானே - வேறு துணையின்றியே. ஆயிரம் பரிக்கோர் சேவகன் என்பது சிறப்பினாய பெயர். (எ)

பல்வகைக் கருவி யீட்டப் படையொடும் பரவை சீறிச்
செல்வது போலக் கன்னித் தீம்புன னாடு நோக்கி
மல்வரை யாத தோளான் வரவறிந் தெழுந்து மேருக்
கல்வரி சிலையான் முன்போய்க் கைதவன் றாழ்ந்து கூறும்.

(இ - ள்.) பல்வகைக் கருவி ஈட்டப் படையொடும் - பல்வகைப் படைக் கலங்களை ஏந்திய சேனையோடும், பரவை சீறிச் செல்வது போல - கடலானது சினந்து செல்லுவது போல, கன்னித் தீம்புனல் நாடு நோக்கி - இனிய பொருநை யாற்றின் நீரையுடைய கன்னிநாட்டை நோக்கி, மல் வரையாத தோளான் வரவு - மற்போர் நீங்காத தோளையுடைய சோழன் வருதலை, கைதவன் அறிந்து எழுந்து - பாண்டியன் (ஒற்றரால்) அறிந்து எழுந்து, மேருக்கல் வரிசிலையான் முன்போய் - மேருமலையைக் கட்டமைந்த வில்லாகக் கொண்ட இறைவன் திருமுன் சென்று, தாழ்ந்து கூறும் - வணங்கிக் கூறுவான்.

கருவி - படைக்கலப் பொது. செல்வது போல வரவு என்க. மேருக்கல் - மேருமலை. (அ)

பொன்னது வனைய வேணிப் புனிதவிப் பூமி நேமி
உன்னது வலத்தி னாலே யுருட்டுமென் வலத்தை நோக்கான்
தன்னது வலத்தி னாலென் றானையின் சிறுமை நோக்கி
என்னது தேயங் கொள்வா னெண்ணினான் போலு மன்னோ.

(இ - ள்.) பொன் அனைய வேணிப் புனித-பொன்போன்ற சடையையுடைய புனிதனே, இப்பூமி - இந்நிலவுலகில், உன்னது வலத்தினாலே நேமி உருட்டும் - உன் னுடைய திருவருள் வலியால் ஆணைத்திகிரியை உருட்டுகின்ற, என்வலத்தை நோக் கான் - என் வலிமையைக் கருதாது, என்தானையின் சிறுமை நோக்கி - எனது சேனை யின் குறைவைமட்டுங் கருதி, தன்னது வலத்தினால் - தன்னுடைய வலியினால், என் னது தேயம் கொள்வான் - எனது நாட்டைக் கைப்பற்றிக் கொள்வதற்கு, எண்ணி னான் போலும் - கருதிப் போலும்.

பொன்னது, அது பகுதிப்பொருள் விகுதி. பூமியில் நேமியுருட்டும் என்க. வலம் - வலிமை. உன்னது முதலிய மூன்றிலும் னகரம் விரித்தல். நோக்கான், முற்றெச்சம். கொள்வான், வான் ஈற்று வினையெச்சம். எண்ணிப் போலும் காவிரி நாடன் மேவினன் என வருஞ் செய்யுளோடு முடியும். மன், ஓ அசைகள். (க)

காவிரி நாடன் சேனைக் கடலிடை யெரிபோன் மூண்டு
மேவின னென்று கூறி மீனவன் வேண்ட வானிற்
பூவிரி வாகை நீயே புனையநாம் பொருது மென்னு
நாவிரி யாத மாற்ற நாயகன் கூறக் கேட்டான்.

(இ-ள்.) காவிரி நாடன் - காவிரி நாட்டையுடைய சோழன், சேனைக் கடல் இடை - சேனையாகிய கடலின் நடுவில், எரிபோல் மூண்டு மேவினன் என்று கூறி - வடவைத் தீப்போல மூண்டுவந்தன னென்று கூறி, மீனவன் வேண்ட - பாண்டியன் குறையிரப்ப, பூவிரிவாகை நீயே புனைய - மலர்விரிந்த வாகைமாலையை நீயே அணியுமாறு, நாம் பொருதும் என்னு - நாம் போர் செய்வோமென்று, நாயகன் - இறைவனாகிய சோமசுந்தரக் கடவுள், நாவிரியாத மாற்றம் - நாவாற் கூறாத மொழியால், வானில் கூறக் கேட்டான் - விசும்பின்கண் கூறியருளப் பாண்டியன் கேட்டனன்.

சேனையைக் கடலென்றமையால் எரி என்றது வடவைத் தீயாயிற்று. பூவிரி - பொலிவு மிக்க என்றுமாம். நாவிரியாத மாற்றம் - அசரீரி மொழி. வானிற் கூறவென இயைக்க. (ய)

எல்லியங் கமலச் செவ்வி யெனமுக மலர்ந்து நாதன்
அல்லியங் கமலச் செந்தா ளகந்தழீஇப் புறம்பு போந்து
பல்லியந் துவைப்பத் தானைப் பரவையுட் பரிமா வூர்ந்து
கொல்லியம் பொருப்பன் சேனைக் கடலெதிர் குறுகி னானே.

(இ-ள்.) எல்லி அம்கமலச் செவ்வி என - சூரியனைக்கண்ட அழகிய தாமரை மலரின் பொலிவைப் போல, முகமலர்ந்து - முகமலர்ச்சி யுடையவனாய், நாதன் அல்லி அம்கமலச் செந்தாள் - இறைவனுடைய அகவிதழையுடைய அழகிய தாமரை மலர்போன்ற சிவந்த திருவடிகளை, அகம்தழீஇ - உள்ளத்தில் இருத்தி, புறம்பு போந்து - வெளியே வந்து, பல் இயம் துவைப்ப - பல வாத்தியங்களும் ஒலிக்க, தானைப் பரவையுள் பரிமா ஊர்ந்து - சேனையாகிய கடலினுள்ளே குதிரையைச் செலுத்தி, கொல்லி அம்பொருப்பன் - அழகிய கொல்லி மலையையுடைய சோழனது, சேனைக்கடல் எதிர் குறுகினான் - சேனைக் கடலின் எதிரே சென்றனன்.

எல்லி - எல்லையுடையது, ஞாயிறு; எல் - ஒளி. எல்லி - பகலுமாம். தழீஇ: சொல்லிசையளபெடை. கொல்லி மலை சேரர்க்குரியதாயினும் ஒரொருகால் சோழரால் வென்று அடிப்படுத்தப் பெற்றதென்று கருதிச் சோழனைக் கொல்லியம் பொருப்பன் என்றார் போலும். அதனை மூவேந்தர்க்கும் உரியதாகக்கூறிய செய்யுட்களும் உண்டு. கேட்டவன் மலர்ந்து போந்து ஊர்ந்து குறுகினான் என வினை முடிக்க. (கக)

பண்ணுத லிசைவண் டார்க்கும் பசுந்தொடைச் செழியன் றானை
எண்ணுத லிலவாஞ் சென்னி யிரும்படைக் கடனே ராருய்
நண்ணுத லெனப்போய்ப் பொன்னி நாடவன் றமர்கட் கெல்லாங்
கண்ணுத லருளா லங்கோர் கடலெனத் தோன்றிற் றம்மா.

(இ - ள்.) பண் நுதல் இசை வண்டு ஆர்க்கும் - பண்ணோடமைந்த இசையினையுடைய வண்டுகள் ஒலிக்கும், பசுந்தொடைச் செழியன் தானை-பசிய மாலையை யணிந்த பாண்டியன் சேனையானது, எண்ணுதல் இலவாம் சென்னி இரும்படைக் கடல் நேர் - எண்ணுதற்கு இயலாத சோழனது பெரிய சேனைக்கடலுக்கு நேரே, ஆறாய் நண்ணுதல் எனப்போய் - ஒரு ஆறு செல்லுதல் போலச்சென்று, பொன்னி நாடவன் தமர்கட்கு எல்லாம் - காவிரி நாடனாகிய சோழனது போர் வீரர்கள் எல்லார்க்கும், கண்ணுதல் அருளால் - சோமசுந்தரக்கடவுளின் திருவருளினாலே, ஓர் கடல் என அங்கு தோன்றிற்று - ஓர் கடல்போலப் போர்க்களத்திலே தோன்றியது.

பண்ணுதலையுடைய இசை யென்றுமாம். பசுமை - வாடாமை. இலவாம் படைகளாகிய கடல் என்க. ஆறு நண்ணுதல் எனப்பாடங்கொள்ளுதல் நேரிது. தமர் - போர் வீரர். ஆறு போலச்சிறிதாய்ச் சென்று கடல் போலப் பெரிதாய்த் தோன்றிற்று என்றார். அம்மா, வியப்பிடைச்சொல். (கஉ)

கடலென வருமா வூர்ந்து கைதவன் சேனை முன்போய்
அடலணி மேருக் கோட்டி யாலவாய் நெடுநாண் பூட்டி
மடலவிழ் துழாய்க்கோ னாட்டி வாயெரி புரத்தி லூட்டி
மிடலணி கூடற் கோமான் வேடுரு வாகி நின்றான்.

(இ - ள்.) அடல் அணி மேரு கோட்டி - வலிமை மிக்க மேரு மலையாகிய வில்லை வளைத்து, ஆலவாய் நெடுநாண் பூட்டி - வாசுகியாகிய நீண்ட நாணைப் பூட்டி, மடல் அவிழ் துழாய்க்கோன் நாட்டி - இதழ் விரிந்த துழாய் மாலையணிந்த திருமாலாகிய வாளியை ஏறிட்டு, வாய் எரி புரத்தில் ஊட்டி - நகையாலாகிய நெருப்பினை முப்புரங்களில் மூள்வித்து, மிடல் அணி கூடல் கோமான் - வெற்றி பூண்ட கூடற்றலைவனாகிய சோமசுந்தரக்க[illegible]வுள், வேடு உருவாகி - வேட்டுவ வடிவந்தாங்கி, கடல் என வருமா ஊர்ந்து - (புடை பெயர்ந்த) கடல்போல விரைந்துவரும் குதிரையைச் செலுத்தி, கைதவன் சேனை முன்போய் நின்றான் - பாண்டியனது சேனையின் முன்னணியிற்சென்று நின்றான்.

கடல் - திரையுமாம். ஊர்ந்த என்று பாடமிருப்பின், மாவூர்ந்த கைதவனது கடலெனவரும் சேனை முன்போய் என்றியைத் துரைத்தல் பொருந்தும். ஆலவாய்-பாம்பு; ஆலத்தை வாயிலுடையது என அன்மொழித்தொகை. கோனாகிய கோல் என இரட்டுற மொழிதலாகக்கொள்க. அவ்வம்பின் வாயிலிருந்த அக்கினி யென்றுமாம். ஊட்டி அணிந்த கோமான் என்க. (கங)

கங்குல்வாய்த் திங்கள் போலக் காதணி தந்தத் தோடுங்
கங்குல்வாய் முளைத்த மீன்போற் கதிர்முத்த வடமுங் குஞ்சிக்
கங்குல்வாய்ச் சிலைபோல் வெட்சிக் கண்ணிசூழ் கலாபச் சூட்டுங்
கங்குல்வாய் கிழிக்குந் தந்தக் கடகமு மின்னுக் கால.

(இ - ள்.) கங்குல்வாய்த் திங்கள்போல - இரவில் நிலவிய சந்திரனைப்போல விளங்கும், காது அணி தந்தத் தோடும் - காதின் கண் அணிந்த தந்தத்தாலாகிய

தோடும், கங்குல்வாய் முளைத்த மீன்போல்-இரவிற் றோன்றிய நாண் மீனைப்போல, கதிர் முத்த வடமும் - ஒளி வீசும் முத்து மாலையும், கங்குல் வாய்ச் சிலைபோல் - இரவின் கண் தோன்றிய இந்திர வில்லைப்போல, குஞ்சி வெட்சிக் கண்ணி சூழ் கலாபச் சூட்டும் - சிகையிலணிந்த வெட்சி மாலையுடன் சூழ்ந்த மயிற்பீலியாலாகிய நுதலணி மாலையும், கங்குல் வாய் கிழிக்கும் தந்தக்கடகமும் - இரவின் வாயினைக் கிழித்து விளங்கும் தந்தவளையும், மின்னுக்கால - ஒளி வீசா நிற்க.

வடிவு முழுதும் கருமையாயிருந்தமையின் கங்குலை உவமை கூறினர். சூட்டு-நுதலில் அணியும் மாலை. இருளை யோட்டு மென்பதனை இரவின் வாயைக்கிழிக்கும் என்றார். (கச)

அண்டத்தா ரமரர் நாம மன்றுதொட் டடையத் தோற்று
கண்டத்தா ரிருளே யெங்குங் கலந்தெனக் கறுத்த மேனி
கொண்டத்தா ராரி னற்கோர் கூற்றெனக் கொல்வே லேந்திச்
சண்டத்தீ யென்ன நின்றான் காவிரித் தலைவன் காணா.

(இ - ள்.) அண்டத்தார் - தேவர்கள், அன்று தொட்டு - (நஞ்சுண்ட) அந்நாள் தொடங்கி, அமரர் நாமம் அடைய - அமரர் என்னும் பெயரைப் பெறும்படி, கண்டத்துத் தோற்று ஆர் இருளே - திருமிடற்றிலே தோன்றிய நஞ்சாகிய மிக்க இருளே, எங்கும் கலந்தென - உடல் முழுதுங் கலந்தாற்போல, கறுத்தமேனி கொண்டு - கறுத்த திருமேனி கொண்டு, அ ஆர் தாரினற்கு - அந்த ஆத்தி மாலையை யணிந்த சோழனுக்கு, ஓர் கூற்றென - ஒரு கூற்றுவனைப்போல, கொல்வேல் ஏந்தி- கொல்லுதற் றொழிலையுடைய வேற்படையினை ஏந்தி, சண்டத்தீ என்ன நின்றான் - ஊழித்தீப்போல நின்றருளினான்; காவிரித் தலைவன் காணா - (அதனைக்) காவிரித் தலைவனாகிய சோழன் கண்டு.

அமரர் என்னுஞ் சொல்லுக்கு மரணமில்லாதவர் என்பது பொருள். ஆலாலம் உண்டாய போழ்து இறைவன் அதனை உண்டருளி வானோரனைவரும் மரித்தொழியாது காத்தமையின் 'அண்டத்தார் அமரர் நாமம் அடையத்தோற்று' என்றார். அண்டத்திலே பொருந்திய தேவர்கள் அன்று தொட்டு அச்சமடையும்படி தோன்றிய என்றுமாம்; இதற்கு, அச்சப்பொருட்டாய நாம் என்னும் உரிச்சொல் அம்முப்பெற்றதெனக்கொள்க. அஞ்சுதல் - இறைவனது முதன்மையும் தமது சிறுமையும் உணர்ந்து ஒடுங்குதல். கலந்தென, விகாரம். ஆர்த்தார் என மாறுக. வேடுருவாகி நின்றவன் மின்னுக்கால மேனிகொண்டு வேல் ஏந்தி நின்றான் என்க. (கரு)

சீறியா யிரம்ப ரிக்கோர் சேவகன் வந்தே னென்னக்
கூறினா னெதிர்த்தான் வெள்ளிக் குன்றவன் பத்து நூறு
மாறிலாப் பரிக்கு மட்டோர் வயவனீ யன்றோ வெண்ணில்
ஈறிலாப் பரிக்கு மொற்றைச் சேவகன் யானே யென்றான்.

(இ - ள்.) சீறி - சினந்து, ஆயிரம் பரிக்கு ஓர் சேவகன் வந்தேன் என்ன - ஆயிரம் குதிரைகட்கு ஓர் வீரனாகிய யான் வந்தேனென்று, கூறினான் எதிர்த்தான் -

சொல்லி எதிர்த்தான்; வெள்ளிக்குன்றவன் - வெள்ளி மலையையுடைய இறைவன், நீ மாறு இலா பத்து நூறு பரிக்கு மட்டு ஓர் வயவன் அன்றோ - நீ பகைமையில்லாத ஆயிரங் குதிரைகளுக்கு மட்டும் ஓர் சேவகன் அல்லவா, எண்ணில் ஈறு இலா பரிக்கும் - எண்ணில் முடிவு பெறாத குதிரைகளுக்கும், ஒற்றைச் சேவகன் யானே என்றான் - ஒற்றைச் சேவகன் யானே என்று கூறியருளினான்.

சேவகன் எனத் தன்மையிற் படர்க்கை வந்தது. கூறினான், முற்றெச்சம். நீ ஆயிரம் பரிக்கோர் வீரனென இறுமாந்தாய் யானோ எண்ணில்லாத பரிக்கோர் வீரனாவேன் என இறைவனாகிய வேடுவன் தன்னைப் புகழ்ந்து கூறினனென்க. (கசு)

என்றசொல் லிடியே றென்ன விருசெவி துளைப்பக் கேட்டு
நின்றவ னெதிரே மின்னு நீட்டிச்செல் மேகம் போலச்
சென்றுவேல் வலந் திரித்துச் செயிர்த்தன னதிர்த்துச் சீற
வன்றிற னூற்றுப் பத்து வயப்பரிக் கொருவ னஞ்சா.

(இ - ள்.) என்ற சொல் இடி ஏறு என்ன - என்று இறைவனாகிய வேடன் கூறிய சொல்லானது இடி யேற்றின் ஒலியைப்போல, இருசெவி துளைப்ப - இரண்டு காதுகளையுந் துளைக்க, கேட்டு நின்றவன் எதிரே - கேட்டு நின்ற சோழனெதிரே, மின்னு நீட்டிச்செல் மேகம் போலச் சென்று - மின்னலை நீட்டிச் செல்லும் முகில் போலச் சென்று, வேல் வலம் திரித்துச் செயிர்த்தனன் - வேற்படையை வலமாகச் சுழற்றிச் சினந்து, அதிர்த்துச்சீற - முழங்கிச் சீற, வன்திறல் நூற்றுப்பத்து வயப் பரிக்கு ஒருவன் அஞ்சா - மிக்க வலிமையுடைய ஆயிரங் குதிரைகட்கு ஒரு சேவகனாகிய சோழன் பயந்து.

நின்றனன் அங்ஙனம் நின்றவனெதிரே என விரித்துரைக்க. செயிர்த்தனன், முற்றெச்சம். வன்றிறல், ஒரு பொருளிருசொல். (கஎ)

யாமினி யிந்த வேலா லிறப்பதற் கைய மில்லை
யாமென வகன்றான் மாவோ டாயிரம் பரிக்கோர் மன்னன்
காமனை வெகுண்ட வேடன் மறைந்தனன் கங்குற் சோதி
மாமக னதுகண் டோடும் வளவனைத் துரத்திச் சென்றான்.

(இ - ள்.) யாம் இனி இந்த வேலால் இறப்பதற்கு - இனி யாம் இந்த வேற் படையால் மாளுவதற்கு, ஐயம் இல்லையாம் என - ஐயுறவு இல்லை என்று கருதி, ஆயிரம் பரிக்கு ஓர் மன்னன் மாவோடு அகன்றான் - ஆயிரங் குதிரைகளுக்கு ஒரு சேவகனாகிய சோழன் குதிரையோடு புறங்கொடுத்து ஓடினான்; காமனை வெகுண்ட வேடன் மறைந்தனன்-மன்மதனை எரித்த வேடனாகிய இறைவன் மறைந்தருளினான்; கங்குல் சோதி மாமகன் - இரவில் விளங்கும் சந்திரன் மரபில் வந்த சுந்தரபாதசேகர பாண்டியன், அதுகண்டு ஓடும் வளவனைத் துரத்திச் சென்றான் - அதனைக்கண்டு ஓடுகின்ற சோழனைத்துரத்திச் சென்றான்.

கங்குற்சோதி - இரவில் ஒளிவிடும் திங்கள். மா - பெருமை. மகன் - வழித் தோன்றல். (கஅ)

துரந்திடு மளவி லோடுஞ் சோழனுந் திரும்பி நோக்கிக்
கருந்தடங் கண்ணி பாகங் கரந்தவே டுவனைக் காணான்
வருந்துய ரச்சந் தீர்ந்து மதுரையி னளவும் பற்றிப்
புரந்தரற் புறங்கண் டானைப் புறங்கண்டு முடுக்கிப் போனான்.

(இ - ள்.) துரந்திடும் அளவில் - அங்ஙனம் துரத்திச் செல்லு மளவில், சோழனும் திரும்பி நோக்கி - சோழன் திரும்பிப்பார்த்து, கருந்தடம் கண்ணி பாகம் கரந்த - கரிய நீண்ட கண்களையுடைய உமையுடன் கூடிய பாகத்தை மறைத்துவந்த, வேடுவனைக்காணான் - வேடனைக் காணாமையால், வரும் துயர் அச்சம் தீர்ந்து - உண்டாகிய துன்பமும் அச்சமும் நீங்கி, புரந்தரன் புறங்கண்டானை - இந்திரனைப் புறங் கண்ட பாண்டியனை, மதுரையின் அளவும் பற்றி - மதுரை வரையிலும் தொடர்ந்து, புறம் கண்டு முடுக்கிப் போனான் - முதுகுகண்டு முடுக்கிச் சென்றனன்.

காணாமையால் தீர்ந்து முடுக்கிப் போனான் என்க. முன்னோன் புரிந்த வீரச் செயலை அவன்மீது ஏற்றிப் 'புரந்தரற் புறங்கண்டானை' என்றார். (௧௧)

காலொன்று முடுக்கப் பட்ட கனலொன்று நடந்தா லொத்து
வேலொன்று தடக்கை நேரி வேந்தனான் முடுக்குண் டோடுஞ்
சேலொன்று கொடியி னான்றன் செழுநகர் விரைந்து செல்வான்
மாலொன்று களிற்றி னாங்கோர் மதுமலர்க் கிடங்கில் வீழ்ந்தான்.

(இ - ள்.) கால் ஒன்று முடுக்கப்பட்ட - காற்றொன்றினாலே துரத்தப்பட்ட, கனல் ஒன்று நடந்தால் ஒத்து - நெருப்பு ஒன்று நடந்தாற்போல, வேல் ஒன்று தடக்கைநேரி வேந்தனால் முடுக்குண்டு - வேற்படை ஏந்திய நீண்ட கையையுடைய நேரி மலையையுடைய சோழ மன்னனால் துரத்தப்பட்டு, ஓடும் சேல் ஒன்று கொடியினான் - ஓடுகின்ற கயல் எழுதிய கொடியையுடைய பாண்டியன், தன் செழுநகர் விரைந்து செல்வான் - வளம் பொருந்திய தனது நகர்க்கண் விரைந்து செல்லுகின்றவன், மால் ஒன்று களிற்றின்-மதமயக்கமுடைய யானைபோல, ஆங்கு ஓர் மதுமலர்க் கிடங்கில் வீழ்ந்தான் - அங்குள்ள தேன் நிறைந்த பூக்களையுடைய ஓர் அகழியில் வீழ்ந்தனன்.

காலொன்று என்புழி ஒன்று எண்ணுப்பெயர்; ஏனைய பெயரெச்ச முதனிலை. சோழனைக் காற்றோடும் பாண்டியனைக் கனலோடும் ஒப்பித்தார். (௧௨)

மீனவன் மதுரை மூதூர் மேற்றிசைக் கிடங்கில் வீழ
மானவெம் புரவி யோடும் வளவனும் வீழ்ந்தான் கூடற்
கோனவ னருளால் வானோர் குரைகடல் கடையத் தோன்றும்
ஆனையி னெழுந்தான் றென்னன் கோழிவேந் தாழ்ந்து போனான்.

(இ - ள்.) மீனவன் மதுரை மூதூர்மேல் திசைக்கிடங்கில் வீழ - பாண்டியன் மதுரையாகிய பழைய நகரின் மேற்புறத்துள்ள அகழியில் விழ, மானவெம் புரவியோடும் வளவனும் வீழ்ந்தான் - பெருமையையுடைய கொடிய குதிரையோடு சோழனும்

விழுந்தனன்; கூடல் கோனவன் அருளால் - மதுரைப் பெருமானாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவருளால், வானோர் குரைகடல் கடையத் தோன்றும் ஆனையின் - தேவர்கள் ஒலிக்கின்ற பாற்கடலைக் கடையத் தோன்றிய வெள்ளானைபோல, தென்னன் எழுந்தான் - பாண்டியன் எழுந்தான்; கோழிவேந்து ஆழ்ந்து போனான்-உறையூர் வேந்தனாகிய சோழன் ஆழ்ந்திறந்தனன்.

விரைந்து துரந்து சென்றானாகலின் அவன் வீழ்ந்தவுடன் இவனும் வீழ்ந்தான். அருளால் எழுந்தான் என்றியையும். இறைவனருளால் எழுந்தான் எனவே விழுந்ததும் அவனருளால் என்பது பெற்றாம். மேற்செய்யுளில் மாலொன்றுகளிற்றின் வீழ்ந்தான் எனக்கூறி, இதில், ஆனையின் எழுந்தான் என்ற நயம் பாராட்டற்குரியது. இதனால் அகழியின் பெருமையும் கூறியவாறாயிற்று. கோழி-உறையூர். ஓர் கோழி யானையைப் போர்வென்ற இடத்தில் இயற்றப்பட்டதாகலின் இப் பெயரெய்திற்று;

> "முறஞ்செவி வாரண முன்சம முருக்கிய
> புறஞ்சிறை வாரணம் புக்கனர்"

எனச் சிலப்பதிகாரம் கூறுதலுங் காண்க.　　(உக)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

> பிலத்தள வாழ்ந்த கடிமலர்க் கிடங்கிற் பெருந்தகை யவிந்தவன் றுகில்பூண்
> கலத்தரும் பேழை படைபரி மான்றேர் கரியெலாங் கவர்ந்துதண் பொருநைத்
> தலத்தவன் றங்க ணாயக ரணியத் தக்கதூ சணிகல னல்கி
> நலத்தகை யவர்பே ரருட்கடற் கன்பு நதியெனப் பெருகிவீற் றிருந்தான்.

(இ - ள்.) தண்பொருநைத் தலத்தவன் பெருந்தகை - தண்ணிய பொருநைசூழ்ந்த நாட்டையுடையவனாகிய பெருந் தகுதியுடைய சுந்தரபாத சேகர பாண்டியன், பிலத்து அளவு ஆழ்ந்த கடிமலர் கிடங்கில் அவிந்தவன் - பாதலம்வரை ஆழ்ந்துள்ள மணமிக்க மலர்களையுடைய அகழியில் வீழ்ந்து இறந்த சோழனுடைய துகில் பூண் - ஆடையும் அணியும், கலத்து அரும்பேழை - அரிய அணிகலப் பெட்டியும், படைபரிமான் தேர் கரிஎலாம் கவர்ந்து - காலாளும் குதிரையும் தேரும் யானையும் ஆகிய இவையெல்லாவற்றையும் கொண்டு, தங்கள் நாயகர் அணியத்தக்க தூசு அணிகலன் நல்கி - தங்கள் தலைவராகிய சோமசுந்தரக் கடவுள் அணியத்தக்க ஆடைகளையும் அணிகலங்களையும் தந்து, நலத்தகையவர் பேர் அருள் கடற்கு-உயிர்களுக்கு நன்மையே புரியுந் தகுதியையுடைய அவ் விறைவரது பேரருளாய கடலுக்கு, அன்பு நதி எனப்பெருகி வீற்றிருந்தான்-தனது அன்பானது ஆறுபோலப் பெருக வீற்றிருந்தான்.

பெருந்தகை என்பதனைப் பிரித்துக் கூட்டுக. கடி - காவலுமாம். அன்பினாலே திருவருளைத் தலைக்கூட வேண்டுதலின் 'அருட்கடற்கு அன்பு நதியெனப் பெருகி' என்றார். பெருகி - பெருக.　　(உஉ)

ஆகச்செய்யுள் - ௲௬௱௭௰.

## முப்பத்தெட்டாவது

# உலவாக்கோட்டை யருளியபடலம்

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

மின்ப னிக்கதிர் வேணி வானவன் மீன வன்றனை மானவேல்
முன்ப னிக்க வலந்தி ரித்து முடுக்கி நேரி யடுக்கலான்
பின்ப னிக்கம லத்த டத்திற விட்ட வாறிது பெருமைசால்
அன்ப னுக்குல வாத கோட்டை யளித்த வாறு கிளத்துவாம்.

(இ - ள்.) பனிக் கதிர் மின் வேணி வானவன் - குளிர்ச்சி பொருந்திய கிரணங்களையுடைய சந்திரனை யணிந்த மின்போலும் சடையையுடைய சோமசுந்தரக் கடவுள், மீனவன் தனை - பாண்டியன் பொருட்டு, மானவேல் - பெருமை பொருந்திய வேற்படையினை, முன் - எதிரே, பனிக்க - நடுங்குமாறு, வலம் திரித்து - வலமாகச் சுழற்றி, நேரி அடுக்கலான் - நேரி மலையையுடைய சோழனை, முடுக்கி - துரத்தி, பின்-பின்பு, பனிக்கமலத் தடத்து இறவிட்டவாறு இது-(அவன்) குளிர்ந்த தாமரைகளையுடைய அகழியில் வீழ்ந்திறக்கச் செய்த திருவிளையாடல் இதுவாகும்; பெருமை சால் அன்பனுக்கு - பெருமை நிறைந்த அடியார்க்கு நல்லானுக்கு, உலவாத கோட்டை அளித்தவாறு - குறையாத அரிசிக் கோட்டையினை (அக்கடவுள்) அளித்தருளிய திருவிளையாடலை, கிளத்துவாம் - (இனிக்) கூறுவாம்.

மின்வேணி எனக்கூட்டுக. பனிக்கதிர் - திங்கள். தன், சாரியை. மீனவனை - மீனவனுக்கு; வேற்றுமை மயக்கம். முன் முடுக்கிப் பின் இறவிட்டவாறு என்றுமாம். (க)

[கலிவிருத்தம்]

பொடியார்க்கு மேனிப் புனிதர்க்குப் புனித வேற்றுக்
கொடியார்க்கு வேதக் குடுமிக்கிணை யான கூடற்
படியார்க்குஞ் சீர்த்திப் பதியேருழ வோரு ணல்லான்
அடியார்க்கு நல்லா னறத்திற்கும் புகழ்க்கு நல்லான்.

(இ - ள்.) பொடி ஆர்க்கும் மேனிப் புனிதர்க்கு - திருநீறு நிறைந்த திருமேனியையுடைய தூயவரும், புனித ஏற்றுக் கொடியார்க்கு - வெள்ளிய இடபக் கொடியை யுடையவரும் ஆகிய சோமசுந்தரக் கடவுளுக்கு, வேதக் குடுமிக்கு இணையான - வேத சிகைக்குச் சமமான, படி ஆர்க்கும் சீர்த்தி கூடற்பதி - புவிமுழுதும் நிறைந்த கீர்த்தியையுடைய மதுரைப் பதியிலே, ஏர் உழவோருள் நல்லான் - ஏரான் உழுதலைச் செய்யும் வேளாளரில் சிறந்தவன் ஒருவன், அடியார்க்கு நல்லான் - அடி

யார்க்கு நல்லான் என்னும் பெயரினன்; அறத்திற்கும் புகழ்க்கும் நல்லான் - அறத்திற்கும் (அதனலாம்) புகழுக்கும் நல்லனுயுள்ளான்.

புனிதர்க்கு ஏற்றுக் கொடியார்க்கு என ஒரு பொருண்மேற் பல பெயர் வந்தன. வேதக் குடுமியானது எங்ஙனம் இறைவர் வசிக்கும் தூய இடமாமோ அங்ஙனமே கூடற்பதியுமா மென்றார். சீர்த்தியையுடைய கூடற்பதி என இயைக்க. படியார்க்கும் என்பதில் கு சாரியை. கூடலின் புகழ் புவிமுழுதம் நிறைதல்,

"நிலனுவிற் றிரிதரூஉ நீண்மாடக் கூடலார்"

எனக் கலித்தொகை யுள்ளும் குறிக்கப்பட்டது. அடியார்க்கு நல்லான் என்பதனைக் காரணப் பெயராகக் கொண்டவன் என்க. அடியார்க்கு நல்லார் என்பது இறைவன் திருப் பெயருமாம்;

"கருவூரு ளானிலை, அண்ணலா ரடியார்க்கு நல்லரே"

என்னும் ஆளுடையபிள்ளையார் திருவாக்கும் காண்க. (உ)

அனையா னறத்திற் கருள்போன்றவ ளான்ற கற்பின்
மனையாண் மரபின் வழுவாத தரும சீலை
எனையாரு நன்கு மதிக்க விருக்கு நீராள்
தனையாள் பதிக்குக் கதிக்குத்தனிச் சார்பு போல்வாள்.

(இ - ள்.) அனையான் அறத்திற்கு அருள் போன்றவள் - அவன் செய்யும் அறத்திற்கு அருள் போன்றவளாகிய, ஆன்ற கற்பின் மனையாள் - நிறைந்த கற்பினை யுடைய மனைவி, மரபின் வழுவாத தருமசீலை - மரபிற்குரிய ஒழுக்கத்தினின்றுந் தவறாத தருமசீலை என்பவள்; எனையாரும் நன்கு மதிக்க இருக்கும் நீராள் - (அவள்) தன் கணவனே யன்றி எனையாவரும் நன்கு மதிக்குமாறு மனையறம் புரிந்திருக்குந் தன்மையை யுடையவள்; தனை ஆள் பதிக்குக் கதிக்குத் தனிச் சார்பு போல்வாள்-தன்னை ஆளும் நாயகனுக்கு வீடெய்துதற்குரிய ஒப்பற்ற பற்றுக்கோடு போல்பவள்.

அறத்திற்குச சிறந்த துணையாவது அருள் ஆகலின் 'அறத்திற்கு அருள் போன்றவள்' என்றார். எனையாரும் - யாவரும்; 'வாழுமூர் தற்புகழும் மாண்கற்பின் இல்லாள்' என்றவாறு. வீடெய்துதற்குச் சிறந்த துணையாகிய மெய்யுணர்வு போல்வாளென்பார் 'கதிக்குத் தனிச்சார்பு போல்வாள்' என்றார். (௩)

பல்லே ருழவின் றொழில்பூண்டு பயன்கள் கொள்வான்
வில்லே ருழவன் கடன்கொண்டு மிகுந்த வெல்லாம்
இல்லே ருழத்தி மடைச்செல்வ மியற்றி யேந்த
அல்லேறு கண்ட னடியாரை யருத்து நீரான்.

(இ - ள்.) பல் ஏர் உழவின் தொழில் பூண்டு-பல ஏர்களால் உழுதற்றொழிலை மேற்கொண்டு, பயன்கள் கொள்வான் - மிக்க ஊதியத்தைப் பெறும் அடியார்க்கு நல்லான், வில் ஏர் உழவன் கடன் கொண்டு- அரசன் ஆறிலொன்றாகிய தனது கட

மையைக் கொள்ள, மிகுந்த எல்லாம்-எஞ்சிய பொருளனைத்தையும், இல் ஏர்உழத்தி-மனைக்கிழத்தியாகிய தரும சீலை, மடைச் செல்வம் இயற்றி ஏந்த-அடிசில் அமைத்து அளிக்க, அல் ஏறு கண்டன் அடியாரை அருத்தும் நீரான் - இருள் நிறைந்த திருமிடற்றினையுடைய இறைவன் அடியார்களை உண்பிக்குந் தன்மையை யுடையான்.

உழவின், இன்சாரியை அல்வழிக்கண் வந்தது. வில்லேருழவன்-வில்லாகிய ஏரால் மாற்றாரை வெல்லுதலாகிய உழவினைச் செய்வோன்; அரசன். இல்லேருழத்தி - இல்லிற் செய்யும் விருந்தோம்புதல் முதலியவற்றால் அறப்பயன் விளைப்பவள்; மனையாள். எல்லாத் தொழில்களையும் உழவாக உருவகித்துக் கூறுதல் வழக்கு கொண்டு - கொள்ள. மடை - சோறு; அதனைச் செல்வமெனச் சிறப்பித்துக் கூறினர். (சு)

தொகைமாண்ட தொண்டர் சுவையாறு தழீய நான்கு
வகைமாண்ட மாறு படுமுண்டி மறுத்த ருந்த
நகைமாண்ட வன்பின் றலைபாயவ னல்க நல்கப்
பகைமாண்ட செல்வ மணற்கேணியிற் பல்கு நாளின்.

(இ - ள்.) தொகை மாண்ட தொண்டர்-அளவிறந்த அடியார்கள், அறுசுவை தழீஇய - அறுவகைச் சுவையும் பொருந்திய, நான்கு வகை மாண்ட மாறுபடும் உண்டி - நான்கு வகையால் மாட்சிமைப்பட்ட (தம்முள்) மறுதலையாய உணவுகளை, மறுத்து அருந்த - மறுத்து உண்ணும்படி, நகை மாண்ட அன்பின் தலையாயவன் நல்க நல்க - மகிழ்ச்சி மிக்க தலையன்பினை யுடைய அடியார்க்கு நல்லான் கொடுக்குந்தோறும், பகை மாண்ட செல்வம் - பகையில்லாத செல்வமானது, மணல் கேணியில் பல்கும் நாளில் - மணற் கேணியில் (இறைக்குந் தோறும்) நீர் சுரத்தல் போல இடையறாது பெருகு நாளில்.

மாண் என்பது மிகுதிப் பொருள் தருதலை 'ஞாலத்தின் மாணப்பெரிது' என்பதனால் அறிக. ஆறு சுவை - தித்திப்பு, புளிப்பு, கார்ப்பு, கைப்பு, உவர்ப்பு, துவர்ப்பு என்பன. நால்வகை உண்டி - உண்பன, தின்பன, நக்குவன, பருகுவன என்பன. மாறுபடுதலாவது வெவ்வேறு வகையினதாதல். மறுத்தருந்தல் - போதுமென்று தடுத்துண்ணுதல்; மிகுதியாக இடுதலின் மறுப்பரென்க;

"மறு சிகை நீக்கி யுண்டாரும்"

என்பது காண்க. இச் செல்வம் யாவர்க்கும் களிப்பை விளைத்தலின் 'பகைமாண்ட செல்வம்' என்றார். மாறுபடுவதொன்றில்லாத செல்வம் என்றுமாம். (ரு)

இந்நீர வாய வளங்குன்றினு மின்மை கூறாத்*
தன்னீர்மை குன்றா னெனுந்தன்மை பிறர்க்குத் தேற்ற
நன்னீர் வயலின் விளைவங்கி நலிவு செய்ய
மின்னீர வேணி மதுரேசர் விலக்கி னாரே.

---

(பா - ம்.) * கூறாத்.

(இ - ள்.) இந்நீரவாய வளம் குன்றினும் - இத்தன்மையவாகிய செல்வங்கள் குறைந்தாலும், இன்மை கூறாத் தன் நீர்மை குன்றான் எனும் தன்மை-வறுமையைக் கூறாமையாகிய தன் இனிய பண்பினின்றும் குன்றமாட்டான் (இவ்வடியார்க்கு நல்லான்) என்னுந் தன்மையை, பிறர்க்குத்தேற்ற - அஃதுணராத மற்றையோருக்குத் தெளிவிக்க, நல் நீர்வயலின் விளைவு அஃகி நலிவு செய்ய - நல்ல நீர்வள மிக்க வயல்களில் விளைவு குறைந்து வருத்துமாறு, மின்நீர வேணி - மின்போலும் ஒளி வீசுந் தன்மையையுடைய சடையையுடைய, மதுரேசர் விலக்கினர்-சோமசுந்தரக் கடவுள் அவ்விளைவை விலக்கி யருளினர்.

இன்மை கூறாமை - தன்பால் வந்து இரந்தவர்க்கு 'என்னிடம் பொருளில்லை' யென்று கூறாமை; ஈதல்.

"இலனென்னு மெவ்வ முரையாமை யீதல்"

என்பது காண்க. அன்பன் இயல்பு ஆண்டவனுக்குத் தெரியுமாயினும், அவ்வியற்கையை ஏனையோர்க்குந் தெரிவித்து உய்வித்தற் பொருட்டு அங்ஙனஞ் செய்தனர் என்றார். மின் ஈர வேணி எனப் பிரித்து, குளிர்ச்சி பொருந்திய மின்போலும் வேணி என்றுரைத்தலும் பொருந்தும். மதுரேசர் தேற்ற நலிவு செய்யும்படி விலக்கினர் என்க.

"செல்வ மேவிய நாளி லிச்செயல் செய்வ தன்றியு மெய்யினால்
அல்ல னல்குர வான போதினும் வல்ல ரென்றறி விக்கவே
மல்ல னீடிய செல்வ மெல்ல மறைந்து நாடொறு மாறிவந்
தொல்லை யில்வறு மைப்ப தம்புக வுன்னி னார்தில்லை மன்னினார்"

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுள் இங்கு நினைக்கற்பாலது. (சு)

குன்றா விருத்திக் கடன்கொண்டுகொண் டன்பர் பூசை
நன்றா நடாத்தத் தொடுத்தான்கடன் றானுங் கிட்டா
தொன்றாலுங் கொண்ட விரதத்துக் குறுதி யின்றி
நின்றா னுடம்பை யொறுக்கின்ற நியமம் பூண்டான்.

(இ - ள்.) குன்றா விருத்திக்கடன் கொண்டு கொண்டு - குறையாத வட்டிக் கடனை வாங்கி வாங்கி, அன்பர் பூசை நன்றா நடாத்தத் தொடுத்தான் - அடியார் பூசையைச் செவ்வனே நடத்தத் தொடங்கினான்; கடன் தானும் கிட்டாது - பின் அக்கடனும் கிடைக்காமல், ஒன்றாலும் கொண்ட விரதத்துக்கு உறுதி இன்றி நின்றான் - வேறொன்றினாலுந்தான் மேற்கொண்ட விரதத்தை முடிப்பதற்கு வலி யில்லாமல் நின்ற அடியார்க்கு நல்லான், உடம்பை ஒறுக்கின்ற நியமம் பூண்டான் - உடலை (உணவின்றியிருத்தலால்) வருத்தும் கடப்பாட்டினை மேற்கொண்டான்.

விருத்தி - வட்டி. தொடுத்தான் - தொடங்கினான். நின்றான், பெயர். (எ)

கொடுப்பா ரவரே விளைவுங்கடன் கோளு மாற்றித்
தடுப்பா ரெனின்மற் றதையாவர் தடுக்க வல்லார்
அடுப்பார் விழுமங் களைவாரடி யார்க்கு நல்லான்
மடுப்பா னியமந் தடைப்பட்டு வருந்து கின்றான்.

(இ - ள்.) கொடுப்பார் அவரே - கொடுக்கின்ற இறைவரே, விளைவும் கடன் கோளும் மாற்றித் தடுப்பார் எனில்-விளைவையுங் கடன் கோடலையும் மாற்றி விலக்குவாராயின், அதை யாவர் தடுக்க வல்லார்-அதனைத் தடுக்க வல்லவர் யாவர் (ஒருவருமில்லை; அதனால்), அடுப்பார் விழுமம் களைவார் அடியார்க்கு - தம்மை அடுத்தவரின் துன்பத்தைப் போக்கும் சிவபிரான் அடியார்க்கு, நல் ஊண் மடுப்பான்-நல்ல உணவுகளை அளிக்கும் அடியார்க்கு நல்லான், நியமம் தடைப்பட்டு வருந்துகின்றான் - அந் நியமம் தடைப்பட்டு வருந்துகின்றனன்.

கோள், முதனிலை திரிந்த தொழிற்பெயர். மற்று, அசை. யாவர் தடுக்கவல்லார் என்றது கவிக்கூற்று. விழுமம்-துன்பம். நியமம் உணவளித்தலாகிய கடன். (அ)

விண்ணாறு சூடும் விடையான்றமர்க் கூட்டி யன்றி
உண்ணாத வன்றன் னுயிர்க்குத்துணை யாய* கற்பிற்
பண்ணார்மொழி தன்னொடும் பட்டினி விட்டு நெஞ்சம்
புண்ணாக வாகம் பசித்தீயிற் புழுங்கப் பட்டான்.

(இ - ள். விண் ஆறு சூடும் விடையான் தமர்க்கு - ஆகாய கங்கையை அணிந்த இடப ஊர்தியையுடைய சிவபெருமான் அடியார்கட்கு, ஊட்டி அன்றி உண்ணாதவன் - திருவமுது செய்வித் தல்லாமல் உண்ணுதல் இல்லாத அடியார்க்கு நல்லான், தன் உயிர்க்குத் துணையாய - தனது உயிருக்குத் துணையாகிய, கற்பின் பண் ஆர் மொழி தன்னொடும் பட்டினி விட்டு - கற்பினையும் இசைபோலுஞ் சொல்லையுமுடைய மனைவியோடும் பட்டினிகிடந்து, நெஞ்சம் புண்ணாக - மனம் புண்ணாக, ஆகம் பசித்தீயில் புழுங்கப் பட்டான் - உடம்பு பசி என்னும் நெருப்பினால் வெதும்பப் பட்டான்.

ஊட்டியன்றி உண்ணாதவன் - உண்பித்து மிச்சிலை அருந்துவதன்றி வேறுண்ணாத நியம முடையான். பண்ணார் மொழி, ஆகு பெயர். விட்டு - இருந்து, கிடந்து. (கூ)

இறக்கும் முடம்பாற் பெறும்பேறினி யாவ தென்னா
அறக்குன் றனையான் மனையோடு மடைந்திச் செய்தி
நிறக்கின்ற செம்பொற் சிலையார்க்கு நிகழ்த்தி யாவி
துறக்கின் றதுவே துணிவென்று துணிந்து போனான்.

(இ - ள்.) அறக்குன்று அனையான் - புண்ணிய மலைபோன்ற அடியார்க்கு நல்லான், இறக்கும் உடம்பால் - இறந்து படுகின்ற இவ்வுடம்பினால், இனி பெறும் பேறு யாவது என்னா - (நமது விரதந் தடைப்பட்ட) பின் நாம் அடையும் பயன் யாது என்று கருதி, மனையோடும் அடைந்து - மனைவியோடுஞ் சென்று, இச்செய்தி - இச்செய்தியை, நிறக்கின்ற செம்பொன் சிலையார்க்கு நிகழ்த்தி-விளங்குகின்ற சிவந்த பொன்மலையை வில்லாக வுடைய சோமசுந்தரக் கடவுளுக்குக் கூறி, ஆவி துறக்கின்

---

(பா - ம்.) *உயிர்த்துணையாய.

றதுவே துணிவு என்று துணிந்து போனான் - உயிரை விடுதலே முடிவு என்று மனந் துணிந்து சென்றனன்.

என்றேனும் அழியும் இயல்பினதாகிய இவ்வுடம்பை நியமந் தவறிய பின்னரும் வைத்திருத்தலால் எய்தலாகும் பயனொன்று மின்மையால், இப்பொழுதே அதனை விடுத்தல் செயற்பாலதா மென்று துணிந்தனன் என்க. உடல் என்றேனும் அழியு மென்பதனை,

"மின்போ லழியும் வயிற்றுமை வடிவா யழியு மெய்யுருவாய்
முன்போ லழியும் பிறந்தழியு மடவா ருடனே முயங்கியதன்
பின்போ யழியு நரைத்தழியும் பேய்போற் றிரிந்து பெயர்ந்தழியும்
பொன்போல் வளர்த்து மிவ்வுடலம் நிலையா தழிந்து போய்விடுமே."

என்னும் சேவ்வந்திப் புராணச் செய்யுள் நன்கு விளக்குகின்றது. சலியாமையும் பெருமையும் பற்றி "அறக்குன் றனையான்" என்றார். நிறக்கின்ற, பெயரடியாகத் தோன்றிய வினை. அனையான் யாவதென்னு, துணிவென்று, துணிந்து போனான் என்க. (௰)

ஐயன் றிருமுன்ன ரடைந்தடி தாழ்ந்து வானோர்
உய்யும் படிநஞ் சமுதுண்ட வொருவ வுன்றன்
மெய்யன்பர் பூசைக் கிடையூறு விளைய வென்றன்*
செய்யும் புலமும் விளைவின்றிச் சிதைந்த வென்னு.

(இ - ள்.) ஐயன் திருமுன்னர் அடைந்து - சிவபெருமானது திருமுன்னர்ச் சென்று, அடிதாழ்ந்து - திருவடியில் வீழ்ந்து வணங்கி, வானோர் உய்யும்படி நஞ்சு அமுது உண்ட ஒருவ - தேவர்கள் உய்யுமாறு நஞ்சினை அமுதாக உண்டருளிய ஒப்பற்றவனே, உன்தன் மெய் அன்பர் பூசைக்கு இடையூறு விளைய - உனது மெய்யடியார்கள் பூசைக்கு இடையூறுண்டாக, என்தன் செய்யும் புலமும் விளைவு இன்றிச் சிதைந்த என்னு - என்னுடைய நன்செய்யும் புன்செய்யும் விளைவு சுருங்கிக் கெட்டன என்று கூறி (மற்றும்).

வானோர் உய்யும் பொருட்டு நஞ்சையும் உண்ட பேரருளாளனாகிய நீ நின்னடியார் பூசை முட்டின்றி முடியும்படி அருள்செய்தல் கடன் என்னும் கருத்தினைக் கொண்டிருத்தலால் நஞ்சமுதுண்ட ஒருவ என்றது கருத்துடை யடையணி. தன் இரண்டும் சாரியை. செய்யும் புலமும் என வேறு கூறினமையால் நன்செயும் புன்செயும் என்க. (௧௧)

விடனல்கு சூலப் படையாய் கடன் வேறு காணேன்
கடனல்க வல்லார் தமைக்காட்டுதி சாட்டி லாயேல்
மடனல்கு மிந்த வுடம்பின்சுமை யாற்று வேனென்
றுடனல்கு கற்புக் குரியாளொடும் வேண்டு மெல்லே.

---

(பா - ம்.) * இன்றென்.

(இ - ள்.) விடன் நல்கு சூலப் படையாய் - நஞ்சினை உமிழுஞ் சூலப் படையையுடைய பெருமானே, கடன் வேறு காணேன் - கடன் கொடுப்பார் வேறு ஒருவரையும் யான் அறிந்திலேன் ; கடன் நல்கவல்லார் தம்மைக் காட்டுதி - (ஆதலின்) கடன் கொடுக்க வல்லவரை நீ காட்டக்கடவை ; காட்டிலாயேல்-காட்டாவிடிலோ, மடன் நல்கும் இந்த உடம்பின் சுமை மாற்றுவேன் என்று - அறியாமை பொருந்திய இந்த உடற்பொறையை மாற்றி விடுவேனென்று கூறி, உடன் அல்கு கற்புக்கு உரியாளொடும் வேண்டும் எல்லே-தன்னுடனுறையும் கற்புக்குரிய மனைவியோடும் நின்று குறையிரக்கும் பொழுது.

விடன் அல்கு, மடன் அல்கு எனப் பிரித்தலுமாம். அல்கல் - பொருந்தல். கடன் வேறு காணேன் என்பதற்கு வேறு செய்யத்தக்கது அறியேன் என்னலுமாம். உடம்பின், இன் சாரியை அல்வழிக்கண் வந்தது. (கஉ)

பஞ்சாதி வேதப் பொருள்சொன்ன பரமன் வாக்கொன்
றஞ்சாதி வேளாண் டலைவாவு னகத்தி லின்றோர்
செஞ்சாதி யாய* செழுவாலரிக் கோட்டை யுய்த்தேம்
எஞ்சா திருக்கு மெடுக்குந்தொறு மென்று மாதோ.

(இ - ள்.) பஞ்சாதி வேதப் பொருள் சொன்ன பரமன் வாக்கு ஒன்று - பஞ்சாதி என்னும் உறுப்பினையுடைய வேதத்திற்குப் பொருளருளிச் செய்த இறைவன் திருவாக்கு ஒன்று, வேளாண் தலைவா அஞ்சாதி -வேளாண்குடித் தலைவனே நீ அஞ்சாதே ; உன் அகத்தில் இன்று - உன் வீட்டில் இன்று, ஓர் செஞ்சாதி ஆய செழுவால் அரிக் கோட்டை உய்த்தேம் - ஒரு செந்நெல்லாலாய அழகிய வெள்ளிய அரிசிக் கோட்டையைச் செலுத்தினேம் ; என்றும் எடுக்குந் தோறும் எஞ்சாது இருக்கும் - (அது) எஞ்ஞான்றும் எடுக்க எடுக்கக் குறையாம லிருக்கும்.

பஞ்சாதி - சந்தைகூட்டி ஓதுவோர் நிறுத்துதற் பொருட்டு வேதத்தில் வகுக்கப்பட்ட ஐம்பது பதங்கொண்ட ஓர் முடிவு. அஞ்சாதி, எதிர்மறை யேவல் ; த் எழுத்துப் பேறு. அரி - அரிசி. மாது, ஓ அசைகள் (கந)

நீநாளும் பூசித் ததில்வேண்டிய கொண்டு நித்தம்
ஆனாத வன்பர்க் கமுதூட்டி யெவர்க்கு மன்ன
தானாதி நான தருமங்களுஞ் செய்தி வீடு
மேனா ளளிக்கின் றனமென்று விசும்பிற் கூற.

(இ - ள்.) நீ நாளும் பூசித்து - நீ தினந்தோறும் வழிபட்டு, அதில் வேண்டிய கொண்டு - அக்கோட்டையில் வேண்டு மளவு பெற்றுக்கொண்டு, நித்தம் ஆனாத அன்பர்க்கு அமுது ஊட்டி - நாடோறும் நீங்காத நமது அடியார்கட்கு உணவு அருத்தி, எவர்க்கும் - யாவருக்கும், அன்னதான ஆதி - அன்னதானம் முதலிய, நான தருமங்களும் செய்தி - பலவேறு வகையான அறங்களையுஞ் செய்யக்கடவை ;

(பா - ம்.) *செஞ்சாலியாய.

வீடு மேல் நாள் அளிக்கின்றனம் என்று - முடிவில் வீடுபேறு அளிக்கின்றோமென்று, விசும்பில் கூற - வானின்கண் அசரீரியாகக் கூறியருள.

வேண்டிய, வினையாலணையும் பெயர். ஆறாத அன்பர் - குறையாத அன்பினை யுடையர் என்றுமாம். தாறுதி, நெடிற்சந்தி. நாறு - பல. (௧௪)

கேட்டின்ப மெய்திக் கிளர்விம்மித னாகி வேதப்
பாட்டின் பயனைப் பணிந்தில்ல மடைந்து பண்டை
ஈட்டுந் தவப்பே றெனக்கண்டனன் றொண்டர்க் கெந்தை
கூட்டுங் கதிபோ லுலவாமற் கொடுத்த கோட்டை.

(இ - ள்.) கேட்டு இன்பம் எய்தி - (அதனைக்) கேட்டு மகிழ்ச்சி யடைந்து, கிளர் விம்மிதனாகி - மேலெழுந்த விம்மிதத்தை யுடையவனாய், வேதப் பாட்டின் பயனைப் பணிந்து - வேதப் பனுவலின் பொருளாயுள்ள இறைவனைப் பணிந்து, இல்லம் அடைந்து - மனையையெய்தி, பண்டை ஈட்டும் தவப்பேறு என - முற்பிறப்புக்களிலே தேடிய தவத்தின் பயனைக் கண்டாற்போல, தொண்டர்க்கு - அடியார்கட்கு, எந்தை - எமது பெருமான், கூட்டும் கதிபோல் - அடைவிக்கும் பேரின்பம் (என்றுங் குறையாதிருத்தல்) போல, உலவாமல் கொடுத்த கோட்டை - குறையாதிருக்கக் கொடுத்தருளிய கோட்டையை, கண்டான் - கண்டனன்.

விம்மிதம் - அதிசயம். கோட்டையைத் தவப்பேறெனக் கண்டனன் என முடிக்க. கோட்டையை என்னும் இரண்டனுருபு இறுதிக்கண் தொக்கது;

" ஐயுங் கண்ணு மல்லாப் பொருள்வயின்
மெய்யுருபு தொகாஅ விறுதி யான "

என்பது தொல்காப்பியம். (௧௫)

வானாறு சூடி தருகோட்டையை வைக றோறும்
பூநாறு சாந்தம் புகையொண்சுடர் கொண்ட ருச்சித்
தானாத செவ்வி யடிசிற்கு மதற்கு வேண்டும்
நானா கருவி விலைக் கும்மது நல்க வாங்கா.

(இ - ள்.) வான் ஆறு சூடி - கங்கையைத் தரித்த சோமசுந்தரக் கடவுள், தரு கோட்டையை - அருளிய கோட்டையை, வைகல் தோறும் - நாள்தோறும், பூ நாறு சாந்தம் புகை ஒண்சுடர் கொண்டு அருச்சித்து - மலரும் நறிய சந்தனமும் தூபமும் ஒள்ளிய தீபமும் என்னும் இவற்றாற் பூசித்து, செவ்வி ஆனாத அடிசிற்கும் - பதம் நீங்காத அன்னத்திற்கும், அதற்கு வேண்டும் நானா கருவி விலைக்கும் - அவ்வன்னத்திற்கு வேண்டிய கறிப் பொருள் முதலிய பலவேறு உபகரணங்களின் விலைப் பொருட்கும், அது நல்க - அக் கோட்டை கொடுக்க, வாங்கா - கைக்கொண்டு.

சூடி - சூடுதலை யுடையான்; இ வினை முதற்பொருள் விகுதி. கொண்டு மூன்றும் வேற்றுமைச் சொல். (௧௬)

மின்னார் சடையான் றமராய்ந்தவர் வேதச் செல்வர்
தென்னாடர் தெய்வம் விருந்தொக்கல் செறிந்து நட்டோர்
முன்னா மெவர்க்கு முகில்போல் வரையாம னல்கி
எந்நாளு நோயின் றளகாதிப னென்ன வாழ்ந்தான்

(இ - ள்.) மின் ஆர் சடையான் தமர் - மின்போன்ற சடையை யுடைய சிவ பெருமானது அடியார்களும், ஆய்ந்தவர் வேதச் செல்வர் - வேதத்தை ஆராய்ந்தவர் களாகிய அந்தணர்களும், தென்னாடர் தெய்வம் விருந்து ஒக்கல் - பிதிரரும் தெய்வ மும் விருந்தும் சுற்றத்தாரும், செறிந்து நட்டோர் - நெருங்கி நட்புச் செய்தோரும், முன் ஆம் எவர்க்கும் - முதலாகிய யாவர்க்கும், முகில்போல் வரையாமல் நல்கி - மேகம்போல் வரைவின்றிக் கொடுத்து, எந்நாளும் நோய் இன்று அளகாதிபன் என்ன வாழ்ந்தான் - எஞ்ஞான்றும் வறுமை நோயின்றிக் குபேரன் போல வாழ்ந்து வந்தான்.

கலைகளை ஆய்ந்தவரும் வேதச் செல்வரும் என்றுமாம்.

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங்
கைம்புலத்தா றோம்ப றலை."

என்பவாகலின், தென்னாடர் முதலாயினோர்க் களிப்பது இல்வாழ்வார்க் குரிய பொது வறமாகும். சிவனடியார் முதலாயினார்க் களிப்பது சிறப்பறம். மேகம் யாவ ரையும் நீக்காது பெய்தல் போல நீக்காமற் கொடுத் தென்க. நோய் - துன்பமு மாம். அளகாதிபன் - அளகைப்பதிக் கிறைவன் ; தீர்க்க சந்தி. (௧௭)

[வேறு]

அன்பன் னடியார்க் கினியா னனிநா ளளந்தல்கித்
தன்பன் னியொடு மயலார் சுற்றந் தமரோடும்
பின்பந் நிலையே யிமவான் மகளைப் பிரியாத
இன்பன் னுருவாய்ச் சிவமா நகர்சென் றிறைகொண்டான்.

(இ - ள்.) அன்பன் அடியார்க்கு இனியான் - அன்பனாகிய அடியார்க்கு நல் லான், தன் பன்னியொடும் - தன் மனைவியோடும், அயலார் சுற்றம் தமரோடும் - பக்கத்திலுள்ளார் சுற்றத்தார் நட்டார் என்னும் இவர்களோடும், நனிநாள் அளந்து அல்கி - நீண்டநாள் அறஞ் செய்திருந்து, பின்பு - அதன் பின்னர், அந்நிலையே - அங்கிருந்தவாறே, இமவான் மகளைப் பிரியாத இன்பன் உருவாய் - மலைமகளைப் பிரி யாத இன்ப வடிவினனாகிய சிவபெருமான் உருவாகி, சிவமாநகர் சென்று இறை கொண்டான் - பெருமை பொருந்திய சிவபுர மெய்தித் தங்குத லுற்றான்.

அளந்து - அறஞ்செய்து ; நாட்களை அளந்து என்றுமாம். அந்நிலையே - கடவ நாட்கழித்த அப்பொழுதே என்றுமாம். உரு - சிவசாரூபம். இமவான் மக ளைப் பிரியாத இன்பன் உருவாய் என்றமையால் அவன் பத்தினி உமையின் சாரூ பம் பெற்றமையும் கொள்க. இறை கொண்டான் - ஒரு பெற்றியே இன்பம் நுகர்ந் திருந்தான். (௧௮)

ஆகச் செய்யுள் - ௧௧௨௫.

## முப்பத்தொன்பதாவது

# மாமனாகவந்து வழக்குரைத்த படலம்

[அறுசீரடியாசிரியவிருத்தம்.]

தாமநா றிதழி யார்தந் தமர்க்கன்பன் வறுமைப் பட்டோன்
ஆமநா ளுலவாக் கோட்டை யருளிய முறையீ தையன்
தேமனுண் முல்லைத் தீந்தார்ச் சிறுதகை வணிகற் காக
மாமனும் படிவங் கொண்டு வழக்குரை வண்ணஞ் சொல்வாம்.

(இ-ள்.) நாறு தாம இதழியார்தம் தமர்க்கு அன்பன் - மணங்கமழும் கொன்றை மாலையை யணிந்த இறைவன் தம்முடைய அடியார்க்கு நல்லான், வறுமைப் பட்டோன் ஆம் அநாள் - வறுமை யுடையனாகிய அந்தநாளில், உலவாக் கோட்டை அருளிய முறை ஈது - உலவாக் கோட்டை யருளிய திருவிளையாடல் இது; ஐயன் - அப் பெருமான், தேம் மன்நாள் முல்லைத் தீந்தார் - தேன் பொருந்திய அன்றலர்ந்த முல்லை மலராலாகிய இனிய மாலையை யணிந்த, சிறுதகை வணிகற்கு ஆக - இளம் பருவமுடைய வணிகனுக்காக, மாமனும் படிவம் கொண்டு வழக்கு உரைவண்ணம் சொல்வாம் - அவனுக்கு மாமனாகிய வடிவந்தாங்கி வந்து வழக்குரைத்த திருவிளையாடலை (இனிக்) கூறுவாம்.

தாமம் நாறு இதழி என்பதற்கு மாலை போலத் தோன்றும் கொன்றைத் துணர் என்றுமாம். அநாள், தொகுத்தல். தகை - பருவத்தை யுணர்த்திற்று. (க)

கன்னிநான் மாடக் கூடற் கடிநகர் வணிக மாக்கள்
தன்னின்மா நிதிக்கோ னன்னான் றனபதி யென்னும் பேரான்
மன்னினா னனையான் கற்பின் மடவரல் சுசீலை யென்பாள்
பொன்னினாண் முளரிச் சேக்கைப் புண்ணியத் திருவி னன்னாள்.

(இ-ள்.) கன்னிநான் மாடக் கூடல் கடிநகர் - என்றும் அழியாத நான் மாடக் கூடலென்னுங் காவலையுடைய மதுரைப்பதியின் கண் வசிக்கும், வணிகமாக்கள் தன்னில் - வாணிக மக்களுள், மாநிதிக்கோன் அன்னான் - குபேரனை யொத்த செல்வ முடையனாகிய, தனபதி என்னும் பேரான் மன்னினான் - தனபதி என்னும் பெயரினையுடைய ஒருவன் இருந்தான்; அனையான் கற்பின் மடவரல் சுசீலை என்பாள் - அவனுடைய கற்பினையுடைய மனைவி சுசீலை என்னும் பெயரினை யுடையாள்; பொன்னின் நாள் முளரிச் சேக்கை - பொன் போன்ற புதிய தாமரை மலராகிய தவிசில் இருக்கும், புண்ணியத் திருவின் அன்னாள் - புண்ணிய வடிவாகிய திருமகளை யொத்தவள்.

கன்னி - அழிவின்மை. தம்மின் எனற்பாலது தன்னின் என எதுகை நோக்கி வந்தது. அன்னாய் என வினையெச்ச மாக்கலுமாம். மடவரல் - மடப்பத்தை யுடையாள். திருவின், சாரியை நிற்க உருபு தொக்கது. (உ)

எனவிவர் தமக்கு மைந்தற் பேறின்றி யிரங்கு நாளிற்
றனபதி மருகன் றன்னைத் தகவுசான் மகவாக் கொண்டு
மனமகிழ் சிறப்பா னல்க மனைவியுந் தொழுது வாங்கிப்
புனைவன புனைந்து போற்றிப் பொலிவுற வளர்த்துக் கொண்டாள்.

(இ - ள்.) என இவர் தமக்கு - என்று கூறப்பட்ட இவர்கட்கு, மைந்தன் பேறு இன்றி இரங்குநாளில் - புதல்வற்பேறு இல்லாமல் வருந்தும் பொழுது, தனபதி மருகன் தன்னை - தனபதி என்பவன் தனது மருமகனை, தகவுசால் மகவாக் கொண்டு - தகுதியமைந்த புதல்வனாக ஏற்றுக் கொண்டு, மனமகிழ் சிறப்பால் நல்க - மனமகிழ்ந்து சிறப்போடு கொடுக்க, மனைவியும் தொழுது வாங்கி - மனைவியாகிய சுசீலையும் வணங்கிக் கையில் வாங்கி, புனைவன புனைந்து போற்றி - அணியத்தக்க அணிகளை அணிவித்துப்பேணி, பொலிவு உற வளர்த்துக் கொண்டாள் - பொலிவு மிக வளர்த்தனள்.

மருகன் - தங்கை மகன். மகனாக் கொள்ளுதல் - புதல்வனாக முறைப்படி ஏற்றுக்கொள்ளுதல். (௩)

தனபதி மகப்பே றற்றா னாயினுந் தணவாக் காதன்
மனைவிமேல் வைத்த வாசை மயக்கினால் வருந்தி யீன்ற
தனையனை மகவாத் தந்த தங்கைமேற் றீராப் பூசல்
வினைவிளைத் தொழுக வோர்நா ளிளையளும் வெகுண்டு சொல்வாள்.

(இ - ள்.) தனபதி - தனபதி என்பான், மகப்பேறு அற்றான் ஆயினும் - பிள்ளைப்பேறு இல்லாதவனாயினும், தணவாக்காதல் மனைவிமேல் வைத்த - நீங்காத காதலை யுடைய மனைவியினிடத்து வைத்த, ஆசை மயக்கினால் - ஆசையாற் போந்த மயக்கத்தினால், வருந்தி ஈன்ற தனையனை - தான் வருந்திப் பெற்ற புதல்வனை, மகவாத் தந்த தங்கைமேல் - பிள்ளையாகக் கொடுத்த தங்கையின்மேல், தீராப்பூசல் வினைவிளைத்து ஒழுக - நீங்காத போர்த்தொழிலைச் செய்துவர, ஓர்நாள் இளையளும் வெகுண்டு சொல்வாள் - ஒருநாள் தங்கையும் சினந்து கூறுவாளாயினள்.

மனைவி வயிற்று மகப்பேறின்றித் தங்கை மகனை மகவாக்கொண்டவன் அவளுடன் பூசல் விளைத்தல் சிறிதும் தகாதென்பார் 'மகப்பேறற்றானாயினும்......பூசல் வினைவிளைத்து' என்றார். மயக்கினால் பூசல் வினைவிளைத்து என இயைக்க. இதனால் அவன் மனைவி தனது நாத்தூண் நங்கையொடு மனம் பொருந்தா திருந்தமை பெறப்படும். (௪)

பெருமித முனக்கேன் பிள்ளைப் பேறற்ற பாவி நீயென்
அருமைநன் மகனு லன்றே விருமையு மடைவா யென்னப்
பெரிதுநா ணடைந்து மேலைக் காயினும் பிள்ளைப் பேறு
தருதவம் புரிவே னென்னுத் தனபதி தவமேற் செல்வான்.

(இ - ள்.) பிள்ளைப்பேறு அற்ற பாவி உனக்குப் பெருமிதம் ஏன் - மகப் பேறற்ற பாவியாகிய உனக்குப் பெருமிதம் எதற்கு, என் அருமை நன் மகனுல் அன்றே - எனது அருமைப் புதல்வனுலல்லவா, நீ இருமையும் அடைவாய் என்ன - நீ இம்மைப் பேற்றினையும் மறுமைப் பேற்றினையும் அடைவாய் என்று கூற, பெரிதும் நாண் அடைந்து - மிகவும் வெட்கமுற்று, மேலைக்கு ஆயினும் பிள்ளைப் பேறு தருதவம் புரிவேன் என்னு - மறு பிறப்பிலாயினும் மகப் பேற்றினைத் தருதற்குரிய தவத்தினைச் செய்வேனென்று, தனபதி தவமேல் செல்வான் - தனபதி தவம் புரிதற் பொருட்டுச் செல்வானுயினன்.

பெருமிதம் - செருக்கு. புதல்வற்பேறு மறுமைக்கும் காரணமாதலை,

"எழுபிறப்புந் தீயவை தீண்டா பழிபிறங்காப்
பண்புடை மக்கட் பெறின்',

என்னும் பொய்யா மொழியாற் அறிக. மேலை - ஈண்டு மறுமை. (௫)

தன்பெருஞ் செல்வ மெல்லா மருமகன் றனக்கே யாக்கி
அன்புகொண் மனைவி யோடு மருந்தவ நெறியிற் சென்றுன்
பின்பவன் வரவு தாழ்ப்ப மருமகன் பெற்ற வெல்லாம்
வன்பினுல் வழக்குப் பேசி வௌவினுர் தாய மாக்கள்.

(இ - ள்.) தன் பெருஞ் செல்வம் எல்லாம் - தனது பெரிய செல்வ முழுதையும், மருமகன் தனக்கே ஆக்கி - மருகனுக்கே உரிமை யாக்கி, அன்புகொன் மனைவியோடும்-அன்புகொண்ட தனது மனைவியோடும், அருந்தவ நெறியில் சென்றுன்-அரிய தவநெறியிற் சென்றனன்; பின்பு அவன் வரவு தாழ்ப்ப-பின்பு அத்தனபதியின் வருகை காலந் தாழ்க்க, மருமகன் பெற்ற எல்லாம் - அவனது மருகன் அடைந்த செல்வ மனைத்தையும், வன்பினுல் வழக்குப் பேசி - வலிமையினுல் வழக்குரைத்து, தாய மாக்கள் வௌவினுர்-தாயத்தார் வௌவிக்கொண்டனர்.

வரவு தாழ்ப்ப - நெடுநாள் வாராதிருந்தமையால். வன்பு - வலிமை; வன்கண்மையுமாம். (௬)

விளைநில னடிமை பைம்பூண் வெறுக்கைநன் பசுக்க ளேனை
வளனுமாற் றவர்கைக் கொள்ள வன்சிறை யிழந்த புட்போற்
றளர்வுறு மகனுந் தாயுஞ் சார்பிலாத் தம்ம னோர்க்கோர்*
களைகணு யிருக்குங் கூடற் கடவுளே சரண மென்னு.

---

(பா - ம்.) * சார்பிலார் தம்மனோர்க்கோர்.

(இ - ள்.) விளை நிலன் - விளை நிலங்களையும், அடிமை - அடிமைகளையும், பைம்பூண் - பசிய அணிகளையும், வெறுக்கை - பொருள்களையும், நன் பசுக்கள் - நல்ல பசுக்களையும், ஏனை வளனும் - பிற வளங்களையும், மாற்றவர் கைக்கொள்ள - பகைவர் கவர்ந்துகொள்ள, வன்சிறை இழந்த புள்போல் - வலிய சிறைகளை இழந்த பறவைபோல, தளர்வு உறு மகனும் - மெலிவுற்ற புதல்வனும், தாயும் - அவனை யீன்ற அன்னையும், சார்பு இலாத் தம்மனோர்க்கு - பற்றுக்கோடில்லாத தம்போல் வார்க்கு, ஒரு களைகணாய் இருக்கும் - ஒரு பற்றுக்கோடா யிருக்கும், கூடல் கடவுளே - கூடலம்பதியில் வீற்றிருக்கும் இறைவனே, சரணம் என்னா - அடைக்கலம் என்று கருதி.

அடிமை - ஏவலாட்கள். வெறுக்கை - பொன் முதலியன. ஏனைவளன் - மனை, தோட்டம் முதலியன. (எ)

வந்து வானகடு போழ்ந்த மணிமுடி விமானக் கோயிற்
சுந்தர நாதன் பாதத் துணைதொழு திறைஞ்சி யார்க்குந்
தந்தையுந் தாயு மாகுந் தம்பிரா னீரே யெங்கட்
கெந்தையும் யாயு மென்னா விரங்கிநின் றினைய சொல்வாள்.

(இ - ள்.) வந்து - வந்தெய்தி, வான் அகடு போழ்ந்த மணிமுடி விமானக் கோயில் - விசும்பின் வயிற்றைக் கிழித் துயர்ந்த அழகிய முடியினையுடைய இந்திர விமானமாகிய கோயிலில் வீற்றிருக்கும், சுந்தரநாதன் பாதத்துணை தொழுது இறைஞ்சி - சோமசுந்தரக் கடவுளின் இரண்டு திருவடிகளையும் கும்பிட்டு வணங்கி, யார்க்கும் தந்தையும் தாயும் ஆகும் தம்பிரான் - யாவர்க்கும் அத்தனும் அன்னையு மாகிய தம்பிரானே, நீரே எங்கட்கு எந்தையும் யாயும் என்னா - தேவரீரே அடியேங் கட்கும் தந்தையும் தாயுமாவீர் என்று, இரங்கி நின்று இனைய சொல்வாள் - வருந்தி நின்று இத்தன்மையனவாய குறைகளைக் கூறுவாளாயினள்.

தம்பிரானாகிய நீரே யென்றுமாம். யாய் - தாய். மகனும் தாயும் வந்து வணங்கினர் எனவும், பின்பு தாய் இனைய சொல்வாள் எனவும் கொள்க. (அ)

என்மகன் றன்னை மைந்த னின்மையா லெவருங் காணத்
தன்மக னாகக் கொண்டு தகுதியா லன்றே காணி
பொன்மனை பிறவு நல்கிப் போயினா னென்மு னிப்பால்
வன்மையாற் றாயத் தார்க ளவையெலாம் வௌவிக் கொண்டார்.

(இ - ள்.) என்முன் - என் தமையன், மைந்தன் இன்மையால் - தனக்குப் பிள்ளை யில்லாமையால், என் மகன் றன்னை - எனது மகனை, எவரும் காண - யாவருமறிய, தகுதியால் - கொள்ளவேண்டிய முறைப்படி, தன் மகனாகக்கொண்டு - தனது புதல்வனாகக்கொண்டு, அன்றே - அப்பொழுதே, காணி பொன் மனை பிறவும் நல்கிப் போயினான் - விளைநிலம் பொன் மனை என்பவைகளையும் பிறவற்றையும் கொடுத்துப் போயினான்; இப்பால் - பின்பு, தாயத்தார்கள் - பங்காளிகள்,

அவை எலாம் - அப்பொருள்களனைத்தையும், வன்மையால் வௌவிக் கொண்டார் - தங்கள் வலியினாலே கவர்ந்து கொண்டார்கள்.

என்முன் நல்கிப் போயினான் பின் தாயத்தார் வௌவிக்கொண்டனர் என்க. (௯)

ஒருத்திநா னொருத்திக் கிந்த வொருமக னிவனுந் தேருங்*
கருத்திலாச் சிறியன் வேறு களைகணுங் காணே னைய
அருத்திசா லறவோர் தேறு மருட்பெருங் கடலே யெங்கும்
இருத்திநீ யறியாய் கொல்லோ வென்றுபார் படிய வீழ்ந்தாள்.

(இ - ள்.) ஐய - ஐயனே, ஒருத்தி நான் - நானோ யாருமற்ற ஒருத்தி, ஒருத்திக்கு இந்த ஒருமகன் - ஒருத்தியாகிய எனக்கு இவன் ஒரே புதல்வன், இவனும் தேரும் கருத்து இலாச் சிறியன் - இவ்வொரு புதல்வனும் நன்மை தீமைகளை ஆராயுங் கருத்து இல்லாத இளைஞன்; வேறு களைகணும் காணேன் - வேறு பற்றுக்கோடும் காணேன்; அருத்திசால் அறவோர் தேறும் அருள்பெருங் கடலே - அன்பு நிறைந்த முனிவர்கள் தெளியும் பெரிய கருணைக் கடலே, நீ எங்கும் இருத்தி - நீ யாண்டும் இருப்பாய்; அறியாய் கொல்லோ என்று - (ஆதலின் இதனை) அறியாயோ என்று, பார் படிய வீழ்ந்தாள் - நிலம்படிய வீழ்ந்தனள்.

தேறும் கருத்து என்பது பாடமாயின் தெளியும் கருத்தென்றுரைக்க. ஒருத்தியென்றதனாலும் வேறு களைகணும் காணேன் என்றதனாலும் இவட்குக் கணவனும், வேறு துணையாகும் சுற்றத்தாரும் இலரென்பது பெறும். அருத்தி - ஆர்வம், அன்பு. கொல், அசைநிலை. (ம)

மாறுகொள் வழக்குத் தீர்க்க வல்லவ ரருளி னாலே
சீறுகொள் வடிவேற் கண்ணாள் சிறுதுயி லடைந்தாள் மெய்யில்
ஊறுகொள் கரண மைந்து முற்றறி கனவிற் கங்கை
யாறுகொள் சடையார் வேதச் செல்வரா யடுத்துச் சொல்வார்.

(இ - ள்.) மாறுகொள் வழக்குத் தீர்க்க வல்லவர் அருளினால் - மாறுபட்ட கொடிய வழக்கினைத் தீர்க்க வல்ல பெருமானது திருவருளினால், சீறுகொள் வடிவேல் கண்ணாள் சிறுதுயில் அடைந்தாள் - சினங்கொண்ட வடித்த வேல்போலுங் கண்களையுடையவள் சிறிய உறக்கங் கொண்டனள்; மெய்யில் ஊறுகொள் கரணம் ஐந்தும் உற்று அறி கனவில் - உடலின்கட் பொருந்திய ஐம்பொறிகளும் ஒடுங்கி நிற்க (ஆன்மாவானது சூக்கும உடம்பினின்று) அறியும் கனவின்கண், கங்கை ஆறு கொள் சடையார் - கங்கையாற்றை யணிந்த சடையினையுடைய இறைவர், வேதச் செல்வராய் அடுத்துச் சொல்வார் - ஓர் அந்தணராய் வந்து கூறுகின்றார்.

ஊறுகொள் - உறுதலைக் கொண்ட, பொருந்திய. உற்று - ஒடுங்கி நிற்க; எச்சத்திரிபு. கனவின் இயல்பினை "பொறிகளும் தமது சத்தி மடங்கி, அவை மடங்கவே அவற்றின் வழியவாகிய வாக்காதிகளும் தமது சத்தி மடங்கி, அவ்விருவகை

(பா - ம்.) * இவனுந் தேறும்.

இந்திரியங்களும் தொழிற்பாடின்றி ஆண்டு நின்றொழியும் அவத்தையின், ஏனை அந்தக்கரண முதலியன தொழிற்படினும் புறப்பொருள் விடயமாகாமையின் அகத்தே சூக்கும தேகத்தோடு நின்று ஆண்டைக் குரிய இருவினைப் பயன்களை நுகர்ந்து நிற்கும் அவத்தை சொப்பனம்" என்னும் சிவஞான போதமாபாடியத்தா லுணர்க.(௧௧)

புலர்ந்தபின் றாயத் தோரைப் புரவல னாணை யாற்றால்
வலந்தரு மன்றத் தேற்றி மறித்தனை யிருத்தி யாம்போந்
தலந்தரு மறிவான் மூத்தோ ரனைவரு மிசைய *வந்தச்
சலந்தரு வழக்குத் தீர்த்துத் தருகுவம் போதி யென்றார்.

(இ - ள்.) புலர்ந்தபின் - விடிந்த பின்னர், தாயத்தோரை - பங்காளிகளை, புரவலன் ஆணை ஆற்றால் - அரசன் ஆணை வழியால், மறித்தனை - மறித்து, வலம்தரு மன்றத்து ஏற்றி இருத்தி - வெற்றியைத் தரும் அவையின்கண் ஏற்றி இருப்பாயாக; யாம் போந்து - யாம் வந்து, அலம்தரும் அறிவால் மூத்தோர் அனைவரும் இசைய - அமைந்த உணர்வினால் முதியோரனைவரும் உடன்பட, அந்தச் சலம் தரு வழக்குத் தீர்த்துத் தருகுவம் - அந்தப் பொய் வழக்கினை ஒழித்து உன் பொருளைக் கொடுப்போம்; போதி என்றார் - நீ போகக் கடவை என்றருளிச் செய்தார்.

அரசன் ஆணை கூறி யழைப்பின் மீறிச் செல்லாராகையால் 'புரவலன் ஆணை யாற்றால் மறித்தனை மன்றத் தேற்றி' என்றார். வலந்தரு மன்றம் - உண்மையுணர்த்தி வெற்றியைத் தரும் மன்றம்; அறங்கூ றவையம். மறித்தனை, முற்றெச்சம். அலம் - அமைவு. அனைவருக்கும் பொருந்த என்றுமாம். சலம் - பொய். இருத்தி, போதி என்பவற்றில் த் எழுத்துப் பேறு. (௧௨)

வேரியங் குவளை யுண்கண் விழித்தனள் வியந்து கெட்டேன்
ஆருமில் லார்க்குத் தெய்வந் துணையென்ப தறிந்தே னென்னாக்
காரிருங் கயலுண் கண்ணாள் கணவனைத் தொழுது வாழ்த்திச்
சீரிளங் குமரனோடுந் தெரிவைதன் மனையிற் சென்றாள்.

(இ - ள்.) வேரி அம் குவளை உண்கண் விழித்தனள் - தேனையுடைய அழகிய குவளை மலரை வென்ற கண்கள் விழித்து, வியந்து - அதிசயித்து, கெட்டேன்- ஆ கெட்டேன்! ஆரும் இல்லார்க்குத் தெய்வம் துணை என்பது அறிந்தேன் என்னா- அகதிக்குத் தெய்வந்துணை என்னும் பழமொழியை அறிந்தேனென்று கூறி, கார் இருங்கயல் உண்கண்ணாள் கணவனை - கரிய பெரிய மையுண்ட கயல்போலுங் கண்களையுடைய அம்மையின் நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளை, தொழுது வாழ்த்தி - வணங்கித் துதித்து, சீர் இளங் குமரனோடும் - சீரிய இளமை பொருந்திய புதல்வனோடும், தெரிவை தன் மனையில் சென்றாள் - அம்மாது தனது இல்லின்கட் சென்றனள்.

விழித்தனள், முற்றெச்சம். கெட்டேன், வியப்புணர்த்தும் இடைச்சொல். (௧௩)

---

(பா - ம்.) * அனைவரு மறிய.

சென்றவள் கங்குலெல்லை தெரிந்தபி னெழுந்து வெள்ளி
மன்றவன் கோயில் வாயில் வந்துவந் தனைசெய் தம்பொற்
குன்றவ னுரைத்த வாற்றாற் கொடுமைசால் வழக்குப் பூட்டி
வென்றவ ரிருக்கை யெய்தி விளம்புவாள் பலருங் கேட்ப.

(இ - ள்.) சென்றவள் கங்குல் எல்லை தெரிந்தபின் எழுந்து - அங்ஙனஞ் சென்றவள் இரவு புலர்ந்தவுடன் எழுந்து, வெள்ளி மன்றவன் கோயில் வாயில் வந்து - வெள்ளியம்பல வாணனது திருக்கோயில் வாயிலை யடைந்து, வந்தனை செய்து - வணங்கி, அம்பொன் குன்றவன் உரைத்த ஆற்றால் - அழகிய பொன்மலையை (வில்லாக) உடைய பெருமான் கூறியருளியவாறே, கொடுமைசால் வழக்குப் பூட்டி வென்றவர் - கொடுமை மிக்க வழக்கினைத் தொடுத்து வென்ற ஞாதிகளின், இருக்கை எய்தி - இருப்பிடத்தை அடைந்து, பலருங் கேட்ப விளம்புவாள் - பலருங் கேட்கக் கூறுவாள்.

கங்குல் எல்லை தெரிதல் - இரவின் முடிவு தெரிதல்; இருள் புலர்தல் சென்றவள் எழுந்துவந்து வந்தனைசெய்து இருக்கை யெய்தி விளம்புவாள் என முடிக்க. (௧௪)

அட்டில்வாய் நெருப்பி டேலோ ரடியிடே லறத்தா றன்றிப்
பட்டிமை வழக்கால் வென்று போகொட்டேன் பலருங் கேட்க
இட்டன னரச னாணை யறத்தவி சேறி யான்றோர்
ஒட்டிய படிகேட் டெங்க ளுரிப்பொரு டந்து போமின்.

(இ - ள்.) அட்டில் வாய் நெருப்பு இடேல் - அடுக்களையில் நெருப்பு மூட்டாதே, ஓர் அடி இடேல் - ஒரு அடியும் பெயர்த்து வையாதே, அறத்து ஆறு அன்றி - அறநெறியால் அல்லாமல், பட்டிமை வழக்கால் வென்று போக ஒட்டேன் - பொய் வழக்கினால் வென்று போகவிட மாட்டேன், பலரும் கேட்க அரசன் ஆணை இட்டனன் - அனைவருஞ் சான்றாக அரசன்மீது ஆணையிட்டேன், அறத்தவிசு ஏறி - தருமாசனத்தில் ஏறி, ஆன்றோர் ஒட்டியபடி கேட்டு - நூலோர் ஆய்ந்து கூறுந் தீர்ப்பினைக் கேட்டு, எங்கள் உரிப்பொருள் தந்து போமின் - எங்கள் உரிமைப் பொருளைக் கொடுத்துச் செல்வீராக.

அடுக்களையில் நெருப்பிடாதே அடியெடுத்து வையாதே என ஆணை கூறி மறிப்போர் உரைத்தல் வழக்கு. பட்டிமை - படிறு, வஞ்சம். போகொட்டேன், அகரந் தொக்கது. ஒட்டியபடி - வாதித்துக் கூறும் தீர்ப்பு; பலரும் ஒன்று கூடி யுரைக்கும் தீர்ப்புமாம். ஒட்டியபடி கேட்டு எங்களுரிப்பொருள் தந்து என்றமையால் வெற்றி தமக்கேயெனத் துணிந்து கூறினாளாயிற்று. மகனை உளப்படுத்தி 'எங்கள்' என்றாள். உரி - உரிய. இடேல் எனத் தனித்தனியே நோக்கிக் கூறி, போமின் என அனைவரையும் நோக்கிக் கூறினாள் என்க. (௧௫)

என்றனள் மறித்த லோடு மிழுக்குரை யாடி வைது
வன்றிறல் வலியார் தள்ளி யடித்தனர் மைந்த னோடுஞ்
சென்றனண் முறையோ வென்னாத் திருந்தறத் தவிசி னோர்முன்
னின்றுரை யாடி னாள்கேட் டறிந்தனர் நீதி நூலோர்.

(இ - ள்.) என்றனள் மறித்தலோடும் - என்று கூறி (அவர் செலவைத்) தடுத்தவளவில், வன்றிறல் வலியார் - மிக்க வலியுடைய ஞாதியர், இழுக்கு உரை ஆடி வைது தள்ளி அடித்தனர் - தீய சொற்களைக் கூறி வைது நிலத்திற் றள்ளி அடித்தார்கள்; மைந்தனோடும் சென்றனள் - (அவள்) புதல்வனோடுஞ் சென்று, முறையோ என்னா - இது முறையோ என்று கூவி, திருந்து அறத்தவிசினோர்முன் நின்று உரையாடினாள் - திருந்திய தரும பீடத்துள்ளார் முன் நின்று வழக்கினைக் கூறினாள்; நீதி நூலோர் கேட்டு அறிந்தனர் - நீதிநூல் வல்ல மன்றத்தார் அதனைக் கேட்டறிந்தனர்.

என்றனள், சென்றனள் என்பன முற்றெச்சம். வன்றிறல், ஒருபொருட் பன்மொழி. திருந்துதல் - சமன் செய்து சீர் தூக்கும் கோல்போல் அமைந்து ஒருபாற் கோடாதிருத்தல். (கசு)

அறத்தவி சிருப்போ ரேவ லாடவ ரோடும் போந்து
மறித்தவைக் களத்திற் கூட்டி வந்தனள் வந்த வெல்லை
அறக்கொடி பாகர் வெள்ளி யம்பல வாணர் தாமத்
திறத்தன பதியே யென்னத் திருவுருக் கொண்டு செல்வார்.

(இ - ள்.) அறத் தவிசு இருப்போர் - தருமபீடத்தில் இருப்போருடைய, ஏவல் ஆடவரோடும் போந்து - ஏவலாளரோடுஞ் சென்று, மறித்து அவைக் களத்தில் கூட்டி வந்தனள் - மறித்து மன்றின்கண் (அஞ்ஞாதிகளைக்) கூட்டி வந்தாள்; வந்த எல்லை - வந்தபொழுது, அறக்கொடி பாகர் - தரும வல்லியாகிய உமையை ஒருபாகத்திலுடையவரும், வெள்ளி அம்பல வாணர் - வெள்ளி மன்றுடையாருமாகிய சோமசுந்தரக் கடவுள், தாம் அத்திறம் தனபதியே என்ன - தாம் தவமேற் சென்ற தனபதியே போல, உருக்கொண்டு செல்வார் - திருவுருவந் தாங்கிச் செல்வாராயினர்.

கேட்டறிந்த அறத் தவிசினோர் ஏவலாளரை அனுப்பினரென்பது உடம்பொடு புணர்த்துரைக்கப்பட்டது. அறக்கொடி - அறமே உருவமாகிய கொடிபோல்வாள்; அறம் வளர்த்தாள் என்றுமாம். திறம் - தன்மை. அத்திறத் திருவுருக் கொண்டு என்று கூட்டுதலுமாம். (கஎ)

[கலிவிருத்தம்]

பெருவிலைக் குண்டலம் பிடரிற் பத்திபாய்ந்
தெரிகதிர் கவிழ்ப்பவா ளெறிக்கு மங்கதம்
அருவரைத் தோள்கிடந் திமைப்ப வாகமேற்
குருமணிக் கண்டிகை குலாய்ப்பின் கோட்டவே

(இ - ள்.) பெருவிலைக் குண்டலம் - பெரிய விலையினையுடைய குண்டலங்கள், பிடரில் பத்தி பாய்ந்து எரிகதிர் கவிழ்ப்ப - பிடரியில் நிரைபட விளங்கும் ஒளியினை உமிழவும், வாள் எறிக்கும் அங்கதம் - ஒளிவீசும் தோளணி, அருவரை தோள் கிடந்து இமைப்ப - அரிய மலைபோன்ற தோளிற் பொருந்தி ஒளிவிடவும், ஆகம்மேல் குருமணிக்கண்டிகை குலாய்ப்பின்கோட்ட - மார்பிற் கிடக்கும் நிறம் பொருந்திய மணிக் கண்டிகை விளங்கிப் பின்னே வளைந்து கிடக்கவும்.

காதிலும் மார்பிலும் அணிந்த குண்டலங்களும் கண்டிகையும் அசைதலால் முறையே பிடரிலும் முதுகிலும் ஒளிவீசி விளங்கின என்றார். அங்கதம் - வாகு வலயம். அருமை - ஈண்டுப் பெருமை. (௧௮)

முரலளி புறவிதழ் மொய்ப்பச் செய்யதா
மரைசிறி தலர்ந்தென மணிசெய் மோதிரக்
கரதலம் விசியோர் கடுங்க ணேறெனப்
பெருமித நடைகொடு நடக்கும் பெற்றியார்.

(இ - ள்.) முரல் அளி புற இதழ் மொய்ப்ப - ஒலிக்கின்ற வண்டுகள் புற இதழில் மொய்த்துக் கிடப்ப, செய்ய தாமரை சிறிது அலர்ந்தென - செந்தாமரைப் போது சிறிது மலர்ந்தாற்போல் விளங்கும், மணி செய் மோதிரக் கரதலம்வீசி - நீலமணியாற் செய்த மோதிரங்களை யணிந்த கைகளைவீசி, ஓர் கடுங்கண் ஏறு என - ஒரு வெகுளி நோக்கினையுடைய இடபம்போல, பெருமித நடை கொடு நடக்கும் பெற்றியார் - செம்மாந்த நடையால் நடக்குந் தன்மையுடையராய்.

விரல்கள் இதழ்கள் போலவும், விரல்களின் புறத்தணிந்த நீலமணி மோதிரங்கள் இதழ்களின் புறத்து மொய்த்துள்ள வண்டுகள் போலவும் விளங்கினவென்க. அலர்ந்தென, விகாரம். விளங்கும் என ஒரு சொல் விரிக்க. ஏறு - சிங்கவேறுமாம்.()

வாடிய முளரிபோன் மாறிட் டாரிடத்
தூடியு மலர்ந்தபோ தொப்ப மைந்தன்மேல்
நாடிய தண்ணளி நயந்து முட்கிடை
கூடிய முகத்தினர் குறுகு வாரவை.

(இ - ள்.) வாடிய முளரிபோல் - வாட்டமுற்ற தாமரை மலரைப்போல, மாறு இட்டார் இடத்து ஊடியும் - பகைவிளைத்த ஞாதிகளிடத்துப் பிணக்கினைக் காட்டியும், மலர்ந்தபோது ஒப்ப - மலர்ந்த தாமரை மலரைப்போல, மைந்தன்மேல் நாடிய தண் அளி நயந்தும் - புதல்வனிடத்துக் கொண்ட தண்ணிய அருளை விருப்புடன் காட்டியும், உட்கிடை கூடிய முகத்தினர் - உட்கருத்தைப் புலப்படுத்துவது போலும் முகத்தினராய், அவை குறுகுவார் - மன்றின்கண் வருகின்ற பெருமானார்.

"அடுத்தது காட்டும் பளிங்குபோ னெஞ்சம்
கடுத்தது காட்டு முகம்"

என்னும் பொய்யா மொழியால், உள்ளத்தே மிக்கு நிகழ்வதனை முகம் காட்டுதல் பெற்றும். இறைவர் தாம் கொண்ட கோலத்திற்கேற்ப மாறிட்டா ரிடத்து ஊடுத லும் மைந்தனிடத்து நயத்தலு முடையார்போல் நடிப்பாராய் முறையே முகவாட்ட மும் மலர்ச்சியு முடையவராய்த் தோன்றினர் என்க. உட்கிடை - உள்ளக்கருத்து. கவிழ்ப்ப, இமைப்ப, கோட்ட, பெற்றியராய், முகத்தினராய் அவை குறுகுபவர் எனக் கூட்டி முடிக்க. (உ௰)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

அரசனிங் கில்லை கொல்லோ வான்றவ ரில்லை கொல்லோ
குரைகழல் வேந்தன் செங்கோல் கொடியதோ கோதி னூல்கள்
உரைசெயுந் தெய்வந் தானு மில்லைகொ லுறுதி யான
தருமமெங் கொளித்த தேகொ லென்றறத் தவிசிற் சார்வார்.

(இ - ள்.) இங்கு அரசன் இல்லை கொல்லோ - இந்நகரில் மன்னன் இல் லையோ, ஆன்றவர் இல்லை கொல்லோ - அறிவால் அமைந்த முதியோர் இல்லையோ, குரை கழல் வேந்தன் செங்கோல் கொடியதோ - ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த அரசனது செங்கோல் கொடுங் கோலானதோ, கோது இல் நூல்கள் உரை செயும் தெய்வம் தானும் இல்லைகொல் - குற்றமற்ற வேத சிவாகமங்களை அருளிய கடவு ளும் இல்லையோ, உறுதியான தருமம் எங்கு ஒளித்ததே கொல் - நிலைபேறுடைய அறமும் எங்கே சென்று ஒளித்ததோ, என்று - என்று முறையிட்டு, அறத் தவிசில் சார்வார் - அறமன்றினைச் சார்வா ராயினர்.

செங்கோல் வேந்தனோ ஆன்றவரோ தெய்வமோ அறமோ இருப்பின் இத் தீமை நிகழாதென்பார் அவை இல்லையோ என்றூரென்க. கொடியதோ - கோடி யதோ; குறுக்கல் விகாரம்; கொடுமையுடையதாயிற்றோ என்றுமாம். நூல்களால் உரை செய்யப்படும் தெய்வம் என்றுரைத்தலும் அமையும். முன்னுள்ள கொல் இரண்டும் அசைகள். (உக)

தனபதி வரவு நோக்கி வஞ்சனைத் தாயத் தார்கள்
இனைவுறு மனத்த ராகி விம்மித மெய்தி வெல்லும்
மனவலி யிழந்து பண்டு வழக்கலா வழக்கால் வென்ற
வினைநினைந் துள்ள மச்ச நாணினால் விழுங்கப் பட்டார்.

(இ - ள்.) தனபதி வரவு நோக்கி - தனபதியின் வருகையைப் பார்த்து, வஞ்சனைத் தாயத்தார்கள் - வஞ்சனையையுடைய பங்காளிகள், இனைவு உறு மனத்தர் ஆகி - வருத்தமிக்க மனத்தினையுடையராய், விம்மிதம் எய்தி - வியப்புற்று, வெல் லும் மனவலி இழந்து - வெல்லக் கருதிய மனவலியை இழந்து, பண்டு வழக்கு அலா வழக்கால் வென்ற வினை நினைந்து - முன்பு கொடுவழக்கால் வென்ற தீச் செய் கையை நினைந்து, உள்ளம் அச்சம் நாணினால் விழுங்கப்பட்டார் - நெஞ்சம் அச்சத் தினாலும் வெட்கத்தினாலும் விழுங்கப்பட்டார்.

வரவுநோக்கி முதலில் வியப்பும் பின் வருத்தமும் எய்தினர் என்க. முன் போன்றே மீட்டும் வெல்லலா மென்னும் மனவலியுடையரா யிருந்து பின் அதனை

இழந்தன ரென்பார் 'வெல்லும் மனவலி யிழந்து' என்றார். வழக்கு அலா வழக்கு-மெய்வழக்கல்லாத வழக்கு; கொடு வழக்கு. தமது தீமை புலனாதல் குறித்து நாணமும், அரசன் ஒறுப்பன் என்பது கருதி அச்சமும் உள்ளத்தே மிக்கன ரென்க. (௨௨)

மாதுல ராகி வந்தோர் மருகனைத் தம்பின் வந்த
தாதுல ராத கோதை தன்னொடுந் தழீஇத்தங் கண்ட
மீதுல ராத சாம வேதமார்ப் பவர்போல் வாய்விட்
டாதுல ரானீ ரந்தோ வையவென் றழுது நைந்தார்.

(இ - ள்.) மாதுலர் ஆகிவந்தோர் - மாமனாகி வந்த இறைவர், மருகனை - மருமகனை, தம் பின் வந்த - தமக்குப் பின் தோன்றிய, தாது உலராத கோதை தன்னொடும் தழீஇ - தங்கையோடும் தழுவி, தம்கண்டம்மீது உலராத சாமவேதம் ஆர்ப்பவர்போல் - தமது திருமிடற்றினின்றும் நீங்காத சாமவேதத்தினைப் பாடுபவர் போல, வாய்விட்டு - வாய்திறந்து, ஆதுலர் ஆனீர் - (நீங்கள்) வறியரானீர்கள்; அந்தோ ஐய என்று அழுது நைந்தார் - ஐயகோ வென்று புலம்பி வருந்தினார்.

மருகனையும் தங்கையையும் தழுவி யென்க. கோதை - பெண். தம்பின் வந்த கோதை - தங்கை. கோதை என்பது மாலையும் ஆகலின் அப்பெயருக் கேற்பத் 'தாதுலராத' என அடை கொடுத்தார். தாது உலராத - மகரந்தம் அறாத. அவரது அழுகையொலியும் சாமவேத இசைபோல இனிமையா யிருந்த தென்பார் 'சாம வேத மார்ப்பவர்போல் வாய்விட்டு' என்றார். அந்தோ, ஐய என்பன இரக்கப் பொருளில் வந்த இடைச் சொற்கள். (௨௩)

குடங்கையி னெடுங்க ணாளுங் குமாரனும் வணிகர் தாளிற்
றடங்கணீ ராட்ட வீழ்ந்தார் தடக்கையா லெடுத்துப் புல்லி
மடங்கலே றனையார் தாமு மற்றவர் தமைத்தங் கணினீர்
நெடுங்கடல் வெள்ளத் தாழ்த்திக் குமரனை நேர்ந்து நைவார்.

(இ - ள்.) குடங்கையின் நெடுங்கணாளும் - உள்ளங் கைபோல் அகன்ற நீண்ட கண்களையுடைய தங்கையும், குமாரனும் - புதல்வனும், வணிகர்தாளில் - வணிகரின் திருவடிகளில், தடம் கண் நீர் ஆட்ட - தம் பெரிய கண்கள் அவற்றை நீராட்டும்படி, வீழ்ந்தார் - வீழ்ந்தனர்; தடக்கையால் எடுத்துப் புல்லி - நீண்ட திருக்கரத்தினால் எடுத்துத் தழுவி, மடங்கல் ஏறு அனையார் தாமும் - சிங்கவேற்றினை யொத்த அவ்வணிகரும், அவர்தமை - அவர்களை, தம் கண் நீர் நெடுங்கடல் வெள்ளத்து ஆழ்த்தி - தமது கண்ணீராகிய பெரிய கடற்பெருக்கில் மூழ்குவித்து, குமரனை நேர்ந்து நைவார் - பின் புதல்வனைப் பார்த்து வருந்துவாராயினர்.

அகன்ற என வருவிக்க. தாளில் வீழ்ந்தார் என இயையும். தாம், மற்று என்பன அசைகள். கண்ணீர் பெருக விடுத்தமையைத் தடங்கணீராட்ட என்றும், கண்ணீர் வெள்ளத் தாழ்த்தி என்றும் கூறினார். (௨௪)

ஐம்படை மார்பிற் காணேன் சிறுசிலம் படியிற் காணேன்
மொய்ம்படை மதாணி காணேன் முகத்தசை சுட்டி காணேன்
மின்படு குழைகள் காணேன் வெற்றுடல் கண்டே னப்பா
என்பெறு மென்று பிள்ளைப் பணிகளுங் கவர்ந்தா ரென்னா.

(இ - ள்.) மார்பில் ஐம்படை காணேன் - மார்பின்கண் ஐம்படையென்னும் அணியைக் கண்டிலேன்; அடியில் சிறு சிலம்பு காணேன் - காலின்கண் சிறிய சிலம்பினைக் கண்டிலேன்; மொய்ம்பு இடை மதாணி காணேன் - தோளின் கண் தோளணியைக் கண்டிலேன்; முகத்து அசை சுட்டி காணேன் - முகத்தின் கண் அசையும் சுட்டியைக் கண்டிலேன்; மின்படு குழைகள் காணேன் - (காதுகளில்) ஒளிவீசுங் குண்டலங்களைக் கண்டிலேன்; வெற்று உடல் கண்டேன் - (பின் இவை நீங்கிய) வெறும் உடலைக் கண்டேன்; அப்பா - அப்பனே, என்பெறும் என்று - எத்துணை விலை பெறுமென்று கருதி, பிள்ளைப் பணிகளும் கவர்ந்தார் என்னா-குழந்தையின் அணிகளையும் வௌவினர் என்றுகூறி.

ஐம்படை - காவற் கடவுளாகிய திருமாலின் சக்கரம், தனு, வாள், தண்டு, சங்கம் என்னும் பஞ்சாயுதங்களின் உருவமைக்கப்பெற்றதோர் அணி; குழந்தைகட்குக் காவலாக ஐந்தாவது திங்களில் இதனைத் தரிப்பது மரபென்பர்; இது தாலி எனவும், ஐம்படைத் தாலி எனவும் வழங்கப் பெறும்;

"தாலி களைந்தன் றுமிலனே பால்விட்டு
அயினியு மின்றயின் றனனே"

எனப் புறப்பாட்டிலும்,

"அமளித் துஞ்சு மைம்படைத் தாலிக்
குதலைச் செவ்வாய்க் குறுநடைப் புதல்வர்"

என மணிமேகலையிலும்,

"தாலி யைம்படை தழுவு மார்பிடை
மாலை வாயமு தொழுகு மக்களை"

என இராமாயணத்திலும் வருதல் காண்க. மதாணி - ஈண்டுத் தோள்வளை. சுட்டி - உச்சியிலணிந்து முகத்திற் றொங்கும் அணி. அப்பா, மரபு வழுவமைதி; இரக்கத்தில் வந்ததுமாம். (௨௫)

அனைவரு மிரங்க வாய்விட் டழுதவ ரிளையா டன்னைத்
தனையனைக் கண்ணீர் மாற்றித் தடக்கையான் முதுகு தைவந்
தினையன்மி னென்முன் வேறென் றெண்ணன்மி னென்னா வஞ்ச*
வினைஞர்வல் வழக்குச் சோர்ந்து விடுவதுங் காண்மி னென்னா.

(இ - ள்.) அவர்-அவ்வணிகேசர், அனைவரும் இரங்க வாய்விட்டு அழுது - கண்டாரெல்லாரும் மனமிரங்கும்படி வாய்விட்டழுது, இளையாள் தன்னைத் தனையனை - தங்கையையும் புதல்வனையும், கண்ணீர்மாற்றி - கண்ணீரைத் துடைத்து, தடக்கை

(பா - ம்.) * என்னா வஞ்ச.

யால் முதுகு தைவந்து - நீண்ட கையினால் முதுகினைத் தடவி, இனையன்மின் - வருந்தாதீர்கள் ; என்முன் வேறு ஒன்று எண்ணன்மின் - என்முன்னே வேறொன் றினையும் கருதாதீர்கள் ; எண்ணு வஞ்ச வினைஞர் - (நான் வருவேனென்று சிறிதும்) நினையாத வஞ்சத் தொழிலையுடைய ஞாதிகளின், வல் வழக்குச் சோர்ந்து விடுவது காண்மின் என்னு - கொடு வழக்குத் தோற்றுவிடுவதைக் காணுங்கள் என்றும்.

எண்ணும்மை விரிக்க. கண்ணீர்மாற்றி, முதுகுதைவந்து என்பன ஒரு சொன்னீரவாய் இரண்டாவதற்கு முடிபாயின. தனையனை நோக்கி என ஒரு சொல் வருவித் துரைத்தலுமாம். தைவரல் - தடவுதல். வேறொன் றெண்ணன்மின் என் பதற்கு இத்துணை நாள் உங்களை விடுத்து மறந்திருந்தேன் என நினையன்மின் என்றே னும், இவ்வழக்குத் தோற்றுவிடுமோ என நினையன்மின் என்றேனும் கருத்துக் கொள்க. எண்ணு - அறத்தினியல்பைச் சிறிதும் நினையாத என்றுமாம். (௨௬)

நட்பிடை வஞ்சஞ் செய்து நம்பினார்க் கூன்மா றாட்டத் *
துட்படக் கவர்ந்து மேற்றோர்க் கிம்மியு முதவா ராயும்
வட்டியின் மிதப்பக் கூறி வாங்கியுஞ் சிலர்போ லீட்டப்
பட்டதோ வறத்தா றீட்டு நம்பொருள் படுமோ வென்னு.

(இ - ள்.) நட்பு இடை வஞ்சம் செய்தும் - நண்பர்மாட்டு வஞ்சனை புரிந் தும், நம்பினார்க்கு ஊன்மாறாட்டத்து உட்படக் கவர்ந்தும் - நம்பிப் பொருளை வைத்தவர்க்கு உயிர் மயங்குமாறு அப்பொருளைக் கவர்ந்தும், ஏற்றோர்க்கு இம்மியும் உதவாராயும் - இரந்தவர்க்கு இம்மியளவுங் கொடாதவராயும், வட்டியில் மிதப்பக் கூறி வாங்கியும் - வட்டியில் வரம்பின்றிச் சொல்லி அங்ஙனமே வாங்கியும், சிலர் போல் ஈட்டப்பட்டதோ - சிலர் தேடுதல் போலத் தேடப்பட்டதோ (அன்று) ; அறத்து ஆறு ஈட்டும் நம்பொருள் படுமோ என்னு - அறநெறியால் ஈட்டிய நமது பொருள் அழியுமோ என்றும் கூறி(ப்பின்பு).

நட்பிடை வஞ்சஞ் செய்தல் - நண்பர் பொருளைக் கவர்ந்து கொள்ளுதல். ஊன், உயிருக்கு ஆகுபெயர். மாறாட்டம் - தடுமாற்றம் ; மயக்கம். நம்பி வைத் தார் பொருளைக் கவர்ந்த ஞான்று அவர் தடுமாற்றமடைதல் இயற்கை. ஊண் மாறாட்டத்துட்பட என்னும் பாடத்திற்கு நஞ்சு முதலிய கலந்த உணவால் மயங்கச் செய்து என்பது பொருள். இம்மி - மத்தங்காய்ப் புல்லரிசி ; ஓர் சிற்றெண்ணு மாம் ;

"இம்மியரிசித் துணையானும்"

என்பது நாலடி ;

"இம்மியன நுண்பொருள்க ளீட்டி"

என்னும் சிந்தாமணிச் செய்யுளின் உரையும் நோக்குக. தீநெறியானும் அறமின்றி யும் அங்ஙனம் ஈட்டப்பட்டதாயின் அழிதல் கூடும் என்றவாறாயிற்று. (௨௭)

(பா - ம்.) * ஊண் மாறாட்டத்.

மங்கல மாட மோங்கு மதுரைநா யகனை நோக்கிச்
செங்கரஞ் சிரமேற் கூப்பி மாணிக்கந் தேற்றி விற்கும்
எங்குல வணிக ரேறே யெம்மனோர் வழக்கை யிந்தப்
புங்கவ ரிடனாத் தீர்த்துத் தருகெனப் புலம்பி யார்த்தார்.

(இ - ள்.) மங்கல மாடம் ஓங்கும் மதுரை நாயகனை நோக்கி - மங்கலம் நிறைந்த மாடங்கள் ஓங்கிய மதுரை நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளை நோக்கி, செங்கரம் சிரம்மேல் கூப்பி - சிவந்த திருக்கரங்களைத் திருமுடிமேற் குவித்து, மாணிக்கம் தேற்றிவிற்கும் எம்குல வணிகர் ஏறே - மாணிக்கங்களின் இலக்கணங்களைத் தெளிவித்து விற்றருளிய எமது வணிகர்குலச் சிங்கமே, எம்மனோர்வழக்கை - எங்கள் வழக்கை, இந்தப் புங்கவர் இடனாத் தீர்த்துத்தருக எனப் புலம்பி ஆர்த்தார் - இந்த அற மன்றத்தவர் வாயிலாகத் தீர்த்து எமது பொருளைத் தருக என்று புலம்பி முறையிட்டார்.

நோக்கி - எழுந்தருளி யிருக்கும் திசையை நோக்கி. தேவரீர் எம்வழக்குத் தீர்த்து அருள் புரிதற்கு உரிமையுடையீர் என்பார் 'எங்குல வணிகரேறே' என்றார். புங்கவர்-உயர்ந்தோர். இடனா, வாயிலாக. தருகென, அகரம் தொகுத்தல். (௨௮)

ஆவலித் தழுத கள்வர் வஞ்சரை வெகுண்டு நோக்கிக்
காவலன் செங்கோ னுண்ணூல் கட்டிய தருமத் தட்டில்
நாவெனுந் துலைநா விட்டெம் வழக்கையு நமராய் வந்த
மேவலர் வழக்குந் தூக்கித் தெரிகென விதந்து சொன்னார்.

(இ - ள்.) ஆவலித்து அழுத கள்வர் - இங்ஙனம் அவலங்கொட்டி அழுத பொய் வேடமுடைய இறைவர், வஞ்சரை வெகுண்டு நோக்கி - கொடியராகிய ஞாதிகளைச் சினந்து பார்த்து(ப்பின்), காவலன் செங்கோல் நுண்நூல் கட்டிய தருமத் தட்டில் - புரவலனது செங்கோலாகிய நுண்ணிய நூலினால் யாத்த அறமாகிய தட்டின்கண், நா எனும் துலைநா இட்டு - உங்கள் நாவாகிய துலைநாவை இட்டு, எம் வழக்கையும் - எமது வழக்கையும், நமராய்வந்த மேவலர் வழக்கும் - எமது பங்காளிகளாய் வந்த இப்பகைவர்களின் வழக்கையும், தூக்கித் தெரிக என - தூக்கி அறிவீர் என்று, விதந்து சொன்னார் - (நூலோரை நோக்கித்) தெளிவுபடக் கூறியருளினார்.

ஆவலித்தல் - வாய் புடைத் தார்த்தல். அரசன் செங்கோலுக்கும் அறத்திற்கும் பழுதுண்டாகாமல் நடுவு நிலையுடன் ஆராய்ந்து கூறுக என்பார், இங்ஙனம் உருவகப்படுத்திக் கூறினார் ;

"சமன்செய்து சீர்தூக்குங் கோல்போ லமைந்தொருபாற்
கோடாமை சான்றோர்க் கணி"

என்னும் குறள் இங்கே சிந்திக்கற்பாலது. தெரிகென, தொகுத்தல். விதத்தல்- வெளிப்படுத்தல். (௨௯)

நரைமுது புலியன் னான்சொற் கேட்டலு நடுங்கிச் சான்றோர்
இருவர்சொல் வழக்கு மேற்கொண் டநுவதித் திரண்டு நோக்கித்
தெரிவழி யிழுக்கு ஞாதி வழக்கெனச் செப்பக் கேட்டு
வெருவினர் தாயத் தார்கள் வலியரின் வேறு சொல்வார்.

(இ - ள்.) **நரைமுதுபுலி அன்னான் சொல் கேட்டலும்** - நரைத்த முதியபுலியை யொத்த வணிகனது சொல்லைக் கேட்டவளவில், **சான்றோர் நடுங்கி** - அறத்தவிசில் இருக்கும் பெரியோர் நடுங்கி, **இருவர் சொல்வழக்கும் மேற் கொண்டு** - இருதிறத்தார் கூறுகின்ற வழக்கினையும் ஏற்றுக் கொண்டு, **அநுவதித்து இரண்டும் நோக்கித் தெரிவழி** - அநுவாதஞ் செய்து இரண்டு வழக்கினையுஞ் சீர் தூக்கி உண்மை தெரிந்த விடத்து, **ஞாதிவழக்கு இழுக்கு எனச் செப்ப** - தாயத்தாரின் வழக்கு இழுக்குடையதெனக் கூற, **தாயத்தார்கள் கேட்டு வெருவினர்** - ஞாதிகள் அதனைக் கேட்டு அஞ்சி, **வலியரின் வேறு சொல்வார்** - அஞ்சாத வலியுடையார் போல வேறு சொல்வாராயினர்.

முதுமையும் ஆண்மையும் உடைமையால் 'நரை முது புலியன்னான்' என்றார். தாம் வழுவின்றி யுரைக்க வேண்டு மென்னும் அச்சத்தால் நடுங்கினர் என்க. அநுவதித்தல் - முற்கூறியதனைப் பின்னும் எடுத்துரைத்தல். நோக்கித் தெரிதல் - தடைவிடைகளாற் கேட்டவற்றைச் சீர் தூக்கி ஊழான் உள்ளவா றுணர்தல். அகத்தே வெருவினராயும் புறத்தே வெருவிலர் போலச் சொல்வார் என்க. வெருவினர், முற்றெச்சம். (௩௰)

தவலருஞ் சிறப்பி னான்ற தனபதி வணிக ரல்லர்
இவரென வவையங் கேட்ப விருகையும் புடைத்து நக்குக்
கவளமா னுரித்துப் போர்த்த கண்ணுதல் வணிகர் கோமான்
அவரவர் குடிப்பேர் பட்டங் காணிமற் றனைத்துங் கூறும்.

(இ - ள்.) **இவர் தவல் அருஞ்சிறப்பின் ஆன்ற தனபதி வணிகர் அல்லர் என** - இவர் கெடுதலில்லாத சிறப்பினால் நிறைந்த தனபதி வணிகர் அல்லரென்று கூற, **அவையம் கேட்க** - அவையிலுள்ளார் கேட்குமாறு, **இருகையும் புடைத்து நக்கு** - இரண்டு கைகளையும் ஒன்றோடொன்று தாக்கிச் சிரித்து, **கவள மான் உரித்துப் போர்த்த கண்ணுதல் வணிகர் கோமான்** - கவள மாகிய உணவினை யுடைய யானையை உரித்துத் தோலைப்போர்த்த சோமசுந்தரக்கடவுளாகிய வணிகர் தலைவன், **அவரவர் குடிப்பேர் பட்டம் காணி மற்று அனைத்தும் கூறும்** - அவரவரின் குடிப்பெயரும் பட்டமும் காணியும் பிற அனைத்துங் கூறி.

இவர் அல்லரென்று ஞாதியர் கூற என்க. அவை, ஆகு பெயர்; அம், அசை. இவர் இங்ஙனம் முழுப்பொய் கூறியவா றென்னென்று கைகொட்டி நக்கார். அவரவர் - ஞாதியர் எல்லாருடைய. குடிப்பேர் - கோத்திரப்பெயர். பட்டம் - சிறப்புப் பெயர். கூறும் என்பதனை எச்சமாக்குக. (௩௧

தந்தைதாய் மாமன் மாமி தாயத்தா ரவரை * யீன்றோர்
மைந்தர்க ளுடன்பி றந்தார் மனைவியர் கிளைஞர் மற்றும்
அந்தமில் குணங்கள் செய்கை யாதிய வடையா ளங்கள்
முந்தையின் வழுவா வண்ண முறையினன் மொழிந்தான் முன்னோன்.

(இ - ள்.) தந்தைதாய் மாமன் மாமி - அவரவருடைய தந்தையும் தாயும் மாமனும் மாமியும், தாயத்தார் - ஞாதிகளும், அவரை ஈன்றோர் - அவர்களைப் பெற்றோரும், மைந்தர்கள் உடன் பிறந்தார் மனைவியர் கிளைஞர் - புதல்வர்களும் உடன் பிறந்தாரும் மனைவியரும் சுற்றத்தாருமாகிய இவர்களையும், மற்றும் அந்தம் இல் குணங்கள் செய்கை ஆதிய அடையாளங்கள் - மற்றும் அவர்களின் அளவிறந்த குணங்களும் செய்தொழிலும் முதலிய அடையாளங்களையும், முந்தையின் வழுவாவண்ணம் முறையினால் முன்னோன் மொழிந்தான் - முன்னுள்ளபடியே சிறிதுந் தவறாத வண்ணம் முறைப்படி முதல்வனாகிய வணிகன் மொழிந்தனன்.

தந்தை முதல் கிளைஞர் ஈறாய அனைவரையும், அவர்கள் குணம் செயல் முதலிய அடையாளங்களையும் கூறினன் என்க. (௩௨)

அனையது கேட்ட வான்றோ ரனைவரு நோக்கி யந்தத்
தனபதி வணிகர் தாமே யிவரெனச் சாற்ற லோடும்
மனவலித் தாயத் தார்தம் வழக்கிழுக் கடைந்த தீது
நனைவழி வேம்பன் றேரிற் றண்டிக்கு நம்மை யென்னா.

(இ - ள்.) அனையது கேட்ட ஆன்றோர் அனைவரும் நோக்கி-அதனைக்கேட்ட பெரியோரனைவரும் (ஞாதிகளைப்) பார்த்து, இவர் அந்தத்தனபதி வணிகரே எனச் சாற்றலோடும் - இவர் அந்தத் தனபதி வணிகரே யாவர் என்று கூறியவளவில், மனவலித் தாயத்தார்தம் வழக்கு இழுக்கு அடைந்தது - மன வன்மையுடைய ஞாதியரின் வழக்குத் தோல்வியுற்றது; ஈது - இதனை, நனைவழி வேம்பன் தேரில் - தேன் வழியும் வேப்பமலர் மாலையையுடைய பாண்டியன் அறிந்தானாயின், நம்மைத் தண்டிக்கும் என்னா - நம்மைத் தண்டிப்பான் என்று கருதி.

தாம், அசை; ஏகாரம் தேற்றம். (௩௩)

இல்லினுக் கேகி மீள்வன் யானென்றுங் குளத்திற் கேகி
ஒல்லையில் வருவே னென்று மொவ்வொரு வார்த்தை யிட்டு
வல்லெழு வனைய தோளா ரனைவரும் வன்கா றள்ளச்
செல்லெழு முகில் போற் கூட்டஞ் சிதைந்தன ரொளித்துப் போனார்

(இ - ள்.) யான் இல்லினுக்கு ஏகி மீள்வன் என்றும் - யான் வீட்டிற்குச் சென்று வருவேன் என்றும், குளத்திற்கு ஏகி ஒல்லையில் வருவேன் என்றும் - பொய்கைக்குப் போய் விரைவில் வருவே னென்றும், ஒவ்வொரு வார்த்தை இட்டு -

(பா - ம்.) * தாயத்தா ரிவரை.

ஒவ்வொரு புகலைக் கூறிவிட்டு, வல் எழு அனைய தோளார் அனைவரும் - வலி தூணை யொத்த தோளினை யுடைய ஞாதிகளனைவரும், வன்கால் தள்ள - வலியகா றுத் தள்ளுதலால், எழுசெல் முகில்போல் - எழுந்து சிதறியோடும் முகிலைப் போ கூட்டம் சிதைந்தனர் ஒளித்துப் போனர் - கூட்டங்கலைந்து ஒளித்துப் போயினர்

ஒவ்வொருவரும் தனித்தனி ஒவ்வொரு புகல் கூறிச் சென்றொளித்த ரென்க. எழு என்னும் முதனிலை எழுந்து என வினை யெச்சப் பொருட்டாய எழுந்து செல் முகில் என இயைக்க. சிதைந்தனர், முற்றெச்சம். (௩

அனையவர் போக நின்ற வறனவின் மன்றத் துள்ளோர்
தனபதி வணிகர் தந்த தனமெலாந் தத்த மைந்தற்
கெனமனை யெழுதி வாங்கி யீந்தன ரீந்த வெல்லை
மனமொழி கடந்த நாய்கர் மறைந்துதங் கோயில் புக்கார்.

(இ - ள்.) அனையவர் போக - அங்ஙனம் அந்த ஞாதிகள் மறைந் தொழ நின்ற அறன் நவில் மன்றத்து உள்ளோர் - அங்கிருந்த அறங்கூறும் அவையிரு ளார், தனபதி வணிகர் தந்த தனம் எலாம் - தனபதி வணிகர் முன் கொடு பொருள் அனைத்தும், தத்த மைந்தற்கு என-தத்துப் புதல்வனுக்கே உரிய வெ மனை எழுதிவாங்கி ஈந்தனர் - அவராற் சாதனம் எழுதி வாங்கிக் கொடுத்தனர்; எல்லை - அங்ஙனங் கொடுத்தவளவில், மனம் மொழிகடந்த நாய்கர் மறைந்து - ளத்தையும் உரையையும் கடந்த வணிகர் தமது திருவுருக்கரந்து, தம் கோயில் கார் - தமது திருக்கோயிலுட் புகுந்தருளினர்.

அறனவில் மன்றம் - அறங்கூறவையம். மனை - சாதனம் என்னும் பொரு முன் ஞாதியர் கைப்பற்றி யிருந்தமையால் மீட்டு எழுத வேண்டிற்று. (

இம்மெனப் பலருங் காண மறைந்தவ ரிருந்தண் கூடற்
செம்மலென் றறிந்து நாய்கச் சிறுவனுக் குவகை தூங்க
விம்மித மடைந்து வேந்தன் வரிசைகள் வெறுப்ப * நல்கிக்
கைம்மறி வணிகர் கோயில் புதுக்கினான் கனகங் கொண்டு.

(இ - ள்.) இம்மெனப் பலரும் காண மறைந்தவர் - ஒல்லையில் அனை காண மறைந்தருளியவர், இருந்தண் கூடல் செம்மல் என்று வேந்தன் அறி பெரிய தண்ணிய கூடல் நாயகனாகிய சோமசுந்தரக்கடவுள் என்று அரசன் அ விம்மிதம் அடைந்து - வியப்புற்று, நாய்கச்சிறுவனுக்கு - வணிக இளைஞ உவகை தூங்க - மகிழ்ச்சிமிக, வரிசைகள் வெறுப்பநல்கி - வரிசைகளை மிகக் த்து, கைம்மறி வணிகர் கோயில் - கையில் மானையுடைய வணிகராய் வந்த வன் திருக்கோயிலை, கனகம் கொண்டு புதுக்கினான் - பொன்னினாலே பு தான்.

---

(பா - ம்.) * வரிசையுள் வெறுப்ப.

இம்மென, விரைவுக்குறிப்பு. அறத்தவிசோரால் கேட்டறிந்தென்க. வெறுத்
ல் செறிதலாகலின் வெறுப்ப என்பதற்கு மிக எனப்பொருள் கொள்க. உள்
யறுப்ப என்னும் பாடத்திற்கு மனம் வெறுக்க என்றுரைத்துக் கொள்க. வேந்தன்
நிந்து அடைந்து நல்கிப் புதுக்கினன் என வினை முடிவு செய்க. (௫௬)

[கலி நிலைத்துறை]

பூத நாயகன் பூரண சுந்தரப் புத்தேள்
பாத சேகரன் வாருண பாண்டியன் புயத்தில்
ஓத நீருல கின்பொறை சுமக்கவைத் தும்பர்
நாதர் சேவடித் தாமரை நகைநிழ லடைந்தான்.

(இ - ள்.) பூதநாயகன்-பூதங்களுக்குத் தலைவனும், பூரண சுந்தரப் புத்தேள்-
நம் நிறைந்துளோனுமாகிய சோமசுந்தரக் கடவுளுடைய, பாதசேகரன் - திரு
யை முடியிற் கொண்ட சுந்தரேச பாதசேகரபாண்டியன், வரகுணபாண்டியன்
தில் - வரகுணபாண்டியன் தோளின்கண், ஓத நீர் உலகின் பொறை சுமக்க
ந்து - கடல் சூழ்ந்த புவியின் சுமையைத் தாங்கவைத்து, உம்பர் நாதர் சேவடித்
ரை நகை நிழல் அடைந்தான் - தேவதேவராகிய சிவபெருமான் திருவடித்தாம
ின் ஒள்ளிய நிழலிற் கலந்தனன்.

பூதம் - ஆன்மா; ஐம்பூதம் என்றும், சிவகணம் என்றும் கொள்ளலுமாம்.
தில் பொறை வைத்து என்க; சுமக்க, இடைப்பிற வரல். (௫௭)

ஆகச் செய்யுள் - ௧௩௬௨

நாற்பதாவது

# வரகுணனுக்குச் சிவலோகங் காட்டியபடலம்

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

பண்கொண்ட வேதமுத லிடையீறு நாடரிய
பரன்மாம னாகி * யொரு வணிகன்
எண்கொண்ட காணிபொருள் கவர்ஞாதி மாதுலரை
யெதிரேறி வென்றபடி யிதுவாந்
தண்கொண்ட நேமிவர குணதேவ னெய்துபழி
தன்னைத் துடைத்தனைய மனவன்
கண்கொண்டு காணவுயர் சிவலோக மதுரைதனில்
வருவித்த காதையினி மொழிவாம்.

(இ - ள்.) பண் கொண்ட வேதம் - இசையினைக் கொண்ட மறையினாலும், முதல் இடை ஈறு நாடரிய பரன் - முதலும் நடுவும் ஈறும் நாடுதற்கரிய இறைவன், மாமனாகி - மாமனாக வந்து, ஒருவணிகன் - ஒருவணிகச் சிறுவனது, எண் கொண்ட காணி பொருள் கவர் ஞாதி மாதுலரை - மதிப்பினையுடைய விளைநிலங்களையும் பிற பொருளையும் வௌவிய ஞாதிகளாகிய மாமன்மாரை, எதிர் ஏறி வென்றபடி இது ஆம் - எதிர்த்து மன்றில் ஏறி வென்றருளிய திருவிளையாடல் இதுவாகும், தண் கொண்ட நேமி வரகுண தேவன் - தண்ணிய ஆக்கினை சக்கரத்தை யுடைய வரகுண தேவன், எய்துபழி தன்னைத் துடைத்து-அடைந்த கொலைப்பாவத்தினைப் போக்கி, அனைய மன்னவன் - அந்த மன்னன், கண் கொண்டு காண - கண்களாற் றரிசிக்க, உயர் சிவலோகம் - உயர்ந்த சிவலோகத்தை, மதுரைதனில் வருவித்த காதை-மதுரையில் வருவித்துக்காட்டிய திருவிளையாடலை, இனிமொழிவாம் - இனிக்கூறுவாம்.

வேதத்தின் முதல் இடை ஈறுகளால் நாடரிய என்றுரைப்பாரு முளர். தன பதிக்கு ஞாதிகளும், அவன் தங்கை மைந்தனுக்கு மாமன்மாரும் என்பார் 'ஞாதிமாதுலர்' என்றார். தேவர் என்பது சோழ, பாண்டிய வேந்தர்களுக்குச் சிறப்புப் பெயராக வழங்கியுளது. இம்மன்னனைப் 'பெரிய அன்பின் வரகுண தேவர்' என்பர் பட்டினத்தடிகளும். மன்னவன் என்பதில் னகரம் தொக்குநின்றது. கண் கொண்டு என விதந்தோதினார், காண்டலருமை நோக்கி. (க)

(பா - ம்.) * பரமாமனாகி.

இயமான னிந்திரவி யெரிவா னிலஞ்சலில
மெறிகா லெனும்பகுதி யிருநான்
மயமான சுந்தரனை மனம்வாய்மெய் யன்பினிறை
வழிபா டடைந்தவர குணனாய்ச்
சயவேளை வென்றவடி வினனீறில் வென்றிபெறு
சதவேள்வி யிந்திரனை நிகர்வோன்
இயன்மேனி கொண்டவொளி யினிலேழ் பசும்புரவி
யினன்றேசு * வென்றவர குணனே.

(இ - ள்.) இயமானன் இந்து இரவி - ஆன்மாவும் திங்களும் ஞாயிறும், எரி வான் நிலம் சலிலம் எறி கால் எனும் - நெருப்பும் வானும் நிலமும் நீரும் வீசுகின்ற காற்றுமாகிய, இருநால் பகுதி மயமான சுந்தரனை - எண் பகுதியின் மயமாகிய சோமசுந்தரக்கடவுளை, மனம் வாய் மெய் அன்பில் நிறைவழிபாடு அடைந்த வரகுணனாய் - மனம் மொழி மெய்யென்னும் மூன்று கரணங்களினாலும் மெய்யன்பு நிறைந்த வழிபாட்டினைப் பொருந்திய சிறந்த குணத்தை யுடையவனாய், இயல் மேனி கொண்ட ஒளியினில் - இலக்கண மமைந்த வடிவத்திலுள்ள ஒளியினால், ஏழ் பசும் புரவி இனன் தேசு வென்ற வரகுணன் - ஏழு பச்சைக்குதிரைகளை யுடைய சூரியன் ஒளியையும் வென்ற வரகுண பாண்டியன் என்பான், சயவேளை வென்ற வடிவினன் - (அழகினால்) வெற்றியையுடைய மதவேளையும் வென்ற வடிவத்தை யுடையவன்; ஈறு இல் வென்றி பெறு சதவேள்வி இந்திரனை நிகர்வோன் - (வேள்வி யியற்றுதலால்) அழிவில்லாத வெற்றி பொருந்திய நூறு வேள்வியினை யுடைய இந்திரனை யொப்போன்.

இயமானன் - எஜமானன் என்பதன் றிரிபு. எஜமானன் - வேள்வி யியற்றிய ஆன்மா. இருநாற் பகுதி மயமான எனமாறுக. அட்ட மூர்த்தத்தை

"இருநிலனாய்த் தீயாகி நீரு மாகி இயமான னாயெறியுங் காற்று மாகி
அருநிலைய திங்களாய் ஞாயி றாகி ஆகாச மாயட்ட மூர்த்தி யாகி"

என்று தாண்டக வேந்தர் அருளிச் செய்தலுங்காண்க. வரகுணன் - மேலாகிய குணமுடையவன். வழிபாடடைந்த வரகுணனாய் என்றமையால் அவன் பெயர் அக்காரணத்தா லெய்திய தென்பது குறிப்பித்தவா றாயிற்று. வேள்வியால் இந்திரனை நிகர்வோன் என ஏது வருவிக்க. இனன் - சூரியன். (௨)

மறையாதி கலைபலவு மகமாதி பலவினையும்
வழுவாது நிறுவுதலின் மலர்மேல்
இறையாகி மலர்வனிதை பிரிவான †திருமகளி
ரிகபோகம் விளையமுறை செயலாற்

(பா - ம்.) *இனதேசு. † பிறிவான

கறையாழி வளைகளணி கரனாகி யிகல்செய்பொறி
கரணாதி பகைகளையு நெறியால்
அறைவாய்மை யுரையின்முழு துணர்வாலெவ் வுயிருநிறை
யரனாகி யுலகுமுறை செயுநாள்.

(இ - ள்.) மறை ஆதிகலை பலவும்-வேத முதலிய பலநூல்களையும், மகம் ஆதி பலவினையும் - வேள்வி முதலிய பல கருமங்களையும், வழுவாது நிறுவுதலின் - தவறாது நிலை பெறச் செய்தலால், மலர்மேல் இறை ஆகி - தாமரை மலரில் இருக்கும் பிரமனாகியும், மலர்வனிதை பிரிவான திருமகளிர் - பூமகளின் கூறாகிய அட்டலக்குமிகளால், இகபோகம் விளைய - இம்மையின்பம் விளைய, முறை செயலால் - செங்கோலோச்சுவதால், கறை ஆழிவளைகள் அணிகரன் ஆகி - குருதிக்கறை தோய்ந்த திகிரிப்படையையும் சங்கினையும் ஏந்திய கரத்தை யுடையவனாகிய திருமாலாகியும், இகல் செய் பொறிகரண ஆதி பகை களையும் நெறியால் - மாறுபாட்டினைச் செய்யும் ஐம்பொறியும் அந்தக்கரணமு முதலிய பகையினைக்களையும் ஒழுக்கத்தாலும், அறை வாய்மை உரையின்-கூறுகின்ற மெய்யுரையாலும், முழுது உணர்வால் - முற்றுமுணர்தலினாலும், எவ்வுயிரும் நிறை அரன் ஆகி - எல்லா வுயிர்களிலும் நிறைந்த சிவபெருமானாகியும், உலகுமுறை செயும் நாள் - உலகினை ஓம்பிவரு நாளில்.

வழுவாது பயின்றும் செய்தும் நிறுவுதலின் என்க. இலக்குமி வேறு வேறு உருவெடுத்து வந்தாலொத்த மகளிர் பலரால் இன்பம் விளைய என்றுமாம். வாய்மையுரை - அரசற்கு மெய்ம்மை கூறுதலும் அரனுக்கு வேத சிவாகமங்களை அருளிச் செய்தலும் ஆம். முழுதுணர்வு - அரசற்கு எல்லாக் கலைகளையும் உணர்தலும் அரனுக்கு இயல்பாகவே முழுது முணர்தலும் எனக்கொள்க. வேத முதலிய நூல்கள் கூறும் பொருளால் முற்று முணரு முணர்ச்சியாலும் என ஒன்றாக்கி யுரைப்பாரு முளர். இறைவன் பொறிகரணாதி பகை களைதலை,

"பொறிவாயி லைந்தவித்தான்"

என்பதனாலுணர்க. இஃது ஏது உருவகவணி. (௬)

வேட்டஞ்செய் காதலொரு நாட்டங்க வேகிவன
மேட்டெங்கு மாதடவி யெரியா
நாட்டஞ்செய் காயுழுவை நீட்டுங்கை யானைமுக
நாட்டும்ப லேனமிவை முதலா
ஓட்டஞ்செய் தேரிரவி கோட்டின்க ணேறியிரு
ளூட்டந்தி மாலைவரு மளவாக்
கோட்டஞ்செய் வார்சிலையின் மாட்டம்பி னூறியுயிர்
கூட்டுண்டு மாநகரில் வருவான்.

(இ - ள்.) வேட்டம் செய்காதல் ஒருநாள் தங்க - வேட்டையாடும் விருப்பம் ஒரு நாள் உள்ளத்தில் வந்து பொருந்த, ஏகி - சென்று, வனம் மேட்டு எங்கும் - காடும் மலையுமாகிய எவ்விடத்தும், மாதடவி - விலங்குகளைத் துருவி, எரி ஆம் நாட்

டம் செய் காய் உழுவை - நெருப்புப்பரக்கும் கண்களையுடைய சினத்தையுடைய புலிகளும், கைநீட்டும் யானை - துதிக்கையை நீட்டும் யானைகளும், முகம் நாட்டும் பல் ஏனம் இவை முதலா - முகத்தை நிலத்தில் நாட்டி உழுகின்ற பற்களையுடைய பன்றிகளுமாகிய இவை முதலாகப் பல விலங்குகளை, ஓட்டம் செய் தேர் இரவி-விரைந்து செல்லுந்தேரினை யுடைய சூரியன், கோட்டின் கண் ஏறி-அத்தகிரியின் மீது ஏறுதலால், இருள் ஊட்டும் அந்திமாலை வரும் அளவா - இருளைப்புகுவிக்கும் அந்திப் போது வருங்காறும், கோட்டம் செய் வார்சிலையின் மாட்டு அம்பின் நூறி - வளைந்த நீண்ட வில்லிற் பூட்டிய கணைகளாற் கொன்று, உயிர் கூட்டுண்டு மாநகரில் வருவான்-அவற்றின் உயிர்களைக் கொள்ளை கொண்டு பெரிய நகரை நோக்கி வருவானாயினன்.

மேடெங்கும் என்பது சந்தம் நோக்கி விரிந்து நின்றது. முகத்தில் நாட்டப் பட்ட பல்லையுடைய ஏனம் என்றுமாம். உம்பல் ஏனம் எனப்பிரித்து ஆண்பன்றி என்றுரைப்பாருமுளர். கோடு - மலை. (௪)

காலிற் கடும்புரவி மேலிற் கடிந்துவரு காலக் கடந்தனிலோர் மறையோன்
மாலுற் றயர்ந்துமுகம்வேர்வைக்குறுந்திவலைவாரக்கிடந்துவிழிதுயில்வோன்
மேலக் கடும்புரவி கால்வைப்ப வந்தணனும் வீவுற் றவிந்தனன தறியான்
கோலிற் செலும்பரியின் மீனத்த னுந்தனது கோயிற் புகுந்தனன வளவே.

(இ - ள்.) காலில் கடும்புரவி மேலில் கடிந்துவருகால் - காற்றைப்போலும் கடிய செலவினையுடைய குதிரையின் மேல் விரைந்து வரும்பொழுது, அக்கடந்தனில் - அக்காட்டின்கண், மால் உற்று அயர்ந்து - துயில் மயக்கங்கொண்டு சோர்வெய்தி, வேர்வைக் குறுந் திவலை முகம் வாரக் கிடந்து துயில்வோன் - வேர்வையாகிய குறுந்துளி முகத்தினின்றும் ஒழுகக்கிடந்து உறங்குவோனாகிய, ஒரு மறையோன்மேல் - ஒரு அந்தணன் மேல், அக்கடும்புரவி கால்வைப்ப - அந்தக் கடுமையையுடைய குதிரை காலை வைக்க, அந்தணனும் வீவுற்று அவிந்தனன் - அம்மறையோனும் இறந்தொழிந்தான்; அது அறியான் - அதனை அறியாமல், கோலில் செலும்பரியின் - அம்புபோலச் செல்லும் குதிரையோடு, மீனத்தனும் தனது கோயில் புகுந்தனன் - மீனக்கொடியை யுடைய பாண்டியனும் தன் அரண்மனையை யடைந்தனன்; அவ்வளவே - அப்பொழுதே.

காலின், கோலின் என்பவற்றின் இன்னுருபு ஒப்புப் பொருட்டு. துயில்வோனாகிய மறையோன் என்க. வீவுற்று அவிந்தனன், ஒருபொருளிருசொல். அதறியான், அவளவே என்பன விகாரம். (௫)

[வேறு]

கனவட்டத் தடியிடறப் பொறிவிட்டுப் புலனவியக்
கரணத்துட் பொதியுயிர்விட் டவனைகந்
தனையொக்கற் பனவரெடுத் தனர்கிட்டிக் குரிசில்கடைத்
தலையிட்டத் திறமொழியத் தமிழ்மாறன்

இனைவுற்றுப் பனவர்கையிற் கனகக்குப் பைகணிறைவித்
தெமதிக்குற் றவனையெடுத் தெரிமாலை
புனைவித்தக் கடன்முடிவித் தனன்மற்றப் பழிபடரிற்
புதையப்பற் றியதிடைவிட் டகலாதே.

(இ - ள்.) கனவட்டத்து அடி இடற-கனவட்டம் என்னுங் குதிரையின் காலிடறுதலால், பொறிவிட்டுப்புலன் அவிய - பொறிகளை விடுத்துப் புலன்கள் ஒழிய, கரணத்துள் பொதி உயிர் விட்டவன் ஆகம் தனை - கரணங்களுட் பொதிந்த உயிரை விட்டவனது உடலை, ஒக்கல் பனவர் எடுத்தனர் கிட்டி - கிளைஞராகிய அந்தணர்கள் எடுத்துச் சென்று, குரிசில் கடைத்தலையில் இட்டு அத்திறம் மொழிய - பாண்டியனது கடைவாயிலிற் போட்டு அச்செய்தியைக்கூற, தமிழ்மாறன் - தமிழை வளர்க்கும் பாண்டியனாகிய அவ்வரகுணன், இனைவுற்று - வருந்தி, பனவர் கையில் கனகக் குப்பைகள் நிறைவித்து - அவ்வேதியர் கையில் பொற்குவைகளை நிரப்பி, எமதிக்கு உற்றவனை எடுத்து எரிமாலை புனைவித்து - எமபுரஞ் சென்றவன் உடலை எடுத்துத் தகனஞ் செய்வித்து, அக்கடன் முடிவித்தனன் - அந்த ஈமக்கடன்களை முற்றுவித்தான்; அப்பழி - அக்கொலைப் பாவமானது, படரில் புதைய - அவன் துன்பத்தில் அழுந்துமாறு, இடைவிட்டு அகலாது பற்றியது - சிறிதும் நீங்காது தொடர்ந்தது.

கனவட்டம் - பாண்டியன் குதிரையின் பெயர். புலன் - பொறியுணர்வு. பொறிவிட்டு என்பதற்குப் பொறிகள் நிலை கெட்டு என்றுரைத்தலுமாம். அரசன் அமைச்சர் வாயிலாகத் தொழில் நடாத்துதல் போல ஆன்மாவானது கரணங்களினுள்ளே பொருந்தி அவற்றின் வாயிலாகத் தனது தொழிலை நடாத்துதலின் 'கரணத்துட் பொதியுயிர்' என்றார். எடுத்தனர், முற்றெச்சம். எரிமாலை புனைவித்து - அக்கினிச் சுவாலையாகிய மாலை புனைவித்து; தீச்சுடர் மெய்ம் முழுதும் போர்க்கும்படி தகனஞ்செய்வித்து என்றவாறு. மாலை என்பதற்கு முறைப்படி என்றுரைப்பாருமுளர். மற்று, அசை. (௬)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

பற்றிய பழிக்குத் தீர்வு பழமறைக் கிழவர் சொன்ன
பெற்றியி னைவே றுண்டி நதிக்கரைப் பெருநூற் கேள்வி
முற்றிய மறையோர்க் கீந்து மூவராந் தாரு வேந்தைச்
சுற்றியுந் தூர்வை கொய்து சுரபிகள் சுவைக்க வீந்தும்.

(இ - ள்.) பற்றிய பழிக்குத்தீர்வு - அங்ஙனந் தொடர்ந்த கொலைப்பாவத்திற்குக் கழுவாயாக, பழமறைக்கிழவர் சொன்ன பெற்றியின் - தொன்று தொட்டுள்ள வேதத்திற்குரிய அந்தணர் கூறியவண்ணமே, ஐவேறு உண்டி - ஐவகைப்பட்ட உணவினை, நதிக்கரை-ஆற்றங்கரையின் கண், பெருநூல் கேள்வி முற்றிய மறையோர்க்கு ஈந்தும் - வேதநூற் கேள்வி மிக்க அந்தணர்க்கு அளித்தும், மூவர் ஆம் தாருவேந்தைச் சுற்றியும் - மும்மூர்த்திகளின் வடிவமாகிய அரசமரத்தை வலம் வந்தும், தூர்வை கொய்து - அறுகம் புல்லைக் கொய்து, சுரபிகள் சுவைக்க ஈந்தும் - பசுக்கள் உண்ணக் கொடுத்தும்.

தீர்வு - கழுவாய் ; பிராயச்சித்தம். ஐவேறுண்டி - கறிப்பன, நக்குவன, பருகுவன, விழுங்குவன, மெல்லுவன. தாருவேந்து - அரசமரம். அரசமரத்தின் அடிப்பகுதி பிரமன்வடிவும், நடுப்பகுதி திருமால் வடிவும், இறுதிப்பகுதி உருத்திரன் வடிவும் உடையன என்பர். தூர்வை - அறுகு. பசுவுக்கு உணவளித்தல் சிறந்த அறமாதலை,

"யாவர்க்கு மாம்பசு வுக்கொரு வாயுறை"

என்னும் திருமந்திரத்தாலறிக. (எ)

அகமரு டணத்தா லோம மாற்றியு மானைந் தாவின்
நகைமணிக் கோடு தோய்ந்த * நளிர்புனல் குடித்துந் தான
வகைபல கொடுத்து நீங்கா வலியதா யிழுது பெய்த
புகையழ லெனமே லிட்டுப் புலப்பட வளர்ந்த தன்றே.

(இ - ள்.) அகமருடணத்தால் ஓமம் ஆற்றியும் - அகமருடண மந்திரத்தால் ஓமஞ் செய்தும், ஆன் ஐந்து - பஞ்சகவ்வியத்தையும், ஆவின் நகை மணிக்கோடு தோய்ந்த நளிர் புனல் குடித்தும் - பசுவின் விளக்கமாகிய அழகிய கொம்பிற் றோய்ந்த குளிர்ந்த நீரினையும் பருகியும், தானவகை பல கொடுத்தும் - பலவகையான தானங்களைச் செய்தும், நீங்காவலியதாய் - (அப்பழி) நீங்காதவலியினை யுடையதாய், இழுது பெய்த புகை அழல் என்ன மேலிட்டு - நெய் சொரிந்த புகையினை யுடைய நெருப்பைப்போல மேலோங்கி, புலப்பட வளர்ந்தது - கண்ணுக்குப் புலனாம்படி சூழ்ந்தது.

அகமருடணம் - பாவத்தைப் போக்கும் ஓர் வேதமந்திரம். பசுவின் பெருமையை,

"தங்கு மகில யோனிகட்கு மேலாம் பெருமைத் தகைமையன
பொங்கு புனித தீர்த்தங்க ளெல்லா மென்றும் பொருந்துவன
துங்க வமரர் திருமுனிவர் கணங்கள் சூழ்ந்து பிரியாத
அங்க மனைத்துந் தாமுடைய வல்ல வோநல் லானினங்கள்"

என்பது முதலிய திருத்தொண்டர் புராணச் செய்யுட்களாலும், சிவதருமோத்தரத்தாலும் உணர்க. ஆனின் கோட்டில் புண்ணிய தீர்த்தங்களெல்லாம் இருப்பனவாக நூற்கள் கூறுதலின் கோடு தோய்ந்த புனல் குடித்தனன் என்க. அன்று, ஏ அசை. (அ)

[கலி நிலைத்துறை]

எங்கும் பெருமூச் செறியுங்கை யெறியுங் குன்றின்
ஒங்குஞ் சிறுகு முடன்றூர்த்திடு முன்னும் பின்னும்
பாங்குந் தொடருஞ் சிரிக்கும்பகு வாயை மெல்லும்
நீங்குங் குறுகும் பழிதாவென நேர்ந்து பற்றும்.

(பா - ம்.) * தோய்த்த.

(இ - ள்.) எங்கும் - இரங்கும்; பெருமூச்சு எறியும் - பெருமூச்சுவிடும்; கை எறியும் - கையோடு கை தாக்கும்; குன்றின் ஓங்கும் - மலைபோல வளரும்; சிறுகும் - (அணுவாகத்) தேயும்; உடன்று ஆர்த்திடும் - வெகுண்டு ஆரவாரிக்கும்; முன்னும் பின்னும் பாங்கும் தொடரும் - முன்னிலும் பின்னிலும் இருபக்கங்களிலும் தொடரும்; சிரிக்கும் - நகைக்கும்; பகுவாயை மெல்லும் - பிளந்தவாயை மெல்லும்; நீங்கும் - (சிறிது) விலகும்; குறுகும் - (பின்) நெருங்கும்; பழிதா என நேர்ந்து பற்றும் - பழிதா என்று கூறி எதிர்த்து பிடிக்கும்.

அப்பழி உருக் கொண்டு வந்து இங்ஙனமெல்லாம் செய்யா நின்றன. பழிக்குப்பழிகொடு என்னும் பொருள் படப் 'பழிதா' என்று கூறுமென்க. (௯)

மாசுண்ட தெய்வ மணிபோற்பணி வாயிற் பட்ட
தேசுண்ட தீந்தண் மதிபோலொளி தேம்பி வண்டு
மூசுண்ட தான முகமாவுண்ட வெள்ளில் போலக்
காசுண்ட பூணு னறைபோய கருத்த ஞானன்.

(இ - ள்.) மாசு உண்ட தெய்வ மணிபோல் - மாசுபடிந்து (கழுவப்படாத) தெய்வத்தன்மை யுடைய மாணிக்கம் போலவும், பணிவாயில் பட்ட - இராகு வென்னும் பாம்பின் வாய்ப்பட்ட, தேசு உண்ட தீந்தண் மதிபோல் - ஒளியிழந்த இனிய தண்ணிய சந்திரன் போலவும், ஒளி தேம்பி - பொலிவு குன்றி, வண்டு மூசு உண்ட தானம் முகம்மா உண்ட - வண்டுகள் மொய்க்கும் மதநீர் ஒழுகும் முகத்தினையுடைய வேழத்தால் உண்ணப்பட்ட, வெள்ளில் போல - விளங்கனிபோல, காசு உண்ட பூணன் - மணிகள் இழைத்த அணிகளையுடைய வரகுணபாண்டியன், அறைபோய கருத்தன் ஆனான் - உள்ளீடில்லாத மனமுடையவனானான்.

தேசுண்ட என்பதற்கு ஒளி பொருந்திய என்றுரைத்து மதிக்கு இயற்கையடை ஆக்கலுமாம். விளவிற்கு வருவதோர் நோய் யானை என்னும் பெயருடையது; அப்பெயருக் கேற்பவே 'வண்டு மூசுண்டதான முகம்' என அடை கொடுக்கப்பட்டது; இந்நூலின், மாபாதகந் தீர்த்தபடலத்தில், "வெருவரு வேழமுண்ட வெள்ளில் போல் வறியனாகி" என்பதன் உரையை நோக்குக. அறை போதல் - அறிவின் திட்பமாகிய உள்ளீ டொழிதல். (௰)

மறையோர்கள் பின்னும் பழிமேலிடு வண்ண நோக்கி
இறையோ யிதுநான் முகன்சென்னி யிறுத்த கூடல்
அறவே தியனைத் தினமாயிரத் தெண்காற் சூழல்
உறவே யொழிக்கப் படு * மின்ன முரைப்பக் கேட்டி.

(இ - ள்.) பின்னும் பழிமேலிடும் வண்ணம் - மீண்டும் கொலைப்பாவம் ஓங்கி வளருந் தன்மையை, மறையோர்கள் நோக்கி - அந்தணர்கள் கண்டு, இறையோய் -

(பா - ம்.) * ஒழியப்படும்.

மன்னனே, இது - இந்தக் கொலைப்பாவம், நான்முகன் சென்னி இறுத்த - பிரமன் தலையைக் கிள்ளிய, கூடல் அறவேதியனை - மதுரையில் வீற்றிருக்கும் அறவுருவின னாகிய சோமசுந்தரக்கடவுளை, தினம் ஆயிரத்து எண்கால் சூழல் உற ஒழிக்கப்படும் - நாள்தோறும் ஆயிரத்தெட்டு முறை வலம் வருதலால் ஒழிக்கப்படும்; இன்னம் உரைப்பக் கேட்டி - இன்னுஞ் சொல்லக் கேட்பாயாக.

பிரமச்சாயை ஒழிதற்குப் பிரமன் சென்னியைக் கிள்ளிய பெருமானை வணங் குதலே ஏற்புடைத் தென்றார் என்க. (௧௧)

ஆனு விரத நெறியாலிரண் டைந்து வைகல்
வானு டனையம் முறையால் வலஞ் செய்து வந்தாய்
ஆனு லதற்கு வழிகாட்டுமென் றையர் கூறப்
போனு னரசன் புனிதன்றிருக் கோயில் புக்கான்.

(இ - ள்.) ஆனு விரத நெறியால் - நீங்காத நோன்பின் வழிநின்று, இரண்டு ஐந்துவைகல் - பத்து நாட்கள், வான் நாடனை - சிவலோக நாயகனாகிய சோமசுந்த ரக்கடவுளை, அம்முறையால் வலம் செய்து வந்தாய் ஆனால் - மேற் கூறிய எண்ணின் படி வலம் வருவாயாயின், அதற்கு வழிகாட்டும் என்று - அவன் அக்கொலைப்பாவம் நீங்கும் நெறியைக் காட்டியருளுமென்று, ஐயர்கூற - அவ்வந்தணர்கள் சொல்ல, அரசன் போனான் - வரகுண மன்னன் சென்று, புனிதன் திருக்கோயில் புக்கான் - இறைவனது திருக்கோயிலை யடைந்தான்.

போனான், முற்றெச்சம். (௧௨)

விழியா யிரத்தோன் பழிதீர்த்தனை வேதி யன்றன்
கழியாத மாபா தகந்தீர்த்தனை கௌவைக் கங்கைச்
சுழியா றலைக்குஞ் சடையாயெனைத் தொட்ட லைக்கும்
பழியா னதுந்தீர்த் தருளென்று பணிந்து வீழ்ந்தான்.

(இ - ள்.) கௌவைக் கங்கைச் சுழி ஆறு அலைக்கும் சடையாய் - ஒலியினை யுடைய கங்கையாகிய சுழித்தல் பொருந்திய ஆறு அலைக்கின்ற சடையையுடைய வனே, விழி ஆயிரத்தோன்பழி தீர்த்தனை - ஆயிரங்கண்களையுடைய இந்திரன் பழி யை நீக்கியருளினை; வேதியன்தன் கழியாத மாபாதகம் தீர்த்தனை - ஓர் மறையோ னுடைய (எவ்வாற்றானும்) நீங்காத மாபாதகத்தையும் நீக்கி யருளினை; எனைத்தொட்டு அலைக்கும் பழியானதும் தீர்த்தருள் என்று - (அதுபோல) என்னைப்பற்றி வருத்தும் பழியினையுந் தீர்த்தருளுவா யென்று கூறி, பணிந்து வீழ்ந்தான் - வீழ்ந்து வணங்கி னான்.

இந்திரனும் ஓர் வேதியனும் அறிந்து செய்த கொலையாலாய பழியைப் போ க்கிய பேரருளாளனாகிய நினக்கு அடியேன் அறியாமல் நேர்ந்த கொலையானாய பழி யைப் போக்குதல் முறைமையே என்பான் அவற்றை யெடுத்துரைத்தனன் என்க. கங்கைச் சடைய னென்றதும் பாவத்தைக்கழுவும் இயல்புடைய னென்பது குறிப் பிட்டபடி. பணிந்து வீழ்ந்தான் என்பதற்குக் கும்பிட்டு வீழ்ந்தான் எனலுமாம். (௧௩)

எண்ணும் படியம் முறையால்வளைந் தேத்த வையன்
விண்ணின் றியம்பு மரசேபரி மேத வேள்வி
நண்ணும் பயனே ரடிவைப்பினி னண்ண வெம்மைப்
பண்ணும் வலத்தான் மகிழ்ந்தேம்பழி யஞ்சன் மன்னோ.

(இ - ள்.) எண்ணும்படி-ஆயிரத்தெட்டு என்று எண்ணுமாறு, அம்முறையால் வளைந்து ஏத்த - அந்நெறியால் வலம் வந்து துதிக்க, ஐயன் - இறைவன், விண் நின்று இயம்பும் - வானின் கண் நின்று (அசரீரியாகக்) கூறியருளுவன்; அரசே - வேந்தனே, பரிமேத வேள்வி நண்ணும் பயன் - துரங்க வேள்வியினால் வரும் பயன், ஓர் அடிவைப்பினில் நண்ண - ஒரு அடி பெயர்த்து வைத்தலாலே பொருந்தும்படி, எம்மைப்பண்ணும் வலத்தால் மகிழ்ந்தேம்-எம்மைவலஞ் செய்தலாற் களிப்புற்றேம்; பழி அஞ்சல் - (இனிப்) பழிக்கு அஞ்சுதலொழிக.

வலஞ் செய்தற்கு ஓர் அடியெடுத்து வைத்தல் ஓர் அசுவமேதப் பயனை அளிக்கும் என அதன் மேன்மை கூறினார். மன்னும் ஓவும் அசை நிலை. (௧௪)

பொன்னோடு முத்தங் கொழிக்குந்துறைப் பொன்னி நாடன்
நின்னோ டமராற்ற நினைந்தெழு நீயு நேர்வாய்
அன்னோ னுனக்குப் புறகிட்டகன் றோடு நீயும்
பின்னோடி யெட்டிப் பிடிப்பாரிற் றுரத்து மெல்லை.

(இ - ள்.) பொன்னோடு முத்தம் கொழிக்கும் துறை - பொன்னையும் முத்தையும் (அலைகள்) ஒதுக்கும் நீர்த்துறைகளை யுடைய, பொன்னி நாடன் - காவிரி நாடனாகிய சோழன், நின்னோடு அமர் ஆற்ற நினைந்து எழும் - நின்னுடன் போர் புரியக் கருதி வருவான்; நீயும் நேர்வாய் - நீயும் எதிர்ப்பாய்; அன்னோன் உனக்குப்புறகிட்டு அகன்று ஓடும் - அச்சோழன் உனக்குப்புறங்காட்டிப் (போர்க்களத்தினின்றும்) நீங்கி ஓடுவன்; நீயும் பின் ஓடி - நீயும் அவன் பின்னேயே ஓடி, எட்டிப் பிடிப்பாரின் துரத்தும் எல்லை - எட்டிப் பிடிப்பவரைப்போல அவனைத் துரத்தும் பொழுது.

புறகிட்டு - முதுகுகாட்டி; தோற்று. அணிமையிற் சென்று துரத்துதலை 'எட்டிப்பிடிப்பாரின் துரத்து மெல்லை' என்றார். (௧௫)

எமையா மருச்சித் திருக்குந்தல மெய்து வாயால்
அமையா தவன்கட் பழியாற்றுது * மென்னச் சேற்கண்
உமையாண் மணாள னருள்வாழ்த்தி யுரக னுச்சிச்
சுமையாறு தோளான் றெழுதான்ற னிருக்கை புக்கான்.

(இ - ள்.) எமையாம் அருச்சித்து இருக்கும் தலத்து எய்துவாய்-எம்மையாமே அருச்சித்து வழிபட்டிருக்குந் தலமாகிய திருவிடை மருதூரை அடைவாய், அமையாதவன்கண் பழி ஆற்றதும் என்ன - (அங்கு உனது) தணியாத கொடிய பழியைத்

(பா - ம்.) * பழிமாற்றுதும்.

தணிவிப்போ மென்று கூறியருள, உரகன் உச்சிச்சுமை ஆறு தோளான் - அனந்தன் முடிப்பொறை ஆறுதற் கேதுவாகிய தோளையுடைய வரகுண வேந்தன், சேல்கண் உமையாள் மணாளன் அருள் வாழ்த்தி - அங்கயற் கண்ணம்மையின் மணாளனாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவருளை வாழ்த்தி, தொழுதான் - தொழுது, தன் இருக்கைபுக்கான் - தனது இருப்பிடஞ் சென்றனன்.

சிவபெருமான் எல்லா ஆன்மாக்களும் தம்மை வழிபட்டுய்யுமாறு மறையாதி நூல்களால் அருளிச் செய்தமையன்றித் தாமே அருச்சித்தும் காட்டுவாராயினர். 'எமையாம் அருச்சித்திருக்கும்' என்பதனால் அவ்விறைவனால் அருச்சிக்கத்தக்க வேறு தெய்வமின் றென்பது பெற்றாம். இறைவன் திருவிடை மருதூரில் தம்மைத் தாம் பூசித்த வரலாற்றை அத்தல புராணம் நோக்கி யுணர்க. சுமையாறுய வருத்தம் ஆறுதற்குக் காரணமாகிய தோள் என்க. அவன் தலையாற் பொறுக்கும் புவிப் பொறை முழுதையும் இவன் தோளாற் பொறுக்கின்றனன் என்றபடி. தொழுதான், முற்றெச்சம். ஆல், அசை. (௧௬)

ஆர்த்தார் முடியோன் சிலநாள்கழித் தாற்ற லேற்ற
போர்த்தாவு வேங்கைக் கொடித்தானை புடவி போர்ப்பப்
பேர்த்தார் கலிவந் தெனப்பேரிய மார்ப்பக் கன்னிப்
பார்த்தாம வேன்மீ னவனாட்டிற் படர்ந்த வெல்லை.

(இ - ள்) சிலநாள் கழித்து - சிலநாள் சென்றபின், ஆர்த்தார் முடியோன் - ஆத்திமாலை யணிந்த முடியை யுடைய சோழன், ஆற்றல் ஏற்ற - வலிமை மிக்க, போர்த்தாவு வேங்கைக் கொடித்தானை - போரின் கண் தாவுகின்ற புலிக்கொடியை உயர்த்திய தனது சேனையானது, புடவி போர்ப்ப - புவியை மறைக்கும்படி, ஆர்கலி பேர்த்து வந்தென - கடல் நிலை பெயர்ந்து வந்தாற்போல, பேர் இயம் ஆர்ப்ப - பெரிய முரசங்கள் ஒலிப்ப, கன்னிப்பார் - கன்னி நாட்டினையுடைய, தாமவேல் மீனவன் நாட்டில் - மாலையணிந்த வேற்படை யேந்திய பாண்டியனது நாட்டின் கண், படர்ந்த எல்லை - சென்ற பொழுது.

சேனையின் பரப்பாலும் முழக்கத்தாலும் எழுச்சியாலும் கடல் புடை பெயர்ந்து வந்தாற் போல என்க. முடியோன் தானை போர்ப்ப அதனுடன் பேரியம் ஆர்ப்ப ஆர்கலிவந்தெனப் படர்ந்த வெல்லை என வினை முடிக்க. தாமம் - ஒளியுமாம். (௧௭)

மிடைந்தேறு நேரிப் பொருப்பன்படை வேலை மேற்சென்
றடைந்தேறி மீனக் கொடியானம ராட வாழி
கடைந்தேறு வெற்பிற் கலங்கிற்றெனக் கிள்ளி சேனை
உடைந்தேக வெந்நிட் டுடைந்தோடின னுள்ளம் வெள்கா.

(இ - ள்.) மிடைந்து ஏறும் நேரிப்பொருப்பன் படை வேலை மேல்-நெருங்கி முன்னேறிய நேரி மலையை யுடைய சோழனது சேனைக்கடலின் மேல், ஏறிச் சென்று அடைந்து - எதிர்த்துச் சென்று பொருந்தி, மீனக் கொடியான் அமர் ஆட-

மீனக்கொடி யுயர்த்திய பாண்டியன் போர் செய்ய, ஆழி - கடலானது, கடைந்து ஏறு வெற்பின் - கடைந்து எழுந்த மந்தரமலையினால், கலங்கிற்று என - கலங்கினாற் போல, கிள்ளி சேனை உடைந்து ஏக - சோழன் படை தோற்று ஓட, உடைந்து வெந்இட்டு உள்ளம் வெள்கா ஓடினன் - (சோழனும்) தோற்றுப் புறங்காட்டி மனம் வெள்கி ஓடினான்.

பாற்கடலை மந்தர வெற்புக் கலக்கினாற் போலச் சோழனது சேனையைப் பாண்டியன் கலக்கினான் என்க. (௧௮)

சுறவக் கொடியண்ண றுரந்துபின் பற்றிச் செல்வோன்
புறவக் கடிமுல் லையுந்தாமரைப் போது மேந்தி
நறவக் கழிநெய்தலங் கானலின் ஞாங்கர் மொய்த்த
இறவப் புலவு கழுவீர்ந்துறைப் பொன்னி சேர்ந்தான்.

(இ - ள்.) பின்பற்றி துரந்து செல்வோன் - (அங்ஙனம் ஓடிய சோழனைப்) பின் பற்றித் துரந்து செல்வோனாகிய, சுறவக்கொடி அண்ணல் - மீனக் கொடியுயர்த்திய வரகுணபாண்டியன், புறவக்கடி முல்லையும் - முல்லை நிலத்து மணமிக்கமுல்லை மலரையும், தாமரைப் போதும் ஏந்தி - தாமரை மலரையும் ஏந்தி, நறவம் கழி நெய்தல் கானலின் ஞாங்கர் - தேன் சிந்தும் கழி சூழ்ந்த நெய்தல் நிலத்துச் சோலையின் மருங்கில், மொய்த்த இறவு புலவு கழுவு - நெருங்கிய இறால் மீனின் புலால் நாற்றத்தைப் போக்கும், ஈர்துறைப் பொன்னி சேர்ந்தான் - குளிர்ந்த நீர்த்துறையையுடைய காவிரியை யடைந்தான்.

பாண்டியன் கொடியை மீன் என்னும் பொதுமையால் கயல் எனவும் சுறா எனவும் கூறுவர். இறவு - இறால் மீன். முல்லை நிலத்துப் பூவையும் மருத நிலத்துப் பூவையும் கொண்டு சென்று நெய்தனிலத்துப் புலாலை யொழிக்கும் எனக் காவிரியின் சிறப்புக்கூறினார். செல்வோனாகிய அண்ணல் பொன்னி சேர்ந்தான் என்க. (௧௯)

பூசத் துறையிற் புகுந்தாடியப் பொன்னித் தென்சார்
வாசத் திடைமா மருதைப்பணி தற்கு வையைத்
தேசத் தவன்கீழ்த் திசைவாயில் கடந்து செல்லப்
பாசத் தளையும் பழியும்புற நின்ற வன்றே.

(இ - ள்.) வையைத் தேசத்தவன் - (அங்ஙனம் அடைந்த) வையையாறு சூழ்ந்த பாண்டிநாட்டை யுடைய வரகுண வேந்தன், பூசத்துறையில் புகுந்து ஆடி - பூசத் துறையிற் சென்று நீராடி, அப்பொன்னித் தென்சார் - அக்காவிரியின் தென் பக்கத்தில், வாசத்து மா இடைமருதைப் பணிதற்கு - மணமிக்க பெருமை பொருந்திய திருவிடை மருதூர் இறைவனை வணங்குதற்கு, கீழ்த்திசைவாயில் கடந்து செல்ல - கீழைத்திசைவாயிலைக் கடந்து உள்ளே செல்ல, பாசத்தளையும் பழியும் புறம் நின்ற பாசபந்தமும் கொலைப்பாவமும் (உடன் செல்லாது) புறத்தே நின்றன.

பூசத்துறை - தைமாதம் பூசநாளிலே மருதவாணர் தீர்த்தமாடும் திருக்காவிரித்துறை; இதனை,

"பூசம் புகுந்தாடிப் பொலிந்தழ காய
ஈச னுறைகின்ற இடைமரு தீதோ"

எனத்திருஞான சம்பந்தப் பெருமானும்,

"ஈசனெம்பெரு மானிடை மருதினில்
பூச நாம்புகு தும்புன லாடவே"

எனத் திருநாவுக்கரசுகளும் அருளிச் செய்தல் காண்க. வாசம் மருதுக்கு அடை. எழுந்தருளி யுள்ள என்றுமாம். அன்றும், ஏயும் அசைகள். (உ௰)

சுருதிச் சுரும்பு புறஞ்சூழ்ந்து குழறத் தெய்வ
மருதிற் சிறந்த பெருந்தேனைக்கண் வாயங் காந்து
பருகிப் படிந்து தழல்வாய் வெண்ணெய்ப் பாவை யொப்ப
உருகிச் செயலற் றுரையற் றுணர் வாகி நின்றான்.

(இ - ள்.) சுருதிச் சுரும்பு புறம் சூழ்ந்து குழற - வேதமாகிய வண்டுகள் புறத்திற் சூழ்ந்து ஒலிக்க, தெய்வமருதில் சிறந்த பெருந்தேனை - தெய்வத்தன்மை பொருந்திய இடைமருதிற் சிறந்த பெருமையுடைய தேனை, கண்வாய் அங்காந்து பருகி - கண்ணாகிய வாயைத் திறந்து பருகி, படிந்து - அதிலே தோய்ந்து, தழல்வாய் வெண்ணெய்ப்பாவை ஒப்ப உருகி, நெருப்பிற் பட்ட வெண்ணெயாலாகிய பாவை போல உருகி, செயல் அற்று உரை அற்று உணர்வு ஆகி நின்றான் - செயலும் சொல்லும் ஒழிந்து உணர்வுவடிவாகி நின்றான்.

மருதடியில் வீற்றிருக்கும் பெருமானை மருதமரத்தில் உள்ள தேனுக உருவகப்படுத்தி, அதற் கேற்ப வேதத்தை வண்டாக உருவகித்தார். மரத்தின் பொந்தில் தேன் இறால் வைப்பது காண்க. நினைத்தொறும் காண்டொறும் பேசுந்தொறும் எப்பொழுதும் இன்பஞ் செய்வதாகலின் 'பெருந்தேன்' என்றார்.

"அந்த விடைமருதி லானந்தத் தேனிருந்த
பொந்தைப் பரவிநாம் பூவல்லி கொய்யாமோ"

என்னும் திருவாசகமும்,

"மன்றுளாடுமது வின்னசை யாலே மறைச்
சுரும்பறை புரத்தின் மருங்கே"

என்னும் பெரிய புராணச் செய்யுளும் இங்கே சிந்திக்கற் பாலன. தழல்வாய் வெண்ணெய்ப்பாவை உருகி உருத்தோன்று தொழிதல் போல அன்பால் உருகிக் கருவி கரண மெல்லாம் கெட்டுத் தற்போதமிழந்து நின்றானென்க. பெருந்தேனை மிகப்பருகின னென்பது 'அங்காந்து பருகிப்படிந்து' என்னுஞ் சொல்லாற்றலாற் பெறப்படும், தேனை மிகவுண்டார்க்கு உரை செயல் ஒழிதலாகிய நயமும் போற்றுக.

சிவபெருமான் தாம் எழுந்தருளியிருக்கும் திருப்பதிகளை உமாதேவியார்க்குக் காட்டிக்கொண்டு திருவிடைமருதூர்க்கு நேரே வருகையில், திருக் கைலை அவாது பிரிவாற்றாது மருதமாகி அங்கு நின்றதென்ப. (உக)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

நிராமய பரமா னந்த நிருத்தநான் மாடக் கூடற்
பராபர விமையா முக்கட் பகவபார்ப் பதிம ணாள
புராதன வகில நாத புண்ணிய மருத வாண
அராவணி சடையா வென்றென் றளவிலாத் துதிகள் செய்தான்.

(இ - ள்.) நிராமய - நோயற்றவனே, பரம ஆனந்த நிருத்த - பேரின்பத் திருக்கூத்தனே, நான்மாடக்கூடல் பராபர - நான்மாடக்கூடலில் வீற்றிருக்கும் பராபரனே, இமையா முக்கண் பகவ - இமையாத மூன்று கண்களையுடைய பகவனே, பார்ப்பதிமணாள - பார்வதி மணாளனே, புராதன - பழமையானவனே, அகிலநாத - எல்லாவற்றுக்கும் இறைவனே, புண்ணிய - அறவடிவனே, மருதவாண - இடைமருதில் வாழ்பவனே, அரா அணி சடையா - பாம்பை அணிந்த சடையை யுடையானே, என்று அளவு இலாத் துதிகள் செய்தான் - என்று சொல்லிச் சொல்லி அளவிறந்த துதிகளைக் கூறினான்.

நிராமயன் – பிறவி நோயில்லாதவன்; ஆமயம் - நோய். மதுரையில் அருள் புரிந்த இறைவனே இப்பெருமான் என்று கொண்டு 'நான்மாடக்கூடற் பராபர' என்றான். பகவன் - ஆறு குணங்களை யுடையன். (உஉ)

சொற்பதங் கடந்த சோதி துதித்தடி பணிந்த வேந்தை
மற்பெருந் தோளாய் கீழை வாயிலிற் பிரம சாயை
நிற்பதந் நெறியாற் செல்லே னிழன்மதி யுரிஞ்சு மேலைப்
பொற்பெரு வாயி னீங்கிப் போதிநம் மதுரைக் கென்றான்.

(இ - ள்.) சொல் பதம் கடந்த சோதி - சொல்லின் நிலையைக் கடந்து நின்ற ஒளிவடிவான இறைவன், துதித்து அடிபணிந்த வேந்தை - துதி செய்து அடிவணங்கிய வரகுண வேந்தனை (நோக்கி), மல் பெருந்தோளாய் - மற்போரிற் றேர்ந்த பெரிய தோள்களையுடையவனே, கீழைவாயிலில் பிரமசாயை நிற்பது - கீழைவாயிலின் கண் பிரமசாயை நிற்கின்றது (ஆகலின்), அந்நெறியால் செல்லேல் - அவ்வழியாற் போதலொழிக; நிழல் மதி உரிஞ்சு மேலைப் பொன் பெருவாயில் நீங்கி - ஒளியினையுடைய சந்திரமண்டலத்தை உரிஞ்சுகின்ற பொன்னாலாகிய பெரிய மேலைவாயிலினின்று நீங்கி, நம்மதுரைக்குப் போதி என்றான் - நமது மதுரைப் பதிக்குச் செல்வாயாக என்று கூறியருளினான்.

'சொற்பதம்' என்புழிப் பதம் என்பது நிலைமை யென்னும் பொருட்டு.

"சொற்பதங் கடந்த தொல்லோன்"

என்பது திருவாசகம். போதி, த் எழுத்துப்பேறு. (உ௩)

வரகுண னதுகேட் டையன் மருதினை வளைந்து நீங்கற்
கருமையால் வாயி றோறு மடிக்கடி வீழ்ந்து வீழ்ந்து
வரைதொளைத் தன்ன மேலை வாயிலாற் போவா னன்ன
திருமணிக் கோபு ரந்தன் பெயரினாற் செய்து சின்னாள்.

(இ - ள்.) வரகுணன் அது கேட்டு - வரகுண பாண்டியன் அதனைக் கேட்டு, ஐயன் மருதினை வளைந்து - இறைவன் வீற்றிருக்கும் இடைமருதினை வலம் வந்து, நீங்கற்கு அருமையால் - பிரிதற்கு அருமையால், வாயில் தோறும் அடிக்கடி வீழ்ந்து வீழ்ந்து - வாயில்கள் தோறும் பன்முறையும் வீழ்ந்து வீழ்ந்து வணங்கி, வரை தொளைத்தன்ன மேலை வாயிலால் போவான் - மலையைத் தொளைத்தா லொத்த மேலைவாயிலாற் போகின்றவன், அன்ன திருமணிக் கோபுரம் - அந்த அழகிய மணிக ளழுத்திய கோபுரத்தை, தன் பெயரினால் செய்து - தனது பெயரினாற் செய்து, சில் நாள் - சில நாள் (அங்குத்தங்கி.)

தொளைத்ததன்ன என்பது விகாரமாயிற்று. மலையைத் தொளைத்தது போலும் வாயில் என்னும் இக்கருத்து,

"வென்றெழு கொடியொடு வேழஞ் சென்றுபுகக்
குன்று குயின்றன்ன வோங்குநிலை வாயில்"

என நெடுநல்வாடையில் வந்துளது. (உ௪)

திருப்பணி பலவுஞ் செய்து தென்றிசை வழிக்கொண் டேகிச்
சுருப்பணி நெடுநாண் பூட்டுஞ் சுவைத்தண்டச் சிலையாற் காய்ந்த
மருப்பணி சடையான் கோயில் வழிதொறுந் தொழுது போற்றிப்
பொருப்பணி மாடக் கூடற் பொன்னக ரடைந்தான் மன்னோ.

(இ - ள்.) திருப்பணி பலவும் செய்து - பல திருப்பணிகளையுஞ் செய்து முடித்து, தென் திசை வழிக்கொண்டு ஏகி - தென்றிசையின் வழிக்கொண்டு சென்று, சுரும்பு அணி நெடு நாண் பூட்டும் - வண்டுகளின் வரிசையாகிய நெடிய நாண் பூட்டிய, சுவைத்தண்டச் சிலையான் காய்ந்த - கரும்பு வில்லையுடைய மதவேளை எரித்தருளிய, மருப்பு அணி சடையான் கோயில் - பன்றிக் கொம்பினை அணிந்த சடையை யுடைய சிவபெருமான் வீற்றிருக்குந் திருக்கோயிலை, வழிதொறும் தொழுது போற்றி - வழிதோறும் வணங்கித் துதித்து, பொருப்பு அணிமாடக் கூடல் பொன் நகர் அடைந்தான் - மலைகளின் வரிசை போல (ஓங்கிய) மாடங்களையுடைய மதுரை என்னுந் திருநகரை அடைந்தனன்.

சுருப்பு - சுரும்பு; வலித்தல். சுவைத்தண்டம் - கரும்பு. சடையான் கோயில் வழிதொறும் தொழுது என்பதற்கு மருதவாணர் கோயிலை வழிதொறும் திரும்பி நோக்கித் தொழுது என்றுரைக்க; அன்றி, வழிதொறும் உள்ள இறைவன் கோயில்களைத் தொழுது என்றுமாம். மன்னும் ஓவும் அசைகள். வரகுணதேவரது அன்பின் பெருக்கையும், அவர் இடைமருதில் இயற்றிக்கொண்டிருந்த திருத்தொண்டின் திறத்தையும்,

"வெள்ளை நீறு மெய்யிற் கண்டு
கள்ளன் கையிற் கட்டவிழ்ப் பித்தும்
ஓடும் பன்னரி யூளைகேட் டரனைப்
பாடின வென்று படாம்பல வளித்தும்
குவளைப் புனலிற் றவளை யரற்ற
ஈசன் றன்னை யேத்தின வென்று
காசும் பொன்னுங் கலந்து தூவியும்
வழிபடு மொருவன் மஞ்சனத் தியற்றிய
செழுவிதை யெள்ளைத் தின்னக் கண்டு
பிடித்தலு மவனிப் பிறப்புக் கென்ன
இடித்துக் கொண்டவ னெச்சிலை நுகர்ந்தும்
மருத வட்டத் தொருதனிக் கிடந்த
தலையைக் கண்டு தலையுற வணங்கி
உம்மைப் போல வெம்மித் தலையும்
கிடத்தல் வேண்டுமென் றடுத்தடுத் திரந்தும்
கோயின் முற்றத்து மீமிசைக் கிடப்ப
வாய்த்தன வென்று நாய்க்கட்ட மெடுத்தும்
காம்புகுத் துதிர்ந்த கனியுருக் கண்டு
வேம்புட்கெ கல்லாம் விதான மமைத்தும்
விரும்பின கொடுக்கை பரம்பரற் கென்று
புரிகுழற் றேவியைப் பரிவுடன் கொடுத்த
பெரிய வன்பின் வரகுண தேவரும்"

என்று திருவிடை மருதூர் மும்மணிக் கோவையில், பட்டினத்தடிகள் அருளிச் செய்தல் காண்க. (உ௫)

தொடுபழி தொலைவித் தாண்ட சுந்தரத் தோன்றல் பாதக்
கடிமல ரடைந்து நாளுங் கைதொழு துலக மெல்லாம்
வடுவறு செங்கோ லோச்சும் வரகுண னறவோர் நாவால்
அடுசுவை யமுத மன்ன வரன்புகழ் செவிம டுப்பான்.

(இ - ள்.) தொடுபழி தொலைவித்து ஆண்ட - விடாது தொடர்ந்த பழியைப் போக்கிக் காத்தருளிய, சுந்தரத் தோன்றல் பாதக்கடிமலர் அடைந்து - சோமசுந்தரக்கடவுளின் திருவடியாகிய மணமிக்க தாமரை மலரைச் சார்ந்து, நாளும் கைதொழுது - நாள் தோறும் வணங்கி, உலகம் எல்லாம் வடு அறு செங்கோல் ஓச்சும் வரகுணன் - உலகம் முழுதும் குற்ற மற்ற செங்கோல் செலுத்தும் வரகுண பாண்டியன், அறவோர் நாவால் - அந்தணர்கள் நாவினால், சுவை அடு அமுதம் அன்ன அரன் புகழ் - சுவை பொருந்திய அமுதத்தை யொத்த இறைவன் புகழை, செவிமடுப்பான் - கேட்பான்.

தொடுபழி - விடாது தொடரும் பழி; தொடுத்த என விரித்து வளைத்துக் கொண்டபழி என்றுரைத்தலுமாம்; இஃது இப்பொருட்டாதலை,

"தொடுத்துங் கொள்ளா தமையலென்"

என்று புறப்பாட்டுள் வருதலானறிக. நாவைக்கலமாகவும், புகழை உணவாகவும், செவியை வாயாகவும் உருவகங் கொள்க. அடு - அடுத்த; பொருந்திய. ஏனைச் சுவைகளை வெல்லும் சுவை யென்றுமாம்; நாவால் அட்ட என்றுரைப்பாருமுளர். ௨௬

வேதமா கமம்பு ராண மிருதிகண் முதலா நூலும்
ஓதுவ துலகின் மிக்க துருத்திர வுலக மென்னும்
போதம தகங்கொண் டந்தப் பொற்பதி காண வேண்டுங்
காதல்செல் வழியே யீசன் கங்குலிற் கோயி லெய்தா.

(இ - ள்.) வேதம் ஆகமம் புராணம் மிருதிகள் முதலாம் நூலும் - வேதமும் ஆகமமும் புராணமும் மிருதிகளு முதலாகிய நூல்கள் அனைத்தும், ஓதுவது - கூறுவதாகிய, உலகில் மிக்கது உருத்திர உலகம் என்னும் - உலகங்களில் மேம்பட்டது சிவலோகமென்னும், போதம் அகம்கொண்டு - அறிவினை மனத்திற்கொண்டு, அந்த பொன்பதி காண வேண்டும் காதல் செல்வழியே - அந்த அழகிய சிவலோகத்தைக் காண எழுந்த விருப்பத்தின் வழியே, ஈசன் கங்குலில் கோயில் எய்தா - சிவ ராத்திரியில் திருக்கோயிலை அடைந்து.

ஓதுவதாகிய போதம் என்க. உலகின் - பிரமன் முதலாயினார் உலகங்களினும். போதமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (௨௭)

[கலிநிலைத்துறை]

மாழை மான்மட நோக்கிதன் மணாளனை வணங்கிப்
பீழை யேழ்பவங் கடந்துநின் னடிநிழல் பெற்றோர்
சூழ நீசிவ புரத்தில்வீற் றிருப்பது தொழுதற்
கேழை யேற்கொரு கருத்துவந் தெய்திய தெந்தாய்.

(இ - ள்.) மாழைமான் மட நோக்கிதன் மணாளனை வணங்கி - இளமை பொருந்திய மான் போலும் பார்வையையுடைய மடப்பத்தையுடைய உமையம்மையின் நாயகனாகிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி, பீழை ஏழ்பவம் கடந்து - துன்பத்தையுடைய எழுவகைப் பிறவியையுங் கடந்து, நின் அடி நிழல் பெற்றோர் - நினது திருவடி நிழலை அடையப் பெற்றோர்கள், சூழ - சூழாநிற்க, நீ சிவபுரத்தில் வீற்றிருப்பது - நீ சிவலோகத்தின்கண் வீற்றிருக்குங் காட்சியை, தொழுதற்கு - கண்டு வணங்குதற்கு, எந்தாய் - எமது தந்தையே, ஏழையேற்கு ஒரு கருத்து வந்து எய்தியது - அறிவில்லாத அடியேனுக்கு ஒரு எண்ணம் வந்து தோன்றியது.

மாழை - இளமை; இஃது இப்பொருட்டாதலை

"மைபூத்தலர்ந்த மழைக்கண் மாழைமானேர் நோக்கின்"

என்னும் சிந்தாமணிச் செய்யுள் உரை நோக்கி யுணர்க. மடப்பத்தையுடையாள் என விகுதிப் பொருளோடு இயைக்க; மருட்சியும் மடப்பமும் உடைய நோக்கு என்றுமாம். (௨௮)

என்ற காவல னன்பினுக் கெளியராய் வெள்ளி
மன்ற வாணரவ் வுலகையிவ் வுலகிடை வருவித்
தின்று காட்டுது மிவற்கெனத் திருவுளத் தெண்ணம்
ஒன்றி னாரஃ துணர்ந்ததா லுருத்திர வுலகம்.

(இ - ள்.) என்ற காவலன் அன்பினுக்கு எளியராய் - என்று கூறிக் குறையிரந்த வரகுண வேந்தன் அன்பிற்கு எளியவராகி, வெள்ளி மன்றவாணர் - வெள்ளியம்பல முடைய சோமசுந்தரக்கடவுள், அவ்வுலகை இவ்வுலகிடை வருவித்து இன்று இவற்குக் காட்டுதும் என - அச்சிவலோகத்தை இந்த நிலவுலகின்கண் வருவித்து இன்று இவ்வன்பனுக்குக் காட்டுவே மென்று, திருவுளத்து எண்ணம் ஒன்றினார் - திருவுள்ளத்தின்கண் எண்ணியருளினார்; உருத்திர உலகம் அஃது உணர்ந்தது - அச்சிவலோகம் அதனை உணர்ந்தது.

எண்ணம் ஒன்றினார் - எண்ணம் பொருந்தினார்; எண்ணினார். ஆல், அசை.

கோடி மாமதிக் கடவுளர் குரூஉச்சுடர் பரப்பி
நீடி யோரிடத் துதித்தென மின்மினி நிகர்த்து
வாடி வானிரு சுடரொளி மழுங்கவா னிழிந்து
தேடி னார்க்கரி யானுறை சிவபுரந் தோன்ற.

(இ - ள்.) தேடினார்க்கு அரியான் உறை சிவபுரம் - தேடிய திருமாலுக்கும் பிரமனுக்கும் அரிய இறைவன் தங்கியருளிய சிவலோகமானது, கோடி மா மதிக்கடவுளர் - நிறைந்த கோடி திங்கட் புத்தேளிர், குரூஉச்சுடர் பரப்பி - நிறம் பொருந்திய ஒளியினைப் பரப்பி, நீடி ஓர் இடத்து உதித்தென - குறைவின்றி ஒரே யிடத்தில் உதித்தாற் போல, வான் இரு சுடர் - வானின்கண் உள்ள பரிதியும் மதியுமாகிய இரண்டு சுடர்களும், மின் மினி நிகர்த்து வாடி ஒளி மழுங்க - மின்மினிப் பூச்சியை ஒத்து வாடி ஒளி மழுங்குமாறு, வான் இழிந்து தோன்ற - விண்ணினின்றும் இறங்கித் தோன்றா நிற்க.

கோடி - எண்ணிறந்த என்னும் பொருட்டு. ஒளியுடன் தட்பமும் உடைமையால் மதிக்கடவுளரைக் கூறினார். உதித்தென, விகாரம். தேடினார்க்கு என்பதற்குத் தற்போதத்தால் ஆராயலுற்றார்க்கு எனப் பொதுவாக உரைத்தலுமாம். சிவபுரம் இரு சுடரொளி மழுங்க வானிழிந்து தோன்ற என வினை முடிவு கொள்க. (௩௰)

ஆண்ட நாயக னந்தியை யழைத்தெமக் கன்பு
மாண்ட காதலான் வரகுண வழுதிநம் முலகங்
காண்டல் வேண்டினன் காட்டெனக் கருணையா லேவல்
பூண்ட வேத்திரப் படையினன் றொழுதனன் போனான்.

(இ - ள்.) ஆண்ட நாயகன் - எம்மை ஆண்டருளிய சோமசுந்தரக்கடவுள், நந்தியை அழைத்து - நந்திப்புத்தேளை அழைத்து, எமக்கு அன்பு மாண்ட காதலான் வரகுணவழுதி - எமக்கு அன்பு சிறந்த விருப்பத்தை யுடையனாகிய வரகுண பாண்டி

யன், நம் உலகம் காண்டல் வேண்டினன் காட்டு என - நமது உலகத்தைக்காண விரும்பினன் ஆகலின் காட்டுவாயாக என்று கூறியருள, கருணையால் - அவன் திருவருளினால், ஏவல் பூண்ட வேத்திரப்படையினன் - அவ்வேவலை மேற்கொண்ட பிரம்புப்படையையுடைய திருநந்திதேவன், தொழுதனன் போனான்-வணங்கிச்சென்றான்.

ஆண்ட நாயகன் - தம்மை ஆண்ட நாயகன் என்றும், உயிர்களை ஆண்ட நாயகன் என்றும் உரைத்தலுமாம். காதல் - அன்பின் முதிர்ச்சி. ஏவல் பூண்ட என்பதற்குப் பணிசெய்தலை ; மேற்கொண்ட எனப் பொதுவின் உரைத்தலுமாம். கருணையான் என்னும் பாடத்திற்கு இறைவன் என்பது பொருள். தொழுதனன், முற்றெச்சம். (௬௧)

வருதி யாலெனப் பணிந்தெழு வரகுணற் கொடுபோய்க்
கருதி யாயிரம் பெயருடைக் கடவுணான் முகத்தோன்
சுருதி யாதியீ றளப்பருஞ் சொயம்பிர காசப்
பரிதி யாள்சிவ புரமிது பாரெனப் பணித்தான்.

(இ - ள்.) வருதி என - (அங்ஙனஞ் சென்ற நந்தி தேவன்) வருவாய் என்றருள, பணிந்து எழு வரகுணன் கொடு போய் - வணங்கி எழுந்த வரகுண பாண்டியனைக் கொண்டு சென்று, ஆயிரம் பெயர் உடைக்கடவுள் நான் முகத்தோன் - ஆயிரம் பெயருடைய திருமாலும் பிரமனும், சுருதி ஆதி கருதி - வேத முதலிய அளவைகளால் ஆராய்ந்து, ஈறு அளப்பு அரு - முடிவுகாண் பரிய, சொயம்பிரகாசம் பரிதி ஆள் - இயற்கையாகிய பேரொளியினை யுடைய ஞான சூரியனாகிய சோம சுந்தரக் கடவுள் ஆண்டருளுகின்ற, சிவபுரம் இது - சிவலோகம் இது; பார் எனப் பணித்தான் - இதனைக் காண்பாயாக எனப்பணித்தருளினன்.

வருதி யென்று கூறி அங்ஙனம் கூறிய வளவிற் பணிந்தெழுந்த வரகுணனைக் கொண்டு போய் என விரித்துரைக்க. கடவுளாகிய பரிதி எனலுமாம்; இதற்கு, கருதிப்பார் எனப்பணித்தான் என்றியைத் துரைக்க. நான்முகத்தோனும் சுருதி முதலியவும் ஈறு அளப்பரும் என்றும், நான் முகத்தோனும் சுருதியும் முதலு முடிவும் அளத்தற் கரிய என்றும் உரைத்தலுமாம்;

"மறையினா லயனான் மாலான் மனத்தினால் வாக்கால் மற்றும்
குறைவிலா வளவி னாலுங் கூறொணா தாகி நின்ற
இறைவனார்"

என்று சிவஞானசித்தியார் கூறுதல் அறியற் பாலது. ஞாயிறு முதலிய ஒளிகட்கெல்லாம் ஒளி கொடுத்து இயல்பின் விளங்கும் பேரொளி யாகலின் 'சொயம்பிரகாசப் பரிதி' என்றார். ஆல், அசை. (௬௨)

கருப்பு ரங்கமழ்ந் துளர்பசுங் கால்களா லுதையுண்
டருப்பி னஞ்சிதைந் தாயிரப் பத்தியோ சனைபோய்
மருக்க மழ்ந்துநூ றாயிரம் வாலிதழ்க் கமலம்
இருக்கு மோடைகள் புடைதொறுந் தழுவிய யாறும்.

(இ - ள்.) கருப்புரம் சமழ்ந்து - கருப்புர மணம் வீசி, உளர் பசுங்கால் களால் - அசைகின்ற தென்றற் காற்றுகளால், உதையுண்டு - மொத்துண்டு, அரும்பு இனம் சிதைந்து - அரும்புக் கூட்டங்கள் முறுக்கவிழ்ந்து, ஆயிரப்பத்து யோசனை போய் மருக்கமழ்ந்து - பதினாயிரம் யோசனை தூரஞ் சென்று மணம் வீசி, நூறாயிரம் வால் இதழ்க்கமலம் இருக்கும் ஓடைகள் - நூறாயிரம் இதழ்களை யுடைய வெண்டாமரை மலர்கள் இருக்கின்ற ஓடைகள், புடை தொறும் தழுவிய யாறும் - பக்கந் தோறும் பொருந்திய ஆறுகளும்.

பசுங்கால் - இளங்காற்று. கால் என்றதற் கேற்ப உதையுண்டு என நயம் படக்கூறினர். வால் - தூய்மையுமாம். (௩௩)

வரம்பின் மாதரார் மதுரவாய் திறந்துதேன் வாக்கும்*
நரம்பி னேழிசை யாழிசை நகைமலர்த் தருவின்
சுரும்பி னேரிசை நாரதர் தும்புரு† விசைக்கும்
இரும்பு நீர்மெழு காக்கிய வின்னிசை யெங்கும்.

(இ - ள்.) வரம்பு இல் மாதரார் - அளவிறந்த மாதர்கள், மதுரவாய் திறந்து - இனிய வாயினைத்திறந்து, தேன் வாக்கும் ஏழ் இசை - தேனைச் சொரிவது போற் பாடும் ஏழிசைகளும், நரம்பின் யாழ் இசை - நரம்புகளையுடைய யாழின் இசைகளும், நகைமலர்த்தருவின் - விளங்குகின்ற மலர்களை யுடைய மரங்களில் உள்ள, சுரும்பின் ஏர் இசை - வண்டுகளின் அழகிய இசையும், நாரதர் தும்புரு இசைக்கும் - நாரதரும் தும்புருவும் பாடுகின்ற, இரும்பு நீர் மெழுகு ஆக்கிய இன் இசை - இரும்பினை மெழுகு போல இளகுந் தன்மையாக்கிய இனிய இசையு முள்ள, எங்கும் - எல்லா விடங்களும்.

தேன் வாக்கும் என்பதற் கேற்ப வாயை மலராக்குக. வாக்கும் ஏழிசையும் நரம்பின் யாழிசையும் எனக் கூட்டுக; யாழுடன் கூடிய வாக்கும் இசை என்றியைத் துரைத்தலுமாம். ஏழிசை முற்கூறப்பட்டமை காண்க. மெழுகு நீர் என மாறுக. எங்கும் என்பதனை எல்லா இடங்களும் எனக் கொண்டு யாறு முதலிய வற்றோடு எண்ணுக. (௩௪)

அமுத வாவியும் பொன்மல ரம்புயத் தடமுங்
குமுத வாயர மாதராங் குயிலினம் பயிலும்
நிமிர வாள்விடு மரகத நெடியபைங் காவுந்
திமிர மாசறக் கழுவிய தேவர்வாழ் பதமும்.

(இ - ள்.) அமுதவாவியும் - அமிழ்த மயமான நீரினை யுடைய நடைக்கிணறும், பொன் அம்புய மலர்த்தடமும் - பொன் போன்ற தாமரை மலர்கள் நிறைந்த தடாகங்களும், குமுதவாய் அரமாதர் ஆம் குயில் இனம் பயிலும் - செவ்வல்லி மலர் போலும் வாயினை யுடைய தேவமகளிராகிய குயிற் கூட்டங்கள் விளையாடும், நிமிர

(பா - ம்.) *வார்க்கும், †நாரத தும்புரு.

வாள் வீடும் மரகதம் - நிரம்ப ஒளி விடும் மரகதம் போன்ற, நெடிய பைங்காவும் - நீண்டபசிய சோலைகளும், திமிரம் மாசு அறக்கழுவிய - இருளாகிய களங்கம் ஒழியுமாறு கழுவிய, தேவர் வாழ் பதமும் - தேவர்கள் வாழ்கின்ற பதங்களும்.

வாவி - நடைக்கிணறு. திமிர - ஸீக. தேவர் ஒளிவடிவின ராகலின் 'திமிர மாசறக்கழுவிய தேவர்' என்றார்; ஆணவ இருளுமாம். (௩௫)

அலம்பு பாற்கடல்* போற்புறத் தமுதநீ ரகழும்
பொலஞ்செய் ஞாயில்சூழ் புரிசையும் பொன்செய்கோ புரமும்
நலங்கொள் பூவியல் வீதியு நவமணி குயின்ற
துலங்கு மாளிகைப் பந்தியுஞ் சூளிகை நிரையும்.

(இ - ள்.) அலம்பு பால் கடல் போல் - ஒலிக்கின்ற பாற் கடல் போல, புறத்து அமுத நீர் அகழும் - புறத்தின் கண் அமுதம் போன்ற நீரினை யுடைய அகழியும், பொலம் செய் ஞாயில் சூழ் புரிசையும் - பொன்னாற் செய்த சூட்டுக்கள் சூழ்ந்த மதிலும், பொன் செய் கோபுரமும் - பொன்னாற் செய்த கோபுரமும், நலம் கொள் பூ இயல் வீதியும் - நன்மையைக் கொண்ட பொலி வமைந்த வீதிகளும், நவமணி குயின்ற - ஒன்பது மணிகளும் பதிக்கப்பட்ட, துலங்கு மாளிகைப் பந்தியும் - விளங்கா நின்ற மாளிகை வரிசைகளும், சூளிகை நிரையும் - அவற்றின் இறப்பு வரிசைகளும்.

ஞாயில் - மதிலுறுப்பு; ஏப்புழைக்கு நடுவாக எய்து மறையும் சூட்டு என்பர். சூளிகை - நிலா முற்றமுமாம். (௩௬)

ஐம்பு லங்களும் வைகலும் விருந்ததா வருந்த†
வெம்பு நால்வகை யுண்டியும் வீணையுஞ் சாந்துஞ்
செம்பொ னாரமு மாடலின் செல்வமுந் தெய்வப்
பைம்பொன் மேகலை யோவியப் பாவையொப் பாரும்.

(இ - ள்.) ஐம்புலங்களும் - ஐந்து புலன்களும், வைகலும் - நாள் தோறும், விருந்ததா அருந்த - விருந்தாக உண்ணுதற்கு அமைந்த, வெம்பு நால் வகை உண்டியும் - வெம்மையுள்ள நான்கு வகையாகிய உணவுகளும், வீணையும் - யாழும், சாந்தும் - சந்தனமும், செம் பொன் ஆரமும் - சிவந்த பொன்னாற் செய்த மாலைகளும், ஆடலின் செல்வமும் - ஆடலாகிய செல்வமும், தெய்வப் பைம் பொன் மேகலை - தெய்வத் தன்மை பொருந்திய பசிய பொன்னாலாகிய மேகலை யணிந்த, ஓவியப்பாவை ஒப்பாரும் - சித்திரப்பாவையை ஒத்த மகளிரும்.

ஐம் புலங்கள் - ஐம் பொறிகள். விருந்தது, அது பகுதிப் பொருள் விகுதி ஆக என்பது தொக்கது. வெம்பு - விருப்பஞ் செய்கின்ற என்றுமாம். உண்டி நாவிற்கும், வீணை செவிக்கும், சாந்து மூக்கிற்கும் மெய்க்கும், ஆரமும் ஆடலும் கண்ணிற்கும் விருந்தாக அமைந்தன. பாவை யொப்பார் ஐம் பொறிகட்கும் விருந்தாக அமைந்தனர் என்க;

(பா - ம்.) * அலங்கு பாற்கடல். †விருந்தவா வருந்த.

'கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றறியு மைம்புலனும்
ஒண்டொடி கண்ணே யுள'

என்பது முப்பால். (௩எ)

படர்ந்த வார்சடை யுருத்திரர் பணைத்திறு மாந்த
வடங்கொள் பூண்முலை யுருத்திர மகளிரோ டமரும்
இடங்கொண் மாளிகைப் பந்தியு மிகல்விளை துன்பங்
கடந்த செல்வமுங் கவலையில் போகமுங் காட்டி.

(இ - ள்.) படர்ந்த வார்சடை உருத்திரர் - விரிந்த நீண்ட சடையை யுடைய உருத்திரர்கள், பணைத்து இறுமாந்த - பருத்து இறுமாந்த, வடம் கொள் பூண் முலை உருத்திர மகளிரோடு அமரும் - முத்து வடமாகிய அணியை அணிந்த கொங்கையை யுடைய உருத்திர மகளிரோடு பொருந்தி யிருக்கும், இடம் கொள் மாளிகைப் பந்தியும் - இடம்பரந்த மாளிகை வரிசைகளும், இகல் - பகையையும், விளை துன்பம் - பிறரால் விளையுந் துன்பங்களையும், கடந்த செல்வமும் - நீங்கிய செல்வமும், கவலை இல் போகமும் - கவலையின்றித் துய்க்கும் போகங்களும் ஆகிய இவை அனைத்தையும், காட்டி - (தனித்தனி) காண்பித்து.

ஏனை யுலகங்களில் உள்ள செல்வம் பகைமையுடனும் துன்பங்களுடனும் பொருந்தியதும், போகம் கவலையுடன் கூடியதும் ஆம் ஆகலின் ஈண்டு அவை யொழிந்த செல்வமும் போகமும் என்றார். சிவபுரம் இது பார் எனப்பணித்து, அங்குள்ள இவற்றைத் தனித்தனி காட்டி யென்க. (௩அ)

முண்ட காசனன் பதமிது மூவுல களந்த
தண்டு ழாயவன் புரமிது தனிமுதல் வடிவங்
கொண்டு வீறுசா லுருத்திரர் கோப்பதி யின்ன
எண்டி சாமுகங் காவல ருறைவிட மிவைகாண்.

(இ - ள்.) முண்டக ஆசனன் பதம் இது - தாமரைத் தவிசினையுடைய பிரமன் வாழும் பதம் இதுவாகும்; மூவுலகு அளந்த தண் துழாயவன் புரம் இது - மூன்றுலகங்களையும் அளந்த குளிர்ந்த துழாய் மாலையை யுடைய திருமாலின் பதி இதுவாகும்; தனி முதல் வடிவம் கொண்டு - ஒப்பற்ற முதற் கடவுளாகிய சிவபெருமான் திருவுருவத்தைப் பெற்று, வீறு சால் உருத்திரர் கோப்பதி இன்ன - பெருமை மிக்க உருத்திரர்களின் சிறந்த நகரங்கள் இவை; எண் திசாமுகம் காவலர் உறை விடம் இவை காண் - எட்டுத்திக்குகளையும் காவல் செய்கின்ற திக்குப்பாலகர்களின் இருப்பிடங்கள் இவையாகும்.

முண்டகாசனன், வடமொழி நெடிற் சந்தி. கோ - தலைமை; சிறப்பு. திசாமுகம் - திசையின் இடம். காண், முன்னிலை யசை; தனித்தனி கூட்டி, காண்பயாக என்றுரைத்தலுமாம்; வருஞ் செய்யுட்களிலும் இங்ஙனங் கொள்க. (௩௯)

புலரு முன்புன லாடிநீ றாடிநம் புனிதன்
இலகு மாலயம் விளக்கிநந் தனப்பணி யியற்றி
மலர்கொய் தாய்ந்தனர் தொடுத்தரன் புகழ்செவி மடுத்தில்
வுலக வாணராய்ப் போகமுற் றுறைகுவ ரிவர்காண்.

(இ - ள்.) புலருமுன் - விடிவதற்கு முன்னரே, புனல் ஆடி - நீராடி, நீறு ஆடி - திருநீறு தரித்து, நம்புனிதன் இலகும் ஆலயம் விளக்கி - நமது இறைவன் விளங்கும் திருக்கோயிலைத் திருவலகிட்டு, நந்தனப்பணி இயற்றி - திருநந்தனப்பணி செய்து, மலர் கொய்து ஆய்ந்தனர் தொடுத்து - மலரெடுத்து ஆய்ந்து திருப்பள்ளித் தாமம் தொடுத்துச் சாத்தி, அரன் புகழ் செவி மடுத்து - இறைவன் புகழைச் செவி நிரம்பக் கேட்டு, இவ்வுலக வாணர் ஆய் - இவ்வுலகத்தில் வாழ்பவராய், போகம் உற்று உறைகுவர் இவர்காண் - போகந்துய்த்திருப்போர் இவர்.

ஆய்ந்தனர், முற்றெச்சம். தாதமார்க்கமாகிய சரியை நெறியினின்று சாலோக முற்றோர் இதிற் கூறப்பட்டனர். சரியையின் இயல்பினையும் பேற்றையும்,

“தாதமார்க்கஞ் சாற்றிற் சங்கரன்றன் கோயிற்
றலமலகிட் டிலகுதிரு மெழுக்குஞ் சாத்திப்
போதுகளுங் கொய்துபூந்தார் மாலை கண்ணி
புனிதற்குப் பலசமைத்துப் புகழ்ந்து பாடித்
தீதிறிரு விளக்கிட்டுத் திருநந்த வனமும்
செய்துதிரு வேடங்கண் டாலடியேன் செய்வ
தியாதுபணி யீரென்று பணிந்தவர்தம் பணியும்
இயற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுல கிருப்பர்”

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தால் அறிக. (௪௰)

தூய ராகியைஞ் சுத்திசெய் தகம்புற மிரண்டின்
நேய ராய்விதி நெறியினுன் முகமனீ ரெட்டாற்
காயம் வாய்மன வொருமையா லர்ச்சித்துக் கடவுள்
நாய னாருகு றைபத நண்ணினு ரிவர்காண்.

(இ - ள்.) தூயர் ஆகி ஐஞ் சுத்தி செய்து - புனித முடையராய் ஐவகைச் சுத்தி செய்து, அகம் புறம் இரண்டின் நேயராய் - உள்ளும் புறம்பும் அன்புடையராய், விதி நெறியினுல் - ஆகம நெறியினுல், முகமன் ஈர் எட்டால் - பதினுறு வகை உபசாரத்தாலும், காயம் வாய் மன ஒருமையால் - உடல் உரை உள்ளமாகிய இம்மூன்றின் ஒருமைப்பாட்டுடன், அர்ச்சித்து - பூசித்து, கடவுள் நாயனர் அருகு உறை பதம் நண்ணினுர் இவர்காண் - எல்லாத் தேவர்களுக்கும் இறைவனுகிய சிவபிரான் அணிமையில் உறையும் பதத்தினை அடைந்தவர் இவர்.

ஐஞ்சுத்தி - பூதசுத்தி, ஆன்ம சுத்தி, திரவிய சுத்தி, மந்திர சுத்தி, இலிங்க சுத்தி என்பன. பூத சுத்தியாவது தத்துவங்களைச் சடமென்றறிதல்; ஆன்ம சுத்தியா

வது அவ்வாறறிதல் ஆன்ம போதத்தா லன்று, திருவருளா லென்றுணர்தல்; திரவிய சுத்தியாவது ஆன்மா அறிவித்தாலன்றி அறியாதென வுணர்ந்து கண்டு கேட்டு உண்டு உயிர்த்து உற்று அறியும் பொருள் முழுதும் திருவருள் என்றுணர்தல்; மந்திர சுத்தியாவது திருவைந்தெழுத்தை முறைப்படி மாறி யுச்சரித்து அதன் உண்மையை உணர்தல்; இலிங்க சுத்தியாவது பதியாகிய சிவம் பசு பாசங்களின் பிரிவின்றி நின்று அவற்றைச் சேட்டிப்பிக்குந் தன்மையை உணர்ந்து அச்சிவம் இலிங்கத்தினும் எழுந்தருளியிருக்கு மென்றுணர்தல். சரியை புறத்தொண்டும், கிரியை புறம் அகம் இரண்டினும் செய்யுந் தொண்டும் ஆகலின் 'அகம்புற மிரண்டின் நேயராய்' என்றார். முகமன் ஈரெட்டு - சோடச வுபசாரம். கடவுளர்க்கு நாயனார் என்க. புத்திர மார்க்க மாகிய கிரியை நெறியினின்று சாமீப முற்றோர் இதிற் கூறப்பட்டனர். கிரியையின் இயல்பையும் பேற்றையும்,

> 'புத்திரமார்க் கம்புகலின் புதியவிரைப் போது
> புகையொளிமஞ் சனமமுது முதல்கொண் டைந்து
> சுத்திசெய்தா சனமூர்த்தி மூர்த்தி மானுஞ்
> சோதியையும் பாவித்தா வாகித்துச் சுத்த
> பத்தியினா லர்ச்சித்துப் பரவிப் போற்றிப்
> பரிவினொடு மெரியில்வரு காரியமும் பண்ணி
> நித்தலுமிக் கிரியையினை யியற்று வோர்கள்
> நிமலன்ற னருகிருப்பர் நினையுங் காலே''

என்னும் சிவஞானசித்தித் திருவிருத்தத்தால் அறிக. (௪௧)

> கிளர்ந்த காலினா லங்கியை நிமிர்த்துமேற் கிடைத்து
> வளர்ந்த பிங்கலை யிடைநடு வழியுகு மதியின்
> விளைந்த வின்னமு துண்டுநம் விடையவன் வடிவங்
> குளந்த னிற்குறித் தவனுருக் கொண்டவ ரிவர்காண்.

(இ - ள்.) கிளர்ந்த காலினால் - மேலெழுந்த பிராணவாயுவால், அங்கியை நிமிர்த்து - (மூலாதாரத்திலுள்ள) நெருப்பினை மேலே எழுப்பி, மேற் கிடைத்து - மேற் சென்று, வளர்ந்த பிங்கலை இடை நடுவழி உகும் - வளர்ந்த பிங்கலைக்கும் இடைக்கும் நடுவிலுள்ள சுழுமுனையின் வழியாகச் சொரிகின்ற, மதியின் விளைந்த இன் அமுது உண்டு - சந்திர மண்டிலத்தில் விளைந்த இனிய அமுதினை அருந்தி, நம் விடையவன் வடிவம் குளந்தனில் குறித்து - நமது இறைவனது திருவுருவத்தினைப் புருவமத்தியில் தியானித்து, அவன் உருக்கொண்டவர் இவர்காண் - அவன் வடிவத்தை அடைந்தவர் இவர்.

அங்கி - உடல் நடுவில் அக்கினி மண்டலத்தில் உள்ள மூலாக்கினி. பிராண வாயுவாலும் வன்னி பீசமந்திரத்தாலும் மூலக்கனலை மேலெழுப்பி என்க. மேல் - பிரமரந்திரம். பிங்கலை - வலது நாடி. இடை - இடது நாடி. நடு - சுழிமுனை நாடி. சுழி முனை வழியாக மேற் சென்று என்றுமாம். குளம் - நெற்றி; புருவ நடு. இவற்றின் இயல்புகளை யோக நூல்களில் விரிவாகக் காண்க. சகமார்க்கமாகிய யோக

நெறியினின்று சாரூப முற்றோர் இதிற் கூறப்பட்டனர். யோகத்தின் இயல்பையும் பேற்றையும்,

"சகமார்க்கம் புலனொடுக்கித் தடுத்துவளி யிரண்டுஞ்
சலிப்பற்று முச்சதுர மூலாதா ரங்கள்
அகமார்க்க மறிந்தவற்றி னரும்பொருள்க ளுணர்ந்தங்
கணைந்துபோய் மேலேறி யலர்மதிமண் டலத்தின்
முகமார்க்க வமுதுடல முட்டத்தேக்கி
முழுச்சோதி நினைந்திருத்தன் முதலாக வினைகள்
உகமார்க்க வட்டாங்க யோக முற்றும்
உழத்தலுழந் தவர்சிவன்ற னுருவத்தைப் பெறுவர்"

என்னும் சிவஞான சித்தித் திருவிருத்தத்தால் அறிக. (௪௨)

முக்க ணாயகன் பொருட்டென வேள்விகள் முடித்துத்
தொக்க வேதிய ரிவர்புனற் சாலையித் தொடக்கத்
தக்க பேரறம் புகழ்பயன் றமைநன்கு மதிக்கும்
பொக்க மாறிய நிராசையாற் புரிந்தவ ரிவர்காண்.

(இ - ள்.) முக்கண் நாயகன் பொருட்டு என - மூன்று கண்களையுடைய இறைவன் பொருட்டாக, வேள்விகள் முடித்துத் தொக்க வேதியர் இவர் - வேள்விகளைச் செய்து சிவபதம் அடைந்த அந்தணர்களிவராவர்; புனற்சாலை இத்தொடக்கம் தக்கபேர் அறம் - நீர்ச்சாலை வைத்தலாகிய இது முதலான தகுந்த பெரிய அறங்களை, புகழ்பயன் தமை நன்கு மதிக்கும் பொக்கம் மாறிய நிராசையால் - புகழையும் பயனையும் நன்கு கருதிச் செய்யும் பொய் நீங்கிய நிராசையுடன், புரிந்தவர் இவர்காண் - செய்தவர் இவர்.

புனற்சாலை - தண்ணீர்ப்பந்தர். புகழ் பயன் கருதிச் செய்யும் அறம் உண்மையறம் அன்றென்பார் 'புகழ்பயன்றமை நன்குமதிக்கும் பொக்க மாறிய' என்றார். மேல் மூன்று செய்யுளினும், சிவாகமங் கூறும் நான்கு நெறிகளுள் முன் மூன்று நெறியினின்றும் பதமுத்திகள் எய்தினோர்களைக்கூறி, இச்செய்யுள் முதலியவற்றாற் பிறவாறு சிவனுல கடைந்தவர்களைக் கூறுகின்றார். மறைநூல் கூறும் வேள்விகளைச் சிவன் பொருட்டுச் செய்த அந்தணர்களும், அறநூல் கூறும் பொதுவறங்களைப்பயன் கருதாது செய்தவர்களும் சிவனுலகில் வாழ்தல் இதிற் கூறப்பட்டது. (௪௩)

மறையி னாற்றினாற் றந்திர மரபினான் மெய்யில்
நிறையு நீற்றினர் நிராமய னிருத்தனைந் தெழுத்தும்
அறையு நாவினர் பத்தரா யரன்புகழ் கேட்கும்
முறையி னாலிவர் வினைவலி முருக்கினோர் கண்டாய்.

(இ - ள்.) மறையின் ஆற்றினால் - வேத நெறியினாலும், தந்திரமரபினால் - ஆகம நெறியினாலும், மெய்யில் நிறையும் நீற்றினர் - உடலில் நிறைந்த திருநீற்றினை

புடையவரும், நிராமயன் நிருத்தன் ஐந்து எழுத்தும் அறையும் நாவினர் - நோயற்ற வனாகிய கூத்தப்பிரானது திருவைந்தெழுத்தையும் உச்சரிக்கின்ற நாவினை யுடையாருமாய், பத்தராய் அரன் புகழ் கேட்கும் முறையினால் - அன்பராகி இறைவன் புகழைக் கேட்கின்ற முறைமையினால், வினைவலி முருக்கினார் இவர் - வினையின் வன்மையைக் கெடுத்தவர் இவர்.

வேத நெறியிலும் சிவாகமத்துறையிலும் நின்று சிவபிரானை வழிபட்டுப் பேறெய்தினோர் இதிற் கூறப்பட்டனர். (௪௪)

மறைக ளின்சத வுருத்திர மந்திர நவின்றோர்
நிறைகொள் கண்டிகை நீறணி நீரரியா ரேனுங்
குறிகு ணங்குலன் குறித்திடா தன்பரைச் சிவனென்
றறியு மன்பினாற் பிறவிவே ரறுத்தவ ரிவர்காண்.

(இ - ள்.) மறைகளின் சத உருத்திர மந்திரம் நவின்றோர் - வேதங்களி லுள்ள சதவுருத்திர மந்திரத்தைக் கூறினோரும், நிறை கொள் கண்டிகை நீறு அணி நீரர் - நிறைந்த உருத்திராக்கமாலையும் திருநீறும் அணிந்த தன்மையை யுடையாரும், யாரேனும் - யாவராயினும், குறிகுணம் குலன் குறித்திடாது - அவர் பெயரையுங் குணத்தையுங் குலத்தையுங் கருதாது, அன்பரைச் சிவன் என்று அறியும் அன்பினால் - அடியார்களைச் சிவபிரானே என்று அறிகின்ற அன்பினாலே, பிறவிவேர் அறுத்தவர் இவர்காண் - பிறவியின் மூலத்தை அறுத்தவர் இவர்.

வேத புருடனுக்கு உருத்திரம் கண்ணும், அதனுள்ளிருக்கும் திருவைந் தெழுத்துக் கண்மணியுமாம் என்று பெரியோர் கூறுவர். கண்டிகையும் நீறு மணிந் தார் எவராயினும் அவரை இன்னவாறு வழிபட வேண்டுமென்பதனை,

"எவரேனுந் தாமாக விலாடத்திட்ட திருநீறுஞ் சாதனமுங் கண்டா லுள்கி
உவராதே யவரவரைக் கண்டபோதங் குகந்தடிமைத் திறம்பேணி யுவந்து போற்றி
இவர்தேவ ரவர்தேவ ரென்று சொல்லி யிரண்டாட்டா தொழிந்தீசன் றிறமேபேணிக்
கவராதே தொழுமடியார் நெஞ்சினுள்ளே கன்றாப்பூர் நடுதறியைக் காண லாமே"

என்னும் தேவாரத்தால் அறிக. (௪௫)

ஆனஞ் சாடிய பாஞ்சுட ரிறைசிவ ஞான
தானஞ் செய்தவர் தருப்பணஞ் செய்தவர் சாம
கானஞ் செய்தவற் காலயங் கண்டுதா பித்தோர்
ஊனஞ் சேர்பிறப் பறுத்துவா ழுத்தம ரிவர்காண்.

(இ - ள்.) ஆன் அஞ்சு ஆடிய பரஞ்சுடர் இறை - பஞ்சகவ்விய மாடியபரஞ் சோதியாகிய இறைவனுடைய, சிவஞான தானம் செய்தவர் - சிவஞானத்தைத் தானஞ் செய்தவரும், தருப்பணம் செய்தவர் - தருப்பணஞ் செய்தவரும், சாமகா

னம் செய்தவற்கு - சாமகானம் பாடும் சிவபெருமானுக்கு, ஆலயம் கண்டு தாபித்தோர் - திருக்கோயில் எடுத்துப் பிரதிட்டை செய்தவருமாய், ஊனம் சேர் பிறப்பு அறுத்து வாழ் உத்தமர் இவர் காண் - குற்றம் பொருந்திய பிறப்பினைப் போக்கி வாழும் உத்தமர் இவர்.

சிவஞான தானமாவது அபர ஞானமாகிய மெய்ந் நூல்களை ஈதலும், அவற்றின் பொருளைப் பக்குவ முடையார்க்கு அறிவுறுத்தலும் முதலியன செய்தல். தருப்பணம் - சிவனைக்கருதி மந்திர நீர் இறைத்தல். (சுசு)

சிவனை யர்ச்சனை செய்பவர்க் கிசைவன செய்தோர்
அவனெ னக்குறித் தடியரைப் பூசைசெய் தாறு
சுவைய வின்னமு தருத்தினோர் தொண்டர்தம் பணியே
தவமெ னப்புரிந் துயர்ச்சியைச் சார்ந்தவ ரிவர்காண்.

(இ - ள்.) சிவனை அர்ச்சனை செய்பவர்க்கு - சிவபெருமானைப் பூசிப்பவருக்கு, இசைவன செய்வோர் - பொருந்தும் காரியங்களைச் செய்தவரும், அடியரை அவன் எனக்குறித்து - அடியார்களை அச்சிவ பெருமானே எனக்கருதி, பூசை செய்து - பூசித்து, ஆறு சுவைய இன் அமுது அருத்தினோர் - அறுவகைச் சுவையமைந்த இனிய உணவினை உண்பித்தவருமாய், தொண்டர் தம்பணியே தவம் எனப்புரிந்து - அடியார் பணியைச் செய்தலே தவமென்று கருதிச் செய்து, உயர்ச்சியைச்சார்ந்தவர் இவர்காண் - மேன்மையை அடைந்தவர் இவர்.

இசைவன - பொருந்திய உபகரணங்களை யளித்தலும் பணி செய்தலுமாம்.

ஆதி சுந்தரக் கடவுளுக் காலயம் பிறவும்
நீதி யாலருச் சனைபிற பணிகளு நிரப்பிப்
பூதி சாதன வழிநிலம் புரந்திவ ணடைந்த
கோதி லாதநின் குடிவழிக் கொற்றவ ரிவர்காண்.

(இ - ள்.) ஆதி சுந்தரக்கடவுளுக்கு - முதல்வராகிய சோமசுந்தரக்கடவுளுக்கு, ஆலயம் பிறவும் - திருக்கோயிலும் மற்றுள்ளனவும், நீதியால் அருச்சனை பிறபணிகளும் நிரப்பி - விதிப்படி அருச்சனையும் பிற திருப்பணிகளும் குறைவறச் செய்து, பூதி சாதனவழி - திருநீறு முதலிய சிவசாதன நெறியினால், நிலம் புரந்து - புவியினைக்காத்து, இவண் அடைந்த - இங்கு வந்த, கோது இலாத - குற்ற மில்லாத, நின் குடிவழிக் கொற்றவர் இவர் காண் - நின் மரபிற் றோன்றிய மன்னவர் இவர்.

ஆலயமும் பிறவும் அமைத்து என ஒரு சொல் வருவித் துரைத்தலுமாம். சஅ

என்று வேத்திரங் கொடுகுறித் தெம்மிறை நந்தி
கொன்றை வேணியா னடியர்தங் குழாத்தினைத் தேற்றி
நின்று வீழ்ந்துவீழ்ந் தஞ்சலி முகிழ்த்திட நெறியே
சென்று வானவர் நாயகன் றிருமுன்பு விடுத்தான்.

(இ - ள்.) என்று - என்று கூறி, வேத்திரம் கொடு குறித்து - பிரம்பினாற் சுட்டிக் காட்டி, எம் இறை நந்தி - எமது தலைவனாகிய திருநந்தி தேவன், கொன்றை வேணியன் - கொன்றை மாலையை யணிந்த முடியை யுடைய இறைவனது, அடியர்தம்குழாத்தினைத் தேற்றி - அடியார் கூட்டத்தினைத் தெரிவித்து, நெறியே - முறைப்படியே, நின்று வீழ்ந்து வீழ்ந்து அஞ்சலி முகிழ்த்திட - (பாண்டியன்) ஒவ்வோரிடத்திலும் நின்று பலமுறை விழுந்து வணங்கிக் கைகூப்ப, சென்று - (அவனைக் கொண்டு) சென்று, வானவர் நாயகன் திருமுன்பு விடுத்தான் - தேவர்கள் தலைவனாகிய சிவபெருமான் திருமுன் விடுத்தனன்.

பிரமன் முதலாகப் பாண்டியர் ஈறாக இது காறும் கூறப்பெற்றோரை அடியர் தங்குழாம் என்றார். நந்தி குறித்துத் தேற்றிச் சென்று விடுத்தான் என வினை முடிக்க. (௪௧)

மறைக ளாகமம் வடிவெடுத் திருபுடை வாழ்த்த
நறைகொள் யாழ்தல்இத் தும்புரு நாரதர் பாட
அறைகொள் வண்டிமிர் கொம்பரி னரம்பைய ராடக்
குறைகொள் வானவர் பதங்கிடை யாதிறை கொள்ள.

(இ - ள்.) மறைகள் ஆகமம் வடிவு எடுத்து - வேதங்களும் ஆகமங்களும் உருவங்கொண்டு, இருபுடை வாழ்த்த - இரண்டு பக்கங்களிலும் நின்று வாழ்த்தவும், நறைகொள் யாழ்தழீஇ - இனிய இசையமைந்த யாழினைத்தழுவி, தும்புரு நாரதர் பாட - தும்புருவும் நாரதரும் நின்று பாடவும், அறைகொள் வண்டு இமிர் கொம்பரின் - இசை பாடும் வண்டுகள் ஒலிக்கும் பூங்கொம்பு போல, அரம்பையர் ஆட - தேவமகளிர் ஆடவும், குறை கொள் வானவர் பதம் கிடையாது இறை கொள்ள - குறையிரக்குந் தேவர்கள் காண்டற் குரிய செவ்வி பெறாது காத்திருக்கவும்.

நறை - தேன்; தேன் போலும் இன்னிசைக் காயிற்று. தழீஇ, சொல்லிசை யளபெடை. அறை - பாடுதல்; முதனிலைத் தொழிற் பெயர். இறை கொள்ள - தங்க; ஒரு சொல். (௪௨)

மதங்க விழ்க்குமால் வரைமுக மைந்தனுஞ் சூரன்
கதங்க விழ்த்தவேற் கந்தனுங் கருதலன் வேள்வி
விதங்க விழ்த்தவாள் வீரனும் வெயின்முடித் தார்தேன்
பதங்க விழ்ப்பவீழ்ந் தேயின பணிவழி நிற்ப.

(இ - ள்.) மதம் கவிழ்க்கும் மால்வரை முகம் மைந்தனும் - மதத்தைக் கொட்டும் பெரியமலை போன்ற யானையின் முகத்தை யுடைய மூத்த பிள்ளையாரும், சூரன் கதம் கவிழ்த்த வேல் கந்தனும் - சூரபன்மனது சினத்தை அறக்கெடுத்த வேற்படை யேந்திய முருகக்கடவுளும், கருதலன் வேள்விவிதம் கவிழ்த்த வாள்வீரனும் - பகைவனாகிய தக்கன் வேள்விவகையினை அழித்த வாட்படை யேந்திய வீரபத்திரக் கடவுளும், வெயில் முடித்தார் - ஒளியினை யுடைய முடியிலணிந்த மாலைகள், பதம்

தேன் கவிழ்ப்ப - செவ்வியுள்ள தேனைச்சிந்தும்படி, வீழ்ந்து எயின பணிவழி நிற்ப - வீழ்ந்து வணங்கி ஏவின பணியின் வழியே நிற்கவும்.

மதங்கவிழ்க்கும் என்ற அடையால் வரை யானையாயிற்று. கவிழ்த்த வேல் என்க. பதம் - செவ்வி. எயின - ஏவின. (௫௧)

தூங்கு தானையை யொதுக்கிவாய் துணைக்கரம் பொத்தி
ஓங்கு மாலயன் றங்குறை யொதுங்கிநின் றுரைப்ப
வாங்கு வான்சிலை யிந்திரன் முதற்றிசை வாணர்
தாங்க டாம்புரி காரியக் குறைநின்று சாற்ற.

(இ - ள்.) தூங்கு தானையை ஒதுக்கி - தொங்குகின்ற முன்றானையை ஒதுக்கி, வாய் துணைக்கரம் பொத்தி - வாயினை இரண்டு கைகளாலும் பொத்தி, ஒதுங்கி நின்று - ஒருபுறமாக ஒதுங்கி நின்று, ஓங்கும் மால் அயன் தம் குறை உரைப்ப - சிறந்த திருமாலும் அயனும் தங்கள் குறையினைக் கூறவும், வாங்குவான் சிலை இந்திரன் முதல் திசை வாணர் - வளைந்த வானவில்லை யுடைய இந்திரன் முதலிய திசைக்காவலர்கள், நின்று - ஒரு புறமாக நின்று, தாங்கள் புரி காரிய குறை சாற்ற - தாங்கள் புரிந்துவரும் காரியங்களின் குறைகளைக் கூறவும்.

மாலயன் ஒதுக்கிப் பொத்தி ஒதுங்கி நின்று குறை உரைப்ப என்க. தாம், அசை. (௫௨)

எழுவி னோடுதண் டேந்திவாய் மென்றெயி றதுக்கிக்
குழுமு பாரிடத் தலைவருங் கோடிகூற் றொதுங்கி
விழும மூழ்கிமெய் பனித்திட விதிர்க்குமுக் குடுமிக்
கழுமு ளேந்திய கணத்தவர் கடைதொறுங் காப்ப.

(இ - ள்.) எழுவினோடு தண்டு ஏந்தி - வளைதடியையும் தண்டத்தையும் ஏந்தி, வாய் மென்று எயிறு அதுக்கி - வாயினைமென்று பற்களை அதுக்கி, குழுமு பாரிடத் தலைவரும் - கூடிய பூதகணத் தலைவரும், கோடி கூற்று ஒதுங்கி - அளவிறந்த கூற்றுவர்கள் ஒதுங்கி, விழுமம் மூழ்கி மெய் பனித்திட - துன்பத்துள் முழுகி உடல் நடுங்க, விதிர்க்கும் - அசைக்கின்ற, முக்குடுமிக் கழுமுள் ஏந்திய கணத்தவர் - மூன்று சிகையினை யுடைய சூலப்படை ஏந்திய சிவகணத்தலைவர்களும், கடைதொறும் காப்ப - வாயில் தோறும் காவல் பூண்டு நிற்கவும்.

பாரிடம் - பூதகணம். கணத்தவரும் என எண்ணும்மை விரிக்க. (௫௩)

சித்தர் வானவர் தானவர் சாரணர் திணிதோள்
வைத்த யாழினர் கின்னரர் மாதவ ரியக்கர்
பைத்த பாரிடர் காருடர் பாதல வாணர்
சுத்த யோகியர் முதற்கணத் தொகையெலாம் பரவ.

(இ - ள்.) சித்தர் வானவர் தானவர் சாரணர் - சித்தரும், வானவரும் அவுணரும் சாரணரும், திணிதோள் வைத்த யாழினர் - வலிய தோளின்கண் வைத்த

யாழினையுடைய விஞ்சையரும், கின்னரர் மாதவர் இயக்கர் - கின்னரரும் மாதவரும் இயக்கரும், பைத்த பாரிடர் காருடர் - பரவிய பூதகணத் தலைவரும் கருடரும், பாதல வாணர் - நாகரும், சுத்த யோகியர் முதல் கணத் தொகை எலாம் பரவ - தூய சிவயோகியரும் முதலாகிய பல கணங்களும் துதிக்கவும்.

பைத்த - பரந்த என்னும் பொருட்டு. (௫௪)

இனிவ ரும்பிறப் பறுத்தெமைக் காத்தியா லெனத்தங்
கனிவ ரும்பிய வன்பெழு கருணையா ரமுதைப்
பனிவ ருந்தடங் கண்களாற் பருகிமெய் பனிப்ப
முனிவர் சங்கர சிவசிவ வெனமுறை முழங்க.

(இ - ள்.) இனி வரும் பிறப்பு அறுத்து - மேல்வரும் பிறப்பினை வேரறுத்து, எமைக் காத்தி என - எங்களைக் காக்கக் கடவை என்று வேண்டி, தம் கனிவு அரும்பிய அன்பு எழு கருணை ஆர் அமுதை - தங்கள் கனிவு தோன்றிய அன்பின்கண் விளைந்த அருள் நிறைந்த அமுதினை, பனி வரும் தடம் கண்களால் பருகி - ஆனந்த நீர்த்துளி வருகின்ற பெரிய கண்களாகிய வாயாற் பருகி, மெய் பனிப்ப - உடல் நடுங்க, முனிவர் சங்கர சிவசிவ என முறை முழங்க - முனிவர்கள் சங்கர சிவசிவ என்று முறையே முழங்கவும்.

அன்பெழு கருணை யாரமுது என்ற கருத்தினை,

"அம்மையே யப்பா வொப்பிலா மணியே
அன்பினில் விளைந்த வாரமுதே"

என்னும் திருவாசகத்திற் காண்க. ஆல், அசை. (௫௫)

வரந்த வாதன யாவர்க்கும் வரன்முறை வழங்கி
முருந்த வாநகை* மலைக்கொடி முகிழ்நகை யரும்பத்
திருந்த வாயிரங் கதிர்விடு சிங்கமெல் லணைமேல்
இருந்த நாயக னிருக்கைகண் டிறைஞ்சின னிறைவன்.

(இ - ள்.) யாவர்க்கும் வரன் முறை - அனைவருக்கும் அவரவர் தகுதிக்கேற்ப, தவாதன வரம் வழங்கி - கெடாதனவாகிய வரங்களை அருளிச் செய்து, முருந்து அவாம் நகை மலைக்கொடி - மயிலிறகின் அடியும் விரும்பும் பல் வரிசைகளையுடைய மலை வல்லியாகிய உமை யம்மையார், முகிழ் நகை அரும்ப - புன்னகை செய்ய, திருந்த ஆயிரம் கதிர் விடு சிங்க மெல் அணைமேல் - திருத்தமாக அளவிறந்த ஒளி விடுகின்ற மெல்லிய சிம்மாதனத்தின்மேல், இருந்த நாயகன் இருக்கை கண்டு - வீற்றிருந்த இறைவனுடைய இருப்பினைத் தரிசித்து, இறைவன் இறைஞ்சினன் - வரகுண வேந்தன் வணங்கினான்.

முருந்த வாணகை என்னும் பாடத்திற்கு முருந்து போலும் ஒள்ளிய நகை என்றுரைத்துக் கொள்க; இதற்கு அ அசை. ஆயிரஞ் சிங்கஞ் சுமந்த அணையென்றுமாம்.

(பா - ம்.) * முருந்த வாணகை.

உரைக ளுந்தடு மாறமெய் யுரோமமுஞ் சிலிர்ப்பக்
கரையி றந்தவின் னருட்பெருங் கடலிலன் பென்னுந்
திரையி றந்தவா றீர்த்திட மிதந்துபோய்ச் செப்பின்
வரையி றந்தவா னந்தவா ரமுதைவாய் மடுத்தான்.

(இ - ள்.) உரைகளும் தடுமாற - சொற்கள் குழற, மெய் உரோமமும் சிலிர்ப்ப - உடல் புளகம் போர்ப்ப, கரை இறந்த இன் அருள் பெருங் கடலில் - எல்லையில்லாத இனிய பெரிய அருட்கடலின்கண், அன்பு என்னும் திரை இறந்த ஆறு ஈர்த்திட - அன்பாகிய அலையில்லாத ஆறு இழுத்துச் செல்ல, மிதந்து போய் - அதில் மிதந்து சென்று, செப்பின் வரை இறந்த - சொல்லின் எல்லையைக் கடந்த, ஆனந்த ஆர் அமுதை வாய் மடுத்தான் - - பேரின்பமாகிய அரிய அமிழ்தத்தை உண்டான்.

உரை தடுமாறல் முதலியன அன்பின் மிகுதியால் விளைவன. மணிவாசகரும் 'அன்பெனும் ஆறு கரையது புரள' என அன்பை ஆறாகக் கூறினர். கலக்கமற்ற பேரன்பானது இழுத்துச் செல்ல வருத்தமின்றிச் சென்று இறைவனைக் கண்டு சிவானந்தத்திற் றிளைத்தமையை இங்ஙனம் உருவகித்தார். கடலென்றதற்கேற்ப அமுதென்றார்; இதன் நயம் பாராட்டற் பாலது. (௩௭)

௩௮. தன்பு லன்களுங் கரணமுந் தன்னவே யாக்கி
அன்பு டம்புகொண் டவனெதி ரருட்சிவ லோகம்
பின்பு பண்டுபோன் மதுரையாப் பிராட்டியுந் தானும்
முன்பி ருந்தவா றிருந்தனன் சுந்தர மூர்த்தி.

(இ - ள்.) தன் புலன்களும் கரணமும் தன்னவே ஆக்கி - தன் இந்திரியங்களையும் அந்தக் கரணங்களையும் தன்னுடையனவாகவே செய்து, அன்பு உடம்பு கொண்டவன் எதிர் - அன்பே வடிவமாகக் கொண்டு நின்ற வரகுண பாண்டியனெதிரே, அருள் சிவலோகம் - கருணை வடிவமாகிய சிவலோகமானது, பின்பு பண்டுபோல் மதுரையா - பின் முன்புபோல மதுரையாக, சுந்தர மூர்த்தி - சோம சுந்தரக் கடவுள், பிராட்டியும் தானும் - உமையம்மையும் தானும், முன்பு இருந்தவாறு இருந்தனன் - முன்பு இருந்தது போலவே இருந்தருளினன்.

தன்னவாக்குதல் - விடயங்களிற் செல்லாது தனக்கு அடங்கி யிருக்கச் செய்தல். ஆக என்பது ஈறு தொக்கது. பிராட்டியும் தானும் இருந்தனன் என்றது வழுவமைதி;

"தானுந்தன் றையலும் தாழ்சடையோ னாண்டிலனேல்" என்புழிப் போல. (௩௮)

வேந்தர் சேகரன் வரகுணன் விண்ணிழி கோயில்
ஏந்தல் சேவடி யிறைஞ்சிநின் றிறையருட் பெருமை
ஆய்ந்த வாவுதன் னகம்புக வின்பமோ டன்பு
தோய்ந்து தாரைநீர் துளும்பநாக் குழறிடத் துதிப்பான்.

(இ - ள்.) வேந்தர் சேகரன் வரகுணன் - மன்னர்கட்கு ஒருமுடிபோல்பவனாகிய வரகுண பாண்டியன், விண் இழி கோயில் ஏந்தல் சேவடி இறைஞ்சி - வானினின்றும் இறங்கிய இந்திர விமானத்தின் கண் வீற்றிருக்கும் சோமசுந்தரக்கடவுளின் சிவந்த திருவடிகளைப் பணிந்து, நின்று - திருமுன் நின்று, இறை அருள் பெருமை - இறைவனது திருவருட் பெருக்கம், ஆய்ந்து அவாவு தன் அகம்புக - ஆராய்ந்து விரும்பும் தனது உள்ளத்திற் புகுந்த அளவில், இன்பமோடு அன்பு தோய்ந்து - பேரின்பத்திலும் அன்பினும் அழுந்தி, தாரை நீர் துளும்ப - கண்களில் ஆனந்த நீர் ததும்பவும், நாக்குழறிட - நாவானது குழறவும், துதிப்பான் - பரவுவானாயினன்.

அவன் கண்ட காட்சியும் எய்திய இன்பமும் கனவுபோல் உள்ளத்திற் றோன்ற அதனை ஆராய்ந்தவிடத்து இறைவனது திருவருட் பெருமை புலனாயினமையின் துதிப்பானாயினன் என்க. (௩௯)

[கொச்சகக்கலிப்பா]

நாயினே னென்னை* நடுக்கும் பழியகற்றித்
தாயினே ராகித் தலையளித்தாய் தாள்சரணஞ்
சேயினேன் காணச் சிவலோகங் காட்டிப்பின்
கோயினேர் நின்றவருட் குன்றேநின் றாள்சரணம்.

(இ - ள்.) நாயினேன் என்னை - நாய் போன்ற அடியேனை, நடுக்கும் பழி அகற்றி - வருத்துகின்ற கொலைப் பாவத்தினின்றும் நீக்கி, தாயின் நேராகி - தாயே போன்று, தலை யளித்தாய் தாள் சரணம் - தலையளி செய்து ஆண்டவனே நின் திருவடிகட்கு வணக்கம்; சேயினேன் காண - நின் திருவருளுக்குச் சேய்மையிலுள்ள யானுங் கண்டு களிக்க, சிவலோகங் காட்டி - சிவபுரத்தைக் காண்பித்தருளி, பின் - பின்னர், கோயில் நேர் நின்ற - திருக்கோயிலில் என்னெதிரே நின்றருளிய, அருள் குன்றே - கருணை மலையே, நின் தாள் சரணம் - நினது திருவடிகளுக்கு வணக்கம்.

"பாலினைந் தூட்டுந் தாயினுஞ் சாலப் பரிந்து"

என்ற **திருவாசகம்** இங்கே சிந்திக்கற்பாலது. சேய்மை - தூரம். (௪௰)

மாழாந்து செய்யும் வினைவழிபோய் வன்னரகிற்
றாழா தடியனேற் கன்புதந்தாய் தாள்சரணம்
ஏழாகி நான்கு வகையா யெழுபிறப்பும்
பாழாக வென்னைப் பணிகொண்டாய் தாள்சரணம்.

(இ - ள்.) மாழாந்து செய்யும் வினைவழிபோய் - மயங்கிச் செய்கின்ற வினையின் வழியே சென்று, வல் நரகில் தாழாது - கொடிய நரகத்தில் அழுந்தாத வண்ணம், அடியனேற்கு அன்பு தந்தாய் - அடியேனுக்கு அன்பினை யளித்தவனே, தாள்

---

(பா - ம்.) * நாயினேன் றன்னை.

சரணம் - நினது திருவடிகளுக்கு வணக்கம்; எழு ஆகி நான்கு வகையாய் எழுபிறப்பும் பாழாக - எழு வகைப்பட்டு நால்வகைத் தோற்றமாக வாராநின்ற பிறவிகள் அனைத்தும் பாழ்பட, என்னைப் பணிகொண்டாய் தாள்சரணம் - அடியேனை ஏவல் கொண்டவனே நின் திருவடிகட்கு வணக்கம்.

எழு - தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பன. நான்குவகை - அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பன. எழு - எழுகின்ற; உண்டாகின்ற. (௬௧)

வெங்கட் பழியின் வினையேனை வேறாக்கித்
திங்கட் குலக்களங்கந் தீர்த்தாய்நின் றாள்சரணம்
அங்கட் சிவபுரமுண் டன்புடையார்க் கென்பதையின்
றெங்கட்குக் காட்டி யிசைவித்தாய் தாள்சரணம்.

(இ - ள்.) வினையேனை - தீவினையுடைய என்னை, வெங்கண் பழியின் வேறு ஆக்கி - கொடிய பழியினின்றும் வேறுபடுத்தி, திங்கள்குலக் களங்கம் தீர்த்தாய் - சந்திர குலத்திற்கு வந்த மறுவைத் தொலைத்தவனே, நின் தாள்சரணம் - நினது திருவடிகளுக்கு வணக்கம்; அன்பு உடையார்க்கு அங்கண் சிவபுரம் உண்டு என்பதை - அன்புடையார்களுக்கு அழகிய இடத்தையுடைய சிவலோகம் உண்டு என்று நூல் கூறுவதை, இன்று - இப்பொழுது, எங்கட்குக் காட்டி இசைவித்தாய் - அடியேங்களுக்குக் காண்பித்து இசையச் செய்தவனே, தாள்சரணம் - நின் திருவடிகட்கு வணக்கம்.

தானுற்ற பழியால் தனது குலத்திற்கே களங்கமுண்டாகுமெனக் கருதினனாகலின் 'திங்கட்குலக் களங்கம் தீர்த்தாய்' என்றான். அங்கண் என்பதற்கு அவ்விடம் என்றும், மறுமை என்றும் உரைத்தலுமாம். ஆகம வளவையால் அறியப்படுவதைக் காட்சியளவையானும் அறியச்செய்தாய் என்றனனென்க. (௬௨)

[கலி நிலைத்துறை]

என்ன வேத்தியின் னருள்முகந் தீறிலா வன்பாற்
பின்னர் வேறுபல் பூசையும் பிறக்குவித் திருந்தான்
மன்ன ரேறடை யார்க்கொரு மடங்கலே றடல்வேற்
றென்ன ரேறெனத் தோன்றிய வரகுண தேவன்.

(இ - ள்.) என்ன ஏத்தி - என்று துதித்து, மன்னர் ஏறு - அரசர்களுள் ஆண் சிங்கம்போன்றவன், அடையார்க்கு ஒரு மடங்கல் ஏறு - பகைவர்களுக்கு ஒரு இடியேறு போன்றவன், அடல்வேல் தென்னர் ஏறு - வெற்றி பொருந்திய வேற்படையேந்திய பாண்டியர்களுள் ஏறுபோன்றவன், என தோன்றிய வரகுணதேவன் - என்னும்படி பிறந்த வரகுணதேவ னென்னும் பாண்டியன், இன் அருள் முகந்து - இனிய திருவருளை முகந்துண்டு, ஈறு இலா அன்பால் - அழிவில்லாத அன்பினால், பின்னர் வேறு பல் பூசையும் பிறக்குவித்து இருந்தான் - பின் பல வேறுவகைப்பட்ட பூசனைகளையும் விளங்கச் செய்வித்து இருந்தனன்.

பிறங்குவித்து என்பது வலித்தலாயிற்று. மடங்கல் - இடி. தென்னர் ஏறு - பாண்டியருட் சிறந்தவன். (௬௩)

என்ற தென்மலை முனிவனை யிருடிக ணோக்கி
அன்று வாசவன் பழிகரி சாபமந் தணனைக்
கொன்று தாயொடுங் கூடிய கொடுவினை முதலாத்
துன்று பாவமு மதுரையிற் றுலைத்தன னன்றே.

(இ - ள்.) என்ற - என்று கூறியருளிய, தென்மலை முனிவனை - பொதியின் மலையையுடைய அகத்திய முனிவனை, இருடிகள் நோக்கி - முனிவர்கள் பார்த்து, அன்று - முன்பு, வாசவன் பழி - இந்திரன் பழியையும், கரிசாபம் - வெள்ளையானை சாபத்தையும், அந்தணனைக் கொன்று தாயொடுங் கூடிய கொடுவினை முதலாத் துன்று பாவமும் - தந்தையாகிய அந்தணனைக் கொன்று தாயுடன் கலவி செய்த மாபாதக முதலாக மிக்க பாவங்களையும், மதுரையில் தொலைத்தனன் அன்றே - மதுரையிலேயே போக்கி யருளினான் அல்லவா.

வேறிடங்களிற் செய்த பாவ முதலாயினவும் முன்பு இம் மதுரையிலே போக்கப்பட்டன என்றவாறு. தேவர், மனிதர், விலங்கு என்னும் எவ்வுயிரின் பாவத்தையும் இந்நகரிற் போக்கினன் என்பதற்கு வாசவன், கரி, மாபாதகன் வரலாறுகள் சுட்டப் பெற்றன. இத் திருவிளையாடற் சரிதம் அகத்தியரால் முனிவர்கட்குக் கூறப்பட்டதென்பதனைப் புராண வரலாற்றுட் காண்க. (௬௪)

பரம னெண்குணன் பசுபதி வரகுணற் பற்றும்
பிரம வன்பழி யிடைமரு திடைவிட்டுப் பெயர
வரம ளித்தவா றென்னைகொல் வள்ளலே யிதனைத்
திரமு றப்புக லெமக்கென முனிவர்கோன் செப்பும்.

(இ - ள்.) பரமன் எண்குணன் பசுபதி - (அங்ஙனந் தீர்த்தருளிய) பரமனும் எட்டுக் குணங்களையுடையவனும் பசுபதியுமாகிய சோமசுந்தரக் கடவுள், வரகுணன் பற்றும் பிரம வன்பழி - வரகுணனைப் பிடித்த கொடிய பிரமசாயை, இடைமருது இடைவிட்டுப் பெயர வரம் அளித்தவாறு என்னைகொல் - திருவிடைமருதூரின்கண் விட்டு நீங்குமாறு வரங் கொடுத்தது என்னையோ, வள்ளலே இதனைத் திரம் உற எமக்குப் புகல் என - வள்ளலே இச்செய்தியை எங்களுக்கு ஐயுறவு நீங்கக் கூறியருளுவாயாக என்று வேண்ட, முனிவர்கோன் செப்பும் - முனிவர் வேந்தனாகிய அகத்தியன் கூறி யருளுவான்.

திரம் - உறுதி. கொல், அசை. (௬௫)

பூத நாயகன் சுந்தரன் புண்ணிய மூர்த்தி
யாத லாலன்ன தலத்துறை யடியவ ரஞ்சிப்
பாத கஞ்செயா தொழுகுறா உம் படிநினைந் தினைய
தீது றாஉம்பழி தனையிடை மருதினிற் றீர்த்தான்.

(இ - ள்.) பூதநாயகன் சுந்தரன் - பூதங்கட்கு இறைவனாகிய சோமசுந்தரக் கடவுள், புண்ணியமூர்த்தி ஆதலால் - அறவடிவினன் ஆதலின், அன்னதலத்து உறை அடியவர் - அந்தப்பதியில் உறையும் அடியார்கள், அஞ்சி பாதகம் செய்யாது ஒழுகுமாறும்படி நினைந்து-பயந்து பாவஞ்செய்யாது ஒழுகுமாறு திருவுளங்கொண்டு, இனைய தீது உறாஉம் பழிதனை - இந்தத் தீமை மிக்க பழியினை, இடைமருதினில் தீர்த்தான் - திருவிடைமருதூரில் தீர்த்தருளினன்.

பூதம் - ஆன்மா. அன்ன, இனைய என்பன சுட்டுத்திரிபுகள். அளபெடைகள் இன்னிசை நிறைக்க வந்தன. (௬௬)

என்ற கத்திய முனியிறை யிறைகொடுத் தியம்ப
நன்றெ னச்சிரம் பணிந்து*மெய்ஞ் ஞானவா னந்தந்
துன்றி நற்றவர் சுந்தரச் சோதிசே வடிக்கீழ்
ஒன்று மற்புத வானந்த வுததியுட் குளித்தார்†.

(இ - ள்.) என்று அகத்தியமுனி இறை - என்று அகத்தியனாகிய முனி மன்னன், இறை கொடுத்து இயம்ப - விடை கொடுத்தருள, நல் தவர் - நல்ல தவத்தினையுடைய முனிவர்கள், நன்று எனச் சிரம்பணிந்து - நன்று என்று சிரமசைத்து, மெய் ஞானம் ஆனந்தம் துன்றி - உண்மையறி வானந்தத்தில் தோய்ந்து, சுந்தரச் சோதி சேவடிக்கீழ் ஒன்றும் - சோமசுந்தரக் கடவுளின் சிவந்த திருவடியின்கீழ்ப் பொருந்தும், அற்புத ஆனந்த உத்தியுள் குளித்தார் - அற்புதமாகிய பேரின்பக் கடலில் மூழ்கினார்கள்.

அகத்தியனாகிய முனியிறை என்க. இறை - விடை. மெய்ஞ்ஞான வானந்தம் - சச்சிதானந்தம். (௬௭)

[கொச்சகக் கலிப்பா]

அன்ன தனித் தொன்மதுரை யன்றுதொடுத் தின்றெல்லை
தன்னனைய தாயகில தலங்கள்சிகா மணியாகிப்
பொன்னகரின் வளஞ்சிறந்து பூவுலகிற் சிவலோகம்
என்னவிசை படப்பொலிந்த தேழிரண்டு புவனத்தும்.

(இ - ள்.) அன்னதனி தொல் மதுரை - அந்த ஒப்பற்ற பழைய மதுரைப்பதி, அன்று தொடுத்து இன்று எல்லை - அன்றுமுதல் இன்று வரையும், தன் அனையதாய் - தனக்குத்தானே நிகரானதாய், அகில தலங்கள் சிகாமணியாகி - எல்லாத் தலங்களுக்கும் ஒரு முடிமணியாய், பொன் நகரின் வளம் சிறந்து - தேவ உலகத்தினும் வளம் மிக்கு, ஏழ் இரண்டு புவனத்தும் பூ உலகில் சிவலோகம் என்ன இசைபடப் பொலிந்தது - பதினான்கு உலகங்களினும் பூலோக சிவலோகமென்று கூறப் புகழுடன் விளங்கியது.

வேறு ஒப்பாவ தில்லை யென்பார் 'தன்னனையதாய்' என்றார். இதனால் மதுரைக்குப் பூலோக சிவலோகம் என்னும் பெயருண்டானமை கூறப்பட்டது. (௬௮)

ஆகச் செய்யுள் - ௨௦௬௰.

---

(பா - ம்.) *பனித்து. †களித்தார்.

## நாற்பத்தொன்றாவது

# விறகுவிற்ற படலம்

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

நெடியவன் பிரமன் றேட நீண்டவன் றென்னற் கேழின்
முடியதாஞ் சிவலோ கத்தைக் காட்டிய முறையீ தையன்
படிமிசை நடந்து பாடிப் பாணன்றன் விறகா ளாகி
அடிமையென் றடிமை கொண்ட வருட்டிற மெடுத்துச் சொல்வாம்.

(இ - ள்.) நெடியவன் பிரமன் தேட நீண்டவன் - திருமாலும் பிரமனுந் தேட (அவர்கட்குக் கிட்டாமல் ஒளிப்பிழம்பாய்) வளர்ந்த சோமசுந்தரக் கடவுள், தென்னற்கு - வரகுண பாண்டியனுக்கு, ஏழின் முடியதாம் சிவலோகத்தை - ஏழு உலகங்கட்கும் முடியாகவுள்ள சிவபுரத்தை, காட்டிய முறை ஈது - காட்டியருளிய திருவிளையாடல் இதுவாகும்; ஐயன் - (இனி) அவ் விறைவனே, படிமிசை விறகு ஆள் ஆகி நடந்து பாடி - புவியின்மேல் விறகு சமந்து விற்கும் ஆளாகி நடந்து இசை பாடி, பாணன் தன் அடிமை என்று அடிமைகொண்ட - பாணபத்திரனுக்கு, அடிமை என்று கூறி அவனை அடிமைகொண்டருளிய, அருள் திறம் எடுத்துச் சொல்வாம் - திருவருளின் திறத்தை எடுத்துக் கூறுவாம்.

ஏழு - ஏழுலகங்கள்; ஆகுபெயர். முடியது, அது பகுதிப்பொருள் விகுதி. ஏழுலகங்களையும் அவற்றின் முடியாகச் சிவலோகம் விளங்குதலையும்,

> "புவலோகங் கடந்துபோய்ப் புண்ணியருக் கெண்ணிறந்த போக மூட்டுஞ்
> சுவலோகங் கடந்துபோய் மகலோகஞ் சனலோகந் துறந்துமேலைத்
> தவலோகங் கடந்துபோய்ச் சத்தியலோ கங்கடந்து தண்டு ழாயோன்
> நவலோகங் கடந்துலக நாயகமாஞ் சிவலோக நண்ணி னாரே"

என, மேல் மலயத்துவசனை யழைத்த படலத்திற் கூறியிருப்பது காண்க. வானோர்க்கும் அரியனும் இறைவன் அடியார்க்கு எளியனா யிருக்குந் தன்மை தோன்ற 'நெடியவன் பிரமன் றேட நீண்டவன்...விறகாளாகி அடிமையென்று' என்றனர். நெடியவன் றேட நீண்டவன், அடிமையென்று அடிமைகொண்ட என்பவற்றின் நயம் ஓர்ந்துணர்க. தன், சாரியை. (க)

மன்றலந் தெரியன் மார்பன் வரகுணன் செங்கோ லோச்சிப்
பொன்றலங் காவ லானிற் பொலியுநா ளேம நாதன்
என்றொரு விறல்யாழ்ப் பாணன் வடபுலத் திருந்தும் போந்து
வென்றிகொள் விருதி னோடும் விஞ்சைசூழ் மதுரை சார்ந்தான்.

(இ - ள்.) மன்றல் அம் தெரியல் மார்பன் வரகுணன் - மணம் பொருந்திய அழகிய மாலையை யணிந்த மார்பினை யுடையனாகிய வரகுண பாண்டியன், செங்கோல் ஒச்சி - செங்கோல் நடாத்தி, பொன் தலம் காவலானில் பொலியுநாள் - பொன்னுலகினைப் புரக்குந் தேவேந்திரனைப்போல விளங்கு நாளில், ஏமநாதன் என்று ஒரு விறல் யாழ்ப்பாணன் - ஏமநாதன் என்னும் ஒரு வெற்றியை யுடைய யாழ்ப்பாணன், வடபுலத்திருந்தும் போந்து - வட நாட்டினின்றும் வந்து; வென்றி கொள் விருதினோடும் - வெற்றியினாற் கொள்ளப்பட்ட விருதுகளோடும், விஞ்சை சூழ் மதுரை சார்ந்தான் - கல்வி மிக்க மதுரையை அடைந்தான்.

யாழ்ப்பாணன் - யாழாற் பாடும் பாணன். முன் பலரை இசையில் வென்று விருதுகள் பெற்றவனென்பது 'வென்றிகொள் விருதினோடும்' என்பதனாற் பெறப் பட்டது. விருதினோடும் போந்து மதுரை சார்ந்தான் என்க. (உ)

பூழியர் பெருமான் கோயில் புகுந்துவேத் தவைபத் தெய்திச்
சூழிமால் யானை யானைத் தொழுதுபல் புகழ்கொண் டாடி
ஏழிசை மழலை வீணை யிடந்தழீஇச் சுருதி கூட்டி
வாழியின் னிசைத்தேன் மன்ன னஞ்செவி வழியப் பெய்தான்.

(இ - ள்.) பூழியர் பெருமான் கோயில் புகுந்து - பாண்டியர் தலைவனாகிய வரகுண தேவன் மாளிகையிற் சென்று, வேத்து அவையத்து எய்தி - அரசவையை அடைந்து, சூழிமால் யானையானைத் தொழுது - முகபடாமணிந்த பெரிய யானைகளையுடைய வேந்தனை வணங்கி, பல்புகழ் கொண்டாடி - பல புகழ்களையும் பாராட்டி, ஏழ் இசைமழலை வீணை - ஏழு இசைகளையுடைய மழலைபோலும் இனிமையைப் பயக்கும் யாழினை, இடம் தழீஇச் சுருதி கூட்டி - இடப்பக்கங்கொண்டு சுருதி கூட்டி, இன் இசைத்தேன் - இனிய இசையாகிய தேனை, மன்னன் அஞ்செவி வழியப் பெய்தான் - அரசனது அகஞ் செவி நிரம்பி வழியுமாறு சொரிந்தான்.

தழீஇ, சொல்லிசை யளபெடை. சுருதி கூட்டி - பண்ணமைத்து. வாழி, மங்கலப் பொருட்டாய அசைச்சொல். அஞ்செவி - அகஞ்செவி. (௩)

முகையுடைந் தவிழ்ந்த மாலை முடித்தலை துளக்கித் தூசு
பகலவிர் மணிப்பூ ணல்கிப் பல்லுணக் கருவி நல்கி
அகன்மனை வேறு காட்டி யரசர்கோன் வரிசை செய்ய
இகலறு களிப்பி னோடு மிசைவல்லா னில்லிற் புக்கான்.

(இ - ள்.) முகை உடைந்து அவிழ்ந்த மாலை முடித்தலை துளக்கி - அரும்பின் முறுக்குடைந்து விரிந்த மலராலாகிய மாலையை யணிந்த முடியினையுடைய தலையை அசைத்து, தூசு - பல ஆடைகளையும், பகல் அவிர் மணிப்பூண் நல்கி - சூரியன்போல விளங்கும் மணிக்கலன்களையுங் கொடுத்து, பல் உணக்கருவி நல்கி - உணவுக்கு வேண்டிய பல பொருள்களையும் அளித்து, அகன்மனை வேறு காட்டி - அகன்ற இல்லம் வேறு காண்பித்து, அரசர் கோன் வரிசை செய்ய - மன்னர் மன்னனாகிய

வரகுண பாண்டியன் சிறப்புச் செய்ய இகல் அறு களிப்பினோடும், பகையற்ற மகிழ்ச்சியோடும், இசை வல்லான் இல்லில் புக்கான் - இசையில் வல்ல ஏமநாதன் தனக்கு அமைத்த வீட்டிற் சென்றான்.

கருவி - உபகரணம். அரசன் வரிசை செய்தமையால் இங்கும் தன்னை வெல்லவல்லார் இலரெனக் கருதி மகிழ்ந்தனனென்பார் 'இகலறு களிப்பினோடும்' என்றார். (௫)

மீனவன் வரிசை பெற்ற செருக்கினும் விருதி னானும்
மானமேல் கொண்டு தன்னோ டின்னிசை பாட வல்ல
தானயாழ்ப் புலவர் வேறிங் கில்லெனத் தருக்குஞ் செய்தி
கோனறிந் துழையர்க் கூவிப் பத்திரற் கொணர்தி ரென்றான்.

(இ - ள்.) மீனவன் வரிசைபெற்ற செருக்கினும் - பாண்டியன் செய்த வரிசைகளைப் பெற்ற செருக்கினாலும், விருதினானும் - (முன் பல அரசர்களிடம் பெற்ற) விருதினாலும், மானம் மேல்கொண்டு - பெருமை மிக்கு, தன்னோடு இன் இசை பாடவல்ல - தன்னுடன் இனிய இசை பாடுதற்கு வல்ல, தான யாழ்ப்புலவர் - தானமமைந்த யாழ்ப்புலவர், இங்கு வேறு இல் எனத் தருக்கும் செய்தி - இங்கு வேறு ஒருவருமில்லை என்று கருதி இறுமாக்குஞ் செய்தியை, கோன் அறிந்து - பாண்டி மன்னன் அறிந்து, உழையர்க் கூவி - ஏவலாளரை விளித்து, பத்திரன் கொணர்திர் என்றான் - நமது பாணபத்திரனை அழைத்து வாருங்கள் என்று ஏவினான்.

தானம்-இசை தோன்றுமிடம். தருக்கினன் அங்ஙனந் தருக்குஞ் செய்தியை என விரித்துரைக்க. உழையர் - ஒற்றர். (௬)

உழையரால் விடுக்கப் பட்ட பத்திர னுவரி வென்றோன்
கழல்பணிந் தருகு நிற்பக் கௌரிய னோக்கிப் பாணி
பழகிசை வல்லா னோடும் பாடுதி கொல்லோ வென்ன
மழலையா ழிடந்தோ ளிட்ட பாணர்கோன் வணங்கிச் சொல்வான்.

(இ - ள்.) உழையரால் விடுக்கப்பட்ட பத்திரன்-அவ்வொற்றரால் அழைத்து வரப்பட்ட பாணபத்திரன், உவரி வென்றோன் கழல் பணிந்து - கடலை வென்ற பாண்டியன் அடிகளை வணங்கி, அருகு நிற்ப - பக்கத்தில் நிற்க, கௌரியன் நோக்கி - பாண்டியன் அவனைப் பார்த்து, பாணி பழகு இசை வல்லானோடும் - பாடுதல் பயின்ற இசைவல்லானாகிய ஏமநாதனோடும், பாடுதி கொல்லோ என்ன - நீ பாடவல்லையோ என்று வினவ, மழலையாழ் இடந்தோள் இட்ட பாணர்கோன் வணங்கிச் சொல்வான் - இனிய யாழை இடது தோளிலிட்ட பாணர் தலைவன் வணங்கிக் கூறுவான்.

உழையர் அழைத்து வந்துவிட அங்ஙனம் விடுக்கப்பட்ட பத்திரன் என விரித்துக்கொள்க. உவரி-உவர்ப்புடையது; கடல்; இ, வினைமுதற் பொருள் விகுதி. முன்னோன் செயல் இவன்மீது ஏற்றிக் கூறப்பட்டது. பாணி - பாட்டு; தாளமு

மாம். அடிப்பட்ட பயிற்சியுடையன் என்றற்கு 'பாணி பழகிசை வல்லான்' என்ற னன்சொல், அசை. இடந்தோள், மெலித்தல். (௬)

தென்னவர் பெரும யானுன் றிருவுள வலனுங் கூடன்
முன்னவ னருளுங் கூட்டு முயற்சியான் முயன்று பாடி
அன்னவன் விருது வாங்கி யவனைவீ றழிப்ப னென்றான்
மன்னவ னாளைப்பாடு போகென வரைந்து சொன்னான்.

(இ - ள்.) தென்னவர் பெரும - பாண்டியர் பெருமானே, யான் - அடியேன், உன் திரு உள வலனும் - உனது திருவுள்ளத்தின் வலிமையும், கூடல் முன்னவன் அருளும் - கூடலில் வீற்றிருக்கும் முதல்வனாகிய சோமசுந்தரக் கடவுளின் திருவருளும், கூட்டும் முயற்சியால் முயன்று பாடி - கூட்டுகின்ற முயற்சியின் செய்து சென்று பாடி, அன்னவன் விருது வாங்கி - அந்த ஏமநாதன் விருதினை வாங்கி, அவனை வீறு அழிப்பன் என்றான் - அவன் தருக்கினையும் ஒழிப்பேன் என்று கூறினான்; மன்னவன் - வேந்தன், நாளைப் பாடு போக என வரைந்து சொன்னான் - நாளை வந்து பாடுவாய் இன்று போகக்கடவை என்று வரையறுத்துச் சொன்னான்.

நின் திருவுள்ளத்தின் அன்பும் இறைவன் அருளும் அவனை வெல்லுதற்கேற்ற முயற்சித் திறனை எனக்களிப்பது ஒருதலை யாகலின் யானும் அவ்வாறு முயன்று பாடி வெல்வேன் என்றானென்க. தோற்றவன் விருதினை யிழக்க வேண்டுமாகலின் 'விருது வாங்கி' என்றார். போகென, அகரந் தொகுத்தல். வரைந்து - காலம் வரையறுத்து. (௭)

இற்கண்ணே யிசைவல் லான்போ யிருந்துழி யனையான் பாங்கர்க்
கற்கும்பாண் மக்கண் மல்ல லாவணங் கவலை மன்றம்
பொற்குன்ற மனைய மாட மறுகெங்கும் போகிப் போகிச்
சொற்குன்று வகையாற் பாடித் திரிந்தனர் வீறு தோன்ற.

(இ - ள்.) இசை வல்லான் இல் கண் போய் இருந்துழி - இசையில் வல்ல பாணபத்திரன் தனது வீட்டின்கண் சென்று இருந்தபொழுது, அனையான் பாங்கர் பாண் கற்கும் மக்கள் - அவ் வேமநாதனிடம் இசை கற்கின்ற மாணவர்கள், மல்லல் ஆவணம் கவலை மன்றம் - வளமிக்க கடைவீதியும் கவர் வழியும் மன்றங்களும், பொன்குன்றம் அனைய மாடம் மறுகு - பொன்மலையை ஒத்த மாடங்களையுடைய வீதிகளும், எங்கும் - ஆகிய எவ்விடத்தும், போகிப் போகி - சென்று சென்று, சொல்குன்று வகையால் பாடி - இசை நூலிற்குரிய சொற்கள் மாத்திரை குறையும் வகை பாடி, வீறு தோன்றத் திரிந்தனர் - தமது இசை வன்மை புலப்பட உலாவினர்.

பாண்கற்கும் மக்கள் என்க. மக்கள் மாணவர்; பாண் மக்கள் என்றுமாம். கவலை - கவர் வழி; இரண்டு தெருக்கூடுமிடம். மன்றம் - பலர் கூடும் இடம். தங்கள் ஆசிரியனுடைய பெருமை தோன்ற என்றுமாம். (௮)

இவ்விசை கேட்டு நன்றென் றதிசயித் திசைவல் லான்பால்
வவ்விசை மைந்தர் பாடும் வண்ணமீ தென்னை கெட்டேன்
அவ்விசை வல்லான் பாடு முறையெற்றோ வவனை நாளைச்
செவ்விசை * பாடி வெல்வ தெவனெனத் திவவுக் கோலான்.

(இ-ள்.) திவவுக்கோலான் - நரம்பின் கட்டமைந்த வீணையில் வல்ல பாணபத்திரன், இவ்விசை கேட்டு - இந்த இசையினைக் கேட்டு, நன்று என்று அதிசயித்து - நல்லது என்று வியந்து, இசை வல்லான்பால் இசை வவ்வு - ஏமநாதனிடம் இசை கற்கின்ற, மைந்தர்பாடும் வண்ணம் ஈது - மாணவகர் இசை பாடுந் தன்மை இது; என்னை - இவர்கள் இசை வன்மை யிருந்தாவாறென்னை, கெட்டேன் - ஆ கெட்டேன், அவ்விசைவல்லான் பாடும் முறை எற்றோ - அந்த ஏமநாதன் பாடும் முறைமை எத்தன்மைத்தோ, நாளை செவ்விசை பாடி அவனை வெல்வது எவன் என - நாளைச் செவ்விய இசைபாடி அவனை வெல்வது எங்ஙனமென்று கருதி.

வவ்வுதல் - பற்றுதல்: கற்றுக்கொள்ளல். கெட்டேன், வியப்பிடைச்சொல். இவர் பாடுவது இவ்வாறாயின் அவன் பாடுவது எத்தன்மைத்தோ அவனை வெல்வ தெங்ஙனமெனக் கவலை கொண்டன னென்க. தெவ்விசை பாடி என்னும் பாடத்திற்குப் பகையாக இசைபாடி என்றும், யாவரும் ஏற்றுக்கொள்ளும் இசைபாடி என்றும் பொருள் கொள்ளலாகும். (கூ)

"தெவுக் கொளற் பொருட்டே"

என்பது தொல்காப்பியம்.

மையணி மிடற்றி னானை மதுரைநா யகனை வந்தித்
தையனே யடியேற் கின்று னருட்டுணை செய்யல் வேண்டும்
மெய்யனே யென்று போற்றி வேண்டுகொண் டன்புதோய்ந்த
பொய்யறு மனத்தா னில்லம் புக்கினி திருந்தா னிப்பால்.

(இ-ள்.) மை அணி மிடற்றினானை மதுரைநாயகனை வந்தித்து - கரிய அழகிய திருமிடற்றினை யுடையனாகிய சோமசுந்தரக் கடவுளை வணங்கி, ஐயனே - அப்பனே, அடியேற்கு - அடியேனுக்கு, இன்று உன் அருள் துணை செய்யல்வேண்டும் - இப்பொழுது நினது திருவருளாகிய துணையை அளித்தல்வேண்டும்; மெய்யனே என்று - உண்மை வடிவனே என்று, போற்றி வேண்டுகொண்டு - வணங்கி வேண்டிக்கொண்டு, அன்பு தோய்ந்த பொய் அறு மனத்தான் - அன்பில் மூழ்கிய பொய்யற்ற உள்ளத்தையுடைய பாணபத்திரன், இல்லம் புக்கு இனிது இருந்தான் - மனையை அடைந்து கவலையின்றி இருந்தனன்; இப்பால் - பின்.

கருமையை அணிந்த மிடறு என்றுமாம். ஒரு பொருண்மேற் பல பெயர் வந்தன. அருட்டுணை - அருளாகிய துணை. வேண்டு - வேண்டுதல்: முதனிலைத் தொழிற்பெயர். (ய)

(பா-ம்.) * தெவ்விசை.

[கலிநிலைத்துறை]

வருத்த னாகிவந் திரந்தவ னிசைப்பகை மாற்ற
விருத்த னும்விற காளென விண்ணிழி விமானத்
தொருத்த னாறி வாகிய வுண்மையா னந்தத்
திருத்த னர்தம திச்சையாற் றிருவுருக் கொள்வார்.

(இ-ள்.) வருத்தனாகி வந்து இரந்தவன் - துன்பமுடையவனாகி வந்து குறையிரந்த பாணபத்திரனது, இசைப் பகை மாற்ற - இசையில் வல்ல பகைவனை ஓட்ட, விருத்தனும் விறகு ஆள் என - மூப்புடையவனாகிய விறகாளைப்போல, விண் இழிவிமானத்து ஒருத்தனார் - வானினின்றும் இறங்கிய இந்திர விமானத்தில் எழுந்தருளிய ஒப்பற்றவரும், உண்மை அறிவு ஆனந்தம் ஆகிய திருத்தனார் - சச்சிதானந்த வடிவமுடையவருமாகிய சோமசுந்தரக் கடவுள், தமது இச்சையால் திரு உருக் கொள்வார் - தமது இச்சையானே திருமேனி கொள்வாராயினர்.

இசைப்பகை - இசைவல்ல பகைவன். உண்மை யறிவானந்தமாகிய என மாறுக. திருத்தன் - தீர்த்தன். இறைவன் கொள்ளும் திருமேனிக்குக் காரணம் அவனது இச்சையே எனல் போந்தது. (௧௧)

அழுக்கு மூழ்கிய சிதரசைத் தவிர்சடை யமுதம்
ஒழுக்கு வெண்மதி* வாங்கியே செருகிய தொப்ப
மழுக்கு கூனல்வெள் வாய்க்குயம் வலம்படச் செருகி
இழுக்கு தேய்செருப் பருமறை கடந்ததா ளேற்றி.

(இ-ள்.) அழுக்கு மூழ்கிய சிதர் அசைத்து - அழுக்கு நிறைந்த கந்தையை உடுத்தி, அவிர்சடை அமுதம் ஒழுக்கு - விளங்கிய சடையிலிருந்து அமிழ்தினைப் பொழிகின்ற, வெண்மதி வாங்கியே செருகியது ஒப்ப - வெள்ளிய சந்திரனையே வாங்கி இடையிற் செருகியதுபோல, கூனல் - வளைந்த, மழுக்கு வெள்வாய்க் குயம் - மழுங்கிய வெள்ளிய வாயையுடைய அரிவாளை, வலம்படச் செருகி - வலப்புறத்து இடையிற் செருகி, இழுக்கு தேய் செருப்பு - இழுத்துத் தேய்ந்த செருப்பின்கண், அருமறை கடந்த தாள் ஏற்றி - அரிய வேத முடியைக் கடந்த திருவடிகளை ஏற்றி.

சிதர் - கிழிந்த துணி. மதியையே என ஏகாரம் பிரித்துக் கூட்டுக. மழுக்கு, வலித்தல் விகாரம். கூனல் குயம் - கொடுவாள். செருப்பினைத் தாளில் இயைத்து என்றுமாம். (௧௨)

பழைய தோர்பொல்லம் பொத்திய பத்தர்யாழ்க் கோறேள்
உழைய தாகவிட் டெருத்தலைத் தூசலா டியவொண்
குழைய காதினிற் களவினார்க்† குறியகாய் தூக்கித்
தழையும் வார்சிகை சரிந்திடச் சுமையடை தாங்கி.

(பா-ம்.) *வான்மதி. †களவினற் குறிய.

(இ - ள்.) பழையது - பழையதாகிய, பொல்லம் பொத்திய - தைக்கப்பட்ட, ஓர் பத்தர் யாழ்க்கோல் - ஒரு பத்தரையுடைய வீணையின் தண்டானது, தோள் உழையது ஆகவிட்டு - தோளினிடத்ததாகத் தொங்கவிட்டு, எருத்து அலேத்து ஊசல் ஆடிய - பிடரியை அலைத்து ஊசல்போல் அலைந்தாடிய, ஒண்குழைய காதினில் - ஒள்ளிய குண்டலத்தை யணிந்த திருச்செவியில், களை இணர்க்குறிய காய் தூக்கி - களாவின் பூங்கொத்தோடு கூடிய சிறிய காயினைத் தொங்கவிட்டு, தழையும் வார்சிகை சரிந்திட - தழைந்த நீண்ட சிகை சரிய, சுமையடைதாங்கி - சும்மாடு தாங்கி.

பொல்லம் பொத்தல் - கிழிந்ததனை மூட்டுதல்; தைத்தல். பத்தர் - யாழின் உறுப்புகளுள் ஒன்று. சுமையடை என்பது சும்மாடு என வழங்குகிறது. (௧௩)

தறிந்த விந்தனந் தினந்தொறுந் தாங்கிநீள் பங்கி
பறிந்து தேய்ந்தழுந் தியதலை யுடையராய்ப் பரிந்து
மறிந்த கங்கையும் பங்குறை மங்கையுங் காணு
தெறிந்த விந்தனச் சுமைதிரு முடியின்மே லேற்றி.

(இ - ள்.) தறிந்த இந்தனம் - முறியுண்ட விறகினை, தினந்தொறும் தாங்கி - நாள்தோறுஞ் சுமந்து, நீள்பங்கி பறிந்து தேய்ந்து அழுந்திய தலையுடையராய் - நீண்ட மயிர் கழியப்பட்டுத் தேய்ந்து பள்ளமாகிய தலையினை உடையவராய், பரிந்து மறிந்த கங்கையும் - அன்பு கூர்ந்து (முடியில்) மடங்கிய கங்கையும், பங்கு உறை மங்கையும் காணுது - பாகத்தில் உறையும் அங்கயற்கண் ணம்மையும் காணுமல், எறிந்த இந்தனச் சுமை திருமுடியின்மேல் எற்றி - வெட்டிய விறகின் சுமையைத் திருமுடியின்மேல் ஏற்றி.

தறிந்த - தறியுண்ட; தறிக்கப்பட்ட. தினந்தோறும் தாங்கினமையாற் பறிந்து தேய்ந்தழுந்திய தலைபோன்று தலையுடையராய் என்பது கருத்து. மறிந்த - அலை மடங்குகின்ற. அவர் காணின் பொருராகலின் காணுதபடி முடியின்மேல் ஏற்றினர் என்க. (௧௪)

என்பு தோன்றியூ னின்றியே யிளைத்தயாக் கையராய்
அன்பு தோன்றியே கண்டவ ரகங்கனிந் திரங்க
வன்பு தோன்றிய மனமொழி கடந்ததாண் மலர்பார்
முன்பு தோன்றிய தவத்தினன் முடிமிசைச்* சூட.

(இ - ள்.) என்பு தோன்றி - எலும்புகள் வெளிப்பட்டு, ஊன் இன்றி இளைத்த யாக்கையராய் - தசை சிறிது மின்றி இளைத்த உடம்பினை யுடையராய், அன்பு தோன்றிய கண்டவர் அகம் கனிந்து இரங்க - பார்த்தவர்கள் அன்பு மிக்கு மனம் கனிந்திரங்க, வன்பு தோன்றிய மனம் மொழிகடந்த தாள் மலர் - கடினமான மனத்தையும் மொழியையுங் கடந்த திருவடித் தாமரைகளை, பார் - நிலமகள்;

(பா - ம்.) * முடிமிசை சூட.

முன்பு தோன்றிய தவத்தினல் - முன்பு செய்த தவத்தினல், முடிமிசை சூட - தன் முடியின்கண்ணே சூட.

வன்பு தோன்றிய - கடினம் பொருந்திய; அன்பால் உருகுதலில்லாத. (௯௭)

திருமு கத்துவேர் வரும்பவாய் குவிந்தொலி* செய்ய
வருவர் கற்சுமை தாங்கிமேற் சார்த்துவர் மடுநீர்
பருகு வாரெடுப் பார்தலை வெம்மைவேர் பறிய
இருகை யாலடிக் கடியெடுத் தேந்தியூர் புகுவார்.

(இ - ள்.) திருமுகத்து வேர்வு அரும்ப - திருமுகத்தின்கண் வேர்வை தோன்ற, வாய் குவிந்து ஒலி செய்ய - திருவாய் கூம்பி ஒலி செய்ய, வருவர் - வாரா நிற்பர்; சுமை தாங்கி மேல் சார்த்துவர் - கல்லாலாகிய சுமை தாங்கி மேல் சுமையைச் சார்த்தா நிற்பர்; மடுநீர் பருகுவார் - மடுவிலுள்ள நீரைக் குடிப்பர்; எடுப்பார் - சுமையை எடுத்துத் தலையின்மேல் வைப்பர்; தலை வெம்மை வேர் பறிய - தலையில் வெப்பத்தாலாகிய வேர்வை நீங்க, இரு கையால் - இரண்டு திருக்கரங்களாலும், அடிக்கடி எடுத்து ஏந்தி ஊர் புகுவார் - அடிக்கடி சுமையை மேலே எடுத்து ஏந்தி ஊருட் புகுவாராயினர்.

உடம்பா லுழந்து தொழில் செய்வோர் களைப்புற்றபொழுது வாய்குவித்து ஒலி செய்தல் இயற்கை, இச்செய்யுள் விறகு சுமப்பார் தொழிலினியல்பை விளக்குதலின் தொழிற்றன்மையணி. (௯௮)

நடந்து கொள்ளுநர்க் கருவிலை பகர்ந்துநான் மாடம்
மிடைந்த வீதியுங் கவலையு முடுக்கரு மிடைர்து
தொடர்ந்த வேதமும் பிரமன்மால் சூழ்ச்சியும் பகலுங்
கடந்து போகியவ் விசைவலான் கடைத்தலைச் செல்வார்.

(இ - ள்.) நடந்து - அங்ஙனஞ் சென்று, கொள்ளுநர்க்கு அரு விலை பகர்ந்து - வாங்குபவர்க்கு மிக்க விலை சொல்லி, நால் மாடம் மிடைந்த வீதியும் - பல மாடங்கள் நெருங்கிய வீதிகளையும், கவலையும் - இரண்டு தெருக்கள் கூடுமிடங்களையும், முடுக்கரும் - குறுந் தெருக்களையும், மிடைந்து தொடர்ந்த வேதமும் - நெருங்கிப் பின்பற்றிய மறையையும், பிரமன் மால் சூழ்ச்சியும் - பிரமனும் திருமாலுமாகிய இவர்கள் சூழச்சியையும், பகலும் - பகற்பொழுதையும், கடந்து போகி - கடந்து சென்று, அவ்விசைவலான் கடைத்தலைச் செல்வார் - அந்த இசையில் வல்ல ஏமநாதன் கடைவாயிலின்கண் செல்வாராயினர்.

அருவிலை - விலைப்படலாகாத விலை; மிக்க விலை. நான்கு மாடம் கூடிய என்றுமாம். முடுக்கர் - குறுந்தெரு; இக்காலத்தில் இது சந்து என வழங்கும். பகல் முழுதும் வீதி முதலியவற்றில் நடந்து அவற்றைக் கடந்து பகல் கழிந்தபின் இசை வலான் கடைத்தலைச் செல்வாராயினர்; அங்ஙனஞ் செல்லுதற்பொருட்டே அரு

(பா - ம்.) * குவித்தொலி.

விலை பகர்ந்தனரென்க. வேதமும் பிரமன் மால் சூழ்ச்சியும் இறைவன் இங்ஙனம் எழுந்தருளுதலை அறியும் வலியிலவாயின வென்பார் அவற்றைக் கடந்து என்றார். ()

வரவு நேர்ந்தழைப் பவரென வாம்பல்வாய் மலர
இரவு கான்றுவெண் மதிநகைத் தெழவுயிர்த் துணைவர்
பிரிவு நோக்கின ரெனக்கணீர் பில்குதா மரையின்
நிரைகள் கூம்பிடக் கதிரவன் குடகட* னீந்த.

(இ - ள்.) உயிர்த்துணைவர் வரவு நேர்ந்து அழைப்பவர் என - உயிர் போன்ற தலைவரது வருகையை நோக்கி அழைப்பவர் போல, ஆம்பல் வாய் மலர - ஆம்பல்கள் வாய் மலர, இரவு கான்று - இரவினைத் தோற்றுவித்து, வெண்மதி - வெள்ளிய சந்திரன், நகைத்து எழ - புன்முறுவல் செய்து தோன்றவும், (உயிர்த் துணைவர்) பிரிவு நோக்கினர் என - கணவரது பிரிவினைக் கண்ட மகளிர் கண்ணீர் உகுத்து முகம் வாடுதல்போல, கள் நீர் பில்கு தாமரையின் நிரைகள் கூம்பிட,- தேனாகிய நீர் பெருகுந் தாமரையின் வரிசைகள் குவிய, கதிரவன் குடகுடல் நீந்த - சூரியன் மேலைக் கடலில் நீந்திச் செல்லவும்.

உயிர்த்துணைவர் என்பதனை முன்னுங் கூட்டி யுரைக்க. மாலைப்பொழுதில் கூடினார்க்கு இன்பமும் பிரிந்தார்க்குத் துன்பமும் உளவாதலும் குறிப்பிட்டவா றாயிற்று. கண்ணீர் - கள்ளாகிய நீர் எனவும், விழிநீர் எனவும் இரட்டுற மொழிதல். ()

பறவை வாயடைத் தருகணை பார்ப்பொடும் பெடையைச்
சிறக ராலணைத் திரும்பொழிற் குடம்பையுட் செறிய
நறவ வாய்ப்பெடை யுண்டதே னக்கிவண் டோடைப்
பொறைகொ டாமரைப் பள்ளியுட் புகுந்துகண் படுக்க.

(இ - ள். பறவை வாய் அடைத்து - ஆண் பறவைகள் வாய்திறந்து ஒலிக் காமல், அருகு அணை பார்ப்பொடும் பெடையை - பக்கத்தில் வந்து அணையும் குஞ்சு களையும் பெட்டையையும், சிறகரால் அணைத்து - சிறகினால் அணைத்து, இரும் பொழில் குடம்பையுள் செறிய - பெரிய சோலையிலுள்ள தங்கள் கூட்டில் அடங்க வும், நறவம் உண்ட பெடை வாய் தேன் - தேனை உண்ட பெண் வண்டின் வாயி லுள்ள தேனை, வண்டு நக்கி - ஆண் வண்டு நக்கி, ஓடைப் பொறைகொள் தாமரைப் பள்ளியுள் - ஓடையிலுள்ள தம்மைச் சுமத்தலையுடைய தாமரையாகிய படுக்கையுள், புகுந்து கண் படுக்க - புகுந்து உறங்கவும்.

மாலைப் பொழுதில் பறவைகள் ஒலி யடங்குதல் இயல்பு. சிறகர், போலி. ()

புல்லை னீணிலைக் குரங்கினம் பொதும்பர்புக் குறங்க
முல்லை யாய்மகா ருய்த்தரக் கன்றுள்ளி முந்திக்
கொல்லை யானிரை மனைதொறுங் குறுகிடச் சிறுபுன்
கல்வி மாணவச் சிறார்பயில் கணக்கொலி யடங்க.

---

(பா - ம்.) * குரைகட னீந்த.

(இ - ள்.) நீள் புல்லென் நிலைக் குரங்கு இனம் - மிக்க புல்லென்ற தன்மை யுடைய குரங்கின் கூட்டங்கள், பொதும்பர் புக்கு உறங்க - சோலைசென்று தூங்க வும், முல்லை ஆய் மகார் உய்த்தர - முல்லை நிலத்திலுள்ள ஆயச் சிறுவர்கள் செலுத்த, கொல்லை ஆன் நிரை - அந்நிலத்துப் பசுவின் கூட்டங்கள், கன்று உள்ளி - கன்று களை நினைத்து, மனைதொறும் முந்திக் குறுகிட - வீடுகள் தோறும் முற்பட்டுச் செல்ல வும், சிறுபுன் கல்வி மாணவச் சிரார் - ஆரம்பக் கல்வி பயிலும் மாணவச் சிறுவர்கள், பயில் கணக்கு ஒலி அடங்க - பயிலுகின்ற நெடுங் கணக்கின் ஒலி அடங்கவும்.

புல்லெனல் - பொலிவின்றி யிருத்தல். ஆய் - ஆயச்சாதி. சிறுபுன் சிரார் என்றுமாம். சிறுபுன், ஒருபொரு ளிருசொல். கணக்கொலி - நெடுங்கணக்கை முறைவைத் தோதும் ஒலி. (உ0)

புனைந்த வாழ்கடற் கரும்படா முடம்பெலாம் போர்த்து
வனைந்த பூண்முலை நிலமக டுயில்வது மானக்
கனைந்த காரிருண் மெல்லெனக் கவிதரப் பிரிவால்
இனைந்த காதலர் நெஞ்சில்வே ளெரிகணை நாட்ட.

(இ - ள்.) பூண்வனைந்த முலை நிலமகள் - ஆரம் அணிந்த முலைகளையுடைய நிலமாது, புனைந்த - தான் உடுத்திருந்த, ஆழ்கடல் கரும்படாம் - ஆழ்ந்த கடலாகிய கரிய ஆடையை, உடம்பு எலாம் போர்த்து - உடம்பு முழுதும் போர்த்து, துயில் வது மான - உறங்குவதுபோல, கனைந்த கார் இருள் - செறிந்த கரிய இருளானது, மெல்லெனக்கவிதர - மெல்லென வந்து உலகினைப்போர்க்கவும், பிரிவால் இனைந்த காதலர் நெஞ்சில் - பிரிவினால் வருந்திய காதலர்களுடைய நெஞ்சின்கண், வேள் எரிகணை நாட்ட - மன்மதன் எரிகின்ற அம்புகளை நாட்டவும்.

அருவியாகிய ஆரம்பூண்ட மலைகளாகிய கொங்கைகளையுடைய நிலமகள் என்க. மருங்கில் உடுத்தகரியஆடையை உடல்முழுதும் போர்த்து உறங்கினாற் போல எனக் கூறிய நயம் பாராட்டற்பாலது. இரவில் உயிர்களெல்லாம் வினை யொழிந்திருத் தலின் 'நிலமகள் துயில்வதுமான' என்றது மிக்க பொருத்தமுடைத்து. (உக)

திங்கள் வாணுதன் முயற்கறைத் திலகமுஞ் சிவந்த
மங்கு லாடையு மயங்கிரு ளோதியும் வான்மீன்
பொங்கு மாரமும் பொலிந்துதன் கொண்கனைப் பொருப்பன்*
மங்கை தேடிவந் தாளென வந்தது மாலை.

(இ - ள்.) திங்கள் வாள் நுதல் - சந்திரனாகிய ஒள்ளிய நெற்றியில், முயற் கறைத்திலகமும் - முயற்களங்கமாகிய பொட்டும், சிவந்த மங்குல் ஆடையும் - செவ் வானமாகிய ஆடையும், மயங்கு இருள் ஓதியும் - மயங்கிய இருளாகிய கூந்தலும், வான்மீன் பொங்கும் ஆரமும் - விண்மீன்களாகிய விளங்குகின்ற ஆரமுமாகிய இவை களால், பொலிந்து - விளங்கி, பொருப்பன் மங்கை - மலையரையன் புதல்வியாகிய

(பா - ம்.) *பொருப்பின் மங்கை.

உமை, தன்கொண்கனை - தனது நாயகனாகிய சோமசுந்தரக்கடவுளை, தேடி வந்தாள் என - தேடி வந்தாள் என்னும்படி, மாலை வந்தது - மாலைப்பொழுது வந்தது.

சிவந்த மங்குல் - செவ்வானம். மயங்குதல்-கலத்தல்; மயக்கஞ் செய்தலுமாம். கரியநிறமுடைய உமை செவ்வாடையுடுத்துக் கூந்தலை ஒப்பனை செய்து திலகமும் ஆரமும் பூண்டு, தன்னைப்பிரிந்து விறகு சுமந்து போந்த இறைவனைத் தேடிவந்தாற் போல என்க. வரவு நேர்ந்து என்னுஞ் செய்யுள் முதலாகக் கூறிவந்த செயவெனெச்சங்கள் இச்செய்யுளிலுள்ள வந்தது என்னும் வினைகொண்டுமுடியும். மாலை பொலிந்து வந்தது என முடிக்க. (உஉ)

எடுத்த விந்தன மொருபுறத் திறக்கியிட் டூன்றி
அடுத்த வன்புறந் திண்ணைமீ தமர்ந்திளைப் பாறித்
தொடுத்த வின்னிசை சிறிதெழீஇப் பாடினார் சுருதி
மடுத்தி யாரவன் பாடுவா னென்றிசை வல்லான்.

(இ - ள்.) எடுத்த இந்தனம் - சுமந்து வந்த விறகு கட்டை, ஒருபுறத்து இறக்கி ஊன்றி இட்டு - ஒருபக்கத்தில் இறக்கி ஊன்றி வைத்து, அடுத்தவன் புறம் திண்ணைமீது அமர்ந்து - வந்தவனாகிய ஏமநாதனது வெளித்திண்ணையின்மேல் அமர்ந்து, இளைப்பாறி - வந்தஇளைப்பினைப் போக்கி, தொடுத்த இன் இசை சிறிது எழீஇப் பாடினார் - தொடுத்த இனிமையையுடைய இசையைச் சிறிது எழுப்பிப் பாடினார்; இசைவல்லான் - இசையில் வல்ல ஏமநாதன், சுருதிமடுத்து - அவ்விசையினைக்கேட்டு, பாடுவான் அவன் யார் என்று - பாடுவானாகிய அவன் யாவன் என்று கருதி.

அடுத்தவன் - வேற்று நாட்டிலிருந்து வந்தவன். எழீஇ, சொல்லிசையளபெடை. சுருதி மடுத்து என்பதற்குப் பண்ணமைத்து என்றுரைத்தலுமாம். அவன் இசை பாடுவான் வல்லான் யாவன் என்று கருதி யென்னலுமாம். (உ௩)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

வண்டறை கொன்றை யான்முன் வந்துநீ யாரை யென்றான்
பண்டரு விபஞ்சி* பாண† பத்திர னடிமை யென்றான்
முண்டக மலரோன் மாயோன் புரந்தரன் முதன்மற் றேனை
அண்டருந் தன்குற் றேவ லடிமையாக் கொண்ட வம்மான்.

(இ - ள்.) வண்டு அறை கொன்றையான் முன்வந்து - வண்டுகள் ஒலிக்கின்ற கொன்றை மாலையையணிந்த இறைவன் திருமுன் வந்து, நீயார்என்றான் - நீயாவன் என்று வினவினான்; முண்டகமலரோன் - தாமரை மலரை இருக்கையாகவுடைய பிரமனும், மாயோன் - திருமாலும், புரந்தரன் முதல் மற்று ஏனைஅண்டரும் - இந்திரன் முதலிய ஏனையதேவர்களுமாகிய இவர்களை, தன் குற்றேவல் அடிமையாக் கொண்ட அம்மான் - தனது குற்றேவல் செய்யும் அடிமைகளாகக் கொண்ட இறை

(பா - ம்.) *விபஞ்சிப்பாண, †பாணன் பத்திரன்.

வன், பண்தருவிபஞ்சி - பண்ணமைந்த யாழ்வல்லோனாகிய, பாணபத்திரன் அடிமை என்றான் - பாணபத்திரன் அடிமை என்று கூறியருளினான்.

யாரை, ஐகாரம் முன்னிலைக்கண் வந்தது. விபஞ்சி - யாழ்; ஈண்டு யாழ் வல்லான் என்னும் பொருட்டு. மற்று, அசை. அடிமையென்றான் இஃதோர் வியப் பிருந்தவாறென்னை யென்க.

"எப்புன்மையரை மிகவேயுயர்த்தி விண்ணோரைப பணித்தி"

என்னும் திருவாசகம் இங்கே சிந்திக்கற்பாலது (உச)

கனியிசைக் கிழவன்றன்கீழ்க் கற்பவ ரநேகர் தம்முள்
நனியிசைக் கிழமை வேட்டு நானுமவ் வினைஞ னானேன்
தனியிசைக் கிழவ னோக்கித் தசையெலா மொடுங்க மூத்தாய்
இனியிசைக் கிழமைக் காகா யென்றெனைத் தள்ளி விட்டான்.

(இ - ள்.) கனிஇசைக்கிழவன் தன்கீழ்க்கற்பவர் அநேகர் தம்முள் - சுவை கனிந்த இசையில் வல்ல அப்பாணபத்திரனிடத்து இசை கற்கும் மாணவகர் பலருள், இசைக்கிழமை - இசைகற்றற்கு உரியனாதலை, நனிவேட்டு - மிகவும் விரும்பி, நானும் அவ்வினைஞன் ஆனேன் - நானுங் கற்குந் தொழிலுடையனானேன்; தனி இசைக்கிழவன் நோக்கி - ஒப்பற்ற இசைக்குரிய அப்பாணபத்திரன் என்னைப் பார்த்து, தசை எல்லாம் ஒடுங்க மூத்தாய் - தசைமுற்றும் ஒடுங்குமாறு முதியவனா யினை (ஆகலின்,) இனி இசைக்கிழமைக்கு ஆகாய் என்று - இனி நீ இசை கற்றற்கு உரியனாகமாட்டாய் என்று கூறி, எனைத்தள்ளிவிட்டான் - என்னை நீக்கிவிட்டான்.

கற்குந்தொழில் முற்றுப்பெறுமுன் என்னை நீக்கி விட்டனனென்க. (உரு)

வெவ்விற கெறிந்து கட்டி விலைபகர்ந் தேனு மைய
இவ்வயி றோம்பு கேனென் றித்தொழில் பூண்டே னென்ன
நைவளந் தெரிந்த வேம நாதனும் விறகு மள்ளா
அவ்விசை யொருகா லின்னும் பாடென வையன் பாடும்.

(இ - ள்.) ஐய - ஐயனே, வெவ்விறகு எறிந்து கட்டி விலைபகர்ந்தேனும் - உலர்ந்த விறகினை வெட்டிக்கட்டி விற்றாயினும், இவ்வயிறு ஓம்புகேன் என்று - இந்த வயிற்றை ஓம்பக்கடவேனென்று கருதி, இத்தொழில் பூண்டேன் என்ன - இந்தத் தொழிலை மேற்கொண்டேன் என்று கூற, நைவளம் தெரிந்த ஏமநாதனும் - இசை நூலில் வல்ல அவ்வேமநாதனும், விறகுமள்ளா - விறகு விற்கும் மள்ளனே, அவ் விசை - முன்பாடிய அந்த இசையை, இன்னும் ஒருகால் பாடு என - இன்னும் ஒரு முறை பாடுவாயாக என்று கூற, ஐயன் பாடும் - இறைவன் பாடியருளுவான்.

இசையால் வயிறோம்புதல் கூடாமையின் இத்தொழில் பூண்டேன் என்றான். நைவளம் - நட்டபாடை என்னும் பண்; ஈண்டு இசைப்பொதுமையை உணர்த் திற்று; சிறப்பாக நட்ட பாடையில் வல்லவன் என்றுமாம். மள்ளர் என்னுஞ் சொல்

பழைய நாளில் வீரரைக்குறித்து, பின் உடற்றிண்மையுடைய ஏவன்மாக்களைக் குறிப்பதாயிற்று. (உகூ)

குண்டுநீர் வறந்திட் டன்ன நெடுங்கொடிக் குறுங்காய்ப் பத்தர்த்
தண்டுநீ ணிறத்த நல்யா ழிடந்தழீஇத் தெறித்துத் தாக்கிக்
கண்டுமா டகந்தி ரித்துக் கௌவிய திவவிற் பாவ
விண்டுதே னொழுகிற் றென்ன வீக்கிமென் சுருதி கூட்டி.

(இ - ள்.) குண்டுநீர் வறந்திட்டன்ன - மடுவின்நீர் வறந்தாற்போன்ற, நெடுங் கொடி குறுங்காய்ப் பத்தர் - நீண்ட கொடியிலுள்ள சிறிய காயாகிய பத்தரமைந்த, தண்டு - கோட்டினையும், நீள் நிறத்த - மிக்க நிறத்தினையுமுடைய, நல்யாழ் - நல்ல யாழினை, இடம்தழீஇ - இடது பக்கத்தில் தழுவி, தெறித்துத் தாக்கிக் கண்டு - நரம்பை எறிந்து தாக்கி (ப்பண்ணை எழுப்பி)ப் பார்த்து, மாடகம் திரித்து - முறுக் காணியைச் சுழற்றி, திவவில் கௌவிய வீக்கி - வார்க்கட்டிலே கவ்வும்படி நரம் பைப் பிணித்து, விண்டு தேன் ஒழுகிற்று என்னப் பாவ - இறாலினீங்கித் தேன் ஒழுகினாற்போலப் பரவும்படி, மென்சுருதி கூட்டி - மென்மையாகச் சுருதியை எழுப்பி.

வறந்திட்ட தன்ன என்பது விகாரமாயிற்று. நீர்வறந்த குட்டம்போல் எனக் கொள்க. குறுங்காய் - சுரைக்காய். உள்ளீடும் நீரும் வற்றிய சுரைக்காய்க்கு நீர் வற்றிய குண்டு உவமம். நிறம் ஐந்து ; அவற்றை,

“ சாத்திரைக ளொன்பானுந் தானங்க ளெட்டானும்
எத்துங் கிரியையென் றீரைந்தும் - கோத்துப்
பதின்மூன் றெழுத்தாற் றொழிலைந்தும் பண்ணின்
மதியோர்க ளைந்துநிற மாம் ”

என்னுஞ் செய்யுளாலறிக. நல்யாழ் - குணமுழுதும் பொருந்திக் குற்றமுழுதும் நீங்கினயாழ். குணங்களை,

“ சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு
நல்ல குமிழும் தணக்குடனே - மெல்லியலாய்
உத்தம மான மரங்க ளிவை யென்றார்
வித்தக யாழோர் விதி ”

“ தளமாய்ச் சமநிலத்துத் தண்காற்று நான்கும்
உளதா யொருங்கூன மின்றி - அளவு
முதிரா திளகாது மூன்றுங்கூ டூய
அதுவாகில் வீணைத்தண் டாம் ”

கோடே பத்த ராணி நரம்பே
மாடக மெனவரும் வகையின வாகும் ”

என்பன முதலியவற்றால் அறிக. குற்றம் - நரம்பின் குற்றம்; அவை செம்பகை ஆர்ப்பு கூடம், அதிர்வு என்பன : அவற்றின் இயல்பை,

" செம்பகை யென்பது பண்ணோ டொரா
இன்பமி லோசை யென்மனார் புலவர் "

" ஆர்ப்பெனப் படுவ தளவிறந் திசைக்கும் "

" கூட மென்பது குறியுற விளம்பின்
வாய்வதின் வாராது மழுங்கியிசைப் பதுவே "

" அதிர் வெனப் படுவ திழுமென வின்றிச்
சிதறி யுரைக்குந ருச்சரிப் பிசையே "

என்பவற்றாலறிக. இவை மரக் குற்றத்தால் வருவன என்பதை,

" நீரிலே நிற்ற லழுகுதல் வேத னிலமயங்கும்
பாரிலே நிற்ற விடிவீழ்த னேய்மரப் பாற்படல்கோ
ணேரிலே செம்பகை யார்ப்பொடு கூட மதிர்வுநிற்றல்
சேரினோர் பண்க ணிறமயக் கம்படுஞ் சிற்றிடையே "

என்பதனாலறிக. இம்மேற்கோள்கள் சிந்தாமணி உரையில் நச்சினார்க்கினியராற் காட்டப் பெற்றன. தேனுழுகிற் றென்ன நரம்பை வீக்கி என்றுமாம். (உஎ)

விசையொடு தானந் தோறும் விரனடந் தூச லாட
இசைமுத லேழிற் பல்வே றின்னிசை யெழுஞ்சா தாரி
அசையொடு வீதிப் போக்கு முடுகிய லராகம் யார்க்கும்
நசைதரு நரம்பு கண்ட மொற்றுமை நயங்கொண் டார்ப்ப.

(இ - ள்,) தானந்தோறும் - சுரங்கள் எழும் தானங்கடோறும், விசையொடு விரல் நடந்து ஊசல் ஆட - விசையுடன் விரல் சென்று போக்கு வரவுசெய்ய, இசை முதல் ஏழில் - ஏழிசைகளுக்கும் முதலாயுள்ள ஏழு சுரங்களில், பல்வேறு இன் இசை எழும் சாதாரி - பலவேறு வகைப்பட்ட இனிய இசைகளில் ஒன்றாயெழுஞ் சாதாரிப்பண்ணினை, அசையொடு வீதிப் போக்கு முடுகியல் அராகம் - அசையும் வீதிப் போக்கும் வண்ணமும் திறமுமாகிய இவைகளால், யார்க்கும் நசைதரும் நரம்பு கண்டம் ஒற்றுமை நயம்கொண்டு ஆர்ப்ப - எவருக்கும் விருப்பந் தரும் நரம்பின் ஒலியும் மிடற்றின் ஒலியுந் தம்முள் வேறின்றி ஒலிக்க.

சாதாரி - முல்லைப்பண் ; இதனைத் தேவகாந்தாரம் என்பர். சாதாரி பாடினார் என ஙஉ-ம் செய்யுளில் முடிக்க. அசை - தாள நான்களுள் ஒன்று. வீதிப்போக்கு - நகர முதலிய நாலெழுத்துக்கள் நேராய்ச் செல்லுதல். முடுகியல் - பெருவண்ணம், இடைவண்ணம், வனப்பு வண்ணம் என்னும் வண்ணங்கள். அராகம் - பாலை யாழ்த்திறம். (உஅ)

வயிறது குழிய வாங்க லழுமுகங் காட்டல் வாங்குஞ்
செயிரறு புருவ மேறல் சிரநடுக் குறல்கண் ணாடல்
பயிரருு *மிடறு வீங்கல் பைபென வாயங் காத்தல்
எயிறது காட்ட லின்ன வுடற்றொழிற் குற்ற மென்ப.

(பா - ம்.) * பயிரறு. பயிறரு.

(இ - ள்.) வயிறு குழிய வாங்கல் - (பாடும்போது) வயிறு குழிபட மேல் வாங்குதலும், அழுமுகம் காட்டல் - அழுமுகங் காட்டுதலும், வாங்கும் செயிர் அறு புருவம் ஏறல் - வளைந்த குற்றமற்ற புருவம் மேலேறுதலும், சிரம் நடுக்குறல் - தலை அசைத்தலும், கண் ஆடல் - கண் ஆடுதலும், பயிர் அருமிடறு வீங்கல் - பாடுகின்ற அரியமிடறு வீங்குதலும், பை என வாய் அங்காத்தல் - பையைப் போல வாய் திறத்தலும், எயிறு காட்டல் - பற்களைக்காட்டுதலும், இன்ன - இவை போல்வன பிறவுமாகிய, உடல் தொழில் குற்றம் - உடம்பின் தொழிற் குற்றங்களும்.

வயிறது எயிறது என்பவற்றில் அது பகுதிப் பொருள் விகுதி. பயிர் - பாடுகின்ற. என்ப, அசை; உடற்றொழிற் குற்றம் என்பனவாகிய இவைகளும் என்றுரைத்தலுமாம். இக்குற்றங்களின்றிப் பாடவேண்டுமென்பதனை,

"கருங்கொடிப் புருவ மேறா கயனெடுங் கண்ணு மாடா
அருங்கடி மிடறும் விம்மா தணிமணி யெயிறுந் தோன்றா"

என்னும் சிந்தாமணிச் செய்யுளாலும்,

"கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா - எண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர்
உள்ளாளப் பாட லுணர்"

என்னும் இசைமரபுச் செய்யுளாலும்,

"விரஞன் கமைத்த வணிகுரல் வீங்காது
நான்மறை துள்ளும் வாய்பிள வாது
காட்டியுள் ளுணர்த்து நோக்கமா டாது
பிதிர்கனல் மணிசூழ் முடிநடுக் காது
வயிறு குழிவாங்கி யழுமுகங் காட்டாது"

என்னும் கல்லாடச் செய்யுளாலும் அறிக.                    (உக)

வெள்ளைகா குளிகீ ழோசை வெடிகுர னாசி யின்ன
எள்ளிய வெழாலின் குற்ற மெறிந்துநின் றிரட்ட லெல்லை
தள்ளிய கழிபோக் கோசை யிழைத்தநெட் டுயிர்ப்புத் தள்ளித்
துள்ளலென் றின்ன பாடற் றொழிற்குற்றம் பிறவுந் தீர்ந்தே.

(இ - ள்.) வெள்ளை - சாரமில்லாத வெள்ளோசையும், காகுளி - இன்னாவோசையும், கீழோசை - கட்டை யிசையும், வெடிகுரல் - வெடித்த குரலும், நாசி - மூக்கோசையும், இன்ன - இவை போல்வனவுமாகிய, எள்ளிய எழாலின் குற்றம் - (இசை நூலார்) விலக்கிய பாடற்றோசையின் குற்றங்களும், எறிந்து நின்று இரட்டல் - விலங்கி நின்று ஒலித்தலும், எல்லை தள்ளிய கழிபோக்கு - அளவு கடந்த கழிபோக்கும், ஓசை இழைத்தல் - இசைபுரிதலும், நெட்டுயிர்ப்புத் தள்ளித் துள்ளல் -

பெருமூச்செறிந்து தள்ளலும், என்று இன்ன பாடல் தொழில் குற்றம் - என்று சொல்லப்பட்ட இவை முதலான பாடற்றொழிற் குற்றங்களும், பிறவும் - பிற குற் றங்களும், தீர்ந்து - நீங்கி.

காகுளி - பேய் கத்தினாற்போற் பாடுதல். கீழோசை — நிறமும் தானமும் குறைந்த கட்டையிசை. நாசி - ஒரு தானத்தே பாட ஒரு தானத்தே நழுவுதல்' என்று முரைப்பர். எறிந்து நின்றிரட்டல் - ஒரு பண்ணைப்பாட வேறொரு பண் ணில் விலங்கி நின்றொலித்தல். கழிபோக்கு - ஓசை பலவாய் மிக்குச் செல்லுதல். ஓசை பிழைத்தல் - காக்கை கத்தினாற்போற் கத்துதல் என்பர்.

"நாசி காகுளி வெடிகுரல் வெள்ளை
பேசாக் கீழிசை யொருபுற மோடல்
நெட்டுயிர்ப் பெறிதல் எறிந்துநின் றிரட்டல்
ஓசை யிழைத்தல் கழிபோக் கென்னப்
பேசுறு குற்ற மசைவொடு மாற்றி"

என்று கல்லாடத்துள் வருதல் காண்க. (௬௰)

எழுதுசித் திரம்போன் மன்னி யிழுமெனு மருவி யோதை
முழவொலி கஞ்ச நாதம் வலம்புரி முரலு மோசை
கொழுதிசை வண்டின் றாரி யெனவிசைக் குணனும் வேரல்
விழுமிலை சிரன்மீன் மேல்வீழ் வீழ்ச்சிபோற் பாடற் பண்பும்.

(இ - ள்.) எழுது சித்திரம் போல் மன்னி - எழுதிய ஓவியம்போல அசைவற விருந்து, இழு மெனும் அருவி - ஓதை இழுமென்றொலிக்கும் அருவியின் ஓசையும், முழவு ஒலி - முழவின் ஓசையும், கஞ்சநாதம் - கஞ்சக்கருவியின் ஒலியும், வலம்புரி முரலும் ஓசை - வலம்புரிச்சங்கு முழங்கும் ஓசையும், கொழுது இசை வண்டின் தாரி என - மலர்களைக்கிண்டி ஒலிக்கும் வண்டின் ஒலியும் என்று சொல்லப்பட்ட, இசைக்குணனும் - மிடற்றோசையின் குணமும், வேரல் விழும் இலை-மூங்கிலினின்று வீழாநின்ற இலையின் வீழ்ச்சியும், சிரல் - மீன்குத்திப் பறவையானது, மீன்மேல் வீழ் வீழ்ச்சிபோல் - மீனின்மேல் வீழ்கின்ற வீழ்ச்சியும் போல, பாடல் பண்பும் - பாடற் குணமும்.

மூங்கில் இலையின் வீழ்ச்சி மேலிருந்து மெத்தெனக் கீழிறங்குதற்கும், சிரல் வீழ்ச்சி மேலே அசைந்து நின்று விரைந்து கீழிறங்கிச் செல்லுதலுக்கும் உவமம். இசைக்குணம் பாடற்குணங்களை,

"துய்யமொழி மென்குயிலுஞ் சோலைவரி வண்டும்
வைய முழங்கும் வலம்புரியும் - கைவைத்துத்
தும்புருவு நாரதரும் பாடியமூ வோசையென
நம்புநீர் நால்வேதத் துள்"

"சிச்சிலி பூணை குடமுழக்கஞ் செம்மைத்தாம்
உச்சிமலை நீர்விழுக்கா டொண்பருந்து—பச்சைநிற
வேயினிலை வீழ்ச்சியுடன் வெங்கா னிழற்பறவை
யேயுங்கா லோசை யியல்பு"

என்னும் இசை மரபாலும்,

"வண்டின் ருரியுங் கஞ்ச நாதமும்
சிரல்வா னிலையுங் கழையிலை வீழ்வதும்
அருவி யோசையு முழவின் முழக்கமும்
வலம்புரிச் சத்தமும் வெருகின் புணர்ச்சியும்
இன்னுமென் றிசைப்பப் பன்னிய விதியொடு"

என்னும் கல்லாடத்தாலும் அறிக. (௩௧)

பொருந்தமந் தரத்தி னோடு மத்திமந் தாரம் போக்கித்
திருந்திய துள்ள றூங்கன் மெலிவது சிறப்பச் செய்து
மருந்தன செய்யு ளோசை யிசையோசை வழாமல் யார்க்கும்
விருந்தெனச் செவியின் மாந்தப் பாடினார் வேத கீதர்.

(இ - ள்.) பொருந்த - இசைய, மந்தரத்தினோடு மத்திமம் தாரம் போக்கி - படுத்தல் நலிதல் எடுத்தல் என்பவற்றில் இசையை நடாத்தி, திருந்திய துள்ளல் தூங்கல் மெலிவது சிறப்பச் செய்து - திருத்தமாகிய துள்ளலும் தூங்கலும் மெலிவதுமாகிய இவற்றைச் சிறக்கச் செய்து, மருந்து அன செய்யுள் ஓசை இசை ஓசை வழாமல் - அமுதத்தை ஒத்த பாடலோசையும் இசையோசையும் வழுவுதலில்லாமல், யார்க்கும் விருந்து என - யாவர்க்கும் விருந்தென்னும்படி, செவியின் மாந்த - அவர்கள் காதினாற் பருக, வேத கீதர் பாடினார் - சாமகானராகிய இறைவர் பாடியருளினார்.

இசைக் குணனும் பாடற் பண்பும் பொருந்த என மேற்செய்யுளோடு இயைக்க. மந்தரம் - கீழ் இசை; படுத்தல். மத்திமம் - சமனிசை; நலிதல். தாரம் - உச்சவிசை; எடுத்தல். இவற்றை,

"மந்தரத்து மத்திமத்துந் தாரத்தும் வரன்முறையால்
தந்திரிகண் மெலிவித்துஞ் சமங்கொண்டும் வலிவித்தும்"

என்னும் திருத்தொண்டர்புராணச் செய்யுளால் அறிக. (௩௨)

[கொச்சகக்கலிப்பா]

விரைசார் [illegible]லரோ னறியா விகிர்தன்
அரச[illegible]துரை யமர்ந்தா னென்னே
அரசாய் மதுரை யமர்ந்தா னவனென்
புரைசார் மனனும் புகுந்தா னென்னே.

(இ - ள்.) விரைசார் மலரோன் அறியா விகிர்தன் - மணம் பொருந்திய தாமரை மலரில் இருக்கும் பிரமனால் அறியப்படாத பெருமான், அரசாய் மதுரை அமர்ந்தான் என்னே - பாண்டி மன்னனாக மதுரையின்கண் வீற்றிருந்தான் இது என்னே; அரசாய் மதுரை அமர்ந்தான் அவன் - அங்ஙனம் அரசனாய் மதுரையி லமர்ந்த அவ்விறைவனே, என் புரைசார் மனனும் புகுந்தான் என்னே - எனது குற்றம் பொருந்திய உள்ளத்தின் கண்ணும் குடிப்புகுந்தான் இது என்னே.

இது முதல் மூன்றும் அவர் பாடிய இசைப்பாட்டுக்கள். தலைவி கூற்றாக வுள்ளன. விகிர்தன் - வேறுபட்ட தன்மையன். (௩௩)

பாடன் மறையுந் தெளியாப் பரமன்
கூடல் கோயில் கொண்டா னென்னே
கூடல் போலக் கொடியே னகமும்
ஆட லரங்கா வமர்ந்தா னென்னே.

(இ - ள்.) பாடல் மறையும் தெளியாப் பரமன் - துதித்தலையுடைய வேதமும் தெளிந்துணராத இறைவன், கூடல் கோயில் கொண்டான் என்னே - கூடலின்கண் திருக்கோயில்கொண் டெழுந்தருளினன் இது என்னே, கூடல்போல - அக்கூடலில் எழுந்தருளியதுபோல, கொடியேன் அகமும் - கொடியேனது உள்ளத்திலும், ஆடல் அரங்கா அமர்ந்தான் என்னே - நிருத்தம் புரியும் அம்பலமாக வீற்றிருந்தனன் இது என்னே.

அகமும் அரங்காக அதில் அமர்ந்தான் என்க. (௩௪)

நீல வண்ணன் றேறா நிமலன்
ஆல வாயி லமர்ந்தா னென்னே
ஆல வாயா னலரில் வாசம்
போலென் னுளமும் புகுந்தா னென்னே.

(இ - ள்.) நீலவண்ணன் தேறா நிமலன் - நீல நிறத்தையுடைய திருமாலானும் அறியப்படாத இறைவன், ஆல வாயில் அமர்ந்தான் என்னே - திருவாலவாயின்கண் வீற்றிருந்தான் இது என்னே, ஆல வாயான் - அங்ஙனம் திருவாலவாயி லமர்ந்த அவ்விறைவன், அலரில் வாசம்போல் - மலரில் மணம்போல, என் உளமும் புகுந்தான் என்னே - எனது உள்ளத்தின் கண்ணும் புகுந்தான் இது என்னே.

இம்மூன்று செய்யுளிலும் மலரோனாலும் மறையாலும் மாலாலும் அறியப் படாதவன் என இறைவன் பெருமை கூறி, அவன் எளிவந்த தன்மையையும் விளக்கினமை காண்க. இந்நகர் மதுரையும் கூடலும் ஆலவாயும் ஆன முறைப்படியே இவற்றிலும் பெயர்கள் கூறப்பட்டன. என்னே, என்றது இங்ஙனம் பெரியனாய இறைவன் இத்துணை யெளியனாகியது என்ன வியப்பு என வியந்தபடி. சிந்தாமணியில் இங்ஙனம் மூன்றாக வந்த செய்யுட்களை 'தாழிசைக் கொச்சக வொருபோகுகள் கந்தருவ மார்க்கத்தான் இடை மடக்கின' என நச்சினார்க்கினியர் கூறினர். ()

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

பாணர்தம் பிரானைக் காப்பான் பருந்தொடு நிழல்போக் கென்ன
யாணரம் பிசைபின் செல்ல விசைத்தவின் னிசைத்தே னண்ட
வாணர்தஞ் செவிக்கா லோடி மயிர்த்துளை வழியத் தேக்கி
யாணரின் னமுத வாக்கை யிசைமய மாக்கிற் றன்றே.

(இ - ள்.) பாணர் தம் பிரானைக் காப்பான் - பாணர்களின் தலைவனாகிய பத்திரனைக் காத்தற் பொருட்டு, பருந்தொடு நிழல் போக்கு என்ன - பருந்தினோடு அதன் நிழல் செல்லுதல்போல, யாழ் நரம்பு இசை பின் செல்ல இசைத்த - வீணை நரம்பி லெழும் இசை பின் றொடரப் பாடி யருளிய, இன் இசைத்தேன்-இனிய இசை யாகிய தேனானது, அண்ட வாணர்தம் செவிக்கால் ஓடி - தேவர்களுடைய செவி யாகிய காலின் வழியே ஓடி, மயிர்த்துளை வழியத் தேக்கி - மயிர்த்துளைகளின் வழியே கசியுமாறு நிரப்பி, யாணர் இன் அமுத ஆக்கை - அழகிய இனிய அமுத மயமாகிய அவர்கள் உடலை, இசைமயம் ஆக்கிற்று - இசைமயமாகச் செய்தது.

காப்பான், வினையெச்சம். காப்பான் இசைத்த வென்க.

'பருந்து மதனிழலும் பாட்டு மெழாலும்
திருந்துதார்ச் சீவகற்கே சேர்ந்தன'

என்னும் சிந்தாமணிச் செய்யுளும், "பருந்து பறக்கு மிடத்து முறையே உயர்ந்து அந்நிலத்தின்கண் நின்று ஆய்ந்து பின்னும் அம்முறையே மேன்மேல் உயர்கின்றாற் போலப் பாடவேண்டுதலின் அஃது உவமையாயிற்று என்னும் அதனுரையும் இங்கு நோக்கத் தக்கன. மிடற்றிசையை யாழிசை தொடர்ந்து செல்லுதற்குப் பருந்தி னிழலியக்கம் உவமை. யாணரம்பு, வாணர் என்பன முறையே யாழ்நரம்பு, வாழ் நர் என்பவற்றின் மரூஉக்கள். தம் இரண்டும் சாரியை. அன்று, ஏ அசைகள். (௩௬)

தருக்களுஞ் சலியா முந்நீர்ச் சலதியுங் கலியா நீண்ட
பொருப்பிழி யருவிக் காலு நதிகளும் புரண்டு துள்ளா
அருட்கடல் விளைத்த கீத வின்னிசை யமுத மாந்தி
மருட்கெட வறிவன் றீட்டி வைத்தசித் திரமே யொத்த.

(இ - ள்.) தருக்களும் சலியா - மரங்களும் அசையாவாய், முந்நீர்ச் சலதி யும் கலியா - மூன்று நீரினையுடைய கடல்களும் ஒலியாவாய், நீண்ட பொருப்பு இழி அருவிக்காலும் - உயர்ந்த மலையினின்றும் இழியும் அருவியாகிய கால்களும், நதி களும் புரண்டு துள்ளா - ஆறுகளும் புரண்டு துள்ளாவாய், மருள்கெட - மயக்கம் நீங்க, அருள் கடல் விளைத்த - கருணைக் கடலாகிய இறைவன் பாடி யருளிய, கீத இன் [illegible] அமுத[illegible]ந்தி - இன்னிசைக் கீதமாகிய அமுதத்தைப் பருகி, அறிவன் - சிற்[illegible]நூல் வல்லான், தீட்டி வைத்த சித்திரமே ஒத்த - எழுதிவைத்த சித்திரங் களையே ஒத்திருந்தன.

தருக்கள் முதலியன மாந்திச் சலித்தல் முதலியன செய்யாவாய்ச் சித்திரமே யொத்த என வினை முடிக்க. மருள் - அறியாமையுமாம்.

"மருவியகால் விசைத்தசையா மரங்கண்மலர்ச் சினைசலியா
கருவரைவீ ழருவிகளுங் கான்யாறுங் கலித்தோடா
பெருமுகிலின் குலங்கள்புடை பெயர்வொழியப் புனல்சோரா
இருவிசும்பி னிடைமுழங்கா வெழுகடலு மிடைதுளும்பா"

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுள் இங்கே நோக்கற்பாலது. (௩எ)

வீணைகை வழுக்கிச் சோர்வார் சிலர்சிலர் விரன டாத்தும்
யாணரம் பெழாலுங் கண்டத் தெழாலும்வே றுக வேர்ப்பர் *
நாணமோ டுவகை துள்ள நாத்தலை † நடுங்கித் தங்கள்
மாணிழை யவர்மேல் வீழ்வார் விஞ்சையர் மயங்கிச் சில்லோர்.

(இ - ள்.) விஞ்சையர் சிலர் - யாழ் விஞ்சைவல்ல காந்தருவருட் சிலர், வீணைகை வழுக்கிச் சோர்வார் - வீணைகையினின்றும் நழுவி வீழச் சோர்வடைவர். சிலர் - மற்றுஞ் சிலர், விரல் நடாத்தும் யாழ்நரம்பு எழாலும் - விரலால் வருடியெழுப்பப்படும் யாழ் நரம்பின் இசையும், கண்டத்து எழாலும் வேறுக வேர்ப்பர் - மிடற்றினது இசையும் வேறுகுமாறு வேர்ப்பார்கள்; சில்லோர் - வேறு சிலர், நாணமோடு உவகை துள்ள - நாணம் ஒருபாலும் மகிழ்ச்சி ஒருபாலும் ஓங்க, நாத்தலை நடுங்கி மயங்கி - நாவும் தலையும் நடுங்கி மதிமயங்கி, தங்கள் மாண் இழையவர்மேல் வீழ்வார் - தத்தம் சிறந்த அணிகளையுடைய மகளிர் மேல் வீழ்வர்.

விஞ்சையர் - விச்சாதரர் என்றுமாம். எழால் - இன்னிசை. யாணரம்புக்கு மேல் உரைத்தது காண்க. (௩அ)

போதுளான் பரமன் பாதப் போதுளா னுனன் வேலை
மீதுளான் பரமா னந்த வேலைமீ துள்ளா னுனன்
தாதுளாங் கமலக் கண்போற் சதமக னுடல மெல்லாங்
காதுளா னல்லே னென்றான் கண்ணுளான் கானங் கேட்டு.

(இ - ள்.) கண்ணுளான் கானம்கேட்டு - நுதற்கண்ணுடைய சிவபெருமான் பாடியருளிய தேவகானத்தினைக் கேட்டு, போதுளான் பரமன் பாதம் போதுளான் ஆனன் - தாமரை மலரில் இருக்கும் பிரமன் அவ்விறைவனுடைய திருவடித் தாமரையின் கீழுள்ளவனுனன்; வேலைமீதுளான் - கடலின்மேல் அறிதுயில் கொள்ளுந் திருமால், பரமானந்த வேலைமீது உள்ளான் ஆனன் - பேரின்பக் கடலில் உள்ளவனுனன்; சதமகன்-இந்திரன், தாதுஉள்ஆம் கமலக்கண்போல்-அகத்தேமகரந்தத்தையுடைய தாமரை மலர்போன்ற கண்களைப்போல, உடலம் எல்லாம் - உடலமுற்றும், காதுஉளான் அல்லேன் என்றான் - செவிகளையுடைய னல்லேனுயினேன் என்று கூறி வருந்தினன்.

இசையானது சிவானந்தத்தை விளைத்தமையின் இறைவன் திருவடியிற் கலந்தார்போ லாயினுன் என்பார் 'பாதப் போதுளானுனன்' என்றார். போது

(பா - ம்.) * வேறுக வோர்ப்பார். † நாத்தல நடுங்கி.

ளான் பாதப் போதுளான் என்றும், வேலைமீதுள்ளான் பரமானந்த வேலைமீதுள்ளான் என்றும் கூறிய நயம் பாராட்டற்பாலது. கண்ணுளான் என்பதற்குக் கூத்தியற்று பவன் என்றுரைப்பாருமுளர். (ளகூ)

முனிவருந் தவத்த ராதி முத்தர்மா சித்த ரன்பன்*
துனிவரும் பழங்கண் டீர்ப்பான் சுந்தரத் தோன்றல் கீதங்
கனிவருங் கருணை யென்னுங் கடலிலன் பென்னு மாற்றிற்
பனிவருங் கண்ணீர் வெள்ளம் பாய்ந்திட வின்பத் தாழ்ந்தார்.

(இ - ள்.) முனிவு அரும்-வெறுப்பு,(விருப்பு) அற்ற, தவத்தர் ஆதிமுத்தர் மா சித்தர் - தவத்தரும் சீவன்முத்தரும் பெரிய சித்தரும்,அன்பன் - பாணபத்திரனது, துனி வரும் பழங்கண் தீர்ப்பான் சுந்தரத் தோன்றல் - துன்பத்தையும் அதனால் வந்த மெலிவையும் நீக்குவானாகிய சோமசுந்தரக் கடவுளின், கீதம் கனிவரும் கருணை என்னும் கடலில் - இசையாகக் கனிந்த கருணையாகிய கடலில், அன்பு என்னும் ஆற்றில் - அன்பாகிய ஆற்றோடு, பனிவரும் கண்ணீர் வெள்ளம் பாய்ந்திட - குளிர்ந்த ஆனந்தக்கண்ணீர் வெள்ளம்பாய, இன்பத்து ஆழ்ந்தார் - இன்பத்தில் ஆழ்ந்தனர்.

முனிவு - வெறுப்பு. இறைவன் அனாதி முத்தனாகலின் சீவன்முத்தரை ஆதி முத்தர் என்றார் ; தவத்தர் முத்தர் சித்தர் ஆதியானவர்கள் என்றுமாம். பழங்கண்- மெலிவு. தீர்க்கும்படி சுந்தரத் தோன்றல் பாடிய என விரித்துரைத்தலுமாம். கடலில் ஆற்றாலே வெள்ளம்பாய ; கடலிற் செல்லும் ஆற்றிலே வெள்ளம்பாய என்றுமாம். (சய)

ஊடிவே றொதுங்கித் துன்ப வுவரியுட் குளித்தார் தம்மிற்
கூடிவே றற்ற வின்பக் குளிர்கடல் வெள்ளத் தாழ்ந்தார்
நாடிவே றிடைப்பி ரிந்தார் மேன்மன நடாத்தி மேனி
வாடிவே ளலைப்பச் சோர்ந்து மம்மர்நோ யுழந்தார் மண்ணோர்.

(இ - ள்.) மண்ணோர் - நிலவுலகிலுள்ளவருள், ஊடி வேறு ஒதுங்கி - பிணங்கி வேறாக ஒதுங்கி, துன்ப உவரியுள் குளித்தார் - துன்பக் கடலுள் மூழ்கிய மகளிர், தம்மில் கூடி வேறு அற்ற இன்பக் குளிர்கடல் வெள்ளத்து ஆழ்ந்தார் - தாமாகவே தலைவர்களைக்கூடி வேறில்லாத இன்பமாகிய குளிர்ந்த கடல் வெள்ளத்துள் ஆழ்ந்தார்கள் ; நாடி வேறு இடைப் பிரிந்தார்மேல் மனம் நடாத்தி - (தலைவரைப் பிரிந்த மகளிர்) பொருள் முதலியவற்றை நாடி மறுபுலத்துப் பிரிந்து சென்ற தலைவர்மேல் மனத்தைச் செலுத்தி, வேள் அலைப்ப - மன்மதன் வருத்துதலைச் செய்ய, மேனிவாடி சோர்ந்து - உடல்வாடி உள்ளஞ் சோர்ந்து, மம்மர் நோய் உழந்தார் - காமநோயால் வருந்தினார்கள்.

வேறு வாயிலின்றி என்பார் 'தம்மில்' என்றார். வேறற்ற - உடம்பு ஒன்றாய. பிரிந்த மகளிர் என வருவிக்க. ஊடின ஆடவரும் மகளிரும் என்றும், பிரிந்த ஆடவரும் மகளிரும் என்றும் பொதுவாக உரைத்தலுமாம். (சஉ)

---

(பா - ம்.) * அன்பின் துனிவரும்.

பைத்தலை விடவாய் நாகம் பல்பொறி மஞ்ஞை நால்வாய்
மத்தமா னரிமான் புல்வாய் வல்லிய மருட்கை யெய்தித்
தத்தமா றறியா வாகித் தலைத்தலை மயங்கிச் சோர
இத்தகை மாவும் புள்ளு மிசைவலைப் பட்ட வம்மா.

(இ - ள்.) பைத்தலை விடவாய் நாகம் பல்பொறிமஞ்ஞை - படத்தையுடைய தலையையும் நஞ்சு பொருந்திய வாயினையுமுடைய பாம்புகளும் பல பொறிகளையுடைய மயில்களும், நால்வாய் மத்தமான் அரிமான் - தொங்குகின்ற வாயினையும் மத மயக்கத்தையுமுடைய யானைகளும் சிங்கங்களும், புல்வாய் வல்லியம் - மான்களும் புலிகளும், இத்தகை மாவும் புள்ளும் - இங்ஙனம் ஒன்றுக்கொன்று பகைமையுடைய ஏனைய விலங்குகளும் பறவைகளும், மருட்கை எய்தி - இசையால் மயங்கி, தத்தம் மாறு அறியாவாகி - தம்தம் பகைமையை அறியாவாய், தலைத் தலை மயங்கிச் சோர-இடங்கள் தோறும் ஒன்றோடொன்று கலந்து சோர்ந்து, இசை வலைப்பட்ட- இசையாகிய வலையின்கட் பட்டன.

பாம்புக்கு மஞ்ஞையும் யானைக்குச் சிங்கமும் மானுக்குப் புலியும் பகையாவன. இங்ஙனம் பகையான விலங்குகளும் பறவைகளும் இசையால் மருட்கை யெய்தினமையால் தம் பகைமையறியமாட்டாமல் ஒன்றோடொன்று விரவிச் சோர்ந்து நின்றன என்றார். சோர்தல் - ஒன்றின்மீது ஒன்று சாய்தலுமாம். சோர-சோர்ந்து ; சோரும்படி என்றுமாம். மாவும் புள்ளும் வலைப்பட்டன என்பது நயமுடைத்து. அம்மா, வியப்பிடைச் சொல். (௪௨)

வன்றரை கிழிய வீழ்போய் வான்சினை கரிந்து நின்ற
ஒன்றறி மரங்க ளெல்லாஞ் செவியறி வுடைய வாகி
மென்றளி ரீன்று போது விரிந்துகண் ணீருஞ் சோர
நன்றறி மாந்தர் போல நகைமுக மலர்ந்த மாதோ.

(இ - ள்.) வன்தரை கிழிய வீழ்போய் - வலியநிலம் பிளக்குமாறு விழுது வீழ்த்தி, வான் சினை கரிந்துநின்ற - பெரிய கிளைகள் உலர்ந்து நின்ற, ஒன்று அறி மரங்கள் எல்லாம் - ஊறு என்னும் ஓரறிவுடையவாகிய மரங்கள் அனைத்தும், செவி அறிவு உடையவாகி - ஓசையறிவினையு முடையனவாய், மென்தளிர் ஈன்று - மெல்லிய தளிரினை ஈன்று, போது விரிந்து - பூக்கள் மலர்ந்து, கண்ணீரும் சோர - கண்ணீரும் பொழிய, நன்று அறிமாந்தர்போல - தமக்கு உறுதியாவன அறிந்த மக்களைப்போல, நகைமுகம் மலர்ந்த - நகையொடு முகமலர்ந்தன.

வீழ் - விழுது. ஒன்றஅறி - ஊறு என்னும் ஒன்றனையே அறியும் ;

" ஒன்றறிவதுவே யுற்றறிவதுவே "

என்பது தொல்காப்பியம். செவியறிவு - ஐந்தாவதாகிய ஓசையை அறியும் அறிவு. இசை செவியால் அறியப்படுவதாகலின் அதற்கேற்பச் செவியறிவுடையவாகி என்றார். ஓரறிவுடையதன்மேலும் கரிந்தும் போன மரங்கள் செவியறி வுடையனபோல இசையை யேற்றுத் தளிர்த்து அவ்வளவேயன்றி மனத்தால் நன்றினை யறியும் மக்

கள்போலக் கண்ணீர் சொரிந்து முகமலர்ந்தன என வியந்து கூறினர். வற்றல் மரமானது தளிரீன்று அரும்பிப் போதாகி மலர்ந்து தேனுஞ் சிந்திற்றென்றால் இசையின் பெருமையை யாரால் இயம்பலாகும். மரத்திற்குக் கள்ளாகிய நீர் எனவும், மாந்தர்க்கு விழிநீர் எனவும் கொள்க. மாது, ஒ அசைகள். (௪௩)

வாழிய வுலகின் வானோர் மனிதர்புள் விலங்கு மற்றும்
ஆழிய கரண மெல்லா மசைவற வடங்க வையன்
ஏழிசை மயமே யாகி யிருந்தன வுணர்ந்தோ ருள்ளம்
ஊழியி லொருவன் றாள்புக் கொடுங்கிய தன்மை யொத்த.

(இ - ள்.) உலகின் வானோர் - வானுலகிலுள்ள தேவர்களும், மனிதர் - மனிதர்களும், புள் விலங்குமற்றும் - பறவையும் விலங்கும் ஏனையவும், ஆழியகரணம் எல்லாம் - இசையிற்பதிந்த மனமுதலிய கரணங்கள் அனைத்தும், அசைவு அற அடங்க - அசைவின்றி அடங்க, ஐயன் - இறைவனது, எழ் இசைமயமே ஆகி இருந்தன - எழாகிய இசையின் மயமேயாகி இருந்தன (அங்ஙனமிருந்த தன்மை), உணர்ந்தோர் உள்ளம் - மெய்யுணர்ந்தோரின் உள்ளம், ஊழிஇல் ஒருவன் தாள்புக்கு - இறுதியில்லாத ஒருவனாகிய இறைவன் திருவடியின்கண் சென்று, ஒடுங்கிய தன்மை ஒத்த - ஒடுங்கிய தன்மையை ஒத்தது.

வாழிய, மங்கலப் பொருட்டாய அசைச்சொல். வானுலகினோர் எனப் பிரித்துக் கூட்டுக ; உலகங்களில் உள்ள எனப் பொதுப்பட வுரைத்தலுமாம். ஆழிய - அழுந்திய. உணர்ந்தோர் - பரஞானத்தாலே பரத்தைத் தரிசித்தோர். உலகமெல்லாம் ஒடுங்கிய ஊழியிலும் எஞ்சி நிற்கும் ஒருவனாகிய இறைவன் என்றுமாம். ஒடுங்கிய தன்மை - சிவமேயான தன்மை. (௪௪)

கண்ணிறை நுதலோன் சாம கண்டத்தி னெழுந்த முல்லைப்
பண்ணிறை தேவ கீதஞ் சராசர வுயிரும் பாரும்
விண்ணிறை திசைக ளெட்டும் விழுங்கித்தன் மயமே யாக்கி
உண்ணிறை யுயிரு மெய்யு முருக்கிய திசைவல் லானை.

(இ - ள்.) கண் நிறை நுதலோன் - கண் நிறைந்த நெற்றியையுடைய சோமசுந்தரக் கடவுளின், சாம கண்டத்தின் எழுந்த - சாமவேதம் பாடுந் திருமிடற்றினின்றும் எழுந்த, முல்லைப்பண் நிறை தேவ கீதம் - சாதாரியாகிய நிறைந்த தேவகானமானது, சர அசர உயிரும் - இயங்குவனவும் நிற்பனவுமாகிய உயிர்களையும், பாரும் - நிலவுலகத்தையும், விண் - விண்ணுலகத்தையும், நிறை திசைகள் எட்டும் - நிறைந்த எட்டுத் திக்குகளையும், விழுங்கி தன் மயமே ஆக்கி - விழுங்கித் தன் மயமாகவே செய்து, இசை வல்லானை உள்நிறை உயிரும் மெய்யும் உருக்கியது - இசையில் வல்ல ஏமநாதனை உள்ளே நிறைந்த உயிரையும் உடலையும் உருக்கியது.

வல்லானுடைய உயிரையும் மெய்யையும் உருக்கிய தென்க. (௪௫)

[கலிநிலைத்துறை.]

சிந்தை தோயுமைம் பொறிகளுஞ் செவிகளாப் புலன்கள்
ஐந்து மோசையா விசைவலா னிருந்தன னாகப்
பந்த நான்மறை நாவினற் பத்திர னாளாய்
வந்து பாடின ரிந்தனச் சுமையொடு மறைந்தார்.

(இ - ள்.) சிந்தை தோயும் ஐம்பொறிகளும் - மனத்துடன் பொருந்தும் ஐம்பொறிகளும், செவிகளா - காதுகளாகவும், புலன்கள் ஐந்தும் - ஐம்புலன்களும், ஓசையா - ஓசையாகவும், இசைவலான் இருந்தனனாக - இசையில் வல்ல ஏமநாதன் இருந்தானாக; பந்தம் நான்மறை நாவினல் - பந்த முதலிய உறுப்புக்களையுடைய நான் மறைகளைக் கூறியருளிய நாவினல், பத்திரன் ஆளாய் வந்து பாடினர் - பாணபத்திரன் அடிமையாக வந்து பாடியருளிய இறைவர், இந்தனச் சுமையொடும் மறைந்தார் - விறகு சுமையோடும் மறைந்தருளினர்.

மனத்துடன் கூடாவிடத்துப் பொறிகள் உணராவாகலின் 'சிந்தை தோயும் ஐம்பொறிகளும்' என்றார். ஐம்பொறிகளும் செவிகளாப் புலன்களைந்தும் ஓசையா என்றது கண் முதலிய ஏனைப் பொறிகள் உருவம் முதலிய புலன்களைச் சிறிதும் உணராதிருக்க என்றதன்றி, அவற்றின் ஆற்றல்களையெல்லாம் செவியேகொண்டு அனைத்தையும் ஒடுக்கி நிற்கின்ற ஓசை யொன்றையே யுணர என்றது மாயிற்று;

"ஐந்து பேரறிவுங் கண்களே கொள்ள"

என்னும் பெரியபுராணச் செய்யுள் இங்கே சிந்திக்கற்பாலது. பந்தம் - தளை; வேதத்தின் உறுப்பு. பாடினர், பெயர். அவன் இசை யொன்றையே உணர்ந்துகொண்டிருந்தமையின் அவர் மறைந்த தன்மையையும் உணரானாயினன் என்க. (௬௬)

யான றிந்தசா தாரியன் றிம்பரு ளிதனை
நான றிந்ததென் றொருவரு நவின்றிலர் தேவ
கான மீதிவற் குணர்த்தினேன் கடவுளே யன்றி
ஏனை மானுடர் வல்லரோ விதுவியப் பென்னா.

(இ - ள்.) யான் அறிந்த சாதாரி அன்று - (இது) யான் அறிந்த சாதாரிப் பண் அன்று; இம்பருள் - இந்நிலவுலகில், நான் அறிந்தது என்று ஒருவரும் இதனை நவின்றிலர் - என்னால் அறியப்பட்டது என்று ஒருவரேனும் இதனைக் கூறிற்றிலர்; ஈது தேவகானம் - இது தேவகானமாகும் (ஆதலின்), இவற்கு உணர்த்தினேன் - இவனுக்கு இதனை அறிவித்தவன், கடவுளே அன்றி - கடவுளே அல்லாமல், ஏனை மானுடர் வல்லரோ - மற்றை மனிதர்கள் அறிவிக்க வல்லரோ, இது வியப்பு என்னா - இது வியக்கத்தக்க செய்தி என்று கூறி.

ஒருவரும் தாம் அறிந்ததாகக் கூறிற்றிலர் என்க. மானுடனாகிய பாணபத்திரனுடைய மாணாக்கனாகக் கூறினமையின் 'இது வியப்பு' என்றான். (௬௭)

இழுக்கி விட்டவிக் கிழமக னிசையிதே லந்த
வழுக்கில் பத்திரன் பாடலெற் றோவென மதியா
அழுக்க முற்றெழுந் திசைவலா னடுத்ததன் பண்டர்
குழுக்க ளுங்குலை குலைந்திட விருள்வழிக் கொண்டான்.

(இ - ள்.) இழுக்கிவிட்ட இக்கிழமகன் இசை இதேல் - நீக்கிவிடப்பட்ட இம்முதியோன் இசை இதுவாயின், அந்த வழுக்கு இல் பத்திரன் - அந்தக் குற்றமில்லாத பாணபத்திரனது, பாடல் எற்றோ என மதியா - பாடல் எத்தன்மைத்தோ என்று கருதி, அழுக்கம் உற்று - வருத்துதலுமுற்று, இசைவலான் எழுந்து - இசையில் வல்ல ஏமநாதன் அவணின்றும் எழுந்து, அடுத்த தன் பண்டர் குழுக்களும் குலை குலைந்திட - தன்னை அடுத்த பாண் மக்களின் கூட்டங்களும் தலை தடுமாறிச் செல்ல, இருள் வழிக்கொண்டான் - இரவிலேயே ஓடத் தலைப்பட்டான்.

இழுக்கி - கடிந்து. இதேல், விகாரம். அழுக்கம் - அழுங்குதல். பண்டர்-பாண்மக்கள். (சஅ)

மடக்கு பல்கலைப் பேழையு மணிக்கலம் பிறவும்
அடக்கு பேழையுங் கருவியாழ்க் கோலுமாங் காங்கே
கிடக்க மானமு மச்சமுங் கிளர்ந்துமுன் னீர்த்து
நடக்க வுத்தர திசைக்கணே நாடினு னடந்தான்.

(இ - ள்.) பல்கலை மடக்கு பேழையும் - பல் வகை ஆடைகளை மடித்து வைத்துள்ள பெட்டிகளும், மணிக்கலம் பிறவும் அடக்கு பேழையும் - மணிகள் இழைத்த அணிகளையும் பிறபொருளையும் அடக்கிய பெட்டிகளும், கருவியாழ்க் கோலும் - கருவியாகிய யாழ்க்கோலும், ஆங்காங்கே கிடக்க - அங்கங்கே கிடக்க, மானமும் அச்சமும் கிளர்ந்து முன் ஈர்த்து நடக்க - மானமும் பயமும் முன்னே இழுத்துச் செல்ல, உத்தர திசைக்கணே நாடினன் நடந்தான் - வடதிசைக் கண்ணே நாடிச் சென்றான்.

மானம் அழிந்து விடுமென்னும் அச்சத்தால் விரைந்து சென்றானென்பார், மானமும் அச்சமும் ஈர்த்து 'நடக்க' என்றார். மிக விரைந்து செல்லுங் கருத்தால் பேழை முதலியவற்றை எடாது சென்றனன் என்க. நாடினன், முற்றெச்சம். (சகூ)

சிவிகை யோர்வழி விறலிய ரோர்வழி செல்லக்
கவிகை யோர்வழி கற்பவ ரோர்வழி கடுகக்
குவிகை யேவல ரொருவழி கூடநா னுள்ளத்
தவிகை யோவரு மொருவழி யகன்றிட வகன்றான்.

(இ - ள்.) சிவிகை ஓர் வழி விறலியர் ஓர் வழி செல்ல - பல்லக்கு ஒருவழியிலும் பாடினிகள் ஒரு வழியிலுஞ் செல்லவும், கவிகை ஓர் வழி கற்பவர் ஓர் வழி கடுக - குடை ஒருவழியிலும் மாணவகர் ஒருவழியிலுஞ் விரைந்து செல்லவும்.

கை குவி ஏவலர் ஒரு வழி கூட - கை கூப்பி வணங்கும் ஏவலாளர் ஒரு வழியிற் செல்லவும், உள்ளத்து நாண் அவிகை ஓவரும் ஒரு வழி அகன்றிட - உள்ளத்தின்கண் நாண் ஒழிந்த பாண்மக்களும் ஒரு வழி அகல, அகன்றான் - தானும் நீங்கினான்.

விறலியர் - பாடினிகள்; பாடுமகளிர்; விறல்பட ஆடு மகளிர் என்பர் நச்சினார்க்கினியர். அவிகை - அவிதலுடைய. ஓவர் - ஏத்தாளர்; அரசர்களை ஏத்துவோர்; பாணர். (௫௰)

அன்று பத்திரன் கனவில்வந் தாடலேற் றழகர்
இன்று பத்திர விசைவலா னிடைவிற காளாய்ச்
சென்று பத்திர னடிமையா மென்றுபாண் செய்து
வென்று பத்திரஞ் செய்துநின் வேண்டுகோ ளென்றார்.

(இ - ள்.) ஆடல் ஏற்று அழகர் - வெற்றியையுடைய இடப வூர்தியையுடைய சோமசுந்தரக் கடவுள், அன்று பத்திரன் கனவில் வந்து - அன்று பாணபத்திரன் கனவில் வந்து, பத்திர - பாணபத்திரனே, நின் வேண்டுகோள் - உன் வேண்டுகோளின்படியே, இசைவலான் இடை - இசையில் வல்ல அவ்வேமநாதனிடத்து, விறகு ஆளாய் இன்று சென்று - விறகாளாக இன்று போய், யாம் பத்திரன் அடிமை என்று - யாம் பாணபத்திரன் அடிமை என்று கூறி, பாண் செய்து - இசை பாடி, வென்று பத்திரம் செய்தும் என்றார் - வென்று நின்னைக் காத்தனம் என்றருளிச் செய்தார்.

பாண்செய்து - என்பதனை இரட்டுற மொழிதலாகக்கொண்டு தாழ்ச்சி செய்து என்றும் உரைத்துக் கொள்க.

"பணிந்து பாண்செய்த தன்றே"

என்னும் சிந்தாமணித் தொடருக்கு நச்சினார்க்கினியர் இங்ஙனம் பொருள் கூறினமை காண்க;

"பாண்பேசிப் படுதலையிற் பலி கொள்கை தவிரீர்"

எனத் தேவாரத்தில் பாண்பேசி என்பது தாழ்ச்சி சொல்லி என்னும் பொருளில் வந்திருத்தலும் கருதுக. செய்தும் - செய்தோம். வேண்டுகோளால் என மூன்றனுருபு விரிக்க. (௫௧)

குஞ்சி நாண்மலர்க் கொன்றையா ரங்ஙனங் கூறும்
நெஞ்சி னானினைப் பரியசொற் கேட்டலு நெஞ்சம்
அஞ்சி னானிது செய்யவோ வடியனேன் மறைகட்
கெஞ்சி னானையின் றிரந்தவா றென்றுகண் விழித்தான்.

(இ - ள்.) குஞ்சி நாள்மலர்க் கொன்றையார் - முடியின்கண் அன்றலர்ந்த கொன்றைமலர் மாலையையுடைய இறைவர், அங்ஙனம் கூறும் - அவ்வாறு கூறியருளிய, நெஞ்சினால் நினைப்பரிய சொல் - நெஞ்சினாலும் நினைத்தற்கரிய சொல்லை,

கேட்டலும் - கேட்டவளவில், நெஞ்சம் அஞ்சினன் - மனந் துணுக்குற்று, இது செய்யவோ - இக்காரியம் செய்தற்கோ, அடியனேன் மறைகட்கு எஞ்சினரை இன்று இரந்தவாறு என்று - அடியனேன் வேதங்களுக்கு மெட்டாத இறைவரை இன்று குறையிரந்தபடி யென்று, கண் விழித்தான் - கண்விழித் தெழுந்தான்.

நெஞ்சினல் நினைப்பரியசொல் - விறகாளாய்ச் சென்று பத்திரனடிமையாம் என்று கூறியசொல். (௩௨)

கண்ம லர்ந்தெழு பத்திரன் கரையிலா வுவகை
உண்ம லர்ந்தெழு மன்புகொண் டூக்கவெங் கதிரோன்
விண்ம லர்ந்தெழு முன்புபோய் விசும்பிழி கோயிற்
பண்ம லர்ந்தநான் மறைப்பொரு ளடித்தலம் பணிந்தான்.

(இ - ள்.) கண் மலர்ந்து எழு பத்திரன் - அங்ஙனங் கண் விழித்தெழுந்த பாணபத்திரன், கரை இலா உவகை உள் மலர்ந்து - அளவிறந்த மகிழ்ச்சியால் அக மலர்ந்து, எழும் அன்பு கொண்டு ஊக்க - மேலெழுந்த அன்பு தன் மயமாக்கிச் செலுத்த, வெங்கதிரோன் - வெவ்விய கதிர்களையுடைய சூரியன், விண்மலர்ந்து எழு முன்பு போய் - வானிலே உதித்தெழுதற்கு முன்னரே சென்று, விசும்பு இழி கோயில் - விண்ணினின்றும் இழிந்த இந்திர விமானத்தில் எழுந்தருளிய, பண் மலர்ந்த நான் மறைப் பொருள் - இசை நிறைந்த நால்வேதங்களின் பொருளாயுள்ள சோமசுந்தரக்கடவுளின், அடித்தலம் பணிந்தான்-திருவடிகளை வணங்கினன். (௩௩)

கடிய கானகம் புகுதவோ கட்டிய விறகை
முடியி லேற்றவோ முண்டகத் தாள்கணொந் திடவந்
தடிய னேன்பொருட் டடாதசொற் பகரவோ வஞ்சக்
கொடிய னேன்குறை யிரந்தவா விளைந்ததே குற்றம்.

(இ - ள்.) கடிய கானகம் புகுதவோ - கொடிய காட்டின்கண் செல்லவோ, கட்டிய விறகை முடியில் எற்றவோ - கட்டப்பட்ட விறகு சுமையைத் திருமுடியில் ஏற்றுதற்கோ, முண்டகத் தாள்கள் நொந்திட வந்து - தாமரை மலர் போன்ற திரு வடிகள் நோவுமாறு நடந்து வந்து, அடியனேன் பொருட்டு - அடியேன் நிமித்தம், அடாத சொல் பகரவோ - தகாத சொல்லைக் கூறுதற்கோ, வஞ்சக் கொடிய னேன் குறை யிரந்தவா - வஞ்சகத்தையுடைய கொடியேன் குறை யிரந்தபடி, குற்றம் விளைந்ததே - அதனல் அடியேனுக்குப் பெரும் பிழை விளைந்து விட்டதே (இதற்கு என் செய்வேன்).

கொடியனேன் குறை யிரந்தது அடியேன் பொருட்டுப் புகுதவோ எற்றவோ பகரவோ என இரங்கினன் என்க. (௩௪)

நெடிய னேமுதல் வானவர் நெஞ்சமுஞ் சுருதி
முடிய னேகமுங் கடந்தநின் முண்டகப் பாதஞ்
செடிய னேன்பொருட் டாகவிச் சேணிலந் தோய்ந்த
அடிய னேற்கெளி தாயதோ வையநின் பெருமை.

(இ - ள்.) நெடியனே முதல் வானவர் நெஞ்சமும் - திருமால் முதலிய தேவர்களின் உள்ளங்களையும், சுருதிமுடி அனேகமும் கடந்த - எண்ணிறந்த வேதங்களின் முடிகளையுங் கடந்தருளிய, நின் முண்டகப் பாதம் - தேவரீரது தாமரை மலர்போன்ற திருவடிகள், செடியனேன் பொருட்டாக - பாவியேன் பொருட்டாக, இச்சேண் நிலம் தோய்ந்த - இந்தப் பெரிய நிலத்தின்கண் தோய்ந்தன; ஐய நின் பெருமை - (ஆதலால்) ஐயனே நினது பெருமை, அடியனேற்கு எளிது ஆயதோ - அடியேனுக்கு எளிதாயிற்றோ.

செடியனேன் - பாவியேன்; செடி - குற்றம். தோய்ந்த, அன்பெறாத பலவின்பால் முற்று. எத்தனையும் அரிய நின் பெருமை ஒன்றுக்கும் பற்றாத புன்மையேன் திறத்தும் எளிதாயிற்றோ என்றபடி. (௫௫)

நாத வந்தமுங் கடந்தமெய்ஞ் ஞானவா னந்த
போத மென்பரஃ தின்றொரு புடவிமா னுடமாய்
ஆத பந்தெற வெறிந்த* விந்தனஞ்சுமந் தடியேன்
பேதை யன்பள வாயதோ பெருமநின் னுருவம்.

(இ - ள்) பெரும - பெருமானே, நின் உருவம் - தேவரீரின் உருவம், நாத அந்தமும் கடந்த - நாதாந்தத்தினையுங் கடந்தருளிய, மெய் ஞான ஆனந்தபோதம் என்பர் - உண்மை யறிவானந்த மென்று கூறுவர் பெரியோர்; அஃது இன்று ஒரு புடவி மானுடமாய் - அவ்வுருவம் இன்று இந்நிலவுலகின்கண் ஒரு மனித வடிவாய், ஆதபம் தெற - வெய்யில் சுட்டு வருத்த, எறிந்த இந்தனம் சுமந்து - வெட்டிய விறகினைச் சுமந்து, பேதை அடியேன் அன்பு அளவு ஆயதோ - பேதையாகிய அடியேனது அன்பின் அளவாகியதோ.

நாத அந்தம் - குடிலை. போதம் - தெளிவு என்னும் பொருட்டு. ஆதபம் - வெய்யில். பேதையாகிய அடியேன் என மாறுக; பொய்யன்பு எனலுமாம். (௫௬)

மறிந்த தெண்டிரை கிடந்தவ னுந்தியில் வந்தோன்
அறிந்த தன்றரும் பொருள்வரம் பகன்றெழு விசும்புஞ்
செறிந்த வண்டமுங் கடந்தது சிறியனேன் பொருட்டாத்
தறிந்த† விந்தனஞ் சுமந்ததோ தம்பிரான்‡ முடியே.

(இ - ள்.) தம்பிரான்முடி - இறைவனது திருமுடியானது, மறிந்த தெண்திரை கிடந்தவன் - மடங்கி வீசுந் தெளிந்த அலைகளையுடைய பாற்கடலிற் பள்ளி கொண்டவனாகிய திருமாலும், உந்தியில் வந்தோன் - அவனது உந்தியிற் றோன்றியவனாகிய பிரமனும், அறிந்தது அன்று - அறிந்ததன்று; அரும் பொருள் வரம்பு - அரிய பொருள்களின் முடிவாயது; அகன்று எழு விசும்பும் செறிந்த அண்டமும் கடந்தது - பரந்த வானினையும் நெருங்கிய அண்டங்களையுங் கடந்தது; சிறியனேன்

(பா - ம்.) * தெறத்தறிந்த. † எறிந்த. ‡ எம்பிரான்.

பொருட்டா - (அஃது) இன்று சிறியனாகிய என் பொருட்டு, த்றிந்த இந்தனம் சுமந்ததோ - வெட்டப்பட்ட விறகினைச் சுமந்ததோ.

அரும்பொருள் - மறைப்பொருள்; தத்துவங்கள்;

"போதார் புனைமுடியும் எல்லாப் பொருண் முடிவே"

என்று திருவாசகம் கூறுதல் காண்க. அரும்பொருள் என்பதற்கு அணு என்றுரைத்து, அணுவுக் கணுவாயது என்பாரு முளர்; அது சிறப்பின்றாதல் உணர்க. 'பாதாள மேழினுங் கீழ் பாதமலர்' என்பதனால் முடி அண்டமனைத்துங் கடந்ததென்பது பெறப்படுதல் காண்க. (௩௭)

என்ன வந்தனை செய்துநின் றேத்தியங் கயற்கண்
மின்ன மர்ந்தபங் கொருவனை வலங்கொடு மீண்டு
மன்னர் தம்பிரா னாகிய வரகுண தேவன்
தன்னை வந்தடி பணிந்தனன் றந்திரிக் கிழவோன்.

(இ - ள்.) என்ன - என்று, வந்தனைசெய்து நின்று ஏத்தி - வணங்கி நின்று துதித்து, அங்கயற்கண் மின் அமர்ந்த பங்கு ஒருவனை - அங்கயற்கண்ணம்மை அமர்ந்த பாகத்தையுடைய சோமசுந்தரக்கடவுளை, வலங்கொடுமீண்டு - வலஞ்செய்து திரும்பி, மன்னர்தம்பிரானாகிய வரகுணதேவன் தன்னை - மன்னர் மன்னனாகிய வரகுண தேவனை, தந்திரிக்கிழவோன் - யாழுக்குரிய பாணபத்திரன், வந்து அடிபணிந்தனன் - வந்து வணங்கினான்.

மின் - மின்போல்வாள். தந்திரி - நரம்பு; யாழுக்கு ஆகுபெயர். (௩௮)

வந்த வேழிசைத் தலைமகன் வரவறிந் தரசன்
அந்த வேழிசைக் கிழவனை யழையென வுழையோர்
பந்த யாழ்மக னிருக்கைபோய்ப் பார்த்தனர் காணார்
சிந்தை யாகுல மடைந்தவன் போனவா தெரியார்.*

(இ - ள்.) வந்த ஏழ்இசைத் தலைமகன் வரவு - அங்ஙனம் வந்த ஏழிசையிலும் வல்ல பாணபத்திரனது வருகையை, அரசன் அறிந்து - வரகுண பாண்டியன் தெரிந்து, அந்த ஏழ் இசைக் கிழவனை அழை என - (வடபுலத்தினின்றும் வந்த) அந்த ஏழிசை வல்ல ஏமநாதனை அழையாய் எனப் பணிக்க, உழையோர் - ஏவலாளர், பந்தம் யாழ் மகன் இருக்கைபோய் - கட்டமைந்த யாழ் மகனாகிய ஏமநாதன் இருப்பிடஞ் சென்று, பார்த்தனர் காணார் - பார்த்துக் காணாது, சிந்தை ஆகுலம் அடைந்து அவன் போனவா தெரியார் - மனம் வருந்தி அவ்வேமநாதன் போன விதத்தைத் தெரியாதவர்களாய்.

அழை யென ஒருவனை நோக்கிக் கூற உழையோர் பலர் சென்றனரென்க. பந்தம் - யாழ்வலிக்கட்டு. அடைந்து போனவா என இயையும்; அடைந்து காணார்

(பா - ம்.) *தெளியார்.

எனினும் பொருந்தும். போனவாறு என்பது ஈறுதொக்கது. பார்த்தனர், காணார், தெரியார் என்பன முற்றெச்சங்கள். (௱௯)

எங்கு ளானெனத் தேடுவா ரிவரெதி ரயல்வாய்
அங்கு ளார்சில ரறிந்தவா றறைகுவா ரவனேற்
றிங்கு ளான்விற கெடுத்தொரு முதுமக னிவன்பாற்
பொங்கு மேழிசைப் பத்திர னடிமையாய்ப் போந்தான்.

(இ - ள்.) எங்கு உளான் எனத் தேடுவார் இவர் எதிர் - எங்கு இருப்பான் எனத் தேடுவாராகிய இவரெதிரே, அயல்வாய் அங்குளார் சிலர் - அங்கே அருகிலுள்ளார் சிலர், அறிந்தவாறு அறைகுவார் - தெரிந்தவாறு சொல்வார், அவன் நேற்று இங்கு உளான் - அவன் நெருநல் இங்கு இருந்தான், ஒரு முது மகன்-ஒரு கிழவன், விறகு எடுத்து - விறகு சுமந்து, இவன் பால் - இவ்வேம நாதனிடத்து, பொங்கும் ஏழ் இசைப் பத்திரன் - விளங்குகின்ற ஏழு இசையிலும் வல்ல பாணபத்திரனது, அடிமையாய்ப் போந்தான் - அடிமையாகி வந்தான்.

அயல்வாய் - பக்கத்து மனையிடங்கள். அடிமையாய் - அடிமை யென்று கூறி. அறைகுவார் என்பது வருஞ்செய்யுளில் 'என' என்பதனைக் கொள்ளும். (௱௨)

பாடி னான்பின்பு பட்டது தெரிகிலேம் பானாள்
ஓடி னானெனக் கேட்டலு மொற்றர்போய்க் கொற்றஞ்
சூடி னானவை யடைந்தவர் சொல்லிய வாறே
ஆடி னார்வியப் படைந்தனு மானமுற் றரசன்.

(இ - ள்.) பாடினான் - (வந்து) பாடினான், பின்பு பட்டது தெரிகிலேம்- பின்னர் நிகழ்ந்த செய்தியை அறியோம், பால் நாள் ஓடினான் - பாதி இரவில் அவ்வேமநாதன் ஓடினான், என - என்று கூற, கேட்டலும் - கேட்டவளவில், ஒற்றர் போய் - உழையோர் சென்று, கொற்றம் சூடினான் அவை அடைந்து - வெற்றி மாலையைச் சூடிய பாண்டியனது அவையைச் சார்ந்து, அவர் சொல்லியவாறே ஆடினார் - அவ்வயலோர் கூறியவாறே கூறினார்; அரசன் வியப்பு அடைந்து அனுமான முற்று - பாண்டியன் அதிசயித்து ஐயமுற்று.

பட்டது - நிகழ்ந்தது. கொற்றம் - வெற்றி; வாகை. ஆடினார் - கூறினார். அநுமானம் - ஐயம்; கருதுதலுமாம். (௱௩)

தன்ன டைந்தவத் தந்திரித் தலைவனை நோக்கி
என்ன வாறவன் போனவா றிங்கினும் போன
பின்னை யாதுநீ செய்ததை யெனவிசைப் பெருமான்
தென்னர் கோனடி தொழுதுதன் செய்தியை மொழிவான்.

(இ - ள்.) தன் அடைந்த அத்தந்திரித் தலைவனை நோக்கி - தன்னைச்சார்ந்து நின்ற அந்த யாழ்த் தலைவனாகிய பாணபத்திரனைப் பார்த்து, அவன் போனவாறு

என்னவாறு - அவன் போனவிதம் என்னவகை, இங்கினும் போன பின்னை - இங்கு நின்றும் போயினபின், நீயாது செய்தனை என - நீ என்ன செய்தாய் என்று வினவ, இசைப் பெருமான்-இசைத் தலைவனாகிய பத்திரன், தென்னர் கோன் அடிதொழுது- பாண்டியர் மன்னனாகிய வரகுணனின் அடிகளை வணங்கி, தன் செய்தியை மொழி வான் - தனது செய்தியைக் கூறுவானாயினன்.

இங்கினும் - இவ்விடத்தினின்றும்; இன், நீக்கப்பொருட்டு. (கூஉ)

நென்னல் வாயடி யேனின தாணிழ லீங்கிப்
பின்னல் வார்சடை மௌலியெம் பிரானடி பணிந்தேன்
இன்ன லார்குறை யிரந்துமீண் டிருக்கைபுக் கிருந்தேன்
கன்ன லார்மொழி பங்கரென் கனவில் வந்தருளி.

(இ - ள்.) நென்னல் வாய் - நேற்றைப் பொழுதில், அடியேன் நின தாள் நிழல் நீங்கி - அடியேன் உன்னுடைய அடி நிழலை நீங்கிச் சென்று, பின்னல் வார் சடை மௌலி - பின்னிய நீண்ட சடையாகிய முடியினையுடைய, எம்பிரான் அடி பணிந்தேன் - எமது பிரானாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவடிகளைப் பணிந்து, இன்னல் ஆர் குறை இரந்து மீண்டு - துன்ப மிக்க குறைபாடுகளை இரந்து கூறி மீண்டு, இருக்கை புக்கு இருந்தேன் - இல்லிற் புகுந்து இருந்தேன்; கன்னல் ஆர் மொழி பங்கர் - கரும்பு போலும் மொழியினையுடைய உமையைப் பாகத்திலுடைய அவ்விறைவர், என் கனவில் வந்தருளி - எனது கனவின்கண் வந்தருளி.

வாய், ஏழனுருபு. நின, அகரம் ஆறன் பன்மையுருபு. பணிந்தேன், முற்றெச்சம். ஆர், உவமச் சொல்லாக நின்றது. மொழி, ஆகு பெயர். (கூங)

ஓடி யுன்பொருட் டாகநாம் விறகெடுத் துழன்று
வாடி நின்பகைப் புறங்கடை வந்துசா தாரி
பாடி வென்றுநின் பகைவனைத் துரந்தன மெனச்சொல்
ஆடி னார்விழித் தேனிது நிகழ்ந்ததென் றறைந்தான்.

(இ - ள்.) உன்பொருட்டாக - உன் நிமித்தமாக, நாம் ஓடி விறகு எடுத்து உழன்று வாடி - நாம் ஓடி விறகு சுமந்து திரிந்து வாடி, நின் பகைப் புறங்கடை வந்து - நினது பகைவனாகிய ஏமநாதன் தலைவாயிலிற் சென்று, சாதாரி பாடி வென்று - சாதாரிப் பண்ணைப் பாடி வென்று, நின் பகைவனைத் துரந்தனம் எனச் சொல் ஆடினார் - அவனை ஓட்டி விட்டேமெனக் கூறியருளினார்; விழித்தேன் - யானுங் கண் விழித்தேன்; இது நிகழ்ந்தது என்று அறைந்தான் - இது தான் நடந்த செய்தி என்று கூறினான்.

பகைப் புறங்கடை - பகைவனது இல்லின் புறங்கடை. சொல்லாடினார் - சொல்லினார். சொல்லிய வளவில் விழித்தேன் என்க. (கூச)

ஏவன் மைந்தர்போய் விளங்கிவந் திசைத்ததும் வீணைக்
காவ லன்கஞ நிகழ்ச்சியு மொத்தலிற் கைக்கும்
பூவ லங்கலா னிஃதுநம் பொன்னகர்க் கூடற்
றேவர் தம்பிரான் றிருவிளை யாட்டெனத் தெளிந்தான்.

(இ - ள்.) ஏவல் மைந்தர்போய் - ஏவலாளர் சென்று, விளங்கிவந்து இசைத்ததும் - தெரிந்துவந்து கூறியதும், வீணைக்காவலன் கஞ நிகழ்ச்சியும் - வீணை வேந்தனுகிய பாணபத்திரனது கஞ நிகழ்ச்சியும், ஒத்தலின் - ஒத்திருத்தலால், கைக்கும் பூ அலங்கலான் - வேப்ப மலர்மாலையை யணிந்த பாண்டியன், இஃது நம் பொன் நகர்க் கூடல் - இது நமது அழகிய நகரமாகிய கூடலின்கண் எழுந்தருளிய, தேவர்தம்பிரான் திருவிளையாட்டெனத் தெளிந்தான் - தேவதேவனுகிய சோமசுந்தரக் கடவுளின் திருவிளையாடல் என்று தெளிந்தான்.

விளங்கி என்பது விளங்க அறிந்து என்னும் பொருளில் வந்தது. கைக்கும்பூ கசக்கும் பூ ; வேப்பம் பூ. (௬௫)

இகழ்ந்த கூற்றெறி சேவடிக் கிடையரு நேயந்
திகழ்ந்த பத்திர னன்பையுந் தேவரைக் காப்பான்
அகழ்ந்த வாழிநஞ் சுண்டவ னருளையும் வியந்து
புகழ்ந்து போய்மது ராபுரிப் புனிதனைப் பணியா.

(இ - ள்.) இகழ்ந்த கூற்று எறி சேவடிக்கு - அவமதித்துவந்த கூற்றுவனை உதைத்த சிவந்த திருவடிக்கு, இடையரு நேயம் திகழ்ந்த - இடைவிடாத அன்பு விளங்கிய, பத்திரன் அன்பையும் - பாணபத்திரனது அன்பையும், தேவரைக் காப்பான் - தேவர்களைக் காக்கும் பொருட்டு, அகழ்ந்த ஆழி நஞ்சு உண்டவன் அருளையும் - (சகரர்) தோண்டிய கடலின் நஞ்சினை உண்ட இறைவனது அருளையும், வியந்து புகழ்ந்து - பாராட்டிப் புகழ்ந்து, போய் - சென்று, மதுராபுரிப் புனிதனைப் பணியா - மதுரைப் பதியிலெழுந்தருளிய இறைவனை வணங்கி.

இகழ்ந்த - தன்னைச் சரண் புகுந்த அடியான்மீது தன்னை மதியாது அடர்ந்து வந்த. காப்பான் வினையெச்சம். நஞ்சுண்டவன் என்றதனுலும் அருளைவிளக்கினர்.()

பத்தர் யாழிசைக் கிழவனைப் பனைக்கைமா னெருத்தில்
வைத்து மாடநீ ணகர்வலஞ் செய்வித்து மலர்ந்த
சித்த மாழ்ந்திட வரிசைகண் மிதப்புறச் செய்து
தத்து மான்றேரைடைத் தேரினுன் றன்மனை புகுவான்.

(இ - ள்.) பத்தர் யாழ் இசைக்கிழவனை - பத்தரையுடைய யாழிசைக்கு உரிய பாணபத்திரனை, பனைக்கைமான் எருத்தில் வைத்து - பனைபோன்ற துதிக்கையையுடைய யானையின் பிடரில் வைத்து, மாடம் நீள்நகர் வலம் செய்வித்து - மாடங்கள் நிறைந்த நீண்ட நகரினை வலஞ்செய்வித்து, மலர்ந்த சித்தம் ஆழ்ந்திட - மலர்ந்த அவன் மனம் உவகைக் கடலில் அமிழ்ந்த, வரிசைகள் மிதப்புறச் செய்து-

வரிசைகளை நிறையச் செய்து, தன்மனை புகுவான் - தனது மனையிற் புகுகின்றவ ளுகிய, தத்தும் மான் தொடைத் தேரினன் - தாவுகின்ற குதிரைகள் பூட்டிய தேரை யுடைய பாண்டியன்.

மிதப்புற - மிக. தொடை - பூட்டு. புகுவானுகிய தேரினன் என்க. (சுஎ)

தேவ ருந்தவ முனிவருந் தேவரிற் சிறந்தோர்
யாவ ருந்தமக் காட்செய விருப்பவ ரிருதாள்
நோவ வந்துமக் காட்செய்து நுங்குறை முடிப்பார்
ஆவ ரேலுமக் கனைவரு மேவல ரன்றோ.

(இ - ள்.) தேவரும் தவமுனிவரும் தேவரில் சிறந்தோர் யாவரும் - தேவர் களும் தவத்தினையுடைய முனிவர்களும் தேவர்களிற் சிறந்த திருமால் முதலிய அனைவரும், தமக்கு ஆள்செய்ய இருப்பவர் - தமக்குக் குற்றேவல் செய்ய வீற்றிருப் பவராகிய இறைவர், இருதாள் நோவ வந்து - இரண்டு திருவடிகளும் வருந்த வந்து, உமக்கு ஆள்செய்து - உமக்கு ஏவல் செய்து, நும்குறை முடிப்பார் ஆவரேல் - உமது குறையினை முடிப்பாராயின், உமக்கு அனைவரும் ஏவலர் அன்றோ - உமக்கு அனைவரும் ஏவலாளர் அல்லவோ.

அனைவரும் - அத்தேவர் முதலாயினுரும் புவியின் மாந்த ரனைவரும். (சுஅ)

ஆத லாலெனக் குடையர்நீ ருமக்குநா னடியேன்
ஈத லாலெனக் கும்மொடு வழக்குவே றிலைநான்
ஓத லாவதோர் குறையுள தின்றுதொட் டுமக்கு
வேத நாதனைப் பாடலே கடனென விடுத்தான்.

(இ - ள்.) ஆதலால் - ஆகையால், எனக்கு உடையர் நீர் - என்னையுடைய தலைவர் நீர்; நான் உமக்கு அடியேன் - நான் நுமக்கு அடிமை; ஈது அல்லால் - நீர் தலைவரும் யான் அடிமையுமாகிய இந்த முறையே யன்றி, எனக்கு உம்மொடு வேறு வழக்கு இலை - அடியேனுக்கு உம்முடன் வேறு வழக்கு இல்லை; நான் ஓதல் ஆவ தோர் குறை உளது - இன்னும் நான் கூறக்கடவதாகிய குறை ஒன்று உளது; (அது), இன்று தொட்டு - இன்று முதல், உமக்கு வேத நாதனைப் பாடலே கடன் என விடுத்தான் - உமக்கு வேதநாதனுகிய இறைவனைப் பாடுதலே கடமை என்று வேண்டி அனுப்பினுன்.

நீர் முன்போல் அரசவைக்கண் வந்து பாடுதல் மரபன்றென்பார் 'எனக் கும் மொடு வழக்கு வேறிலை' என்றார். (சுக)

அரச னல்கிய வெறுக்கைபூ ணுடைகள் பிறவும்
பரசு நாவலர் மாணவர் யாவர்க்கும் பகிர்ந்து
வரிசை யாலிசைக் கிளையொடு மனையில்வந் தெய்திக்
கரைசெ யாமகிழ் சிறந்திசைக் காவல னிருந்தான்.

(இ - ள்.) அரசன் நல்கிய - வரகுண பாண்டியன் கொடுத்த, வெறுக்கை பூண் ஆடைகள் பிறவும் - செல்வமும் அணியும் ஆடைகளும் பிறவுமாகிய அனைத்தையும், பரசும் நாவலர் மாணவர் யாவர்க்கும் பகிர்ந்து - துதிக்கின்ற நாவலர்க்கும் மாணவர்கட்கும் ஏனையோர்க்கும் பகிர்ந்து கொடுத்து, இசைக்கிளையொடு - பாண் சுற்றத்தோடும், வரிசையால் - அரசன் செய்த வரிசையோடும், மனையில் வந்து எய்தி - மனையின்கண் வந்தடைந்து, கரை செயா மகிழ் சிறந்து - அளவிறந்த மகிழ்ச்சியிற் சிறந்து, இசைக் காவலன் இருந்தான் - யாழ் வேந்தனாகிய பாணபத்திரன் இனிதிருந்தான்.

ஆடைகளும் பிறவும் என்க. பரசு நாவலர் - வந்தியர். வரிசை - ஊர்தி கொடி முதலியன. (எ௰)

ஆகச் செய்யுள் உக00.

நாற்பத்திரண்டாவது

# திருமுகங் கொடுத்த படலம்

[அறுசீரடியாசிரிய விருத்தம்.]

முன்னவன் மதுரை மூதூர் முழுமுத லிசைவ லானை
இன்னிசை பாடி வென்ற தின்றுரை செய்தே* மந்தத்
தென்னவன் சேரன் மாடே திருமுகங் கொடுத்துப் பாணர்
மன்னவன் றனக்குச் செம்பொன் வழங்கிய வழக்கஞ் சொல்வாம்.

(இ - ள்.) முன்னவன் - (திருமால் முதலியோர்க்கு) முன்னவனும், மதுரை மூதூர் முழு முதல் - மதுரை என்னும் பழம் பதியில் எழுந்தருளிய முழுமுதற் பொருளுமாகிய சோமசுந்தரக் கடவுள், இசை வலானை - இசையில் வல்ல ஏமநாதனை, இன் இசை பாடி வென்றது - இனிய இசை பாடி வென்ற திருவிளையாடலை, இன்று உரை செய்தேம் - இப்பொழுது கூறினேம்; அந்தத் தென்னவன் - (இனி) அவ்விறைவனே, சேரன் மாடே திருமுகம் கொடுத்து - சேரமான் பெருமாளிடந் திருமுகங் கொடுப்பித்து, பாணர் மன்னவன் தனக்கு - பாணர் வேந்தனாகிய பத்திரனுக்கு, செம்பொன் வழங்கிய வழக்கம் சொல்வாம் - செம்பொன் அளித்த திருவிளையாடலைக் கூறுவோம்.

முன்னவனென்ற கருத்தை,

"மாலு நான்முகத் தொருவன் யாரினும்
முன்ன வெம்பிரான் வருக"

என்னும் திருவாசகத்தால் அறிக.

என்னுரை செய்தேம் என்பது பாடமாயின் யாதினையறிந்து கூறினேம் என்றுரைத்துக் கொள்க. சுந்தர பாண்டியனாக வந்தமையின் 'அந்தத் தென்னவன்' என்றார். வழக்கம் - வரலாறு. (க)

இனிமதி யெமக்கீ தென்னு யாழ்வல்லோ னன்று தொட்டுப்
பனிமதி மருமான் கோயிற் பாணிசைக் கிழமை நீத்துக்
குனிமதி மிலைந்த நாதன் கோயின்முப் போது மெய்திக்
கனிமதி யன்பிற் பாடுங் கடப்படு நியமம் பூண்டான்.

(இ - ள்.) இனி எமக்கு மதி ஈது என்னு-இனி எமக்கு அறிவாவது இதுவே என்று கருதி, யாழ் வல்லோன் - யாழில் வல்ல பாணபத்திரன், அன்று தொட்டு -

---

(பா - ம்.) * என்னுரை செய்தேம்.

அந்நாள் முதல், பனிமதி மருமான் கோயில் பாண் இசைக் கிழமை நீத்து-குளிர்ந்த சந்திரன் மரபினனாகிய வரகுண பாண்டியனது அரண்மனையில் இசை பாடுகின்ற உரிமையைவிட்டு, குனி மதி மிலைந்த நாதன் - வளைந்த மதியினை அணிந்த இறைவனது, கோயில் முப்போதும் எய்தி - திருக்கோயிலை மூன்று காலங்களினும் அடைந்து, மதிகனி அன்பில் பாடும் - உள்ளத்திற் கனிந்த அன்பினாலே பாடுகின்ற, கடப்படு நியமம் பூண்டான் - கடமையாகிய நியதியை மேற்கொண்டான்.

அரசன் கூறிய இந்நெறியில் ஒழுகுதலே எமக்கு அறிவென்று கொண்டென்க. முப்போது - காலை நண்பகல் மாலை. (உ)

இத்தொழி லன்றி வேறு தொழிலிவற் கின்மை யாலே
பத்திர னிலம்பா டெய்தப் பொறுப்பரோ பழனக் கூடற்
சித்தவெம் மடிகள் வேந்தன் பொன்னறைச் செல்வம் வெளவிப்
பத்தர்யா ழிடத்தோ ளேந்திப் பாடுவான் காண வைப்பார்.

(இ - ள்.) இத்தொழில் அன்றி - இங்ஙனம் இறைவன் திருமுன் பாடுதலேயன்றி, வேறு தொழில் இவற்கு இன்மையாலே - வேறு தொழில் இவனுக்கு இல்லாமையினால், பத்திரன் இலம்பாடு எய்த - பாணபத்திரன் வறுமையை அடைய, பழனக்கூடல் சித்த எம் அடிகள் பொறுப்பரோ - வயல் சூழ்ந்த கூடலிலுள்ள சித்தராகிய எம்மிறைவர் அதனைப் பொறுப்பரோ (பொறாராகலின்), வேந்தன் பொன் அறைச் செல்வம் வெளவி - மன்னனது கருவூலத்திலுள்ள செல்வங்களைக் கவர்ந்து, பத்தர் யாழ் இடத்தோள் எந்தி - பத்தரையுடைய யாழினை இடது தோளிலேந்தி, பாடுவான் காணவைப்பார் - பாடுகின்ற பாணபத்திரன் காணுமாறு எதிரில் வைப்பாராயினர்.

வேறு தொழில் - அரசவையிற்பாடுதல் மாணவர்க்குக் கற்பித்தல் முதலிய பொருள் பெறுந் தொழில். (௩)

சிலபொலங் காசு சின்னாண் மணிக்கலன் சின்னாள் செம்பொற்
கலைவகை சின்னா எம்பொற் சாமரைக் காம்பு சின்னாள்
அலர்கதி ரரிமான் சேக்கை யாடகத் தகடு சின்னாள்
குலமணி வருக்கஞ் சின்னாள் கொடுத்திடக் கொண்டு போவான்.

(இ - ள்.) சில் நாள் பொலங்காசு சில - சில நாள் பொற்காசு சிலவும், சில் நாள் மணிக்கலன் - சில நாள் மணிகள் இழைத்த அணிகளும், சில் நாள் செம்பொன் கலைவகை - சில நாள் சிவந்த பொன்னாடை வகைகளும், சில் நாள் அம்பொன் சாமரைக் காம்பு - சில நாள் அழகிய பொன்னாலாகிய சாமரைக் காம்புகளும், சில் நாள் - சில நாள், அரிமான் சேக்கை - சிம்மாசனத்தில் வேய்ந்த, அலர் கதிர் ஆடகத்தகடு - விரிந்த ஒளியினையுடைய பொற்றகடும், சில் நாள் குலமணி வருக்கம் - சில நாள் பல சாதி மணிக் குவியல்களும், கொடுத்திட - அளிக்க, கொண்டு போவான் - பெற்றுக்கொண்டு போவானாயினன்.

குலம் - சிறப்புமாம். (ச)

கைவரும் பொருளைத் தந்த கள்வருந் தானு மன்றி
எவ்வெவர் தமக்குந் தோற்றா தெரியிலிட் டழித்துஞ் சின்னஞ்
செய்வன செய்துந் தன்னைச் சேர்ந்தவ ரிரந்தோர் கைபார்த்
துய்பவர் பிறர்க்கு மாறா துதவியுட் கவலை தீர்ப்பான்.

(இ-ள்.) கைவரும் பொருளை - அங்ஙனம் கையில்வந்த பொருளை, தந்த கள்வரும் தானும் அன்றி - தனக்கு அளித்த கள்வரும் தானுமே அல்லாமல், எவ்வெவர் தமக்கும் தோற்றாது - எவ்வகையினர்க்கும் புலப்படாமல், எரியில் இட்டு அழித்தும் - நெருப்பில் இட்டு உருவழித்தும், சின்னம் செய்வன செய்தும் - உரு மாற்றாவேண்டியவைகளை அங்ஙனமே செய்தும், தன்னைச் சேர்ந்தவர் இரந்தோர் - தன்னைச் சார்ந்தவர்க்கும் இல்லையென்றிரந்தவர்க்கும், கை பார்த்து உய்பவர் பிறர்க்கும் - தன் கை வரவு பார்த்துப் பிழைப்போர்க்கும் இவரொழிந்த பிறர்க்கும், மாறாது உதவி உள்கவலை தீர்ப்பான் - இடையறாது கொடுத்து அவர்களின் உள்ளக் கவலையைப் போக்கி வருவான்.

அழித்தல் - உருக்குதல். சின்னஞ் செய்தல் - முன்னையுருத்தோன்றாவகை பேதித்தல். தன்னைச் சேர்ந்தவர் - சுற்றத்தார். கைபார்த்துய்பவர் - பரவுவோர், ஏவல் செய்வோர் முதலாயினர். (௫)

வைகலுங் கொடுப்போர் பின்னாண் மறுத்தன ராகப் போய்ப்போய்க்
கைதொழு திறைஞ்சி வாளா வருமவன் கலியின் மூழ்கி
உய்வகை வேறு காணா தொக்கலு மொக்க வாடிக்
கையற வடைய நோனா துறங்கினன் கனவி னெல்லை.

(இ-ள்.) வைகலும் கொடுப்போர்-இங்ஙனம் நாள்தோறும் கொடுத்துவரும் இறைவர், பின்னாள் மறுத்தனராக - பிந்திய நாட்களில் கொடாது மறுத்தாராக; போய்ப்போய் - சென்றுசென்று, கைதொழுது இறைஞ்சி - கைகூப்பி வணங்கி, வாளாவரும் அவன்-ஒன்றும் பெறாது வருகின்ற அப்பாணபத்திரன், கலியில் மூழ்கி- வறுமைக் கடலிலழுந்தி, உய்வகை வேறுகாணாது- பிழைக்கும் வகை வேறு காணாமல், ஒக்கலும் - சுற்றத்தாரும், ஒக்க வாடிக் கையறவு அடைய - ஒருசேர வாடித் துன்பமுற, நோனாது உறங்கினன் - பொறுக்கலாற்றாது துயின்றான் ; கனவின் எல்லை - அப்பொழுது அவன் கனவின்கண்.

ஒக்க — உடன் என்றுமாம். கையறவு - கையாறு ; செயலறுதியாகிய துன்பம். நோன்றல் - பொறுத்தல். (௬)

சித்தவெம் பெருமான் வந்து செப்புவா ரப்பா நிம்பத்
தொத்தவன் கோசந் தன்னிற் றம்பியுண் கனியின் வெளவி
இத்தன மின்று காறு மீந்தன மெம்பா லன்பு
வைத்தவ னறிந்தாற் சங்கை மனத்தனாய் விகற்பங் கொள்வான்.

(இ - ள்.) சித்த எம்பெருமான் வந்து செப்புவார் - சித்த மூர்த்திகளாகிய எமது பெருமானார் தோன்றியருளிக் கூறுவார்; அப்பா - அப்பனே, நிம்பத்தொத்தவன் - வேப்பமலர் மாலையை யணிந்த பாண்டியனது, கோசம் தன்னில் - பொன்னறையில், தும்பி உண்கனியின் வெளவி - வேழம் உண்ட விளாங்கனிபோல (அது ஆகுமாறு) கவர்ந்து, இத்தனம் இன்றுகாறும் ஈந்தனம் - இந்தப் பொருளை இந்நாள் வரையும் கொடுத்தருளினோம்; எம்பால் அன்பு வைத்தவன் அறிந்தால் - எம்மிடத்து அன்புவைத்த வரகுணபாண்டியன் அறிந்தானாயின், சங்கை மனத்தனாய் விகற்பம் கொள்வான் - ஐயமுற்ற மனத்தினனாய் வேறுபட்டு.

அப்பா என அன்பால் விளித்தார். தொத்து - பூங்கொத்து. கோசம் - பொன்னறை. கனியின் - கனிபோல வறிதாக. சங்கை - ஐயம். விகற்பங் கொள்ளல் - தடுமாற்ற மடைதல். கொள்வான் என்பதனை எச்சமாக்குக. (எ)

மயலறக் கற்புக் காக்கு மகளிர்போற் றுறவு காக்க
முயலும்யோ கரிலுட் காப்பு முரசெறி புறஞ்சூழ் காப்புங்
கயலிலச் சினையு நிற்கக் கவர்ந்ததற் புதமிக் கள்வன்
உயிர்தொறு மொளித்து நின்ற வொருவனோ* வறியே னென்பான்.

(இ - ள்.) மயல் அறக் கற்புக்காக்கும் மகளிர்போல் - (வேறு ஆடவரிடத்து) ஆசை இல்லையாகக் கற்பினைக்காக்கின்ற மகளிர்போலவும், துறவுகாக்க முயலும் யோகரில் - துறவினைக் காக்க முயலுகின்ற சிவயோகிகளைப்போலவும், உள்காப்பும் - அகக்காவலும், முரசு எறிபுறம் சூழ்காப்பும் - எறிகின்ற முரசொலியுடன் சூழ்தரும் வெளிக்காவலும், கயல் இலச்சினையும் நிற்க - மீன முத்திரையும் உள்ளவாறே இருக்க, கவர்ந்தது அற்புதம் - பொருளை வெளவியது வியக்கத்தக்கது; இக்கள்வன் - இங்ஙனம் கவர்ந்த கள்வன், உயிர்தொறும் ஒளித்துநின்ற ஒருவனோ - உயிர்கள்தோறும் ஒளித்துநின்ற ஒருவனாயிருப்பானோ, அறியேன் என்பான் - அறியேனே என்று கருதுவான்.

மயல் - மையல்; ஆசை. கற்புக் காக்கும் மகளிர்க்கு நாண் முதலியன அகத்தே நீங்காது நின்று காத்தல்போலவும் துறவுகாக்க முயல்வார்க்குப் புறத்திலுள்ள ஐம்பொறிகளும் விடயங்கள் புகுதாது தடுத்து நிற்றல்போலவும் உட்காப்பும் புறஞ்சூழ் காப்பும் என முறை நிரனிறையாகக் கொள்க. உயிர்தொறு மொளித்து நின்ற வொருவனோ எனத் தன்னை ஐயுறுதலுஞ் செய்வான் என்றபடி. (அ)

கோமக னினைய செய்தி யறியுமேற் கோசங் காப்போர்க்
காமுறு† தண்ட நின்போ லன்பகத் தெம்மை வைத்த
தேமரு போந்தின் கண்ணிச் சேரமான் றனக்கிப் போது
நாமொரு முடங்க றீட்டி நல்குவம் போதி யென்னா.

---

(பா - ம்) * ஒளித்த கள்வ னொருவனோ. †ஆமுறுந்தண்டம்.

(இ - ள்.) கோமகன் இனையசெய்தி அறியுமேல் - மன்னவன் இச்செய்தியை அறிவானேல் (அங்ஙனங் கருதுவதன்றி), கோசம் காப்போர்க்கு உறுதண்டம் ஆம் - கருவூலங் காப்போர்க்கு மிக்க தண்டமும் உண்டாகும்; (ஆதலால்), நின்போல் - உன்னைப்போல், அன்பு அகத்து எம்மை வைத்த - அன்போடு உள்ளத்தின்கண் எம்மை வைத்துள்ள, தேம் மரு போந்தின் கண்ணிச் சேரமான் தனக்கு - தேன் பொருந்திய பனம் பூமாலையை யணிந்த சேரமானுக்கு, இப்போது - இப்பொழுது, நாம் ஒருமுடங்கல் தீட்டி நல்குவம் - நாம் ஒரு ஓலை எழுதிக்கொடுப்போம், போதி என்னா - நீ அங்குப் போகக்கடவை என்று கூறி.

முடங்கல் - திருமுகம். (௯)

மறைக்குரை செய்த வாக்கான் மதிமலி புரிசை யென்னுஞ்
சிறப்பியல் சீர்சால் செய்யுட் பாசுரஞ் செப்பித் தீட்டிப்
பிறைச்சடைப் பெருமா னல்கி மறைந்தனன் பெரும்பாண் செல்வன்
உறக்கநீத் தாடிப் பாடி யுவகைமா கடலி லாழ்ந்தான்.

(இ - ள்.) மறைக்கு உரைசெய்த வாக்கால் - வேதத்துக்குப் பொருளருளிச் செய்த திருவாக்கினால், மதிமலிபுரிசை என்னும் - 'மதிமலிபுரிசை' என்னு முதலையுடைய, சிறப்பு இயல் சீர்சால் - சொற்பொருட் சிறப்புடைய விழுப்பமிக்க, செய்யுள் பாசுரம் செப்பித்தீட்டி - செய்யுளாகிய திருப்பாசுரம் ஒன்றினைக் கூறி அதனை எழுதி, நல்கி - கொடுத்தருளி, பிறைச்சடைப் பெருமான் மறைந்தனன் - பிறையினையணிந்த சடையையுடைய இறைவன் மறைந்தருளினான்; பெரும்பாண் செல்வன் - பெருமையுடைய இசையாகிய செல்வத்தையுடைய பாணபத்திரன், உறக்கம் நீத்து - துயிலினின்றும் நீங்கி, ஆடிப்பாடி - ஆனந்தக்கூத்தாடிப் பாடி, உவகைமா கடலில் ஆழ்ந்தான் - உவகை என்னும் பெரிய கடலுள் அமிழ்ந்தினான்.

திருமுகப்பாசுரம்

"மதிமலி புரிசை மாடக் கூடற்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிறை
அன்னம் பயில்பொழி லால வாயின்
மன்னிய சிவன்யான் மொழிதரு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்
குரிமையி னுரிமையி னுதவி யொளிதிகழ்
குருமா மதிபுரை குலவிய குடைக்கீழ்ச்
செருமா வுகைக்குஞ் சேரலன் காண்க
பண்பால் யாழ்வல பாண பத்திரன்
தன்போ லென்பா லன்பன் றன்பாற்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே"

என்பது. வரிச்சிறகு, சிவன்யாம், ஒருமையினுரிமையின், யாழ்பயில், தன்போலெம்பால் என்பன பாசுரத்தின் பாடபேதங்கள். இது ௧௧-ம் திருமுறையில் முதலதாக வுள்ளது.

" பரிபுரக் கம்பலை யிருசெவி யுண்ணும்
குடக்கோச் சேரன் கிடைத்திது காண்கென
மதிமலி புரிசைத் திருமுகங் கூறி
அன்புருத் தரித்த வின்பிசைப் பாணன்
பெறநிதி கொடுக்கென வுறவிடுத் தருளிய
மாதவர் வழுத்துங் கூடற் கிறைவன் "

எனக் கல்லாடத்தும் இவ்வரலாறு குறிக்கப் பெற்றுள்ளது. (ய)

[கலி விருத்தம்]

வாங்கிய திருமுக மணிப்பட் டாடையிட்
டாங்கிறை யடிபணிந் தகன்று பத்திரன்
ஓங்கிய கோயிலை வலங்கொண் டொல்லென
நீங்கிமேல் வரைப்புல நெறிக்கொண் டேகுவான்.

(இ - ள்.) வாங்கிய திருமுகம் - பெற்ற திருமுகத்தை, மணி - அழகிய, பட்டு ஆடை இட்டு - பட்டாடையில் வைத்து, இறை அடிபணிந்து - இறைவன் திருவடியை வணங்கி, ஆங்கு அகன்று - அங்கு நின்றும் நீங்கி, பத்திரன் - பாணபத்திரன், ஓங்கிய கோயிலை வலம்கொண்டு - உயர்ந்த திருக்கோயிலை வலம்வந்து, ஒல்லென நீங்கி - விரைந்து அகன்று, மேல்வரைப் புலம் நெறிக்கொண்டு ஏகுவான் - மேற்றிசையிலுள்ள மலைநாட்டிற்கு வழிக்கொண்டு செல்வானாயினன்.

ஒல்லென, விரைவுக் குறிப்பு. வரைப்புலம் - மலைநாடு. (கக)

கொல்லையுங் குறிஞ்சியுங் கொதிக்கும் வெம்பரற்
கல்லத ரத்தமுங் கடந்து முட்புறப்
பல்சுளைக் கனியடி யிடறப் பைப்பைய
நல்வளங் கெழுமலை நாடு நண்ணினான்.

(இ - ள்.) கொல்லையும் குறிஞ்சியும் - முல்லைநிலத்தையும் குறிஞ்சி நிலத்தையும், கொதிக்கும் வெம்பரல்கல் அதர் அத்தமும் கடந்து - கொதிக்கின்ற வெய்ய பருக்கைக் கற்களையுடைய வழியினையுடைய பாலை நிலத்தையும் கடந்து, முள்புறம் பல் சுளைக்கனி அடி இடற - புறத்தில் முட்களையும் பல சுளைகளையுமுடைய பலாக் கனிகள் அடியில் இடற, பைப்பைய - மெல்லமெல்ல, நல்வளம்கெழு மலை நாடு நண்ணினான் - நல்ல வளங்கள் நிறைந்த மலைநாட்டினை அடைந்தான்.

மலைவளங் கூறுவார் 'கனியடியிடற' என்றார். பையப் பைய என்பது முன் மொழியிறுதி அகரம் மெய்யொடுங் கெட்டுப் பைப்பைய என்றாயது. (கஉ)

அலைகட னெடுந்துகி லந்த நாடெனுந்
தலைமக டனக்குவான் றடவு குன்றுபூண்
முலையென விளங்கின முகத்திற் றீட்டிய
திலகமே யானது திருவஞ் சைக்களம்.

(இ - ள்.) அலை கடல் நெடுந்துகில் - அலைக்கின்ற நெடிய கடலினை ஆடையாக வுடைய, அந்த நாடு எனும் தலைமகள் தனக்கு - அந்த நாடு என்கின்ற தலைவிக்கு, வான் தடவு குன்று - விண்ணினை அளாவியமலைகள், பூண்முலை என விளங்கின - அணிகளையுடைய கொங்கைகள்போல விளங்கின; திருவஞ்சைக்களம்-திருவஞ்சைக் களம் என்னும் பதி, முகத்தில் தீட்டிய திலகமே ஆனது - அம்மாதின் முகத்தில் இட்ட திலகமே போன்று விளங்கியது.

பூண்முலையும் திலகமும் மகளிர்க்கு இன்றியமையாச் சிறப்பினவாதல் உணர்க. (௧௩)

அறமக ளாக்கமு மலரின் மேயசெந்
திறமக ளாக்கமு நீதி சான்றபோர்
மறமக ளாக்கமும் வடசொற் றென்கலைத்
திறமக ளாக்கமுஞ் சிறந்த தந்நகர்*.

(இ - ள்.) அறமகளாக்கமும் - அறமகளாலாய தருமச்செல்வமும், அலரில் மேய செந்திறமகள் ஆக்கமும் - தாமரை மலரில் வசிக்குந் திருமகளாலாய பொருட் செல்வமும், நீதிசான்ற போர் மறமகள் ஆக்கமும் - நீதியமைந்த போருக்குரிய கொற்றவையாலாய வீரச்செல்வமும், வடசொல் தென்கலைத்திறமகள் ஆக்கமும் - வடமொழி தென்மொழி யென்னும் பகுப்பினையுடைய கலைமகளாலாய கல்விச் செல்வமும், சிறந்தது அந்நகர் - சிறக்கப்பெற்றது அந்நகரம்.

அறமகள் - தருமதேவதை. செந்திறமகள் - செய்யாள்; இலக்குமி. நீதியுடன் கூடாத போர் வென்றி வீரமாகாதென்பார் 'நீதிசான்ற போர்' என்றார். ஆக்கம் - ஆகியது. (௧௪)

மண்புக ழந்நகர் மறுகின் மாடொரு
தண்புனற் சாலையிற் சார்ந்து ளானிப்பால்
விண்புகழ் நீதியவ் வேந்தற் கன்றிராக்
கண்புனை நுதலினர் கனவிற் றோன்றினர்.

(இ - ள்.) மண்புகழ் அந்நகர் மறுகின்மாடு - புவி முழுதும் புகழும் அந்த நகரின் வீதியின்கண், ஒரு தண்புனல் சாலையில் சார்ந்துளான் - ஒரு தண்ணீர்ப் பந்தரிற் றங்கினன்; இப்பால் - இப்புறம், விண் புகழ் நீதி அவ்வேந்தற்கு - வானுல கும் புகழும் நீதியினையுடைய அச் சேர வேந்தற்கு, அன்று இரா - அன்று இரவில், கண்புனை நுதலினர் கனவில் தோன்றினர் - கண் பொருந்திய நெற்றியையுடைய இறைவர் கனவிலே தோன்றியருளினர்.

மலைநாடு நண்ணின பத்திரன் அஞ்சைக்களத்து மறுகிலே தண்ணீர்ப்பந்தலிற் சார்ந்திருந்தனன் என்க. மண், விண் என்பன ஆகுபெயர்கள். (௧௫)

---

(பா - ம்.) * சிறந்தவந்நகர்.

தென்னவன் மதுரையி லிருக்குஞ் சித்தர்யாம்
நின்னிடை வந்துளே நின்னைக் கண்டுதான்
நன்னிதி வேண்டநம் மோலை கொண்டுநம்
இன்னிசைப் பாணபத் திரனிங் கெய்தினன்.

(இ - ள்.) நின்னிடை வந்துளேம் யாம் - நின்னிடத்து வந்துளேமாகிய யாம், தென்னவன் மதுரையில் சித்தர் - பாண்டியனது மதுரையிலுள்ள சித்தராவேம்; நின்னைக் கண்டு - உன்னைப்பார்த்து, நல்நிதி வேண்ட - நல்ல பொருள் வேண்டுதற் பொருட்டு, நம் ஓலைகொண்டு - நமது திருமுகம் பெற்றுக்கொண்டு, நம் இன்இசைப் பாணபத்திரன் - நமது இன்னிசைபாடும் பாணபத்திரன், இங்கு எய்தினன் - இங்கு வந்தனன். (கசு)

மற்றவற் கருநிதி கொடுத்து மன்னநீ
தெற்றென வரவிடு கென்று சித்தர்தாஞ்
சொற்றனர் போயினர் சுரக்குந் தண்ணளி
ஒற்றைவெண் குடையின னுறக்க நீங்கினன்.

(இ - ள்.) மன்னநீ- மன்னனேநீ, அவற்கு அருநிதி கொடுத்து - அப்பத்திரனுக்கு அரிய பொருள் கொடுத்து, தெற்றெனவரவிடுக என்று - விரைந்து வரவிடக்கடவை என்று, சித்தர் தாம் சொற்றனர் போயினர் - சித்தமூர்த்திகள் கூறி மறைந்தனர்; சுரக்கும் தண் அளி-உயிர்களிடத்துச் சுரந்தெழும் தண்ணிய அருளையுடைய, ஒற்றை வெண்குடையினன் - ஒப்பற்றவெண்குடையையுடைய சேரமான் பெருமாள், உறக்கம் நீங்கினன் - துயிலுணர்ந்தனன்.

தெற்றென, விரைவு குறித்தது. விடுகென, அகரந்தொக்கது. சொற்றனர், முற்றெச்சம். மற்று, தாம் என்பன அசைகள். (கஎ)

கங்குல்வாய்க் கண்டவக் கனவைப் பெண்ணையந்
தொங்கலான் றமரொடு சொல்லிச் சேற்கணாள்
பங்கினன் றிருமுகங் கொணர்ந்த பத்திரன்
எங்குளான் கொல்லெனத் தேட வெண்ணுவான்.

(இ - ள்.) பெண்ணையந் தொங்கலான் - அழகிய பனம் பூ மாலையை யணிந்த அவ்வேந்தன், கங்குல்வாய்க்கண்ட அக்கனவை - இரவிலே கண்ட அக்கனவினை, தமரொடு சொல்லி - அமைச்சரோடு கூறி, சேல்கணாள் பங்கினன் திருமுகம் கொணர்ந்த பத்திரன் - அங்கயற் கண்ணியார் பங்கனது திருமுகத்தைக்கொண்டு வந்த பாணபத்திரன், எங்குளான் கொல்லென - எங்கிருக்கின்றானோ என்று, தேட எண்ணுவான் - தேடக் கருதுவான்.

அம், சாரியையுமாம். கொல், ஐயப்பொருட்டு. (கஅ)

மற்றவர் தமைத்துரீஇ வருக தில்லெனக்
கொற்றவ னேவலோர் குறுகி மாடமுந்
தெற்றியு நியமமு மன்றுஞ் சென்றுசென்
றெற்றிகழ் மணிநக ரெங்குந் தேடுவார்.

(இ-ள்.) அவர் தமைத் துரீஇ வருக தில்லென - அப்பாணபத்திரரைத் தேடிக் கண்டு வருக என்று கட்டளையிட, கொற்றவன் ஏவலோர் - அரசன் ஏவலாளர், குறுகி - சென்று, மாடமும் தெற்றியும் - மாடங்களிலும் திண்ணைகளிலும், நியமமும் மன்றும் - கடைவீதிகளிலும் மன்றங்களிலும், எல் திகழ் மணி நகர் எங்கும் - சூரியனைப்போல விளங்கும் அழகிய நகரின் எவ்விடத்தும், சென்று சென்று தேடுவார் - போய்ப்போய்த் தேடுவாராயினர்.

மற்று, அசை. துரீஇ - துருவி; சொல்லிசை யளபெடை. தில், விழைவுப்பொருளில் வந்த இடைச்சொல்; கால விரைவுப்பொருளில் வந்ததென்பாரு முளர். தெற்றி - அம்பலமுமாம். நியமம் - கடைவீதி. சென்று சென்று, தொழிற் பயில்வுப் பொருளில் வந்த அடுக்கு. (கக)

தருமநீர்ப் பந்தரி னிருக்குந் தந்திரி
வருமிசைக் கிழவனைக் கண்டு வல்லைபோய்த்
திருமகற் குணர்த்தினர் சேனையோ டெழீஇப்
பெருமகன் பாணர்தம் பிரானை நண்ணினன்.

(இ - ள்.) தரும நீர்ப் பந்தரின் இருக்கும் - அறத்தின் பொருட்டு வைத்த நீர்ச்சாலையில் இருக்கும், தந்திரி வரும் இசைக்கிழவனைக்கண்டு - யாழ் கைவந்த பாணபத்திரனைக் கண்டு, வல்லை போய் - விரைந்து சென்று, திருமகற்கு உணர்த்தினர் - வேந்தனுக்குத் தெரிவித்தனர்; பெருமகன் - அவ்வரசர் பெருமானும், சேனையோடு எழீஇ - நால்வகைப் படையோடும் எழுந்து, பாணர்தம் பிரானை நண்ணினன் - பாணர் பெருமானை அடைந்தனன்.

தந்திரி, ஆகுபெயர். வரும் - கைவரும். எழீஇ, சொல்லிசையளபெடை. (உ௰)

கண்டனன் முகிழ்த்தகைக் கமலஞ் சென்னிமேற்
கொண்டனன் பாடினன் கூத்து மாடினன்
தண்டென வீழ்ந்தன னன்பிற் றண்ணறா
வண்டென மகிழ்ந்தனன் மன்னர் மன்னனே.

(இ - ள்.) மன்னர் மன்னன் - அரசர்க்கரசனாகிய சேரமான், கண்டனன் - பத்திரனைக் கண்டு, அன்பில் - அன்பினால், முகிழ்த்த கைக்கமலம் - கூப்பிய கைத்தாமரைகளை, சென்னிமேல் கொண்டனன் - தலையின்மேற் கொண்டு, பாடினன் கூத்தும் ஆடினன் தண்டு என வீழ்ந்தனன் - பாடி ஆனந்தக்கூத்தாடித் தண்டம் போற் கீழே வீழ்ந்து, தண் நறா வண்டு என மகிழ்ந்தனன் - குளிர்ந்த தேனைக் கண்டு வண்டு மகிழ்வது போல மகிழ்ந்தான்.

மகிழ்ந்தனன் என்பதொழிந்த ஏனைய முற்றுக்களெல்லாம் எச்சமாயின; முற்றாகவே நிறுத்தித் தனித்தனி முடித்தலுமாம். வருஞ்செய்யுளிலும் இங்ஙனங் கொள்க. (உக)

வாங்கினன் றிருமுக மலர்க்க ணொற்றினன்
தாங்கினன் முடிமிசைத் தாமம் போன்மகிழ்
தூங்கினன் றடங்கணீர் துளிப்ப மெய்யெலாம்
வீங்கினன் பொடிப்பெழ வேந்தர் வேந்தனே.

(இ - ள்.) வேந்தர் வேந்தன் - மன்னர் பெருமானாகிய சேரமான், திருமுகம் வாங்கினன் - திருமுகத்தினை ஏற்று, மலர்க்கண் ஒற்றினன் - மலர் போன்ற கண்களில் ஒற்றி, முடிமிசை தாமம் போல் தாங்கினன் - தலையின் மேல் மாலைபோல் தாங்கி, மகிழ்தூங்கினன் - மகிழ்ச்சிமிக்கு, தடம் கண் நீர் துளிப்ப - பெரிய கண்களினின்றும் ஆனந்த வருவி சொரியவும், மெய் எலாம் பொடிப்பு எழ - உடல் முழுதும் புளகம் போர்ப்பவும், வீங்கினன் - பூரித்தான்.

பொடிப்பு - மயிர் முகிழ்ப்பு. திருத்தொண்டர் புராணத்தில் இவ்வரலாறு கூறப்பீடத்துள்ள,

"அடியேன் பொருளாத் திருமுகங்கொண் டணைந்த தென்ன வவர்தாமும்
கொடிசேர் விடையார் திருமுகங்கைக் கொடுத்து வணங்கக் கொற்றவனார்
முடிமேற் கொண்டு கூத்தாடி மொழியுங் குழறிப் பொழி கண்ணீர்
பொடியார் மார்பிற் பரந்துவிழப் புவிமேற் பலகால் விழுந்தயர்வார்"

என்னுஞ்செய்யுள் இங்கு நோக்கற்பாலது. (உஉ)

[எண்சீரடியாசிரியவிருத்தம்]

மின்னவிருஞ் செம்பொன்மணி மாடக் கூடன்
மேயசிவன் யாமெழுதி விடுக்கு மாற்றம்
நன்னர்முகி லெனப்புலவர்க் குதவுஞ் சேர
நரபாலன் காண்கதன்போ னம்பா லன்பன்
இன்னிசையாழ்ப் பத்திரன்றன் மாடே போந்தா
னிருநிதியங் கொடுத்துவர விடுப்ப தென்னத்
தென்னர்பிரான் றிருமுகத்தின் செய்தி நோக்கிச்
சேரர்பிரான் களிப்பெல்லை தெரியா னாகி.

(இ - ள்.) மின் அவிரும் செம்பொன் மணிமாடக் கூடல் - ஒளி விளங்கும் சிவந்த பொன்னாலாகிய அழகிய மாடங்கள் நெருங்கிய கூடற்பதியின்கண், மேய சிவன் யாம் - எழுந்தருளியிருக்கும் சிவபெருமானாகிய யாம், எழுதி விடுக்கும் மாற்றம் - எழுதி அனுப்புஞ் செய்தி, நன்னர் முகில் என - நல்ல மேகம்போல, புலவர்க்கு உதவும் சேர நரபாலன் காண்க - புலவர்களுக்கு வரையாதளிக்கும் சேர வேந்தன் காண்க; இன் இசை யாழ்ப்பத்திரன் - இத்திருமுகங் கொண்டு வரும்

இனிய இசையினையுடைய யாழில் வல்ல பாணபத்திரன், தன்போல் நம்பால் அன்பன் - தன்னைப்போல நம்மிடத்து அன்புடையான், தன் மாடே போந்தான்-அவன் தன்னிடத்து வருகின்றான், இரு நிதியம் கொடுத்து வரவிடுப்பது என்ன - (அவனுக்கு) மிக்க பொருள் கொடுத்து அனுப்புவது என்று, தென்னர் பிரான்-பாண்டியர் பெருமானாகிய சோமசுந்தரக்கடவுள் (வரைந்தருளிய) திருமுகத்தின் செய்தி நோக்கி - திருமுகத்தின் செய்தியை நோக்கி, சேரர் பிரான் களிப்பு எல்லை தெரியானாகி - சேரர் பெருமான் மகிழ்ச்சியின் வரம்பினை அறியாதவனாகி.

நரபாலன் எனவும், தன் எனவும் படர்க்கையாற் கூறினார்; திருமுகத்தில் இங்ஙனங் கூறுவது மரபு. தன்போல் - நின்னைப்போல். தன்மாடு - நின் பக்கல். விடுப்பது, வியங்கோள். எல்லை தெரியாத களிப்புடையனாகி யென்க. (௨௩)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

பொன்னின் றளிகை மிசைவைத்துப் புழைக்கை மதமான் றலையேற்றி
மன்னுங் கொளையாழ்ப் புலவனைமுன் வைத்துப் பின்னே தானிருந்து
மின்னுங் கதிர்கா லிணைக்கவரி வீசிப் பலவே றியங்கலிப்பத்
தென்னென் றளியா ரிசைத்தாரான் றிருமா நகரை வலஞ்செய்யா.

(இ - ள்.) பொன்னின் தளிகை மிசை வைத்து -(அத்திருமுகத்தைப்) பொற்பீடத்தின் மேல் வைத்து, புழைக்கை மதமான் தலை ஏற்றி - துளை பொருந்திய கையையும் மதத்தையுமுடைய யானையின் தலையில் ஏற்றி, மன்னும் கொளையாழ்ப் புலவனை முன் வைத்து - பெருமை பொருந்திய இசையமைந்த யாழ்ப் புலவனாகிய பாண பத்திரனை முன்னர் வைத்து, தான் பின்னே இருந்து - தான் பின்னே அமர்ந்து, மின்னும் கதிர்கால் இணைக் கவரி வீசி - விளங்கும் ஒளியினை வீசும் இரட்டைக் கவரிகளை வீசி, பலவேறு இயம் கலிப்ப - பலவகை வாச்சியங்களும் ஒலிக்க, தென்னென்று அளி ஆர் இசைத்தாரான் - தென்னென்று வண்டுகள் மொய்த்து இசை பாடும் மாலையை யணிந்த சேரமான் பெருமான், திருமாநகரை வலம் செய்யா - அழகிய பெரிய நகரை வலஞ் செய்வித்து.

கொளை - இசைப்பாட்டு. இரண்டு கையாலும் இரு பக்கத்தும் கவரி வீசினான் என்க. தென்னென்று, இசைக் குறிப்பு. (௨௪)

பஞ்சு தடவுஞ் சீறடியார் பலமங் கலங்கொண் டெதிர்போத
மஞ்சு தடவு நீள்குடுமி மாட மனையிற் கொடுபோகி
நஞ்சு தடவு மணிகண்ட னன்பன் றனை*நன் னீராட்டி
அஞ்சு தடவி யோவியஞ்செய் தமைத்த மணிமண் டபத்தேற்றி.

(இ - ள்.) பஞ்சு தடவும் சீறடியார் - செம்பஞ் சூட்டிய சிறிய அடியினையுடைய மகளிர், பல மங்கலம் கொண்டு எதிர்போத - அட்ட மங்கலங்களையும் ஏந்தி எதிர் வர, மஞ்சு தடவு நீள் குடுமி மாடம் மனையில் - முகிலை அளாவும் உயர்ந்த

(பா - ம்.) * நண்பன்றனை.

சிகரம் பொருந்திய மாடத்தையுடைய அரண்மனையின் கண், கொடு போகி - கொண்டு சென்று, நஞ்சு தடவும் மணி கண்டன் அன்பன் தனை - நஞ்சு அளாவிய நீலகண்டத்தையுடைய சிவபெருமானுக்கு அன்பனாகிய பத்திரனை, நல் நீர் ஆட்டி - மணம் பொருந்திய நீரால் மஞ்சனஞ் செய்வித்து, அஞ்சு தடவி ஓவியம் செய்து அமைத்த - ஐவகை நிறங்களும் தடவி ஓவியம் வரைந் தமைத்த, மணி மண்டபத்து ஏற்றி - மணிகள் அழுத்திய மண்டபத்தில் எழுந்தருள்வித்து.

மணிகண்டன் - நீல மணிபோலும் கரிய திருமிடற்றையுடையன். அஞ்சு, ஐந்து என்பதன் போலி; நிறத்திற்கு ஆகு பெயர். (௨௫)

அம்பொற் றவிசிட் டருச்சனைசெய் தாறு சுவையின் னமுதருத்திச்
செம்பொற் கலவை நறுஞ்சாந்தந் தீம்பூ வாதிமுகவாசம்
பைம்பொற் கலத்து வெள்ளிலைதீம் பழுக்காய் பிறவு முறைநல்கி
உம்பர்க் கிறைவன் றிருமுகத்தி லுய்ப்ப தெனலா லுய்த்துமென.

(இ - ள்.) அம்பொன் தவிசு இட்டு - அழகிய பொன்னாலாகிய தவிசளித்து, அருச்சனை செய்து - அருச்சித்து, அறுசுவை இன் அமுது அருத்தி - அறுவகைச் சுவையு முடைய இனிய அமுதினை உண்பித்து, செம்பொன் கலவை நறுஞ் சாந் தம் - சிவந்த பொன்னிறம் வாய்ந்த நறிய கலவைச் சந்தனமும், தீம்பூ ஆதி முக வாசம் - தீம்பூமுதலிய முகவாசமும், பைம்பொன் கலத்து-பசியபொற்றட்டின்கண், வெள்ளிலை தீம்பழுக்காய் பிறவும் - வெற்றிலையும் இனிய பாக்கும் பிறவுமாகிய வற்றை, முறை நல்கி - முறைப்படி கொடுத்து, உம்பர்க்கு இறைவன் திருமுகத் தில் - தேவர்கட்குத் தலைவனாகிய சோமசுந்தரக்கடவுள் அருளிய திருமுகத்தின் கண், உய்ப்பது எனலால் - வரவிடுப்பது என்று கட்டளை யிருத்தலால், உய்த்தும் என - அங்ஙனமே செய்வோமென்று கருதி.

தவிசிட்டு - தவிசில் இருக்கச் செய்து என்க. செம்பொற் கலவை - பொற் சுண்ணம் முதலியன கலந்தவையுமாம். முகவாசம் இவை யென்பதனை,

> "தக்கோலம் தீம்பூத் தகைசால் இலவங்கம்
> கற்பூரம் சாதியோ டைந்து"

என்பதனால் உணர்க. (௨௬)

செம்பொ னறையைத் திறந்தழைத்துக் காட்டி யினைய திருவெல்லாம்
உம்பர் பெருமா னடியீர்நீ ருடையீர் கவர்ந்து கொண்மினென
இம்பர் நிழற்றும் வெண்குடையா னிசைப்ப வெதிர்தாழ்ந் திசைக்கிழவன்
நம்ப னருளுக் குரியீர்நீர் நல்கிற் றமையு மெனக்கென்ன.

(இ - ள்.) செம்பொன் அறையைத் திறந்து - கருவூலத்தைத்திறந்து, அழைத்து- (பாணபத்திரனை) அழைத்து, காட்டி - காண்பித்து, இனைய திரு எல்லாம் - இந்தச் செல்வம் அனைத்தையும், உம்பர் பெருமான் அடியீர் - தேவர் பெருமானாகிய இறை வனுக்கு அடியீராகிய, நீர் உடையீர் - நீரே உடையீர், கவர்ந்து கொள் மின் என -

கைக்கொள்ளுமென்று, இம்பர் நிழற்றும் வெண்குடையான் இசைப்ப - இவ்வுலகிற்கு நிழல் செய்யும் வெள்ளியகுடையையுடைய சேரமன்னன் கூற, எதிர் தாழ்ந்து இசைக்கிழவன் - இசைக்கு உரிய பாணபத்திரன் எதிர் வணங்கி, நம்பன் அருளுக்கு உரியீர் நீர் - இறைவன் திருவருளுக்குரியீராகிய நீர், நல்கிற்று எனக்கு அமையும் என்ன - தந்தது எனக்குப் போதியதென்று கூற.

யாவும் உம்முடையனவே கைக்கொள்ளும் என்ன அங்ஙனம் வேண்டாம் நீர் கொடுக்குமளவு அமையுமென்று பாணர் கூற வென்க. (உஎ)

மன்னன் றானெண் ணியவாற்றால் வழங்க வழங்க மறுத்துமறுத்
தின்ன றீரு மிசைக்கிழவ னிலங்கும் பொலம்பூ ணிருநிதியம்
பொன்னஞ் சிவிகை கரிபரிமான் பொற்பட் டாடை பலபிறவுந்
தன்ன வென்னு* மளவாற்றாற் றானே கொள்ளத் தார்வேந்தன்.

(இ - ள்.) மன்னன்-சேரமான் பெருமாள், தான் எண்ணிய வாற்றால் வழங்க வழங்க - எல்லாப்பொருளும் அவருடையன வென்று தான் கருதியபடி கொடுக்கக் கொடுக்க, இன்னல் தீரும் இசைக்கிழவன் மறுத்துமறுத்து - துன்பம் நீங்கும் பாணபத்திரன் அவற்றை மறுத்து மறுத்து, இலங்கும் பொலம் பூண் - விளங்குகின்ற பொன்னணிகளையும், இருநிதியம் - பெரிய நிதியையும், பொன் அம் சிவிகை - பொன்னாலாகிய அழகிய சிவிகைகளையும், பல கரி பரி மான் பொன்பட்டு ஆடை - பல யானைகளையும் குதிரைகளையும் பொன்னாலாகிய பட்டாடைகளையும், பிறவும் - பிறவற்றையும், தன்ன என்னும் அளவாற்றால் கொள்ள - தனக்கு அமைவன வென்னும் அளவின் வகையால் ஏற்றுக்கொள்ள, தார் வேந்தன் - மாலையையணிந்த மன்னனாகிய சேரமான்.

அரசன் யாவற்றையும் கொடுக்கக் கொடுக்க அவையனைத்தையும் கொள்ளாது மறுத்துத் தனக்கு அமையுமளவாகக் கொள்ள வென்க. தன்னம் என்பது பாடமாயின் அரசன் கருத்துக்குச் சிறிய வென்று தோன்றுமளவாக என உரைக்க. தன்னம் - சிறுமை. தான், ஏ அசைகள்.

"பரந்த நிதியின் பரப்பெல்லாம் பாண னார்பத் திரனார்க்கு
நிரந்த தனங்கள் வெவ்வேறு நிரைத்துக் காட்டி மற்றிவையும்
உரந்தங் கியவெங் கரிபரிகண் முதலா வுயிருள் ளனதனமும்
புரந்த வரசுங் கொள்ளுமென மொழிந்தார் பொறையர் புரவலனார்"

"பாண னார்பத் திரனாரும் பைம்பொன் மௌலிச் சேரலனார்
காணக் கொடுத்த விவையெல்லாம் கண்டு மகிழ்வுற் றதிசயித்துப்
பேண வெனக்கு வேண்டுவன வடியேன் கொள்ளப் பிஞ்ஞகனார்
ஆணை யரசு மரசுறுப்புங் கைக்கொண் டருளு மெனவிறைஞ்ச"

என்பன திருத்தொண்டர் புராணச் செய்யுட்கள். (உஅ)

---

(பா - ம்.) * தன்னமென்னும்.

பின்னே ழடியோ சேட்சென்று பெருமை சான்ற வரிசையினற்
றன்னே ரிசையான் றனைவிடுத்து மீண்டா னாகத் தமிழ்மதுரை
மின்னேர் சடையா ரிசைத்தொண்டன் றானு மீண்டு வெயில்விரிக்கும்
பொன்னேர் மௌலி நிதிக்கிழவன் போல மதுரை நகர்புக்கான்.

(இ - ள்.) பின் எழ்அடியோ - பின்னே எழுஅடிதூரமோ (சென்றது), சேண் சென்று - அதிக தூரஞ்சென்று, பெருமைசான்ற வரிசையினல் - பெருமை நிறைந்த சிறப்புடன், தன்நேர் இசையான் தனைவிடுத்து மீண்டானாக - தனக்குத் தானே ஒத்த இசைவல்ல பாணபத்திரனை அனுப்பி மீண்டுவந்தனனாக; தமிழ் மதுரை மின்நேர் சடையார் - தமிழ்வளர்க்கும் மதுரைப்பதியில் எழுந்தருளிய மின்னலை யொத்த சடையினையுடைய சோமசுந்தரக்கடவுளது, இசைத்தொண்டன்தானும் மீண்டு - இசைபாடுந் தொண்டனாகிய பாணபத்திரனுந் திரும்பி, வெயில்விரிக்கும் - ஒளிவீசுகின்ற, பொன்னேர் மௌலிநிதிக்கிழவன்போல - பொன்னாலாகிய அழகிய முடியினையுடைய குபேரன்போல, மதுரைநகர் புக்கான் - மதுரைப்பதியிற் புகுந்தனன்.

தம்மிடம் வந்து செல்லும் பெரியார்கட்கு எழடிதூரம் பின்சென்று வழியனுப்புதல் மரபு; சேரலனாரோ அங்ஙனமன்றி ஆராஅன்பினால் நகர்ப்புறங்காறுஞ் சென்று அவர் விடுக்க மீண்டார் என்க.

"பண்பு பெருகும் பெருமாளும் பாணனார்பத் திரனார்பின்
கண்கள் பொழிந்த காதனீர் வழியக் யைாற் றொழுதணைய
நண்பு சிறக்கு மவர்தம்மை நகரின் புறத்து விடைகொண்டு
திண்பொற் புரிசைத் திருமதுரை புக்கார் திருந்து மிசைப்பாணர்"

என்பது பெரியபுராணம். (உக)

வந்து மதுரைப் பெருமானை வணங்கிக் கொணர்ந்த நிதியெல்லாம்
இந்து மருமா னகருள்ளார் யாரு மறிய யாவர்க்கும்
முந்தை வேத முதல்வர்க்கும் புலவோர் தமக்கு முறைநல்கிச்
சந்த யாழி னிசைப்பாணர் தரும மனையான் வைகினான்.

(இ - ள்.) சந்தம் யாழின் இசைப்பாணர் தருமம் அனையான் - சந்தமமைந்த யாழின் இசையில் வல்லபாணர்கள் செய்த அறமேயனைய பத்திரன், வந்து மதுரைப் பெருமானை வணங்கி - வந்து மதுரைநாயகனாகிய சோமசுந்தரக்கடவுளை வணங்கி, கொணர்ந்த நிதி எல்லாம் - கொண்டுவந்த பொருள் அனைத்தையும், இந்து மருமான் நகருள்ளார் யாரும் அறிய - சந்திரன் மரபினனாகிய பாண்டியனது நகரில் உள்ளாரனைவரும் அறிய, முந்தை வேதமுதல்வர்க்கும் புலவோர் தமக்கும் - முற்பட்ட மறையினையுணர்ந்த அந்தணர்க்கும் புலவர்களுக்கும், யாவர்க்கும்-இரவலர் முதலிய ஏனை யாவர்க்கும், முறைநல்கி - வரிசையால் அளித்து, வைகினான் - வாழ்ந்து வந்தனன்.

மருமானும் நகருள்ளாரும் என்றுமாம். யாருமறிய என்பதற்கு யாவரும் அறஞ்செய்யு முறைமையை அறிய என்றும் கருத்துக் கொள்க. (நூ)

ஆகச் செய்யுள் - உகநூ

## நாற்பத்துமூன்றாவது

# பலகையிட்ட படலம்

[கொச்சகக்கலிப்பா]

கருந்துழாய் முகிலொருபாற் கலந்தவர்*பத் திரற்குநிதி
திருந்துதா ருதியனிடைத் திருமுகமீந் தளித்ததிது
வருந்தியா ழவனிசைப்ப மழைதூங்கு நள்ளிரவில்
இருந்துபா டெனப்பலகை யிட்டதூஉ மினிப்பகர்வாம்.

(இ - ள்.) கருந்துழாய் முகில் - கரிய துழாய் மாலையை யணிந்த முகில் போன்ற திருமால், ஒருபால் கலந்தவர் - ஒரு பக்கத்திற் பொருந்தப்பெற்ற இறைவர், பத்திரற்கு - பாணபத்திரனுக்கு, திருந்துதார் உதியனிடை - திருத்தமாகிய மாலையையணிந்த சேரமானிடம், திருமுகம் ஈந்து - திருமுகங்கொடுப்பித்து, நிதி அளித்தது இது-பொருள் அளித்தருளிய திருவிளையாடல் இது; அவன் - அப்பாண பத்திரன், மழை தூங்கும் நள்இரவில் வருந்தி யாழ்இசைப்ப - மழைபொழியும் நடு இரவில் வருந்தி யாழ் இசைபாட, இருந்து பாடு என - இதன்மீது இருந்து பாடுகவென்று, பலகை இட்டதூஉம் - (அப்பெருமானார்) பலகையிட்டருளிய திருவிளையாடலையும், இனிப் பகர்வாம் - இனிக் கூறுவாம்.

இறைவனது ஒரு கூற்றிலே திருமால் இருத்தலை

"இடமால் வலந்தான்"

என்னும் **பொன்வண்ணத்தந்தாதியிற் காண்க.**

"அரனாரண னமம் ஆன்விடைபுள் ளூர்தி
உரைநூல் மறையுறையுங் கோயில் - வரைநீர்
கரும மழிப்பளிப்புக் கையதுவேல் நேமி
உருவமெரி கார்மேனி யொன்று"

என்னும் முதலாழ்வார் பாட்டாலும் பெறப்படுகின்றது. அவன் யாழ் இசைப்ப என இயையும். **(க)**

முன்புடைய நாயகனை முப்போதும் புகுந்திறைஞ்சி
இன்புறுமே ழிசைக்கிழவ னிருநிதிய மருளியபின்
அன்புசிறந் தரைபிரவு மடைந்துபணிந் தடல்விடையின்
பின்புறநின் றேழிசையும் பாடிவரும் பேறுடையான்.

---

(பா - ம்.) * கரந்தவர்.

(இ - ள்.) உடைய நாயகனை - தம்மை ஆளாகவுடைய சோமசுந்தரக் கடவுளை, முன்பு - முன்னமே, முப்போதும் புகுந்து இறைஞ்சி - மூன்று காலங்களினும் சென்று வணங்கி, இன்புறும் ஏழ் இசைக் கிழவன் - இன்பமிகும் பாணபத்திரன், இரு நிதியம் அருளியபின் - பெருஞ் செல்வத்தை அருளியபின்னர், அன்பு சிறந்து - அன்புமிகுந்து, அரையிரவும் அடைந்து பணிந்து - நடுயாமத்திலுஞ் சென்று வணங்கி, அடல்விடையின் பின்புறம் நின்று - வெற்றிபொருந்திய திருநந்திதேவரின் பின்புறத்தில் நின்றுகொண்டு, ஏழ் இசையும் பாடிவரும்பேறு அடைவான்- ஏழிசைகளையும் பாடிவருதலாகிய பயனை அடைவான்.

நிதியம் அளிப்பதற்குமுன் காலை நண்பகல் மாலை என்னும் முப்பொழுதும் சென்றிறைஞ்சி வந்தவன் நிதியம் அளித்தபின் ஆரா அன்பினால் அரையிரவிலும் சென்று பணிந்து பாடுவானாயினன் என்க. முன்புடைய என்று கொண்டு எல்லா வல்லமையுமுடைய என்றும், முன்னமே தன்னை ஆளாகவுடைய என்றும் உரைப்பாருமுளர். (உ)

தொழுந்தகையன் பருந்தேவர் தொகுதிகளுந் தொழத்திங்கட்
கொழுந்தலைய நதியலையக் குனிக்கின்ற தனிக்கடவுள்
செழுந்தரளச் சிவிகையின்மேற் றேவிதிருப் பள்ளியறைக்
கெழுந்தருளும் போதுபணிந் தேத்துவா னோரிரவில்.

(இ - ள்.) தொழும் தகை அன்பரும் - யாவரும் வணங்குந் தகுதியுடைய அடியார்களும், தேவர்தொகுதிகளும் - தேவர் குழாங்களும், தொழ - வணங்கவும், திங்கள் கொழுந்து அலைய - பிறைச் சந்திரன் ஒருபால் அலையவும், நதி அலைய - கங்கை ஒருபால் அலையவும், குனிக்கின்ற - வெள்ளிமன்றுள் ஆடியருளும், தனிக் கடவுள் - ஒப்பற்ற இறைவன், செழுந்தரளச் சிவிகையின்மேல் - செழிய முத்து விமானத்தின்மேல், தேவி திருப்பள்ளியறைக்கு - உமையம்மையாரின் திருப்பள்ளியறைக்கு, எழுந்தருளும்போது - எழுந்தருளும் நடுயாமத்தில், பணிந்து ஏத்துவான்- வணங்கி இசைபாடுவானாயினன் ; ஓர் இரவில் - ஒருநாள் இரவில்.

ஏத்துவான் அங்ஙனம் ஏத்துநாள் ஓர் இரவில் என்க. (ங)

இன்னிசையாழ்ப் பெரும்பாண னெவ்விடையூ றடுத்தாலுந்
தன்னியம நெறியொழுக்கந் தவானென்ப துலகறியப்
பொன்னியலுஞ் சடைமௌலிப் புராணர்திரு விளையாட்டால்
அன்னிலையிற்* கருங்கொண்மூ வார்த்தெழுந்த திசையெல்லாம்.

(இ - ள்.) இன் இசை யாழ்ப் பெரும் பாணன் - இனிய இசையமைந்த யாழில் வல்ல பெருமையையுடைய பாணபத்திரன், எவ்விடையூறு அடுத்தாலும் - எவ்வகை இடையூறு நேர்ந்தாலும், தன் நியமநெறி ஒழுக்கம் தவான் என்பது உலகு அறிய - தனது கடப்பாடாகிய ஒழுக்க நெறியினின்றுந் தவறான் என்பதை உலகின

(பா - ம்.) * அந்நிலையில்.

ரனைவரும் அறியுமாறு, பொன் இயலும் சடைமௌலிப் புராணர் திருவிளையாட்டால் - பொன்போன்ற சிவந்த சடைமுடியையுடைய பழம்பொருளாயுள்ள சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாட்டினால், அல்நிலையில் - இருள்மிக்க அப்பொழுதில், திசையெல்லாம் - எட்டுத்திக்குகளிலும், கருங்கொண்மூ ஆர்த்து எழுந்த - கரிய முகில்கள் முழங்கி எழுந்தன.

தவான் - கெடான். உலகறியும்படி திருவுளங்கொண்ட புராணர் திருவிளையாட்டால் என விரிக்க. அன்னிலையில் - ஓர் இரவின் இருளில். அந்நிலையில் எனப் பாடங்கொண்டு பத்திரன் புறப்படும் பொழுதில் என்றுரைத்தலுமாம். (ச)

தடித்துநிரை புடைபரப்பித் தடுமாறித் திசைமயங்கத்
துடித்துவிட வாயரவஞ் சோர்ந்துசுருண் டளையொதுங்க
இடித்துடுவின் கணம்புதைப்ப விருள்கான்று சலபதிமுன்
முடித்திடுவான் வரவிடுத்த* முகிலெழும் வளைந்தவென†.

(இ - ள்.) விடவாய் அரவம் - நஞ்சு பொதிந்த வாயினையுடைய பாம்புகள், துடித்து சோர்ந்து சுருண்டு அளை ஒதுங்க - உடல் துடித்துச் சோர்ந்து சுருண்டு புற்றில் நுழையுமாறு, தடித்து நிரை புடைபரப்பி இடித்து-மின் வரிசைகளைப் பக்கங்களிற் பரப்பி இடித்து, திசை தடுமாறி மயங்க - (உயிர்கள்) திசைதடுமாறி மயங்கும்படி, உடுவின் கணம் புதைப்ப இருள் கான்று - விண் மீன்களின் கூட்டம் புதைபட இருளினைச்சொரிந்து, சலபதி-நீர்க்கடவுளாகிய வருணன், முன் - முன்னொருநாளில், முடித்திடுவான் வரவிடுத்த முகில் எழும் வளைந்த என - (மதுரையை) அழித்தற் பொருட்டு ஏவிய எழுமுகில்களும் வளைந்தாற்போல வளைந்து.

தடித்து - மின். தடுமாறித் திசைமயங்க என்பதற்கு எட்டுத்திசையில் உள்ளவர்களும் தடுமாறி மயங்க என்றுரைத்தலுமாம். புதைப்ப - புதைபட. சலபதி - வருணன். முடித்திடுவான் வினையெச்சம். (ரு)

கருங்கடலை விசும்பெடுத்துக் கவிழ்ப்பதென வெண்டாரை
நெருங்கிருளி னிருப்புக்கோ னிரைத்ததென நிறங்கருக
ஒருங்குசொரிந் துள்ளுணரா ருள்ளம்போ லுட்புறம்பு
மருங்கொடுகீழ் மேலென்று தெரியாத மயங்கிருள்வாய்.

(இ - ள்.) வெண்தாரை - வெள்ளியதாரைகள், நெருங்கு இருளின் - செறிந்த இருளினால், இருப்புக்கோல் நிரைத்தது என நிறம் கருக - இருப்புக் கோல்களை நிரைபட நட்டுவைத்தாற்போல நிறம் கருகித்தோன்ற (அவற்றை), கருங்கடலை விசும்பு எடுத்துக் கவிழ்ப்பது என - கரிய கடல் நீர் முழுதையும் வான் எடுத்துக் கவிழ்ப்பது போல, ஒருங்கு சொரிந்து - சேரப்பொழிதலால், உள் உணரார் உள்ளம் போல் - ஆன்மாவாகிய தம்மையும் (தலைவனையும்) அறியாதவர்கள் உள்ளம் போல, உள்புறம்பு மருங்கொடு கீழ் மேல் என்று தெரியாத - உள்ளென்றும் வெளியென்றும்

(பா - ம்.) *வரவழைத்த. †வளைந்ததென.

பக்கமென்றும் கீழென்றும் மேலென்றும் அறியலாகாத, மயங்கு இருள்வாய் - மயங்கிய இருளின்கண்.

தாரைகள் வெண்ணிற முடையன வாயினும் இருளின் செறிவாற் கருகின என்றார்.

"விசும்புற வெள்ளிவெண்
கோல் நிரைத்தன போற்கொழுந் தாரைகள்"

என்று திருத்தக்க தேவரும்,

"வான், வெள்ளிவீழிடை வீழ்த்தெனத் தாரைகள்"

என்று கம்பரும் கூறுவன காண்க. உள் -உள்ளம்; ஆன்மா. (சு)

மாமாரி யிடைநனைந்து வருவானம் மாரிதனைப்
பூமாரி யெனநினைந்து திருக்கோயில் புகுந்தெய்திக்
காமாரி தனைப்பணிந்து கருணைமா ரியினனைந்து
தேமாரி பொழிவதெனத் தெள்விளியாழ் வாசிப்பான்.

(இ - ள்.) மாமாரி இடை நனைந்து வருவான் - அந்தப் பெரு மழையில் நனைந்து வருவானாகிய பாணபத்திரன், அம்மாரிதனைப் பூமாரி என நினைந்து - அம் மழையை மலர் மழையெனக் கருதி, திருக்கோயில் புகுந்து எய்தி - திருக்கோயிலுட் சென்று புகுந்து, காமாரிதனைப் பணிந்து - சோமசுந்தரக் கடவுளை வணங்கி, கருணை மாரியில் நனைந்து - (அப்பெருமானது) அருள் மழையில் நனைந்து, தேம் மாரி பொழிவது என - தேன்மழை பொழிவதுபோல, தெள்விளி யாழ் வாசிப்பான் - இசை யமைந்த யாழினை வாசிப்பானாயினன்.

ஓரிரவில் மயங்கிருள்வாய் நனைந்து வருவான் என்க. மழையில் நனைதலால் வருந்துதலின்றி உவகையுடன் சென்றனன் என்பார் 'பூமாரியென நினைந்து' என்றார். காமாரி - காமனை யெரித்தவன்; தீர்க்க சந்தி. தெள்விளி - ஓர் பண்; தெளிந்த இசையென்றும் உரைப்பர். (எ)

விடைக்கடவுள் பின்னின்று வீணையிடத் தோள்கிடத்திப்
புடைத்துநரம் பெறிந்துமிடற் றொலிபோக்கிப் பொலங்கொன்றைச்
சடைக்கடவுள் செவிவழிபோ யருட்பைங்கூழ் தலையெடுப்பத்
தொடைத்தமிழி னிசைப்பாணிச் சுவையமுத மடைதிறந்து.

(இ - ள்.) விடைக்கடவுள் பின் நின்று - இடப தேவரின் பின்னே நின்று, வீணை இடத்தோள் கிடத்தி - யாழினை இடது தோளில் அணைத்து, நரம்பு புடைத்து எறிந்து - நரம்பை அமுக்கித் தெறித்து, மிடற்று ஒலி போக்கி - மிடற்றின் ஒலியை எழுப்பி, தமிழின் தொடை இசைப்பாணி - தமிழினால் தொடுக்கப் பட்ட இசைப்பாட்டாகிய, சுவை அமுதம் மடை திறந்து - சுவைமிக்க அமிழ்தம் மடை யுடைத்து, பொலம் கொன்றைச் சடைக் கடவுள் - பொன் போன்ற கொன்றைமாலையை யணிந்த சடையை யுடைய சோமசுந்தரக் கடவுளின், செவி வழி

போய் - செவியாகிய கால் வழியாகச் சென்று பாய்தலால், அருள் பைங்கூழ் தலை யெடுப்ப - திருவருளாகிய பயிர் ஓங்கும்படி. (அ)

நரம்புநனைந் திசைமழுங்க நனைந்துடலம் பனிப்பவிசை
வரம்பொழுகு விரன்மிறைத்து வலிவாங்க மயிர்சிலிர்ப்ப*
நிரம்பியசே றடிபுதைப்ப நின்றுநிறை யன்பிசையாய்
அரும்புதல்போ லென்புருக்கு மமுதவிசை பாடுமால்.

(இ - ள். நரம்பு நனைந்து இசை மழுங்க - யாழின் நரம்பு நனைந்து சுருதி குறையவும், உடலம் நனைந்து பனிப்ப - உடம்பு நனைந்து நடுங்கவும், இசை வரம்பு ஒழுகு விரல் - (குரல் முதலிய) இசையினெல்லை கடவாது போக்கு வரவு செய்யும் விரல்கள், மிறைத்து வலிவாங்க - விறைத்து வலிகொள்ளவும், மயிர் சிலிர்ப்ப - (குளிரால்) மயிர் சிலிர்க்கவும், நிரம்பிய சேறு அடி புதைப்ப - நிரம்பிய சேறு அடி களை மூடவும், நின்று - (பெயராது) நின்று, நிறை அன்பு இசையாய் அரும்புதல் போல் - நிறைந்த அன்பே இசை மயமாய் வெளிப்படுதல் போல, என்பு உருக்கும் அமுத இசைபாடும் - எலும்பினையும் உருக்குகின்ற அமுதம் போன்ற இசையினைப் பாடுவாராயினன்.

மழையால் இவை நிகழவும் நிறைந்த அன்பினால் இடம் பெயராது நின்று அருட் பைங்கூழ் தலையெடுப்ப இசைபாடும் என்க. ஆல், அசை. (கூ)

[இடைமடக்கி வந்த கொச்சகவொருபோகு]

மாதர் நகையாய் மதுரேச ருண்பலிக்கெம் மனைவாய் வந்து
காதன் முகத்தரும்பிக் காட்டியென் சிந்தை கவர்ந்தார் போலுங்
காதன் முகத்தரும்பக் கையறவு தீரக் கலப்பேன் பாதி
பேதையுரு வாயிருந்தார் நாணிவிழித் தாவி பிழைத்தேன் போலும்.

(இ - ள்.) மாதர் நகையாய் - அழகிய பல் வரிசைகளையுடைய தோழியே, மதுரேசர் உண் பலிக்கு - மதுரையில் எழுந்தருளிய இறைவர் உண்ணும் பலியின் பொருட்டு, எம்மனைவாய் வந்து - எமது மனையின்கண்வந்து, முகத்து காதல் அரும் பிக்காட்டி - முகத்தின்கண் காதற்குறியை வெளிப்படுத்திக் காட்டி, என் சிந்தை கவர்ந்தார் போலும் - எனது உள்ளத்தைக் கொள்ளைகொண்டனர் போலும்; காதல் முகத்து அரும்ப - அங்ஙனம் காதற் குறிப்பு முகத்திலே தோன்ற, கையறவு தீரக் கலப்பேன் - காமநோய் தீருமாறு கலக்கத் தொடங்கினேன்; பாதி பேதை உருவாய் இருந்தார் - ஒரு கூறு பெண்வடிவா யிருந்தனர் (அதனால் அது நீங்கி), நாணிவிழித்து ஆவி பிழைத்தேன் போலும் - வெள்கி விழித்து உயிர் பிழைத்தேன் போலும்.

கனவின் கண், பலிக்குவந்த இறைவர்மேற் காதலுற்றாளொருத்தி அதனைத் தன் தோழிக்குக் கூறுவது பொருளாகக் கொண்ட இது முதலிய மூன்றும் பாண

(பா - ம்.) * மயிர் சிலும்ப

ஞர் பாடிய இசைப்பாட்டாக ஆசிரியர் இயற்றியன வென்க. கையறவு - துன்பம்; காம நோய். போலும் என்பன ஒப்பில் போலி. (ய)

ஒண்ணுதலாய் வெண்டலைகொண் டுண்பலிக்கு நம்மனையி னூடே கூடற்
கண்ணுதலா ருள்ளாளக் கானமிசைத் தென்னுள்ளங் கவர்ந்தார் போலுங்
கண்ணுதலார் பாடு மவிநயங்கண் டாகங் கலப்பேன் பாதி
பெண்ணுருவ மாயிருந்தார் வெள்கிவிழித் தாவி பெற்றேன் போலும்.

(இ - ள்.) ஒள் நுதலாய் - ஒள்ளிய நெற்றியையுடைய தோழியே, வெண்தலை கொண்டு - வெள்ளிய தலையோட்டினை ஏந்தி, உண்பலிக்கு - உண்ணும் பலியின் பொருட்டு, நம்மனையின் ஊடே - நமது இல்லின் கண் (வந்து), கூடல் கண்ணுதலார் - கூடலில் எழுந்தருளிய நெற்றிக் கண்ணையுடைய இறைவர், உள்ளாளக் கானம் இசைத்து - உள்ளாள இசை பாடி, என் உள்ளம் கவர்ந்தார் போலும் - எனது சிந்தையைக் கொள்ளை கொண்டார் போலும், கண்ணுதலார் பாடும் அவிநயம் கண்டு - அவர் பாடும் இன்பச் சுவையவிநயத்தைக் கண்டு, ஆகம் கலப்பேன் - அவரது திருமார்பிற் கலக்கத் தொடங்கினேன்; பாதி பெண் உருவமாய் இருந்தார் - ஒரு கூறு பெண் வடிவமாயிருந்தனர்; வெள்கி விழித்து ஆவி பெற்றேன் போலும் - (அதனால்) நாணி (அக்கலவி ஒழிந்து) விழித்து நீங்கி உயிர் பெற்றேன் போலும்.

உள்ளாளம் இன்னதென்பது முன் கூறப்பட்டது. அவிநயம் - காம அவிநயம்; இதன் இயல்பினை,

"காம வவிநயம் கருதுங் காலைத்
தூவுள் ளுறுத்த வடிவுந் தொழிலும்
காரிகை கலந்த கடைக்கணுங் கவின்பெறு
மூரன் முறுவல் சிறுநிலா வரும்பலும்
மலர்ந்த முகனும் இரந்தமன் கிளவியும்
கலந்தன பிறவுங் கடைப்பிடித் தனரே"

என்பதனால் அறிக. (கக)

ஐயரியுண் கண்ணாய் திருவால வாயுடையா ரையங் கொள்வான்
மையனகை செய்தென் வனமுலையின் மேற்செங்கை வைத்தார் போலும்
மையனகை செய்தென் வனமுலைமேற் கைவைப்ப மாழ்கிச் சோர்வேன்
தையலிடங் கண்டு நடுநடுங்கி விழித்தாவி தரித்தேன் போலும்.

(இ - ள்.) ஐ அரி உண் கண்ணாய் - அழகிய செவ்வரி படர்ந்த மையுண்ட கண்களை உடைய தோழியே, திருவாலவாய் உடையார் - திருவாலவாயினையுடைய சோமசுந்தரக் கடவுள், ஐயம் கொள்வான் - பலி எற்கும் பொருட்டு (எம்மில்வில் வந்து), மையல் நகை செய்து - காமக்குறிப்புடன் நகைத்து, என் வனம் முலைமேல் - எனது அழகிய கொங்கையின்மேல், செங்கை வைத்தார் போலும் - தமது சிவந்த திருக்கரத்தை வைத்தனர் போலும்; மையல் நகை செய்து என்வனம் முலைமேல்

கை வைப்ப - அவர் அங்ஙனம் செய்ய, மாழ்கிச் சோர்வேன் - மயங்கிச் சோர்வேனாகியயான், தையல் இடம் கண்டு - ஒரு பெண்ணை அவரது இடப்பாகத்திற்கண்டு நடு நடுங்கி விழித்து ஆவி தரித்தேன் போலும் - துணுக்குற்று விழித்து உயிர் தரித்தேன் போலும்.

வனம் - சந்தனக் கோலமுமாம். மாழ்கிச் சோர்வேன் என்றது நானும் அவரைக் கூடுதலுற்றேன் என்னும் பொருட்டு. இவை மூன்றிலும் 'போலும்! எனச் சிறிது ஐயுறவு தோன்றக் கூறுதலானும், விழித்து என்பதனுலும் இவை கனவு நிலையுரைத்தல் என்பது பெறப்படும். விறகு விற்ற படலத்தில் இறைவர் பாடியனவாகவுள்ள பாட்டுக்களிற் போலவே ஈண்டும் மதுரையுங் கூடலும் ஆலவாயும் முறையே கூறப்பட்டன. இவற்றில் முறையே காதல் முகத்தரும்பி என்றும், கானமிசைத்து என்றும், செங்கை வைத்து என்றும் கூறியிருப்பன பக்குவமெய்திய ஆன்மாவுக்கு ஆசானுக வந்து அருள்செய்யும் இறைவன் பாவனையானும் வாசகத்தானும் பரிசத்தானும் புரியும் தீக்கைகளைக் குறிப்பின் உணர்த்துவனவாதல் காண்க. இதற்குப் பலி என்றது உடல் பொருள் ஆவிகளைக் கொள்ளுதல் ஆகும். (கஉ)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

பாடுவா ரிருவர்க் கன்று பரிசிலாக் கொடுத்த சங்கத்
தோடுவார் செவியி லூட்டுந் தொண்டுகண் டிதன்மே னின்று
பாடுவா யுனக்கே யிந்தப் பலகையென் றாழ்ந்த வன்பின்
நாடுவார் விசும்பிற் கூறி நவமணிப் பலகை யிட்டார்.

(இ - ள்.) பாடுவார் இருவர்க்கு - இசை பாடும் இருவர்க்கு, அன்று பரிசிலாக் கொடுத்த - அந்நாளிற் பரிசிலாகக் கொடுத்தருளிய, சங்கத்தோடுவார் செவியில் - சங்கத்தோட்டினையணிந்த நீண்ட திருச்செவிகளில், ஊட்டும் தொண்டு கண்டு - இசையை ஊட்டும் திருத்தொண்டினைக் கண்டருளி, இதன்மேல் நின்று பாடுவாய் - நீ இந்தப் பலகைமேல் நின்று பாடக் கடவை, இந்தப் பலகை உனக்கே என்று-இது உனக்கே உரியது என்று, ஆழ்ந்த அன்பின் நாடுவார்-அழுந்திய அன்பினாலே நாடி அறியப் படுபவராகிய இறைவர், விசும்பில் கூறி-வானிலே அசரீரியாகக் கூறியருளி, நவமணிப்பலகை இட்டார்-நவமணியிழைத்த பலகையொன்றுஇட்டார்.

இருவர் - ஆகா, ஊகூ என்னும் கந்தருவர்கள். இவர்கள் பாட்டிற்குப்பரிசிலாக என்றும் இவர்கள் தோட்டின் வடிவாக விருந்து பாடும்படி தமது திருச்செவியைக் காணியாக அளித்தருளினர் என்க. அங்ஙனம் பாடுவார்க்குத் திருச்செவியையே இடமாக அளித்தவர் இன்று பாணர் சேற்றிலே கால்புதைய நின்று பாடுதலைப் பார்த்தும் தரித்திரார் என்பது தோன்ற 'பரிசிலாக்கொடுத்த செவியிலூட்டும் தொண்டு கண்டு பலகையிட்டார்' என்றார். (கங)

இறையரு ளாணை யஞ்சி யிட்டபொற் பலகை யேறி
நறைகெழு மதுர கீதம் பாடிநான் மறைகள் சூடும்
அறைகழ லகத்துட் கொண்டு பலகையு மங்கை கொண்டு
மறைவழி யாழ்வல் லோன்றன் மனைவயிற் செல்லு மெல்லை.

(இ - ள்.) இறை அருள் ஆணை அஞ்சி - இறைவன் அருளிய ஆணையை (மறுத்தற்கு) அஞ்சி, இட்ட பொன்பலகை ஏறி - அவன் இட்டருளிய பொன்னாலாகிய பலகையில் ஏறி, நறை மதுரம் கெழுகீதம்பாடி - தேனின் சுவை பொருந்திய இசையினைப்பாடி, நான் மறைகள் சூடும்- நான்கு வேதங்களும் முடியிற் சூடிய, அறைகழல் அகத்துள் கொண்டு - ஒலிக்கின்ற வீரக்கழல் அணிந்த திருவடியை உள்ளத்திற் கொண்டு, பலகையும் அங்கை கொண்டு—அப்பலகையையும் கையிலேந்தி, மறை வழி யாழ்வல்லோன் - இசை நூலின் வழியே யாழ்வாசித்தலில் வல்லவனாகிய பாணபத்திரன், தன் மனையில் செல்லும் எல்லை - தனது இல்லிற்குச் செல்லும் பொழுது.

இசை நூலும் மறை எனப்படுதலை

"நரம்பின் மறைய வென்மனார் புலவர்"

என்று தோல்காப்பியர் கூறுதலானறிக. (கச)

மின்னுமா மேக நீங்கி விசும்புவாய் விளங்கித் தென்றல்
மன்னுமா மலய மேய* மாதவன் குடித்த வைகற்
பொன்னுமா மணியு முத்தும் புலப்படக் கிடந்த வேலை
என்னமீன் விளங்கித் தோன்ற வேகியில் புகுந்தா னிப்பால்.

(இ - ள்.) தென்றல் மன்னும் மாமலயம் மேய - தென்றற் காற்று நிலை பெற்ற பெரிய பொதியின் மலையிற்றங்கிய, மாதவன் குடித்தவைகல் - பெரியதவத்தினை யுடைய அக்த்திய முனிவன் பருகிய ஞான்று, வேலை - கடலின் கண், பொன்னும் மாமணியும் முத்தும் புலப்படக்கிடந்த என்ன - பொன்னும் சிறந்த மணிகளும் முத்தும் வெளிப்படக்கிடந்தாற் போல, மின்னும் மாமேகம் நீங்கி - மின்னுகின்ற கரிய முகில்கள் நீங்கப்பெற்று, விசும்புவாய் விளங்கி - வானம் விளக்கமுறுதலால், மீன் விளங்கித் தோன்ற - விண் மீன்கள் புலப்பட்டுத்தோன்றா நிற்க, ஏகி இல்புகுந்தான் - சென்று வீட்டிற் புகுந்தனன்; இப்பால் - பின்பு.

விசும்புவாய் - வானின் இடம். விளங்கி, காரணப்பொருட்டாய செய்தெனெச்சம். வேலையிற் புலப்படக்கிடந்தவென்ன விசும்பிலே விளங்கித்தோன்ற என்க. மேகநீங்கிய விசும்பிற்கு நீர்வறந்த கடலும், விண்மீன்களுக்குப் பொன் முதலியவும் உவமம். (கரு)

பாயிருட் படலங் கீண்டு பரிதிகண் விழித்துச் செங்கை
ஆயிரம் பரப்பி முந்நீ ரலைகட னீந்து மெல்லை
மாயிரு ஞாலங் காக்கும் வரகுண னிரவு தங்கள்
நாயகன் பாடற் கீந்த நல்லருட் பரிசில் கேட்டான்.

(இ - ள்.) பரிதி கண் விழித்து - சூரியன் கண் விழித்து, பாய் இருள் படலம் கீண்டு - பரந்த இருட்கூட்டத்தைக்கிழித்து, செங்கை ஆயிரம் பரப்பி - சிவந்த

(பா - ம்.) * மலையின்மேய.

கிரணமாகிய ஆயிரங்கரங்களையும் விரித்து, முந்நீர் அலைகடல் நீந்தும் எல்லை - மூன்று நீர்களையுடைய அலைக்கின்ற கீழைக்கடலை நீந்தும் பொழுது, மா இரு ஞாலம் காக்கும் வரகுணன் - மிகப்பெரிய நிலவுலகினைப் புரக்கும் வரகுண பாண்டியன், இரவு - இராப்போதில், தங்கள் நாயகன் - தங்கள் குலதெய்வமாகிய சோமசுந்தரக்கடவுள், பாடற்கு ஈந்த நல் அருள் பரிசில் கேட்டான் - பத்திரனது பாடலுக்கு அளித்தருளிய நல்ல அருட்கொடையைக் கேட்டறிந்தனன்.

உதித்தலைக் கண் விழித்து என்றும், இருளை யோட்டுதலை இருட்படலங் கீண்டு என்றும், கதிர் வீசுதலைச் செங்கை பரப்பி என்றும், கீழைக்கடலைத்தாண்டி வருதலைக் கடல் நீந்தும் என்றும் கூறியது குணவணி. கீண்டு, கீழ்ந்து என்பதன் மரூஉ. நீரில் நீந்துவார் கைபரப்புதல் இயல்பாகலின் அதற்கேற்ப 'செங்கையாயிரம் பரப்பி முந்நீரலைகடனீந்து மெல்லை' என்றார். மாயிரு, உரிச்சொல்லாகலின் யகரம் வந்தது. அருட்பரிசில் - அருளாகிய பரிசில்; அருளால் அளித்த பரிசில். (௧௬)

இன்னிசைக் கரசை யிட்ட பலகைமீ திருத்தி மன்னர்
மன்னவ னிவனே யெங்கண் மதுரைநா யகனென் றுன்னி
மின்னிவர் மணிப்பூ ணல்கி விளைநில மிகவு நல்கி
நன்னிதி வெறுப்ப நல்கி வரிசையா னடத்தி* வந்தான்.

(இ - ள்.) இன் இசைக்கு அரசை - இனிய இசைக்கு அரசனாகிய பாணபத்திரனை, இட்ட பலகை மீது இருத்தி - இறைவன் இட்டருளிய அப்பலகைமேல் இருக்கச்செய்து, மன்னர் மன்னவன் - வேந்தர் வேந்தனாகிய வரகுணதேவன், இவனே எங்கள் மதுரை நாயகன் என்று உன்னி - இவனே எங்கள் சோமசுந்தரக் கடவுள் என்று கருதி, மின் இவர் மணிப்பூண் நல்கி - ஒளிபரந்த மணிகள் அழுத்திய அணிகளைக் கொடுத்தும், விளை நிலம் மிகவும் நல்கி - விளை நிலங்களை மிகுதியாகத் தந்தும், நல் நிதி வெறுப்ப நல்கி - நல்ல பொருள்களை (அவன்) உவர்ப்ப அளித்தும், வரிசையால் நடத்தி வந்தான் - முறைமையால் (இங்ஙனமே பல நாளும்) நடத்தி வந்தான்.

சிவனடியவரைச் சிவனெனவே நினைக்கவேண்டுமென்பது உண்மைநூற் றுணிபாகலின் அவனை இறைவனாகவே உன்னினன் என்க. வெறுப்ப - மிக என்றுமாம். (௧௭)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

இறையருள் வரிசை பெற்றபத் திரனு மேறுயர்த் தவரைநாற் போதும்
முறையினால் வழிபட் டொழுகுவா னாக முடிகெழு வரகுண வேந்து
மறைமுத லடிகள் வந்துவந் தனையால் வழுத்துவான் சில்பகல் கழிய
நிறைபெருஞ் சுடரோன் றிருவுரு வடைந்து நெறியினாற் சிவபுர மடைந்தான்.

(பா - ம்.) * வரிசையா நடத்தி.

(இ - ள்.) இறை அருள் வரிசை பெற்ற பத்திரனும்-வரகுணமன்னன் அருளிய வரிசைகளைப்பெற்ற பாணபத்திரனும், ஏறு உயர்த்தவரை - இடபக்கொடியினை யுயர்த்திய சோம சுந்தரக்கடவுளை, நாற்போதும் - நான்கு காலங்களிலும், முறையினால் வழிபட்டு ஒழுகுவானாக - முறைப்படி வழிபாடு செய்து ஒழுகுவானாக; முடிகெழு வரகுண வேந்து - முடியுடை வேந்தனாகிய வரகுண தேவன், மறை முதல் அடிகள் வந்து வந்தனையால் வழுத்துவான் - வேத முதல்வனாகிய சோமசுந்தரக்கடவுளின் திருவடிகளைத் (திருக்கோயிலின்கண்) வந்து வணங்கித் துதிப்பானாகி, சில் பகல் கழிய - சின்னாட்கழிய, நெறியினால் - முறைமையால், நிறைபெருஞ் சுடரோன் திரு உரு அடைந்து - எங்கும் நிறைந்த பேரொளியாகிய இறைவனது திருவுருவத்தை அடைந்து, சிவபுரம் அடைந்தான் - சிவலோகத்தை அடைந்தான்.

நாற்போது - காலை, நண்பகல், மாலை, நடுயாமம். வந்தனையால் - வணங்குவதோடு: ஆல் ஒடுவின் பொருட்டு. வழுத்துவான், முற்றெச்சம். திருவுரு - சாரூபம்.

ஆகச் செய்யுள் - உகசஅ



க. ப. 44

இசைவாதுவென்றது

நாற்பத்து நான்காவது

# இசைவாதுவென்ற படலம்

[எண்சீரடியாசிரியவிருத்தம்]

கூட லம்பதியி லாடக மேருக் கொடிய விற்குரிசி லடியவ னுக்குப்
பாட லின்பரிசி லாகிய செம்பொற் பலகை யிட்டபடி பாடின மன்னோன்
வீட ரும்பொருவில் கற்புடை யாளோர் விறலி யைப்பரம னிறையருள் பற்றி
மாட கஞ்செறியும் யாழ்வழி பாடி வாது வென்றவர லாறு மிசைப்பாம்.

(இ - ள்.) அம் கூடல் பதியில் - அழகிய மதுரைத் திருநகரில் எழுந்தருளிய, ஆடக மேருக்கொடிய வில்குரிசில் - பொன்மேருவாகிய வளைந்த வில்லையேந்திய சோமசுந்தரக் கடவுள், அடியவனுக்கு - அடியானாகிய பாணபத்திரனுக்கு, பாடலின் பரிசில் ஆகிய - (அவன்) பாடலுக்குப் பரிசிலாக, செம்பொன் பலகை இட்டபடி பாடினம் - சிவந்த பொற்பலகை அருளிய திருவிளையாடலைக் கூறினோம்; அன்னோன் - (இனி) அப்பாணபத்திரனது, வீடு அரும் பொருஇல் கற்பு உடையாள் - அழிதலில்லாத ஒப்பற்ற கற்பினையுடைய மனைவியார், பரமன் நிறை அருள்பற்றி - இறைவனது நிறைந்த திருவருளைப் பற்றுக் கோடாகக்கொண்டு, மாடகம் செறியும் யாழ்வழி பாடி - முறுக்காணி செறிந்த யாழின் வழியே பாடி, ஓர் விறலியை வாது வென்ற வரலாறும் இசைப்பாம் - ஒரு பாடினியை வாதில் வென்ற திருவிளையாடலையுங் கூறுவாம்.

கொடிய - வளைவுடைய; கொடுமை - வளைவு; கோடிய என்பதன் விகாரமுமாம். ஆகிய, செய்யிய வென்னும் வினையெச்சம். (க)

வரகு ணன்கதி யடைந்தபி னம்பொன் மௌலி சூடிய விராச விராசப்
புரவ லன்புவி மடந்தையை வேட்டுப் புயந்த ழீஇக்கொடு நயந்தரு நாளிற்
பரவு மன்பதை புரந்தொழு கந்தப் பஞ்சவற் குரிய ரஞ்சன வுண்கண்
மரபின் வந்தமட வார்பல ரேனை மையல் செய்யுமட வார்பலர் மாதோ.

(இ - ள்.) வரகுணன் கதி அடைந்தபின் - வரகுணபாண்டியன் சிவகதி அடைந்தபின், அம்பொன்மௌலி சூடிய - அழகிய பொன்னாலாகிய முடிசூடிய, இராச விராசப் புரவலன் - இராசராச மன்னன் என்பான், புவிமடந்தையை வேட்டுப் புயம் தழீஇக் கொடு - நிலமகளை மணந்து தோளிற் றழுவிக்கொண்டு, நயம் தரும் நாளில் - (குடிகளுக்கு) இன்பமளித்து வரும்பொழுது, பரவும் மன்பதை புரந்து ஒழுகு - பரவிய மக்கட் கூட்டத்தைப் பாதுகாத்தொழுகும், அந்தப் பஞ்சவற்கு உரியர் - அந்தப் பாண்டியனுக்கு உரியராயுள்ளார், அஞ்சன உண் கண் மரபின் வந்த மடவார் பலர் - மையுண்ட கண்களையுடைய தனது மரபில் வந்த மக

ளிர் பலர் ; எனை மையல் செய்யும் மடவார் பலர் - மற்றை மயக்கஞ் செய்யுங் காமக் கிழத்தியர் பலர்.

மரபின் வந்த மடவார் - குடிப்பிறந்தவராகிய மனைக்கிழத்தியர். மையல் செய்யு மடவார் - கணிகையருள்ளே காமக்கிழத்தியர். மாது, ஓ அசைகள். (உ)

அன்ன போகமட வாரு ளொருத்தி யரச னுக்கமுது மாவியு மாகும்
மின்ன ளுண்மதுர கீத மிசைக்கும் விஞ்சை யின் றுறைவ லாளவ ளுக்கும்
பன்ன காபரண னின்னிசை பாடும் பத்திரன் பொருவில் கற்புடை யாட்கும்
மன்னு கீதவினை யாலிகன் மூள வழுதி காதன்மட மாது பொருளாய்.

(இ - ள்.) அன்னபோக மடவாருள் ஒருத்தி - அந்தக் காமக் கிழத்தியருள் ஒருத்தி, அரசனுக்கு அமுதும் ஆவியும் ஆகும் மின்னனாள் - மன்னனுக்கு அமுதும் உயிருமாகிய மின்னலை ஒத்தவள் ; மதுரகீதம் இசைக்கும் விஞ்சையின் துறைவலாள்- இனிய இசை பாடும் கல்வியின் துறையில் வல்லவள் ; அவளுக்கும் - அம்மாதுக்கும், பன்னக ஆபரணன் இன் இசைபாடும் - பாம்பணியினையுடைய இறைவன் திருமுன் இனிய இசையினைப் பாடுகின்ற, பத்திரன் பொரு இல் கற்பு உடையாட்கும் - பாணபத்திரனது ஒப்பற்ற கற்பினையுடைய மனைவிக்கும், மன்னுகீத வினையால் - (இன்பம்) நிலைபெற்ற இசைபாடுஞ் செயலால், இகல்மூள - பகைமூள, வழுதி காதல் மடமாது பொருளாய் - பாண்டியனது காதலுக்குரிய இளமையாகிய மாது மனம் பொருதவளாய்.

போக மடவார் - இன்பம் விளைக்கும் காமக்கிழத்தியர். (ங)

பாடி னிக்கெதிரோர் பாடினி தன்னைப் பாட விட்டிவள் படைத்த செருக்கை
ஈட ழிப்பலென வெண்ணி யெழீஇத்தன் னிறைமகற்கஃ திசைத்தலு மந்தத்
தோடிறப்பொருகயற்கணிளுடான்சொன்னவாறொழுகு மன்னவர்மன்னன்
நாடி யத்தகைய விறலியை யீழ நாட்டி னும்வர வழைத்து விடுத்தான்.

(இ - ள்.) பாடினிக்கு எதிர் ஓர் பாடினிதன்னைப் பாடவிட்டு - இந்தப்பாடினிக்கு எதிராக ஒரு பாடினியைப் பாடவிட்டு, இவள் படைத்த செருக்கை ஈடு அழிப்பல் என எண்ணி எழீஇ - இவள் கொண்ட செருக்கினை வலியழிப்பேனென்று கருதி எழுந்து, தன் இறைமகற்கு அஃது இசைத்தலும் - தனது மன்னனுக்கு அச் செய்தியைக் கூறியவளவில், அந்தத் தோடு இறப்பொரு கயல்கணினாள் - தோடு இற்றொழியும்படி போர்புரியுங் கயல்போன்ற கண்ணையுடைய அக்காமக்கிழத்தி, சொன்னவாறு ஒழுகும் மன்னவர் மன்னன் - சொன்னபடி நடக்கும் மன்னர் மன்னனாகிய அப்பாண்டியன், அத்தகைய விறலியை நாடி - அங்ஙனம் பாடி வெல்லுந் தகுதியையுடைய பாடினியை ஆராய்ந்து கண்டு, ஈழ நாட்டினும் வரவழைத்து விடுத்தான் - ஈழ நாட்டினின்றும் வரவழைத்தான்.

ஈடழிப்பல் என்பது ஒரு சொல்லாய் இரண்டாவதற்கு முடிபாயிற்று ; ஈடு - வலிமை. எழீஇ, சொல்லிசை யளபெடை. தோடு - காதணி. கண் காதள

வோடுதலை இங்ஙனங் கூறினர். நாட்டினும் - நாட்டினின்றும். விடுத்தான், விட்டான் என்பதுபோலத் துணிவுப் பொருளில் வந்தது. (ச)

பந்த யாழ்முதுகு தைவர விட்டுப் பாட லாயமிரு பக்கமு மொய்ப்ப
வந்த பாடினி மடந்தையு மன்னர் மன்ன னைத்தொழுதொர் கின்னரமாதிற்
சந்தவேழிசைமிழற்றினணின்றாடன்னை நோக்கியொருமின்னிடையாண்மேற்
சிந்தை போக்கிவரு தீப்பழி நோக்காத் தென்னருக்கரசனின்னதுசெப்பும்.

(இ - ள்.) பந்தம் யாழ் முதுகு தைவரவிட்டு - கட்டமைந்த யாழ் முதுகினைத் தடவுமாறு தொங்கவிட்டு, பாடல் ஆயம் இருபக்கமும் மொய்ப்ப - பாடும்மகளிர் கூட்டம் இரண்டு பக்கங்களிலும் மொய்ப்ப, வந்தபாடினிமடந்தையும் - வந்த விறலியாகிய மாதும், மன்னர் மன்னனைத் தொழுது - வேந்தர் வேந்தனாகிய பாண்டியனைத் தொழுது, ஓர் கின்னரமாதில் - ஒரு கின்னர மங்கைபோல, சந்த ஏழ் இசை மிழற்றினள் நின்றாள் - பண்ணமைந்த ஏழிசைகளையும் பாடி நின்றனள்; தன்னை நோக்கி - அங்ஙனம் நின்ற அவளை நோக்கி, ஒரு மின் இடையாள்மேல் சிந்தை போக்கி - ஒருமின்போலும் இடையினையுடையாள்மேல் மனத்தைப் போக்கினமையால், வருதீப்பழி நோக்கா - மேலே விளையுங் கொடிய பழியினைக் கருதாத, தென்னருக்கு அரசன் - பாண்டியருக்கு வேந்தனாகிய இராச ராசன், இது செப்பும் - இதனைச் சொல்லுவான்.

கின்னரர் - இசைபாடும் ஓர் தேவ சாதியார். நின்றாள் அங்ஙனம் நின்றவளை நோக்கி என விரித்துரைக்க. (ரு)

பத்தி ரன்மனைவி தன்னையெம் முன்னர்ப் பாடு தற்கழை யதற்கவ ளாற்றா
துத்த ரஞ்சொலினும் யாமவள் சார்பா யுனை விலக்கினும் விடாதுதொடர்ந்தே
சித்த நாணுற வஞ்சின மிட்டுச் செல்ல னில்லென வளைந்துகொ ளென்னா
எய்த்த நுண்ணிடையி னாளை யிருக்கைக்கேகி நாளைவரு கென்று விடுத்தான்.

(இ - ள்.) பத்திரன் மனைவிதன்னை எம்முன்னர் - பாணபத்திரன் மனைவியை எமது முன்னே, பாடுதற்கு அழை - பாடுதற்கு அழைப்பாயாக, அதற்கு அவள் ஆற்றாது உத்தரம் சொலினும் - அதற்கு அவள் உன்னோடுபாட ஆற்றாமல் வேறு போக்குச் சொல்லினும், யாம் அவள் சார்பாய் உனை விலக்கினும் - யாம் அவள் சார்பாய் இருந்து உன்னைத் தடுத்தாலும், விடாது தொடர்ந்தே - நீ அவளை விடாது பின்பற்றி, சித்தம் நாணம் உற - அவள் மனம் வெள்குமாறு, வஞ்சினம் இட்டு - சூளுறவுசெய்து, செல்லல் நில் என வளைந்துகொள் என்னா - செல்லாதே நில் என்று வளைந்து கொள்வாயாக என்று கூறி, எய்த்த நுண் இடையினாளை - இளைத்த நுண்ணிய இடையினையுடைய அப்பாடினியை, இருக்கைக்கு ஏகி நாளை வருக என்று விடுத்தான் - இருப்பிடஞ்சென்று நாளை வரக்கடவாய் என்று அனுப்பினன்.

செல்லல் - செல்லாதே: அல் விகுதி எதிர் மறையில் வந்தது. வருகென்று, அகரந் தொக்கது. (சு)

[கலிநிலைத்துறை.]

பின்ன ரின்னிசைப் பத்திரன் பெருந்தகை விறலி
தன்னை யங்கழைத் துளத்தொன்று புறத்தொன்று சாற்றும்
என்னொ டின்னிசை பாடுவா ருளர்கொலோ விங்கென்
றுன்னி வந்திருக் கின்றன ளிசைவலா ளொருத்தி.

(இ - ள்.) பின்னர் - பின்பு, இன் இசைப் பத்திரன் பெருந்தகை விறலி தன்னை - இனிய இசைபாடுதலில் வல்ல பாணபத்திரன் மனைவியாகிய மிக்க கற்பினையுடைய பாடினியை, அங்கு அழைத்து - தன்முன் அழைத்து, உளத்து ஒன்று புறத்து ஒன்று சாற்றும் - அகத்தொன்றும் புறத்தொன்றுமாகக் கூறுகின்றான்; இசைவலாள் ஒருத்தி - இசையில் வல்ல ஒரு பெண், உன்னி - தன்னை நன்கு மதித்தமையால், இங்கு என்னொடு இன்இசை பாடுவார் - இங்கு என்னுடன் இனிய இசை பாடுகின்றவர், உளர்கொலோ என்று வந்திருக்கின்றனள் - உளரோ என்று சொல்லிக்கொண்டு வந்திருக்கின்றனள்.

தகை - ஈண்டுக் கற்பு. உள்ளத்தில் ஒன்று கருதி வாயால் மற்றொன்று கூறுகின்றான் என்பார் 'உளத்தொன்று புறத்தொன்று சாற்றும்' என்றார். என்னொடு - எனக்கு ஒப்பாக. (எ)

ஆட லமைத்தடந் தோளினா யவளொடுங் கூடப்
பாட வல்லையோ பகரெனப் பாடினி பகர்வாள்
கோட ருந்தகைக் கற்புமிக் கூடலெம் பெருமான்
வீட ருங்கரு ணையுமெனக் கிருக்கலால் வேந்தே.

(இ - ள்.) ஆடு அமை தடம் தோளினாய் - அசையும் மூங்கிலை ஒத்த பெரிய தோளினையுடையாய், அவளொடும் கூடப் பாட வல்லையோ - நீ அவளுடன் ஒப்பாக நின்று பாடுதற்கு வலியுடையையோ, பகர் என - கூறுவாயாக என்று வினவ, பாடினி பகர்வாள் - விறலி கூறுவாள்; வேந்தே - அரசே, கோடு அரும் தகைக் கற்பும் - மாறுதலில்லாத பெருமையையுடைய கற்பும், இக்கூடல் எம்பெருமான் - இந்த நான்மாடக் கூடலில் எழுந்தருளிய எமது பெருமானது, வீடு அருங் கருணையும் - அழிதலில்லாத அருளும், எனக்கு இருக்கையால்-எனக்குத் துணையாக இருத்தலினால்.

கூட - ஒப்பாக. கோள்தரும் எனப்பிரித்து உறுதியைத் தருகின்ற என்றுரைத்தலுமாம். (அ)

பாடி வெல்வதே யன்றிநான் பரிபவ முழந்து
வாடு வேனலே னென்றுரை வழங்கலு மதுக்கால்
ஏடு வார்குழ லவளையு மிருக்கையுய்த் திருந்தான்
நீடு வார்திரைப் பொருநையந் தண்டுறை நிருபன்.

(இ - ள்.) பாடி வெல்வதே அன்றி - அவளொடு பாடி நான் வெற்றி பெறுவதேயல்லாமல், பரிபவம் உழந்து வாடுவேன் அலேன் என்று உரை வழங்கலும் - தோல்வியினால் வருந்தி வாட்டமுறேன் என்று கூறிய வளவில், மதுக்கால் ஏடு வார் குழல் அவளையும்-தேன்பொழியும் மலரிதழை யணிந்த நீண்ட கூந்தலையுடைய அப் பாடினியையும், இருக்கை உய்த்து இருந்தான் - அவள் இருப்பிடத்திற்குப் போக விடுத்து இருந்தான் ; நீடு வார் திரைப்பொருநை அம் தண்துறை நிருபன் - நீண்ட பெரிய அலைகளையுடைய தாமிரபன்னியின் அழகிய தண்ணிய துறைகளையுடைய பாண்டிமன்னன்.

பரிபவம் - துன்பம் ; மானக்கேடுமாம். நீடு வார் என்பன ஒருபொருள் குறித்தன ; மிக்க என்றபடி. பாடினி உரை வழங்கலும் நிருபன் அவளையும் உய்த்து இருந்தான் என்க. (கூ)

மற்றை வைகலவ் விருவரைப் பஞ்சவன் மதுரைக்
கொற்ற வன்றன தவையிடை யழைத்துநேர் கூட்டிக்
கற்ற வேழிசை கேட்குமுன் கலத்தினும் போந்த
வெற்றி வேன்மதர் நெடுங்கணாள் விறலியை வைதாள்.

(இ - ள்.) மற்றைவைகல் - மறுநாளில், அவ்விருவரை - அவ்விருவரையும், பஞ்சவன் மதுரைக் கொற்றவன் - பாண்டியனாகிய மதுரை மன்னன், தனது அவையிடை அழைத்து - தன் அவையின்கண் வருவித்து, நேர்கூட்டி - ஒருவருக்கொருவர் நேரில் இருக்குமாறுசெய்து, கற்ற ஏழ் இசை கேட்குமுன் - அவர்கள் கற்ற ஏழு இசைகளையும் பாடுமாறு ஏவிக் கேட்டற்கு முன்னரே, கலத்தினும் போந்த - மரக்கலத்தினின்றும் வந்த, வெற்றிவேல் மதர் நெடுங்கணாள் - வெற்றி பொருந்திய வேல்போன்ற மதர்த்த நீண்ட கண்களையுடையவள், விறலியை வைதாள் - பாணபத்திரன் மனைவியாகிய பாடினியை இகழ்ந்துரைத்தாள்.

இருவரையும் என்னும் முற்றும்மை விகாரத்தாற் றொக்கது. கலம் - நாவாய். கலத்தினால் வந்தவளைக் கலத்தினின்றும் வந்தவள் என்றார். (ய)

குற்ற மெத்தனை யெத்தனை குணங்கள் யாழ்க் கோலுக்
குற்ற தெய்வம்யா* விசைப்பதெவ் வுயிருடம் புயிர்மெய்
பெற்ற வோசையெவ் வளவவைக் குத்தரம் பேசி
மற்றெ னேடுபா டில்லையேல் வசையுனக் கென்றாள்.

(இ - ள்.) யாழ்க்கோலுக்கு - வீணைக்கு, எத்தனைகுற்றம் - எவ்வளவு குற்றங்கள் ; எத்தனை குணங்கள் - எவ்வளவு குணங்கள் ; உற்ற தெய்வம்யா - பொருந்திய தெய்வங்கள் யாவை ; இசைப்பது எவ்வுயிர் உடம்பு உயிர்மெய் - ஒலிப்பது எந்த உயிரெழுத்து எந்த மெய்யெழுத்து எந்த உயிர்மெய்யெழுத்து ; பெற்ற ஓசை எவ்வளவு - (அவைகட்கு) அமைந்த ஒலி எவ்வளவின ; அவைக்கு உத்தரம் பேசி -

(பா - ம்.) *தெய்வ மேது.

அவைகட்கு விடைகூறி, மற்று எனேடு பாடு - பின் என்னுடன் பாடுவாயாக; இல்லையேல் உனக்கு வசை என்றாள் - இன்றேல் உனக்கு அது குற்றமாகும் என்று கூறினாள்.

குற்றம் - செம்பகை, ஆர்ப்பு, கூடம், அதிர்வு என்பன; இவை மரக்குற்றத் தால் வருவன என்பதை,

"நீரிலே நிற்றல் அழுகுதல் வேதல் நில மயங்கும்
பாரிலே நிற்றல் இடிவீழ்தல் நோய்மரப் பாற்படல் கோள்
நேரிலே செம்பகை ஆர்ப்பொடு கூடம் அதிர்வு நிற்றல்
சேரில்நேர் பண்கள் நிறமயக் கம்படும் சிற்றிடையே"

என்னுஞ் செய்யுளா லறிக. குணங்களாவன - முற்கூறிய குற்றங்களொழிந்து கொன்றை, கருங்காலி முதலிய மரங்களால் இயன்றிருப்பனவாகும்;

"சொல்லிய கொன்றை கருங்காலி மென்முருக்கு
நல்ல குமிழுந் தணக்குடனே - மெல்லியலாய்
உத்தம மான மரங்க ளிவையென்றார்
வித்தக யாழோர் விதி"

என்பது காண்க. யாழ்க்கோல் - யாழாகிய கோல். தெய்வம் - விசுவாமித்திரன் முதலாகக் கூறுவர். என்னேடு என்பது விகாரமாயிற்று. (கக)

இருமை யும்பெறு கற்பின ளியம்புவாள் கலத்தின்
வரும ரும்பெறற் கல்வியும் வாதின்மே லூக்கப்
பெருமை யும்பலர் விரும்புறு பெண்மையின் செருக்குந்
திரும கன்சபை யறியவாய் திறக்கவேண் டாவோ.

(இ - ள்.) இருமையும் பெறுகற்பினள் இயம்புவாள் - இம்மைப் பயனையும் மறுமைப் பயனையும் அடைதற்குரிய கற்பினையுடையாள் கூறுவாள்; கலத்தின் வரும் பெறல் அருங்கல்வியும் - மரக்கலத்தினின்றும் வந்த பெறுதற்கரிய கல்வி யினையும், வாதின்மேல் ஊக்கப் பெருமையும் - வாதத்தின்மேற் சென்ற மனவெழுச் சியின் பெருமையினையும், பலர் விரும்புறு பெண்மையின் செருக்கும் - பலரும் விழைகின்ற பெண்ணலத்தின் செருக்கினையும், திருமகன் சபை அறிய - பாண்டிய னது அவையிலுள்ளார் அறியுமாறு, வாய் திறக்கவேண்டாவோ - உன்வாயினைத் திறந்து காட்ட வேண்டாமா.

கலத்திவ வருங்கல்வி என உடையாள் தொழில் உடைமை மேல் ஏற்றிக் கூறப்பட்டது. கற்பின் றன்மை வாய்க்கப் பெறாதாள் என்பாள் 'பலர் விரும்புறு பெண்மையின் செருக்கும்' என்றாள். பெண்டிர்க்குரிய நாண் சிறிதுமின்றி அரச வையில் இங்ஙனம் பேசுகின்றாய் என்பாள் 'சபை யறிய வாய்திறக்க வேண்டாவோ' என்று பாடினி கூறினாள் என்க. (கஉ)

நெய்யுண் பூங்குழன் மடவரா னின்னொடும் வாது
செய்யும் பூசலுக் கெதிரலாற் றீயவாய் திறந்து
வையும் பூசலுக் கெதிரலேன் மானம்விற் றுன்போல்
உய்யும் பாவைய ரேயதற் கெதிரென வுரைத்தாள்.

(இ - ள்.) நெய் உண் பூங்குழல் மடவரால் - நெய்பூசிய மலர்களையணிந்த கூந்தலையுடைய பெண்ணே, நின்னொடும் வாது செய்யும் பூசலுக்கு எதிர் அலால் - நின்னோடும் இசைவாது செய்யும் போருக்கு நான் எதிரே அல்லாமல், தீயவாய் திறந்து வையும் பூசலுக்கு எதிர் அலேன் - கொடிய வாயினைத் திறந்து இகழும் போருக்கு எதிரல்லேன்; உன்போல் - உன்னைப்போல, மானம்விற்று உய்யும் பாவையரே - மானத்தை விற்றுப் பிழைக்கும் மகளிரே, அதற்கு எதிர் என உரைத்தாள் - அப்பூசலுக்கு எதிராவார் என்று கூறினாள்.

மடவரல் என்பது விளியில் மடவரால் என்றாயது. பூசல் - போர். மானம் விற்று உன்போல் உய்யும் பாவையர் என்றதனால் நீ மானத்தை விற்றுப் பிழைக்க வந்துளாய் என்றவாறாயிற்று. (கங)

வென்றி மீனவன் விலக்குவான் போலெதிர் விலக்கித்
துன்று தார்க்குழன் மடந்தைமீர் பாடுமின் றோற்றோர்
வென்ற மாதரார்க் கடிமையாய் விடுவதே சபதம்
என்று மானமுண் டாக்கலு மீழநாட் டரிவை.

(இ - ள்.) வென்றி மீனவன் - வெற்றியையுடைய பாண்டியன், விலக்குவான்போல் - விலக்குகின்றவனைப்போல் அவிநயித்து, எதிர்விலக்கி - எதிர் நின்று தடுத்து, துன்று தார்க்குழல் மடந்தைமீர் - நெருங்கிய மாலையையணிந்த கூந்தலையுடைய மங்கைமீர், பாடுமின் - (நீவிர் இப்பூசலை ஒழித்துப்) பாடுவீர்களாக; தோற்றோர் - அவ்விசையில் தோற்றவர், வென்ற மாதரார்க்கு அடிமையாய் விடுவதே - வெற்றிபெற்ற மடந்தைக்கு அடிமையாகி விடுவதே, சபதம் என்று மானம் உண்டாக்கலும் - சூளுறவாவது என்று கூறி இருவருக்கும் மானத்தை மூட்டியவளவில், ஈழநாட்டு அரிவை - ஈழ நாட்டினின்றும் போந்த அரிவை.

நடுவு நிலையுடன் அவர்கள் பூசலை விலக்கினானல்லன் என்பார் 'விலக்கு வான்போ லெதிர்விலக்கி' என்றார். (கச)

முந்தி யாழிடந் தழீஇக்குரல் வழிமுகிழ் விரல்போய்
உந்த வேபெரு மிதநகை யுட்கிடந் தரும்பச்
சந்த வேழிசை யிறைமகன் றாழ்செவிக் கன்பு
வந்த காதலாண் மழலையி னமுதென வார்த்தாள்.

(இ - ள்.) முந்தி - தான் முற்பட்டு, யாழ்இடம் தழீஇ - யாழினை இடத் தோளிற் றழுவி, குரல்வழி முகிழ்விரல்போய் உந்த - குரல் என்னும் நரம்பின் வழியே முகிழ்த்த விரல்சென்று தாக்கவும், பெருமித நகை உள்கிடந்து அரும்ப-

பெருமிதத்தை வெளிப்படுத்தும் புன்னகை உள்ளே கிடந்து சிறிது தோன்றவும், சந்த ஏழ்இசை - பண்ணமைந்த ஏழிசைகளையும், இறைமகன் தாழ் செவிக்கு - பாண்டி மன்னனது வார்ந்து நீண்ட காதில், அன்பு வந்த காதலாள் - அன்பு வளர் தற் கேதுவாகிய காதல் காட்டும் அவனது காமக் கிழத்தியின், மழலை இன் அமுது அன வார்த்தாள் - இளஞ்சொல்லாகிய இனிய அமுதம்போல வாக்கினாள்.

அன்பு வந்த காதலாள் - அன்பு வளர்தற் கேதுவாகிய காதலைச் செய்பவள் ; காமக்கிழத்தி. காமக்கிழத்தியின் இளஞ்சொற்போலவும் அமுதம்போல்வும் எனலு மாம். செவிக்கு - செவிக்கண். (கரு)

வீணை வாங்கினள் மாடக முறுக்கினள் விசித்து
வாண ரம்பெறிந் திருசெவி மடுத்தன ரியக்கர்
நாண மெல்விர னடைவழி நாவிளை யமுதம்
பாணர் கோமகன் விறலியும் பலர்செவி நிறைத்தாள்.

(இ - ள்.) பாணர் கோமகன் விறலியும் - பாணர் பெருமானாகிய பத்திரன் மனைவியாகிய பாடினியும், வீணை வாங்கினள் மாடகம் முறுக்கினள் - யாழினை எடுத்து மாடகத்தை முறுக்கி, விசித்து வாள்நரம்பு எறிந்து - கட்டமைத்து ஒள்ளிய நரம்பினைத் தாக்கி, இயக்கர் இருசெவி மடுத்தனர் நாண - இயக்கர்களும் இரண்டு செவிகளிலுங் கேட்டு வெள்க, மெல்விரல் நடைவழி - மெல்லிய விரல் நடத்துதலா லுண்டாகும் ஓசையின் வழியே, நாவிளை அமுதம் - தனது நாவால் விளைக்கும் இசை யமுதத்தை, பலர் செவி நிறைத்தாள் - பலர் செவிகளிலும் நிரப்பினாள்.

வாங்கினள், முறுக்கினள், மடுத்தனர் என்பன முற்றெச்சம். விரல் நடைவழி நாவிளை அமுதம் - யாழினிசையோடு பொருந்த மிடற்றாற் பாடும் இசை. விறலியும் வாங்கி முறுக்கி விசித்து எறிந்து நாண அமுதம் நிறைத்தாள் என வினைமுடிக்க. விறலியும் என்னும் உம்மை இறந்தது தழுவிய எச்சப் பொருட்டு. (கசு)

அரச னுட்கிடை யறிந்தில ரவைக்களத் துள்ளார்
விரைசெய் வார்குழற் பாடினி பாடலை வியந்தார்
புரைசை மானிரைப் பூழிய னிலங்கையிற் போந்த
வரைசெய் குங்குமக் கொங்கையாள் பாடலை மகிழ்ந்தான்.

(இ - ள்.) அவைக் களத்து உள்ளார் - அவையிலுள்ள அனைவரும், அரசன் உட்கிடை அறிந்திலர்-மன்னனது மனக்கருத்தை யறியாது, விரைசெய் வார்குழல் பாடினி பாடலை வியந்தார் - மணங் கமழ்கின்ற நீண்ட கூந்தலையுடைய விறலியின் பாடலைக் கொண்டாடினார்; புரைசை மான் நிரைப் பூழியன் - கழுத்துக் கயிற்றினை யுடைய யானைக் கூட்டங்களையுடைய பாண்டியன், இலங்கையில் போந்த - இலங் கையினின்றும் வந்த, வரைசெய் குங்குமக் கொங்கையாள் பாடலை மகிழ்ந்தான் - மலையை ஒத்த குங்குமக் குழம்பணிந்த கொங்கையையுடைய ஈழப் பாடினியின் பாடலைப் பாராட்டினான்.

அறிந்திலர், முற்றெச்சம். புரைசை, இடைப்போலி. புரசை - யானைக்கழுத்திடு கயிறு. வரைசெய், செய் உவமப்பொருட்டு. (கள)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

தென்னவ னுட்கோ ளெல்லை தெரிந்தன ரவையத் துள்ளார்
அன்னவன் புகழ்ந்த வாறே புகழ்ந்தன ரவளைத் தானே
முன்னவ னருளைப் பெற்று மும்மையுந் துறந்தோ ரேனும்
மன்னவன் சொன்ன வாறே சொல்வது வழக்கா றன்றோ.

(இ - ள்.) அவையத்துள்ளார் - அவையிலுள்ளவர்கள், தென்னவன் உட்கோள் எல்லை தெரிந்தனர் - பாண்டியன் உள்ளக்கிடையின் முடிவைத்தெரிந்து, அன்னவன் புகழ்ந்தவாறே - அவன் புகழ்ந்த வண்ணமே, அவளைத் தானே புகழ்ந்தனர் - அவ்வீழப் பாடினியின் பாடலையே புகழ்ந்தார்கள்; முன்னவன் அருளைப் பெற்று - இறைவனது திருவருளைப் பெற்று, மும்மையும் துறந்தாரேனும் - மூவாசைகளையுந் துறந்த பெரியாராயினும், மன்னவன் சொன்னவாறே சொல்வது வழக்காறு அன்றோ - அரசன் கூறியவாறே கூறுவது வழக்காறு அல்லவா.

மும்மை - மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை என்னும் மூவாசைகள். மன்னவன் சொன்னவாறே சொல்வது வழக்காறு என்பதனை

"இகழி னிகழ்ந்தாங் கிறைமக னொன்று
புகழினு மொக்கப் புகழ்ப"

என்பதனாலு மறிக. தெரிந்தனர், முற்றெச்சம். தான், ஏ அசைகள். இச்செய்யுள் வேற்றுப்பொருள்வைப்பணி. (கஅ)

பொன்றளி ரனையாண் மையற் புதுமது நுகர்ந்து தீது
நன்றறி யாத கன்னி நாடவ னவையை நோக்கி
இன்றொரு நாளிற் றேரத் தக்கதோ விதுவென் றந்த
வென்றடு வேற்க ணாரைப் போமென விடுத்தான் மன்னோ.

(இ - ள்.) பொன் தளிர் அனையாள் - பொன் தளிர்த்தாலொத்த மேனியையுடைய காமக்கிழத்தி மேல்வைத்த, மையல் புதுமது நுகர்ந்து - காமமாகிய புதிய நறவினைப் பருகியதால், தீது நன்று அறியாத கன்னி நாடவன் - தீமையையும் நன்மையையும் அறியமாட்டாத கன்னி நாட்டினையுடைய பாண்டியன், அவையை நோக்கி - அவையிலுள்ளாரைப் பார்த்து, இது - இவ்விசை வாதின் முடிபு, இன்று ஒருநாளில் - இன்று ஒரே நாளில், தேரத்தக்கதோ என்று - ஆராய்ந்தறியத்தக்கதோ என்று கூறி, அந்த வென்று அடுவேல் கணாரை - வென்று பகைவரைக் கொல்லும் வேல்போன்ற கண்களையுடைய இம்மடவார்களை, போம் என விடுத்தான் - இருக்கைக்குப் போவீராக என்று அனுப்பினான்.

பொன்னினது தளிர் என்றுமாம் ; இதற்குப் பொற்றளிர் என்பது மெலிந்து நின்றதாகக் கொள்க. புது மது - மயக்கஞ் செய்வதிற் புதுமையுடைய தொரு மது. காமம் மதுப்போல்வதென்பது.

"கள்ளுண்டல் காம மென்ப கருத்தறை போக்குச் செய்வ"

என முன் கூறப்பட்டவாறும் காண்க. மன்னும் ஓவும் அசைகள். (கக)

மருவிய வாய மேத்த விருந்தினுண் மனைவந் தெய்திப்
புரவலன் றனது பாட்டைப் புகழ்ந்ததே புகழ்ந்த தாகப்
பெருமிதந் தலைக்கொண் டானாப் பெருங்களிப் படைந்து மஞ்சத்
திருமல ரணைமே லார்வந் திளைத்தினி திருந்தா ளிப்பால்.

(இ - ள்.) மருவிய ஆயம் ஏத்த - தன்னைச் சூழ்ந்த மகளிர் கூட்டம் புகழ, விருந்தினள்-புதிதாகவந்த ஈழப்பாடினி, மனை வந்து எய்தி-தன் விடுதிவந்தடைந்து, புரவலன் - இராசராச பாண்டியன், தனது பாட்டைப் புகழ்ந்ததே புகழ்ந்ததாக - தன் பாட்டினை வியந்ததனையே ஒரு புகழ்ச்சியாகக் கருதி, பெருமிதம் தலைக்கொண்டு - இறுமாப்பு மேற்கொண்டு, ஆனாப் பெருங்களிப்பு அடைந்து-நீங்காத பெருஞ் செருக்குற்று, மஞ்சத் திருமலர் அணைமேல் - தூங்குமஞ்சத்திற் பரப்பிய அழகிய மலர்ப் படுக்கையின்மேல், ஆர்வம் திளைத்து இனிது இருந்தாள் - மகிழ்ச்சிமிக்குக் கவலையின்றி இருந்தாள், இப்பால் - பின்.

அரசன் நெறிதிறம்பித் தன்னைப் புகழ்ந்தது உண்மைப் புகழ்ச்சியன்றாகவும் அதனைப் புகழ்ச்சியாகக் கொண்டாள் என்பார் 'புகழ்ந்ததே புகழ்ந்ததாக' என்றார். மஞ்சம் - கட்டில். (உ0)

வணங்குறு மருங்கிற் கற்பின் மடவரன் மதங்கி தானும்
அணங்கிறை கொண்ட நெஞ்ச ளங்கயற் கண்ணி பாகக்
குணங்குறி கடந்த சோதி குரைகழ லடிக்கீ ழெய்தி
உணங்கினள் கலுழ்கண் ணீர ளொதுங்கிநின் றிதனைச் சொன்னாள்.

(இ - ள்.) வணங்குறு மருங்கின் கற்பின் - வளையும் இடையினையும் கற்பினையுமுடைய, மடவரல் மதங்கிதானும் - பாணபத்திரன் மனைவியாகிய பாடினியும், அணங்கு இறைகொண்ட நெஞ்சள் - துன்பங் குடிகொண்ட நெஞ்சினையுடையளாய், அங்கயற் கண்ணிபாகம் - அங்கயற் கண்ணம்மையை ஒருபாகத்திலுடைய, குணம் குறிகடந்த சோதி - குணத்தையுங் குறியையுங் கடந்துநின்ற ஒளிவடிவினனாகிய சோமசுந்தரக் கடவுளின், குரைகழல் அடிக்கீழ் எய்தி - ஒலிக்கும் வீரக்கழல் அணிந்த திருவடிக்கீழ் அடைந்து, உணங்கினள் - வாட்டமுற்று, கலுழ் கண்ணீரள்-கலங்கியழுங் கண்ணீரையுடையவளாய், ஒதுங்கிநின்று இதனைச் சொன்னாள் - ஒருபுறமொதுங்கி நின்று இதனைக் கூறுவாளாயினள்.

அணங்கு - வருத்தம். இறைகொள்ளல் - தங்குதல். உணங்கினள் என்னும் தெரிநிலை முற்றும் நீரள் என்னும் குறிப்புமுற்றும் எச்சமாயின. (உக)

தென்னவ னாகி வையஞ் செய்யகோல் செலுத்திக் காத்த
மன்னவ வழுதி வார வழிவழக் குரைப்ப தானன்
அன்னவன் கருத்துக் கேற்ப வவையரு மனைய ரானார்
பின்னடு நிலைமை தூக்கிப் பேசுவார் யாவ ரையா.

(இ - ள்.) தென்னவனாகி - சுந்தர பாண்டியனாகி, வையம் செய்ய கோல் செலுத்திக் காத்த மன்னவ - நிலவுலகைச் செங்கோலோச்சிப் புரந்தருளிய மன்னவனே, வழுதி - இராசராச பாண்டியன், வாரவழி வழக்கு உரைப்பதானான் - அன்பு சென்ற வழியே வழக்குப் பேசுவானாயினன்; அன்னவன் கருத்துக்கு ஏற்ப - அவன் உட்கோளுக் கிசைய, அவையரும் அனையர் ஆனார்-அவையிலுள்ளாரும் அத் தன்மையராயினர்; பின் - இங்ஙனமாயபின், ஐயா நடுநிலைமை தூக்கிப் பேசுவார் யாவர் - ஐயனே நடுநிலைமையினின்று ஆராய்ந்துரைப்பார் யாவருளர்.

வாரவழி - பட்சபாதம்: ஒருபக்கம் அன்புடையனாய் அழிவழக்குரைப்பதானான் எனலுமாம். நின்னையன்றி வேறுயாரும் இல்லையென்பாள் 'பேசுவார் யாவரையா' என்றாள் என்க. (உஉ

உன்னருட் டுணை*செய் தென்பா லுறுகணோய் துடைப்ப தென்ன
மின்னனாய் நீயே நாளை வெல்லுமா செய்து மஞ்சேல்
என்னவா காய வாணி யீறிலா னருளாற் கேட்டு
மன்னருங் கற்பி னாடன் மனைபுகுந் திருந்தாண் மன்னோ.

(இ - ள்.) உன் அருள் துணைசெய்து - உனது திருவருளாகிய துணையை நல்கி, என்பால் உறுகண் நோய் துடைப்பது என்ன - என்பாலுள்ள துன்ப நோயைப் போக்கக் கடவாய் என்று குறையிரப்ப, ஈறு இலான் அருளால் - அழிவில்லாத இறைவன் திருவருளால், ஆகாயவாணி - அசரீரி, மின் அனாய் - மின் போல்வாய், நீயே நாளை வெல்லுமா செய்தும் - நாளை நீயே வெல்லுமாறு செய்வோம், அஞ்சேல் - நீ அஞ்சற்க, என்ன - என்று கூற, கேட்டு - அதனைக் கேட்டு, மன் அருங் கற்பினாள் தன் மனை புகுந்து இருந்தாள் - நிலைபெற்ற அரிய கற்பினையுடைய விறலி தன் இல்லிற்சென்று இருந்தாள்.

உன்னரு டுணைசெய்து என்னும் பாடத்திற்கு உன்னருளே துணைசெய்து துடைப்பதாகும் என்றுரைக்க. முற்பொருளில் துடைப்பது வியங்கோள்; "மறப்ப தறிவிலென் கூற்றுக்களே" என்புழிப்போல. மன், ஓ அசைகள். (உ௩)

அன்றுபோன் மற்றை ஞான்று மழைத்தனன் பாடல் கேட்டுக்
குன்றுபோற் புயத்தா னென்னற் கூறிய வாறே கூற
மன்றுளார் பலரு மன்ன வண்ணமே சொன்னார் கேட்டு
நின்றபாண் மடந்தை பாண்டி நிருபனை நோக்கிச் சொல்வாள்.

---

*(பா - ம்.) * உன்னருடுணை.

(இ - ள்.) குன்றுபோல் புயத்தான் - மலைபோலுந் தோளினையுடைய பாண்டியன், அன்றுபோல் மற்றை ஞான்றும் - அன்றுபோலவே அடுத்தநாளும், அழைத்தனன் பாடல் கேட்டு - அவ்விரு விறலிகளையும் அழைப்பித்து அவர்கள் பாடலைக் கேட்டு, நென்னல் கூறியவாறே கூற - நேற்றுப் புகன்ற வண்ணமே புகல, மன்றுளார் பலரும் அன்ன வண்ணமே சொன்னார் - அவையிலுள்ள அனைவரும் அவ்வரசன் கூறியவாறே கூறினார்; கேட்டு நின்ற பாண் மடந்தை - இதனைக் கேட்டு (மனம் புழுங்கி) நின்ற பாடினி, பாண்டி நிருபனை நோக்கிச் சொல்வாள் - பாண்டி வேந்தனைப் பார்த்துக் கூறுவாளாயினள்.

அழைத்தனன், முற்றெச்சம். (உச)

தென்னரே றனையாய் ஞால மனுவழிச் செங்கோ லோச்சும்
மன்னரே றனையாய் வார வழக்கினை யாத லானீ
சொன்னவா றவையுஞ் சொல்லத் துணிந்தது துலைநா வன்ன
பன்னகா பரணர் முன்போய்ப் பாடுகேம் பாடு மெல்லை.

(இ - ள்.) தென்னர் ஏறு அனையாய் - பாண்டியருள் ஆண்சிங்கம் போல்வாய், ஞாலம் - இந்நில வுலகில், மனுவழி செங்கோல் ஓச்சும் மன்னர் ஏறு அனையாய் - மனுவறத்தின் வழியே செங்கோல் செலுத்தும் மன்னர்களுள் ஏறுபோல்வாய், வாரவழக்கினை - நீதான் அன்பின் வழி நின்று வழக்கினை ஒருங் தன்மையையுடையையாயினை; ஆதலால் நீ சொன்னவாறே - ஆதலினால் நீ நடுநிலை யிகந்து கூறியவண்ணமே, அவையும் சொல்லத் துணிந்தது - அவையிலுள்ளாரும் கூறத் துணிந்தனர்; துலைநா அன்ன - தராசின் நாப்போலும் நடு நிலைமையுள்ள, பன்னக ஆபரணர் முன்போய்ப் பாடுகேம் - அரவினை அணியாகக் கொண்ட சோமசுந்தரக் கடவுளின் திருமுன் சென்று யாங்கள் பாடுவேம்; பாடும் எல்லை - அங்ஙனம் பாடுங்கால்.

நடு நின்று முறைபுரியும் இறையாகிய நீயும் எம்மில் ஒரு புறத்து வாரம்பற்றி வழக்குரைப்பாயாயினை, அவைய மாந்தரும் நின்வழிக் கூறினர் ஆகலின் இனி என்றும் கோடாத வாய்மையுடைய சிவபிரான் திருமுன் சென்று பாடுவேம் என்றாள் என்க. பன்னகா பரணர், வடமொழி நெடிற் சந்தி. (உரு)

இருவரேம் பாட்டுங் கேட்டுத் துணிந்திவள் வென்றா ளென்று
ஒருவர்சந் நிதியிற் சொன்னாற் போதுமென் றுரைத்தாள் பாண்டித்
திருமக னனைய வாறே செய்மினீர் செய்மி னென்ன
மருவளர் குழலி னார்த மனைபுகுந் திருந்தார் பின்னாள்.

(இ - ள்.) இருவரேம் பாட்டும் கேட்டு - எங்களிருவரின் பாடலையும் கேட்டு, ஒருவர் துணிந்து - யாரேனும் ஒருவர் மனந்துணிந்து, இவள் வென்றாள் என்று - இருவருள் இவள்தான் வென்றனள் என்று, சந்நிதியில் சொன்னால் போதும் என்று உரைத்தாள் - அவ்விறைவன் திருமுன் சொன்னால் அமையும் என்று கூறினாள்,

பாண்டித் திருமகன் - இராசராச பாண்டியன், அனைய வாறே நீர் செய்மின் செய்மின் என்ன - அங்ஙனமே நீர் செய்யுமென்று கூற, மருவளர் குழலினர் தம் மனை புகுந்து இருந்தார் — மணம் ஓங்கும் கூந்தலையுடைய அவ்விறலியர் இருவரும் தத்தம் இல்லிற்சென்று தங்கினர்; பின் நாள் - மறுநாளில்.

செய்மின் செய்மின், துணிவுப்பொருளில் வந்த அடுக்குத்தொடர். (உசு)

[கலி விருத்தம்.]

தென்ற லாடனு மந்திரச் செல்வரும்
நன்று தீதுணர் நால்வகைக் கேள்வியோர்
ஒன்ற வேகி யொளிவிடு வெள்ளிமா
மன்ற வாணர்மா மண்டபத் தெய்தினர்.

(இ - ள்.) தென்றல் நாடனும் - தென்றற்காற்றின் பிறப்பிடமாகிய பொதியின் மலையையுடைய பாண்டிநாடனும், மந்திரச்செல்வரும் - அமைச்சர்களும், நன்று தீது உணர் - (இருவகை இசையின்) குணத்தினையும் குற்றத்தையும் அறிதற்கேதுவாகிய, நால்வகைக்கேள்வியோர் ஒன்ற - கீத ஞான முதலிய நால்வகைஞான முடையார் சூழ, ஏகி - சென்று, ஒளி விடு வெள்ளிமாமன்ற வாணர் - ஒளி வீசுகின்ற பெரிய வெள்ளி யம்பல வாணரது, மாமண்டபத்து எய்தினர் - பெரிய மண்டபத்தை அடைந்தனர்.

நால்வகைக்கேள்வி - கீதஞானம், இலயஞானம், சுருதிஞானம், தாளஞானம் என்பனவாம். (உஎ)

எய்தி யம்மட மாதரை யிங்குறச்
செய்தி ரென்னத் திருமக னேவலோர்
நொய்தி னோடி நொடித்தழைத் தாரொடு
மைதி கழ்ந்த விழியார் வருவரால்.

(இ - ள்.) எய்தி - அங்ஙனம் அடைந்து, திருமகன் - பாண்டி மன்னன், அம்மடமாதரை இங்குறச்செய்திர் என்ன - அந்த இளமையையுடைய விறலிகளை இங்குவரச்செய்மின் என்று கட்டளையிட, நொய்தின் ஓடி நொடித்து - விரைந்து ஓடி மன்னன் கட்டளையைக் கூறி, ஏவலோர் அழைத்தாரொடு - அழைத்தாராகிய அவ்வேவலாளருடன், மைதிகழ்ந்த விழியார் வருவர் - மைவிளங்கிய விழியினை யுடைய அவ்விருவரும் வருவாராயினர்.

செய்திர், த் எழுத்துப்பேறு. நொடித்து - கூறி. ஏவலோர் அழைத்தார் அங்ஙனம் அழைத்தவரோடு என விரித்துரைக்க. ஆல், அசை. (உஅ)

படிமை யார்தவப் பாடினி வந்தெனக்
கடிமை யாவளின் றையமின் றாலெனக்
கொடுமை யார்மனக் கோட்டச் செருக்கொடுங்
கடுமை யாகவந் தாள்கலத் தின்வந்தாள்.

(இ - ள்.) கலத்தின் வந்தாள் - மரக்கலத்தில் வந்த பாடினி, இன்று தவப் படிமை ஆர் பாடினி வந்து - இன்று தவவேடம் நிறைந்த விறலிவந்து, எனக்கு அடிமையாவள் - எனக்கு அடிமையாவாள், ஐயம் இன்று என - இதற்கு ஒரு ஐயுறவில்லை என்று கருதி, கொடுமை ஆர் கோட்டம் மனச்செருக்கொடும் - கொடுமை நிறைந்து நெறி பிறழ்ந்த மனத்தின்கண் உள்ள செருக்கோடும், கடுமையாக வந்தாள் - விரைவாக வந்தனள்.

படிமை - தவக்கோலம்; தவவொழுக்கமுமாம். ஆல், அசை. கடுமை - விரைவு. கலத்தின் வந்தவள் கடுமையாக வந்தாள் என்க. (உக)

கற்பின் மிக்கெழு* கற்புங் கருத்தினிற்
சிற்ப ரஞ்சுடர் சேவடி மேல்வைத்த
அற்பு மிக்கெழ மெல்லவந் தாளரோ
பொற்பின் †மிக்குள பத்திரன் பொன்னனாள்.

(இ - ள்.) பொற்பின் மிக்குள பத்திரன் பொன்அனாள் - அழகினால் மேம் பட்ட பாணபத்திரன் மனைவியாகிய திருமகளை ஒத்த பாடினி, கற்பின்மிக்கு எழு கற்பும் - கல்வியறிவால் மேம்பட்டெழுந்த நிறையும், கருத்தினில் - தனது உள்ளத்தில், சிற்பரஞ்சுடர் சேவடிமேல் வைத்த அற்பும் - ஞானப் பரஞ்சோதியாகிய சோம சுந்தரக் கடவுளின் சிவந்த திருவடிமேல் வைத்த அன்பும், மிக்கு எழ - பொலிந்து தோன்ற, மெல்ல வந்தாள் - மெதுவாக வந்தனள்.

கற்பிற்குரிய அமைதியோடு வந்தா ளென்பார் 'மெல்லவந்தாள்' என்றார். அரோ, அசை. (நடயி)

அலங்கு மாரமோ டங்கத மாதிபல்
கலன்க டாங்கிக் கலைஞர் குழாத்திடை
இலங்கு மாட மதுரைக் கிறைவரும்
புலன்கொ ணாவலர் போல்வந்து வைகினர்.

(இ - ள்.) இலங்கு மாட மதுரைக்கு இறைவரும் - விளங்கா நின்ற மாடங்களையுடைய மதுரைக்கு இறைவராகிய சோமசுந்தரக்கடவுளும், புலன்கொள் நாவலர் போல் - (இசை நூலில்) உணர்வு மிக்க புலவர் போல, அலங்கும் ஆரமோடு - அசைகின்ற முத்துமாலையோடு, அங்கதம் ஆதிபல் கலன்கள் தாங்கி - தோளணி முதலிய பல அணிகளைத்தரித்து, கலைஞர் குழாத்திடைவந்து வைகினர் - புலவர் குழுவின் நடுவில் வந்து தங்கினர்.

அலங்குதல் - அசைதல்; ஒளி விடுதலுமாம். நாவலர்போல் - நாவலருள் ஒருவர் போல். (நடக)

---

(பா - ம்.) *கற்பு மிக்கெழு. †பொற்புமிக்குள.

அந்த வேத்தவை தன்னி லருங்கலம்
வந்த வேய்த்தடந் தோளிசை மாதராள்
முந்த வேத்திசை பாடினள் முந்தையோர்
சிந்தை வேட்டொன் றுஞ் செப்பின ரில்லையால்.

(இ - ள்.) அந்த வேந்து அவைதன்னில் - அந்த அரசவையின்கண், அருங் கலம் வந்த - அரிய மரக்கலத்தில் வந்த, வேய்த்தடம் தோள் இசைமாதராள் - மூங் கில் போலும் பருத்ததோளையுடைய பாடினி, முந்த - முற்பட, வேத்திசை பாடினள்- அரசர்க்குரிய இசையைப் பாடினள்; முந்தையோர் - முன் கொண்டாடினவர், சிந்தை வேட்டு - மனம் விரும்பி, ஒன்றும் செப்பினர் இல்லை - யாதும் கூறாதிருந் தனர்.

வேந்து வேத்து என்றாயது. எத்திசை எனப்பிரித்து, நால்வகை வருணப் பூதரை வாழ்த்தினள் என்று கூறி,

"அந்தணர் வேள்வியோ டருமறை முற்றுக
வேந்தன் வேள்வியோ டியாண்டுபல வாழ்க
வணிக ரிருநெறி நீணிதி தழைக்க
பதினெண் கூலமும் உழவர்க்கு மிகுக
அரங்கியற் கூத்து நிரம்பிவினை முடிக
வாழ்க நெடுமுடி கூர்கவென் வாய்ச்சொலென்
றிப்படிப் பலிகொடுத் திறைவனிற் றொக்குச்
சேட்பட வமைத்துச் செழும்புகை காட்டிச்
சேவடி தேவரை யேத்திப் பூதரை
மூவடி முக்கால் வெண்பா மொழிந்து
செவியிழுக் குறாமை வேந்தனை யேத்திக்
கவியொழுக் கத்து நின்றுழி வேந்தன்
கொடுப்பன கொடுக்க வமையு மென்ப"

என்னும் சூத்திரத்தைக் காட்டுவாருமுளர். வேத்திசை என்பதில் அஃது அடங்கு தலுங் காண்க. ஆல் - அசை. (௩௨)

வீணை தோளிட னேந்திய வெண்மலர்
வாணி பாட விருக்கையின் வைகியே
யாண ரம்பெறிந் தின்னிசை யோர்ந்தெழீஇப்
பாணர் கோமகன் பன்னியும் பாடுமால்.

(இ - ள்.) வீணை தோள் இடன் ஏந்தியவெண்மலர்வாணி - யாழினை இடத் தோளிலேந்திய வெண்டாமரைமலரில் வீற்றிருக்கும் கலைமகள், பாடு அ இருக்கை யின் வைகி - பாடும் அவ்வாசனத்திலே தானும் இருந்து, யாழ் நரம்பு எறிந்து - யாழின் நரம்பினை விரலினாற்றாக்கி, இன் இசை ஓர்ந்து எழீஇ - இனிய இசையினை

ஆராய்ந்து எழுப்பி, பாணர் கோமகன் பன்னியும் பாடும் - பாணர் பெருமானாகிய பத்திரன் மனைவியும் பாடுவாளாயினள்.

பாடு அவ்விருக்கை எனப்பிரிக்க. வாணி பாடும் இருக்கையாவது ஒன்பான் விருத்தியுட் டலைக்கண் விருத்தியாகிய பதுமாசனமாகும். ஒன்பான் விருத்தியாவன-பதுமுகம், உற்கட்டிதம், ஒப்படியிருக்கை, சம்புடம், அயமுகம், சுவத்திகம், தனிப்புடம், மண்டிலம், ஏகபாதம் என்பன. யாழ் நரம்பு என்பது மருவிற்று. எழீஇ, சொல்லிசையளபெடை. ஆல், அசை. (கூக)

குடங்கை நீரும் பச்சிலையு மிடுவார்க் கிமையாக் குஞ்சரமும்
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் மதுரைப் பரமேட்டி
படங்கொள் பாயும் பூவணையுந் தருவாய் கையிற் படுதலைகொண்
டிடங்க டோறு மிரப்பாயென் றேசு வார்க்கென் பேசுவனே.

(இ - ள்.) குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்கு - அகங்கையளவான நீரையும் பசிய இலையையும் இட்டு வழிபடுவார்க்கும், இமையாக் குஞ்சரமும் - ஐராவதமும், படம் கொள் பாயும் - படத்தைக்கொண்ட அனந்த சயனமும், பூ அணையும்-தாமரை மலர்த்தவிசுமாகிய இவற்றை, மதுரைப் பரமேட்டி தருவாய் - மதுரையில் எழுந்தருளிய பெருமானே நீ அளித்தருள்வாய்; படம்கொள் பாயும் பூ அணையும் தருவாய் - (அவருக்கு) அவற்றை அருள்பவனாகிய நீயே, கையில் படுதலைகொண்டு-திருக்கரத்தில் கபாலத்தை ஏந்தி, இடங்கள்தோறும் இரப்பாய் என்று - இல்லங்கள்தோறுஞ் சென்று ஏற்பாயென்று கூறி, ஏசுவார்க்கு என் பேசுவனே-பழிக்கின்ற புறச்சமயிகளுக்கு (யான்) யாது கூறுவேன்.

தேவர்கள் இமையா நாட்டம் உடையராகலின் தேவர்க்கரசனது யானையை 'இமையாக் குஞ்சரம்' என்றார். குஞ்சரமும் பாயும் அணையும் தருவாய் என்றது இந்திரன் பதமும் திருமால் பதமும் பிரமன் பதமும் தருவாய் என்றபடி. குடங்கை நீரும் பச்சிலையும் இடுவார்க்கு அவை தருவாய் என்றது எவ்வளவு நல்குரவாளரும் இறைவனை வழிபடுதற்கு இழுக்கின்று என்பதனையும், அடியார்கள் அன்புடன் இடும் அத்துணை நீருக்கும் பச்சிலைக்குமே இறைவன் அவ்வளவு பெரிய பதங்களை யளிக்கும் பேரருளாளன் என்பதனையும், இந்திரன் மால் பிரமன் என்போரெல்லாம் அங்ஙனம் இறைவனை வழிபட்டே அப்பதவிகளை அடைந்தனராவர் என்பதனையும் காட்டுகிறது. வழிபடுவார்க்கு அத்துணைப் பெருஞ் செல்வங்களை ஈயும் நீ படுதலை கொண் டிரப்பது ஆன்மாக்களின் உடல் பொருள் ஆவிகளை யெல்லாம் ஏன்றுகொண்டு அவற்றுக்கு அருள்புரியும் காரணத்தால் என்பதனை அறியாது புறச்சமயிகள் நின்னைப் பழித்துரைப்பர். அவர்க்குக் கூறும் விடையாதுமில்லை யென்க. (கூச)

தேனார் மொழியார் விழிவழியே செல்லா தவர்க்கே வீடென்று
நானா வேதப் பொருளுரைத்தாய் நீயே மதுரை நம்பரனே
நானா வேதப் பொருளுரைத்தாய் நீயே பாதி நாரியுரு
ஆனா யென்று பிறர்பழித்தா லடியேன் விடையே தறைவேனே.

(இ - ள்.) தேன்ஆர் மொழியார் விழி வழியே செல்லாதவர்க்கே - தேனின் சுவை போலுஞ் சுவைநிரம்பிய சொற்களையுடைய மகளிரின் பார்வையால் மயங்கி அவர் பின்சென்று அலையாதவர்க்கே, வீடு என்று - வீடு பேறு உரியதென்று, நானு வேதப் பொருள் - பலவகைப்பட்ட மறைப்பொருளை விரித்து, மதுரை நம்பரனே நீயே உரைத்தாய் - மதுரையிலெழுந்தருளிய நம்பரனே நீயே கூறியருளினாய்; நானு வேதப் பொருள் உரைத்தாய் நீயே - அங்ஙனங் கூறியருளியவனாகிய நீயே, பாதி நாரி உரு ஆனாய் என்று - ஒருபாதி பெண்வடிவமாயினை என்று கூறி, பிறர்பழித்தால் - புறச்சமயிகள் ஏசினால், அடியேன் விடை எது அறைவேன் - (அவருக்கு) அடியேன் யாது விடை யிறுப்பேன்.

"அரவக லல்கு லார்பா லாசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றளவில் வேதஞ் சாற்றிய தலைவன்"

என, இப் புராணத்து நம்பியாரூரர் துதியிற் கூறியிருத்தல் இங்கு நோக்கற் பாலது. நானு - பல. மகளிராசையை நீத்தல் வேண்டுமென்று கூறிய நீயே பாதி நாரியுருவானது ஆன்மாக்களுக்குப் போகத்தை யூட்டிக் கன்மந்தொலைத்து அருள்புரிதற்கென்னும் உண்மையுணராது புறச்சமயிகள் நின்னைப் பழித்துரைப்பார்; அவர்க்குக் கூறும் விடை யாதும் இல்லை யென்க.

"தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்
பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடி
பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர்
விண்பா லியோகெய்தி வீடுவர்காண் சாழலோ"

என்னும் திருவாசகம் இங்கே சிந்திக்கற்பாலது. (௫௫)

வரத னாகி யெவ்வுயிர்க்கு மாயா விருத்தி வலியடக்கிச்
சரத மான வீட்டின்பந் தருவாய் மதுரைத் தனிமுதலே
சரத மான வீட்டின்பந் தருவாய் வீடு பெறுவார்போல்
விரத யோக நிலையடைந்தா யென்பார்க் கென்னான் விளம்புவனே.

(இ - ள்.) வரதனாகி - அருட்கொடை யுடையவனாகி, எவ்வுயிர்க்கும் மாயா விருத்திவலி அடக்கி - எல்லா வுயிர்களுக்கும் மாயாமலத்தின் தொழில் வலியை அடக்கி, சரதமான வீட்டு இன்பம் - அழியாத வீட்டின்பத்தினை, மதுரைத் தனி முதலே தருவாய் - மதுரையில் அமர்ந்தருளிய ஒப்பற்ற முழுமுதற் கடவுளே நீயே அருளுவை யாயினை; சரதமான வீட்டின்பம் தருவாய் - (அவற்றுக்கு) அவ் வின்பத்தை அருளும் நீயே, வீடுபெறுவார்போல் - வீட்டினை விரும்பி யோகுசெய்வாரைப் போல, விரத யோகநிலை அடைந்தாய் என்பார்க்கு - (அரிய) நோன்புகளையுடைய யோகநிலையை அடைந்தனை என்று பழிப்பார்க்கு, நான் என் விளம்புவன் - யான் யாது கூறுவேன்.

நீ யோகநெறியில் நிற்பது ஆன்மாக்களை யோகநெறியிற் புகுத்திப் பேரின்ப வீடு அளித்தற்கு என்னும் உண்மை புணராது புறச்சமயிகள் நின்னைப் பழித்

துரைப்பர்: அவர்க்குக் கூறும் விடையாதும் இல்லையென்க. இவ்வியல்பினரை நோக்கியே,

"போகியா யிருந்து யிர்க்குப் போகத்தைப் புரித லோரார்
யோகியா யோக முத்தி யுதவுத லதுவு மோரார்
வேகியா னாற்போற் செய்த வினையினை வீட்ட லோரார்
ஊகியா மூட ரெல்லா மும்பரி லொருவ னென்பார்"

என்பது முதலிய சிவஞான சித்தியார்த் திருவிருத்தங்கள் எழுந்தன. இம் மூன்றும் பத்திரன் மனைவியாகிய பாடினி பாடிய இசைப் பாட்டுக்களாக ஆசிரியர் பாடியன; இவை கந்தருவ மார்க்கத்தான் இடைமடக்கி வந்தன. (ருசு)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

கண்ணுதன் மதுரைப் பிரானையிவ் வாறு கருதிய பாணியாற் கனிந்து
பண்ணுதல் பரிவட் டணைமுத லிசைநூல் பகர்முதற் றொழிலிரு நான்கும்
எண்ணுறு வார்தல் வடித்திடன் முதலா மெட்டிசைக் கரணமும் பயப்ப
மண்ணவர் செவிக்கோ வானவர் செவிக்கும் வாக்கினா ணவிளை யமுதம்.

(இ - ள்.) கண் நுதல் மதுரைப்பிரானை - நெற்றியிற் கண்ணையுடைய மதுரை நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளை, இவ்வாறு கருதிய பாணியால் - இங்ஙனம் கருதிய இசைப்பாட்டினால், கனிந்து - மனங் கனிந்து, பண்ணுதல் பரிவட்டணை முதல் - பண்ணுதல் பரிவட்டணை ஆதியாக, இசைநூல் பகர்முதல் தொழில் இரு நான்கும் - இசைநூல் கூறுகின்ற முதற்றொழில் எட்டும், எண்ணுறுவார்தல் வடித்திடல் முதலாம் - எண்பொருந்திய வார்தல் வடித்திடல் முதலாகிய, எட்டு இசைக் கரணமும் பயப்ப - எட்டு இசைக்கரணங்களும் பொருந்த, நாவிளை அமுதம் - தனது நாவால் உண்டாக்கிய அமுதத்தை. மண்ணவர் செவிக்கோ - நிலவுலகோர் செவிகட்கு மட்டுமோ, வானவர் செவிக்கும் வாக்கினாள் - தேவர்கள் செவிக்கும் வார்த்தாள்.

மதுரைப்பிரானை இவ்வாறு கருதிய பாணி என்றமையால் இது பெருந் தேவபாணி என்க. முதற்றொழில் எட்டாவன - பண்ணல், பரிவட்டணை, ஆராய்தல், தைவரல், செலவு, கையூழ், விளையாட்டு, குறும்போக்கு என்பன. அவற்றுள் பண்ணலாவது இணை, கிளை, பகை, நட்பான நரம்புகள் பெயருந்தன்மை மாத்திரையறிந்து வீக்குதல். பரிவட்டணை - வீக்கின நரம்பை விரல்களால் அகமும் புறமும் கரணஞ்செய்து தடவிப்பார்த்தல். ஆராய்தல் - ஆரோகண அவரோகண வகையால் இசையைத் தெரிதல். தைவரல் - அநுசுருதியேற்றல். செலவு - ஆளத்தியிலே நிரம்பப்பாடுதல், கையூழ் - பாட நினைத்த வண்ணத்திற் சந்தத்தை விடுத்தல். விளையாட்டு - வண்ணத்திற் செய்த பாடல்களை இன்பமாகப் பாடுதல். குறும் போக்கு - குடகச் செலவும் துள்ளற் செலவும் பாடுதல். இசைக்கரணம் எட்டாவன - வார்தல், வடித்தல், உந்தல், உறழ்தல், உருட்டல், தெருட்டல், எள்ளல், பட்டடை என்பன. (ருஎ)

இடையினோ டேனைப் பிங்கலை யியக்க மிகந்துமூ லந்தொடுத் தியக்கி
நடுவுறு தொழிலாற் பிரமரந் திராந்த நடைபெற விசைக்கு முள்ளாளம்
மிடறுவீங் காள்கண் ணிமைத்திடா ளெயிறு வெளிப்படாள் புருவமே னிமிராள்
கொடிறது துடியாள் பாடலு மதுகேட் டனைவருங் குதூகல மடைந்தார்.

(இ - ள்.) இடையினோடு - இடைகலையோடு, ஏனைப்பிங்கலை இயக்கம் இகந்து - மற்றைப்பிங்கலையிலும் இயங்கும் இயக்கம் ஒழிந்து, மூலம் தொடுத்து இயக்கி - மூலாதாரத்தினின்றுங் காற்றினை எழுப்பி, நடுவுறு தொழிலால் - சுழுமுனையின் தொழிலினால், பிரமரந்திர அந்தம் நடைபெற இசைக்கும் உள்ளாளம் - பிரமரந்திரம் முடிய நடக்குமாறு இசைக்கின்ற உள்ளாளகீதத்தினை, மிடறு வீங்காள் - மிடறு வீங்காமலும், கண் இமைத்திடாள் - கண்மூடாமலும், எயிறு வெளிப்படாள் - பற்கள் வெளிப்படாமலும், புருவம் மேல் நிமிராள் - புருவங்கள் மேல் ஏறாமலும், கொடிறது துடியாள் - கபோலந் துடியாமலும், பாடலும் - பாடிய அளவில், அதுகேட்டு அனைவரும் குதூகலம் அடைந்தார் - அதனைக்கேட்டு அனைவரும் மகிழ்ச்சியடைந்தனர்.

நடுவுறு தொழில் - சுழுமுனைமார்க்கத்தில் வாயுவை இயக்கிச் செய்யும் கிரியை. உள்ளாளம் இச்செய்யுளிற் கூறிய இலக்கணத்தோடு கந்தருவராற்பாடப் படுவது.

"கண்ணிமையா கண்டந் துடியா கொடிறசையா
பண்ணளவும் வாய்தோன்றா பற்றெரியா—எண்ணிலிவை
கள்ளார் நறுந்தெரியற் கைதவனே கந்தருவர்
உள்ளாளப் பாட லுணர்"

என்பது காண்க. கொடிறது, அது பகுதிப் பொருள் விகுதி. (௫௮)

கன்னிநா டுடையான் கைதவ னெனும்பேர்க் காரணந் தேற்றுவா னெனத்தான்
இன்னிசை யறிஞ னாகியு முன்போ லியம்புவா னொருப்படு கின்றான்
முன்னவ னருளாற் றன்மனக் கோட்ட முரண்கெடப் பொதுமையா னோக்கி
இன்னவ டானே வென்றன ளென்றா னினையவா றனைவரு மொழிந்தார்.

(இ - ள்.) கன்னிநாடு உடையான் - கன்னி நாட்டினையுடைய பாண்டியன், கைதவன் எனும் பேர்க்காரணம் தேற்றுவான் போல - கைதவன் என்னும் தனது பெயரின் காரணத்தை அறிவிப்பவனைப் போல, தான் இன் இசை அறிஞன் ஆகியும் - தான் இனிய இசைநூல் அறிஞனாயிருந்தும், முன்போல் இயம்புவான் ஒருப்படுகின்றான் - முன்போலவே கூறுதற்கு மனந்துணிகின்றவன், முன்னவன் அருளால் - சோமசுந்தரக் கடவுளின் திருவருளால், தன் மனக் கோட்ட முரண்கெட - தனது மனக்கோணலின் வலி கெட, பொதுமையால் நோக்கி - நடுநிலையோடு பார்த்து, இன்னவள் தானே வென்றனள் என்றான் - இந்தப்பாடினியே வென்றனள் என்று கூறினான்; இனைய வாறு அனைவரும் மொழிந்தார் - இங்ஙனமே எல்லாருங் கூறினர்.

பாண்டிவேந்தரைக் குறிக்கும் கைதவன் என்னும் பெயர்க்கு வஞ்சகன் என்னும் பொருளுண்டாகலின் அப் பொருள்பற்றியே அப்பெயர் உண்டாயிற்றென்று தெளிவிப்பான்போல நடுநிலை திறம்பிக்கூற ஒருப்படுகின்றவன் என்றார். (௩௬)

கரியுரை மொழிந்த கைதவ னிலங்கைக் கைதவப் பாடினி கழுத்திற்
புரிகுழன் மாதை யிருத்தென விருத்தும் போதுமை யிடங்கரந் திருந்த
அரியநா வலரீ தற்புத மீதற் புதமென வறைந்தவை காண
விரிகதிர் மின்போன் மறைந்தனர் யாரும் வியந்தனர் பயந்தனன் வேந்தன்.

(இ - ள்.) கரி உரைமொழிந்த கைதவன் - சான்றுமொழி பகர்ந்த பாண்டியன், கைதவ இலங்கைப் பாடினி கழுத்தில் - வஞ்சக ஒழுக்கமுடைய ஈழப் பாடினி கழுத்தில், புரிகுழல் மாதை இருத்து என - கட்டமைந்த கூந்தலையுடைய பாடினியை இருத்துக என்று ஏவ, இருத்தும்போது - (ஏவல் மகளிர் அங்ஙனமே) இருத்துங்காலையில், உமை இடம் கரந்து இருந்த - உமாதேவியார் பொருந்திய இடப்பாகத்தை மறைத்து வந்திருந்த, அரிய நாவலர் - அரிய புலவராகிய சோமசுந்தரக்கடவுள், ஈது அற்புதம் ஈது அற்புதம் என அறைந்து - இது வியப்பு வியப்பு என்று கூறியருளி, அவைகாண - அவையிலுள்ளோர் அனைவருங் காண, விரிகதிர்மின்போல் மறைந்தனர்-விரிந்த ஒளியினையுடைய மின்னலைப்போல மறைந்தனர்; யாரும் வியந்தனர் - யாவரும் வியப்புற்றனர்; வேந்தன் பயந்தனன் - அரசன் அச்சமெய்தினன்.

அடுக்கு உவகையின் கண் வந்தது. (சய)

செங்கணே றழக ராடலீ தென்றே யாவருந் தெளிந்தன ரேத்தி
அங்கணா யகர்தங் கருணையின் றிறனு மடியவ ரன்பையுந் தூக்கித்
தங்கணா ரருவி பெருகவா னந்தத் தனிப்பெருஞ் சலதியி லாழ்ந்தார்
வங்கமேல் வந்தாள் பிடர்மிசை யிருந்த மாணிழை விறலியை மன்னன்.

(இ - ள்.) யாவரும் - அனைவரும், ஈது செங்கண் ஏறு அழகர் ஆடல் என்று தெளிந்தனர் - இது சிவந்தகண்களையுடைய இடபத்தின்மேல் இவர்ந்தருளும் சோமசுந்தரக்கடவுளின் திருவிளையாடலென்று அறிந்து, ஏத்தி - துதித்து, அங்கண் நாயகர் தம்கருணையின் திறனும் - அருட்பார்வையினையுடைய இறைவரது திருவருளின் திறத்தையும், அடியவர் அன்பையும் தூக்கி - அடியாரின் அன்பையும் சீர்தூக்கி, தம் கண் ஆர் அருவி பெருக - தமது கண்களினின்றும் நிறைந்த ஆனந்தவருவி பெருக்கெடுக்க, ஆனந்தத்தனிப் பெருஞ் சலதியில் ஆழ்ந்தார் - இன்பமாகிய ஒப்பற்ற பெரிய கடலுள் அமிழ்ந்தனர்; வங்கமேல் வந்தாள் பிடர்மிசை இருந்த - மரக்கலத்தில் வந்த ஈழப்பாடினியின் தோளின்மேல் ஏறியிருந்த, மாண் இழைவிறலியை - மாட்சிமையுடைய அணிகளை யணிந்த பாடினியை, மன்னன் - அரசன்.

ஏற்றழகர் எனற்பாலது தொக்குநின்றது. தெளிந்தனர், முற்றெச்சம். வந்தாள், வினைப்பெயர். (சக)

இறக்குவித் தவட்கு முந்தமுத் தார மெரிமணிக் கலன் றுகில் வரிசை
பெறக்கொடுத் தேனை யவட்குமுண் மகிழ்ச்சி பெறச்சில வரிசைதந் தவையிற்
சிறக்கவந் தொருங்கு வைகிவா னிழிந்த தெய்வதக் கோயில்புக் கிருந்த
அறக்கொடி யிடஞ்சேர் பெரும்புல வோர்க்கு மருங்கல ஞதிக ணல்கா.

(இ - ள்.) இறக்குவித்து - இறக்கி, அவட்கு - அப்பாடினிக்கு, முந்த - முற்பட, முத்து ஆரம் - முத்துமாலைகளையும், எரிமணிக்கலன் - நெருப்புப் போன்ற மணிகளழுத்திய கலன்களையும், துகில் - ஆடைகளையும், வரிசைபெறக் கொடுத்து - வரிசையாகக் கொடுத்து, ஏனையவட்கும் - மற்றை ஈழப்பாடினிக்கும், உள் மகிழ்ச்சி பெறச் சில வரிசை தந்து - உள்ளம் மகிழச் சிலவரிசைகளை அளித்து, அவையில் சிறக்க வந்து ஒருங்குவைகி - அவையின் கண் மேன்மையுற வந்து அனைவரோடும் ஒருங்கு எழுந்தருளியிருந்து, வான் இழிந்த தெய்வதக்கோயில் புக்கு இருந்த - விண்ணினின்றும் இறங்கிய தெய்வவிமானத்தின்கண் புகுந்து இருந்த, அறக்கொடி இடம்சேர் - தரும வல்லியாகிய இறைவியை இடப்பாதியிற் கொண்ட, பெரும்புலவோர்க்கும் - பெரும்புலவராகிய சோமசுந்தரக் கடவுளுக்கும், அருங்கலன் ஆதிகள் நல்கா - அரிய அணிகலன் முதலியவைகளை அளித்து.

ஈழப்பாடினி தோற்றவளாயினும் தன்னுல் வருவிக்கப்பட்டவ ளாதலால் அவட்கும் வரிசை தந்தனன் என்க. அவையில் வந்து ஒருங்கு வைகிப் பின் கோயில் புக்கிருந்த புலவோர் என்க. (௬௨)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

மன்னவர் வலிக ளெல்லாந் தெய்வத்தின் வலிமுன் னில்லா
அன்னமா தெய்வஞ் செய்யும் வலியெலா மரண்மூன் றட்ட
முன்னவன் வலிமுன் னில்லா வெனப்பலர் மொழிவ தெல்லாம்
இன்னபாண் மகளிற் காணப் பட்டதென் றிறும்பூ தெய்தா.

(இ - ள்.) மன்னவர் வலிகள் எல்லாம் - அரசருடைய வலிமையெல்லாம், தெய்வத்தின் வலிமுன் நில்லா - தெய்வத்தின் வலிமை முன் நில்லா; அன்னமா தெய்வம் செய்யும் வலிஎலாம் - அப்பெரிய தெய்வங்கள் செய்யும் வலிமுழுதும், அரண்மூன்று அட்ட முன்னவன் வலிமுன் நில்லா - மூன்று புரங்களையும் அழித்த இறைவன் வலிமுன் நில்லாவாம்; எனப் பலர் மொழிவது எல்லாம் - என்று ஆன்றோர் பலரும் கூறுவதெல்லாம், இன்னபாண்மகளின் காணப்பட்டது என்று - இந்தப் பாடினி வாயிலாகக் காணப்பட்டதென்று, இறும்பூது எய்தா - வியப்புற்று.

மொழிவதெல்லாம், ஒருமைப் பன்மை மயக்கம். பாண்மகளின் - பாடினி வாயிலால். (௬௩)

மின்னியல் சடையி னானை விடைகொடு வலஞ்செய் தேகி
இன்னிய மியக்கஞ் செய்ய வெழில்கொடன் கோயி லெய்தித்
தொன்னிதி பெற்றான் போலச் சுகுணபாண் டியனைப் பெற்று
மன்னிய மகிழ்ச்சி வீங்க வைகினா னிராச ராசன்.

(இ - ள்.) இராசராசன் - இராசராச பாண்டியன், மின் இயல் சடையினானை - மின்போன்ற சடையையுடைய சோமசுந்தரக் கடவுளை, வலஞ்செய்து - வலம்வந்து, விடைகொடு ஏகி - அப்பெருமானிடம் விடைபெற்றுச் சென்று, இன் இயம் இயக்கம் செய்ய - இனிய வாத்தியங்கள் ஒலிக்க, எழில்கொள் தன் கோயில் எய்தி - அழகிய தனது மாளிகையை அடைந்து, தொல்நிதி பெற்றான்போல - சேமநிதி பெற்றவனைப்போல, சுகுண பாண்டியனைப் பெற்று - சுகுண பாண்டியன் என்னும் மைந்தனைப் பெற்று, மன்னிய மகிழ்ச்சி வீங்க வைகினான் - நிலைபெற்ற மகிழ்ச்சி மிக இருந்தனன்.

இயக்கஞ் செய்ய - ஒலிக்க. (சுச)

ஆகச் செய்யுள் - உககஉ

### நாற்பத்தைந்தாவது

# பன்றிக்குட்டிக்கு முலைகொடுத்தபடலம்

---

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

இருளைக்கந் தரத்தில் வைத்தோன் றன்னிடத் தென்று மன்பின்
தெருளைத்தந் தவட்கு மாறுந் தெரிவையை யிசையால் வெல்ல
அருளைத்தந் தளித்த வண்ண மறைந்தனந் தாயாய்ப் பன்றிக்
குருளைக்கு முலைதந் தாவி கொடுத்தவா றெடுத்துச் சொல்வாம்.

(இ - ள்.) இருளைக் கந்தரத்தில் வைத்தோன் - நஞ்சினைத் தனது திருமிடற்றின்கண் வைத்தருளிய சோமசுந்தரக்கடவுள், தன்னிடத்து என்றும் அன்பின் தெருளைத் தந்தவட்கு - எஞ்ஞான்றும் தன்னிடத்தில் உண்மை யன்பினை வைத்த பாடினிக்கு, மாறுஆம் தெரிவையை - அவள் பகையாகிய ஈழப் பாடினியை, இசையால் வெல்ல - இசையினால் வெல்லுமாறு, அருளைத் தந்து அளித்தவண்ணம் அறைந்தனம் - திருவருளைத் தந்து ஆண்டருளிய திருவிளையாடலைக் கூறினேம்; தாயாய் - இனி (அப்பெருமானே) தாய்ப்பன்றியாய் வந்து, பன்றிக்குருளைக்கு முலைதந்து ஆவிகொடுத்தவாறு - பன்றிக்குட்டிகளுக்கு முலைகொடுத்து உயிரைப் புரந்த திருவிளையாடலை, எடுத்துச் சொல்வாம் - எடுத்துக் கூறுவோம்.

அன்பின் தெருள் - தெளிந்த அன்பு; உண்மை யன்பு. குருளை - குட்டி;

> "நாயே பன்றி புலிமுயல் நான்கும்
> ஆயுங் காலைக் குருளை யென்ப"

என்பது தொல்காப்பியம். (க)

முறையென விமையோர் வேண்ட முளைத்தநஞ் சயின்று சான்றாய்
உறையென மிடற்றில் வைத்த வும்பரான் மதுரைக் காரந்
திறையென வெறிநீர் வையைத் தெற்கது குருவி ருந்த
துறையென வுளதோர் செல்வத் தொன்மணி மாட மூதூர்.

(இ - ள்.) இமையோர் முறையென வேண்ட - தேவர்கள் முறையோ வென்று குறையிரக்க, முளைத்த நஞ்சு அயின்று - கடலிலே தோன்றிய நஞ்சினை உண்டு, சான்றாய் உறை என - சான்றாக நீ இங்கே தங்குவாய் என்று, மிடற்றில் வைத்த உம்பரான் - அதனைத் திருமிடற்றின்கண் வைத்தருளிய சிவலோகநாதன் எழுந்தருளிய, மதுரைக்குத்திறை என ஆரம் எறி - மதுரைப்பதிக்குத் திறையாக முத்துக்களை வீசும், நீர் - நீரினையுடைய, வையைத் தெற்கது - வையையாற்றின்

தெற்கிலே, ஓர் செல்வம் தொல்மணி மாடமூதூர் - ஒரு செல்வமிக்க பழைய அழகிய மாடங்கள் நிறைந்த பெரிய ஊர், குருவிருந்த துறை என உளது - குருவிருந்த துறை என்னும் பெயருடன் உள்ளது.

இமையோர் முறையிட்டமையை

"நஞ்சமஞ்சி, ஆவவெந்தாயென் றவிதாவிடு நம்மவரவரே"

எனத் திருவாதவூரடிகள் அருளிச்செய்தலுங் காண்க. சான்ருய் - சிவபெருமானே பரமபதி என்பதற்குச் சான்ருய். (உ)

தருநாத ளுதி வானோர் தங்குரு விருந்து நோற்பக்
குருநாத னெனப்பேர் பெற்றுக் கோதிலா வரந்தந் தேற்றில்
வருநாதன் சித்தி ரத்தேர் வலவளு ருடனே கஞ்சத்
திருநாதன் பரவ வைகி யிருக்குமச் சிறந்த வூரில்.

(இ - ள்.) தருநாதன் ஆதிவானோர்தம் குரு - கற்பகத்தருவின் தலைவனுகிய இந்திரன் முதலிய தேவர்களின் குரவனுகிய வியாழன், இருந்து நோற்ப - தங்கியிருந்து தவம் புரிதலால், குருநாதன் எனப்பேர் பெற்று - குருநாதன் என்னுந் திருநாமம் பெற்று, கோது இலாவரம் தந்து - குற்றமில்லாத வரங்களை அருளி, ஏற்றில் வரு நாதன் - இடபவூர்தியில் வரும் இறைவன், சித்திரத் தேர்வலவனுருடனே - விசித்திரமாகிய தமது தேரைச் செலுத்தும் பாகனுகிய பிரமனுடன், கஞ்சத் திருநாதன் பரவ - தாமரை மலரில் வீற்றிருக்கும் இலக்குமிக்கு நாயகனுகிய திருமால் போற்ற, வைகி இருக்கும் - எழுந்தருளியிருப்பன்; அச்சிறந்த ஊரில் - அத்தகைய சிறந்த பதியிலே.

நோற்றல் - சிவபிரானைக் குறித்துத்தவஞ்செய்தல். சித்திரத்தேர் - திரிபுரங்களை அழித்தற்கு எழுந்தருளுதற் பொருட்டுத் தேவர்களால் இயற்றப்பட்ட தேர். கஞ்சத்திரு - இலக்குமி. (ங)

சுகலனென் ருெருவே ளாள னவன்மனை சுகலை யென்பாள்
இகலருங் கற்பி னுள்பன் னிருமகப் பெற்ருள் செல்வப்
புகலருஞ் செருக்கா லன்ன புதல்வரைக் கடியா ராகி
அகலருங் களிப்பு மீதூ ரன்பினுல் வளர்க்கு நாளில்.

(இ - ள்.) சுகலன் என்று ஒருவேளாளன் - சுகலன் எனப் பெயரிய ஒரு வேளாளன் (உளன்); அவன்மனை சுகலை என்பாள் - அவன் மனைவி சுகலை என்று சொல்லப்படுவாள்; இகல் அருங்கற்பினுள் - மாறுபாடில்லாத கற்பினையுடைய அவள், பன்னிரு மகப்பெற்ருள் - பன்னிரண்டு பிள்ளைகளைப் பெற்ருள்; செல்வப் புகல் அருஞ்செருக்கால் - செல்வத்தாலாகிய சொல்லுதற்கரிய செருக்கினுல், அன்ன புதல்வரைக் கடியாராகி - அந்தப் பிள்ளைகளைக் குற்றங்கண்டவழி ஒறுக்காதவர்களாய், அகல் அருங்களிப்பு மீதூர் அன்பினுல் - நீங்காத களிப்பு மிக்க அன்போடு, வளர்க்கு நாளில் - வளர்த்துவரும் பொழுது.

ஒரு வேளாளன் உளன் என வருவித்து முடிக்க. செல்வச் செருக்கால் என்க. கடியாராகி - குற்றங் கண்டுழி ஒறுத்து நல்வழிப் படுத்தாராகி. (௪)

தந்தையுந் தாயு மாயத் தறுகண்மிக் குடைய ராகி
மைந்தரும் வேட ரோடு கூடிவெங் கானில் வந்து
வெந்தொழில் வேட்டஞ் செய்வார் வெயில்புகாப் புதற்கீ ழெய்தி
ஐந்தவித் திருந்து நோற்குங் குரவனை யங்குக் கண்டார்.

(இ - ள்.) தந்தையும் தாயும்மாய - தம் அப்பனும் அன்னையும் இறந்தொழிய, மைந்தரும் - அப்புதல்வர்களும், தறுகண்மிக்கு உடையராகி - வன்கண்மை மிகவும் உடையராய், வேடரோடுகூடி வெங்கானில்வந்து - வேடர்களோடு கூடிக் கொடிய காட்டில்வந்து, வெந்தொழில் வேட்டம் செய்வார் - கொடுந் தொழிலாகிய வேட்டையாடுவோர், வெயில் புகாப்புதல் கீழ் எய்தி - வெய்யில் புகாத புதலின் கீழ்ச்சென்று, ஐந்து அவித்து இருந்து நோற்கும் - ஐம்புலன்களையும் வென்று தியானத்திலிருந்து நோற்கின்ற, குரவனை அங்கு கண்டார் - வியாழபகவனை அங்கே கண்டனர்.

ஐந்து, ஐம்புலனுக்கு ஆகுபெயர். எய்தி இருந்து நோற்கும் குரவனை வேட்டஞ் செய்வார் அங்குக் கண்டார் என்க. (௫)

கைத்தலம் புடைத்து நக்குக் கல்லும்வெம் பரலும் வாரி
மெய்த்தவன் மெய்யிற் றாக்க வீசினார் வினையை வெல்லும்
உத்தமன் வீக்கஞ் செய்தார் தவத்தினுக் குவரென் றுன்னிச்
சித்தநொந் தினைய வஞ்சத் தீயரைச் செயிர்த்து நோக்கா.

(இ - ள்.) கைத்தலம் புடைத்துநக்கு - இரண்டு கைகளையும் ஒன்றோடொன்று தாக்கி நகைத்து, கல்லும் வெம்பரலும் வாரி - கற்களையும் கொடிய பருக்கைகளையும் அள்ளி, மெய்த்தவன் மெய்யில் தாக்க - உண்மைத் தவத்தினையுடைய வியாழனது உடம்பிலே தாக்குமாறு, வீசினார் - எறிந்தார்கள்; இனையவஞ்சத் தீயரை - இந்த வஞ்சக் கொடியோரை, வினையை வெல்லும் உத்தமன் - வினையைப் புறங்காணும் அவ்வுத்தமன், உவர்தவத்தினுக்கு வீக்கம் செய்தார் என்று உன்னி - இவர் நமது தவத்திற்கு இடையூறு செய்தனரே என நினைந்து, சித்தம் நொந்து - மனம்நொந்து, செயிர்த்து நோக்கா - சினந்துநோக்கி.

வீக்கம் - அழிவு; வீ என்பதன் அடியாகப் பிறந்தது; விக்கம் எனப்பாடங் கொண்டு விக்நம் என்பதன் சிதைவு என்பாருமுளர். உவர் - இவர். (௬)

தொழுந்தொழின் மறந்து வேடத் தொழிலுவந் துழல்வீர் நீர்மண்
உழுந்தொழி லுடைய நீராற் பன்றியி னுதரத் தெய்திக்
கொழுந்தழ லனையவேனக் குருளையாய்த் தந்தை தாயை
இழந்தல முறுமி னென்று விட்டனன் கடிய சாபம்.

---

(பா - ம்.) விக்கம்.

(இ - ள்.) தொழும் தொழில் மறந்து - (பெரியாரைக்காணின்) வணங்குங் கடப்பாட்டினை மறந்து, வேடத்தொழில் உவந்து உழல்வீர் - வேடர்களின் தொழிலை விரும்பி உழல்கின்றீர், நீர்மண் உழுந்தொழில் உடைய நீரால் - நீர் நிலத்தினை உழுதலாகிய தொழிலையுடைய தன்மையால், பன்றியின் உதரத்து எய்தி - பன்றியின் கருப்பத்திலுற்று, கொழுந்தழல் அனைய - கொழுவிய நெருப்பினை ஒத்த (சினத்தினையுடைய), ஏனக் குருளையாய் - பன்றிக் குட்டிகளாய்த் தோன்றி, தந்தை தாயை இழந்து அலமுறுமின் என்று - தந்தையையுந் தாயையும் இழந்து துன்ப மெய்துவீராக என்று, கடிய சாபம் இட்டனன் - கொடிய சாப மிட்டனன்.

உழல்வீர், விளி, உழுங்குலத்திற் பிறந்து அத்தொழிலைக் கைவிட்டுக் கொடுமைசெய் துழலும் நீர் நிலத்தை உழுமியல்புடைய பன்றிக் குருளைகளாகப் பிறப்பீர் என்றான் என்க. அலமுறுமின் - துன்பம் எய்துமின் ; அலம் - துன்பம். (எ)

பாவத்தை யனைய மைந்தர் பன்னிரு பேரு மஞ்சிச்
சாவத்தை யேற்றெப் போது தணிவதிச் சாப மென்ன
ஆவத்தை யகற்று மீச னருட்கழ னினைந்து வந்த
கோவத்தை முனிவு செய்தக் கடவுளர் குரவன் கூறும்.

(இ - ள்.) பாவத்தை அனைய மைந்தர் பன்னிருபேரும் - பாவமே உருவெடுத்தாற் போன்ற மைந்தர் பன்னிருவரும், அஞ்சி - பயந்து, சாவத்தை ஏற்று - சாபத்தினை ஏற்று, இச்சாபம் தணிவது எப்போது என்ன - இந்தச் சாபம் நீங்குவது எப்பொழுது என்று வேண்டி வினவ, அக்கடவுளர் குரவன் - தேவகுருவாகிய அவ்வியாழன், வந்த கோவத்தை முனிவுசெய்து - தனக்கு வந்த சினத்தினை வெறுத்து, ஆவத்தை அகற்றும் ஈசன் அருள் கழல் நினைந்து கூறும் - (உயிர்களுக்கு நேர்ந்த) இடையூற்றினை நீக்கும் இறைவனது அருளுருவாகிய திருவடியைச் சிந்தித்துக் கூறுவான்.

சாபம் முதலியவற்றிலே பகரம் வகரமாய்த் திரிந்து நின்றது. சினத்தினைச் சினந்தான் என்க. (அ)

என்னையா ளுடையகூட லேகநா யகனே யுங்கட்
கன்னையாய் முலைதந் தாவி யளித்துமே லமைச்ச ராக்கிப்
பின்னையா னந்தவீடு தருமெனப் பெண்ணோர் பாகன்
தன்னையா தரித்தோன் சொன்னான் பன்னிரு தனயர் தாமும்.

(இ - ள்.) என்னை ஆள் உடைய கூடல் ஏக நாயகனே - என்னை ஆளாகவுடைய கூடலம்பதியில் எழுந்தருளிய தனித் தலைவனாகிய சோமசுந்தரக் கடவுளே, உங்கட்கு அன்னையாய் முலைதந்து ஆவி அளித்து - உங்களுக்குத் தாயாய் வந்து முலைகொடுத்து உயிரைப் புரந்து, மேல் - பின், அமைச்சர் ஆக்கி - பாண்டியனுக்கு அமைச்சர்களாகச் செய்தருளி, பின்னை - அதன்பின், ஆனந்த வீடுதரும் என - பேரின்ப வீட்டினையும் அருளுவான் என்று, பெண் ஓர் பாகன் தன்னை ஆதரித்

தோன் சொன்னான் - உமையை ஒரு பாகத்திலுடைய அவ்விறைவனைப் பேணிவழி படும் குரவன் கூறினான் ; பன்னிரு தனயர்தாமும் - (பின்) பன்னிரு மைந்தர்களும்.

தொன்மைசால் குருவி ருந்த துறையதன் புறத்த வான
பன்மைசால் கான வாழ்க்கைப் பன்றிகட் கரசாய் வைகுந்
தன்மைசா றனியே னத்தின் றன்பெடை வயிற்றிற் சென்று
வன்மைசால் குருளை யாகிப் பிறந்தனர் வழக்கான் மன்னோ.

(இ - ள்.) தொன்மைசால் குருவிருந்த துறையதன் புறத்தவான - பழமை மிக்க குருவிருந்த துறையின் புறத்தில் உள்ளனவாகிய, பன்மைசால் கான வாழ்க் கைப் பன்றிகட்கு - பலவாகிய காட்டில் வாழுதலையுடைய பன்றிகளுக்கு, அரசாய் வைகும் தன்மைசால் - வேந்தாயிருக்கும் தன்மையுடைய, தனி ஏனத்தின் - ஒப் பற்ற பன்றியின், பெடை வயிற்றில்சென்று - பெண்ணின் வயிற்றிற் சென்று, வழக் கால் - சாப நெறியாலே, வன்மைசால் குருளையாகிப் பிறந்தனர் - வலிமை மிக்க குட்டிகளாய்ப் பிறந்தனர்.

ஏனத்தின் பெடை என்பதனை இலேசாற் கொள்க. துறையது, அது பகு திப் பொருள்விகுதி. தன் : சாரியை. மன், ஓ அசைகள். (ய)

ஆனநா ளொருநா ளெல்லை யரசருக் கரசனான
மீனவன் மதுரை நீங்கி மேற்றிசைக் கான நோக்கி
மானமா வேட்டஞ் செய்வான் மத்தமா வுகைத்துத் தண்டாச்
சேனை* தன் புறம்பே மொய்ப்பச் செல்கின்றான் செல்லு மெல்லை.

(இ - ள்.) ஆனநாள் - இவ்வாறான காலையில், ஒருநாள் எல்லை - ஒருநாளள வில், அரசருக்கு அரசனான மீனவன் —மன்னர்களுக்கு மன்னனாகிய இராச ராச பாண்டியன், மதுரைநீங்கி - மதுரையைவிட்டு, மேல்திசைக்கானம் நோக்கி - மேற் குத் திக்கிலுள்ள காட்டினை நோக்கி, மானம்மா வேட்டம் செய்வான் - பெரிய விலங்குகளை வேட்டையாடுதற் பொருட்டு, மத்தமா உகைத்து - மதமயக்கத்தை யுடைய யானையைச் செலுத்தி, தண்டாச் சேனை தன்புறம்பே மொய்ப்பச் செல் கின்றான் - நீங்காத தானைகள் தன்மருங்கிற் சூழப்போகின்றான் ; செல்லும் எல்லை - அங்ஙனம் போகும்போது.

இராச ராச பாண்டியன் என்பார் 'அரசருக் கரசனான மீனவன்' என்றார் எனலுமாம். மானம் - பெருமை. (கக)

மாவழங் கிடங்க டேர வல்லதோல் வன்கா லொற்றர்
பாவடிச் சுவடு பற்றிப் படர்ந்துநா றழல்பு லால்வாய்த்
தீவிழி யுழுவை யேனந் திரிமருப் பிரலை புல்வாய்
மேவிட னறிந்து வல்லே விரைந்துவந் தெதிரே சொன்னார்.

(பா - ம்.) * தண்டார்ச்சேனை.

(இ - ள்.) மா வழங்கு இடங்கள் தேரவல்ல - விலங்குகள் பயிலும் இடங்களை ஆராய்ந்து அறியவல்ல, தோல்வன்கால் ஒற்றர் - தொடுதோலணிந்த வலிய காலையுடைய ஒற்றர்கள், பா அடிச் சுவடுபற்றிப் படர்ந்து - (விலங்குகளின்) பரந்த அடிச்சுவட்டினைப் பின்பற்றிச் சென்று, நாறு அழல்புலால் வாய்த்தீவிழி உழுவை - தோன்றும் சினத்தீயினையும் புலால் நாறும் வாயினையும் நெருப்புப்போன்ற கண்களையுமுடைய புலிகளும், எனம் - பன்றிகளும், திரிமருப்பு இரலை - திருகிய கொம்புகளையுடைய கலைமானும், புல்வாய் - மானினங்களும், மேவு இடன் அறிந்து - தங்கிய இடங்களை அறிந்து, வல்லே விரைந்து வந்து எதிரே சொன்னார்-மிக விரைந்து வந்து மன்னனெதிரே நின்று புகன்றனர். (௧உ)

மறத்துறை வேட்ட மாக்கள் வல்லைபோ யொடியெ றிந்து
புறத்துவார் வலைகள் போக்கி நாயதன் புறம்பு போர்ப்ப
நிறைத்துமா வொதுக்கி நீட்டும் படைஞராய்ச் *சூழ்ந்து நிற்ப
அறத்துறை மாறாக் கோலா னானைமேல் கொண்டு நிற்ப.

(இ - ள்.) மறத்துறைவேட்டமாக்கள் - கொலை நெறிபயின்ற வேட்டையாடுதல் வல்லார், வல்லைபோய் - விரைந்து சென்று, ஒடியெறிந்து - காடுகளை வெட்டிச் சரித்து, புறத்துவார் வலைகள்போக்கி - புறம்பே நெடிய வலைகளைக் கட்டி, நாய் அதன் புறம்பு போர்ப்ப நிறைத்து - நாய்கள் அவ்வலையின் புறம்பு சூழ்ந்து நிற்குமாறு அவற்றை நிறைத்து, மா ஒதுக்கி நீட்டும் படைஞராய்ச் சூழ்ந்துநிற்ப - விலங்குகளை ஒருவழிப்படுத்தி அவற்றின்மேல் விடும் படைகளையுடையராய்ச் சுற்றிலும் நிற்கவும், அறத்துறைமாறாக் கோலான் - அறநெறியினின்றும் மாறாத செங்கோலையுடைய பாண்டியன், ஆனைமேல் கொண்டுநிற்ப - யானைமேலேறி ஒருபால் நிற்கவும்.

ஒடியெறிதல் - காடுவெட்டிச் சரித்தல். (௧௩)

சில்லரித் துடி†கோ டெங்குஞ் செவிடுறச் சிலையா நிற்பப்
பல்வகைப் பார்வை காட்டிப் பயில்விளி யிசையா நிற்ப‡
வல்லிய மிரலை மையன் மானினம் வெருளா நிற்ப
வில்லிற வலித்து வாங்கி மீளிவெங் கணைக டூர்த்தார்.

(இ - ள்.) சில் அரித்துடி - சில்லென அரித்தெழும் ஓசையை யுடைய உடுக்கைகளும், கோடு - கொம்புகளும், எங்கும் செவிடுறச் சிலையாநிற்ப - எவ்விடத்தும் செவிடுபடுமாறு ஒலியா நிற்கவும், பல்வகைப் பார்வைகாட்டி - பலவகையான பார்வை விலங்குகளைக் காட்டி, பயில்விளி இசையாநிற்ப - அவ்விலங்குகள் பயின்ற அழைப்பொலியை ஒலியா நிற்கவும், வல்லியம் இரலை மையல் மான் இனம் வெருளா நிற்ப - புலிகளும் மான்களும் மதமயக்கத்தை யுடைய யானைக் கூட்டங்களும் அஞ்சுமாறு, வில் இற வலித்து வாங்கி - வில் முறியுமாறு வலிபெற வளைத்து, மீளிவெங் கணைகள் தூர்த்தார் - வலிய கொடிய கணைகளைப் பொழிந்தனர்.

(பா - ம்.) * ஈட்டும் படைஞராய். †சில்லரிதுடி. ‡இசையா நிற்பர்.

சில்லரிதுடி எனப் பாடங்கொண்டு, சில்லரியாவது ஒலிக்கும் ஒருவகைப் பறையென்பாரும் உளர். பார்வை - விலங்குகளைப் பிடித்தற்கு வளர்க்கப்பட்ட இனமாகிய விலங்குகள். பயில் விளி - அவை பயின்ற அழைப்பொலி. மையல் மான்-யானை. நன்கு வளைத்து என்பார் "வில்லிற வலித்து வாங்கி" என்றார். (௧௪)

[எழுசீரடியாசிரியவிருத்தம்]

செறிந்த மான்மு றிந்த தாள்சி தைந்த சென்னி செம்புனற்
பறிந்த வாறு வெண்ணி ணம்ப ரிந்து வீசு கையிறு
மறிந்த வேழு யர்ந்த வேழ மாண்ட வெண்கு வல்லியம்
பிறிந்த வாவி யோடும் வாய்பி ளந்த வாய்வி ழுந்தவே.

(இ - ள்.) செறிந்தமான் - நெருங்கிய மான்கள், தாள்முறிந்த - (சில) கால் முறிந்தன; சென்னி சிதைந்த - (சில) தலை சிதைந்தன; செம்புனல் ஆறு பறிந்த - குருதி ஆறு ஓடியது; ஏழ் உயர்ந்த வேழம் - எழுமுழம் உயர்ந்த யானைகள், வீசுகை இறு - வீசுகின்ற துதிக்கை அற்று, வெண்ணிணம் பரிந்து - வெள்ளிய நிணம் சிந்தி, மறிந்த மாண்ட - (செல்நெறி) தடைப்பட்டு மடிந்தன; எண்கு வல்லியம் - கரடிகளும் புலிகளும், பிறிந்த ஆவியோடும் - நீங்கின உயிரோடும், வாய் பிளந்தவாய் விழுந்த - வாய் பிளந்தனவாகி விழுந்தன.

பறிந்தது என்பது துவ்வீறு தொக்கது. செம்புனல் ஆறு பறிந்ததென்க. யானை எழுமுழம் உயர்ந்திருத்தல் உத்தம இலக்கணம். வேழம் மறிந்தன எண்கு மாண்டன வல்லியம் விழுந்தன என்றுரைத்தலுமாம். (௧௫)

தொட்ட புற்கி ழங்கு வாடை தொடவி ரைந்து கண்ணியுட்
பட்ட வும்பொ றித்து வைத்த பார்வை வீழ்ந்த டுத்தவுங்
கட்டி யிட்ட வலைபி ழைத்து ஞமலி கௌவ நின்றவும்
மட்டி லாத வொட்டி நின்ற மள்ளர் வேலின் மாய்ந்தவே.

(இ - ள்.) தொட்ட புல்கிழங்குவாடை தொட - தோண்டிய புல்லின் மணமும் கிழங்கின் மணமும் வீச, விரைந்து கண்ணியுள்பட்டவும் - விரைந்து சென்று வலையுட்பட்டனவும், பொறித்து வைத்த பார்வை வீழ்ந்து அடுத்தவும் - செய்து வைத்த பார்வை விலங்கினை விரும்பிவந்து பொருந்தியனவும், கட்டி இட்ட வலை பிழைத்து - கட்டிவைத்த வலையினின்றுந் தப்பி, ஞமலி கௌவநின்றவும் - நாய்கள் கௌவ நின்றனவுமாகிய, மட்டிலாத - அளவிறந்த விலங்குகள், ஒட்டிநின்ற மள்ளர் வேலின் மாய்ந்தவே - கிட்டிநின்ற வீரர்களின் வேற்படையால் மாய்ந்தன.

கண்ணியின் நடுவே புல்லும் கிழங்கும் தோண்டி வைத்திருக்க அவற்றின் மணத்தால் ஈர்க்கப்பட்டுவந்து கண்ணியுட் பட்டன என்க. பொறித்து வைத்த பார்வை - பார்வை விலங்குகளாக இயற்றிவைத்த உருக்கள். பட்ட, அடுத்த, நின்ற என்பன வினையாலணையும் பெயர்கள். மட்டிலாத வேலின் என இயைத்தலுமாம். மாய்ந்த, அன்பெறாத பலவின்பால் முற்று. (௧௬)

பட்ட மாவொ ழிந்து நின்ற மறவி லங்கு பல்சில
வட்ட மாவ ளைந்து டுத்த வலையி னுந்தி யப்புறத்
தெட்டி நின்ற கொலைஞர்மே லெதிர்ந்து மீள்வ வெயில் வளைந்
தொட்டி னரை மலையு மாப்பொ றிக்க ணங்க ளொத்தவே.

(இ - ள்.) பட்டமா ஒழிந்துநின்ற - இறந்தொழிந்த விலங்குகள் நீங்க இறவாது நின்ற, மறவிலங்கு பல்சில - பலவும் சிலவுமாய கொடிய விலங்குகள், வட்டமா வளைந்து உடுத்த - வட்டமாக வளைந்து சூழ்ந்த, வலையின் உந்தி - வலையினின்றுந் தாவி, அப்புறத்து எட்டிநின்ற - புறத்தே அடுத்துநின்ற, கொலைஞர்மேல் எதிர்ந்துமீள்வ - வேட்டுவமாக்கள் மீது பாய்ந்து மீள்வன, எயில் வளைந்து - மதிலைச் சூழ்ந்து, ஒட்டினரை - எதிர்த்த பகைவரை, மலையும் - பொராநிற்கும், மாப்பொறிக் கணங்கள் ஒத்த - பொறிகளாகிய விலங்குக் கூட்டங்களை ஒத்தன.

ஒழிந்து - ஒழிய ; எச்சத்திரிபு. மாப்பொறி - விலங்குப்பொறி. (கஎ)

வல்லி யந்து ளைத்த கன்று மான்று ளைத்த கன்றுவெங்
கல்லி யங்கு மெண்கி னைத்து ளைத்த கன்று கயவுவாய்
வெள்ளி பந்து ளைத்து மள்ளர் விட்ட வாளி யிங்ஙனஞ்
சொல்லி னுங்க டிந்து போய்த்து ணித்த மாவ ளப்பில.

(இ - ள்.) மள்ளர்விட்ட வாளி - வீரர்விட்ட வாளிகள், சொல்லினும் கடிந்துபோய் - முனிவரின் சாப மொழியினும் விரைந்து சென்று, வல்லியம் துளைத்து அகன்று - புலிகளைத் துளைத்துருவியும், மான் துளைத்து அகன்று - மான்களைத் துளைத்துருவியும், வெங்கல் இயங்கும் எண்கினைத் துளைத்து அகன்று - வெப்பமமைந்த மலைகளில் இயங்கும் கரடிகளைத் துளைத் துருவியும், கயவுவாய் வெல்இபம் துளைத்து - பெரிய வாயினையுடைய வெற்றி பொருந்திய யானைகளைத் துளைத்தும், இங்ஙனம் துணித்தமா அளப்பில - இவ்வாறு துண்டித்த விலங்குகள் அளவிறந்தன.

கயவு - பெருமை ;

" தடவும் கயவும் நளிவும் பெருமை "

என்பது தொல்காப்பியம். சொல் - முனிவரின் சாபமொழி ; அஃது அக்கணத்தே விரைந்து சென்று தாக்குதலின் உவமமாயிற்று ;

"சொல்லொக்குங் கடிய வேகச் சுடுசரம்"

எனக் கம்பநாடர் கூறுதலுங் காண்க. (கஅ)

மடுத்த வாளி யிற்பி ழைத்து வலையை முட்டி யப்புறத்
தடுத்த மானை வௌவி நாய லைத்து நின்ற வாதிநாள்
உடுத்த பாச வலையி னின்று முய்கு வாரை யொய்யெனத்
தடுத்த வாவி ளைத்து நின்ற தைய லாரை யொத்தவே.

(இ - ள்.) மடுத்த வாளியில் பிழைத்து - பாய்ந்த வாளிகளினின்றுந் தப்பி, வலையை முட்டி அப்புறத்து அடுத்தமானை - வலையைமோதி அப்புறஞ்சென்ற மான்களை, வௌவி அலைத்துநின்ற நாய் - கௌவி வருத்தி நின்றனவாகிய நாய்கள், ஆதிநாள் உடுத்த பாசவலையினின்றும் உய்குவாரை - முன்னளிலே சூழ்ந்த பாசமாகிய வலையினின்றும் தப்பிப் பிழைத்துச் செல்லும் பெரியோரை, ஒய்யெனத் தடுத்து - விரைந்து தடுத்து, அவா விளைத்து நின்ற - ஆசையை விளைத்துநின்ற, தையலாரை ஒத்தவே - பெண்களை ஒத்தன.

அலைத்து நின்ற நாய் என மாறுக. ஆதிநாள் என்றது அனாதி காலமாக என்றபடி. ஒய்யென, விரைவுக் குறிப்பு.

"பலதுறைகளின் வெருவரலொடு பயில்வலையற நுழைமா
உலமொடுபடர் வனதகையுற வுறுசினமொடு கவர்நாய்
நிலவியவிரு வினைவலையிடை நிலைசுழல்பவர் நெறிசேர்
புலனுறுமன னிடைதடைசெய்த பொறிகளினள வுளவே"

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுளோடு இஃது ஒப்புநோக்கற்பாலது.(கக)

மதியை நேர்வ கிர்ந்து கௌவி யனைய வான்ம ருப்புவெங்
கதிய வேழ மீது தாது காலு நீல முகையினீள்*
நுதிய வேனு ழைந்த செம்பு ணூழில் வீழு முதிரநீர்
முதிய கான வரையின் மீது மொய்த்த தீயை யொத்தவே.

(இ - ள்.) மதியை நேர் வகிர்ந்து கௌவியனைய - சந்திரனை இருகூறாகப் பிளந்து கௌவினாற்போன்ற, வான்மருப்பு வெம்கதிய வேழம்மீது - வெள்ளியமருப்பினையும் வெய்ய நடையையுமுடைய யானையின்மேல், தாதுகாலும் நீலமுகையின் - மகரந்தஞ் சிந்தும் நீலோற்பலத்தின் அரும்புபோல (நஞ்சூசிய), நீள்நுதிய வேல் நுழைந்த - நீண்ட முனையையுடைய வேற்படை ஊடுருவியதாலாகிய, செம்புண் ணூழில் வீழும் உதிரநீர் - பசும் புண்ணின் தொளையினின்று பொழியுங் குருதிநீர், முதிய கான வரையின்மீது - முற்றிய மரங்களையுடைய காடு அடர்ந்த மலையின் மேல், மொய்த்த தீயை ஒத்த - சூழ்ந்த நெருப்பினை ஒத்தது.

கதிய, நுதிய, முதிய என்பன குறிப்புப் பெயரெச்சங்கள். நுழைந்த, காரணப்பொருளில் வந்த பெயரெச்சம். ணூழில் - துளை. ஒத்தது, துவ்வீறு தொக்கது; குருதிகள் ஒத்தன எனலுமாம்;

"வீழ்தரு மொண்குருதி
கார்த்திகைச் சாற்றிற் கழிவிளக்குப் போன்றவே"

என்னும் களவழிச் செய்யுள் இங்கு நோக்கற்பாலது. (உ0)

---

* (பா - ம்.) *முகையினின்.

மள்ள ரோசை துடியி னோசை வயிரி னோசை வாளிபோய்த்
தள்ள வீழ்வி லங்கி னோசை தப்பி யோடு மானின்மேற்
றுள்ளு நாய்கு ரைக்கு மோசை கானமூடு தொக்குவான்
உள்ளு லாயு டன்றொ லிக்கு முருமி னோசை புரையுமால்.

(இ - ள்.) மள்ளர் ஓசை - வீரர்களின் ஆர்ப்பொலியும், துடியின் ஓசை - உடுக்கையின் ஒலியும் வயிரின் ஓசை - ஊதுகொம்பின் ஒலியும், வாளிபோய்த் தள்ள வீழ் விலங்கின் ஓசை - வாளிகள் சென்று தைத்து வீழ்த்தலால் வீழ்கின்ற விலங்கு களின் ஒலியும், தப்பி ஓடும் மானின்மேல் - வலையைத் தப்பியோடும் மான்களின் மேல், துள்ளும் நாய் குரைக்கும் ஓசை - தாவுகின்ற நாய்கள் குரைக்கின்ற ஒலியும், கானம் ஊடு தொக்கு - காட்டின்கண் ஒரு சேரத்திரண்டு, வானுள் உலாய் உடன்று ஒலிக்கும் உருமின் ஓசை புரையும் - வானின்கண் உலாவி வெகுண்டு ஒலிக்கும் இடியோசையினை ஒக்கும்.

எண்ணும்மைகள் விரிக்க. ஆல், அசை. (உக)

இன்ன வேறு பல்வி லங்கெ லாம லைத்தி லங்குவேல்
மன்ன ரேறு தென்னர் கோம கன்கு டக்கி னேகுவான்
அன்ன போதொ ரேன மேன வரசி ருக்கு மடவிவாய்
முன்ன ரோடி வந்து நின்று வந்த செய்தி மொழியுமால்.

(இ - ள்.) இன்ன பல்வேறு விலங்கு எலாம் அலைத்து - இங்ஙனம் பலவேறு வகையான விலங்குகளை யெல்லாம் வருத்தி, மன்னர் ஏறு - அரசருள் ஏறுபோன்ற, இலங்கு வேல் தென்னர் கோமகன் - விளங்குகின்ற வேற்படை யேந்திய பாண்டியர் கோமான், குடக்கின் ஏகுவான் - மேற்றிசை நோக்கிச் செல்வானாயினன்; அன்ன போது - அதுபோது, ஓர் ஏனம் - ஒரு பன்றி, ஏன அரசு இருக்கும் அடவிவாய் - பன்றி யரசன் இருக்குங் காட்டின்கண், முன்னர் ஓடி வந்து நின்று - முற்பட்டு ஓடி வந்து நின்று, வந்த செய்தி மொழியும் - தான் வந்த செய்தியைக் கூறும்.

ஆல், அசை. (உஉ)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

எங்களுக் கரசே கேட்டி யிங்குள விருக மெல்லாந்
திங்களுக் கரசன் கொன்று வருகின்றா னென்று செப்ப
வெங்களிப் படைந்து பன்றி வேந்தனு மடுபோ ராற்றச்
சங்கையுற் றெழுந்து போவான் றன்னுயிர்ப் பெடையை நோக்கா.

(இ - ள்.) எங்களுக்கு அரசே கேட்டி-எங்களுக்கு அரசனே கேட்பாயாக, இங்கு உள விருகம் எல்லாம் - இங்குள்ள விலங்குகளனைத்தையும், திங்களுக்கு அரசன் கொன்று வருகின்றான் என்று செப்ப - சந்திர மரபிற்கு மன்னனாகிய பாண்டியன் கொன்று வாராநின்றான் என்று சொல்ல, பன்றி வேந்தனும் - அப்பன்றி யரச

னும், வெங்களிப்பு அடைந்து-மிக்க களிப்பெய்தி, அடுபோர் ஆற்றச் சங்கையுற்று - கொல்லுதலையுடைய போர் புரிய எண்ணி, எழுந்து போவான் - எழுந்து செல்பவன், தன் உயிர்ப் பெடையை நோக்கா - தனது உயிர் போன்ற பெண் பன்றியைப் பார்த்து.

கேட்டி, ட் எழுத்துப்பேறு; இ எதிர்கால விகுதி. விருகம்-விலங்கு. திங்கள் மரபிற்றோன்றிய அரசனைத் திங்களுக்கரசன் என்றார். வெம்மை மிகுதி மேற்று. போர் பெற்றமை கருதிக்களிப்படைந்தது என்க. சங்கையுற்று-எண்ணங்கொண்டு. வேந்தன் என்பதற் கேற்பப் போவான் என்றார். (உ௩)

இன்றுபாண் டியனை நேரிட் டிருஞ்சம ராடி வென்று
வன்றிறல் வாகை யோடு வருகுவ னேயோ வன்றிப்
பொன்றுவ னேயோ நீயுன் புதல்வரைப் பாது காத்து
நன்றிவ ணிருத்தி யென்ன நங்கைப்பே டின்ன கூறும்.

(இ - ள்.) இன்று பாண்டியனை நேரிட்டு - இன்று பாண்டியனை எதிர்த்து, இருஞ்சமர் ஆடி வென்று - பெரிய போர் புரிந்து வென்று, வன்திறல் வாகையோடு வருகுவனேயோ - மிக்க வலியாற்பெற்ற வெற்றி மாலையுடன் வருவேனோ, அன்றிப் பொன்றுவனேயோ - அல்லாமல் இறந்து படுவேனோ (அறியேன்); நீ உன் புதல்வரைப் பாதுகாத்து நன்று இவண் இருத்தி என்ன - நீ உன் புதல்வர்களை நன்றாகப் பேணி இங்கு இருப்பாயாக என்று கூற, நங்கைப் பேடு இன்ன கூறும் - பெண் பன்றி இங்ஙனங் கூறா நிற்கும்.

வன்றிறல், ஒருபொரு ளிருசொல். (உ௪)

ஆவியங் கேக விந்த வாகமிங் கிருப்ப தேயிப்
பாவியோ மேனா ளிந்தப் பறழினை வகுத்த தெய்வம்
மாவம ராடி வென்று வருதியேல் வருவே னன்றி
நீவிளிந் திடத்து மாய்வே னிழலுக்குஞ் செயல்வே றுண்டோ.

(இ - ள்.) ஆவி அங்கு ஏக இந்த ஆகம் இங்கு இருப்பதே - உயிர் அங்குச் செல்ல இந்த உடல் இங்கு இருப்பது வழக்காமோ, மேல் நாள் - முன்னாளில், இந்தப்பறழினை வகுத்த தெய்வம் இப்பாவியோ - இந்தக்குட்டிகளை வகுத்த தெய்வம் இந்தப் பாவியோ, (அதுவேறு ஆகலின் யானும் வந்து) மாஅமர் ஆடி வென்று வருதியேல் வருவேன் - நீ பெருஞ்சமர் புரிந்து வெற்றி பெற்று வருவாயேல் உடன் மீளுவேன்; அன்றி - அல்லாமல், நீ விளிந்த இடத்து மாய்வேன்-நீ இறந்து படுவாயேல் அவ்விடத்திலேயே யானும் இறந்தொழிவேன்; நிழலுக்கும் செயல் வேறு உண்டோ- உடம்பின் நிழலுக்கு அவ்வுடம்பைத் தொடர்ந்து செல்வதன்றி வேறு செயலும் உள்ளதோ.

எனக்கு நின்னையன்றி வேறு உயிரில்லை யாகலின் யான் நின்னைப் பிரிந்து வாழ்தல் கூடாதென்பாள் 'ஆவியங் கேக இந்த வாக மிங்கிருப்பதே' என்றாள். ஏகா

ரம் எதிர்மறைப் பொருட்டு. இக்குட்டிகளை இங்ஙனம் விதித்த தெய்வம் வேறுண்டாகலின் அதுவே அவற்றைப் புரக்க வல்லதன்றி யான் அல்லேன் என்பாள் 'இப் பாவியோ மேனாள் இந்தப் பறழினை வகுத்த தெய்வம்' என்றாளென்க. விளிவையேல் விளிந்த விடத்து என விரிக்க. விளிந்த என்பதன் அகரம் தொக்கது. (உரு)

> போதுக மெழுக வென்னாப் பொருக்கென வெழுந்து நீலத்
> தாதுற ழேனப் பாட்டி தன்புடை தழுவிச் செல்லும்
> பேதுறு பறழை நூக்கிப் பின்றொடர்ந் தணைந்து செல்லக்
> காதெயிற் றெறுழி வேந்தன் காலென நடந்தா னன்றே.

(இ - ள்.) போதுகம் எழுக என்னா - (ஆகலின்) செல்வோம் எழுக என்று கூறி, பொருக்கென எழுந்து - விரைந்து எழுந்து, நீலத்தாது உறழ்பாட்டி ஏனம்- இரும்பினை யொத்த நிறத்தினையுடைய பெண் பன்றி, தன்புடை தழுவிச்செல்லும்- தனது மருங்கில் தழுவி வாராநின்ற, பேதுறு பறழை நூக்கி - மன மயங்குதற்கேதுவாகிய குட்டிகளைத்தள்ளி, பின் தொடர்ந்து அணைந்து செல்ல - பின் பற்றி நெருங்கிச் செல்லாநிற்க, காது எயிற்று எறுழி வேந்தன் கால் என நடந்தான் - கொல்லுகின்ற பற்களையுடைய பன்றியரசன் காற்றைப் போல விரைந்து சென்றான்.

பொருக்கென, விரைவுக்குறிப்பு. நீலத்தாது - நீலோற்பலத்தின் மகரந்தமுமாம். பாட்டி என்பது பெண்பன்றியைக்குறிக்கும் மரபுப்பெயர் ;

"பாட்டி என்பது பன்றியும் நாயும்"

என்பது தொல்காப்பியம். பேதுறு - மருளுகின்ற என்றுமாம். அன்று, ஏ அசைகள். (உசு)

> பல்வகைச் சாதி யுள்ள பன்றியின் கணங்க ளெல்லாம்
> வெல்படைத் தறுகட் சேனை வீரராய் முன்பு செல்லச்
> செல்லெனத் தெழித்துச் செங்கட் டீயுக மான மென்னும்
> மல்லல்வாம் புரவி மேல்கொண் டெழுந்தனன் வராக வீரன்.

(இ - ள்.) பல்வகைச் சாதி உள்ள - பலவேறு சாதியான, பன்றியின் கணங்கள் எல்லாம் - பன்றிக்கூட்டங்கள் அனைத்தும், வெல்படைத் தறுகண் சேனைவீரராய் முன்பு செல்ல - வெல்லும் படைக் கலமும் அஞ்சாமையுமுடைய படைவீரராய் முன்னே செல்லாநிற்க, வராகவீரன் - பன்றிவீரன், செல் எனத் தெழித்து - இடிபோல ஒலித்து, செங்கண் தீ உக - சிவந்த கண்களினின்றுஞ் சினத்தீ சிந்த, மானம் என்னும் மல்லல்வாம் புரவிமேல் கொண்டு எழுந்தனன் - மானமென்கின்ற வலிய தாவுங்குதிரைமேலேறிப் போருக்கு எழுந்தனன்.

மானமானது ஈர்க்கச் சென்றமையின் அதனைப் புரவியாக உருவகித்தார். (உஎ)

முற்படு தூசி யாக நடக்கின்ற முரட்காற் பன்றி
மற்படு சேனை நேரே வருகின்ற மன்னர் மன்னன்
வெற்படு தடந்தோள் வன்றாள் வீரர்மேற் சீறிச் செல்லப்
பிற்பட வொதுங்கி வீரர் பெய்தன ரப்பு மாரி.

(இ - ள்.) முற்படுதூசியாக நடக்கின்ற - முன்னணியாக நடக்கின்ற, முரண் கால் பன்றி மல்படுசேனை - முருட்டுக்கால்களையுடைய பன்றியாகிய வலி மிக்கபடை, நேரே வருகின்ற மன்னர் மன்னன் - எதிரே வருகின்ற வேந்தர் வேந்தனாகியபாண்டியனது, வெற்பு அடு தடந்தோள் வன் தாள் வீரர்மேல் - மலையைப் பொருது வென்ற பெரிய தோள்களையும் வலியதாள்களையுமுடைய வீரர்கள்மேல், சீறிச்செல்ல - சினந்து செல்ல, வீரர் பிற்பட ஒதுங்கி - அவ்வீரர்கள் பின்னே ஒதுங்கி நின்று, அப்பு மாரிபெய்தனர் - அம்பு மழையினைப் பொழிந்தனர்.

தூசி - முன்னே செல்லும் படை. நடக்கின்ற சேனை வீரர்மேற்செல்ல அவர் அப்புமாரி பெய்தனர் என்க. அப்பு, அம்பு என்பதன் வலித்தல். (உஅ)

சொரிந்தன சோரி வெள்ளஞ் சொரிந்தன வீழ்ந்த யாக்கை
சரிந்தன குடர்க ளென்பு தகர்ந்தன வழும்பு மூளை
பரிந்தன சேனங் காகம் படர்ந்தன வுயிரு மெய்யும்
பிரிந்தன வேன நின்ற பிறைமருப் பேன வீரர்.

(இ - ள்.) சோரி சொரிந்தன வெள்ளம் சொரிந்தன - குருதிகள் பொழிந்து வெள்ளமாகப் பெருகின; யாக்கைவீழ்ந்த - உடல்கள் வீழ்ந்தன; குடர்கள் சரிந்தன - குடர்கள் சரிந்தன; என்புதகர்ந்தன - எலும்புகள் முறிந்தன; வழும்பு மூளை பரிந்தன - வழும்பும் மூளையும் அற்றன; சேனம் காகம் படர்ந்தன - பருந்துங்காகமும் பரவின; ஏனம் உயிரும் மெய்யும் பிரிந்தன - பன்றிகள் (இங்ஙனம்) உயிர்வேறு உடல் வேறாகப் பிரிந்தன; நின்ற பிறைமருப்பு ஏன வீரர் - பிழைத்து நின்ற பிறைபோலும் கோட்டினையுடைய பன்றிவீரர்.

பின்னுள்ள சொரிந்தன என்பது பெருகின என்னும் பொருட்டு. வீரர் என்பது வருஞ்செய்யுளில் உள்ள சிதைத்தனர் முதலிய வினைகளைக்கொள்ளும். (உக)

பதைத்தன ரெரியிற் சீறிப் பஞ்சவன் படைமேற் பாய்ந்து
சிதைத்தனர் சிலரைத் தள்ளிச் செம்புனல் வாயிற் சோர
உதைத்தனர் சிலரை வீட்டி யுரம்புதை படக்கோ டூன்றி
வதைத்தனர் சிலரை நேரே வகிர்ந்தனர் சிலரை மாதோ.

(இ - ள்.) எரியில் சீறிப்பதைத்தனர் - நெருப்பைப் போலச் சினந்து உடல் பதைத்து, பஞ்சவன் படைமேல் பாய்ந்து சிலரைச் சிதைத்தனர் - பாண்டியன் படைமீதுபாய்ந்து சிலரைச்சிதைத்தார்கள்; சிலரைத்தள்ளி - சிலரைக்கீழே தள்ளி, வாயில் செம்புனல் சோர உதைத்தனர்-அவர் வாயினின்றும் குருதிபொழியு

மாறு உதைத்தார்கள்; சிலரைவீட்டி - சிலரை வீழ்த்தி, உரம்புதைபடக்கோடு ஊன்றி, வதைத்தனர் - அவர்மார்பிற் புதையுமாறு கொம்பினை அழுத்திக்கொன்றார்கள்; சிலரை நேரேவகிர்ந்தனர் - சிலர் உடலைச் சரிபாதியாகக் கிழித்தார்கள்.

பதைத்தனர், முற்றெச்சம். மாது, ஓ அசைகள். (ருய)

தாள்சிதைந் தாருஞ் சில்லோர் தலைசிதைந் தாருஞ் சில்லோர்
தோள்சிதைந் தாருஞ் சில்லோர் தொடைசிதைந் தாருஞ் சில்லோர்
வாள்சிதைந் தாருஞ் சில்லோர் வரையறுத் தலரோன் றீட்டும்
நாள்சிதைந் தாருஞ் சில்லோர் நராதிபன் சேனை வீரர்.

(இ - ள்.) நர அதிபன் சேனைவீரர் - பாண்டிவேந்தனுடைய படைவீரர்களில், தாள் சிதைந்தாரும் சில்லோர் - கால்முறிந்தவர்களுஞ் சிலர்; தலை சிதைந்தாரும் சில்லோர் - தலையுடைந்தவருஞ்சிலர்; தோள் சிதைந்தாரும் சில்லோர் - தோள் முறிந்தவருஞ்சிலர்; தொடை சிதைந்தாரும் சில்லோர் - தொடை நொறுங்கினவருஞ்சிலர்; வாள் சிதைந்தாரும் சில்லோர் - வாட்படை அற்றாருஞ் சிலர்; அலரோன் வரையறுத்துத்தீட்டும் நாள் சிதைந்தாரும் சில்லோர் - பிரமன் வரையறுத்து எழுதிய வாழ்நாள் உலந்தாருஞ் சிலர்.

நராதிபன் - மனிதர்களுக்குத் தலைவன்; அரசன். (ருக)

கண்டனர் கன்னி நாடு காவல னமைச்சர் சீற்றங்
கொண்டனர் முசல நேமி கூற்றென வீசி யார்த்தார்
விண்டனர் மாண்டார் சேனை வீரரு மனைய வெல்லைப்
புண்டவ ழெயிற்று வேந்தைப் புடைநின்ற பேடை நோக்கா.

(இ - ள்.) கன்னிநாடுகாவலன் அமைச்சர்கண்டனர் - கன்னிநாட்டினைக் காவல் செய்யும் பாண்டி மன்னனது அமைச்சர் இதனைக்கண்டு, சீற்றம் கொண்டனர் - சினங்கொண்டு, கூற்றுஎன - கூற்றுவனைப்போல, முசலம் நேமி வீசி ஆர்த்தனர் - இருப்புலக்கைகளையும் திகிரிகளையும் எறிந்து ஆரவாரித்தனர்; சேனைவீரரும் விண்டனர் மாண்டார் - (அவற்றால்) படைவீரரனைவரும் உயிர் விண்டு மாண்டனர், அனைய எல்லை - அப்பொழுது, புண்தவழ் எயிற்று வேந்தை - (பகைவரின்) புலாலில் உலாவும் பற்களையுடைய பன்றிவேந்தனை, புடைநின்றபேடை நோக்கா - பக்கத்தில் நின்ற பெண் பன்றி பார்த்து.

கண்டனர், கொண்டனர், விண்டனர் என்பன முற்றெச்சங்கள். புண் தவழ் - தசை பொருந்திய என்றுமாம். எயிறு - பன்றிக்கோடு. (ருஉ)

ஏவிய சேனை யெல்லா மிறந்தன வினிநாஞ் செய்யல்
ஆவதென் வாளா நாமு மழிவதிங் கென்னை நப்பிப்
போவதே கரும மென்று புகன்றதத் துணையை நோக்கிச்
சாவதை யஞ்சா வேனத் தனியரச னொன்று சாற்றும்.

(இ - ள்.) ஏவிய சேனை எல்லாம் இறந்தன - ஏவிய படை முழுதும் மாண்டன; இனி நாம் செய்யலாவது என் - இனி நாம் செய்யக்கடவது என்னை, நாமும் வாளா இங்கு அழிவது என்னை - நாமும் கொன்னே இங்கு மடிவது என் கருதி, தப்பிப்போவதே கருமம் என்று புகன்றது - உயிர்தப்பி ஓடிப்போவதே நமக்குரிய செயலாகும் என்று கூறியது; சாவதை அஞ்சா ஏனத்தனி அரசு - இறப்பினை அஞ்சாத ஒப்பற்ற பன்றியரசு, அத்துணையை நோக்கி ஒன்று சாற்றும் - அங்ஙனங் கூறிய மனைவியை நோக்கி ஒன்று கூறுநிற்கும்.

ஏவிய - ஏவப்பட்ட; செயப்பாட்டு வினைப்பொருளில் வந்த செய்வினை. அழிவது என்னை - அழிதலாற் பயன்யாது. சாவது - சாதல்; தொழிற்பெயர். (௩௩)

நுண்ணறி வுடைய ராகி நூலொடு பழகி னாலும்
பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத் தாத லாலுன்
கண்ணறி வுடைமைக் கேற்ற காரிய முரைத்தாய் மானம்
எண்ணறி வுடையோர்க் கெல்லா மிழுக்குடைத் தன்றோ வீதால்.

(இ - ள்.) நுண் அறிவு உடையராகி - நுண்ணிய அறிவினையுடையராய், நூலொடு பழகினாலும் - பல நூல்களோடு பண்டுப்பழகினும், பெண் அறிவு என்பது எல்லாம் பேதைமைத்து - பெண்ணறிவு என்று சொல்லப்படுவதெல்லாம் பேதைமையையுடையது; ஆதலால் - ஆதலினால், உன்கண் அறிவுடைமைக்கு ஏற்ற காரியம் உரைத்தாய் - உன்னிடத்துள்ள அறிவுடைமைக்குப் பொருந்திய கருமத்தைக்கூறினாய்; மானம் எண் அறிவு உடையோர்க்கு எல்லாம் - மானத்தைப்பொருளாகக்கருதும் அறிவுடையோர் அனைவர்க்கும், ஈது இழுக்கு உடைத்து அன்றோ - இது குற்றமுடையதல்லவா,

"நுண்ணறி வுடையோர் நூலொடு பழகினும்
பெண்ணறி வென்பது பெரும்பே தைமைத்தே"

என்பது தொன்மொழி. என்பதெல்லாம், ஒருமைப்பன்மை மயக்கம்; "உள்ளுவதெல்லாம்" என்புழிப்போல. உன்கண் அறிவுடைமைக்கு ஏற்ற - உனக்கு இயல்பாகிய பேதைமையறிவுக்கேற்ற. ஈது - போரிற் புறங்காட்டுதலாகிய இச்செயல், ஆல், அசை. (௩௪)

தூங்கிருள் வறுவாய்ச் சிங்க மிரண்டுறை துறையின் மாடோர்
வாங்கிரு மருப்புக் கேழல் வந்துநீர் பருகி மீளும்
வீங்கிரு ளுடற்கா ரேன மொன்றுறை துறையில் வீரந்
தாங்கிரு மடங்க லீர்க்குத் தலைப்பட வஞ்சு மன்றே.

(இ - ள்.) இருள் தூங்கு வறுவாய்ச்சிங்கம் இரண்டு - இருள் தங்கிய வறிய வாயையுடைய இரண்டு சிங்கங்கள், உறை துறையின் மாடு - உறைகின்ற நீர்த்துறையின் கண், வாங்கு இருமருப்பு ஓர் கேழல் - வளைந்த இரண்டு கொம்புகளையுடைய ஒரு பன்றி, வந்து நீர்பருகி மீளும் - அஞ்சாது வந்து நீர் குடித்துச்செல்லும்; வீங்கு

இருள் உடல் கார்எனம் ஒன்று உறை - செறிந்த இருள் போன்ற கரிய உடலை யுடைய ஒரு பன்றி உறையும், துறையில் - நீர்த்துறையின் கண், வீரம் தாங்கு இரு மடங்கல் - வீரத்தை அணியாகத்தாங்கிய இரண்டு சிங்கங்கள், நீர்க்குத்தலைப்பட அஞ்சும் - நீர்பருகுதற்கு வர அஞ்சாநிற்கும்.

முழை போலும் வாயென்பார் 'தூங்கிருள் வாய்' என்றார். வறுவாய் - உணவு பெறுதிருக்கும் வாய். வீங்கிருள் போலும் காருடல் என்க. இருசிங்கம் உறையுந் துறையில் ஓர் கேழல் அஞ்சாது வந்து பருகி ஏதமின்றி மீளும்; ஓர் ஏனம் உறையுந் துறையில் இருசிங்கம் தலைப்படவும் அஞ்சும் எனத் தன் குலத்திற்குரிய வீரத்தையும் வெற்றியையும் எடுத்துக் காட்டிற்று. அன்று, ஏ அசைகள். (ருடு)

அத்திட மரபின் வந்து பிறந்துளே னாத லாலே
கைத்திடு தாரான் வீரங் கவர்ந்திசை திசையும் வானும்
வைத்திட வல்லே னன்றி மடிந்திட வல்லே னாகிற்
பொய்த்திடு முடம்பே யன்றிப் புகழுடம் பழிவ துண்டோ.

(இ - ள்.) அ திடம் மரபின் வந்து பிறந்துளேன் - யான் அத்தகைய வீரம் வாய்ந்த குடியில் (மேலைத்தவத்தால்) வந்து பிறந்தேன்; ஆதலாலே - ஆகையால், கைத்திடுதாரான் வீரம் கவர்ந்து - கைப்பினையுடைய வேப்பமலர் மாலையையணிந்த இப்பாண்டியனுடைய வீரத்தைக் கொள்ளை கொண்டு, இசை திசையும் வானும் வைத்திடவல்லேன் - எனது புகழை எட்டுத்திக்குகளிலும் விண்ணுலகினும் நாட்டு தற்கு வல்லனாவேன்; அன்றி - அங்ஙனஞ் செய்யாது, மடிந்திடவல்லேனாகில் - புறங் கொடாது மடியவல்லேனானால், பொய்த்திடும் உடம்பே அன்றி - என்றும் அழியுந் தன்மையையுடைய இப்பூதவுடம்பு அழிவதேயன்றி, புகழ் உடம்பு அழிவது உண்டோ - புகழுடம்பும் அழிவதுண்டோ (இல்லை யென்றபடி.)

கைக்கும் பூவாலாகிய மாலையைக் கைக்கும்மாலை என்றார். பொய்த்திடும் உடம்பு - நிலைபெறாத உடம்பு; என்றேனும் அழியும் உடம்பு. புகழ் உடம்பு - புகழாகிய உடம்பு. ஓகாரம் எதிர் மறைப் பொருட்டு. (ருசு)

[கலிநிலைத்துறை.]

நீநில் லெனத்தன் பெடைதன்னை நிறுத்தி நீத்தென்
கானில் லெனவாழ் கருமாவின் கணங்க ளெல்லாம்
ஊனில் லுயிருண் டனமென்றினி யோடல் கூடற்
கோனில் லெனவார்ப் பவன்போலக் கொதித்து நேர்ந்தான்.

(இ - ள்.) நீ நில் என - அஞ்சுகின்ற நீ நிற்கக் கடவை என்றுகூறி, தன் பெடைதன்னை நிறுத்தி - தனது பெண்பன்றியை நிறுத்தி, நீத்து - அதனின் நீங்கி, என் கான் இல் எனவாழ் - எனது காட்டினை இல்லமாகக் கொண்டுவாழ்ந்த, கரு மாவின் கணங்கள் எல்லாம் - பன்றிக் கூட்டங்கள் முழுதையும், ஊனில் உயிர் உண்டனம் என்று இனி ஓடல் - உடம்பிலுள்ள உயிரைக் கவர்ந்தனம் என்று

மகிழ்ந்து இனி ஓடற்க; கூடற்கோன் நில் என ஆர்ப்பவன்போல - கூடற்றலை வணங்கிய பாண்டியனே நிற்பாயாக என்று கூறி ஆரவாரிப்பவனைப்போல, கொதித்து நேர்ந்தான் - வெகுண்டு எதிர்ந்தான்.

கருமா - பன்றி. கணங்களெல்லாவற்றையும் என இரண்டனுருபுவிரித்து, உயிருண்டனம் என்பதை ஒரு சொல்லாக்கி முடிக்க. ஊனில், இடைப்பிறவரல், ஓடல், அல் எதிர்மறைக்கண்வந்தது; "மகனெனல்" என்புழிப்போல. கோன். விளி. (௩௭)

நிலத்தைக் கிளைத்துப் பிலங்காட்டி நிமிர்ந்த தூள்வான்
தலத்தைப் புதைப்பத் தனியேன வரவு நோக்கி
வலத்தைப் புகழ்ந்தான் வியந்தான் சிலைவாங்கி வாளிக்
குலத்தைச் சொரிந்தான் பொருநைத்துறைக் கொற்கை வேந்தன்.

(இ - ள்.) நிலத்தைக் கிளைத்துப் பிலம் காட்டி - நிலத்தைக்கீறிப் பாதலத்தைக் காண்பித்து, நிமிர்ந்ததூள் - மேலெழுந்த புழுதிப்படலம், வான் தலத்தைப் புதைப்ப - விண்ணுலகினை மறைக்க (வருகின்ற), தனி ஏனவரவு - ஒப்பில்லாத பன்றியின் வருகையை, பொருநைத்துறைக் கொற்கை வேந்தன் நோக்கி-பொருநை யாற்றின் துறையையும் கொற்கைப் பதியையும் உடைய பாண்டி வேந்தன் கண்டு, வலத்தைப் புகழ்ந்தான் வியந்தான் - அதன் வீரத்தைப் புகழ்ந்து பாராட்டி, சிலைவாங்கி - வில்லைவளைத்து, வாளிக்குலத்தைச் சொரிந்தான் - அம்புக் கூட்டத்தைச் சொரிந்தான்.

புதைப்ப வருகின்ற ஏனவரவு எனவிரித்துரைக்க. புகழ்ந்தான், வியந்தான் என்பன முற்றெச்சங்கள். குலம் - கூட்டம். (௩௮)

குறித்துச் செழியன் விடுவாளியைக் கோல வேந்தன்
பறித்துச் சிலவாளியை வாய்கொடு பைம்பு லென்னக்
கறித்துச் சிலவாளியைக் கால்கொடு தேய்த்துத் தேய்த்து
முறித்துச் சிலவாளியை வாலின் முறித்து நின்றான்.

(இ - ள்.) செழியன் - பாண்டியன், குறித்துவிடுவாளியை - தன்னைக் குறியாகக் கொண்டுவிட்ட அம்புகளை, கோலவேந்தன்பறித்து - பன்றியரசன் (உடம்பினின்றும்) பிடுங்கி, சிலவாளியை வாய்கொடு பைம்புல் என்னக்கறித்து - (அவற்றுள்) சிலவாளிகளை வாயாலே பசியபுல்லைக் கறித்தல்போலக் கடித்தும், சிலவாளியைக் கால் கொடு தேய்த்துத் தேய்த்து முறித்து-சிலகணைகளைக்காலாலே தேய்த்துத் தேய்த்து முறித்தும், சிலவாளியை வாலின் முறித்து நின்றான் - சில அம்புகளைவாலினால் முறித்தும் நின்றனன்.

கோலம் - பன்றி. உடம்பினின்றும் பறித்தென்க. கொடு - கொண்டு; மூன்றும் வேற்றுமைச் சொல். (௩௯)

மானம் பொறாது மதியின்வழி வந்த வேந்தன்
தானம் பொறாது கவிழ்க்கும்புகர்த் தந்தி கையில்
ஊனம் பொறாத முசலங்கொடுத் தேறி யுய்த்தான்
ஏனம் பொறாதார்த் திடியேற்றி னெழுந்த தன்றே.

(இ - ள்.) மதியின் வழிவந்தவேந்தன் - சந்திரன் மரபில் வந்த இராசராச பாண்டியன், மானம் பொறாது - மானம்மீக்கூர, தானம் பொறாது கவிழ்க்கும் - மதநீரைப் பொறுக்கலாற்றாது கொட்டுகின்ற, புகர்த்தந்திகையில்-முகத்திற் புள்ளிகளையுடைய யானையின் கையில், ஊனம் பொறாதமுசலம் கொடுத்து - குற்றமில்லாத இருப்புலக்கையைக் கொடுத்து, ஏறி உய்த்தான் - ஏறிச் செலுத்தினான்; ஏனம் பொறாது - (அதனைக்கண்ட) பன்றிபொறுக்கலாற்றாது, இடி ஏற்றின் ஆர்த்து எழுந்தது - இடியேறு போல முழங்கி எழுந்தது.

மானத்தாற் பொறுக்கலாற்றாது என்றுமாம். ஓர் விலங்கினால் அலைப்புண்டனன் எனப்பிறர் கூறும் பழிக்கு ஆற்றாது நொந்தனன் என்பார் 'மானம் பொறாது' எனவும், வீரமில்லாத ஓர் விலங்கினால் வீரமிக்க எம்மைக் கொல்லக் கருதினன் என்று வெகுண்டதென்பார் 'ஏனம் பொறாதார்த்து' எனவும் கூறினார். தானம் - மதநீர். ஏற்றின், இன் ஒப்புப் பொருட்டு. அன்று, ஏ அசைகள். (சுய)

தந்திப் பொருப்பைத் துணிக்கென்று தழன்று சீற்றம்
உந்திக் கதலிக் கொழுந்தண்டென வூசற் கையைச்
சிந்திப் பிறைவா ளெயிறோச்சிச் சிதைத்து வீட்ட
முந்திக் கடுந்தேர் மிசைப்பாய்ந்தனன் மூரித் தாரான்.

(இ - ள்.) தந்திப்பொருப்பைத் துணிக்கு என்று - யானையாகிய மலையைத் துணிப்பேன் என்று, தழன்று - கொதித்து, சீற்றம் உந்தி - சினமானது செலுத்த, கதலிக் கொழுந்தண்டு என - வாழையின் கொழுவிய தண்டைப்போல, ஊசல் கையைச் சிந்தி - ஊசல்போல் அசைகின்ற துதிக்கையைத் துணித்து, பிறைவாள் எயிறு ஓச்சி - பிறைபோன்ற ஒள்ளியமருப்பினைக்கடாவி, சிதைத்து வீட்ட - உடலைச் சிதைத்துக்கொல்ல, மூரித்தாரான் - வலியசேனையினையுடைய பாண்டியன், முந்தி - முற்பட்டு, கடுந்தேர்மிசைப்பாய்ந்தனன் - விரைந்த செலவினையுடைய தேரின் மேற்பாய்ந்தேறினான்.

துணிக்கு - துணிப்பேன்; கு, தன்மை யொருமை எதிர்காலவிகுதி. உந்தி- உந்த; எச்சத்திரிபு. தார் - படை. (சுசு)

திண்டேர் மிசைநின் றடனேமி திரித்து விட்டான்
கண்டேன வேந்தன் விலக்கிக் கடுங்காலிற் பாய்ந்து
தண்டே றுடையத் தகர்த்தான்பரி தன்னிற் பாய்ந்து
வண்டேறு தாரான் விடவேலை வலந்தி ரித்தான்.

(இ - ள்.) திண்தேர் மிசைநின்று - வலியதேரின் மேல் நின்று, அடல் நேமி திரித்து விட்டான் - கொல்லுதலையுடைய திகிரிப்படையைச் சுழற்றி விட்டான்; ஏனவேந்தன் கண்டு விலக்கி - பன்றியரசன் பார்த்து (அதனைத்) தடுத்து, கடுங்காலில் பாய்ந்து - கடியகாற்றைப்போல விரைந்து பாய்ந்து, தண்தேர் உடையத் தகர்த்தான் - தண்ணிய (நிழலையுடைய) தேர் சிதையும்படி உடைத்தான்; வண்டு ஏறு தாரான் - வண்டுகள் மொய்க்கும் மாலையை யணிந்த பாண்டியன், பரிதன்னில் பாய்ந்து - (பின்பு) குதிரை மேற்பாய்ந்து ஏறி, விடவேலை வலம் திரித்தான் - நஞ்சு பூசியவேற்படையை வலமாகச் சுழற்றினான். (சுஉ)

சத்திப் படைமேல் விடுமுன்னர்த் தறுகண் வீரன்
பத்திச் சுடர்மா மணித்தார்ப்பரி மாவின் பின்போய்
மொத்திக் குடர்செம் புனல்சோர முடுகிக் கோட்டாற்
குத்திச் செகுத்தான் பொறுத்தானலன் கூடல் வேந்தன்.

(இ - ள்.) சத்திப்படை - (அங்ஙனஞ் சுழற்றிய) வேற்படையை, மேல் விடு முன்னர் - தன் மீது விடுதற்கு முன்னரே, தறுகண் வீரன் - அஞ்சாமையையுடைய அப்பன்றி வீரன், பத்திச்சுடர் மாமணித்தார்ப் பரிமாவின்பின் போய்-ஒளி வரிசையையுடைய பெரிய மணிகளையுடைய கிண்கிணி மாலையை யணிந்த அந்தக்குதிரையின் பின் சென்று, மொத்தி - தாக்கி, குடர் செம்புனல் சோர - குடரும் குருதியும் சோர, கோட்டால் முடுகிக்குத்தி - கொம்பினால் விரைந்து குத்தி, செகுத்தான் - அதனைக்கொன்றனன்; கூடல் வேந்தன் பொறுத்தான் அலன் - பாண்டியன் அது கண்டு பொறுக்கலாற்றாது.

பரிமா, இருபெயரொட்டு. குடரும் புனலும் சோரக்குத்தி என்க. குடர், போலி. (சுங)

மண்ணிற் குதித்து வலிகண்டு வராக வேந்தை
எண்ணித் தலையிற் புடைத்தான்கை யிருப்புத் தண்டாற்
புண்ணிற் படுசெம் புனலாறு புடவி போர்ப்ப
விண்ணிற் புகுந்தான் சுடர்கீறி விமான மேலால்.

(இ - ள்.) மண்ணில் குதித்து - நிலத்திலே குதித்து, வலிகண்டு வராக வேந்தை எண்ணி - வலியினைக்கண்டு பன்றியரசனைமதித்து, கை இருப்புத்தண்டால் தலையில் புடைத்தான் - கையிலுள்ள இருப்புலக்கையாலே தலையில் அடித்தான்; புண்ணில்படுசெம்புனல் ஆறு புடவி போர்ப்ப - அந்தப்புண்ணினின்று பொழியும் குருதியாறுபுவியை மூட, சுடர் கீறிவிமான மேலால் விண்ணில் புகுந்தான் - சூரிய மண்டலத்தைக்கிழித்துவிமான மீதேறி விண்ணுலகடைந்தனன்.

எண்ணி என்பதற்கு அடிக்குமிடத்தை ஆராய்ந்து எனப்பொருள் கொண்டு, வலிகண்டு எண்ணி வேந்தைத்தலையிற் புடைத்தான் என்றியைத்துரைத்தலுமாம். போரிற்புறங்கொடாது உயிர் துறந்த வீரர் ஞாயிற்றின் மண்டிலம் வழியாகச் சென்று துறக்கம் புகுவர் என்ப. (சுச)

வேனிற் கிழவோனில் விளங்கி வியந்து வானோர்
தேனிற் பொழிபூ மழைபெய்ய நனைந்து தெய்வக்
கானத்* தமுதுண் டிருகாது† களித்து வீர
வானத் தமுதுண் டரமங்கையர் கொங்கை சேர்ந்தான்.

(இ - ள்.) வேனில் கிழவோனில் விளங்கி - வேனிற்காலத்துக்கு உரிமை பூண்டமன்மதன் போல் விளங்கி, வானோர் வியந்து பொழிபூ - தேவர்கள் வியப்புற்றுப் பொழியும் பூக்கள், தேனின் மழை பெய்ய நனைந்து - தேனாகியமழையினைப் பொழிய அதில் நனைந்து, தெய்வக்கானத்து அமுது இருகாது உண்டுகளித்து - தெய்வத்தன்மை பொருந்திய இசையாகிய அமுதினை இரண்டு செவிகளாலும் பருகி மகிழ்ந்து, வீரவானத்து அமுது உண்டு - வீரசுவர்க்கத்துள்ள தேவ அமுதினை உண்டு, அரமங்கையர் கொங்கை சேர்ந்தான் - அரமாதர்களின் கொங்கையை அணைந்தான்.

அங்ஙனம் துறக்கம் புக்கவன் பேரழகுடைய திப்பியயாக்கையுடையனாய் ஐம்புல இன்பங்களும் ஆரத்துய்த்தனன் என்றார். விளங்கி நனைந்து உண்டு உண்டு சேர்ந்தான் என வினை முடிக்க. (சரு)

கலி விருத்தம்

பின்றுணை யாய பெடைத்தனி யேனம்
என்றுணை மாய விருப்பது கற்போ
வென்றில னேனும் விசும்படை வேனால்
என்றிகல் வேந்தை யெதிர்த்த துருத்தே.

(இ - ள்.) பின் - பின்னர், துணையாய தனிபெடை ஏனம் - துணையாக நின்ற ஒப்பற்ற பெண் பன்றி, என்துணைமாய - எனது துணைவன் இறந்தொழிய, இருப்பது கற்போ - யான் உயிருடன் இருப்பது கற்பு நெறியாமோ, வென்றிலனேனும் விசும்பு அடைவேன் என்று - வெல்லாவிடினும் என் துணைவனோடு விண்ணுலகைச் சேர்வேனென்று கருதி, இகல் வேந்தை உருத்து எதிர்த்தது - பகைமையையுடைய பாண்டி மன்னனைச் சினந்து எதிர்த்தது.

கணவன் துஞ்சியக்கால் உடன் றுஞ்சுதல் உத்தமக் கற்புடை மகளிர் இயல்பு; இதனை,

"காதல் சிறப்பிற் கனையெரி பொத்தி
ஊதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்காது
இன்னுயி ரீவர்"

என்னும் மணிமேகலையா னறிக. ஆல், அசை. (சசு)

---

(பா - ம்.) *தெய்வகானத்து. †இருகாதும்.

விறன்வில் பேட்டை விளிப்பது வேந்தர்க்
கறனல வென்றவ னாள்வினை மள்ளர்க்
கிறைமக னான சருச்சர னென்றோர்
மறமக னேர்ந்தம ராட வளைந்தான்.

(இ - ள்.) விறல் நவில் பேட்டை - வீரங்கூறி எதிர்த்த அப்பெண் பன்றியை, விளிப்பது வேந்தர்க்கு அறன் அல என்று - மாய்ப்பது மன்னருக்கு அறமல்ல என்று கருதி, அவன் - அம்மன்னனுடைய, ஆள்வினை மள்ளர்க்கு இறைமகனான - போர்த்தொழிலையுடைய வீரர்க்குத் தலைவனான, சருச்சரன் என்ற ஓர் மற மகன் - சருச்சரனென்ற பெயரினையுடைய ஒரு வேடன், நேர்ந்து அமர் ஆடவளைந்தான் - எதிர்த்துப் போர்புரிதற்குச் சூழ்ந்தான்.

விளிப்பது - விளியச்செய்வது; கொல்வது. என்ற என்பதன் அகரம் தொக்கது. (சஎ)

நனிபொழு தாடம ராடின னஞ்சிற்
கனிசின வன்பெடை காய்சின வேடத்
தனிமக னைத்தரை வீட்டின தாற்றல்
இனியிலை யென்ன விளைத்துயிர் சோர்வான்.

(இ - ள்.) நனி பொழுது ஆடு அமர் ஆடினன் - நெடும் பொழுது வெற்றியைத்தரும் போர் புரிந்தான்; நஞ்சில் கனி சினவன்பெடை - நஞ்சினும் முதிர்ந்த சினத்தையுடைய வலிய அப் பெண்பன்றி, காய்சின வேடத் தனி மகனை - காய்கின்ற சினத்தையுடைய வேடனாகிய ஒப்பற்ற சருச்சரனை, தரை வீட்டினது - தரையில் வீழ்த்தியது; இனி ஆற்றல் இலை என்ன - இனிப்போர் புரியவலியில்லை என்று சொல்லுமாறு, இளைத்து உயிர் சோர்வான் - மெலிந்து உயிர் சோர்வானாகிய அவன்.

ஆடமர் - வென்றியைச்செய்யும் போர்; கொல்லும் போர் என்றுமாம். (சஅ)

இரும்புசெய் தண்டினை யிம்மென வோங்கிப்*
பொரும்பெடை சென்னி புடைத்து விளிந்தான்
விருந்தின ராயிரு வோரும் விமானத்
தருந்திறல் வான மடைந்தன ரன்றே.

(இ - ள்.) இரும்பு செய் தண்டினை - இரும்பாற் செய்ததண்டத்தை, இம்மென ஓங்கி - விரைந்து ஓங்கி, பொரும் பெடை சென்னி புடைத்து விளிந்தான் - போர்புரியும் பெண்பன்றியின் தலையில் அடித்து இறந்தனன்; இருவோரும் - அவ் வீருவரும், விமானத்து - விமானத்திலேறி, அருந்திறல் வானம் விருந்தினராய் அடைந்தனர் - வீரசுவர்க்கத்துக்கு விருந்தினராகச் சென்றனர்.

---

(பா - ம்.) * ஓச்சி.

இம்மென, விரைவுக் குறிப்பு. உயிர்சோர்கின்றவன் விரைய இருப்புத் தண்டினைப் பெடையின் தலையிற் புடைத்துக் கொன்று தானும் உயிர்துறந்தான் என்க. அருந்திறல் வானம் - வீரசுவர்க்கம். அன்று, ஏ அசைகள்; அப்பொழுதே என்றுமாம். (சக)

வன்றிறன் மன்னவர் மன்னவ னுந்தன்
பொன்றிகழ் மாநகர் புக்கன னிப்பாற்
பன்றி விழுந்து பருப்பத மாகா
நின்றது பன்றி நெடுங்கிரி யென்ன.

(இ - ள்.) வன்திறல் மன்னவர் மன்னவனும் - மிக்கவலியினையுடைய இராசராச பாண்டியனும், தன்பொன் திகழ் மாநகர் புக்கனன் - தனது அழகு விளங்காநின்ற பெரிய நகரிற் புகுந்தான்; இப்பால் - இப்புறம், பன்றி விழுந்து - அப்பன்றி கீழே விழுந்து, பன்றி நெடுங்கிரி என்ன - நெடிய பன்றி மலை என்று அனைவருங் கூற, பருப்பதம் ஆகா நின்றது - மலையாகி நின்றது.

வன்றிறல், ஒருபொருட் பன்மொழி. மன்னவர் மன்னவன், பெயர். (சுய)

அன்று தொடுத்தத னுக்கது பேராய்
இன்றும் வழங்குவ திம்பரி னந்தக்
குன்றி லருந்தவர் விஞ்சையர் கோபம்
வென்றவ ரெண்ணிலர் வீடுற நோற்பார்.

(இ - ள்.) இம்பரில் - இந்நிலவுலகில், அன்று தொடுத்து - அக்காலந்தொட்டு, அதனுக்கு அது பேராய் - அம்மலைக்கு அதுவே பெயராகி, இன்றும் வழங்குவது - இஞ்ஞான்றும் வழங்கா நின்றது; அந்தக் குன்றில் - அந்தப் பன்றிமலையில், அருந்தவர் விஞ்சையர் எண்ணிலர் - முனிவரும் விஞ்சையருமாகிய அளவிறந்தோர், கோபம் வென்றவர் - சினத்தைக் களைந்தவராகி, வீடு உற நோற்பார் - வீடுபேற்றினை அடையத் தவஞ் செய்வார்கள்.

தொடுத்து - தொடங்கி. அருந்தவர் - முனிவர். கோபம் வென்றெனவே காம மயக்கங்களை வென்றென்பதும் உபலக்கணத்தாற் பெறப்படும். (சுக)

[கலிநிலைத்துறை]

என்று கூறிய வருந்தமிழ்க் கிறைவனை நோக்கித்
துன்று மாதவ ரறிவிலாச் சூகர வுருவக்
குன்றின் மீதிருந் தவரெலாங்* கோதற நோற்று
நின்ற காரணம் யாதெனக் குறுமுனி† நிகழ்த்தும்.

(இ - ள்.) என்று கூறிய அருந்தமிழ்க்கு இறைவனை நோக்கி - என்று இங்ஙனங் கூறியருளிய அரிய தமிழுக்கு இறைவனாகிய அகத்திய முனிவனைப்பார்த்து, துன்றும் மாதவர் - நெருங்கியிருந்த முனிவர்கள், அவர் எலாம் - அம்முனிவர் விச்

(பா - ம்.) * அருந்தவரெலாம். †குடமுனி.

சாதரரெல்லாம், அறிவு இலாச் சூகர உருவக் குன்றின்மீது இருந்து - அறிவில்லாத பன்றி வடிவாகிய அம்மலையின்மேல் இருந்து, கோதற நோற்று நின்ற காரணம் யாது என - குற்றம் நீங்கத் தவஞ் செய்து நின்ற காரணம் யாதென்று வினவ, குறு முனி நிகழ்த்தும் - அகத்திய முனிவன் கூறும்.

தமிழை வளர்த்தோருள் முதன்மை பூண்டிருத்தலின் அகத்தியனைத் 'தமிழ்க்கிறைவன்' என உபசாரமாகக் கூறினர். இருந்தவர் எலாம் என்பதற்குப் பெரிய தவத்தோரெல்லாம் என்றுரைத்தலும் பொருந்தும். நின்ற காரணம் - நின்றமைக்குக் காரணம். (கஉ.)

வேனில் வேளென விளங்குவிச் சாதர னென்னுந்
தான யாழ்மகன் புலத்தியன் றவத்தினுக் கிடையூ
றான பாண்செயப் பன்றியாச் சபித்தன னறவோன்
ஏன மாகுவோ னுய்வதென் றெனக்கென முனிவன்.

(இ - ள்.) வேனில் வேள் என விளங்கு - வேனிற் காலத்துக்குரிய காமனைப்போல வடிவம் பெற்று விளங்கும், விச்சாதரன் என்னும் தானயாழ் மகன் - விச்சாதரன் என்று கூறப்படும் தானங்கள் அமைந்த யாழில் வல்ல இயக்கன் ஒருவன், புலத்தியன் தவத்தினுக்கு இடையூறு ஆனபாண் செய - புலத்திய முனிவன் தவத்துக்கு இடையூறு விளைத்தலையுடைய இசைப்பாட்டினைப்பாட, அறவோன் பன்றியாச் சபித்தனன் - அம்முனிவன் அவனைப் பன்றியாமாறு சபித்தனன்; ஏனம் ஆகுவோன் - அங்ஙனம் பன்றியாகும் அவன், உய்வது எனக்கு என்று என - எனக்கு இச்சாபத்தினின்று நீங்குதற்குரியகாலம் யாதென்று வினவ, முனிவன் - அப் புலத்திய முனிவன்.

பாண்செய என்பதற்குக் கீழ்மை செய்ய என்றும் உரைக்க; முன்னரும் கூறப்பட்டது. ஆக என்பது ஈறு தொக்கது. ஆக - ஆகும்படி. (கங)

மன்னர் மன்னனுந் தென்னவன் வந்துநின் வனத்திற்
றுன்னு பல்வகை விலங்கெலாந் தொலைத்துனை மாய்க்கும்
பின்ன ரிவ்வுருப் பெறுகெனப் பணித்தன னியக்கன்
அன்ன வாறுவந் திறந்துபின் பழவுரு வடைந்தான்.

(இ - ள்.) மன்னர் மன்னனும் தென்னவன் வந்து — இராசராச பாண்டியன் வந்து, நின் வனத்தில் துன்னு பல்வகை விலங்கு எலாம் தொலைத்து - நின் காட்டில் நெருங்கிய பலவகையான விலங்குகளையெலாம் மாய்த்து, உனைமாய்க்கும் - உன்னையுங் கொல்லுவான்; பின்னர் இவ்வுருப் பெறுக எனப் பணித்தனன் - பின் இந்த வடிவத்தைப் பெறக்கடவை என்று அருளிச் செய்தனன்; இயக்கன் - அந்த இயக்கன், அன்னவாறு வந்து இறந்து பின் பழ உரு அடைந்தான் - அங்ஙனமே பன்றியாக வந்து இறந்து பின் பழைய வடிவத்தைப் பெற்றனன்.

மன்னர் மன்னன் என்பதற்கு மேல் உரைத்தமை காண்க. இரட்டுற மொழித லாக்கி, அரசர்க்கு அரசனாகிய இராசராச பாண்டியன் என்றுரைத்தலும் பொருந் தும். பெறுகென, அகரந்தொகுத்தல். முனிவன் பணித்தனன் என்க. (ருச)

ஆய புண்ணிய விஞ்சைய னாகமாய்க் கிடந்த
தூய நீரதா லவ்வரை மீமிசைத் துறந்த
பாய கேள்விய ரிறைகொளப் பட்டதெவ் வுயிர்க்கும்
நாய னார்மது ரேசரு நயந்தவ ணுறைவார்.

(இ - ள்.) ஆயபுண்ணிய விஞ்சையன் - அந்தப்புண்ணிய வடிவினனாகிய இயக்கனுடைய, ஆகமாய்க்கிடந்த தூயநீரதால் - உடலாகக்கிடந்த தூய தன்மையை யுடையதாதலால், அவ்வரை - அம்மலை, மீமிசை - தன்மேல், துறந்த பாயகேள் வியர் இறைகொளப்பட்டது - முற்றத்துறந்த பரந்த நூற்கேள்வியினையுடைய முனிவர் முதலியோரால் தங்கப்பட்டது; எவ்வுயிர்க்கும் நாயனார் மதுரேசரும் - எல்லாவுயிர்கட்கும் இறைவராகிய மதுரை நாயகரும், அவண் நயந்து உறைவார் - அவ்விடத்தில் விருப்பத்துடன் எழுந்தருளியிருப்பர்.

நீரது - நீர்மையுடையது. ஆல் - ஆகையால். மீமிசை, ஒருபொருட்பன் மொழி. இறைகொளல் - தங்கல். (ருரு)

என்ற கத்தியன் விடைகொடுத் தியம்பின னிப்பாற்
பன்றி யேற்றையும் பாட்டியும் பைம்புனத் திட்டுச்
சென்ற விந்தபின் பன்னிரு குருளையுந் திகைப்புற்
றன்ற லக்கணோ யுழந்தமை யாரளந் துரைப்பார்.

(இ - ள்.) என்று அகத்தியன் விடை கொடுத்து இயம்பினன் - என்று அகத்தியமுனி விடை கூறியருளினன்; இப்பால் - பின், பன்றி ஏற்றையும் பாட்டியும் - ஆண் பன்றியும் பெண் பன்றியும், பைம்புனத்து இட்டுச்சென்று அவிந்தபின் - பசிய காட்டின்கண் விட்டுப்போய் மாண்ட பின்னர், பன்னிருகுருளை யும் - பன்னிரண்டு குட்டிகளும், திகைப்புற்று - திகைத்து, அன்று அலக்கண் நோய் உழந்தமை - அந்நாள் துன்பநோயிற்பட்டு வருந்தியதை, அளந்து உரைப் பார் யார் - வரையறுத்துக்கூறவல்லார்யார் (ஒருவருமில்லை என்றபடி.)

ஏற்றை - விலங்கின் ஆண்;

"ஏறும் ஏற்றையும்"

என்னும் தொல்காப்பியச்சூத்திரத்தால் ஏற்றை பெயராதல் அறிக. (ருசு)

ஓடு கின்றன தெருமர லுறுவன நிழலைத்
தேடு கின்றன தாய்முலைத் தீயபால் வேட்டு
வாடு கின்றன தாகவெம் பசிநனி வருத்த
வீடு கின்றன வெயில்சுட வெதும்புகின் றனவால்.

(இ - ள்.) ஓடுகின்றன - அக்குட்டிகள் தாய் தந்தையைத்தேடி) ஓடுகின்றன; தெருமரல் உறுவன - (காணாமையால்) சுழலுகின்றன; நிழலைத்தேடுகின்றன - நிழலைத்தேடி அலைகின்றன; தாய் தீயமுலைப்பால் வேட்டு வாடுகின்றன - தாயினது இனிய முலைப்பாலை விரும்பி வாட்டமடைகின்றன; தாகம் வெம்பசி கனிவருத்த வீடுகின்றன - நீர்வேட்கையும் கொடிய பசியும் மிகவுந்துன்புறுத்தலால் உயிர் சோருகின்றன; வெயில் சுடவெதும்புகின்றன - வெய்யில் சுடுதலால் வெதும்பி வருந்துகின்றன.

தீய - இனிய. ஆல், அசை. (ருஎ)

இன்ன வாறிவை யணங்குறு மெல்லைவேல் வல்ல
தென்ன ராகிய தேவர்க டேவரங் கயற்கண்
மின்ன னாளொடு மின்னவிர் விமானமீ தேறி
அன்ன கானகத் திச்சையா லாடல்செய் திருந்தார்.

(இ - ள்.) இவை இன்னவாறு அணங்குறும் எல்லை - இக்குட்டிகள் இங்ஙனந்துன்புறும் பொழுது, வேல்வல்ல - வேலாற்செய்யும் போரில்வல்ல, தென்னராகிய தேவர்கள் தேவர் - சுந்தரபாண்டியராகிய தேவர்கள் தேவராகும் இறைவர், அங்கயற்கண் மின் அனாளொடு - மின்னலை ஒத்த அங்கயற்கண்ணம்மையோடு, மின் அவிர் விமானமீது ஏறி - ஒளி விளங்கும் விமானத்தின் மேலேறியருளி, அன்ன கானகத்து - அந்தக்காட்டின்கண், இச்சையால் ஆடல் செய்திருந்தார் - தமதிச்சையினால் திருவிளையாடல் புரிந்து கொண்டிருந்தார்.

இச்சையாவது உயிர்க்கு அருள் நேசமாகும். (ருஅ)

ஏன மென்பற ழுறுகணோய்க் கிரங்கினா ரிச்சை
ஆன வன்புதந் தத்துய ரகற்றுவா னீன்ற*
மான வன்புடைப் பேடையின் வடிவெடுத் தயருங்
கான வன்பறழ் கலங்கஞர் கலங்கநேர் வந்தார்.

(இ - ள்.) ஏனம் மென் பறழ் உறுகண் நோய்க்கு இரங்கினார் - மென்மையுடைய அப்பன்றிக்குட்டிகளின் துன்பநோய்க்கு இரங்கி, இச்சை ஆன அன்பு தந்து - விருப்பமாகிய அன்பினை வைத்து, அத்துயர் அகற்றுவான் - அத்துன்பத்தையொழித்தருள, ஈன்ற மான அன்பு உடைப் பேடையின் வடிவு எடுத்து - அவற்றை ஈன்ற மிக்க அன்பினையுடைய பெண் பன்றியின் வடிவினை எடுத்து, கானம் அயரும் - காட்டின்கண் சோருகின்ற, வன்பறழ் - வலிய அக்குட்டிகளின், கலங்கு அஞர் கலங்க - கலங்குதற் கேதுவாகிய பசித்துன்பம் கலங்கி நீங்குமாறு, நேர் வந்தார் - எதிரே வந்தருளினார்.

இளமைபற்றி மென்பறழ் என்றும், சாதிபற்றி வன்பறழ் என்றும் கூறினாரெனக்கொள்க. மானம் ஈண்டு மிகுதியை உணர்த்திற்று. (ருகூ)

---

(பா - ம்.) * அகற்றுவானின்ற.

கிட்டு கின்றதந் தாயெதிர் குட்டியுங் கிட்டி
முட்டு கின்றன மோப்பன* முதுகுறத் தாவி
எட்டு கின்றன கால்விசைத் தெறிவன நிலத்தை
வெட்டு கின்றன குதிப்பன வோடுவ மீள்வ.

(இ - ள்.) கிட்டுகின்ற தம் தாய் எதிர் - அங்ஙனம் நெருங்கி வருகின்ற தங்கள் தாயினெதிரே, குட்டியும் - குட்டிகளும், கிட்டி முட்டுகின்றன - நெருங்கி மோதுவனவும், மோப்பன - மோப்பனவும், முதுகு உறத் தாவி எட்டுகின்றன - முதுகிற் பொருந்தத் தாவி எட்டுவனவும், கால் விசைத்து எறிவன நிலத்தை வெட்டுகின்றன - காலை விசைத்துப் பின் எறிந்து நிலத்தை வெட்டுவனவும், குதிப்பன ஓடுவ மீள்வ - குதிப்பனவும் ஓடுவனவும் மீள்வனவும் ஆயின.

எறிவனவாய் வெட்டுகின்றன என்க. தாயைக் கண்ட உவகையால் இங்ஙனம் செய்தன. பன்றிக் குட்டிகளின் தொழிற்றிறங்களை நன்கு விளக்குதலால் இச் செய்யுள் தன்மை நவிற்சியாகும். (சூ)

ஏன மின்னமுங் காண்பரி தாகிய வேனம்
ஆன மெய்ம்மயிர் முகிழ்த்திடத் தழுவிமோந் தருளின்
மான மென்முலை யருத்திமா வலனும்வன் றிறனும்
ஞான மும்பெருந் தகையுநற் குணங்களு நல்கா.

(இ - ள்.) ஏனம் இன்னமும் காண்பரிதாகிய ஏனம் - திருமாலாகிய பன்றி இன்னமுங் காண்டற் கரிதாகிய பன்றி, மெய் ஆன மயிர் முகிழ்த்திட - மெய்யிலுள்ள மயிர் முகிழ்க்க, தழுவி மோந்து - அவற்றை அணைத்து மோந்து, அருளின் மானம் மென்முலை அருத்தி - அருளினாற் சுரந்த பெரிய மெல்லிய முலைப்பாலை ஊட்டி, மாவலனும் வன்றிறனும் - சிறந்த வெற்றியும் மிக்கவலியும், ஞானமும் பெருந்தகையும் நற்குணங்களும் நல்கா - ஞானமும் பெருந்தகைமையும் ஏனை நற்குணங்களுமாகிய இவற்றைத் தந்தருளி.

திருமால் பன்றியுருவெடுத்துத்தேடி இன்னமும் காண்டற்கரிய பரம்பொருளாகிய சிவபெருமான் தான் ஓர் பெண் பன்றியாகிப்பன்றிக்குட்டிகள் இருக்குமிடம் தேடி வந்து அவற்றிற்கு முலை கொடுத்தருளினன் என இறைவன் வானோர்க்கரியனும் ஏனோர்க்கெளியனும் உருக்குந்தன்மையை நயம்படக்கூறினர். இறைவன் அளித்த பால் திருவருள் ஆகையால் வலம் முதலிய யாவும் அவற்றிற்கு எய்துவன வாயின என்க. குழவிகள் பின் எய்தும் நலங்களுக்கெல்லாம் முன் உண்ட தாய்ப்பால் காரணமாமென்பதும் இதனாற் பெறப்படுதல் ஓர்க. (சுக)

துங்க மாமுக மொன்றுமே சூகர முகமா
அங்கம் யாவையு மானுட யாக்கைய வாக்கிக்
கங்கை நாயகன் கடவுளர் நாயகன் கயற்கண்
மங்கை நாயகன் கருணையாந் திருவுரு மறைந்தான்.

---

(பா - ம்.) * மொய்ப்பன.

(இ - ள்.) துங்கமாமுகம் ஒன்றுமே சூகர முகமா - சிறந்த பெரிய முகம் ஒன்றனையும் பன்றி முகமாக (வைத்து), அங்கம் யாவையும் - ஏனைய உறுப்புக்களனைத்தையும், மானுட யாக்கைய ஆக்கி - மக்கள் உடலிலுள்ள உறுப்புக்களாகச் செய்து, கங்கை நாயகன் - கங்கையின் கேள்வனும், கடவுளர் நாயகன் - தேவர்கள் தலைவனும், கயற்கண் மங்கை நாயகன் - அங்கயற்கண்ணம்மையின் நாதனுமாகிய சோமசுந்தரக் கடவுள், கருணையாம் திருஉரு மறைந்தான் - அருளாற்கொண்ட அத்திருவுருவம் மறைந்தருளினன்.

யாக்கையவாக ஆக்கி என விரிக்க. (சுஉ)

இம்மை யிப்பவத் தன்னையா யினிவரு பவமுஞ்
செம்மை செய்தசே தனத்தையுஞ் சேதனஞ் செய்தார்
எம்மை யெப்பவத் தாயினு மெனைப்பல வுயிர்க்கும்
அம்மை யப்பராய்க் காப்பவ ரவரலா லெவரே.

(இ - ள்.) இம்மை இப்பவத்து அன்னையாய் - இந்நிலவுலகில் இப்பன்றியாகிய பிறப்பின்கண் தாயாய் வந்து முலைகொடுத்து, அசேதனத்தையும் சேதனம் செய்து - அறிவில்லாத பன்றிக் குட்டிகளையும் அறிவுடை மக்களாகச் செய்து, இனி வரு பவமும் செம்மை செய்தார் - மேல்வரும் பிறவியையுந் தூய்மை யாக்கினர்; எம்மை எப்பவத்து ஆயினும் - எவ்வுலகத்தில் எப்பிறவியிலாயினும், எனைப்பல உயிர்க்கும் - பலவகையான உயிர்களெல்லாவற்றுக்கும், அம்மை அப்பராய் காப்பவர் - தாயும் தந்தையுமாகி நின்று காப்பவர், அவர் அலால் எவர் - அவரே யல்லால் வேறு யாவர்? (ஒருவருமில்லை என்றபடி).

அசேதனம் - பகுத்தறிவில்லது. சேதனம் - பகுத்தறிவுள்ளது. சேதனஞ் செய்து செம்மை செய்தார் என விகுதி பிரித்துக் கூட்டுக. எவ்விடத்து எப்பிறப்பிலும் அருள் செய்பவர் சிவபெருமான் என்பதனை,

"எங்கேனும் யாதாகிப் பிறந்திடினும் தன்னடியார்க்
கிங்கேயென் றருள்புரியு மெம்பெருமான்"

என ஆளுடைய பிள்ளையார் அருளிச் செய்தல் காண்க. அம்மையப்பராய் என்னும் தொடர் "அம்மையே அப்பா" என்னும் திருவாசகத்தை நினைவூட்டுகின்றது. இங்ஙனம் இறைவன் பன்றிக்குட்டிகளுக்குப் பால்கொடுத்தருளிய பெருங்கருணைத் திறத்தை;

"ஏவுண்ட பன்றிக் கிரங்கி யீசன் எந்தை பெருந்துறை யாதி யன்று
கேவலங் கேழலாய்ப் பால்கொ டுத்த கிடப்பறி வாரெம் பிரானு வாரே"

எனத் திருவாதவூரடிகள் அருளிச் செய்தல் காண்க. (சுங)

ஆகச் செய்யுள் உஉகூ.

நாற்பத்தாறுவது

# பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கிய படலம்

[கலிநிலைத்துறை]

தந்தை தாயிழந் தலமரு குருளையைத் தாயாய்
வந்து நாயகன் முலைகொடுத் தருளிய வகையீ
தந்த வாறிரு மைந்தரு மந்திர ராகி
எந்தை யார்சிவ புரம்புகுந் திருந்தவா றிசைப்பாம்.

(இ - ள்.) தந்தை தாய் இழந்து - தந்தையையும் தாயையும் இழந்து, அலமரு குருளையை - வருந்திய பன்றிக் குட்டிகளுக்கு, நாயகன் தாயாய் வந்து - இறைவன் தாய்ப் பன்றியாக உருவெடுத்துவந்து, முலைகொடுத்தருளிய வகை ஈது - முலைகொடுத்த திருவிளையாட்டல் இது; அந்த ஆறிரு மைந்தரும் - (இனி) அந்தப்பன்னிரண்டு குமரர்களும், மந்திரர் ஆகி - பாண்டியனுக்கு அமைச்சர்களாகி(ப்பின்), எந்தையார் சிவபுரம் புகுந்து இருந்தவாறு இசைப்பாம் - எமது தந்தையாராகிய இறைவரது சிவலோகத்தை அடைந்திருந்த திருவிளையாடலைக் கூறுவோம்.

குருளையை - குருளைக்கு; வேற்றுமை மயக்கம். (க)

ஆதி நாயகன் றிருவுரு மறைந்தபி னனைய
கோதி லாறிரண் டேனமாக் குமரருங் காலைச்
சோதி யாறிரண் டருக்கர்போற் றோன்றியப் பொருப்பில்
ஓதி யாய்ந்தபல் கலைஞரா யொருங்குவீற் றிருந்தார்.

(இ - ள்.) ஆதிநாயகன் திரு உரு மறைந்தபின் - முதற் கடவுளாகிய இறைவன் திரு உருவம் மறைந்தருளிய பின்னர், அனைய கோது இல்மா ஆறிரண்டு ஏனக் குமரரும் - அந்தக் குற்றமில்லாத பெருமையை யுடைய பன்னிரண்டு பன்றிவீரர்களும், காலை - காலையில் எழுந்த, சோதி ஆறிரண்டு அருக்கர்போல் தோன்றி - ஒளிமிக்க பன்னிரண்டு இளஞ் சூரியர்களைப் போலக் காணப்பட்டு, அப்பொருப்பில் - அம்மலையின்கண், ஓதி ஆய்ந்த பல்கலைஞராய் - கற்று ஆராய்ந்து தெளிந்த பல கலைகளிலும் வல்லுநராகி, ஒருங்கு வீற்றிருந்தார் - ஒருசேர வீற்றிருந்தார்கள்.

திருவுரு - தாயாய்வந்த உருவம். ஆதித்தர் பன்னிருவரும் ஒருங்குதித்தாற் போல் இப்பன்னிரு குமரரும் விளங்கினரென்றார். அப்பொருப்பு - அந்தப் பன்றி மலை. (உ)



கூ. ப். 46 பன்றிக்குட்டிகளை மந்திரிகளாக்கியது

அனைய ராயவர் வைகுநா ளறைபுனற் கூடற்
புனித நாயக னருட்டிற முயிர்க்கெலாம் பொதுவாய்
இனிய வாவன வென்பதை யாவருந் தேற
வனிதை பான்மொழி மங்கைதன் மணாளனை வினவும்.

(இ - ள்.) அவர் அனையராய் வைகுநாள் - அவர்கள் அத்தன்மையராய் இருக்கும் நாளில், அறை புனல் கூடல் புனித நாயகன் - ஒலிக்கும் நீர் சூழ்ந்த மதுரையில் எழுந்தருளிய நின்மலனாகிய சோமசுந்தரக்கடவுளின், அருள் திறம் - திருவருளின் வகைகள், உயிர்க்கு எலாம் பொதுவாய் இனிய ஆவன என்பதை - எல்லா உயிர்கட்கும் பொதுவாய்நின்று இன்பந்தருவன என்று ஞான நூல்கள் கூறுவதனை, யாவரும் தேற - அனைவருந்தெளிந்துய்ய, வனிதை பால் மொழி மங்கை தன் மணாளனை வினவும் - சத்தியாகிய பால் போலும் மொழிகளையுடைய அங்கயற்கண்ணம்மை தன் கேள்வனை வினவாநிற்கும்.

மங்கையாகிய வனிதை என்றுரைத்தலுமாம். (௩)

வெவ்வி லங்கினும் வெய்யதா* யசேதன விலங்காம்
இவ்வி லங்கெயிற் றேனமென் குருளைகட் கிரங்கிக்
கைவி லங்கினை யெய்தநீ கருணையாய் முலைதந்
திவ்வி லங்கறி வகற்றிய தியாதென விறைவன்.

(இ - ள்.) வெவ்விலங்கினும் வெய்யதாய் - கொடிய விலங்குகளினுங் கொடியதாய், அசேதன விலங்கு ஆம் - அறிவில்லாத விலங்காகிய, இவ் இலங்கு எயிற்று ஏனம் மென்குருளைகட்கு - இந்த விளங்கும் பற்களையுடைய பன்றியின் இளமை வாய்ந்த குட்டிகளுக்கு, இரங்கி - இரக்கமுற்று, கைவிலங்கினை எய்தநீ - (சமணரேவிய) யானையை எய்து வீழ்த்தியநீ, கருணை - அருளாலே, ஆய் - தாய்ப் பன்றியாகி, முலைதந்து - முலைப்பால் கொடுத்து, இவ்விலங்கு அறிவு அகற்றியது யாது என - இந்த விலங்கின் அறிவைப்போக்கியருளியது என்னை என்று வினவ, இறைவன் - சோமசுந்தரக்கடவுள்.

முன்பு ஓர் பாண்டியனுக்கிரங்கி யானையைக்கொன்றருளிய தேவரீர் இன்று ஓர் பாண்டியனால் வேட்டத்திற் கொல்லப்பட்ட கொடிய விலங்காகிய பன்றியின் குருளைகட்கு இரங்கி முலைதந்ததும் அவற்றிற்கு இழிந்த அறிவை நீக்கி நல்லறிவு தந்ததும் எக்காரணத்தால் என வினவினரென்க. கைவிலங்கு - யானை. கருணையாய் என்பதற்கு இரக்கமுடையையாய் என்றுமாம். எய்தநீ இரங்கி முலைதந்து அறிவகற்றியது என இயையும். (௪)

அகில வேதமு மாகம பேதமு நம்மைச்
சகல சீவத யாபர னென்றுரை சால்பால்
இகலில் சேதன மசேதன மாகிய விரண்டும்
புகலில் வேறல வெமக்கவை பொதுமைய வதனால்.

---

(பா - ம்.) * வெய்யவாய்.

(இ - ள்.) அகில வேதமும் ஆகம பேதமும் - எல்லா வேதங்களும் பலவகைப் பட்ட ஆகமங்களும், நம்மை சகல சீவதயாபரன் என்று உரை சால்பால் - நம்மை எல்லா உயிர்களிடத்தும் ஒரே தன்மையான அருளையுடைய இறைவன் என்று கூறுந் தகுதியால், இகல் இல் - வெறுப்பில்லாத, சேதனம் அசேதனம் ஆகிய அவை இரண்டும் - அறிவுள்ளதும் அறிவில்லாததுமாகிய அவ்விரண்டும், புகலில் - கூறுமிடத்து, எமக்குவேறு அல - எமக்குவேறல்ல; பொதுமைய - ஒரு தன்மையனவே; அதனால் - அக்காரணத்தால்.

சேதனம் அசேதனமாகிய இரண்டும் எமக்கு வேறல என்பது வேதாகமங்கள் எம்மைச் சகல சீவதயாபரன் என்றுரைத்தலால் தெளியப்படும் என்றான் என்பது கருத்தாகக்கொள்க. (ரு)

தாயி ழந்துவெம் பசித்தழ லகஞ்சுடத் தழன்று
காயு மாதபம் புறஞ்சுடக் கானிடைக் கிடந்து
தீயு மேனமென் குருளைக டெருமர லிரங்கி
ஆயு மாய்முலை யளித்துயி ரளித்தன மதனால்.

(இ - ள்.) தாய் இழந்து வெம்பசித் தழல் அகம் சுட - தாயை இழந்து கொடிய பசித்தீ அகத்தின்கண் சுட்டு வருத்தவும், தழன்று காயும் ஆதபம் புறம்சுட - கொதித்து எரிக்கின்ற வெய்யில் புறத்திற்சுட்டு வருத்தவும், கானிடைக் கிடந்து தீயும் - காட்டின்கண் பற்றுக்கோ டின்றிக் கிடந்து வெதும்பா நின்ற, ஏனம் மென் குருளைகள் - இளமையாகிய பன்றிக் குட்டிகள், தெருமர இரங்கி - அங்ஙனம் வருந்தியதனால் இரங்கி, ஆயுமாய் முலைஅளித்து உயிர் அளித்தனம் - தாயுமாகி முலைப்பால் கொடுத்து உயிரைப் புரந்தனம், அதனால் - அங்ஙனம் நாம் அருளினமையால்.

ஆயும் என்பதன் உம்மை இழிவு சிறப்பு. (சு)

அளவி லாற்றலுந் திறனுநல் லரும்பெறற் கல்வி
விளைவு ஞானமுங் கிடைத்தனர் மீனவற் கினிமேல்
வளைவி லாதகோ லமைச்சராய் வளம்பல பெருக்கிக்
களைவில் பாசநீத் தெம்பெருங் கணத்தவ ராவார்.

(இ - ள்.) அளவு இல் ஆற்றலும் திறனும் - அளவிறந்த வலியும் வெற்றியும், பெறல் அரும் நல் கல்வி விளைவும் - பெறுதற்கரிய நல்ல கல்வியின் முதிர்வும், ஞானமும் - மெய்யுணர்வும், கிடைத்தனர் - கைவரப் பெற்றனர்; இனிமேல் மீனவற்கு - இனி இராசராசபாண்டியனுக்கு, வளைவு இலாத கோல் அமைச்சராய் - செங்கோல் ஓச்சும் அமைச்சர்களாகி, பலவளம் பெருக்கி - பலவகை வளங்களையும் பெருக்கி, களைவு இல் பாசம் நீத்து - போக்குதற்கரிய பாசங்களை ஒழித்து, எம் பெருங்கணத்தவராவார் - எமது பெரிய சிவகணத்தவராவர்.

கிடைத்தனர் - கிடைக்கப் பெற்றனர். வளைவிலாதகோல் - செங்கோல். (எ)

என்று நாயக னுயகிக் கிறைகொடுத் தியம்பி
அன்று மீனவன் கனவில்வந் தரசகேள் பன்றிக்
குன்றி லேனமா முகத்தராய்ப் பன்னிரு குமரர்
வென்றி வீரராய் வைகுநர் மிக்கறி வுடையார்.

(இ - ள்.) என்று நாயகன் நாயகிக்கு இறைகொடுத்து இயம்பி - என்று இங்ஙனம் இறைவன் இறைவிக்கு விடை கூறி யருளி, அன்று மீனவன் கனவில் வந்து - அன்று பாண்டியன் கனவின்கண் வந்து, அரச கேள் - மன்னனே கேட்பாயாக; பன்றிக் குன்றில் - பன்றி மலையில், மா ஏன முகத்தராய் - பெரிய பன்றி முகத்தினை யுடையராய், வென்றி வீரராய் - வெற்றி மிக்க வீரர்களாய், பன்னிரு குமரர் வைகுநர் - பன்னிரண்டு மைந்தர்கள் இருக்கின்றனர்; மிக்க அறிவு உடையார் - அவர் நிரம்பிய அறிவினை யுடையராவர்.

இறை - விடை. மிக்க என்பதன் அகரம் தொக்கது. (௮)

அவரை நின்கடைக் கமைச்சராக் கோடியென் றளவில்
சிவப ரஞ்சுட ரருள்செயச் செழியர்கோ வேந்தன்
கவல ருங்களிப் புடையனுய்க் கண்மலர்ந் தெழுமான்
தவழ் நெடுந்திரைக் கருங்கட றத்திநீந் தெல்லை.

(இ - ள்.) அவரை - அம்மைந்தர்களை, நின்கடைக்கு அமைச்சராக்கோடி என்று - நினது வாயிலுக்கு அமைச்சராகக் கொள்ளக் கடவையென்று, அளவு இல் சிவபரஞ் சுடர் அருள்செய - அளவிறந்த பரஞ்சோதியாகிய சிவபெருமான் அருளிச் செய்ய, செழியர் கோ வேந்தன் - பாண்டியர் பெரு வேந்தனுகிய இராசராசன், கவல் அருங்களிப்பு உடையனுய் - கவற்சியில்லாத மகிழ்ச்சி யுடையனுய், கண் மலர்ந்து - துயிலுணர்ந்து, எழுமான் - (சூரியன் தேரிற் பூட்டிய) ஏழு குதிரைகளும், நெடுந்திரை தவழ் கருங்கடல் - நெடிய அலைகள் தவழுங் கரிய கீழைக் கடலை, தத்தி நீந்து எல்லை - தாவி நீந்தும் வைகறைப் பொழுதில்.

கடை என்றது ஈண்டு அரண்மனை அல்லது வினைசூழ் மன்றைக் குறிக்கும். கோவேந்தன் - பெருவேந்தன். (௯)

மாண்ட கேள்விசான் மந்திரர்க் குணர்த்தியம் மலைமேற்
காண்ட கேனமா வீரரைக் கொணர்கெனக் கருணை
பூண்ட காவல னமைச்சரும் போயவர்க் கண்டு
வேண்ட வீரரு மீண்டினுர் மீனவன் றிருமுன்.

(இ - ள்.) மாண்ட கேள்வி சால் மந்திரர்க்கு உணர்த்தி - மாட்சிமைப் பட்ட கேள்வி நிறைந்த மந்திரிகளுக்கு (அக்கனவினை) அறிவித்து, அம்மலைமேல் - அப்பன்றி மலையிலுள்ள, காண் தகுமா ஏன வீரரைக் கொணர்க என - அழகு பொருந்திய பெருமை மிக்க அப்பன்றி வீரரைக் கொணர்திர் என்று கட்டளையிட,

கருணைபூண்ட காவலன் அமைச்சரும் போய் - அருளையே தனக்கு அணிகலமாகப் பூண்ட அம்மன்னனுடைய மந்திரிகள் அங்குச் சென்று, அவர்க் கண்டு வேண்ட - அவரைக்கண்டு வருமாறு வேண்ட, வீரரும் மீனவன் திருமுன் ஈண்டினர் - அவ் வீரர்களும் பாண்டியன் திருமுன் வந்தனர்.

கொணர்கென, அகரந் தொகுத்தல். கருணைபூண்ட காவலன் அமைச்சர் என்பதற்கு அரசன் ஆணையை மேற்கொண்ட அமைச்சர் என்றுரைத்தலும் பொருந்தும். (௰)

வந்தி றைஞ்சிய வராகமா மைந்தரை நேர்கண்
டந்த மில்களிப் படைந்துவேந் தமைச்சியற் கிழமை
தந்து வேறுபல் வரிசையுந் தக்கவா நல்கிக்
கந்து சீறிய கடகரிக் கைதவன் பின்னர்.

(இ - ள்.) வந்து இறைஞ்சிய மாவராக மைந்தரை - அங்ஙனம்வந்து வணங்கிய பெருமை பொருந்திய அப்பன்றி வீரரை, வேந்து - இராசராசபாண்டியன், நேர்கண்டு அந்தம் இல் களிப்பு அடைந்து - எதிர் கண்டு அளவில்லாத மகிழ்ச்சியுற்று, அமைச்சு இயல் கிழமை தந்து - அமைச்சியல் உரிமையை நல்கி, பல்வேறு வரிசையும் தக்கவா நல்கி - பலவேறு வரிசைகளையுந் தக்கவாறு கொடுத்து, கந்து சீறிய கடகரிக் கைதவன் - கட்டுத்தறியைச் சினந்த மதயானையையுடைய பாண்டியன், பின்னர் - பின் (அவர்க்கு.)

தக்கவா - தகுதிக் கேற்றவாறு; றுவ்வீறு தொக்கது. (கக)

பழைய மந்திரக் கிழார்மடப் பாவைபோல் வாரை
விழவு சால்கடி மங்கலம் விதியினற் புணர்த்தி
அழகி தாமென நடத்தின னனையரும் வீரக்
கழலி னுற்கொரு கவயமுங் கண்ணுமாய் நடப்பார்.

(இ - ள்.) பழைய மந்திரக் கிழார் மடப்பாவை போல்வாரை - முன்னரே மந்திரக் கிழமையுடைய அமைச்சர் பெற்ற இளமை வாய்ந்த பதுமைபோன்ற பெண்களை, விதியினால் - மறைநூல் விதிப்படி, விழவு சால் கடிமங்கலம் புணர்த்தி - சிறப்பு மிக்க கடிமணம் செய்வித்து, அழகிது ஆம் என நடத்தினன் - (பார்த்தவர்) அழகிது என்று சொல்லுமாறு நடத்தினன்; அனையரும் வீரக் கழலினற்கு - அவ் வீரர்களும் வீரக் கழலை யணிந்த பாண்டியனுக்கு, ஒரு கவயமும் கண்ணுமாய் நடப்பார் - ஒப்பற்ற கவசமுங் கண்ணும்போல நடப்பாராயினர்.

பாவைபோல்வாரை மங்கல விதியினற் சேர்த்து என்றுரைப்பாருமுளர். அரசற்கு இடையூறு வராது தடுத்தலின் கவயம் போன்றும், மேல்வரக் கடவனவற்றை முன் அறிந்து தெரிவித்தலின் கண்போன்றும் நடப்பார் என்க;

"சூழ்வார் கண்ணாக வொழுகலான்"

என முப்பால் கூறுவதுங் காண்க. (கஉ)

[வேறு]

உடம்பா றிரண்டிற் குயிரொன்றென வொன்றி யைவாய்
விடம்பா யரவம் விழுங்கும்மிரை யொத்து நெஞ்சந்
திடம்பாடு கொள்ள வினைவாங்கிச் செழியன் கல்வி
இடம்பாடு நல்கும் பயன்போன்மகிழ் வெய்த நின்றார்.

(இ - ள்.) உடம்பு ஆறிரண்டிற்கு உயிர் ஒன்று என ஒன்றி - இவ்வுடல் பன்னிரண்டிற்கும் உயிர் ஒன்றே என்று அனைவருங் கருதுமாறு அப்பன்னிருவரும் ஒன்றுபட்டு, விடம்பாய் ஐவாய் அரவம் - நஞ்சு பரந்த ஐந்துவாய்களையுடைய பாம்பானது, விழுங்கும் இரை ஒத்து - விழுங்கும் உணவினைப் போன்று, நெஞ்சம் திடம் பாடு கொள்ள - நெஞ்சம் உறுதியைப் பொருந்த, வினைவாங்கி - வினையினை ஏற்றுக்கொண்டு, செழியன் கல்வி இடம்பாடு நல்கும் பயன்போல் - பாண்டியனது கல்விப் பொருளும் செல்வப் பொருளும் (அவனுக்குப்) பயன் அளித்தல்போலப் (பயனை நல்கி), மகிழ்வு எய்த நின்றார் - (அதனால்) அவன் மகிழ்ச்சியடையத் தமக்குரிய அமைச்சியனெறியில் தவறாது ஒழுகினர்.

அரவின் ஐந்து வாயுள் ஒருவாய் இரை விழுங்குதற்கு ஏனைவாய்கள் அமைந்திருத்தல் போன்று ஒருவர் பெறும் சிறப்பு முதலியவற்றுக்கு ஏனையர் அமைந்திருத்தலாகிய திண்ணிய நெஞ்சு உடையராய் என்பார், 'ஐவா யரவம் விழுங்கும் இரை யொத்து நெஞ்சம் திடம்பாடு கொள்ள' என்றார். வினைவாங்கி - கருமத்தை ஏற்று நடாத்தி. இடம்பாடு - செல்வம். இச்செய்யுளுக்குப் பிறர் கூறிய உரை சிறிதும் பொருந்தாமை ஓர்க. (௧௩)

நல்லாவின் பாலி னறுந்தேன்கலந் தென்னப் பன்னூல்
வல்லாரு மாகி மதிநுட்பரு மாகிச் சோர்வில்
சொல்லா லடையார் மனமுங்களி தூங்கச் சொல்லிப்
பல்லார் பிறர்சொற் பயனாய்ந்து கவர வல்லார்.

(இ - ள்.) நல் ஆவின் பாலில் நறுந்தேன் கலந்தென்ன - நல்ல ஆனின் பாலில் நறுந்தேன் கலந்தாற்போல, பல்நூல் வல்லாருமாகி மதிநுட்பருமாகி - பலநூல்களும் கற்று வல்ல செயற்கை யறிவுடையராய் அதனோடு இயற்கையாகிய நுண்ணறிவும் கலத்தலுடையராய், சோர்வு இல் சொல்லால் - சோர்வில்லாத சொற்களால், அடையார் மனமும் களிதூங்கச் சொல்லி - பகைவர் மனமுங் களிப்படையுமாறு பேசி, பிறர் பல்லார் சொல் பயன் ஆய்ந்து கவர வல்லார் - பிறர் பலருங் கூறுஞ் சொற்களிலுள்ள குற்ற நோக்காது அவற்றின் பயனைமட்டும் ஆராய்ந்து கொள்ளுதலில் வல்லார்.

இச்செய்யுளானது,

"மதிநுட்பம் நூலோ டுடையார்க் கதிநுட்பம்
யாவுள முன்னிற் பவை"

"ஆக்கமுங் கேடு மதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு"
"வேட்பத்தாஞ் சொல்லிப் பிறர்சொற் பயன்கோடல்
மாட்சியின் மாசற்றார் கோள்"

என்னும் திருக்குறட் பாக்களின் பொருளைத் தழுவியுள்ளது. (கச)

பழையே மிறையுட் கொளப்பட்ட*மென் றேமாப் பெய்தார்
உழையேவல் செய்யுஞ் சிறார்போல வொதுங்கி வேந்தன்
விழைவே ததனை விடம்போல வெறுத்து வெஃகார்
அழல்போ லணுகா ரகலார்நிழ லன்ன நீரார்.

(இ - ள்.) நிழல் அன்ன நீரார் - அரசனது உடல் நிழல் போன்று விடாது நிற்கும் அவ்வமைச்சர், பழையேம் - நாம் பழைமை உடையேம், இறை உட்கொள்ளப்பட்டம் என்று ஏமாப்பு எய்தார் - அரசனால் நன்கு மதிக்கப்பட்டேம் என்று கருதிக் களிப்படையாமல், உழை ஏவல் செய்யும் சிறார்போல ஒதுங்கி - அருகிலிருந்து ஏவியவற்றைச் செய்யுஞ் சிறுவர்களைப்போல ஒரு சிறை ஒதுங்கி நின்று, வேந்தன் விழைவு ஏது - வேந்தனால் விரும்பப்பட்ட பொருள் எதுவோ, அதனை வெஃகார் விடம்போல வெறுத்து - அதனை விரும்பாது நஞ்சினை வெறுத்தல்போல வெறுத்து, அழல்போல் அணுகார் அகலார் - அவனைத் தீயைப்போலக் கருதி நெருங்கவுமாட்டார் நீங்கவுமாட்டார்.

பட்டேம் என்றாவது பட்டனம் என்றாவது இருக்கற்பாலது பட்டம் என விகாரமாயிற்று. அழல் என்றது குளிரைப் போக்குதற்குக்காயும் தீயினை. இச்செய்யுள்,

"பழைய மெனக்கருதிப் பண்பல்ல செய்யும்
கெழுதகைமை கேடு தரும்"
"கொளப்பட்டே மென்றெண்ணிக் கொள்ளாத செய்யார்
துளக்கற்ற காட்சி யவர்"
"இளையர் இனமுறையர் என்றிகழார் நின்ற
ஒளியோ டொழுகப் படும்"
"மன்னர் விழைப விழையாமை மன்னரால்
மன்னிய வாக்கந் தரும்"
"அகலா தணுகாது தீக்காய்வார் போல்க
இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்"

என்னும் பாக்களின் பொருளைத் தழுவி வந்தது. இவ்விரு செய்யுளிலும் காட்டிய திருக்குறட்பாக்களுக்குப் பரிமேலழகர் கூறிய உரையும் உணரற்பாலது. (கரு)

---

(பா - ம்.) *இறையூழ் கொளப்பட்டம்.

மறுக்குஞ் செயனீத்து நடக்கையின் வையத் தோரை
ஒறுக்கும் பொருளும் பணிகேட்கையி னொன்ன லாரைச்
செறுக்கும் பொருளுங் கவரார்விளை செல்வ மாக்கள்
இறுக்கும் பொருளே யிறைவர்க்கிவ ரீட்டுஞ் செல்வம்.

(இ - ள்.) மறுக்கும் செயல் நீத்து நடக்கையின் - குடிகள் தாம் மறுக்கப்பட்ட செயல்களை விலக்கி விதித்தவழி நடத்தலால், வையத்தோரை ஒறுக்கும் பொருளும் - அவரை ஒறுத்தலான் வரும் பொருளையும், பணிகேட்கையின் - பகைவர் தாம் ஏவிய ஏவலைக்கேட்டு ஒழுகுதலால், ஒன்னலாரைச் செறுக்கும் பொருளும் - அவரைச் செறுத்தலான்வரும் பொருளையும், கவரார் - விரும்பாராய், விளை செல்வமாக்கள் இறுக்கும் பொருளே - விளைதலாலாகிய செல்வத்தையுடைய குடிகள் அவ்விளைவில் ஆறிலொரு கடமையாக இறுக்கும் பொருளே, இவர் இறைவற்கு ஈட்டும் செல்வம் - இவ்வமைச்சர் தம் அரசனுக்குத் தொகுக்குஞ் செல்வமாகும்.

ஒறுக்கும் பொருள் - தண்டமாக விதிக்கும் பொருள். ஒன்னலாரைச் செறுக்கும் பொருள் - பகைவரைவென்று பெறும் திறைப்பொருள். பெரும்பான்மை பற்றி ஆறிலொன்றாகிய விளைபொருளைக் கூறினார்; உடையாரின்மையின் தானே வந்துற்ற பொருளும், சுங்கப்பொருளும் அரசர்க்குரியவெனக் கொள்க.

"உறுபொருளும் உல்கு பொருளுந்தன் னொன்னார்த்
தெறுபொருளும் வேந்தன் பொருள்"

என்பதிலுள்ள ஒன்னார்த்தெறு பொருளுடன் குடிகளை ஒறுக்கும் பொருள் இவர் ஈட்டும் பொருளல்ல என விலக்கினர். விளை செல்வமாக்கள் இறுக்கும் பொருள் என்றமையால் விளைவுகுன்றி வறுமையுற்றுக் குடிகள் உவகையுடன் கொடுக்கவியலாவிடத்து ஆறிலொன்றாகிய கடமையும் கொள்ளார் என்பதாயிற்று. (கசு)

மறத்தாம வேலான்* மனக்கொள்கைதந் நெஞ்சுள் வான
நிறத்தாடி நீழ லெனத்தோற்ற நிறுத்து மற்ற
தறத்தா றெனிலாற் றுவரன்றெனி லாக்க மாவி
இறத்தான் வரினு மனத்தானு மிழைக்க வெண்ணார்.

(இ - ள்.) மறத்தாம வேலான் - கொலையிற் பயின்ற ஒளியினையுடைய வேற்படையேந்திய மன்னனது, மனக்கொள்கை - மனக்கருத்து, தம் நெஞ்சுள் - தமது நெஞ்சின்கண், வானம் நிறத்து ஆடி நிழல் எனத்தோற்ற - வானம் போன்றதும் ஒளியையுடையதுமாகிய கண்ணாடியில் நிழல்போல விளங்கித் தோன்ற, நிறுத்து - அதனைச் சீர்தூக்கி, அது அறத்து ஆறு எனில் ஆற்றுவர் - அஃது அறநெறியிற்பட்டதாயின் செய்வர்; அன்று எனில் - அந்நெறியிற்படாதாயின், ஆக்கம் ஆவி இற வரினும் - (அது செய்யாவழி) தம் பொருளும் உயிரும் அழிய வருமாயினும், மனத்தானும் இழைக்க எண்ணார் - (அக்கேடு வருதலையஞ்சி) அதனைச்செய்ய மனத்தினாலுங் கருதார்.

---

(பா - ம்.) * மறத்தான வேலான்.

தனக்கென உருவமின்மையாற் கண்ணாடி வானம்போல்வதாயிற்று. ஆடியில் அடுத்த பொருளின் நிழல் விளங்கித் தோன்றுதல்போல அரசன் மனக்கருத்து இவர் நெஞ்சிலே தோன்றிற்று என்றார்; அகத்து நிகழ்வதனை ஐயப்படாதுணரும் தெய்வத் தன்மை கூறியவாறு.

"அறிகொன் றறியா னெனினும் உறுதி
உழையிருந்தான் கூறல் கடன்"

என்னும் திருக்குறளும்,

"தம்முயிர்க் குறுதி யெண்ணார் தலைமகன் வெகுண்டபோதும்
வெம்மையைத் தாங்கி நீதி விடாதுநின் றுரைக்கும் வீரர்"

என்னும் இராமாயணச் செய்யுளும் இங்கு நோக்கற்பாலன. (௧௭)

[எழுசீரடியாசிரிய விருத்தம்.]

இன்னவா றொழுகும் பன்னிரு வோரு மீகையுந் தருமமும் புகழுந்
தென்னர்கோ மகற்கு வைகலும் பெருகத் திசையெலாம் விசயமுண் டாக்கிப்
பன்னகா பரணன் சிவபுர மடைந்து பரன்கண நாதருட் கலந்து
மன்னிவீற் றிருந்தார் மன்னர்மன் னவனும் வான்பத மடைந்துவீற் றிருந்தான்.

(இ - ள்.) இன்னவாறு ஒழுகும் பன்னிருவோரும் - இங்ஙனம் ஒழுகும் அமைச்சர் பன்னிருவரும், தென்னர் கோமகற்கு - பாண்டியர் பெருமானுக்கு, ஈகையும் தருமமும் புகழும் வைகலும் பெருக - பொருளும் அறமும் புகழும் நாடோறும் பெருகுமாறு, திசை எலாம் விசயம் உண்டாக்கி - திசைதோறும் வெற்றியை விளைத்து, பன்னக ஆபரணன் சிவபுரம் அடைந்து - பாம்பணியை யுடையவனாகிய இறைவனது சிவலோகத்தை அடைந்து, பரன்கண நாதருள் கலந்து மன்னி வீற்றிருந்தார் - அவனது சிவகணங்களுட் கலந்து நிலை பெற்று வீற்றிருந்தனர்; மன்னர் மன்னவனும் - வேந்தர் வேந்தனாகிய இராசராச பாண்டியனும், வான்பதம் அடைந்து வீற்றிருந்தான் - இந்திரபதவியைப் பெற்று வீற்றிருந்தான்.

ஈகை - பொன். பொருளால் அறமும் அறத்தாற் புகழும் அவற்றால் வெற்றியும் உண்டாதலின் அம்முறையே கூறினர். பன்னகாபரணன், தீர்க்க சந்தி. (௧௮)

ஆகச்செய்யுள் - ௨௨௭௩.

## நாற்பத்தேழாவது

# கரிக்குருவிக் குபதேசஞ்செய்த படலம்

[கொச்சகக் கலிப்பா]

வரிக்குருகிப் பத்திரற்குப் பலகையிட்ட மணிகண்டன்
அரிக்குருளை வடிவான வடல்வீரர்க் கரசன்பார்
பரிக்குமமைச் சியலளித்த பரிசுரைத்தாம் பசுபதிபாற்
கரிக்குருவி குருமொழிகேட் டருளடைந்த கதைபகர்வாம்.

(இ - ள்.) வரிக்கு உருகிப் பத்திரற்குப் பலகையிட்ட மணிகண்டன் - இசைப்பாட்டிற்கு நெகிழ்ந்து பாணபத்திரனுக்குப் பலகையிட்டருளிய நீலமணி போலுந்திருமிடற்றினையுடைய இறைவன், அரிக்குருளை வடிவான அடல் வீரர்க்கு - பன்றிக்குட்டிகளின் வடிவாகிய வெற்றிவாய்ந்த பன்னிரண்டு வீரர்களுக்கும், அரசன்பார்பரிக்கும் அமைச்சு இயல் அளித்த பரிசு உரைத்தாம் - பாண்டியனது நாட்டினை ஓம்பும் அமைச்சியலை அளித்தருளிய திருவிளையாடலைக் கூறினோம்; பசுபதிபால் - அவ்விறைவனிடத்து, கரிக்குருவி குருமொழிகேட்டு அருள் அடைந்த கதை பகர்வாம் - கயவாயென்னும் பறவை குரு மொழியினைக்கேட்டு அவன் திருவருளைப் பெற்ற திருவிளையாடலை (இனிக்) கூறுவோம்.

வரி - இசைப்பாட்டு. அரி - பன்றி. பசு - பாசத்தாற் கட்டுண்ட உயிர்கள்; பசுபதி - ஆன்மகோடிகளுக்கெல்லாம் இறைவன். (க)

[அறுசீரடியாசிரிய விருத்தம்.]

மன்னவ னிராச ராசன் வானவர்க் கரச னான
பின்னவன் குமர னான பெருவலி மடங்க லன்னான்
துன்னல ரடுபோர் சாய்க்குஞ் சுகுணபாண் டியனீர் ஞாலம்
இன்னறீர்த் தறக்கோ லோச்சி யீர்ங்குடை நிழற்று நாளில்.

(இ - ள்.) மன்னவன் இராசராசன் - வேந்தனாகிய இராசராச பாண்டியன், வானவர்க்கு அரசனானபின் - இந்திரபதவியைப் பெற்றபின்னர், அவன் குமரனான சுகுண பாண்டியன் - அவன் புதல்வனாகிய சுகுண பாண்டியனென்பான், துன்னலர் அடுபோர் சாய்க்கும் பெருவலி மடங்கல் அன்னான் - பகைவரது அடுகின்ற போரினை அழிக்கும் பெரியவலியினையுடைய சிங்கம்போல்வானாய், நீர்ஞாலம் இன்னல் தீர்த்து - கடல்சூழ்ந்த புவியிலுள்ள உயிர்களின் துன்பத்தைப் போக்கி, அறக்கோல் ஓச்சி - செங்கோல் நடாத்தி, ஈர் குடை நிழற்றும் நாளில் - தண்ணிய குடையால் நிழலைச் செய்யுங் காலையில்.

குமரனை பாண்டியன் அடுபோர் சாய்க்கும் பாண்டியன் எனத் தனித்தனி இயைத்தலுமாம். அறக்கோல் - அறத்தின் வழுவாத கோல்; செங்கோல். (உ)

ஆற்றல்சா லொருவன் மேனா ளாற்றவு மறனே யாற்றி
மாற்றமில் சிறிது பாவஞ் செய்ததன் வலத்தால்* வந்து
தேற்றமில் கயவா யாகிச் செனித்தலாற் காக மாதி
கூற்றென வூற்றஞ் செய்யக் குருதி சோர் தலைய தாகி.

(இ - ள்.) ஆற்றல் சால் ஒருவன் - வலிமை மிக்க ஒருவன், மேல் நாள் - முன் பிறப்பில், அறன் ஆற்றவும் ஆற்றி - அறத்தை மிகவுஞ்செய்து, மாற்றம் இல் சிறிது பாவம் செய்து - மாறுதலில்லாத சிறிது பாவத்தையுஞ் செய்து, அதன்வலத்தால் வந்து - அதன் வலியால் வந்து, தேற்றம் இல் கயவாயாகி - அறிவில்லாத கரிக்குருவியாய், செனித்தலால் - பிறத்தலால், காகம் ஆதி - காக்கை முதலிய பறவைகள், கூற்றென ஊற்றம் செய்ய - கூற்றுவனைப்போல (அதற்கு) இடையூற்றினை விளைக்க, குருதி சோர் தலையதாகி - (அதனால் அது) குருதிவடிகின்ற தலையினை யுடையதாகி.

மாற்றம் இல் - தன்பயனை விளைத்தன்றி நீங்குதல் இல்லாத. அது என்னும் எழுவாய் வருவித்துரைக்க. (ங)

புட்கெலா மெளிதா யூறு பாடஞ்சிப் புரத்துள் † வைகி
உட்கிநீள் வனத்துட் போகி வழிமருங் கொருசார் நிற்கும்
கட்கவிழ்ந் தொழுகப் பூத்த கவிழிணர் மரமேல் வைகி
வெட்கமீ தூரச் சாம்பி வெய்துயிர்த் திருக்கு மெல்லை.

(இ - ள்.) புட்கு எலாம் எளிதாய் - பறவைகள் அனைத்திற்கும் எளிய பறவையாய், ஊறுபாடு அஞ்சி - (அவை செய்யும்) இடையூற்றினுக்குப் பயந்து, புரத்துள் வைகி - ஊருள் இருந்து, உட்கி - (பின் அங்கிருத்தற்கும்) அஞ்சி, நீள்வனத்துள் போகி - நீண்ட காட்டினுட்சென்று, வழி மருங்கு ஒரு சார் நிற்கும் - வழியருகின் ஒரு புறத்தில் நிற்கும், கள்கவிழ்ந்து ஒழுகப் பூத்த கவிழ் இணர் மரமேல் வைகி - தேன் கவிழ்ந்து ஒழுகுமாறு மலர்ந்த கவிழ்ந்த பூங்கொத்துக்களையுடைய மரத்தின் மேலே தங்கி, வெட்கம் மீதூரச்சாம்பி - நாணம் மீதூரச் சோர்ந்து, வெய்துயிர்த்து இருக்கும் எல்லை - சுடுமூச்செறிந்து இருக்குமளவில்.

புரம் - ஊர். சாம்பி - கூம்பி. (ச)

விடையவ னீறு பூசு மெய்யவன் பூண்ட கண்டித்
தொடையவன் புறம்பு முள்ளுந் தூயவன் குடையுங் கையில்
உடையவன் றரும தீர்த்த யாத்திரை யொழுக்கம் பூண்ட
நடையவ னொருவ னந்த நறுந்தரு நிழலிற் சார்ந்தான்.

---

(பா - ம்.) * செய்தந்த வலத்தால். † புறத்துள்.

(இ - ள்.) விடையவன் நீறுபூசும் மெய்யவன் - இடபவூர்தியையுடைய இறைவனது திருநீற்றினை அணிந்த மெய்யினையுடையவனாய், பூண்ட கண்டித் தொடையவன் - உருத்திராக்க மாலையையுடையவனாய், புறம்பும் உள்ளும் தூயவன் - புறமும் அகமுந்தூய்மையுடையவனாய், கையில் குடையும் உடையவன் - (இலையே யன்றிக்) கையின்கண் குடையும் உடையவனாய், தரும தீர்த்தயாத்திரை ஒழுக்கம் பூண்ட நடையவன் ஒருவன் - தூய நதிகளிற்சென்று நீராடுஒழுக்கத்தை மேற்கொண்ட நடையினையுடைய ஒருவன், அந்த நறுந்தரு நிழலில் சார்ந்தான் - அந்த நறியமர நிழலை அடைந்தான்.

தரும தீர்த்தம் - புண்ணிய தீர்த்தம். நடையவன் - நடந்து செல்லுதலையுடையவன். (௫)

இருந்தவன் சிலரை நோக்கி யியம்புவா னெவர்க்கும் பேறு
தருந்தலந் தீர்த்த மூர்த்தித் தன்மையிற் சிறந்த வன்பு
வருந்தமிழ் மதுரை பொற்றா மரைத்தடஞ் சுந்த ரேசப்
பெருந்தகை யென்று சான்றோர் பேசுவ ராத லாலே.

(இ - ள்.) இருந்தவன் சிலரை நோக்கி இயம்புவான் - (அங்ஙனஞ் சார்ந்து) இருந்த அப்படிவத்தன் அங்குள்ள சிலரைப் பார்த்துக் கூறுவான்; எவர்க்கும் பேறு தரும் - யாவர்க்கும் விரும்பிய பயன்களை நல்கும், தலம் தீர்த்தம் மூர்த்தித் தன்மையில் சிறந்த - தலமும் தீர்த்தமும் மூர்த்தியுமாகிய தன்மையிற் சிறந்தன, அன்பு வருந்தமிழ் மதுரை - (முறையே) அன்பு வளர்தற்குரிய தமிழையுடைய மதுரையும், பொற்றாமரைத்தடம் - பொற்றாமரைவாவியும், சுந்தரேசப் பெருந்தகை என்று - சோமசுந்தரப் பெருமானும் என்று, சான்றோர் பேசுவர் ஆதலால் - பெரியார் கூறுவர் ஆதலால்.

இருந்தவன் என்பதனை இரட்டுறமொழிதலாக்கி இருந்த பெரிய தவவொழுக்க முடையான் என்றுரைக்க. தலத்தன்மை தீர்த்தத் தன்மை மூர்த்தித்தன்மையிற் சிறந்த தலமும் தீர்த்தமும் மூர்த்தியும் என விரித்துரைக்க. (௬)

ஓரிடத் தினைய மூன்று* விழுப்பமு முள்ள தாகப்
பாரிடத் தில்லை யேனைப் பதியிடத் தொன்றே யென்றுஞ்
சீருடைத் தாகுங் கூடற் செழுநக ரிடத்தம் மூன்றும்
பேருடைத் தாகு மென்றாற் பிறிதொரு பதியா தென்றான்.

(இ - ள்.) ஓர் இடத்து இனைய மூன்று விழுப்பமும் உள்ளதாக - ஒரேயிடத்தில் இந்த மூன்று சிறப்பும் உடையதாக, பாரிடத்து இல்லை - இந்நிலவுலகின்கண் (வேறுபதி) இல்லை; ஏனைப்பதி இடத்து - மற்றைப் பதிகளில், என்றும் ஒன்றே சீர்உடைத்தாகும் - எஞ்ஞான்றும் அம்மூன்றில் ஒன்றே சிறப்புடையதாகும்; கூடல் செழுநகர் இடத்து - கூடலாகிய செழியபதியின்கண், அம்மூன்றும் பேர்

(பா - ம்.) * அனைய மூன்று.

உடைத்தாகும் என்றால் - அம்மூன்றுந் தனித்தனி பெருமையுடையது என்றால், பிறிது ஒரு பதி யாது என்றான் - அதனை யொப்பதாகிய வேறொரு பதி யாதுளது என்றான்.

பாரிடத்து வேறுபதி இல்லை என்றும், அதனையொப்பதாகிய பிறிதொரு பதி என்றும் விரித்துரைக்க. (எ)

இம்மது ரேசன் சேவித் தேத்துவோர்க் கெளிய னாகிக்
கைம்மலர் நெல்லி போலக் கருதிய வரங்க ளெல்லாம்
இம்மையி னுடனே நல்கு மேனைய தலத்து வானோர்
அம்மையி னன்றி நல்கா ராதலா லதிக * மென்றான்.

(இ - ள்.) இம் மதுரேசன் சேவித்து எத்துவோர்க்கு - இந்த மதுரை நாயகனாகிய சோமசுந்தரக் கடவுள் தன்னைவணங்கித் துதிப்போர்க்கு, கைம்மலர் நெல்லிபோல எளியனாகி - கையாகிய மலரின்கண் உள்ள நெல்லிக்கனியின் தோற்றம் போல் எளிமையுடையவனாய்த் தோன்றி, கருதிய வரங்கள் எல்லாம் - அவர்கருதியவரங்கள் அனைத்தையும், இம்மையின் உடனே நல்கும் - இப்பிறப்பிலே உடன் தந்தருளுவன்; ஏனையதலத்துவானோர் - மற்றைய தலத்துக்கடவுளர், அம்மையின் அன்றி நல்கார் - மறுபிறப்பிலன்றி இப்பிறப்பில் நல்கார்; ஆதலால் அதிகம் என்றான் - ஆகையால் சோமசுந்தரக் கடவுளே மேன்மையுடைய மூர்த்தி யாகும் என்று கூறினான்.

நன்குவிளங்குவதென்பதற்கு எடுத்துக்காட்டாக ஆன்றோரால் நிறுவப் பெற்று வழங்கிவருவதொரு வசனம் 'உள்ளங்கை நெல்லிக்கனி' என்பது. இது 'கரதலாமலகம்' என வடமொழியிற் கூறப்படும்.

"தடக்கையின் நெல்லிக் கனியெனக் காயினன்"

என்னும் திருவாசகம் இங்கே சிந்திக்கற்பாலது. வரங்களெல்லாம் கைம்மலர் நெல்லிபோல நல்கும் என இயைத்துரைத்தலும் பொருந்தும். (அ)

மற்றது கேட்டுக் கொம்பர் வைகிய கயவாய் ஞானம்
பெற்றது பறவை யாகிப் பிறந்ததும் பிறவுந் தேற்றம்
உற்றது நாமிச் சன்ம மொழிப்பதற் கறவோ னிங்ஙன்
சொற்றதே யுறுதி யென்று துணிவுகொ டெழுந்த தன்றே.

(இ - ள்.) கொம்பர்வைகிய கயவாய் - அம்மரக்கிளையிற் சாம்பியிருந்த கரிக்குருவி, அதுகேட்டு ஞானம் பெற்றது - அவன் கூறியதைக் கேட்டலால் ஞானத்தைப்பெற்றது; பறவையாகிப் பிறந்ததும் பிறவும் தேற்றம் உற்றது - (அதனால்) தான் பறவையாய்ப் பிறந்தகாரணமும் பிறவும் தெளிந்தது; இச்சன்மம் நாம் ஒழிப்பதற்கு - இக்கொடிய பிறவியை நாம் ஒழிப்பதற்கு, இங்ஙன் அறவோன்

(பா - ம்.) * அதிகன்.

சொற்றதே உறுதி என்று - இங்கு இவ்விரத வொழுக்கினன் கூறியதே உறுதியாவ தென்று கருதி, துணிவுகொடு எழுந்தது - துணிந்து எழுந்தது.

ஞானம் - மூன்றுகாலமும் அறியும் அறிவு. கொம்பர், ஈற்றுப்போலி. மற்று, அன்று, ஏ அசைகள். அன்றே என்பதற்கு அப்பொழுதே என்றுரைத் தலும் ஆம். (கூ)

ஆய்மலர்க் கான நீங்கி யாடக மாடக் கூடற்
போய்மலர்க் கனக கஞ்சப் புண்ணியப் புனறோய்ந் தாம்பல்
வாய்மலர்க் கயலுண் கண்ணாண் மணாளனை வலஞ்செய் தன்பிற்
றோய்மலர்க் கழலி னானை யகத்தினாற் றொழுதர்ச் சித்தே.

(இ - ள்.) ஆய்மலர்க்கானம் நீங்கி - வண்டுகளாராயுந் தேனையுடைய மலர்கள் நிறைந்த காட்டை நீங்கி, ஆடகமாடக் கூடல்போய் - பொன்னாலாகிய மாடங்கள் நிறைந்த மதுரைப்பதியிற் சென்று, மலர்க் கனக கஞ்சப் புண்ணியப் புனல் தோய்ந்து - மலர்களையுடைய பொற்றாமரையின் புண்ணிய நீரில் மூழ்கி, ஆம்பல் மலர்வாய் - ஆம்பல்போன்ற திருவாயினையும், கயல் உண்கண்ணாள் - கயல் போன்ற மையுண்ட கண்களையுமுடைய உமையம்மையின், மணாளனை வலம்செய்து - நாயகனாகிய சோமசுந்தரக் கடவுளை வலஞ்செய்து, அன்பில் தோய்மலர்க் கழலினானை - அன்பாகிய நீரிற்றோயும் தாமரைமலர் போன்ற திருவடிகளையுடைய அவ்விறைவனை, அகத்தினால் தொழுது அர்ச்சித்து - மனத்தினால் வணங்கிப் பூசித்து.

ஆய்மலர் என்பதற்கு மெல்லிய மலர் என்றும், அழகிய மலர் என்றும் உரைத்தலுமாம். (ம)

இன்னண மூன்று வைகல் கழிந்தபி னெம்பி ராட்டி
தன்னமர் காதலானைத் தாழ்ந்தெதிர் நோக்கி யைய
என்னையிக் கயவாய் செய்யுஞ் செயலிதன் வரவியா தென்ன
முன்னவ னதன்றன் செய்தி வரவெலா முறையாற் கூற.

(இ - ள்.) இன்னணம் மூன்றுவைகல் கழிந்தபின் - இங்ஙனம் மூன்று நாட்கள் சென்றபின், எம்பிராட்டி - எமது பிராட்டியார், தன் அமர் காதலானைத்தாழ்ந்து - தம்மால் விரும்பப்பட்ட காதலராகிய சோமசுந்தரக் கடவுளை வணங்கி, எதிர் நோக்கி - நேரே பார்த்து, ஐய - ஐயனே, இக்கயவாய்செய்யும் செயல் என்னை - இக்கரிக்குருவி செய்யும் வழிபாடு எதன்பொருட்டு, இதன் வரவு யாது என்ன - இதன் வரலாறு என்னை என்று வினவ, முன்னவன் - இறைவன், அதன் செய்தி வரவு எலாம் முறையால்கூற - அதனது செய்தியும் வரலாறுமாகிய அனைத்தையும் முறைப் படி கூறி.

வரவியாது என்புழி இகரம் குறுகிநின்றது. அதன்றன், தன் சாரியை. (கக)

பத்திமை நியமம் பூண்ட பறவைமேற் கருணை நாட்டம்
வைத்திமை யாத முக்கண் மறைமுத லொருசேய்க் கன்று
நித்திய நிலைமை நல்கி நேர்ந்தவெங் கூற்றைக் காய்ந்த
சத்திய ஞான மிர்த்திஞ் சய*த்தினை யுபதே சித்தான்.

(இ - ள்.) இமையாத முக்கண்மறை முதல் - இமையாத மூன்று கண்களை யுடைய வேத முதல்வனாகிய அச்சோமசுந்தரக் கடவுள், பத்திமை நியமம்பூண்ட பறவைமேல் - அன்பு செய்தலையே கடப்பாடாகக்கொண்ட அப் பறவையின்மேல், கருணை நாட்டம்வைத்து - அருள்நோக்கம் வைத்து, ஒருசேய்க்கு - ஒருமாணியாகிய மார்க்கண்டனுக்கு, அன்று - அந்நாளில், நித்திய நிலைமை நல்கி - அழிவற்ற தன்மையைக்கொடுத்து, நேர்ந்த வெங்கூற்றைக் காய்ந்த - எதிர்த்த கொடிய கூற்றுவனை ஒறுத்த, சத்திய ஞான மிர்த்திஞ்சயத்தினை - உண்மை ஞானமாகிய மிர்த்திஞ்சய மனுவை, உபதேசித்தான் - உபதேசித்தருளினன்.

மிர்த்திஞ்சயம் - மூன்றெழுத்தான் முடிந்ததோர் வேத மந்திரம். (கஉ)

[கலிவிருத்தம்]

உவமை யற்றவ னுரைத்த மந்திரஞ்
செவிம டுத்தலுஞ் சிற்று ணர்ச்சிபோய்ப்
பவம கற்றிடப் படுக ரிக்குரீஇ
கவலை விட்டரன் கழல்வ ழுத்துமால்.

(இ - ள்.) உவமை அற்றவன் - ஒப்பற்றவனாகிய இறைவன், உரைத்த மந்திரம் செவிமடுத்தலும் - உபதேசித்தருளிய அம்மனுவைக் காதிற்கேட்டவளவில், சிற்றுணர்ச்சி போய் - சிற்றறிவு நீங்கி, பவம் அகற்றிடப்படு கரிக்குரீஇ - பிறவி நீங்கப்பெற்ற அக்கயவாய், கவலைவிட்டு - துன்பமொழிந்து, அரன் கழல்வழுத்தும் - அவ்விறைவன் திருவடிகளைத் துதிக்கும்.

அகற்றிடப்படு - நீக்கப்பட்ட ; நீக்கிய. குரீஇ, இயற்கையளபெடை. ஆல், அசை. (கங)

எண்ணி லாவுயிர்க் கிறைவ போற்றிவான்
தண்ணி லாமதிச் சடில போற்றியென்
புண்ணி யப்பயன் போற்றி யங்கயற்
கண்ணி நாதநின் கருணை போற்றியால்.

(இ - ள்.) எண் இலா உயிர்க்கு இறைவ போற்றி - அளவிறந்த உயிர்களுக்குத் தலைவனே வணக்கம்; வான்தண் நிலாமதிச்சடில போற்றி - வானின் கண் உலாவும் குளிர்ந்த நிலாவையுடைய சந்திரனைத் தரித்த சடையையுடையானே வணக்

(பா - ம்)* மித்திஞ்சயம்.

கம்; என் புண்ணியப் பயன்போற்றி-எனது சிவபுண்ணியத்தின் பயனானவனே வணக்கம்; அங்கயற் கண்ணி நாத - அங்கயற் கண்ணம்மையின் நாதனே, நின் கருணை போற்றி - நினது திருவருளுக்கு வணக்கம்.

போற்றி என்பதற்குக்காக்க என்றுரைத்தலுமாம். என் புண்ணியப்பயன் யான் முற்பிறவிகளிற் செய்த சிவபுண்ணியத்தின் பயனாக வெளிப்பட்டருளியவன் என்றபடி. ஆல், அசை. (கச)

தெளித லின்றியே செய்த தீமையால்
விளியு மென்னையு மாளல் வேண்டுமோ
எளிய ரெங்குளா ரென்று தேர்ந்துதேர்ந்
தளியை யாவதுன் னருளின் வண்ணமே.

(இ - ள்.) செய்த தீமையால் - யான் புரிந்த தீவினையால், தெளிதல் இன்றியே விளியும் என்னையும் - நின்கருணைத் திறத்தை அறியாது மாளாநிற்கும் நாயேனையும், ஆளல்வேண்டுமோ - ஆளுதல் வேண்டுமோ, எளியர் எங்குளார் என்று தேர்ந்து தேர்ந்து அளியை ஆவது - களைகணற்ற எளியார் எங்குளார் என்று தேடித் தேடி அவர்மீது அருளுடையையாயிருத்தல், உன் அருளின் வண்ணமே - நின்திருவருளின் தன்மை போலும்.

இச்செய்யுள்,

"பித்த னென்றெனை யுலகவர் பகர்வதோர் காரண மிதுகேளீர்
ஒத்துச் சென்றுதன் றிருவருட் கூடிடு முபாயம தறியாமே
செத்துப் போயரு நரகிடை வீழ்வதற் கொருப்படு கின்றேனை
அத்த னாண்டுதன் னடியரிற் கூட்டிய வதிசயங் கண்டாமே"

என்னும் திருவாசகக் கருத்தைத் தழுவியிருத்தல் காண்க. (கரு)

உம்மை நல்லற முடைய நீர்மையால்
இம்மை யிம்மனு வியம்பி னாயிது
அம்மை நன்னெறிக் கேது வாதலான்
மும்மை யுந்நல முடைய மொய்ம்பினேன்.

(இ - ள்.) உம்மை நல் அறம் உடைய நீர்மையால் - முற்பிறப்பிற் செய்த நல்ல அறத்தினை யுடைய தன்மையால், இம்மை இம்மனு இயம்பினாய் - இப்பிறப்பில் இம் மந்திரத்தை உபதேசித் தருளினை; இது அம்மை நல்நெறிக்கு ஏது ஆதலால் - இது மறுமையிற் சிவகதியிற் செல்லுதற்குக் காரண மாதலால், மும்மையும்- மூன்று பிறப்பிலும், நலம் அடைந்த மொய்ம்பினேன் - பயன் பெற்ற வலியனாயினேன்.

இப்பிறப்பில் இம்மந்திரம் உபதேசிக்கப் பெற்றமையால் முற் பிறப்பில் இதற்கேதுவாகிய சிவ புண்ணியமும், வரும் பிறப்பில் இதனாலெய்தும் சிவகதிப் பேறும் உடையே னாகலின் அடியேன் மும்மையும் பெரு நலமுடையனாயினேன் என்றது;

"சென்ற காலத்தின் பழுதிலாத் திறனு மினியெதிர் காலத்தின் சிறப்பும்
இன்றெழுந் தருளப் பெற்றபே றிதனு லென்றைக்குந் திருவரு ளுடையோம்"

என்னும் பெரிய புராணச் செய்யுட் கருத்துடன் இஃது ஒற்றுமை யுறுதல் காண்க. (கசு)

ஆயி னும்மெனக் கைய வோர்குறை
தீய புள்ளெலா மூறு செய்தெனைக்
காயு மானமுங் கழியக் கண்டபேர்
ஏயெ னும்படிக் கெளிய னுயினேன்.

(இ - ள்.) ஆயினும் - ஆனாலும், ஐய - ஐயனே, எனக்கு ஓர் குறை - எனக்கு ஒரு குறை பாடு உள்ளது; தீயபுள் எலாம் - கொடிய பறவைகளெல்லாம், எனை ஊறு செய்து காயும் - என்னைத் துன்புறுத்தி வருத்தா நிற்கும், மானமும் கழிய - மானமும் நீங்க, கண்டபேர் ஏ எனும்படிக்கு - பார்த்தவர்கள் ஏ என்று இகழு மாறு, எளியனுயினேன் - யான் அனைத்திற்கும் எளியேனுயினேன்.

ஓர் குறை உளது என விரித்துரைக்க. ஏ, இகழ்ச்சிக் குறிப்பிடைச் சொல். (கஎ)

என்ன வக்குரீஇ யியம்ப வெம்பிரான்
அன்ன புட்கெலாம் வலியை யாகெனப்
பின்னு மக்குரீஇ தாழ்ந்து பேதையேற்
கின்னு மோர்வரந் தருதி யென்றதால்.

(இ - ள்.) என்ன அக்குரீஇ இயம்ப - என்று அந்தக் குருவி கூற, எம்பிரான் - எமது இறைவனுகிய சோமசுந்தரக் கடவுள், அன்ன புட்கு எலாம் வலியை ஆக என - அந்தப் பறவைகள் அனைத்திற்கும் வன்மையை யுடையையாகக் கடவை என்றருள, அக்குரீஇ பின்னும் தாழ்ந்து - அந்தக் கரிக் குருவி மீண்டும் வணங்கி, பேதையேற்கு - அறிவில்லாத எனக்கு, இன்னும் ஓர் வரம் தருதி என்றது - இன்னும் ஒருவரம் தந்தருள்வாய் என இரந்து வேண்டியது.

புட்கு எலாம் - புட்கள் எல்லாவற்றிற்கும்; எல்லாவற்றினும். ஆல், அசை.

வலியை யென்பதென் மரபி னுக்கெலாம்
பொலிய வேண்டுமெப் போது நீசொன
ஒலிய மந்திர மோதி யோதிநாங்
கலியை வெல்லவுங் கருணை செய்கென.

(இ - ள்.) வலியை என்பது - வலியை யாகவென்று நீ அருளியது, என் மரபினுக்கு எலாம் பொலிய வேண்டும் - என் மரபில் வரும் பறவைகள் அனைத்திற்கும் விளங்கவேண்டும்; எப்போதும் - (அதுவன்றி அவைகள்) எஞ்ஞான்றும், நீ சொன ஒலிய மந்திரம் - நீ கூறி யருளிய ஒலியையுடைய மந்திரத்தை, ஓதி ஓதி நாம் கலி -

யை வெல்லவும் - இடையீடின்றிப் பயின்று அச்சத்தையும் துன்பத்தையும் ஒழிக்க வும், கருணை செய்க என — அருள் செய்வாயாக என்று வேண்ட.

நாம் - அச்சம்; யாங்கள் என்றுமாம். செய்கென, அகரம் தொகுத்தல். (கக)

ஆவ தாகவென் றமரர் நாயகன்
மூவெ ழுத்தினன் முடிந்த வம்மனு
தாவி றெய்வத மிருடி சந்தமோ
டோவி லோசைமூன் றொடுதெ ருட்டினன்.

(இ - ள்.) அமரர் நாயகன் - தேவர் தேவனாகிய இறைவன், ஆவதாக என்று - அங்ஙனமே ஆகக் கடவது என்று கூறியருளி, மூவெழுத்தினால் முடிந்த அம்மனு - மூன்று எழுத்தினால் முடிந்த அம்மந்திரத்தை, தாவு இல் தெய்வதம் இருடி சந்தமோடு - கெடுதலில்லாத தெய்வம் முனி பண் என்பவற்றோடும், ஓவு இல் ஓசை மூன்றொடு தெருட்டினன் - நீங்குதலில்லாத எடுத்தல் முதலிய மூன்று ஓசையோடும் தெளிவுறுத்தான்.

மனு - மந்திரம். இம்மந்திரத்தைத் திரியம்பகம் என்றும் கூறுவர். ஒவ்வொரு மந்திரத்திற்கும் தெய்வமும் இருடியும் சந்தமும் உண்டாகையால் இதனை அவற்றோடு தெளிவித்தார் என்க. ஓசை மூன்று - எடுத்தல் படுத்தல் நலிதல்; இவை வடமொழியில் உதாத்தம் அநுதாத்தம் சொரிதம் என்று கூறப்படும். (உ௰)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

குருமொழி பயின்று முள்வாய்க் குருவிதன் குலனுந் தன்போல்
அருமறை முதல்வ னீந்த வாற்றலாற் பறவைக் கெல்லாம்
பெருமைசால் வலியா னென்னும் பெயரவா யுலகின் மன்னக்
கருமணி கண்டன் செம்பொற் கனைகழ லடிசேர்ந் தன்றே.

(இ - ள்.) முள்வாய்க் குருவி - முள்போலக் கூரிய வாயையுடைய அக்கரிக் குருவி, குருமொழி பயின்று - குரவன் உபதேச மொழியை இடைவிடாது பயின்று, தன் குலனும் - தனது சாதிப் பறவைகளும், தன் போல் - தன்னைப் போலவே, அருமறை முதல்வன் ஈந்த ஆற்றலால் - அரிய வேத முதல்வனாகிய சோமசுந்தரக் கடவுளருளிய வலியால், பறவைக்கு எல்லாம் - பறவைகள் அனைத்திற்கும், பெருமை சால் வலியான் என்னும் பெயரவாய் - பெருமை மிக்க (வலிமையுடைமையால்) வலியானென்னும் பெயரினை யுடையவாய், உலகின் மன்ன - உலகிலே நிலை பெற்றிருக்க, கருமணி கண்டன் - நீலமணி போலுந் திருமிடற்றை யுடைய அவ் விறைவனது, செம்பொன் கனை கழல் அடிசேர்ந்தன்று - சிவந்த பொன்னாலாகிய ஒலிக்கின்ற வீரக் கழலணிந்த திருவடியைச் சேர்ந்தது.

ஓர் குருவியும் இத்தகைய பெறற்கரும்பேற்றினை எய்திற்றென வியப்பாராய் 'முள்வாய்க் குருவி' என்றார். முதல்வன் ஈந்த அருமறை ஆற்றலால் என

இயைத்துரைப்பாருமுளர். குருவி சேர்ந்தன்று என முடிக்க. சேர்ந்தன்று - சேர்ந்தது; உடன்பாட்டு முற்று. (உக)

இக்கரிக் குருவி தானோற் றெய்திய வரத்தைத் தன்போல்
ஒக்கலு மெளிதா வெய்தப் பெற்றதா லுலகின் மேன்மைத்
தக்கவ* னொருவன் வாழத் தன்கிளை வாழ்வ தென்ன
மிக்கவ ரெடுத்துக் கூறும் பழமொழி விளக்கிற் றன்றே.

(இ - ள்.) இக்கரிக் குருவி - இந்தக் கரிக்குருவி, தான் நோற்று எய்திய வரத்தை - தான் வருந்தி நோற்றுப் பெற்ற வரத்தினை, தன்போல் ஒக்கலும் எளிதா எய்தப் பெற்றதால் - தன்னைப் போல் தன் இனமும் எளிதாக அடையுமாறு வேண்டிப் பெற்ற அதனால், உலகில் மேன்மைத் தக்கவன் ஒருவன் வாழ - உலகின்கண் மேலாகிய தகுதியுடையான் ஒருவன் வாழ, தன் கிளை வாழ்வது என்ன - அவனது சுற்றம் வாழ்வதாகுமென்று, மிக்கவர் எடுத்துக் கூறும் பழமொழி விளக்கிற்று - அறிவுடையோர் எடுத்துக் கூறுகின்ற பழமொழியை விளக்கியது.

தான் வருந்தி எய்திய வரத்தை ஒக்கல் எளிதாகத் தன் போல் எய்த என்க. பெற்றதால் - பெற்ற அதனால். குருவி பெற்றவதனால் பழமொழி விளக்கிற்று என முடிக்க. அன்று, ஏ அசைகள். (உஉ)

[வேறு]

ஈச னடிக்கன் பில்லார்போ லெளியா ரில்லை யாவர்க்கும்
ஈச னடிக்கன் புடையார்போல் வலியா ரில்லை யாவர்க்கும்
ஈச னடிக்கன் பின்மையினா லெளிதாய்த் திரிந்த விக்கயவாய்
ஈச னடிக்கன் புடைமையினால் வலிதா யிற்றே யெவ்வுயிர்க்கும்.

(இ - ள்.) ஈசன் அடிக்கு அன்பு இன்மையினால் - இறைவன் திருவடியில் அன்பு இல்லாமையினால், எளிதாய்த் திரிந்த இக்கயவாய் - வலியற்றுத் திரிந்த இந்தக் கரிக்குருவி, ஈசன் அடிக்கு அன்பு உடைமையினால் - அவன் திருவடியில் அந்த அன்பு உண்டாகப் பெற்றமையினால், எவ்வுயிர்க்கும் வலிது ஆயிற்று - பறவைகள் எல்லாவற்றுக்கும் வலியை யுடையதாயிற்று (ஆதலால்), ஈசன் அடிக்கு அன்பு இல்லார் போல் - அவ்விறைவன் திருவடியில் அன்பில்லாதார் போல, யாவர்க்கும் எளியார் இல்லை - அனைவர்க்கும் எளியார் (பிறரொருவர்) இல்லை; ஈசன் அடிக்கு அன்புடையார் போல் - அவன் திருவடியில் அன்புடையார் போல, யாவர்க்கும் வலியார் இல்லை - அனைவருக்கும் வலியார் யாரும் இல்லை (என்பது தேற்றம்).

உயிர் என்றது ஈண்டுப் பறவைகளை. அன்பிலார் போல் எளியாரில்லை என்பதற்கும் அன்புடையார் போல் வலியாரில்லை என்பதற்கும் இக்கயவா யொன்றே எடுத்துக் காட்டாயிற் றென்க. (உ௩)

ஆகச் செய்யுள் - உஉ௯௩.

---

(பா - ம்.) * மேன்மை தக்கவன்



கூ. ப. 48 நாரைக்கு முத்திகொடுத்தது

நாற்பத்தெட்டாவது

# நாரைக்கு முத்திகொடுத்த படலம்

[கலி விருத்தம்]

அத்தி தந்த விமான வழகியார்*
பத்தி தந்த பறவைக்கு மந்திர
சித்தி தந்த திறனிது நாரைக்கு
முத்தி தந்த கருணை மொழிகுவேம்.

(இ - ள்.) அத்தி தந்த விமான அழகியார் - எட்டு யானைகளால் தாங்கப் பெற்ற விமானத்தின்கண் எழுந்தருளிய சுந்தர விடங்கப் பெருமானார், பத்தி தந்த பறவைக்கு - அன்பு செய்த கரிக் குருவிக்கு, மந்திர சித்தி தந்த திறன் இது - மந்திர சித்தி அருளிய திருவிளையாடல் இதுவாகும்; நாரைக்கு முத்தி தந்த கருணை மொழிகுவாம் - (இனி) நாரைக்கு முத்தி கொடுத்த திருவிளையாடலைக் கூறுவோம்.

அத்தி - யானை. தந்த - சுமக்கப் பெற்ற. (௧)

தேக்கு நீர்வையை நாட்டொரு தென்புலத்
தாக்கு மாடவைப் பொன்றுள தவ்வயின்
வீக்கு யாழ்செயும் வண்டுக்கு வீழ்நற
வாக்கு தாமரை வாவியொன் றுள்ளதால்.

(இ - ள்.) தேக்கும் நீர்வையை நாட்டு - நிரம்பிய நீரையுடைய வையை யாறு சூழ்ந்த பாண்டி நாட்டின், ஒரு தென் புலத்து - ஒரு சார் தெற்கின் கண், ஆக்கும் மாடவைப்பு ஒன்று உளது - திருமிக்கப் பெற்ற மாடங்களையுடைய பதி ஒன்று உள்ளது; அவ்வயின் - அப்பதியின் கண், வீக்கும் யாழ் செயும் வண்டுக்கு - நரம்பின் கட்டமைந்த யாழ் இசை போல இசைபாடும் வண்டுகளுக்கு, வீழ் நற வாக்கு தாமரை வாவி ஒன்று உள்ளது - விரும்பும் தேனை வாக்குகின்ற தாமரை மலர்கள் நிறைந்த வாவி ஒன்று உள்ளது.

தேங்கும் என்பது வலித்தலாயிற்று. நற, குறியதன் இறுதிச் சினை கெட உகரம் பெறாது நின்றது. ஆல், அசை. (௨)

ஆழ மிக்க கயந்தலை யத்தலை
வாழு மீன மனைத்தையும் வாய்ப்பெய்து
சூழ நந்துமுத் தீனுந் துறைக்கணே
தாழ்வ தோர்செய்ய தாண்மட நாரையே.

---

(பா - ம்.) *விமான மழகியார்.

(இ - ள்.) ஆழம் மிக்க அக்கயந்தலைத் தலை - மிக்க ஆழத்தையுடைய அவ் வாவியின் கண், வாழும் மீனம் அனைத்தையும் - வாழுகின்ற மீன்கள் அனைத்தை யும், வாய்ப் பெய்து - விழுங்கி, நந்து சூழ முத்து ஈனும் துறைக்கணே - சங்குகள் சுற்றிலும் முத்துக்களை ஈனுகின்ற அத்துறையின் கண், ஓர் செய்ய தாள் மடநாரை தாழ்வது - ஒரு சிவந்த கால்களையுடைய இளமை பொருந்திய நாரை தங்கா நின்றது.

கயந்தலை - கயம்; வாவி. தாழ்தல் - தங்குதல். நாரை வாய்ப்பெய்து தாழ் வது என முடிக்க. (௩.)

சிறிய நாண்மழை யின்றியச் சேயிதழ்
வெறிய தாமரை யோடை வியன்கரை
இறைகொ ணாரை யிருவினைப் பௌவமும்
வறிய தாகி வறப்ப வறந்ததால்.

(இ - ள்.) சிறிய நாள் மழை இன்றி - சிலநாள் மழை யின்மையால், அச் சேய் இதழ் வெறிய தாமரை ஓடை - அந்தச் சிவந்த இதழ்களையும் மணத்தையு முடைய தாமரை மலர்கள் நிறைந்த வாவி, வியன்கரை இறைகொள் நாரை - அதன் அகன்ற கரையின் கண் தங்கிய நாரையின், இருவினைப் பௌவமும் வறியதாகி வறப்ப - இரு வினையாகிய கடலும் பயனற்றதாய் வறக்குமாறு, வறந்தது - நீர் வற்றியது.

வெறிய, வெறி என்னும் பண்படியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம், நல் வினையும் பிறவிக் கேதுவாகலின் 'இருவினைப் பௌவமும்' என்றார். வறியதாகி வறத்தல் - பயனின்றி யொழிதல். இந்நாரை வேறிடஞ் சென்று முனிவர்கள் கூறும் புராணப் பொருள் கேட்டு அறியாமை நீங்கி இறைவனை வழிபட்டு முத்தி பெறுதற்கு முதலிற் காரணமா யிருந்தது இவ்வோடை நீர் வற்றியது ஆகலின் 'இருவினைப் பௌவமும் வறப்ப வறந்தது' என்றார். ஓடை வறந்தது என முடிக்க. ஆல், அசை. (௪)

நுரைசெ றித்தன்ன நோன்சிறை நாரையும்
இரைவி ரும்பியவ் வாவி யிகந்தொரீஇ
விரைய வந்தொரு கானிடை வீழ்ந்ததால்
புரையி லோர்க்கிட னாகுமப் பொங்கர்வாய்.

(இ - ள்.) நுரை செறித் தன்னநோன் சிறைநாரையும் - நுரையினைச் செறித்து வைத்தா லொத்த வலிய சிறைகளை யுடைய அந்நாரையும், இரை விரும்பி - இரை அருந்துதலை விரும்பி, அவ்வாவி இகந்தொரீஇ - அந்த வறண்ட வாவியி னின்று நீங்கி, விரைய வந்து ஒரு கானிடை வீழ்ந்தது - விரைந்து வந்து ஒரு காட் டிலே சோர்ந்து விழுந்தது; புரை இலோர்க்கு இடன் ஆகும் அப்பொங்கர்வாய் - குற்றமில்லாத முனிவர்களுக்கு இடமாகிய அக்காட்டின்கண்.

செறித்தாலன்ன என்பது செறித்தன்ன என்றாயிற்று. இகத்தல் - கடத்தல், புரை - குற்றம். ஆல், அசை. (ரு)

முத்த ரான முனிவர் குழாத் தொடுஞ்
சுத்த வானந்த வாரியுட் டோய்ந்துதன்
சித்த மாசு கழீஇச்சிவ மாகிய
சத்தி யத்தவ மாமுனி தங்குமால்.

(இ - ள்.) முத்தரான முனிவர் குழாத்தொடும் - சீவன் முத்தர்களான முனிவர் கூட்டத்துடன், சுத்த ஆனந்த வாரியுள் தோய்ந்து - சிவானந்தக் கடலில் மூழ்கி, தன் சித்தமாசுகழீஇ - தனது மன அழுக்கைப் போக்கி, சிவமாகிய சத்தியத் தவமா முனி தங்கும் - சிவமாந் தன்மை பெற்ற சத்தியன் என்னும் பெயரையுடைய பெரிய தவமுனிவன் தங்கியுள்ளான்.

முத்தர் - சீவன் முத்தி பெற்றவர். கழீஇ, சொல்லிசை யளபெடை. சிவமாதல் - சிவத்துவ விளக்கம் பெறுதல், இதிலும் பின் வரும் மூன்று செய்யுட்களிலும் ஆல் அசை. (சு)

கூப்பி டெல்லை குணித்துச் சதுரமா
யாப்ப மைந்துசுற் றெங்கும் படித்துறைக்
கோப்ப மைந்து குளிர்சந்தி யாமடங்
காப்ப மைந்தோர் கயந்தலை யுள்ளதால்.

(இ - ள்.) கூப்பீடு எல்லை குணித்துச் சதுரமா யாப்பு அமைந்து - ஒரு கூப்பீடு தூரம் வரையறுத்துச் சதுரமாகக் கட்டப் பட்டு, சுற்று எங்கும் படித்துறைக் கோப்பு அமைந்து - சுற்று முழுதும் படித்துறைக் கோவை அமையப் பெற்று, காப்பு - காவலோடு கூடிய, குளிர் சந்தியா மடம் அமைந்து - தண்ணிய சந்தியா மடம் அமையப் பட்டு, ஓர் கயந்தலை உள்ளது - ஒரு தடாகம் உள்ளது.

குணித்து - வரையறுத்து, சந்தியா மடம் - சந்திக் கடன் செய்தற் குரிய மடம். (எ)

விரைசெய் சண்பகம் பாதிரி வேங்கைதேன்
இரைசெய் வஞ்சி யிலஞ்சி குராமரா
நிரைசெய் கிஞ்சுக நீண்மரு தாதியா
உரைசெய் பன்மர மும்புறத் துள்ளவால்.

(இ - ள்.) விரை செய் சண்பகம் பாதிரி வேங்கை - மணம் வீசுஞ் சண்பகமும் பாதிரியும் வேங்கையும், தேன் இரை செய்வஞ்சி இலஞ்சி குராமரா - வண்டுகள் ஒலித்தலைச் செய்யும் வஞ்சியும் மகிழும் குராவும் மராவும், உரைசெய் கிஞ்சுகம் நீள் மருது ஆதியா - வரிசையாகவுள்ள முருக்கும் நீண்ட மருதும் முதலாக, உரை

செய் பல்மரமும் - சொல்லப்பட்ட பல மரங்களும், புறத்துஉள்ள - (அவ்வாவியின்) புறத்திலுள்ளன.

தேன் - வண்டு. இரை, முதனிலைத் தொழிற் பெயர். (அ)

அந்த வாவியின் பேரச்சோ தீர்த்த*மென்
றிந்த ஞால மியம்புவ தாலிரை
உந்த வாவுகொ டூக்க †வெழுந்தமுன்
வந்த நாரை யதன்கரை வைகுமால்.

(இ - ள்.) அந்த வாவியின்பேர் அச்சோதீர்த்தம் என்று - அந்த ஓடையின் பெயர் அச்சோதீர்த்தமென்று, இந்த ஞாலம் இயம்புவது - இந்நிலவுலகத்தாரால் கூறப்படுவது; இரை உந்து அவாவு கொடு ஊக்க - உணவில் மீதூர்ந்து எழுந்த விருப்பம் தன்னைப்பற்றிச் செலுத்த, எழுந்துமுன் வந்தநாரை - புறப்பட்டு அவ்வாவியின் முன்வந்த நாரை, அதன் கரைவைகும் - அதன் கரையின்கண் தங்காநின்றது.

அவாவு, உ சாரியை. (கூ)

ஆய்ந்த மாதவ ரப்புனி தத்தடந்
தோய்ந்து தோய்ந்தங் கெழுந்தொறுந் தோட்புறஞ்
சாய்ந்த வார்சடைக் கற்றையிற் றத்துமீன்
பாய்ந்து பாய்ந்து புரள்வன பார்த்தரோ.

(இ - ள்.) ஆய்ந்த மாதவர் - உண்மைப் பொருளை ஆராய்ந்துணர்ந்த பெரிய முனிவர், அப்புனிதத்தடம் தோய்ந்து தோய்ந்து - அத்தூய வாவியின்கண் மூழ்கி மூழ்கி, எழுந்தொறும் - மேலே எழுந்தோறும், தோட்புறம் சாய்ந்த வார் சடைக் கற்றையில் - பிடரிலே சாய்ந்து கிடக்கும் நீண்ட சடைத்திரளில், தத்தும்மீன் பாய்ந்து பாய்ந்து புரள்வன பார்த்து - குதிக்கின்ற மீன்கள் பாய்ந்து பாய்ந்து புரளுதலைப் பார்த்து.

அடுக்குகள் பன்மை குறித்தன. அங்கு, அரோ என்பன அசைநிலைகள். (ம)

ஈண்டை யித்தவத் தோர்திரு மேனியைத்
தீண்ட வெத்தவஞ் செய்தன வேகொலென்
றூண்டை மீனமக் காகா வெனவிரை
வேண்டு நாரை வெறுத்தங் கிருந்ததால்.‡

(இ - ள்.) ஈண்டை இத்தவத்தோர் திருமேனியை - இங்கு இந்த முனிவர்கள் திருமேனியை, தீண்ட - தொடுதற்கு, எத்தவம் செய்தனவேகொல் என்று - (இந்த மீன்கள்) எத்துணைத்தவம் புரிந்தனவோ என்று கருதி, ஆண்டைமீன் நமக்கு

(பா - ம்.) *அதோ தீர்த்தம். †கொடுக்க. முந்தவாவு முடுக்க. ‡இறுத்ததால்.

ஆகா என - (அங்ஙனம் தவம் புரிந்து) அங்கு வசிக்கும் மீன்கள் நமக்கு இரை யாகத் தகாதன என்று, இரை வேண்டும் நாரை - இரையை விரும்பிவந்த நாரை, வெறுத்து அங்கு இருந்தது - அதனை வெறுத்து அங்கு இருந்தது.

வெறுத்து - உணவை வெறுத்து. ஆல், அசை. (௧௧)

[அறுசீரடியாசிரியவிருத்தம்]

தன்னிகர்* தவத்தோர் யாருந் தடம்படிந் தேறி நித்த
மன்னிய கரும முற்றிச் சந்தியா மடத்தில் வைகி
மின்னிய மகுடஞ் சூடி வேந்தனு யுலகங் காத்த
பொன்னியல் சடையான்† கூடற் புராணநூ லோது கின்றார்.

(இ - ள்.) தன் நிகர்தவத்தோர்யாரும் - தனக்குத் தானே ஒப்பாகிய தவத் தினையுடைய முனிவரனைவரும், தடம்படிந்து - வாவியில் நீராடி, ஏறி - கரையேறி, நித்தம் மன்னிய கருமம் முற்றி - நாள் தோறும் நிலைபெற்ற வினைகளைக் குறைவறச் செய்து, சந்தியாமடத்தில் வைகி - சந்தியாமடத்திலே தங்கி, மின்னிய மகுடம்சூடி - விளங்காநின்ற திருமுடி தரித்து, வேந்தனாய் உலகம் காத்த - சுந்தர பாண்டியனாய் உலகினைப் புரந்தருளிய, பொன் இயல் சடையான் - பொன்போலும் அழகிய சடை யையுடைய சோமசுந்தரக் கடவுளின், கூடல் புராணநூல் ஓதுகின்றார் - மதுரை மான்மிய நூலினை ஓதிவருவாராயினர்.

தனக்குத்தானே யொப்பாகிய தவம் என்க. தந்நிகர் என்று பாடமாயின் தம் என்பது தவத்தோரைக் குறிக்கும். (௧௨)

அண்ணலெம் பெருமான் செய்த வருள்விளை யாட்டு மாதிப்
பண்ணவன் சிறப்புங் கூடற் பழம்பதிச் சிறப்புந் தீர்த்தத்
தெண்ணருஞ் சிறப்புஞ் சேர்ந்தோர்க் கெளிவரு மிறைவனென்னும்
வண்ணமு மெடுத்துக் கூறக் கேட்டங்கு வதியு நாரை.

(இ - ள்.) அண்ணல் எம்பெருமான் செய்த அருள் விளையாட்டும் - இறை வஞ்கிய எமது பெருமான் செய்தருளிய திருவிளையாடல்களையும், ஆதிப்பண்ணவன் சிறப்பும் - முதற் கடவுளாகிய சொக்கலிங்க மூர்த்தியின் சிறப்பினையும், கூடல்பழம் பதிச்சிறப்பும் - அவனது பழம்பதியாகிய கூடல் என்னும் தலத்தின் சிறப்பினையும், தீர்த்தத்து எண் அருஞ் சிறப்பும் - பொற்றாமரைத் தீர்த்தத்தின் அளவிறந்த சிறப் பினையும், சேர்ந்தோர்க்கு - அம்மூர்த்திதலம் தீர்த்தங்களை அடைந்தோர்க்கு, இறை வன் எளிவரும் என்னும் வண்ணமும் - அவன் எளிதில் வந்து அருள்புரிவான் என் னுந் தன்மையையும், எடுத்துக்கூற - எடுத்துச்சொல்ல, அங்குவதியும் நாரைகேட்டு - அங்கே தங்கியிருக்கும் நாரை அவற்றைக்கேட்டு. (௧௩)

(பாடம்)* தந்நிகர். †பொன்னியற் சடையான்.

மடம்படு மறிவு நீங்கி வல்வினைப் பாசம் வீசித்
திடம்படு மறிவு கூர்ந்து சிவபரஞ் சோதி பாதத்
திடம்படு மன்பு வாவென் றீர்த்தெழ வெழுந்து நாரை
தடம்படு மாடக் கூடற் றனிநக ரடைந்து மாதோ.

(இ - ள்.) மடம்படும் அறிவு நீங்கி - அறியாமையோடு கூடிய அறிவு நீங்கப் பெற்று, வல்வினைப் பாசம்வீசி - வலிய வினைக்கட்டை அறுத்து, திடம்படும் அறிவு கூர்ந்து - உறுதியாகிய மெய்யுணர்வு பெற்று, சிவபரஞ்சோதி பாதத்து இடம்படும் அன்பு - சிவபரஞ் சுடரின் திருவடிக்கண்பரந்த அன்பு, வா என்று ஈர்த்து எழ - வருவாயாக என்று இழுக்க, நாரை எழுந்து - நாரையானது புறப்பட்டு, தடம்படும்மாடக் கூடல் தனிநகர் அடைந்து - அகன்ற மாடங்கள் நிறைந்த கூடலாகிய ஒப்பற்ற பதியை அடைந்து.

மடம்படும் அறிவு - சிற்றறிவு. திடம்படும் அறிவு - மெய்யுணர்வு. மாது, ஓ அசைகள். (கச)

வாங்கிய திரைசூழ் பொற்றா மரைபடிந் திமையா வேழந்
தாங்கிய விமான மேய தலைவனைத் தாழ்ந்து சூழ்ந்து
தேங்கிய வருட்க ணோக்கத் தெரிசித்துத்* திருமுன் வைகி
ஓங்கிய கருணை மேனி யுள்ளுறத் தியானஞ் செய்து.

(இ - ள்.) வாங்கிய திரைசூழ் பொற்றாமரை படிந்து - வளைந்த அலைகள் சூழ்ந்த பொற்றாமரையின்கண் நீராடி, இமையாவேழம் தாங்கிய விமானம் மேய - இமையாத யானைகளால் தாங்கப்பட்ட விமானத்தின்கண் எழுந்தருளிய, தலைவனை - சோமசுந்தரக் கடவுளை, தாழ்ந்து சூழ்ந்து - வணங்கி வலம்வந்து, தேங்கிய அருள் கண் நோக்க - அவ்விறைவன் நிறைந்த அருளையுடைய திருக்கண்ணாற் பார்த்தருள, தெரிசித்து - அவனது அருளுருவைத் தரிசனஞ்செய்து, திருமுன்வைகி - திருமுன் இருந்து, கருணை ஓங்கிய மேனி - கருணை நிறைந்த திருமேனியை, உள்ளுறத்தியானம்செய்து - உள்ளே பொருந்தத் தியானித்து.

இறைவன் அருட்கண்ணால் நோக்க அதனாற் றரிசித்தலை,

"கண்ணுதலான் றன்கருணைக் கண்காட்ட வந்தெய்தி
எண்ணுதற் கெட்டா வெழிலார் கழலிறைஞ்சி"

எனத் திருவாதவூரடிகள் அருளிச்செய்தல் காண்க. (கரு)

இந்நிலை நியம மூவைந் தெல்லைஞான் றியன்று பின்னாள்
அந்நிலை யொழுகு நாரை யாடக கமலந் தோய்வான்
வன்னிலை மதில்சூழ் ஞாங்கர் வந்துழிப் பசியால் வெந்து
மின்னிலை வேல்போற் றுள்ளு மீன்கவர்ந் துண்கு மென்னா.

---

(பா - ம்.) * நோக்கந் தெரிசித்து.

(இ - ள்.) மூவைந்து ஞான்று எல்லை - பதினைந்துநாள் வரை, இந்நிலை நியமம் இயன்று - இவ்வொழுக்கமாகிய கடப்பாட்டிற் பொருந்தி நின்று, பின்னாள்-வழிநாள், அந்நிலை ஒழுகும் நாரை - அங்ஙனம் ஒழுகிய நாரை, ஆடக கமலம் தோய்வான் - பொற்றாமரையின்கண் நீராடுதற் பொருட்டு, வல்நிலை மதில் சூழ் ஞாங்கர் வந்துழி - வலிய நிலையையுடைய சுற்றுமதிலின் மருங்கு வந்தபொழுது, பசியால் வெந்து - பசித்தீயினால் வெந்து கருகுதலால், மின்இலை வேல்போல் துள்ளும்மீன் கவர்ந்து உண்கும் என்று - ஒளியையுடைய தகட்டு வடிவமான வேற்படையைப் போலத்துள்ளுகின்ற மீன்களைப் பிடித்து உண்பேமென்று.

தோய்வான், வினையெச்சம். மின் நிலைத்தவேல் என்றுமாம்.　　(கசு)

சிறிதுளத் துள்ளி நாதன் றிருவருள் வலத்தாற் பின்னர்
அறிவுவந் தச்சோ விந்த வறப்பெருந் தீர்த்தத் துள்ளே
எறியுமீ னருந்த வாசை யெழுந்ததே யெனக்கிப் போதிப்
பிறவியென் றொழிவ தென்னாப் பேரஞ ரடைந்து பின்னும்.

(இ - ள்.) உளத்து சிறிது உள்ளி - உள்ளத்தே சிறிது கருதி, நாதன் திருவருள் வலத்தால் - இறைவன் திருவருள் வலியால், பின்னர் அறிவு வந்து - பின்பு அறிவு வரப்பெற்று, அச்சோ - ஐயோ, இந்த அறப் பெருந் தீர்த்தத்துள்ளே - இந்த அறவடிவாகிய பெரிய தீர்த்தத்தினுள்ளே, எறியும் மீன் அருந்த - தாவுகின்ற மீனை அருந்த, ஆசை எழுந்ததே - எனக்கு இப்போது அவா உண்டாயிற்றே (இங்ஙனம் ஆனால்), இப்பிறவி என்று ஒழிவது என்னா - இந்தக் கொடியபிறவி எப்பொழுது ஒழியுமோ என்று, பேர்அஞர் அடைந்து - பெருந் துன்பமுற்று, பின்னும் - மீண்டும்.

இங்ஙனம் பசி முதலிய துன்பம் உண்டாயவழிப் பழைய பயிற்சி வயத்தால் ஒரோவழி நினைவு புலன்கள் மேற்செல்லுதலும், தமது மெய்யுணர்வால் அதனை யொழித்துப் பிறப்பறுத்தலும் மெய்யுணர்ந்தார்கண் நிகழ்வனவென்க. அச்சோ, இரக்கப் பொருளில்வந்த இடைச்சொல்.　　(கஎ)

சுந்தரச் செம்மல் பாதத் துணைமல ரன்பிற் றோய்ந்து
சிந்தைவைத் திருக்கு மெல்லை தேவரு மறையுஞ் செய்யும்
வந்தனைக் கரியா னாரை மனநினை வடிவாய்த் தோன்றி
எந்தமக் கினியாய் வேண்டும் வரமென்கொ லியம்பு கென்றான்.

(இ - ள்.) சுந்தரச் செம்மல் பாதத்துணை மலர் - சோமசுந்தரக் கடவுளின் திருவடிகளாகிய இரண்டு தாமரைமலர்களிலும் வைத்த, அன்பில்தோய்ந்து - அன்பிற்படிந்து, சிந்தை வைத்திருக்கும் எல்லை - அந்நிலையில் மனத்தைப் பதியவைத்திருக்கும்போது, தேவரும் மறையும் செய்யும் வந்தனைக்கு அரியான் - தேவர்களும் வேதங்களுஞ் செய்யும் வழிபாட்டுக்கும் எட்டாத அவ்விறைவன், நாரை மனம் நினை வடிவாய்த் தோன்றி - அந்நாரை தன் மனத்து நினைத்த வடிவமாகத்தோன்றி, எந்தமக்கு இனியாய் - எனக்கு இனிய நாரையே, வேண்டும் வரம் என்கொல்

இயம்புக என்றான் - உனக்கு வேண்டிய வரம் யாதோ அதனைக் கூறக்கடவாய் என்று கூறியருளினான்.

இறைவன் தேவரும் மறையும் செய்யும் வந்தனைக்கு அரியனும் இந்நாரைக்கு எளிவந்தனன் என வியந்து கூறினர் என்க. நினை - சிந்தித்த; தியானித்த. கொல், அசை. இயம்புக என்பதன் அகரம் தொக்கது. (கஅ)

[கலிநிலைத்துறை]

செய்ய கான்மட நாரையுஞ் சென்றுதாழ்ந்
தைய னேயிப் பிறவி யறுத்துநின்
மெய்யர் வாழ்சிவ லோகத்தின் மேவிநான்
உய்ய வேண்டுமொன் றின்னமு முண்டரோ.

(இ - ள்.) செய்யகால் மடநாரையும் - சிவந்ததாளையுடைய அவ்விளநாரையும், சென்று தாழ்ந்து - திருமுன்சென்று வீழ்ந்து வணங்கி, ஐயனே இப்பிறவி அறுத்து - ஐயனே இக்கொடிய பிறவியைப் போக்கி, நான் - அடியேன், நின்மெய்யர் வாழ் சிவலோகத்தின் மேவி - நினது உண்மை அன்பர்கள் வாழுஞ் சிவலோகத்திற்சென்று, உய்யவேண்டும் - பிழைக்க வேண்டும்; இன்னம் ஒன்று உண்டு - இன்னமும் வேண்டும் வரம் ஒன்று உள்ளது.

"வேண்டுங்கால் வேண்டும் பிறவாமை"

என்பது மறையாகலின் முதற்கண் பிறவியறுத்தல் கூறிற்று. அரோ, அசை. (கக)

வள்ள லென்மர புள்ளவு மற்றைய
புள்ளு மிந்தப் புனித மலர்த்தடத்
துள்ள மீனுயி ருண்ணினெக் காலமும்
தள்ளொ ணாத பழிவந்து சாருமால்.

(இ - ள்.) வள்ளல் - கருணைவள்ளலே, என் மரபு உள்ளவும் மற்றைய புள்ளும் - எனது மரபில் உள்ளனவும் மற்றையவுமான பறவைகள், இந்தப் புனித மலர்த் தடத்து உள்ள - இந்த மலர் நிறைந்ததூய வாவியிலுள்ள, மீன் உயிர் உண்ணின் - மீன்களின் உயிரை உண்டால், எக்காலமும் - எஞ்ஞான்றும், தள்ளொணாத பழி வந்து சாரும் - நீக்கமுடியாத பாவம் வந்து (அவற்றைச்) சேரும் (ஆதலால்.)

மற்றையவுமாகிய புள் என உம்மையை மாறுக. ஆல், அசை. (உ0)

என்று மித்தட மீனில வாகநீ
நன்று சால்வர நல்கென வெள்ளிமா
மன்று ளானும் வரந்தந்து போயினான்
சென்று நாரை சிவலோகஞ் சேர்ந்ததால்.

(இ - ள்.) என்றும் இத்தடம் மீன் இலவாக - எஞ்ஞான்றும் இவ்வாவியின் கண் மீன்கள் இல்லையாகுமாறு, நன்று சால்வரம் நீ நல்கு என - நன்மை நிறைந்த அவ்வரத்தினை நீ அருளக்கடவை என்று வேண்ட, மாவெள்ளி மன்றுளானும் வரம் தந்து போயினன் - பெரிய வெள்ளியம்பலத்தையுடைய சோமசுந்தரக் கடவுளும் அவ்வரத்தை அருளி மறைந்தனன்; நாரை சிவலோகம் சென்று சேர்ந்தது - நாரை சிவலோகத்தைச் சென்றடைந்தது.

ஆல், அசை. (உ௧)

இயங்க ளைந்து மியம்ப விமானமேற்
புயங்க ணான்குமுக் கண்களும் பொற்பவான்
வியங்கொள் பூமழை வெள்ளத்து ளாழ்ந்துபோய்
வயங்கொ ணந்தி கணத்துள் வதிந்ததே.

(இ - ள்.) இயங்கள் ஐந்தும் இயம்ப - தேவ துந்துபிகள் ஐந்தும் ஒலிக்க, விமானமேல் - விமானத்தின் மேலேறி, புயங்கள் நான்கும் முக்கண்களும் பொற்ப - நான்கு தோள்களும் மூன்றுகண்களும் அழகு செய்ய, வான் வியம் கொள் பூமழை வெள்ளத்துள் ஆழ்ந்துபோய் - வானுலகோர் பொழிந்த பெருமை பொருந்திய மலர் மழையாலாகிய வெள்ளத்தில் மூழ்கிச்சென்று, வயம் கொள் நந்திகணத்துள் வதிந்தது - வெற்றியையுடைய நந்திகணங்களுள் ஒன்றாய்த் தங்கியது.

புயங்கள் நான்கும் முக்கண்களும் பொற்ப என்றமையால் சிவசாரூபம்பெற்றுச்சென்றதென்க. வியம் - பெருமை. நந்திகணம் - சிவகணம். (உஉ)

அன்று தொட்டின் றளவும்பொற் றாமரை
என்று ரைக்கு மெழின்மல ரோடையிற்
சென்று கைத்துத் திரிகின்ற மீனலால்
ஒன்று மற்றன நீர்வா ழுயிர்களும்.

(இ - ள்.) அன்று தொட்டு இன்று அளவும் - அன்றுமுதல் இந்நாள் காறும், பொற்றாமரை என்று உரைக்கும் - பொற்றாமரை என்று சொல்லப்படும், எழில்மலர் ஓடையில் - அழகிய மலர்களையுடைய அவ்வாவியின்கண், சென்று உகைத்துத் திரிகின்ற மீன் அலால் - ஓடித்துள்ளி விளையாடும் மீன்களேயன்றி, நீர்வாழ் உயிர்களும் ஒன்றும் அற்றன - ஏனைய நீர்வாழ் உயிர்களும் சிறிதுமின்றி ஒழிந்தன. (உ௩)

[அறுசீரடியாசிரிய விருத்தம்]

தன்கிளை யன்றி வேற்றுப் பறவைக டாமுந் தன்போல்
நன்கதி யடைய வேண்டிற் றேகொலிந் நாரை செய்த
அன்பினில் வியப்போ வீச னருளினில்* வியப்போ வன்பர்க்
கின்புரு வான வீச னன்பருக் கெளிதே யைய.†

(பா - ம்.) * ஈசனருளன்பர்க்கு. † எளிதேயை.

(இ - ள்.) தன்கிளை அன்றி - தனது இனமாகியபறவைகளே யல்லாமல், வேற்றுப்பறவைகள் தாமும் - வேறு இனப் பறவைகளும், தன்போல் - தன்னைப்போல, நன்கதி அடையவேண்டிற்றே - சிவகதி அடையுமாறு இறைவனிடத்து வரம்வேண்டியதே, இந்நாரை செய்த அன்பினில் வியப்போ - இந்த நாரைபுரிந்த அன்பினில் வியப்புளதோ (அன்றி), ஈசன் அருளினில் வியப்போ - (அதற்கு எளிவந்த) இறைவன் அருளின்கண் வியப்புளதோ, அன்பர்க்கு இன்பு உருவான ஈசன் - அன்பர்கட்கு இன்ப வடிவமாய் விளங்கும் சிவபிரானது அருள், அன்பருக்கு எளிதே - அன்பர்களின் அன்புக்கு எளிதே.

முன் கரிக்குருவி தன் கிளை யெல்லாம் தன்போல் மேன்மை யெய்த வரம் பெற்றது, இந்நாரையோ அவ்வளவன்றி வேற்று இனப் பறவைகளும் நற்கதியடைய வேண்டிற்று, இதனது அன்பிருந்தவாறென்னே என வியந்தபடி. அன்பினில் வியப்போ அருளினில் வியப்போ என்னும் வினவுக்கு ஈசனருள் அன்பர் அன்புக் கெளிதே எனச் சமற்காரமாக விடைகூறப்பட்டது.

> "மூட்டி லன்பர்த மன்பினுந் தட்டுக்கு முதல்வர்
> மட்டு நின்றதட் டருளொடுந் தாழ்வுறும் வழக்கால்"

என்னும் திருத்தொண்டர் புராணச் செய்யுள் இங்கு நோக்கற்பாலது. கொல், ஐய என்பன அசைகள். (உச)

> மறக்கு றும்புக் களைகட்டு மண்ணின்மேல்
> அறப்பெ ரும்பயி ராக்கி யதன்பயன்
> சிறக்க நல்கிட வுண்டு செருக்குவான்
> துறக்க மெய்தி யிருந்தான் சுகுணனும்.

(இ - ள்.) சுகுணனும் - சுகுணபாண்டியனும், மறக் குறும்புக் களைகட்டு - பாவமாகிய சிறிய களையைப்பிடுங்கி, மண்ணின்மேல் - நிலவுலகின்மேல், அறப்பெரும் பயிர் ஆக்கி - அறமாகிய பெரிய பயிரைவளர்த்து, அதன் பயன் சிறக்க நல்கிட உண்டு செருக்குவான் - அதன் பயன் மிகவுங் கைகூட (அதனை) உண்டு களித்தற் பொருட்டு, துறக்கம் எய்தி இருந்தான் - துறக்க நாட்டினை அடைந்திருந்தான்.

இவ்வுலகிற் புரிந்த அறத்தின் பயனை நுகர்ந்து களித்தற்பொருட்டுத் துறக்க மெய்தினன் என்றார். செருக்குவான், வினையெச்சம். (உரு)

ஆகச்செய்யுள் - உகூஉக.

## கூடற்காண்டம்

முற்றிற்று.

குறிப்பு: ஒவ்வொரு செய்யுட் பதவுரை யீற்றிலும் எ - று என விரித்துக் கொள்க.

# பாட்டு முதற்குறிப் பகராதி

## அ



## ஆ

# பாட்டு முதற்குறிப் பகராதி

சிறுமணவூர் முனிசாமி முதலியார் அண்டு ஸன்ஸ்,
சிவகாமிவிலாச அச்சுக்கூடம், சென்னை.